சென்னைத் தமிழ்ச் சங்க வெளியீடு :



# குழவி உள்ளம்

(குழவி உள்ளக் கலைக் களஞ்சியம்)

## Encyclopaedia of Child Psychology

ஆசிரியர் :

ஈ. த. இராஜேசுவரி

சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளிப் பதிப்பு

1950

# அணிந்துரை

ஸ்ரீமதி. ஈ. த. இராஜேஸ்வரி அம்மையாரைத் தமிழ்நாடு நன்கறியும்; அவர்களுக்குத் தமிழின்பாலுள்ள பேரன்பையும் தமிழ்மக்கள் நன்கு அறிவார்கள். தமிழ்மொழியின் வளர்ச்சியில் உள்ள ஆர்வமே அவர்களை இப்புத்தகம் எழுதும்படி தூண்டியிருக்கிறது. இதன்மூலம் அவர்கள் தமிழுக்குச் செய்திருக்கும் சேவை பெரிது.

மனோதத்துவ சாஸ்திரத்தின் பல பகுதிகளையும், மேல்நாடுகளில் பற்பல அறிஞர்கள் அவ்வப்போது செய்திருக்கும் ஆராய்ச்சிகளையும் இதில் வெளியிட்டிருக்கிறார்கள். அவைகளைத் தெளிவாக எடுத்தெழுதுவதில் அவர்கள் மிகுந்த சிரமத்தை மேற்கொண்டிருக்கிறார்கள். அக்கருத்துக்களை வெளியிடுவதற்கு அவசியமான கலைச்சொற்கள் தமிழில் கிடைக்காமையால், புதுச்சொற்களை உண்டாக்க வேண்டியிருந்தது. மிகக் கடினமான அக்காரியத்தையும் அவர்கள் செய்திருக்கிறார்கள். இக்கலைச் சொற்களின் கருத்தை வாசகர்கள் தப்பர்த்தம் செய்து கொள்ளாமலிருக்கும்பொருட்டு ஆங்கில வார்த்தைகளும் ஆங்காங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன.

தமிழ் வளர்ச்சிக் கழகம், தமிழ்மொழியில் விஞ்ஞானம் முதலிய பல அறிவுப் பகுதிகளிலும் நூல்கள் வெளிவர உதவும் பொருட்டு, பரிசுத்திட்டம் ஒன்று வகுத்து, தமிழ்த்

திருவிழாவின்போது பரிசுகளை வழங்கிவருவதை நேயர்கள் அறிவார்கள். ஆனால், பல அறிவுத்துறைகளில் ஒரு புத்தகங்கூட வெளிவராமலிருப்பது மிகவும் வருத்தத்திற்குரிய விஷயமாகும். இதற்குக்காரணம் அவ்வறிவுத் துறைகளில் மேல்நாட்டி-லிருந்து நாம்பெற்ற ஆராய்ச்சி ஞானத்தைத் தமிழில் வெளி-யிடும் கஷ்டமும், அக்கருத்துக்களை வெளியிடுவதற்குத் தமிழில் சொற்கள் இல்லாமையுமாம். ஆனால், யாராவது ஒருவர் இவ்வேலையை முதலில் மேற்கொண்டு தானாக வேண்டும். ஆரம்பத்தில் அது வெகு சிரமமாயிருக்கும். பலருக்கு அவற்றைப் புரியவைப்பதும் கடினமாயிருக்கும். எனினும், அதைச் செய்துதான் ஆகவேண்டும். இப்பணியை மேற்-கொள்ளுவதற்கு மிகுந்த தைரியமும் தமிழின்பால் மாறாத அன்பும் வேண்டும். ஸ்ரீமதி இராஜேஸ்வரி அம்மையார் இப்-பெரிய நூலை எழுதி முடித்ததே அவர்கள் இவ்விரண்டையும் பெற்றிருக்கிறார்கள் என்பதற்குச் சான்று. இப்புத்தகம் சென்னைச் சர்வகலாசாலையின் பரிசைப் பெற்றிருப்பதே இதன் சிறப்பை விளக்குகிறது.

தமிழ் மக்களுக்கு இப்புத்தகம் பெரிதும் பயன்படு-மென்று நம்புகிறேன்.

தி. சு. அவிநாசிலிங்கம்

(திரு. தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார்
முன் சென்னைக் கல்வி மந்திரியார்,
தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர்)

# குழவி உள்ளம்

## உள்ளுறை.

(Contents)

---

# பாயிரம்.

"என்னில் ஆரும் எனக்கு இனியார் இல்லை
என்னிலும் இனியான் ஒருவன் உளன்
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே"

(அப்பர் - 135 பதி. பா. 1)

"என்னிலாரும் எனக்கு இனியார் இல்லை." ஆம்; நம்மினும் நமக்கு இனியார் யார்? "என்னினும் இடை மருது ஈசன் வேறிலன் ஆதலினாலேயே இனியன் தன் அடைந்தார்க்கு இடை மருதீசனே" எனப் பாடுகின்றார் திருநாவுக்கரசர். ஆதலின், நம்மினும் நாம் கற்கத் தகுந்தன வேறு இல்லை. மக்களோ உயிர் வகைகளில் உயர் முடிமணியாக ஒளிர்கின்றனர். இந்த உயர்மணி கழுவப்பெற்றுக் கதிர் விடுவதனைப் படிப்படியாகக் காணும் இடமே குழவிப் பருவமாம். உயிரணுவானது பல்கிப் பெருகி மனிதக் கோலங்கொண்டு அறிவுக் கோயிலாக ஓங்கி வளர்வதனைக் குழவி நிலையை ஆராயும்போது காணலாம். இந்த வியத்தகு பெருமாற்றம் எழுகின்றதனைக் கண்ணெதிரே காணலாம். கடவுளின் கைத்திறமனைத்தும் கனக்கத் திரண்டு காட்சி அளிக்கும் இடம் அதுவேயாம். ஆதலின், கற்கத்தக்கது ஒன்றுண்டேல் அது காதலிற் செழித்த குழவியின் உண்மைக் கதையேயாம். ஆதலின், அதனைப்பற்றி எழுதுவதற்கு அவையடக்கம் ஒன்றும் வேண்டுவதில்லை. யான் இதனை எழுதுவதனை விளக்கவே அவை அடக்கம் வேண்டும்.

யான் ஆசிரியர் பயிற்சிக்குக் கற்கும்போது குழவி-யுள்ளத்தினைப்பற்றிச் சிறப்பாக அறியவேண்டி இருந்தது. அதற்கு முன்னரும் குழவிகள் என் மனத்தினைக் கவர்ந்தது உண்டு. குழவிக்குக் குழையாத மனம் உண்டோ? சிவப்புற்றுச் சினந்த மறவனும் குழவியின் எதிர் நீர்ப்பிண்டமாகக் கரைந்து உருகுவான். ஆதலின் அவ்வாறு மாறாத தன் தலைவனின் மற-நிலையை ஔவையார்,

“கையது வேலே; காலன புனைகழல்;
மெய்யது வியரே; மிடற்றது பசும்புண்;
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசிவெண் தோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே! அன்னோ!
உய்ந்தன ரல்லர் இவனுடற்றி யோரே!
செறுவர் நோக்கிய கண் தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பானாவே!” (புறம் 100.)

என்று சிறப்பித்துப் பாடுவாராயினர். கடவுளுக்கும் இளமைக் கோலத்தில் ஈடுபாடு உண்டு. ஆதலின், தாம் அமுதாம்பிகையின்-மீது பிள்ளைத்தமிழ் பாடவந்ததாகச் சிவஞானச் சுவாமிகள் கூறுகின்றார். என்போன்றார் குழவிகளைக்கண்டு உருகுவதனைச் சொல்ல வேண்டுமோ? என் செல்வத் தங்கை நான் கல்லூரிக்குச் சென்றபின் பிறந்தாள். என்மீது பேரன்-புடையளாக வளர்ந்தாள்; நான் கல்லூரிக் கல்வியை முடித்து ஆசிரியப் பணியை அக்கல்லூரியிலேயே மேற்கொண்டதும் மறைந்தாள். அந்தக் கஜலக்ஷ்மி, குழவியின் இயல்பை எனக்கு

அறிவுறுத்தவே வந்து மறைந்தாள் போலும். பின்னும் ஒரு குழவி எங்கள் வீட்டில் வளர வந்தாள். பிற குழவிகளின் நினைவுகளும் என் மனத்தில் நிலைபெற்றுள்ளன. எனினும், எனது தங்கை கஜலக்ஷ்மியின் நினைவே இன்று இந்தக் குழவி-யுள்ளமாம் பெருநூலாக வளர்ந்தோங்கி உள்ளது. அன்பிற்கு விளங்காத அரும்பொருள் உண்டோ?

இயற்கை அனுபவமாக எழுந்த எண்ணங்கள் கலை ஆவதில்லை. அவற்றைச் சீர்தூக்கி ஆராய்ந்து முறைப்படுத்த வேண்டும் அன்றோ? ஆசிரியக் கலைக்குப் பயின்றபோது அத்-தகைய வாய்ப்பும் பெற்றேன். வெலிங்டன் பிராட்டியார் கல்லூரியிற் பயின்ற ஒன்பது மாதங்களும் இந்த வகையால் இன்பமுடையவாயின. ஒருவகையால் என் கண்ணிற்கிடந்த மாசு படலம் அப்போது நீங்கியது. முன் கண்ட அனு-பவங்களின் உண்மை நன்கு விளங்குவதாயிற்று. என் கல்விக்கே அடிப்படையாய் நின்று அல்லும் பகலும் உதவிய என் தந்தையாம் திரு. ஈ. ந. தணிகாசல முதலியார் தத்துவக்-கலையையே பொழுது போக்காக க்கொண்டவர். விஞ்ஞானத் துறையிற் பழகும் எனக்குத் தத்துவக் கண் அளித்த பெரியார் அவரேயாம். குழவி உள்ளத்தியற்கை நூலின்கண் எழும் பல முடிச்சுகளைச் செவ்வனே அவிழ்த்துத் தந்தவர் அவரே எனலாம். குழவியின் உள்ளத்தைத் தந்தையினும் தாயே அறிவாள். என்னுடைய ஆருயிர்த் தாய் எங்களைக் குழவி-களாய்ப் பாராட்டிய நிலையிலிருந்தும் குழவிகளைப் பேணும் முறையை ஒருவாறு அறிந்தேன். குழவி உள்ளத்தை முற்றும் அறியத் தாய்க்கும் முடிவதில்லை என்றால் யானோ அறிவேன்? சிறுவயதில் விளையாடிய விளையாட்டெல்லாம். நினைவிற்கு வருகின்றன. என்னுடைய தாயும் தந்தையும் அந்தக் குழவி விளையாட்டை நினைப்பூட்டுவது உண்டு.

"இனிநினைந் திரக்க மாகின்று! திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கயம் ஆடு மகளிரொடு கைபிணைந்து
தழுவு வழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு
உயர்சினை மருதத் துறை யுறத் தாழ்ந்து
நீர் நணிப் படிகோடேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே! யாண்டுண்டு கொல்லோ?
தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சில சொற்
பெரு மூதாளரே மாகிய எமக்கே" — (புறம் 243)

என்று பாடிய பாடல் நினைவிற்கு வருகின்றது. அன்று இன்பத் துணையாய்க் களிப்பூட்டிய என்னுடன் பிறந்தார் கற்பித்த பாடங்கள் இந்த நூலினுள் புகாமல் இல்லை. அவற்றைத் தனித்தனியே எவ்வாறு வேறு பிரித்து எழுதுவது? தமிழ் நாட்டுப் பல சங்கங்கள் அப்போதைக்கப்போது என்னைத்-தமிழிற் பேச அன்புடன் அழைத்து வாழ்த்துவதுண்டு. பள்ளிக்கூடங்களிற் பேசும்போது குழவிகளைப்பற்றியன்றி வேறு என்ன பேசுவது? சென்னைக் கல்வித்துறைத் தலைவர் இரண்டு ஆண்டுகள் இந்து மாதர் சொற்பொழிவுகளை நிகழ்த்துமாறு பணித்தருளினர். அப்போதும் குழவிகளைப் பற்றியும் அவர்களைப் பேணும் முறையினைப் பற்றியும் பேசும் பேறு பெற்றேன்.

இவ்வாறு என்னையும் அறியாமல் இந்நூல் எழுதப் பண்பட்டு வந்தேன். சென்னைத் தமிழ்ச்சங்கம் தோன்றிய-

போது அதனைக்கண்ட காலஞ்சென்ற திவான் பகதூர். சி. தெய்வசிகாமணி முதலியாரும், இன்றும் நிலவித் தமிழ் வளர்க்கும் உயர்திரு. திரு. வி. க. அவர்களும் மேனாட்டுக் கலையைத் தமிழில் எழுதி உதவவே என்னுடைய வாணாளைப் பயன்படுத்த வேண்டும் என என்னை உருவாக்கிவிட்டனர். அண்மையில், திரு. சக்கரவர்த்தி - இராஜகோபாலாச்சாரியார் எங்கள் மேரி இராணிக் கல்லூரிக்கு வந்திருந்தபோது "தமிழ் நாட்டுத் தாய்மாருக்கு உதவுமாறு குழவியுள்ளத்தைப் பற்றிய-தொரு நூலினை யாரேனும் எழுதிப் பேருதவி செய்யாரா?" என அதன் இன்றியமையாமையை வற்புறுத்தி மனமுருகிக் கேட்டார். எனது நண்பர் வேதிநூற் பேராசிரியர் டாக்டர் மேதா "நீசெய்தலாகாதா" என்று என்னைப் பன்முறை தூண்டினர். சென்னைப் பல்கலைக்கழகம் இந்த ஆண்டு குழவி உள்ளத்தைப்பற்றி எழுதிய நூலைத் தனக்கு அனுப்புமாறு வெளியிட்ட அறிக்கையும் தற்செயலாக என்கண்ணிற்பட்டது. முன் எழுதிவைத்த குறிப்புக்களை எடுத்து நோக்கினேன். முறைப்படுத்தினால் அவையே ஒரு நூலாகும் என்பது வெளியாயிற்று. எங்கள் கல்லூரித் தலைவியார் திரு. மையர்ஸ் அம்மையாரும், சென்னைக் கல்வித்துறைத் தலைவரும் இந்த நூலை யான் எழுத உரிமை அளித்தனர். இவர்கள் அனைவரது நல்லெண்ணமே இந்து நூலுக்கு இந்த வடிவத்தைத் தந்துள்ளது எனலாம். வாயார வாழ்த்துவதல்லால் யான் என் செயக்கடவேன்!

முதலில் என் மனம் ஊசலாடத் தொடங்கியது. சுருக்க-மானதொரு நூலினை எழுதுவதா? எடுத்த குறிப்பினை எல்லாம் பயன்படுத்திப் பெரிய தொரு நூலினை எழுதுவதா? பரிசிலே நோக்கமானால் சிறியதொரு நூலும் அமையும். பல்கலைக் கழகம் வெளியிட்ட அறிக்கையும் இத்தனைப்

பக்க அளவில்தான் இந்நூல் இருத்தல் வேண்டும் என வரையறை செய்யவில்லை. ஆதலின் பெரிய நூலைத் தடுப்பதற்கும் இல்லை.

இந்நாளைய அறிவாராய்ச்சி அனைத்தும் கூட்டுறவியக்கமாகும்; கால தத்துவத்திற்கேற்ப இயற்கையாக வளர்வதாம். நியூடனும் (Newton) லைப்னைட்ஜ் (Leibneitz) என்பாரும் ஒரே காலத்தில் Calculus என ஆங்கிலத்தில் வழங்கும் கணக்கு முறையைக் கண்டனரன்றோ? தமிழ் நாட்டில் குழவியுள்ளத்தினைப்பற்றிய கருத்துக்கள் அனைத்தும் பரவவேண்டும் எனப் பாரதியார் முதல் அனைவரும் கண்ட கனவு நிறைவேறும் நாள் விடியவே போகின்றது. அந்த நன்னாளுக்கு உதவ அனைத்துக் கருத்தையும் ஒரு முறையேனும் அருமைபாராது தமிழில் எழுதினால் அதனை ஒருவரும் படியாமற் போனாலும் அந்த முயற்சி தமிழர் மனத்தில் அவரையே அறியாமல் ஊறும் என்னும் நம்பிக்கையுடையேன். மேண்டல் (Mendel) எழுதிய கட்டுரையைப் பின்னுள்ளார் படியாமற்போனாலும் அதன் பயனை அது விளைவித்து விட்டமையாலன்றோ அந்த உண்மையைப் பிறரும் புதியதாகக்கண்டு எங்கும் பரப்பினர். மெண்டல் கண்ட புதிய உண்மை போன்றதன்று இங்கு யான் எழுதுவது. மேனாட்டுக் கருத்தைத்தமிழில் எழுதவதொன்றே இங்கு நான் முயலுவது. இக்கருத்துக்களை இனித் தமிழில் எழுதுவது எளிதாகும் என்பதே என்னுடைய நம்பிக்கை. அறிவுலகம் அவ்வாறு ஒன்றுபட்டுள்ளமை சிறுகச் சிறுக வெளியாகி வருகிறது. எதிர்காலத்தாருக்கு வழியமைப்பதொன்றே இங்கு நான் செய்யும் தொண்டு. திருநாவுக்கரையரும் உழ்வாரப் படைகொண்டன்றோ தொண்டுசெய்தார்? ஆதலின், எழுத்தில் ஆயிரம் (1280) பக்கத்திற்குமேலும் அகன்று போகின்றது இந்நூல். "ஆசையே வென்றதம்மா"

என்ற புலவரைப்போல யானும் பாடுதல்வேண்டும். "ஆசை அறுமின்கள்; ஆசை அறுமின்கள் ஈசனோடாகிலும் ஆசை அறுமின்கள்" எனப் பாடும் துறவு நிலையில் யான் இல்லா-யாதலின் தமிழ்மேல் எழுந்த இந்த ஆசையைத் தள்ளவேண்டாம் என்றே கருதினேன். ஜேம்ஸ், பெர்க்சாங் முதலிய கலையிற் சிறந்த உண்மை நூல் அறிஞர் எழுதிய பாக்கள் போன்ற பகுதிகளை அவ்வாறே பெயர்த்து எழுதவேண்டும் என உள்ளம் துடிதுடித்தது. ஆயினும், நூல் மிகமிகப் பெரிதாக வளரும் என அஞ்சி அந்தப் பேராசையை எனக்குள் யானே அடக்கிக் கொண்டேன்.

பலபல உண்மை நூலறிஞர்கள் கருத்துக்களை இந்த நூலில் தந்தெழுதி உள்ளேன். ஒருமைக் கொள்கையினர் (Monist), இருமைக் கொள்கையினர் (Dualist), பன்மைக் கொள்கையினர் (Pluralist), அறிவுண்மைக் கொள்கையினர் (Idealist), புற உண்மைக் கொள்கையினர் (Realist), 'புறப் பொருளைச் சுட்டாச் சொற்கள் பொருளற்றன' என்னும் கொள்கையினர் (Logical Positivist), பயனிலைக் கொள்கை-யினர் (Pragmatist), சடநிலைக் கொள்கை (Materialist) எனப் பல நிலையினராக அவர்கள் ஆராய்ந்த உண்மைகளை இங்குக் குழவி உள்ளத்தைப் பொறுத்தவரையில் சுருக்கித் தந்துள்ளேன். அவற்றிடையே வேற்றுமை தோன்றுவது இயல்பேயாம். அவற்றினை ஒற்றுமைப் படுத்தி எழுதுவது என்றால் இந்த நூல் பன்மடங்காக வீங்கும். உள்ளத்தியற்கை நூல் என ஒரு நூல் உண்டோ என்று இந்த வேற்றுமை காரணமாகவே பல அறிஞர்கள் வினவுகின்றார்கள். அடிப்-படையான உண்மையைப் பற்றி இங்கு ஆராய வேண்டிய கடப்பாடில்லை. குழவியைப்பற்றிய நுட்பங்களை விளக்கும் வகையில் மட்டும் அவற்றைப் பயன்படுத்தலாம் எனக்கருதியே

எழுதியுள்ளேன். ஆதலின், மனத்தின் செயல்களை நடத்தைக் கொள்கையினரைப் பின்பற்றி (Behaviorist) நரம்பமைப் பின் செயலாக விளக்கமுந்தியது புறநிலை ஆராய்ச்சி எளிது என்ற கருத்தினாலேயே அன்றி 'மூளையிலிருந்து ஒழுகும்சாறே எண்ணங்கள் எல்லாம்' என்ற கோட்பாட்டோடு அன்று. பிறர் கொள்கையையும் (Freud, Piaget, Koffka, Pavlov Addler, Montessori, Spearman, Thorndike, All-port, Dewey, Mead) அவ்வாறே விளக்கியுள்ளேன். ஒவ்வொரு கொள்கையும் ஒவ்வோர் உண்மையை விளக்குவது வெளிப்படை. அதனையன்றி வேறு உண்மை இல்லை என்று கூறும்போதே முரண்பாடும் இடர்ப்பாடும் எழுகின்றன. குழவி உள்ளத்தினைப்பற்றி எத்தனையோ ஆயிரம் நூல்கள் தோன்றியும் அடிப்படை ஒற்றுமை தோன்றாதிருப்பது இதனால் விளங்கும். தமிழரும் இத்தகைய ஆராச்சியில் ஈடுபட இந்த நிலை வலித்திழுக்கும் என நான் எண்ணியதுண்டு. குழவியிடத்து இயற்கையாகவே அன்பு பூண்டு பிள்ளைத் தமிழ் பாடிய தமிழனால் இத்துறையின் அறியலாகாததும் உண்டோ ?

இந்த நூல் இன்றைய நூல் எனச் சொல்லுவதற்கும் இல்லை. குறைந்தது 10 ஆண்டுகள் அளளவிலேனும் பழையது என்றே சொல்லுதல் வேண்டும். உலகிடை எழுந்த போர் இந்தத் துறையில் மேனாட்டினர் செய்துவரும் ஆராய்ச்சியை நாம் அறியமுடியாமல் செய்துவிட்டது. நூல்கள் கிடைப்பதும் இல்லை. கட்டுரைகள் எழுதிய திங்கள் தாள்களும் கிடைப்பது இல்லை. ஆகவே, இன்றுவரை கண்ட உண்மைகளேனும் இங்குள்ளன என நான் துணிந்து கூறுவதற்கில்லை. போரில் பிறநாடுகளும் இந்த ஆராய்ச்சியை மறந்து போராராய்ச்சியில் ஈடுபட்டன; ஆதலின் பல நூல்கள் எழுந்திருப்பதற்கும் இடம் இருந்திராது. இங்கு வாழும் நமக்கு மற்றொரு குறையும்

உண்டு. இந்தத் துறையில் எழுதப்பெற்றுள்ள நூல்கள், கட்டுரைகள் என்ற அனைத்தும் இங்குக் கிடைப்பது அருமையினும் அருமை. அவற்றினைப்பற்றி நூல்களில் காணும் குறிப்புக்களோடு ஆறுதலடைய வேண்டியதாயிற்று. பிரஞ்சு, ஜெர்மன் மொழிகளில் வெளிவந்தவற்றை மொழி-பெயர்த்து விளக்கிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசியர் வித்துவான் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கட்கு என் நன்றி உரியதாகுக. என் கருத்தையும் என்னையும் உருப்படுத்திய நூல்களும் ஆசிரியர்களும் பலப்பலர் எனக் கணக் கண்டாற்போலச் சிறிது அறிவேன். பல கூறி என்? இங்குக் கூறுவதில் என்கருத்து என ஒன்று ஏது? கருத்துக்களைத் தமிழ்ப்படுத்தி முறைப்படுத்தியதொன்றே யான்செய்ய முயன்றதாகும்.

அம்முயற்சியில்தானும் புதுமை உண்டோ என ஐயம் கொள்கின்றேன். தமிழ் நாட்டினர் வழங்கும் சொற்களும் சொற்றொடர்களுமே இங்கு உள்ளன. சில கலைச் சொற்களைத் தமிழ்ப்படுத்துவது என் ஆற்றலுக்கும் அப்பாற் பட்டதாகவே தோன்றியது. நூலைத் தொடர்ந்து ஓதும்போது விளங்குமாறு ஒருவாறு எழுதி முடித்துள்ளேன். பொருத்தமான மொழி-பெயர்ப்பாக இருப்பதினும், விளக்கமான மொழிபெயர்ப்-பாகவே இருப்பதுமேலாம். பிற ஆசிரியர்கள் கண்ட புதுச் சொற்களை இதுபற்றியே பொருத்தமாகாவிடினும் பயிற்சி பெற்று விளக்கமுறவேண்டி அங்ஙனமே கையண்டுள்ளேன். யானும் புதிதாக வேறு சொற்களைப் படைத்துப் படிப்பார் மனத்தினைக் கலக்குவதால் என்ன பயன்? கலா நிலயத்தில் உள்ளத்தியற்கை நூலைப்பற்றித் திரு. மீனாட்சிசுந்தரனார் எழுதியவற்றில் சில பகுதிகளை இந்நூலில் எடுத்துக்காட்ட அன்னார் உரிமை தந்தமைக்குப் பெரிதும் கடப்பாடுடையேன்.

அண்ணுமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட மானதசாத்திரம், இலங்கை சிவபாதசுந்தரனுர் இயற்றிய அகநூல் முதலியனவும் கலைச்சொற்களை மொழிபெயர்க்கும் முறையிற் பயன்பட்டன. தென்னிந்திய தமிழ்ச் சங்கம் வெளியிட்ட கலைச்சொற்களை இங்குக் காணலாம். வேறு பிறர் படைத்த சொற்களை என்னையும் அறியாது இங்கு யான் கையாண்டு இருத்தல் கூடும். அனைவர்க்கும் என் நன்றி உரியதாகுக. ஆங்கிலக் கலைச் சொற்களில் பல உலகப் பொதுச் சொற்களே ஆம்; ஆதலின், அவற்றையும் அங்கே குறித்துள்ளேன்.

விஞ்ஞானத் துறையிலுள்ள யான் குழவியுள்ளத்தைப் பற்றி எழுதவந்த வரலாற்றை இதுவரை கூறினேன். இதனுல் யான் எதிர்பார்ப்பதையும் சுட்டியுள்ளேன். எழுதியதே பெரியதோர் இன்பமாயிற்று. எழுதியதே எழுதியதற்குப் பயனுமாயிற்று. இதனேடு என்கடன் முடிவடைகிறது. பிழை உளவேல் உலகம் பொறுக்க. குணமுளவேல் தமிழ் அன்னையை வாழ்த்துக.

மேரி அரசி கல்லூரி
சென்னை.

ஈ. த. இராஜேசுவரி
20—10—45.

எழுதி முடித்து மூன்று ஆண்டுகளுக்கு மேலாயின. சென்னைப் பல்கலைக் கழகப் பரிசிலையும் ஒரு வகையாகப் பெற்றது. சென்னைத் தமிழ்ச் சங்க வெளியீடாக வருகிறது. சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் இதனை அச்சுக் கோத்து வெளியிடுகின்றனர். குழவி உள்ளத்தைப்

பற்றிய நூலைக் குழவிகளே வெளியிடுவது பொருத்தந்தானே. இதனைச் சுருக்கி வெளியிடலாமோ என்று சிலர் கருதினர். குழவி உள்ளத்தினைப் பற்றிய கலைக் களஞ்சியமாக இது இருப்பது நல்லது எனத் தமிழ்க் கலைக் களஞ்சிய யுலகத்தில் வாழும் அச் சிறுவர்களே முடிவு செய்தனர். அவர்கள் விருப்பமே வென்றது. குழவி உள்ளம் வாழ்க! வெல்க!

விலிங்டன் பெருமாட்டிப் பெண்கள் ஆசிரியக் கல்லூரி.

ஈ. த. இராசேசுவரி
1—2—1948.

# குழவி உள்ளம்

(இரண்டாம் பாகம்)

---

## உள்ளுறை.

(Contents)

---

# குழவி உள்ளம்

(மூன்றும் பாகம்)

---

## உள்ளுறை.

(Contents)

---

---

# குழவி உள்ளம்

## 1. குழவியும் உலகமும்

### I. குழவி உள்ளத்தியற்கை நூல்

குழவியும் கிழவரும் :— கருவுற்ற நாள் முதல் இளமை கனியும்வரை குழவிகள் வளர்ந்துவரும் முறையினையும் உலகத்தோடு அவை பெற்றுவரும் பொருத்தங்களையும், அவற்றின் பலவகைத் திறங்களையும், அவற்றின் உடல் மனம் முதலியன வளரும் வளர்ச்சியினையும் உணர்த்தும் நூலே குழந்தை உள்ளத்தியற்கை நூலாம். (Child Psychology) குழவிகள் இல்லையானல் மக்கட்கூட்டம் அடியோடு ஒழிந்து முடிவுபெறடைய வேண்டியதுதான் மிஞ்சும். குழவிகள் நல்ல குழவிகளாக வளரவேண்டுமன்றோ? அவைகளை நல்லனவாக வளர்ப்பது என்றால் அவற்றின் உள்ளத்தியல்பை உணரவேண்டுமன்றோ? குழவி உள்ளத்தினை அறிந்தாலன்றி, முதியோர் உள்ளத்து இயற்கையும் விளங்குவதில்லையாம். விரையை (விதையை) உணர்ந்தாலன்றி மரத்தை உணர்வது அருமையன்றோ?

புதுமை :— குழவிக்கு ஆன்மா உண்டா என்பது ஒரு பழைய கேள்வி. இது பயனற்ற கேள்வியுமாம். புதிதாகப் பிறக்கும் குழவி, தான் வந்து புகுந்த புது உலகத்திடையே

பழகுகின்றதொரு புதுமையே இவ்வுலகில் நாம் காணும் சிறந்த புதுமையாம். எவ்வாறு உலகத்தோடு பொருத்தமுறுவது என்பது கேள்வி. உலகத்தோடு பொருத்தமுற்று வாழ்வது என்றால் உலகிற்கு இயைய வாழ்வதேயாம். உலகிற்கு ஏற்ப நாம் மாறுவது மட்டும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் ஆகாது. உலகத்தையும் மாற்றி நாமும் மாறி ஒருங்கு இயைவதே சிறந்ததாம். இந்த இயைபே உள்ளத்தின் இயைபுமாம். ஆதலின் இதற்கு உள்ளத்தியற்கையை அறியவேண்டியது இன்றியமையாததாம்.

முன்னிலை, பின்னிலை, நடுநிலை :— மக்களின் முன்னிலை விலங்குநிலையே என்பதொரு கொள்கை உண்டு. அந்த முன்னிலையை அறிவதனால் மக்களாக நிற்கும் இந்தப் பின்னிலையையும் நன்கு அறிதல் கூடும். மக்கள் மனம் சமநிலையில் இருப்பதே நோயற்ற நிலையாம். பைத்தியம் முதலிய மனநோய் பிடித்தார்நிலை அந்தச் சமநிலை பிறழ்ந்த நிலையாம். பிறழ்ச்சி நிலையை அறிய அறியச் சமநிலை நன்கு புலனாகிவரும். விலங்குகளின் நடத்தையும், மனநோயாளரின் நடத்தையும் மக்களது உள்ளத்தியற்கையை அறியப் பெரிதும் உதவுகின்றன.

## II. உள்ளத்தியற்கை நூல்

கலாநிலையம் :— உள்ளத்தியற்கை நூலைப்பற்றிக் "கலாநிலையம்" என்ற கிழமைத்தாளில் முன்னொருகால் வந்ததனைக் கீழே தருகின்றோம். கீழ்வருவனவற்றிலிருந்து உள்ளத்தியற்கை நூலின் இலக்கணமும், பிறநூலோடு அந்நூலுக்கு உள்ள தொடர்பும் அந்நூலார் கையாளும் முறையும் இனிது விளங்கும்.

நூலும் பிரிவும்:— "ஏதேனும் ஒரு பொருளைப்பற்றி நாம் அறிந்துள்ள கொள்கைகளை எல்லாம் முறையாகக் கோவை செய்து வெளியிடுவதே நூலாகும் (சாத்திரம்). நூலோ பலவகை. அறிவிற்கு விளங்குவனவற்றைக் கோவைசெய்யும் நூல்களை அறிவு நூல்கள் எனக்கூறலாம். இவ்வறிவு நூல்களோ இருதிறத்தனவாக விளங்குகின்றன. உலகத்துப் பொருள்களின் உண்மைத் தன்மையை ஊடுருவி ஆராய்வன ஒருபுறம் உலவுகின்றன. "தோன்றுகின்ற இவ்வுலகம் தோற்றத்தினும் வேறாக அமைந்துள்ளதா? தோற்றத்தின் அளவாகவே நின்று ஒழிகின்றதா? உள்பொருள் ஒன்றா? பலவா?" என்று இவ்வகையில் ஆராயும் நூல்களை உண்மையறிநூல் (Philosophy) எனலாம். ஆனால் உலகியலை நடத்திப் போவதற்குத் தோற்றத்தைத் தாண்டி அப்பால் ஓடவேண்டியதில்லை. ஆகவே, உலகியலை ஒழுங்காக நடத்துவதற்கு வேண்டிய அறிவினைப் புகட்டும் நூல்கள் மற்றொருபுறம் நிலவிவருகின்றன. இவற்றை உலகியலறிநூல் (Science) எனலாம். சுருக்கமாக இவற்றை இயற்கைநூல் எனல் தகும். உண்மைநூலை ஆராய்பவர் உள்பொருள் அனைத்தையும் ஆராயவேண்டி நிற்கின்றனர். ஆனால் உலகியலின் துறைகளோ பலப்பல; கல்வி கரையில; கற்பவர் நாள்சில; ஆதலினால் மக்கள் பலராகி அவ்வவற்றில் தனித்தனியே பிரிந்து புகுந்து ஆராய முற்படுகின்றனர். உலகத்திலுள்ள பொருள்கள் உயிர்ப்பொருளும் உயிரல்பொருளுமாக விளங்குகின்றன. உயிரல்பொருள்களை வானநூல் (Astronomy), தரைநூல் (Geology), இயற்கைத் தோற்றநூல் (Physics), இயற்கை அமைப்புநூல் (Chemistry) என்று பல வகையாக ஆராய்கின்றனர். உயிர்ப்பொருள்களைப்பற்றி ஆராய்வாரும் நிலைத்திணை உயிர்நூல் (Botony), இயங்குதிணை உயிர் நூல் (Zoology) என்று பிரித்தும், உடல்நூல் (Physiology) உள்ளநூல் (Psychology) என வகுத்தும் ஆராய்கின்றனர்.

உள்ளமும் நூல்களும் :— "உள்ள நூல் உள்ளத்தைப் பற்றியது. அறிவாராய்ச்சிநூலும் (தருக்கம் logic), அழகு நூலும் (aesthetics), அறநூலும் (Ethics) உள்ளத்தைப் பற்றியனவேயாம். ஆனல் அவையோ, "அறிவு எவ்வாறு இருத்தல் வேண்டும்? அழகு எங்ஙனம் அமைதல் வேண்டும்? மக்களது ஒழுக்கம் எந்தவகையில் ஒளிர்தல் வேண்டும்?" என ஆராய்கின்றன. உள்ளத்தியற்கை நூலோ வேண்டற்பாலதைப் பற்றிக் கூருது உள்ளதை உள்ளவாறே ஆராய்கின்றது. "மக்களுடைய அறிவு எத்தகையது? எவ்வாறு வளர்கிறது? அவர்கள் அழகு என எதனைப் புகழ்கின்றனர்? அவர்களது உள்ளநிலை என்ன? மக்களது ஒழுக்கம் எத்தகையது? எவ்வாறு தோன்றுகின்றது? எவ்வாறு மாறுதல் அடைகின்றது?" என்றெல்லாம் ஆராய்வதே உள்ளத்தியற்கை நூலின் வேலையாம். இஃது உயர்நிலை நூலாகாது (Normative scieince), உள்ளத்தை ஆராயும் இருப்புநிலை நூலாகிறது (Positive science).

உள்ளமும் கருவிநூலும் :— "யாதானும் ஒரு பயனைக் கருதிப் பலர் பயிலும் பயனிலை நூலாம் கருவிநூலும் (Technology) அது அன்று. இயற்கைநூல் என்பவை எல்லாம் தன்னலம் இல்லாத இடத்தே எழுந்தவையாகும். வானநூலை எப்பயன் கருதி ஆராயத்தொடங்கினர் ? இயற்கைப்பொருள்களின் அமைப்பை யாதுவேண்டி ஆராய்ந்தனர்? அவ்வாராய்ச்சியின் பயனுகப் பல நன்மைகளை உலகம் அடைந்தது என்பது உண்மையே. மின்னெளியைக் கண்டறிந்த பிறகுதான் அதனை விசிறியாகவும், விளக்காகவும், குதிரையாகவும், (Electric train) திருமுகமாகவும் (Telegram) பயன்படுத்திக் கொண்டோம். ஆயினும் இந்தப்பயனை மனத்திலே எண்ணித்தான் மின்னெளியைக் கண்டுபிடித்தனர் எனச்சொல்லக்கூடுமோ?

இயற்கைநூல் ஆராய்ச்சியினுல், நாம் இயற்கைப் பரப்பினை நன்கு அறிய முடிகின்றது; அதன் இயல்பினையும் செயலினையும் அறிந்தபோது இனி வரப்போவதனையும் உணர்ந்து அதற்குத் தக நடக்கின்றோம். 'நெருப்புசுடும் தன்மையது' என்றறிந்தால், அதனில் கையை இட்டுப் புலம்பாது அடிசில் அட்டுண்டு அகமகிழ்கின்றோம், இவ்வாறு இயற்கையை நம்கையாளாக்கிக் கொள்கின்றோம். உள்ளத்தியற்கைநூலையும் கருவிநூலாகப் பயின்று பயன்பெறுகின்றோம். கல்வி கற்பிப்பார் தமது கல்வி முறையைக் குழந்தைகளின் உள்ள நிலைக்கேற்ப ஒரு சிறிது திருத்தி அமைக்கின்றனர். சொற்பொழிவாளர் "கேட்பார்ப்பிணிக்கவும் கேளார் வேட்கவும்" மொழிவது எவ்வாறு என அறிகின்றனர். அம்மட்டோ? உலகியலை நடத்துவதற்கும் உள்ளத்தியற்கை நூலறிவு வேண்டுவதேயாம். ஒரு சிறிய கருவியைக் கையாள்வதென்ருலும் அதில் கைவல்ல கம்மியனொருவனிடத்தே கையாளாய் இருந்து அக்கருவியைப் பற்றிய நூலைப்பயின்ற பின்னன்றே வேலையாள் என வெளிவருகின்றோம்? ஆனுல், எல்லாக்கருவிகளினும் மிக நுண்ணியதாகிய நமது உளளத்தைக் கையாள்வதற்கு ஏதேனும் பயில்கின்றோமோ? ஈதென்னே அறியாமை இருந்தபடி! ஒருசிறு குழவியினிடத்தே அழகியதொரு கருவியைக் கொடுத்தால் அதனை உடைத்தெறிகின்றது. அங்ஙனமன்றே மக்களிற்பலர் உள்ளமெனும் உயரிய கருவியினையும் உடைத்தெறிந்து உலகில் உழல்கின்றனர். கருவிநூலாகவேனும் இதனைக் கற்கவேண்டுவது இன்றியமையாததே ஆம். ஆனுல், உள்ளத்தியற்கைநூலின் உண்மைகளைக் கண்டு பிடித்தவர்கள் இப்பயன் நோக்கி ஆராய்ந்தவர்கள் அல்லர். முன்னர் ஆராய்ச்சி தொடங்குகின்றது; பின்னரே பயன் எதிர்பாராமல் தொடர்கின்றது. பயனை நோக்கியே ஆராய்ச்சிசெய்ய இயலாது. சில இடத்தே இயற்கை நூலின்முடிபும் (Scientific Judgment)

நமது கருத்துக்கு(Personal opinion)இசையாததாக இருக்கலாம். 'நம்முடைய உள்ளத்தின்செயல், உள்ளத்தின் அமைப்பினையும், உடலின் அமைப்பினையும் பொருத்ததாய் அவற்றிற்குக் கட்டுப்பட்டுக் கிடக்கின்றது' என உள்ளத்தியற்கை நூல் விளக்குகின்றது. 'எத்தொழிலையும் எவ்வாறேனும் செய்யலாகும்' என எண்ணிக்கிடப்பார் இதுகண்டு அஞ்சி நடுக்குவர். உண்மையை நாடாது பயனை நாடுவார் தமது கருத்துக்கிசைய நூலின் முடிபைத் திரித்தன்றோ கூறுவர்? தமது கருத்தினைப் பொருட்படுத்தாது நூன்முடிபைஆராய்வதே இயற்கை நூலறிஞரின் பெருமையாகும்; அன்னோர் தம் கருத்துக்கிசைந்தவையே உண்மை எனக் கணக்காணார்; எதனையும் நம்பார்; ஒவ்வொன்றினையும் அளவையால் அளந்து அறிந்த பின்னரே தம் கொள்கையாகக் கொள்வர்.

## III. உள்ளத்தியற்கைநூல் முறைகள்

பலநிலைகள் :— "உலகியலை ஆராய்வாருக்குக் காட்சியே தலைசிறந்த அளவையாகின்றது. எனினும் குறியாராய்ச்சி (அநுமானம்-Inference) முதலியன வாராமல் இல்லை. அவை அனைத்தும் காட்சி என்ற அடிப்படையின்மேல் கட்டப்பட்டவையேயாம். உண்மையறி நூலைப் போலக் காற்றிற் பறக்காது இயற்கைநூல் மண்ணிலேயே நடக்கின்றது. ஆனல் காணாதவற்றைப்பற்றிக் கணக்காண்பது இங்கும் சிறிதளவு உண்டு. எனினும் அந்தக்கணுவின் அளவே ஒவ்வோர் இயற்கைநூலினும் மாறுபட்டே காணப்படுகின்றது. அந்நூல்கள் அனைத்தும் ஒருபடித்தாக இல்லையன்றோ? உலகியல்துறையில் அங்கங்குக்கிடக்கும் செய்திகளை வகைசெய்து, அவற்றில் ஒன்றற்கொன்றுள்ள தொடர்பை உணர்ந்து, அத்தொடர்பை ஒட்டி அவற்றைத் தொகைசெய்து, அவை ஒவ்வொன்றின்

வரன்முறையை ஆராய்ந்தறிந்து விளக்கி விரித்துரைத்தலே இயற்கை நூலின் முறையாகும். உலகத்தில் நாம் பழகிவரும்போது அறியாமையால் நமது உள்ளத்தே எழுகின்ற சில பல கேள்விகளுக்கு விடையளிப்பதே இயற்கை நூல்களின் முடிபாகும். எல்லோருக்கும் ஒப்பமுடிந்த விடைகள் சில கேள்விகளுக்கே அகப்பட்டுள்ளன. சில கேள்விகளுக்கோ அத்தகைய முடிபான விடைகள் நம்மறிவிற்கு எட்டவில்லை. தற்போது நாம் அறிந்துள்ள செய்திகளுக்குப் பொருத்தமானதொரு கொள்கையே (Hypothesis) விடையாகக் கிடைக்கின்றது. மின்வெளி (Ether) என்பது ஒன்று உண்டா என்ற கேள்விக்கு ஒரு முடிபான விடை கூறமுடியாது. 'இருக்கலாம்' என்றே சொல்ல இடமுண்டு. 'உண்டு' என்று கொண்டால் ஒளியின் இயக்கத்தை எளிதில் அறிய முடிகின்றது. ஆதலின் இதனைத் தற்போதைய கொள்கை (Hypothesis) எனலாம். இந்த அளவிற்கு இயற்கை நூலிலும் கணக்காண இடமுண்டு. சில இடங்களில் இந்தத் தற்போதைய கொள்கைகளையும் கண்டறிய முடியாமல் திகைக்கின்றோம். அந்த இடங்களில் 'நமது மனத்தே இன்ன கேள்விதான் எழுகின்றது' எனத்தெளிவாகக் கூறமுடிவதில்லை. அப்பொருளைப்பற்றிய அளவில் நமது அறியாமையை அளந்தறிந்து நமது கேள்வியைத் தெளிவாக அறிவதோடு நின்றுவிடுகின்றோம். நமக்கோ பல பொருள்களைப் பற்றித் தெளிவான எண்ணம் இருப்பதில்லை. அவ்வெண்ணம் இவ்வாறு தெளிவடையத் தெளிவடையக் கேள்வியும் உருப்பெற்று எழுகின்றது. பொருளை நன்கு அறியாதபோது கேள்வியே எழுவதில்லை. எனவே, கேள்வி எழுவதும் நம் அறிவின் பெருக்கத்தின் அறிகுறியாம். சில இயற்கை நூல்கள் இவ்வாறு கேள்வியை எழுப்பிப்போகும் வழியே மேடுபள்ளமின்றித் திருந்தித் திருந்தி அமைகின்றன. உள்ளத்தியற்கை நூல் கேள்வியை எழுப்பும் நிலையிலும் இருக்கின்றதாதலால்

எல்லாக் கேள்விகளுக்கும் முடிந்த முடிபான விடைகளை இங்கு எதிர் பார்க்கமுடியாது. இவ்வாறு பல வகையான நிலையில் இருக்கும் இயற்கைநூல்கள் காட்சி என்ற கற்கோட்டையின் உள்ளேதான் ஒளிர்கின்றன.

செய்க்காட்சி:— "ஆனால் ஒவ்வொரு பொருளையும் நேரே போய்க் காண்பதோ இயலாது. அதுபற்றி இயற்கை நூலினர் செயற்கைக்காட்சியைக் கையாள்கின்றனர். சில செடி கொடிகள் மிகச் சூடான நிலத்தில்தான் விளைகின்றன. குளிர் நாட்டில் வாழ்வோர் இச்செடி கொடிகளைப்பற்றி ஆராயவேண்டுமானல், திரைகடலோடித் தேடித்தான் அலைய வேண்டும். அக்குளிர் நாட்டினர் அவ்வாறு உழலாது சூட்டறை ஒன்றைச் செயற்கையில் ஏற்படுத்தி அதனில் அச் செடி கொடிகளை நன்கு பயிர் செய்விக்கின்றனர். இச்செய்க் காட்சியால் (Experiment) நம் அறிவு விரைவில் அகலமாகின்றது. இயற்கைப் பரப்பில் எங்கெங்கோ போய் அலையாது நாம் வேண்டியவற்றை, வேண்டிய இடத்தே, வேண்டியபோது, வேண்டிய கட்டுத்திட்டங்களுக்கு இடையே காணுதல் கூடும். இயற்கையில் கட்டுத்திட்டங்கள் ஏற்படுத்திக் காண இயலாது. கட்டுத்திட்டங்களிலேயே பலவகையான செய்காட்சிகளைச் செய்துகொண்டு இயற்கையின் உண்மை இயல்பை எளிதில் அறியலாம். பிறர்செய்யும் செய்க்காட்சியை நாமும் செய்து கொண்டு அவர் கண்ட முடிபின் உண்மையை அறியலாம். செய்க்காட்சியில் பல கருவிகளும் பயன்படுகின்றன. இயற்கைநூல் கொள்கைகள் காற்றில் பறவாது அளந்தறியத் தக்கனவாக இருக்கின்றன. எண்ணியும், நிறுத்தும், அளந்தும், முகந்தும் காணும் அளவைகளையும் இயற்கைநூல் அறிஞர் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஊசிமுனையால் புறங்கையில் குத்திக்கொண்டு போவாமானல் சிற்சில இடத்தே நோயினையும்,

சிற்சில இடத்தே சூட்டினையும் உணர்கின்றோம். இவற்றின் பரப்பினை அளந்து காணலாம். சினந்து விழும்போதும், நகைத்து மகிழும்போதும், நமது குருதியோட்டம் உடல் துடிப்பு முதலியனவற்றைப் பல கருவிகளைக்கொண்டு அளந்து காணுதல் கூடும்.

அகக்காட்சி:— "உள்ளத்தியற்கை நூலினர், பண்டை நாள்தொட்டுக் கையாளும் முறையானது அகக்காட்சி (Introspection) என்பதேயாகும். பண்டைநாளில் அது ஒன்றே முறையாய் விளங்கியது. உள்ளத்தின் செயல்கள் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் உரியதாகலின் பிறரால் அவற்றை எளிதில் அறிய இயலாது. அவ்வவர்களே தமது மனநிலையை வெளியிட்டால்தான் நாம் அறிதல்கூடும். அவ்வாறு எடுத்துரைக்க வேண்டுமானால் அவ்வுள்ளச் செயல் நிகழ்ந்த உடனேயே அவர்கள் அவற்றை உள்நோக்கிக் காணல் வேண்டும். அகக்காட்சியை மற்றைய இயற்கை நூல்களும் பயன்படுத்திக்கொள்கின்றன. மிக ஒளியோடு விளங்கும் ஒரு மின்னொளி விளக்கை நன்றாக உற்றுநோக்கியபின் உடனே இருட்புறத்தே திரும்பினால், அவ்விளக்கின் வடிவம் கண்ணெதிரே தோன்றுகிறது. அந்நிழலை உற்றுநோக்குவதால் முன் நன்கு காணப்படாத குறிப்புக்கள் குறித்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் சினம் இன்பம் முதலிய சிக்கலான உள்ளநிலையை இவ்வாறு உற்றுநோக்குவதென்பது அருமையினும் அருமை. வெகுண்டு விழும்போது வெகுளிவரும் வழியை உற்றுநோக்கினால் வெகுளி மறைந்தன்றோ ஓடும்? வெகுளி அடங்கியதும் வெகுளி நிலையை உடனே நினைப்பூட்டி ஆராய்தல் கூடும். உணவை உண்டு உவப்பதைவிட்டு அதனைக்கண்டு களிப்பதற்கு ஈது ஒப்பாகும். எனினும் பழக்க வழக்கத்தால் இப்பயிற்சி பயன்படுகின்றது. உள்ளத்தின் பல நிலைகளைப்பற்றி வேறுவகையில்

அறிய இயலாமையால் இம்முறையையும் நாம் கையாளவேண்டி இருக்கிறது.

ஆவிநூல் :- "உள்ளத்தியற்கைநூல் எதைப்பற்றிக் கூறுகின்றதென்பதைக் கணக்கண்டாற்போல ஒவ்வொருவரும் அறிந்து வைத்துள்ளோம். இதனை ஆவிநூல் (Science of-soul) என்று முன்னாளில் வழங்கினர். உலகியலில் கண்டறியக் கூடாத ஆவியினைப்பற்றிப் பேசப்புகுந்தால் ஆவியை நம்பாதவர் அனைவரும் இந்நூலினை இகழத்தொடங்குவர். குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளவேண்டி வரும். நூலினை முற்றமுடிய ஆராய்ந்தபிறகு ஆவியார் உளரோ இலரோ எனச் சுட்டிக்காட்டவும் கூடும். ஆனால் தொடக்கத்திலேயே அதைப்பற்றிப் பேசுதல் திருமணம் ஆவதற்கு முன்னரே செல்வப்பிள்ளையர் எத்துணையர் என்று கேட்பதுபோலாகும்.

நனவு நூல் :— "மானத சாத்திரத்தை நனவுநிலை நூல் (Science of Conciousness) என்பர் ஒரு சாரார். உறக்க நிலைக்கு மாறாக விழிப்பு நிலையில் நாம் ஏதாய் இருக்கின்றோமோ, அஃதே நனவு நிலையாம்; கனவு இல்லாத உறக்கத்தில் புகும்போது நாம் எவ்வகையில் சிறுகச்சிறுகக் குறைவு படுகின்றோமோ, பின்வெளி ஒலியால் உறக்கத்தினின்று எழுகையில் சிறிகச்சிறுக எந்த அளவில் மிகுதியாகின்றோமோ, அஃதே நனவாம். கலையாத நிறை உறக்கத்திலும் ஓர் வகையான உணர்ச்சி உண்டு எனச் சிலர் கூறுவது உண்மையானால் அங்கும் நனவுநிலையே காண்கின்றோம் எனலாம். அறிதுயில் வகை பல (Hypnotism etc). அந்த நிலையை நனவுநிலை என்று சொல்லுவதற்கில்லை. அன்றியும் நாம் தூங்கும்போது நம்முடல்மேல் ஈ முதலியன உட்கார்ந்தால் நனவின்றியே கைகால் அசைத்து அவற்றை

ஓட்டுகின்றோம். இவற்றையும் உள்ளத்தியற்கைநூல் ஆராய்-கின்றமையால் நனவுநூல் என்று சொல்வதற்கில்லை.

நடத்தை "நூல் :— நடத்தைநூல் என்பர் மற்றொரு-சாரார். உள்ளம் என்பதனை அதன் செயல்களாலேயே அறிந்து கொள்கின்றோம். உள்ளத்தினை உடலின் தொழில்களினின்றும் குறித்தறிகின்றோம். சினந்தால் கண் சிவக்கின்றது. எண்ண-மிட்டிருந்தால் நரம்புகளின் அசைவு உண்டாகிறது. நடத்தை நூல் என்பது இவ்வுள்ளத்தியற்கைநூலின் இயல்பினை நன்கு விளக்குகின்றது. ஆனால் ஒரு சாரார் உடலினும் உள்ளம் வேறன்று என்றும், உள்ளத்தின்செயல் அனைத்தும் உடலின் செயலே என்றும், நாக்கில் எச்சில் ஊறுவதுபோல மூளையில் அறிவு ஊறுகின்றது என்றும் கூறத்தொடங்கி உள்ளநூல் என்பது நடத்தைநூலே எனப் புனைந்துரைக்க வருகின்றனர். ஆதலின் அவ்வாறு புனைந்துரைத்தால் அவர்கள் கொள்கையை ஒப்புக்கொண்டவர் ஆவோம்.

உள்ளம் :— "மற்றொருசாரார், இந்நூல் உள்ளத்தைப் பற்றியதென்பர். உள்ளம் என்று ஏதோ ஒரு பொருள் தனியே உருவும் வடிவமுமாகப் புகுந்து மறைந்துகிடக்கின்றது என்ற கொள்கையையும் தொடக்கத்திலேயே நாம் பேசுதலாகாது. பெயர்ச்சொல் ஒன்று இருக்குமானால் அதனால் குறிக்கப் படுவது ஒரு வடிவப் பொருளே என்ற முடிவிற்கு வந்துவிடு-கிறோம். உள்ளமானது உள்ளச்செயலையே குறிக்கின்றது என்பதையும் அச்செயல்கள் ஒவ்வொருவர்க்கும் தனித்தனி உரியன என்பதையும் மறவாதிருந்தால் உள்ளத்தைப்பற்றிய நூல் எனக் கூறுவதால் கேடு ஒன்றும் இல்லை. நினைத்தல், சினத்தல், முயலுதல், எண்ணமிடல், அறிதல் முதலியவை உள்ளத்தின் செயல்கள் என அறிந்துள்ளோம். உள்ளத்

தியற்கை நூல் முழுதினையும் அறிந்தபிறகு அந்நூலின் இயல்பினை நன்கு விளக்கிக் காட்டுதல் கூடும்.

அகநிலை புறநிலை :- "உலகத்துள்ள பொருள்கள் எல்லாவற்றையும் உள்ளத்தியற்கை நூல் ஆராய்கின்றது. பொருள்களைப் பொருள்கள் என்ற அளவில் மற்றைய நூல்கள் ஆராய்கின்றன. அது புறநிலை ஆராய்ச்சி. உள்ளத்தியற்கை நூலோ மனத்தால் அறியப்படுகின்ற அவற்றின் தொடர்பினையே ஆராய் கின்றது. அது அகநிலை ஆராய்ச்சி ஆகும்.

ஒப்பு வளர்ப்பு முறை :- "உள்ளத்தியற்கை நூலானது, ஒப்புமுறை (Comparative Method), வளர்ச்சிமுறை (Gentic method) நோய்முறை (Pathalogical method) என்று பலவகையாக ஆராய்கின்றது. மக்களின் செயல்களோடு விலங்குகளின் செயல்களையும் குழவிகளின் செயல்களையும் ஒப்புநோக்கி ஆராய்வதால் பல உண்மைகள் புலனுகின்றன. மக்களிலும் பல இனத்தாரின் செயல்களை ஒப்புநோக்குவதும் பெரும்பயன் தருகின்றது. ஈதே ஒப்பு முறையாம். அறிவானது குழவிநிலையில் எங்ஙனம் விளங்குகின்றது? மக்களது முன்னேற்ற வணியின் கீழ்ப்படியிலுள்ள காட்டு மிருண்டிகளிடம் எங்ஙனம் காணப்படுகின்றது? நாளாக நாளாக எவ்வாறு வளர் கின்றது? என்றெல்லாம் ஆராய்வது வளர்ச்சி முறையாகும். வளர்ந்து முற்றிச் சிக்கலாவதற்கு முன்னர் முளையிலேயே உள்ளத்தின் செயல்களைத் தெளிவாகக் கண்டறியலாம். இவ்வகை ஆராய்ச்சியால் உள்ளநிலையின் அடிப்படையான பொருளின் இயல்பினை அறிவது எளிதாகின்றது. இன்றியமையாத இயல்பானது முதுமையிற்போல இளமையிலும் காணப்படுமன்றோ? முதுமையில் பல சிக்கல்களுக்கிடையில் இவ்வின்றியமையா இயல்பினை அறிவது அருமை. இளமையில்

அச்சிக்கல் இல்லாமையால் அதனை அறிவது மிக எளிது. இனி, நோய் முறையாவது நோயுற்றார் தம் மனநிலையை ஆராய்வதாகும். அவர்களது மனத்தோடு பொதுமக்களின் மனத்தை வைத்து ஆராயும்போது அறிவின் பொதுநிலை நன்கு புலனாகின்றது.

உடலும் உள்ளமும் :— "நோய்வாய்ப் பட்டாரது உடல் நலிவதோடு உள்ளமும் நலிகின்றது. உள்ளத்திற்கும் உடலிற்கும் ஒருதொடர்புண்டு. உள்ளத்தின் செயலினைத்தான் நாம் அறிகின்றோம். உள்ளத்தின் செயலோ உடலின்செயலாக முடிகின்றது. உடலைவிட்டு உள்ளத்தைத் தனிப் பொருளாக அறிய இயலாது. மேல்நோக்காகப் பார்க்குமிடத்து உள்ளத்தின் இயக்கம் அனைத்தும் நரம்பின் இயக்கமாகவே தோன்றுகின்றது. ஆகவே நரம்பின் அமைப்பையும், உடலின் அமைப்பையும் சிறிதளவு நாம் அறியவேண்டி நிற்கின்றோம். அவ்வாறாயின் உடல் நூலுக்கும் உள்ளத்தியற்கை நூலுக்கும் என்னவேற்றுமை? உடல் நூலானது ஒவ்வோர் உடல் இயக்கத்தினையும் ஒவ்வோர் உறுப்பின் செயலாகக் கருதி ஆராய்கின்றது. உள்ளத்தியற்கைநூலோ உறுப்பின்செயலாகக் கருதாது தனிப்பட்ட மகனின் செயலாகக்கருதி ஆராய்கின்றது."

## IV. குழவியும் கொள்கையும்

ஆதாமின் சாபம்:- பலபல கொள்கைகள் பலபல காலத்தே குழந்தைகளைப்பற்றியும், குழந்தை உள்ளத்தைப்பற்றியும் பரவி வந்துள்ளன. தீவினையே குழந்தையின் வடிவம் என்று நம்பியவர்களும் உண்டு. அவர்கள் கொள்கையின்படி ஆதாமும் ஈவாளும் பெற்ற பெருஞ்சாபத்தின் பயனே இக்குழவிகளாம். அன்று எழுந்த இந்தக் கோணலை இன்று நிமிர்த்துவதே கல்வி-

யாம். இக்கொள்கையினைப் பெற்று வளர்த்த தாயும் தந்தையும் யார்? குழவிகள் நம்போல் நடவாததால் அவற்றை வெறுக்கும் நம் உள்ளமேயாம். நேற்றுப்பிறந்த குழந்தை இன்று நடக்க அறியாது படுக்கையிற் கிடந்து அழுமானால் அதனுள் இருக்கும் சாத்தானா அதனை அவ்வாறு செய்யத் தூண்டுகின்றான்? அவ்வாறு நடக்க அதற்குக் கால் உரம் இல்லை; பழக்கமும் இல்லை; ஆதலின் முற்றாத இளமை நிலை இங்கு உண்டே அன்றிக் கீழ்ப்படியாத முரட்டு நிலை இங்கு ஏது?

"அள்ளிக்கொடுக்கின்ற செம்பொன்னும்ஆடையும்ஆதரவாய்க்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்குமே என்னைக் குறிப்பதல்லால்,
துள்ளித் திரிகின்றகாலத்தி லே என் துடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகனே"

(தனிப்பாடல்)

என்று பாடிய புலவரும் மேற்கூறியவர்கள் கருதியதுபோலவே இயற்கைக் கொடுமையை நன்மையாக மாற்றும் இடமே பள்ளிக்கூடம் எனக்கருதினார்போலும். முதியோர் நிலைமையிலிருந்து இளையோர் வாழ்க்கையைக் காணுவதால் ஏற்படும் பிறழ்ச்சி உணர்வே ஈதாம்.

கீழ்மை உணர்வு :— மற்றொரு கொள்கையும் உண்டு. குழவி தன் நிலையில் பிறருக்குப் பல வகையிலும் கீழாக இருப்பதனை எண்ணி எண்ணி, மனம் நைந்து நைந்து, முதியோரை வையும்தோறும் உள்ளம் வெதும்பிக் கீழ்மை உணர்வால் எழும் ஒருமனச் சிக்கலிடையே சிக்கிக்கொண்டு உலகினையே எதிர்த்துப் போராடுவதுபோல இளைஞர் வளரவருகின்றனராம். இவ்வாறு ஆட்லர் (Adler) என்பார் தம் அனுபவத்தின் பயனாகக் குழவி உள்ளத்தினைப் புனைந்து உரைப்பது உயர்வு நவிற்சியின் பாற்பட்டதேயன்றி உண்மையன்றாம்.

இயற்கைச் செயல்கள் :— பழக்கத்தாலன்றி இயற்கை ஆகவே எழுகின்ற செயல்கள் பால்குடித்தல் போன்றவையாம். இவை மக்களிடத்தேயும் விளங்குகின்றனவாம். இவற்றை இயற்கைச் செயல்கள் எனலாம். இவற்றை எழுப்பும் உட்பாட்டை இயற்கைச் செயல்நிலை எனலாம் (Instinct). இவை அனைத்தும் பிறந்த உடனேயே செயற்படுவதில்லை. காதல் ஓர் இயற்கைச் செயல்நிலையே; ஆனால், பல ஆண்டுகள் சென்று புலப்படத் தோன்றுவதாம். இயற்கைச் செயல்கள் குழந்தை-யின் பருவத்திற்கேற்ப அவ்வப்போது முதிர்ச்சியுற்றுச் செயற்படவருவதே குழந்தைஉள்ளத்தின் வளர்ச்சியைப்பற்றியதொரு பெரிய உண்மை என இப்போதும் பலர் எண்ணி அதன்படி கல்வி முறையை அமைக்க முயல்கின்றனர். கர்க்பாட்ரிக் (Kirkpatrick) என்ற அமெரிக்க உள்ளநூல் அறிஞர் குழந்தை உள்ளத்தைப்பற்றி இவ்வாறே ஆராய்ந்து எழுதி-யுள்ளார். விலங்குகளிடையும் இந்த உண்மையைப்பற்றிப் பேசி வந்த காலமும் உண்டு. கன்று, பிறந்ததும் பால் குடிக்க ஓடுகின்றது. குழந்தைகளிடையும் நடை விளையாட்டு முதலியன அந்தந்தத் தொழிலுக்குத் தக்க காலத்தே செயற்பட்டுவர மக்கள் கண்டனர். ஆனால் விலங்குகளின் நடத்தையிலிருந்து மக்களின் நடத்தையைப்பற்றி ஒப்புமை வழியால் அறிய முயலுதல் அருமையேயாம். மக்கள் நடத்தை ஒருபடித்தாக இல்லாமல் பலவகையாக மாறும் பான்மையதாகும். ஆகையால் அங்கு ஒரே வகையான செயல்நிலையைப் பற்றிப் பேச இட-மில்லை. செயல் நிலைமாறாமலே இருக்குமானால் மக்களிடையே கைப்பழக்க மென்றும் நாப்பழக்கம் என்றும். பேசமுடியுமோ? கல்வி கற்பதற்கே இடமில்லாமற் போய்விடுமன்றோ? விளக்குச் சுடரில் புகாமல் இருக்க விட்டிற் பூச்சிக்குக் கற்றுக்கொடுப்-பவர் ஒருவரும் இல்லை. ஆனால் மக்களுக்குள்ளே சிறுகுழவி-களுக்கேனும் இயற்கைச் செயலுக்குமாறாக இவ்வாறு கற்றுக்

கொடுக்க முடியாதெனக் கூறலாகுமோ? பச்சிளங்குழந்தைகளை உற்று நோக்கினுல் நிலைபேருன செயல் அமைப்புகள் பல அவற்றினிடையே இருப்பதாகக் காணக் கிடைக்கவில்லை. குழந்தைகளின் நடத்தை வேண்டியபடி எல்லாம் மாறி உருப் பெற்று வரக்காண்கிருேம். இங்ஙனமாயின் இயற்கைச் செயல் நிலை எனக்கூற இடமேது? இயற்கைச்செயல் நிலையின் இலக்கணமாகக் கூறப்படுவன இரண்டு. ஒன்று பயிற்சியின்றிப் பண்பட்டுத்தோன்றும் இயல்பாம். மற்ருென்று அனைவரிடத்தும் காணநிற்கும் பொதுமை இயல்பாம். குழவிகளைப் பொறுத்தவரையில் இவை இரண்டும் பொய்த்துப் போகக் காண்கிருேம்.

வரலாற்றுச் சுருக்கம் :— குரங்கிலிருந்து மனிதன் வந்துள்ளான் எனப்பொதுவாகப் பருப்பொருளாகப் பலரும் பேசிவருகின்றனர். உள்ளது சிறக்கும் கூர்தல் என்னும் மலர்ச்சி முறையினையே (Evolution) இவ்வாறு பேசி வருகின்றனர்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாம் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்று வரும் பாட்டும், நீரில் வாழும் மீனுய், தரையில் தவழும் ஆமையாய், நிலத்தில் ஓடும் பன்றியாய், விலங்கு நிலைக்கும் மனித நிலைக்கும் இடைப்பட்ட நரசிம்மமாய், குறளாய், நெடியோனுய், மழு எடுத்தும், வில் எடுத்தும், கலப்பை எடுத்தும், மாடுமேய்த்தும், உபதேசித்தும் வரும் மனிதனுகிப் படிப்

படியாக உயர்நிலை மனிதனாய், எதிர்காலப் பெரியோனாய் வளர்ந்து வருவதனைக்கூறும் தசாவதாரக்கதைகளும் இந்த மலர்ச்சி முறையையே வற்புறுத்தும் என்று கூறுவாரும் உளர். மக்கட்கருவின் வளர்ச்சியை ஆராயும்போது மீனாய்ப் பலவகை விலங்குகளாய் வளர்ச்சி முறையில் அமைந்த படிகள் எல்லாம் கருவிலே தோன்றக் கண்ட உயிர்நூல் ஆராய்ச்சியாளரும் உண்டு. கருவிலே வளரும் சூல் அவ்வாறு மாறி மாறி உருப் பெற்று வளர்ந்து வருகின்றது என்பர் ஒருசிலர். மக்கட் படியை அடைந்தபின் மனிதர்கள் எந்தஎந்த வகையால் எல்லாம் படிப் படியாக உயர்ந்து இன்று நாகரிகத்தில் சிறந்துவிளங்கு-கின்றார்களோ அத்தனைப் படிகளிலும் குழவிநிலையிலிருந்து காளைநிலையை அடைவதற்குள் மக்கள் ஏறிவந்து விடுகின்றனர் என்பர் வேறுசிலர். குழவிகளின் வாழ்க்கையை ஆராயும் போது இந்த உண்மை நன்கு விளங்குமென அந்த ஆசிரியர்கள் இதனை விரிந்த கொள்கையாகப் பரக்கப் பேசுகின்றார்கள். மரத்தில் தொத்திய குரங்குகள்போலப் பிறந்தவுடனே குழந்தைகள் கையை இறுகப் பிடிக்கின்றதனை அன்னோர் எடுத்துக்காட்டுவர். வேட்டை முதலிய பல சமுதாய வளர்ச்சி நிலைகளைக் குழந்தைகளுடைய விளையாட்டிலே காணலாமென ஸ்டான்லி ஹால் (Stanley Hall) என்ற பெரியார் விளக்குகின்றார். இவ்வாறு பொருளற்ற செயல்களில் எல்லாம் பலர் பொருள்காண முயல்கின்றனர். இவர்கள் எதிர்பார்த்த அவ்வளவு சிறந்த உண்மை இத்தகைய ஆராய்ச்சியால் வெளிப்-பட்டுள்ளது என்று சொல்லுவதற்கு இல்லை.

மீசை முளைத்த குழவி :- முதியவரின் குறுகிய வடிவமே குழவிகளாம் என்பதும் ஒருசிலர் கொள்கை. முதியவனாய் முற்றுவதற்கு முன்னிற்கும் நிலையே இளமை என முதியவர்-களில் பலரும் நம்பிவருகின்றனர். அதற்கு ஏற்ப முதியவரின்

ஒழுக்கத்தையே குழவியிடமும் உலகம் எதிர்பார்த்து வருகின்றது. குழவிகளைப்பற்றிய பலகொள்கைகளின் இடையேயும் இந்தக்கொள்கை உள்ளீடாக விளங்கிவரக் காணலாம். முதியோருக்கும் குழவிக்கும் வடிவின் அளவால் அன்றி வேறொரு வகையிலும் வேற்றுமை காணுவது அருமையாம். இந்த அருமைப்பாட்டால் நேர்ந்த கேடுகளைப் பின்னே காண்போம். 'முதுமகனின் சிறுவடிவமே குழவி' என்ற இக்கொள்கை பழங் கதையாகப்போக, 'வளர்ச்சியுற்ற குழவியே முதுமகனும்' என்ற உண்மை இப்போது விளக்கமுற்று வருகிறது. சில முது மக்களைச் சில அறிஞர்கள் 'மீசை முளைத்த குழவி' என எள்ளி நகையாடுவதனை நாம் காண்கின்றோம் அன்றோ? இந்த நகையாட்டத்திடையேயும் ஓர் அறிவு விளக்கம் கொழுந்து விட்டெரிவது இப்போது நன்கு புலனாகிறது. ஒவ்வோர் உயிர்ப் பொருளையும் தனித்தனியே வைத்து ஆராய்ந்து அது உலகோடு பொருத்தமுற்றுவரும் நிலையில் அதன் மனத்தினை ஆராயவேண்டும் என அறிஞர்கள் இப்போது வற்புறுத்தி வருகின்றார்கள்.

விரையொன்று சுரையொன்று:—மனிதனது வளர்ச்சியும் வாழ்க்கையும் பண்பும் செயலும் இயற்கையின் பயனா? செயற்கையின் விளைவா? நம் கூடப்பிறந்தவையா? நாம் கூட்டமாய் வாழும்போது தோன்றியனவா? தலைமுறை தலைமுறையாகக் குடிவழியே (inheritance) வருவனவா? கற்றுக் கொள்வதனால் எழுவனவா? இவ்வாறு அறிஞர்கள் போராடி வருகின்றார்கள். "விரை ஒன்று போட்டால் சுரை ஒன்று முளையுமோ" என்பது ஒரு பழைய பழமொழி. "பண்டிதன் பிள்ளை மண்டு" என்பது மற்றொரு பழமொழி. உலகில் எதுவும் தனிப்பட்டதொரு காரணத்தின் பயனாக நிகழ்ந்து வரக்காணோம். ஒவ்வொரு நிலையும் பலபல காரணங்களின்

சிக்கலுற்ற காரியமாகவே தோன்றுகின்றது. "வினை (விதை) ஒன்று போட்டால் சுரை ஒன்று முளையாது" என்பது உண்மையே. ஆனால் அந்த விரையைச்சுற்றி நிற்கும் சூழலும் சுற்றுப்புறநிலையும் இன்றியமையாதனவேயாம். வற்றிய பாறைமீது இட்டவிரை முளைப்பதே இல்லை. நாம் கைகழுவும் நிலத்தே விழுந்த விரையோ எழுந்து சுரைக்கொடியாகப் பரந்து வீடு முழுதும் சுற்றிக்கொள்ளுகிறது. இயற்கைப் பண்புகளும் சுற்றுப்புற நிலையால் மாறக்கூடியனவேயாம். இவ்வாறு மாறுகின்ற மாற்றம் ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு காலம் உண்டு. ஆகவே நடத்தையை ஆராயும்போது பலவகை-யான காரணங்களின் தொடர்பினையும் ஆராய்தல்வேண்டும். பலபல அனுபவங்களின் நிலையான பயன்களையும் ஆராய்தல் வேண்டும்.

"தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கெல்லாம் இனிது" (குறள்)

---

# 2. குழவி ஆராய்ச்சி

---

## I. அறிவாராய்ச்சி நிலைகள்

கேள்விப்படி :— அறிஞர்கள் எந்தக் கொள்கைகளையும் கண்மூடி நம்புவதில்லை. தங்கள் தங்கள் மனத்திற்குப் பிடித்த-மானவற்றையே தத்தங்கொள்கையாக ஆராய்ச்சியாளர்கள் உருப்படுத்திக்கொள்வது ஆராய்ச்சிக்கே பெருங்கேடு விளைப்-பதாகும். ஆராய்ச்சிக்கு முதற்படி கேள்வி பிறக்க இடமுண்டு என்பதனை உணர்வதேயாம். வானத்தில் மீன்கள் மின்னு-

வதனைக்கண்டு வியந்து நிற்பவன் யார்? "அவை எவ்வாறு மின்னுகின்றன?" என்ற கேள்வியை எழுப்புபவனே ஆம். "இதில் என்ன வியப்பு!" என்று எள்ளி நகையாடுபவன் வானநூலிற் புகுவது என்றும் இல்லையாம். "அப்பம் எப்படிச் சுட்டாளோ? தித்திப்பு எப்படி நுழைத்தாளோ"? எனப்புதுமை காண்பவனே சுவையறிந்து திறம்படச்செய்யும் மடையனுகலாம். இல்லையானுல் அறிவற்ற மடையனே ஆகலாம். அங்ஙனமே "குழவி குழவிதான். அதனைப்பற்றித் தலையை உடைத்துக்கொள்வானேன்?" என்பவன் குழவிநிலையை அறிவதில்லை. குழவியை ஒரு கடவுள் நிலையாகக்கண்டு ஆராயும் மாண்டிசாரி அம்மையார் (Mm. Montessori) முதலியோரே அந்தக் குழவி நிலையின் புதை பொருளை (Secret of Childhood) உணர்ந்து வருகின்றனர். அக்கேள்வியை ஆராய்வதற்கு அடுத்தபடியாக, வேண்டிய விவரங்களை (data) எல்லாம் ஒன்று சேர்த்தல்வேண்டும். இந்தப்படியில் அகநிலை (Subjective) ஆராய்ச்சியை விடப் புறநிலை (objective) ஆராய்ச்சியே வேண்டற்பாலதாம். மனத்திற்குள்ளே எண்ணி எண்ணிக் கனவு காண்பதனைவிட வெளிப்பொருள்களை ஆராய்ந்து உண்மை காண்பதே சிறப்பாம். "தொன்னைக்கு நெய் ஆதாரமா? நெய்க்குத் தொன்னை ஆதாரமா?" என்பதனைப் பற்றி எண்ணி எண்ணிப் பயன் என்ன? தரையில் கவிழ்த்துப் பார்த்தவனைப்பற்றி வழங்கும் கதை அவனை நகையாடினுலும், "தொன்னைக்கு நெய் ஆதாரம்" எனச் சொல் ஆரவாரம் செய்வார் வாயை நெய்யூற்றி மூடி விட்டான் என்று கூறலாம் அன்ருே?

கோவைப்படி:—இந்த விவரங்களைக் கோவை செய்வதே மூன்ருவது படியாம். இந்த விவரங்களின் இயைபினை ஆராய்வதே அறிவு நூல் ஆராய்ச்சியாம்.

பாகுபாட்டுப்படி :— இந்த விவரங்களைப் பாகுபாடு (Classification) செய்தலும் வேண்டும். ஈதே நான்காம் படியாம். பகுத்தறிவு என்றால் பாகுபாடுசெய்து அறிவதே அன்றோ? பாகுபாடு செய்ய இயலாமற்போனால் பகுத்தறிவின் பயன் என்னை?

கோள்கைப்படி :— ஆனால் இந்தப் பாகுபாடே முடிந்த முடிபு எனக் கருதலாகாது. புள்ளி விவரங்களைக் கோவை செய்தாலும் அவற்றை ஒரு கொள்கையாகக் (Hypothesis) கொண்டாலன்றி அவற்றின்பொருள் ஒன்றும் விளங்குவது இல்லையாம். புகைவண்டி ஒவ்வோர் இடத்திலிருந்தும் ஓடும் மணியைக்காட்டும் அட்டவணையில் பல எண்கள் காணக்கிடக்கின்றன. புகைவண்டி ஓடும் வேகத்தைப்பற்றிய கொள்கையினை அந்த அட்டவணை விளக்குவதாகக் கண்டதும் நம் மனத்தே அந்த அட்டவணை நன்கு படிந்து விடுகிறது. வெற்றெண்கள் பொருள் ஆழங்கொண்டு விளங்குகின்றன. ஆகவே ஒரு கொள்கையினை உருப்படுத்துவதே அடுத்த ஐந்தாம் படியாம். கொள்கை இவ்வாறு புள்ளி விவரங்களை விளக்க வருவதேயன்றி உண்மையை நிலைநாட்ட வருவதன்றாம். ஆகையால் அறிவுநூல் ஆராய்ச்சியின் முடிவு கொள்கையே எனக் கூறுவதற்கு இல்லை. வழிகாட்டவரும் ஒரு கை விளக்கென்றே அதனைக் கூறமுடியும்.

செய்க்காட்சிப்படி:- உலகிலோ பலகாரணங்களும் ஒருங்கே நிகழக் காண்கிறோம். 'இவற்றில் எது சிறந்தது? எவ்வளவிற் சிறந்தது?' என்று அறியவேண்டுமானால் ஒவ்வொரு காரணமாகத் தனித்தனியே இயங்கிவரச்செய்து காணுதல் வேண்டும். காற்றினை ஆராய்வார் அதனுடைய செறிவு (Density) அழுத்தம் (Pressure) சூடுநிலை (Temperature) முதலிய-

வற்றை வேறு வேறு இயங்கிவரச் செய்து வருகின்றனர் அன்றோ? இவற்றின் அளவை நுட்பமாக அளந்துகாட்டும் கருவிகளும் வேண்டும். அறிவுநூல் ஆராய்ச்சி அளவு ஆராய்ச்சியேயாம். அதனை வேண்டிய இடத்தே இவ்வாறு ஆராய்வதனையே செய்க்காட்சி அல்லது சோதனை (Experiment) என்பர். செய்க்காட்சி என்றால் இயற்கையான நிலையில் அன்றி ஆராய்ச்சிக்காக வேண்டிச் செய்து காணுதலாம். [வரிந்து புனைந்த பந்தினை வரிப்புனை பந்து என்பது போலச் செய்து காணுதலைக் செய்க்காட்சி என்றும்.] விரும்பியபடி எல்லாம் ஓடும் மனக்குதிரையை அடக்கி ஆண்டு உண்மை வழியே செலுத்துவது செய்க்காட்சியேயாம். இந்தச் செய்க்காட்சி முறையினைக் குழந்தை உள்ளத்தை ஆராயப் பயன் படுத்துவது அருமையாம். குழந்தைகள் உயிரற்ற பொருள்கள் அல்லவே! எனினும் குழந்தைகளின் ஒற்றுமை, செயற்கை நிலை முதலியவற்றை ஆராய இச்செய்க்காட்சி முறையினை அறிஞர் கையாண்டு வருகின்றனர்.

முன்னறிவிப்பு :— பின்னர் நிகழப்போவதனை முன்னரே அறிந்து கூறுவதே ஆராய்ச்சியின் முடிவாம். அப்போதுதான் நாம் அறிந்ததன் பயனைகப் புறநிலையை அடக்கியாளுதல் கைகூடும். "சூடுகண்ட பூனை அடுப்பங்கரை ஏறாது" என்று கூறி மடப்பள்ளியில் வாழ்வோரும் பின் நிகழப்போவதனை எல்லாம் முன் அறிந்து கூறிவரலாம் என நம்புதற்கு இடம் இல்லை. இன்று நம் அறிவு சென்றவரை அதற்கு ஏற்ற முடிவுகளை மட்டுமே கூறமுடியும். பலபல காரணங்களைத் தனித்தனியே வேறுபிரித்து ஆராய்ந்து அந்த அந்த நிலைக்கேற்ற நடைமுறைகளைக் கையாளுதல் வேண்டும். வேறுபாடுகளையும் வகை செய்து விரிவாகப் பாகுபாடு செய்தல்வேண்டும். புள்ளி முறைகளைக் கணக்கிடுவார் (Statisticians) பின்பற்றும் பல

வழிகளையும் கையாளுதல் வேண்டும். ஆனால் ஆராய்ந்த விவரங்களை மறந்து அவற்றிற்கு அப்பாலும் கனவிற் பறந்து சென்று விளக்க முயலுவது அடிப்படையை விட்டு அந்தரத்தில் வெறுங்கையோடு பறப்பதாக முடியும். பறவையைப்பற்றி ஆராய்ந்த உண்மை மீனைப்பற்றியும் உண்மையாகுமோ? இரண்டினையும் ஒன்று என்று கொள்வதால் வரும் கேடுகளைக் குன்றக்கூறல், மிகைப்படக்கூறல் என்று பழைய நாளிலேயே அறிஞர்கள் விளக்கி வைத்துள்ளார்கள்.

ஆட்சிப்படி :- காரணவுணர்வால் பின்நிகழப் போவதனை முன்னறிந்து கூறமுடியுமானால் அச்செயலை அடக்கி ஆண்டு நாம் விரும்பியபடி எல்லாம் செய்தல் கூடும்.

## II. குழவியுள்ள ஆராய்ச்சி முறைகள்

தொடர்ந்த நிலை ஆராய்ச்சி :— உள்ள நூல் அறிஞர் கையாளும் முறைகளை முன்னரே கண்டோம். குழவி உள்ளத்-தினை ஆராய்வார் அவற்றை ஏற்றபடி அமைத்துக்கொள்ளுவர். அந்த முறைகளையும் சிறிது விளக்குவது விரும்பத்தக்கதாம். குழந்தையின் நடத்தையை ஆராய்வோர் குழந்தை பிறந்தது முதல் அது வளர்ந்து பருவம் அடையும் வரை அதன்செயல் அனைத்தினையும் தொடர்ந்து கண்டு ஆராய்வதும் உண்டு. (Continuous observation).

வெட்டுநிலை ஆராய்ச்சி:- ஏதேனும் ஒரு குறித்த பருவத்தைக் கண்டு ஆராய்வதும் உண்டு (Cross - sectional observation). முன்னைய ஆராய்ச்சிமுறை பூவானது காய்த்துப் பழுப்பதனை ஊன்றி நோக்கி ஆராய்வது போன்றது. பின்னைய ஆராய்ச்சி முறை ஏதேனும் குறித்ததொரு பருவத்தில்

பூவையோ, காயையோ, பழத்தையோ வெட்டி வெட்டுண்ட போது உள்ளே தோன்றும் நிலையை ஆராய்வதுபோன்றது. தொடர்ந்து கண்டுவரும் வளர்ச்சிநிலை ஆராய்ச்சி இயங்குநிலை (dynamic) ஆராய்ச்சியாம். வெட்டுநிலை ஆராய்ச்சியோ, பொதுவாகத் தோன்றக்கூடியதோர் உண்மையை மட்டும் விளக்குவதாம். குழந்தைகள் பேசாத நிலையும் உண்டு; அங்கு அவர்கள் நடத்தையைப் பார்த்தன்றி, வேறு வகையால் ஆராயச் சிலபோது இடமே இல்லை; ஆதலின், குழந்தை உள்ளத்தினைப்பற்றிய ஆராய்ச்சி அனைத்தும் பார்த்து ஆய்வதின் பல வகைகளாக விளங்கக் காண்போம்.

வரலாற்றுமுறை :— குழந்தைகளைத் தனித்தனியாக-வைத்து ஆராய்வதற்குச் சிலகாலமாகப் பல முறைகள் கையாளப்பெற்று வருகின்றன. முதன் முதலாகத் தோன்றிய முறை வரலாற்று முறையாம். தங்கள் வீட்டுக் குழந்தை-களின் வரலாற்றினைப் பிறந்ததுமுதல் எழுதிப் பலர் வெளி-யிட்டுள்ளனர். ஈதே தனிக்குழவி வாழ்க்கை வரலாற்று முறையாம் (Biographical method). காக்கைக்கும் தன்குஞ்சு பொன்குஞ்சு. "என் செல்வமே," "என் கல்வியே" என்று கொண்டாடும் தாய்தந்தையரின் கண்ணுக்கு உண்மை உள்ளவாறு புலனுதல் அருமையினும் அருமையாம். குழந்தையின் நடத்தைகளிற் பல தங்களுக்கு விளங்காமையால் அவற்றைப்பற்றி ஒன்றும் எழுதாமலே இன்னோர் விட்டு-விடுவதும் இயல்பேயாம்.

தனிக்குழவி ஆராய்ச்சி :— ஆகவே குழவிகளது உடல் நிலையினையும் உள்ளத்தியல்பினையும் ஆராய்ந்த அறிஞர் தனித்தனிக் குழவிகளைப்பற்றி எழுதத்தொடங்கினர். இவர்கள் குழந்தைமேல் வைத்த பற்றினுல் பிறழ்பட எழுத வாரார்கள். இதுவே தனிக்குழவி ஆராய்ச்சியாம் (Case Study).

மருத்துவ நிலையமுறை :- [நிலையம் ; தமிழ்ச்சொல் ; நிலை நாட்டப்பட்டது ; நிலயம்வட சொல்.] குடும்ப மருத்துவர் முதலானோர் இவ்வாறு எழுதிவந்தனர். இதனால் பல உண்மைகள் விளங்கின. மருத்துவர் எழுதுவன மருத்துவ நிலைய முறையின் பாற்படும் (Clinical Method).

காலவகை எடுத்துக்காட்டு முறை :— யாதானும் ஒரு குழவியைப்பற்றி மட்டும் ஆராய்தல் போதுமா? ஒரு மரம் தோப்பாவதில்லை ; ஒரு பிள்ளையும் பிள்ளையாவதில்லை. ஆதலின் பல குழந்தைகளையும் இடைவிடாது தொடர்ந்து உற்று நோக்கிவரச் சில ஆராய்ச்சியாளர் தொடங்கினர். இடைவிடாது ஆராய்வது என்பது அருமையானாலும் குழவி உள்ளத்தினைப் பற்றிய உண்மையான புள்ளிவிவரங்களை அறிய இதனினும் வேறு சிறந்தமுறை இல்லை எனலாம். தொடர்ந்து ஆராய்வதன் அருமையை நோக்கி நாளுக்கு ஒரு முறையோ, வாரத்திற்கு ஒருமுறையோ, இரண்டொரு மணிநேரம் ஆராய்வதென அறிஞர் முற்படுகின்றனர். குறிப்பிட்ட நேரத்தில் நிகழும் செய்கைகளை எல்லாம் ஒன்று விடாது குறித்துக்கொண்டு, "அவற்றில் எவை எவை மிகுதிப்பட்டும், குறைந்தும் தோன்றுகின்றன ; எவை அடிக்கடி தோன்றுகின்றன" என்றெல்லாம் கணக்கிட்டு வருகின்றனர். இதுவே காலவகை எடுத்துக்காட்டு முறையாம் (Time sampling method).

நடத்தைவகை எடுத்துக்காட்டு முறை :— வேறு சிலர் குறித்ததொரு நடத்தையை மட்டும் ஆராயத்தொடங்கி 'அஃது எந்த அளவில் அடிக்கடி தோன்றுகின்றது? எந்த நிலைகளிடையே நிகழ்கின்றது?' என ஆராய்ந்து வருகின்றனர். இதுவே நடத்தைவகை எடுத்துக்காட்டுமுறை (Behaviour sampling method) ஆம்.

குழவிநிலை ஆராய்ச்சி :— குழவிநிலைகளின் ஆராய்ச்சி (Situation analysis) என மற்றொரு முறையும் உண்டு. தொட்டிலினிடையோ, தள்ளுவண்டியிலேயோ, நடைவண்டியின் பின்னே, அசையும் படத்தைப் பார்க்கும் போதோ, கதைகளைக்கேட்கும்போதோ, அல்லது வேறு எந்த நிலையிலோ 'குழவிகள் என்ன என்ன முறையாக நடந்து கொள்ளுகின்றன' என்று ஒவ்வொரு நிலையையும் ஆராய்வதே இந்த முறையாகும்.

சொல்லாடும் முறை:—சொல்லாடும் முறை (Interview method) என இப்போது ஒரு முறை மிகப்பயின்று வரக்காண்கிறோம். குழந்தைகளோடு கட்டுப்பாடற்ற நிலையில் விரும்பியபடி எல்லாம் அவை ஆடிவரும்போது அவற்றுடன் விளையாடப்போய்க் கூடிக் குலாவிப் பேசிப்பழகி, அவற்றின் நடத்தையின் இயல்பினையும், மாறுபாடுகளையும் அறிய முயலுவதே இந்த முறையாம்.

கருவிமுறை :— உற்று நோக்கி ஆராயும் இந்த முறைகளின் நுட்பத்தினைப் பெருக்கி வளர்க்கவே அறிஞர் மேலும் மேலும் விரும்புகின்றனர். இடைவிடாது ஆராய மனிதனால் ஆவதில்லை. ஆதலின் குழந்தைகள் விளையாடுமிடத்தே சென்று அவைகளும் அறியாதபடி புகைப்படம் பிடித்தும், அசையும் படத்தையும் பேசும் படத்தையும் தொடர்ந்து எடுத்தும், அவற்றின் பேச்சின் ஒலிகளைப் பதிவுசெய்து கொண்டும், மின்சாரத்தின் உதவியால் மற்றும் பல குறிப்புகளைக் குறித்தும், தனி மனிதனால் செய்யமுடியாதவற்றை எல்லாம் விஞ்ஞானத்தின் உதவியால் கருவிகளை அமைத்து அக்கருவிகளைத் தம் கைஆளாகக்கொண்டு அறிஞர் பயன் படுத்தி வருகின்றனர். கருவிகள் சிறந்து விளங்கும் இடமே செய்க்காட்சி நிலையமாம்.

ஆய்வுமன்ற முறை :— குழவி உள்ளத்தினை ஆராய மேனாட்டுப் பல்கலைக் கழகங்களில் எவ்வளவோ முயற்சிகள் நடந்து வருகின்றன. அமெரிக்க நாடு இந்த முறையில் மிகமிக முன்னேறி உள்ளது எனலாம். யேல் (yale) பல்கலைக் கழகத்தில் இதற்கென வில்மச்சு மன்றம் ஒன்று கண்ணாடியால் அமைக்கப் பட்டுள்ளது. அதில் தங்குதடை இன்றிக் கட்டுப்பாடு என்பதே இல்லாது, குழவிகளை விளையாட அங்குள்ளோர் விடுகின்றனர். அந்தப் பளிங்கு மண்டபத்தினுள்ளே தம் விருப்பப்படி குழவிகள் இருந்துவருகின்றன. குழந்தைகளின் இயக்கங்கள் அனைத்தினையும் ஒன்றுவிடாது புகைப்படம் பிடிக்கும் அமைப்பும் அதனிடையே உண்டு.

ஒஹியோ (Ohio) :— ஒஹியோ பல்கலைக் கழகத்திலே ஆராய்ச்சியாளர் குழந்தைகள் விளையாட ஒலிதடைப் பொருள்கொண்டு அறை ஒன்று கட்டிவைத்துள்ளனர். அந்த அறையின் உள்ளே இருக்கும் குழந்தைகளுக்கு வெளியே நின்று ஆராய்கின்றவர்கள் புலப்படாத வகையில் அந்த அறைகள் அமைந்துள்ளன. குழந்தைகள் தங்களை ஒருவரும் பார்க்கவில்லை என நினைத்துக்கொண்டு விரும்பியபடி எல்லாம் விளையாடிவருகின்றன. வெளியேநின்று ஆராய்வோர் மாற்று(turns)போட்டுக் கொண்டு குழந்தைகளின் பேச்சை எல்லாம் சுருக்கெழுத்தில் எழுதிக்கொண்டும்,நடத்தைகளைப் பற்றி விளக்கமாக குறித்துக் கொண்டும் வருகின்றனர். பின்னர் அனைத்தினையும் ஒன்று திரட்டிப் பாகுபடுத்தி வேண்டியபொழுது வேண்டியவாறெல்லாம் அன்னோர் ஆராய்கின்றனர்.

செய்க்காட்சி முறை :— இவை அனைத்தும் செய்க்காட்சி நிலையங்களாதலின் இவற்றினைச் செய்க்காட்சி முறை (Experimental method) எனலாம்.

புள்ளிவிவர ஆராய்ச்சி :— குறிப்பிட்ட ஒரு நிலையில் குழந்தைகளை இருக்கவைத்து அந்த நிலையில் அவை எவ்வாறு நடக்கின்றன என இந்நாளில் பலர் கண்டறிந்து ஆராய்ந்து வருகின்றனர். 'ஒருகுழந்தையின் நிலையோடு மற்றொரு குழந்தையை ஒப்பிட்டுப் பார்ப்பது எவ்வாறு' என்பதே இவர்கள் செய்யவேண்டிய ஆராய்ச்சி. பொதுவான அளவையைக்கண்டு பிடித்தல் வேண்டும். பல குழந்தைகளையும் ஆராய்ந்து ஒவ்வொரு வயதிலும் பொதுவாக ஒவ்வொரு குழவியும் எவ்வளவு உயரம், எவ்வளவு எடை உள்ளன எனக் கண்டறிந்து பொதுநிலை எடையையும், பொதுநிலை உயரத்தினையும் வயதிற்கேற்பக் கோவை செய்து மேனாட்டு அறிஞர்கள் அமைத்துள்ளார்கள். அதுபோலவே பலகுழந்தைகளின் நடத்தை பேச்சு முதலியனவற்றையும் ஆராய்ந்து "இந்த இந்த வயதில் ஒரு குழந்தை இவ்வாறு இவ்வாறு நடந்துகொள்ளும்; சுற்றியுள்ள பொருள்களில் இத்தனை இத்தனைப் பொருள்களின் பேரை அறிந்திருக்கும்; இப்படிப்பட்ட இப்படிப்பட்ட கணக்குகளைப் போடும்; இவ்வாறு இவ்வாறு பேசும்" என்றெல்லாம் அறிஞர் பொதுவாக முடிவு கட்டியுள்ளனர். சிலபோது வயதிற்கேற்ற உயரமோ எடையோ இல்லாது இருக்க நாம் காண்பதுபோல, வயதிற்கேற்ற பேச்சும் நடத்தையும் சில குழவிகளிடத்தே இல்லாதிருக்கவும் காண்கிறோம். உடம்பின் வயது (Physical age), உள்ளத்தின் வயது (Mental age) என்று வேறு பிரித்துப் பேசுவதற்கு வேண்டிய கணக்கு விவரங்களை அறிஞர்கள் தந்துள்ளார்கள். இவர்கள் ஆராய்ச்சியினைப் புள்ளிவிவர ஆராய்ச்சி (Statistical Method) எனலாம். சராசரி நிலை முதலியவற்றை அறிவது கணக்கு முறையாலேயாம். ஒரு குழந்தையின் உள்ளத்தின் வயதினை உடம்பின் வயதால் வகுத்தால் வருவதனை அறிவுநிலை ஈவு (Intelligence quotient) என அறிஞர்

வழங்குகின்றனர். ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகத் தெளிவாக இருக்கவேண்டி இதனை நூறால் பெருக்கி வழங்குவதே வழக்கம்.

தனித்தேர்வு முறை :—அறிவுநிலை ஈவுகொண்டு குழந்தைகளை ஒப்பிட்டு அறியலாம். அறிவுநிலை ஈவினை அறியப் பலபல முறையில் குழவிகளைக் கேள்விகேட்டு வரவேண்டும். பரீக்ஷை அல்லது தேர்வு போன்றதே இம்முறை. ஆதலின் இதனைத் இன்று தேர்வுமுறை எனலாம். இந்தத் தேர்வு முறையே பல வகையாக இன்று ஆராயப்பெற்று வருகிறது.

குழூஉத் தேர்வு முறை :— இந்த முறை முன் எல்லாம் தனித்தனிக் குழவிகளை ஆராயவே பயன்பட்டது. சென்ற உலகப்போரின்போது படையாளரைத் தேர்ந்தெடுப்பதற்குத் தனித்தனியாக அன்றிப் பல்லாயிரக்கணக்கான மக்களுக்குத் தேர்வினை நடத்தவேண்டி இருந்ததால் அதற்கு ஏற்ப அறிவுத் தேர்வு (Intellegence Test) முறை தனித்தேர்வு முறையாகாது (Individual test) குழூஉத்தேர்தல் முறையாக (Group test) முடிந்தது.

சமுதாய முறை :— சேரிகளையும். ஊர்களையும் பள்ளிக்கூடங்களையும், பலவகையான மக்கட் குழூஉக்களையும் ஆராயும் ஆராய்ச்சிமுறை (Communal survey)பல தோன்றியுள்ளன. சிறுவரிடம் தோன்றும் போக்கிலித்தன்மை முதலியவற்றைப் பொதுநோக்காகக் கொண்டு இவ்வாறு அறிஞர் பலர் ஆராய்ந்து வருகின்றனர். இத்தகைய ஆராய்ச்சியில் முன்னரே விளங்கியுள்ள பகுதிகள் மலைபோலப் பெரிதாகிவரப் பிற ஒன்றும் தோன்றாமல் மறையுண்ணுகின்றன. அதனால் நுட்பங்கள் தெளிவாக வழியில்லை. குழவிகளைப்பலவேறு நிலைகளின் பல-

வேறு சுற்றுப் புறச் சூழலிடையே உற்றுநோக்கியும் ஆராய்ச்சியாளர் ஆராய்கின்றனர். பெற்றபிள்ளைகள் பெற்றோரிடம் வளரும் முறையும், வளர்ப்புப்பிள்ளைகள் வளர்ப்போரிடம் வளரும் முறையும் எவ்வாறு மாறுபடுகின்றன என்பது போன்ற பல கேள்விகளுக்கு விடை அளிக்க அறிஞர் முயலுகின்றனர்.

வினாமுறை :— ஒரு சிக்கலைப்பற்றி ஆராயும் வேளையில் அறிஞருக்கு எழும் பல கேள்விகளைக் கோவையாக எழுதி ஒவ்வொன்றிற்கும் நேரே விடை அளிக்குமாறு பல அறிஞருக்கும் பிறர்க்கும் அனுப்பி, வரும் விடைகளின் உதவியால் ஒரு முடிவிற்குவரப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பல குழவி உள்ள நூல் அறிஞர்கள் முயன்றார்கள். இது ஒரு திருத்தமான முறை அன்று என்பது இப்போது நன்கு விளங்கியுள்ளது. கேட்கும் கேள்வியின் நோக்கினைப் பெரியவர்களும் உணர்வது அருமையானால் குழவிகளிடம் விளக்க நிலையை எங்ஙனம் எதிர்பார்த்தல் கூடும்? எந்த நிலையில் எந்தப் பொருளில் எந்த விடை தரப்படுகின்றது என்பதனை அறிவதும் எளிதன்று. சிறுவர்கள் சிலபொழுது விளையாட்டிற்காகவே தவறெனத்தெரிந்த விடையையும் சரியானவிடை போலத் தருவதுண்டு. இந்த முறையை வினாமுறை (Questionnaire Method) எனலாம். ஆகவே இதுபோது ஆராய்கின்றவர் சொல்லாடு முறைக்குத் துணையாகவே இந்த வினாமுறையினைக் கையாண்டு வருகின்றனர்.

அகநோக்க முறை :— மனத்துள்ளே தோன்றுகின்ற எண்ணங்கள் உணர்ச்சிகள் முதலியவற்றினைப், புறத்தோற்றமாம் நடத்தைகளின் வழியே அன்றிக் கண்மூடி உள்முகமாக நோக்கி ஆராய்வதே பழைய முறையாம். இதுவே அகநோக்க

முறையாம். (Introspective method). முதியோரிடையேயும் இந்தமுறை பயன்படாது போவதனை இந்நாளைய அறிஞர் வற்புறுத்துகின்றனர். உள்ளுக்குள்ளே சினம் பொங்கி வெளியே வெள்ளமிடும்போது உள்முகமாக நோக்கினால் இருந்த இடம் தெரியாது சினம் மறைந்து போதலின் அதனை உள்முகமாக நோக்குவது எங்ஙனம் கூடும்? குழந்தைகள் உள்ளத்தே என்ன நிகழ்கின்றது என எவ்வாறு உணருவது? அவற்றினிடையே அகமுகப் பழக்கத்தினை எதிர்பார்க்க முடியுமா? எனினும், அவைகாணும் கனவு முதலியவற்றைத் தாமாகவே கூறிவரும்போது இத்தகைய அகநிலை வெளிப்படக் காண்கிறோம். அப்போது புறநிலை ஆராய்ச்சிபோல அகநிலை ஆராய்ச்சியும் பயனுடையதாகும்.

மனமருத்துவ முறை :— உடல் நோய்க்கு மருத்துவர் இருப்பது போல மனநோய்க்கும் மருத்துவம் செய்வோர் தோன்றியுள்ளனர். நாம் இங்குக்குறிப்பது மருந்து கொடுத்து நரம்பின் கேட்டை நீக்கும் முறையன்று. நம்மனம் நனவுமனம் (Conscious mind) என்றும், நனவிலி மனம் (Unconscious mind) என்றும் பல வகையாகும் என்று மனப்பகுப்பு ஆராய்ச்சி (Psycho-analysis) செய்வாரும் உள்ளனர். இவர்கள் கையாளும் முறையே மன மருத்துவ முறையாம் (Paychiatric method). நனவிலி மனத்தில் மறந்துபோன பல எண்ணங்கள் குடிபுகுந்து வாழ்கின்றனவாம். அவையே நம்மையும் அறியாது நம்மை ஆளுகின்றனவாம். அந்த எண்ணங்களை நனவாக மாற்றினால் வலிய நோய்களும் தீரும் என்பர்.

ப்ராய்ட் :— ப்ராய்ட் (Freud) என்ற அறிஞரைப் பின் பற்றுவோம். நாம் காணும் கனவுகள், நாம்பேசும்போதும்

எழுதும்போதும் தோன்றும் பிழைகள், பழைய நினைவுகள், மன மருத்துவர் சொல்லும் சொல்லுக்கு எதிர் கேட்போர் மனத்தில் உடனேதோன்றும் சொற்கள் முதலியவற்றினைக் கொண்டு நனவிலி மனத்திலிருப்பனவற்றைத்தட்டி எழுப்பி நனவு மனத்திடையே கொண்டுவர இந்த அறிஞர்கள் முயலு-கின்றார்கள். அவ்வாறு கொண்டுவந்ததும் பலமான நோய்கள் தீருகின்றனவாம். குழந்தை நிலையில் மட்டுமே இத்தகைய எண்ணங்களிற் பல, பெற்றோர் முதலியோராற் கடிந்து பேசப் படுவதால் வெளிப்பட வழியின்றி நனவிலி மனத்தேபோய்க் குடியிருந்து மறைந்தொழுகின்றனவாம். இவற்றில் பெரும்-பான்மைய காம எண்ணங்களாம். "பிறந்த குழந்தையின் பெருங்காமம்" முதலியவாகப் ப்ராய்ட் முதலியோர் கூறிவரும் புராணக்கதைகளை நாம் நம்பாமற்போனாலும் இத்தகைய ஆராய்ச்சியால் மனத்தினைப்பற்றிய சிறந்த உண்மைகள் பல வெளியாகி உள்ளன என்பதை யாவரும் ஒப்புக்கொள்ளு-கின்றனர்.

பிறநூலின் தொடர்பு :— குழந்தை உள்ள ஆராய்ச்சி மிக அண்மைக்காலத்தில் தொடங்கியதாகும். முற்காலத்தில் அதனைத்தனியே ஆராய்ந்தார் மிக மிகச்சிலரே. உள்ளத்-தியற்கை நூலில் ஒரு பகுதியாகவும், அதற்கு முன்னர் உண்மை ஆராய்ச்சியின் ஒரு பகுதியாகவும், அதற்கு முன்னர் அறிவும் நிலைப்பாடங்களில் ஒன்றாகவும் அறிஞர் ஆராய்ந்து வந்தனர் இப்போதோ அறிவு பல பலதுறையாகப் பிரிந்து சிறப்புநிலை ஆராய்ச்சிகளாக (Specialisations) விளங்கக்காண்கிறோம். எனினும் சிறப்பு நிலையில் மட்டும் கண்டால் பொருளின் உண்மை நிலை விளங்காது என்பது இதுபோது தெளிவாகி வருகின்றது. இந்தச்சிறப்பு நிலை ஆராய்ச்சிகள் அனைத்தினையும் ஒன்று சேர்த்துக்காண வேண்டும் (Synthesis) என்ற

உண்மையை அறிஞர் அனைவரும் வற்புறுத்தி வருகின்றனர். ஒரு பொருளின் முன்னிலையை அறிந்தாலன்றி அதன் பின்னிலையை அறிவது முடியாது. ஆதலின் முதியோர் உள்ளத்தினை அறியவேண்டின் குழந்தை உள்ளத்தினை அறிந்தே தீரவேண்டும் என்று இன்று யாவரும் உணர்கின்றனர். குழவி-மருத்துவஞ் செய்வாரும் உடலும் உள்ளமும் ஒன்ருய்ப்-பிணைந்துகிடத்தலினுல் குழவி உள்ளத்தினையும் அறிய அவாவு-கின்றனர். இவ்வாறு ஒவ்வோர் அறிவு ஆராய்ச்சியும் வேறு பிறபலவகையான ஆராய்ச்சிகளோடு பின்னிக் கிடக்கின்ற நுட்பத்தினை இருபதாம் நூற்ருண்டு வளர்ந்துவர வளர்ந்துவர வற்புறுத்தி வருகின்றதனைக் காண்கின்ருேம். ஆதலின் குழவி-யுள்ள ஆராய்ச்சி வரலாற்றுநூல், உள்ளத்தியற்கைநூல், பூதநூல், இயற்கைநூல், உயிர்நூல், கணக்குநூல், சுகவழி-நூல், உடலமைப்புநூல், நோய்நூல், சமுதாயநூல் முதலிய பலவகை நூலாராய்ச்சியாளரின் உதவியினையும் நாடி நிற்கக் காண்கிருேம்.

## III. பண்பாட்டிற்கேற்ற பைதல்நிலை

பழங்காலம் :— குழந்தைகளைப் பற்றிய கொள்கையும் அவைகளின் நிலையும் நாகரிகத்திற்கு நாகரிகம் மாறுபட்டுக்-கொண்டே வருவதனை உலகவரலாற்றில் காண்கிருேம். குழந்தையும் கடவுளும் கொண்டாடும் இடத்திலே என்பது மன நூலில் கண்டதோர் உண்மை.

> “ பெறுமவற்றுள் யாம் அறிவதில்லை அறிவறிந்த
> மக்கட் பேறல்ல பிற ”

என்கின்ருர் தமிழ்வள்ளுவர். சீனப்பெருமக்கள் முன்னேரை வழிபடும் கோயில் நிலையமாகத் தம் குடும்பங்களைப் போற்றி

வாழ்ந்து வந்தவர்கள்; ஆதலின், குழந்தைகளையும் தொடர்ச்சி-யாகவரும் அத்தகைய சங்கிலியில் ஒரு வளையமாகவே கொண்டு பேணிவந்தனர். எகிப்திய நாகரிகமும் குழந்தைகளிடம் காட்டிய அன்பிற்குப் பேர்போனதாம். கிரேக்க நாகரிகத்தில் ஸ்பார்ட்டா (Sparta) நகரும், ஆதன்ஸ் (Athens) நகரும் இருவேறு கொள்கைகளைப் பின்பற்றியதனை யாவரும் அறிவர். ஸ்பார்ட்டா நகரத்தினர் உடல் உரத்தினையே நம்பினவர்களாதலின் பிறந்த குழவியை வெளியே வளர்த்திவிட்டுப் "பிழைத்து இருக்-கின்றதா" என நோக்கி நின்றனராம். எத்தனை வருத்தத்தினை-யும் பொறுத்துக்கொள்ளக் கூடிய நிலையிலேயே அக்குழவிகள் வளர்ந்துவந்தன. ஆதன்ஸ் நகரமோ கலைவளர்ச்சியிலேயே ஈடுபட்டு, "உடலும் மனமும் ஒருவகையாக அழகும் உரமும் பெற்று எல்லாத்துறைகளிலும் அளவிற்கு மேற்பட்ட பெருமையோ சிறுமையோ உறாமல் நடுநிலைச் சிறப்பினைப் பெற்றுவரவேண்டும்." என்ற தன் கொள்கைக்கேற்பக் குழவி-களை வளர்த்துவந்தது. யூதர்களோ, 'கடவுள் மகன் குழவியாகப் பிறக்கப்போகின்றான்' என நம்பி எதிர்பார்த்து வந்ததால், குழவிகளைக் கொண்டாடியே வந்தனர். ரோம் (Rome) நகரிலோ குழந்தைகளைக் கொன்று விடுவது முதலில் எங்கும் பரவி இருந்தது ; அவர்களுடைய வல்லரசு நிலை எங்கும் பரவும் வரை கல்வியைப் பரப்புகிற முயற்சியொன்றும் எழுவதற்கு இடமில்லாது போயிற்று.

கரிகாலம் :- கிறித்துமதம் பரவியது முதலில் ரோமரது வல்லரசிடையேதான். குழந்தைகளைக் கொல்லுகின்ற வழக்-கத்தினை எதிர்த்துக் கிறித்தவர்களது போராட்டம் தொடங்-கியது. 'குழவிகளைப் போன்றாரே கடவுளருகே வீற்றிருப்பர்' எனக் கிறித்து பெருமான் கூறினர் அன்றோ? ஆனால் இடைக்-காலத்தில் கிறித்து மதத்தின் முழு நன்மையையும் உலகம்

பெற்றுவருவதற்கு இடம் ஏற்படாது போயிற்று. 'ஆதாமும் ஈவாளும் செய்த தவற்றின் காரணமாக, மக்கள் பிறக்கும்போதே கொடிய பாவிகளாகப் பிறக்கின்றனர்' என்ற பழைய ஏற்பாட்டுக் கொள்கையே பரவியது. கிறித்து பெருமான் பாடிய குழவிப்பாடல் நினைவிற்கு வாராமல் மறைந்துநின்றது. குழவிகளின் இயற்கைக் கொடுமையைநீக்கி நல்லோராக்குவதே கல்வியின் நோக்கம் எனப் பலரும் அந்நாளில் நம்பிவந்தனர்; பாவிகளைப் பாவம் அற்றோராகச் செய்வதே கல்வி முறையாம்; இவ்வாறு செய்யும் கடமை கிறித்தவக் கோயிலில் வாழும் பாதிரிமாரின் கடமை எனக் கருதினர்; பாதிரிமாரும் அதனைத் தம்மாலானவகையில் நிறைவேற்றிவந்தனர். "சாத்தான்குஞ்சுகளை நையப்புடைத்தால்தான் பேய்விட்டோடும்; குழவிகள் நல்லவர்களாக மாறுவர்" என்பதற்கேற்ற முறையையே அந்த ஆசிரியன்மாரும் கையாண்டுவந்தனர். ஆதலின் இடைக்காலக் கிறித்தவ உலகத்தில் குழவிகளின் வாழ்க்கை பிரம்படியும் பேர் எரிவுமாகவே சீர்கெட்டிருந்திருக்க வேண்டும் என்பது வெள்ளிடை. இத்தகைய இடைக்காலத்தினைக் கரிகாலம் (Dark ages) எனப் பேரிடுவது இவ்வகையிற் பொருத்தமேயாம்.

எந்திர காலம் :– எந்திரங்கள் தோன்றிக் கூலியாட்களைப் பெருக்கின. இந்தப் புதிய புரட்சிமுறையால் மக்கள் வயிறார உண்பது பெருந் தொல்லையாகவே முடிந்தது. காலம் கெட்டுவந்தமையால் தம்வயிற்றிற் பிறந்த சிறுவர்களைக் கொண்டும் இரண்டொரு காசு சேர்க்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. தொழிற்சாலைகளில் கோபுரங்கள்போல ஓங்கிய புகைக்கூண்டுகளைப் பெருக்கவும், நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைசெய்யவும் பச்சிளங்குழந்தைகளைப் பெற்றோரே அனுப்பிவந்தனர். அப்போது புற்றீசல்போலக் குழவிகள் மடிவதனைக்கண்ட அரசியலார் அவ்வாறு அச்சிறுவர்களை வேலைக்கனுப்பாதபடி-

சட்டங்கொண்டே தடுக்க வேண்டியதாயிற்று. கல்வியையும் கட்டாயக் கல்வியாகவே கற்பிக்கச் சட்டங்கள் எழுந்தன. கட்டாயமாகக் கற்பிக்கவேண்டிய வயதின் எல்லையை மெல்ல மெல்லப் படிப் படியாக மேனுட்டில் முற்போக்கான அரசியலார் உயர்த்திக் கொண்டே வருகின்றனர். "தாம் சாவ நஞ்சுண்பார் உண்டோ" என முன்னர் எல்லாம் கேட்பது உண்டு. இந்த உலகில் பலரும் தம் நன்மையினையும், தம் குழவியின் நன்மையினையும் உணராது தமக்குத்தாமே தீமையைத் தேடிக்கொள்வதால் கட்டாயப்படுத்தியே சட்டங்களின் வழியாக இவர்களின் நன்மையைக் காக்கவேண்டும் புதுமையைக் காண்கின்றோம்.

நாகரிகத்தின் அநாகரிகம் :- அமெரிக்காவில் அத்தகைய நெருக்கடிக்கு இடமின்றிச் செல்வம் கொழித்துவந்தது. ஐரோப்பாவில் பழகிய பழக்கம் அமெரிக்காவிற்குச் சென்றபோதும் அவர்களைவிட்டு நீங்கவில்லை. அமெரிக்காவில் வாழும் பழங்குடிகளாம் செவ்விந்தியர்களை (Red Indians) நாகரிகமற்றவர்கள் என எள்ளி நகையாடுவது வழக்கம். ஆனல் அந்தச் செவ்விந்தியரே இந்த வெள்ளையர்களைக் காட்டுமிராண்டிகள் என எள்ளி நகையாட இடம் ஏற்பட்டது. இந்த வெள்ளையர்கள் தங்கள் குழந்தைகளை அடிப்பதனைக் கண்டபோதெல்லாம் அந்தச் செவ்விந்தியர்கள் "எதிரிட்டுத் தாக்க முடியாத இளங்குழவிகளை அடித்து வெருட்டுவது என்னே கோழைத்தனம்?" என இழித்துரைத்து வந்தனர். இதிலிருந்து இவ்விருதிறத்தாரும் குழந்தைகளை எவ்வாறு பாராட்டி வந்தனர் என்பது நன்கு தெளிவாகிறது.

காலக்கேடு :— வறுமையின் கொடுமையாலே இந்தியாவிலும் "ஐயோ பிள்ளை பிறந்தால் என்ன செய்வது" என்ற

நடுக்கம் ஏழை மக்களைக் குலுகுலுக்கிவிடுகின்றது. பிறந்த பிள்ளையைக்கொண்டு மூன்று நான்கு வயதிலேயே இரண்டொரு காசு சேர்க்கும் பேராசைப் பேய்க்கூத்தும் எங்கும் காண்கின்றோம். "இளமையிற்கல்" "எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்" என்றெல்லாம் பாடிய நாடு கல்வியறிவில்லாமலே குழவிகளை வளர்த்துவரும் கொடுமையை அளவிட முடியாது. "அடி உதவுவதுபோல அண்ணன் தம்பி உதவமாட்டார்கள்" என்பதுபோன்ற அடிமை கொழிக்கும் பழமொழிகள் வாயிலும் வயிற்றிலும், உடலிலும், உள்ளத்திலும் ஊறிக்குழவிகளை அலைக்கழிக்கும் அறியாமையை என்என்பது?

நோக்கத்திற்கேற்ற கல்வி :— கல்வி கற்பிப்பதைப்பற்றி எண்ணியவர்களே குழந்தை உள்ளத்தினைப்பற்றியும் எண்ணியவர்களாம். எதனைச் சொல்லிக்கொடுப்பது? எப்படிச் சொல்லிக் கொடுப்பது என்று எண்ணிவரும்போது குழவி உள்ளத்தின் இயல்பினை மறக்க முடியாதன்றோ? அந்த அந்த நாகரிகத்திற்கு ஏற்ற கல்வி முறையே அவ்வப்போது பரவிவரக் காண்கிறோம். மந்திரங்களில் நம்பிக்கைவைத்து உருப்போட முயன்றகாலத்தில் பாராமற் படிக்கும் முறையே சிறந்தமுறை எனப் போற்றப் பெற்றது. உரிமை பெற்றுச் செல்வமுற்று இன்பமாக வாழ்ந்த நாளில், மனம் காலத்தையும், வானத்தையும் கடந்து விரிய, வானவழியையும், கோள்கள் போக்கையும், உலகங்களின் சுழற்சியையும், வெள்ளம், ஆம்பல், தாமரை எனப் பெரும்பேர் எண்கள் கொண்டு அளந்து வந்ததும் இயல்பேயாம். நம்நாடு உரிமை இழந்து செல்வம் குன்றி முக்கால் காசும் ஆழாக்கு நெல்லுமே பெருஞ்செல்வம் எனக் கருதிவந்த நாளில் முந்திரிக் கணக்கும் காணிக்கணக்கும் போடுவதற்கு எண்சுவடி முறையே சிறந்த முறையாம். ஆங்கிலேயர் தங்களுக்குக் கணக்கெழுதும் ஆட்கள் வேண்டும் என விரும்பியபோது அதற்கேற்பன-

வற்றைக் கற்றுக்கொடுக்கும் கல்லூரிகளையும், பல்கலைக் கழகங்களையும் இந்தியா முழுதும் நிலைநாட்டிய வரலாறு நாம் அறிந்ததொன்றேயாம். கைத்தொழில் பல மேம்பட்டுவர-வேண்டும் என அனைவரும் விரும்பும் இந்தக்காலத்தே விஞ்-ஞானக் கல்வி மிக்குவருவதும் இயல்பேயாம். "எல்லோரும் ஓர் நிறை எல்லோரும் ஓர் இனம் ஆம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்ற கொள்கை பரவி வருகிறது. அனைவரும் கல்வியிற் சிறந்து விளங்கவேண்டும் என்பதே அரசியல் அறிஞர் அனைவரும் செய்துவரும் முயற்சி. எதிர்கால உலகத்தினை ஆளப்போவோர் இன்று பிறக்கும் குழவிகளே என்ற கொள்கை அரும்புவிட்டு வருகிறது. ஆகவே, நம் வாழ்க்கை அனைத்தினையும், உலகப் பொருள்களையும் இந்தக் குழவிகளின் தர்மகர்த்தர்களாக இருந்தே நடத்திவரவேண்டும் என்ற புதிய அறநெறி நம் எதிரே தோன்றிவரக் காண்-கின்றோம். அதற்கேற்ற கல்வி முறையும் அறிஞர் மனத்தே பண்பட்டுவருகிறது. அதற்கு அடிப்படையாகக் குழவி உள்ள ஆராய்ச்சியும் தலைசிறந்த முறையில் நடந்துவரக் காண்-கின்றோம்.

## IV. புதிய உலகம்

புதிய கல்வி :— அறிவு விளக்கமற்ற குழந்தைகளையும் பண்படுத்தும் முயற்சி பத்தொன்பதாம் நூற்றாண்டி லிருந்து பெருகிவளரத் தொடங்கலாயிற்று. ஸெக்வின் (Seguin), மாண்டிசோரி அம்மையார் (Dr. Montessori) முதலியோர் அறிவற்றோரை வாழ வைக்கவே பிறந்தவர்கள் எனலாம். ரூசோ (Rousseau) என்ற பிரான்சு நாட்டு அறிஞர் குழந்தை-கள் உரிமையுடன் மனமகிழ்ந்து இயற்கையாகக் கல்வி கற்க வேண்டும் என்றும், உள்ளீடான திறமனைத்தும் மலர்ந்து

விளங்குவதே கல்வி என்றும், குழவிகளை அடக்கிவையாது தத்தம் மனநிலையை வெளிப்பட விடுவதாலேயே மக்கள் நிலை சிறந்து தோன்றும் என்றும் வற்புறுத்தினர். இதன் பயனாக மேனாட்டிலுள்ள பள்ளிக்கூடங்கள் எல்லாம் அன்பு உலகமாக மாறி விளங்குகின்றன. கல்விஎல்லாம் விளையாட்டாய் மகிழ்ச்சி-யூட்டிவருகின்றது. தன் நம்பிக்கையும், உரிமையும், புலனறி-வின் வளர்ச்சியிற் பழுத்த இன்பமுமாய்ப் பள்ளிச் சிறுவரது வாழ்க்கை பல வகையிலும் பரவிப் பயன் தருவதாகிறது. குழவி பிறந்ததிலிருந்தே வாழக் கற்கும் இந்தக் கல்விமுறையைப் பின்பற்றி ஏழை எளியோர் என்ற வேற்றுமையின்றி எல்லாக் குழந்தைகளும் இளங்காளைகளாக உலகிலே வாழச் செல்லும்-வரை கற்றுவருமாறு செய்வது ஒரு நாட்டின் கடமை என இன்று உலகம் உறுதியாக நம்பிவருகிறது. இந்நாளைய உலகம் இதுபற்றிக் குழவியின் உள்ளத்தினை அகங்குழைந்து அறிய முயல்கிறது. போருக்கு முன்னர் 1930 ல் கணக்கிட்டுப் பார்த்த போது, உள்ளத்தியற்கையைப்பற்றி ஆராய எழுந்த நூல்களில் நூற்றுக்குப் பத்து குழவியின் உள்ளத்தினை ஆராய்வனவாக விளங்கினவாம். போருக்குப் பின்னர்க் கணக்கெடுக்கும்போது காற்பங்குக்கு மேலாகவும் அத்தகைய நூல்கள் உயர்ந்துவரும் என்பதிலே ஐயம் இல்லை. எதிர்கால உலகம் குழவி உலகம் எனலாம்.

குழவி இயக்கம் :— "தோற்றுவிப்பாரும் இன்றித் தொடர்ந்ததனை நடத்துவிப்பாரும் இன்றிச் சமுதாயச் சூரணையை வளர்க்கும் சமுதாய இயக்கம் தானாகவே தோன்றி வளர்ந்தது. எரிமலை எரிந்து பொங்குவதுபோல எங்கும் பரவி-யது. விஞ்ஞானம் இதற்குப் பெரிதும் உதவி செய்தது. குழவி-யும் சமுதாயத்திலே தனிவீறோடும் எழுந்து ஒளிர்ந்து வரு-கிறது," என்றார் ஓர் அறிஞர். "குழவிகள் உலகிற்கு ஏற்பத்

திருந்திவருவதில் கண்ணும் கருத்துமாய் இருத்தல்வேண்டும்'' எனப் பலர் வற்புறுத்துகின்றனர். "குழவிகளோடு இந்த உலகம் நடையாடிவரும் பொழுதெல்லாம் அக்குழவிகளுக்கு ஏற்ப இந்த உலகமே பொருத்தமுற்றுத் திருத்தமுற வேண்டும் எனக் கூறுவதில் ஒரு பொருள் நோக்கம் உண்டு'' என்கின்றார் ஆலிஸ் மேனல் (Alice Meynele) என்ற அம்மையார். ஸ்வீடன் நாட்டுப் பாவாணராம் எலன் கே (Elen Kay) அம்மையார் இந்த இருபதாம் நூற்றாண்டினைக் குழவிகளின் நூற்றாண்டே எனப் புனைந்து உரைத்திருக்கின்றார்.

ஞான உலகம் :- மாண்டிசோரி அம்மையார் இன்னொரு புதுக்காட்சி காண்கின்றோம் என வற்புறுத்துகின்றனர்.

" குலம் பொல்லேன் குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம் பொல்லேன் நான் பொல்லேன் ஞானி அல்லேன்
நல்லாரோடு இசைந்திலேன் நடுவேநின்ற
விலங்கல்லேன் விலங்கல்லாது ஒழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப் பெரிதும் பேச வல்லேன்
இலம் பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என் செய்வான் தோன்றினேன் ஏழையேனே '' (அப்பர்)

என்று தம் குற்றத்தினை ஒப்புக்கொண்டு மக்கள் திரள்கிற காட்சி ஞான உலகக் காட்சியாம். குழவிகளின் எதிரேயும், இவ்வாறு, முன் எல்லாம் தாம் செய்துவந்த தீமைகளைப் பெரியோர்கள் மனமார ஒப்புக்கொண்டு வாயாரப் பாடிவரக் காண்கிறோம்.

திரு அவதாரம் :— "குழவியின் கால்களும் கைகளும் வகுப்பிலே நாற்காலிமேல் வைத்தது வைத்தபடியே சிலுவை-யில் அறையப்பட்ட ஏசுவின் கைகளும் கால்களும்போல அசை-யாது நிற்கின்றன. அதனை மேய்ப்பாரின் கடுமையான பார்வைகள், கை கால் மேல் அறைந்த ஆணிகள்போலப் பாய்-கின்றன. ஏசுவின் தலைமீது முள் முடிசூட்டிக் குருதிவடிவது கண்டு நகையாடியவர்களைப்போல அனைத்தினையும் அறிய அவாவும் அக்குழவியின் அறியாமையை எள்ளி ஆசிரியன்-மார் நகையாடி வருகின்றனர். குழவியின் அன்பு நிறைந்த சிறியநெஞ்சம்உலகின் உணர்வின்மைக்கு இரங்கி வாளேறுண்-டாற்போல வருந்தி வாடுகிறது. கலைகள் என ஆசிரியர்கள் தருவன எல்லாம் கைக்கின்றன. இவ்வாறு வாழ முடியாது அலையும் அந்த இளைய உயிருக்கெனக் கல்லூரி என்றும், பிற என்றும், வஞ்சம் நிறைந்த கல்லறையையே உலகம் எழுப்பு-கிறது. அதிலிருந்தும் தப்பாதவாறு இக்காவலாளர் எள்ளிக் காத்துவரும்போதே, குழவி மாசுமறுவின்றி உயிர்த்தெழுந்து மக்களிடையே வாழ வருகின்றது. என்றும் மக்களிடையே கீழிறங்கிவந்து அவர்களை வான அரசிற் செலுத்தும் ஆண்ட-வனுரின் என்றும் அழியா அவதாரமாகத் தொடர்ந்து எழுவது குழவியேயாம்" என்பர் எமர்சன் (Emerson) என்ற பேரறிஞர் எனக்கூறி ஒரு நூலை முடிக்கின்றார் மாண்டிசோரி அம்மையார்.

இன்பப் பாடல் :— புற உலகினைப்பற்றிய அறிவாராய்ச்-சியும் பிற ஆராய்ச்சியும் போரிடையே நம்மை அமிழ்த்தி-விட்டன. மனிதன் மனிதனாகவாழக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். குழவியின் பெற்றோர் குழவியின் செவிலிகளே அன்றிக் குழவியைப் படைத்துப் பெற்றோரல்லர். மக்களின் உரிமையைப் பேசிப் பேசிப் போர் முழக்கமே எழுப்பினோம். குழவியின் உரிமையைப் பேசிப்பேசி அமைதியிற் பி...

இன்ப இசையினைப் பாடுவோமாக. தாம் பெற்ற "குழவி இன்பத்தினை" வையமும் பெறுமாறு மாண்டிசோரி அம்மையார் அனைவரையும் வருந்தி அழைக்கின்றனர். அந்த எதிர்காலக் குழவியின் பாடலை நாமும் பாடிப்பாடி மகிழ்வோமாக.

"முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்
முகிழிளஞ் சிறுதாமரைக் கையும்
எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு ஒல்கு நிலையும்
வெண் தயிர் தோய்ந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும் அணிகொள்
செஞ்சிறு வாய் நெளிப்பதுவும்
தொழுகையும் இவை கண்ட அசோதை தொல்லை
இன்பத்து இறுதி கண்டாளே"

(பெருமாள் திருமொழி)

---

# 3. கருவுலக வாழ்க்கை

---

## I. வித்தின் விளைவு

கருவூரும் உறையூரும் :— மரம் பெரிதாக வளருவதற்கு முன்னர் அதன் விரை தரைக்குள்ளே நம் கண்ணுக்குத் தெரியாமல் வளர்கின்றது. தரையின்கீழ் எழுந்த அதன் வாழ்க்கையும், தரையின்மேல் வளர்ந்த அதன் வாழ்க்கையும் ஒரே தொடர்பாம். அங்கு இடையீடு இல்லை. அங்ஙனமே மக்களிடையேயும் அவர்களது பிறப்பின் பின் எழுந்து விளங்கும் வாழ்க்கை பிறப்பின்முன் உள்ளடங்கிக் கிடந்த வாழ்க்கையின்

தொடர்ச்சியேயாம். கரு எனும் அரும்பு மலர்ந்த நிலையே குழவியாம். ஆதலின், குழவியுள்ளத்தின் உண்மையை உணரக் கருவுலக வாழ்க்கையையும் ஆராய்தல் வேண்டும். அந்தக் கருவூரில் இருந்தன்றோ யாவரும் உறையும் இந்த உறையூருக்குள் புகுந்து அனைவரும் கூடிவாழும் கூடல் உவகிற் புகுகின்றோம்.

உயிரணுவும் உயிர்மின்னும் :- கீழ்நிலை உயிர்களை ஆராயும்போது அவை உருவற்ற நிலையிலிருந்து உருவுற்ற நிலையில் மாறி அமைவது நன்கு புலனாகும். பூக்களிலுள்ள மகரந்தமும் சூலும் சேர்ந்து கனியும் விதையுமாய் மரவாழ்க்கையினை நிலைபேறுறச் செய்வதனைக் காண்கின்றோம். பூதக்கண்ணாடி எனப் பொது மக்கள் வழங்கிவரும் பெருக்காடிகளிற் (Microscope) சிறந்ததொரு மாபெருக்காடி கொண்டு உயிர்ப்பொருள்களை நோக்கும்போது அவற்றினுடலம் எண்ணற்ற உயிரணுக்களாக (Cells) ப் பிரிந்து நிற்கின்றன. அணுக்கள் நேர்மின்னும் (Protons) எதிர்மின்னுமாகப் (Electrons) பிரிதல்போல உயிரணுவும் உயிர்மின்னுக்களாகப் (Gene) பிரிகின்றன எனக் கொள்ளலாம். இந்த உயிர்மின்னுக்களின் கோவையை அணுக்கோல்(Chromosome) என வழங்கலாம். ஒவ்வோர் உயிர்ப்பொருளும் வெளிப்பட்டுத் தோன்றுவதற்கு முன், உயிர் அணுவிலே அடங்கிக்கிடக்கும். அந்த உயிர் அணுவினை ஆராய்ந்தால் எந்த எந்த உயிர்ப்பொருளாக வளர்ந்து முற்றுமோ அந்த அந்த உயிரினத்திற்கேற்ப உயிர் அணுவில் மேற்கூறிய அணுக்கோலின் எண்ணிக்கை அமைந்து வருதலை அறிஞர் கண்டுள்ளனர். எனவே, உயிர்ப்பொருள்கள் இனத்திற்கு இனம் மாறுபடுவதற்கு அடிப்படையாகத் தோன்றும் சிறப்பியல்புகள் எல்லாம் அவற்றின் உயிர் அணுவினிடையே அடங்கிக்கிடக்கின்ற உயிர் மின்னுக்களின் பயனேயாம்.

எனலாம். பழத்திலே மொய்க்கும் ஒருவகைச் சிற்றீயின் கண்ணின் நிறம் சிறப்புவகையாக விளங்குகிறது. அந்த ஈயின் உயிரணுவினிடையே இரட்டை இரட்டையாகத் தொடர்புண்டு கிடக்கும் உயிர் மின்னுக்களாலேயே அந்த ஈயின் கண்ணில் ஒளிரும் சிறப்பானதோர் நிறம் விளங்குகின்றதாம். ஒரு கண்ணின் நிறத்தை இவ்வாறு விளக்க 50 இரட்டை உயிர் மின்னுக்கள் உள்ளனவாம். இவ்வாறு உயிர்ப்பொருளிடையே தோன்றும் ஒவ்வொரு சிறப்பியல்புக்கும் ஏற்றவோர் உயிர்-மின்னமைப்பு மிகச் சிக்கலான நிலையில் விளங்குவதனை உயிர்நூற்புலவர்கள் மிகத் தெளிவாக விளக்கிவைத்துள்-ளார்கள்.

உயிர்ப்பொருள் வளர்ச்சி:— உயிர்ப்பொருளின் வளர்ச்-சியே ஒரு புதுமை. நேரே நிற்கும் பனைஓலைத் துண்டை முழு முறுக்கு முறுக்கி அதன் இரண்டு முனையையும் ஒட்டி வட்ட-மாக்கி விடலாம். அந்த ஓலை வட்டத்தினிடையே கீறிக்-கொண்டேபோனல் வளையத்திற்குள் வளையமாக இரு வளையங்-கள் சிக்கிக்கொண்டு தோன்றும். இவ்வாறே வருகின்ற வளையங்களை எல்லாம் இடையே கீறிக்கொண்டேபோனல் ஒவ்வொன்றும் இரண்டு இரண்டாகி வளர்ந்து கொண்டே போகும். இதனைப்போலவே உயிர் அணுக்கள் ஒவ்வொன்றும் இரண்டிரண்டாகப் பிரியும். ஒவ்வொரு பிரிவும் பின்னும் இரண்டிரண்டாகத் தொடர்ந்து பிரிந்து பல்கிக்கொண்டே-போகும். ஓலை பிரிந்தபோது, ஓலையின் அகலம் தேய்ந்து கொண்டேவரும். உயிரணுப் பிரியும்போதோ முன்னிருந்த உயிரணுப்போலவேபின்னர்ப்பிரியும்உயிரணுக்களும்வளரும். ஒரு கண்ணுடியில் விழும் நிழல் முதற்பொருள் அளவாக விளங்கி வருவது போலாம் இது. ஒரு சிறு ஆலம் விரையி-லிருந்து பெரிய ஆலமரம் வளர்கின்ற நுட்பம் ஈதேயாம்.

## II. கருவூர்ச் சித்து

உயிர்ப்புரை :- உயிரணுக்கள் பல உறுப்புக்களாக மாறியமையும் அற்புதத்தினும் சிறந்த அற்புதம் வேறு இல்லை எனலாம். தவளை முதலிய உயிர்ப் பொருள்களினிடையே ஒன்றின்மேல் ஒன்ருய் உள்ள மூன்று புரைகளாக உயிரணுக்கள் பரந்து பல்கிப் பெருகுகின்றன. தவளையின் வளர்ச்சியைத் தொடர்ந்து நோக்கிவரும்போது மேற்புரை தோலாகவும், பொறிகளாகவும், நரம்புகளாகவும் வளரக் காண்போம். இடைப்புரை எலும்பாகவும், தசையாகவும், இரத்தமாகவும் வளருவதும் தோன்றும். அடிப்புரை, நுரையீரல், கல் ஈரல், மண் ஈரல், இரைப்பை, குடல்முதலியவாக மாறியமைந்து உருப் பெறுவதனையும் அறியலாம். இந்தப் புரைகளிடையே பின்புறத்தே ஒரு பள்ளம் விழத் தொடங்குகிறது. பின்னர் அது ஒரு புழையாக மாறுகிறது. இது குழையாக முற்றியதும் அதுவே முதுகந்தண்டும் மூளையுமாக விளங்குகிறது. இதனைச் சுற்றிப் பல உறுப்புக்களும் உருப்பெற்று வருகின்றன. இந்த உண்மைகளை மனத்தில் இருத்திக்கொண்டு மக்கள் கருவானது வளர்ந்துவரும் வகையினையும் தெள்ளத் தெளிய அறியலாம்.

கருமாற்றம் :— கருவறையினுள்ளே நான்கு காரணங்களின் பயனாக வளர்ச்சி நிகழக் காண்கிறோம். அடிப்படையான சூழ்நிலை ஒன்று. விரை ஒன்று போட்டால் சுரை ஒன்று விளையுமோ? தலைமுறை தலைமுறையாக வரும் இதனைக் குடிவழிநிலை (Heredity) எனலாம். உயிர்ப்பொருள்கள் தம் உறுப்புக்கள் சிறப்புநிலை உற்று, உள்ளெழும் ஆற்றலால் வளர்ந்து வருவதோர் இயல்பினை முற்றுதல்நிலை (Maturation) என்ற இரண்டாவது காரணமாகக் கூறலாம். முற்றிவரும் இந்த இயல்பு இல்லையானால் விரை விரையாகவே நிற்பதன்றி மரமாக

வளருவது இல்லையாம். தனிச்சூல் ஒவ்வொன்றும் இடத்திற்குத்தகப் பொருத்தம் பெற்றுத் திருத்தமுற்று நிற்குநிலையே மூன்றாவது காரணம். ஒரு விரையே நிலவளத்திற்குத்தகச் சிறந்தும், சிறப்பு அற்றும் வளரும் அன்றோ? பொருத்தப்பாட்டிற்கு (Adjustment) அடிப்படையாகும் சுற்றுப்புறச் சூழலே (Environment) இந்த மூன்றாவது காரணம். மக்கள் காற்றிற் பறந்தும், நீரில் அமிழ்ந்தும் வருவது பழக்கத்தால் விளங்குவனவாம்; கற்றுக்கொண்டனவேயாம் (Learning). பிறப்பதற்கு முன்னரே கருவிற்குள்ளேயும் கற்றுப் பழகும் பயிற்சிநிலை நான்காவது காரணமாக விளங்குகிறது. பயிற்சி என்பது சுற்றுப்புறச் சூழல் காரணமாக உயிர்ப்பொருளின் இடையே எழும் மாறுதலாம். முற்றுதல் என்பது உயிர்ப்பொருளின் இடையே எழும் மாறுதலாம். இந்த நான்கு காரணங்களும் ஒன்றை விட்டொன்று தனித்தனியே இயங்கி வருவதில்லை. ஒருபோது தலைசிறந்து விளங்கும் காரணம் பின்னே ஒரு பயனும் தாராது போகலாம்.

குடி வழி :— எல்லாமக்களும் ஒருவகையால் நோக்குமிடத்து ஒரு சில ஒப்புமையோடேயே விளங்குகின்றனர். இது குடிவழியின் பயன் எனலாம். மற்றொரு வகையால் நோக்குமிடத்து ஓரிருவரேனும் ஒருவர்போல் ஒருவர் இருக்கக்காணோம். சுற்றுப்புறச் சூழல்வழியே குடிவழிநிலை மாறுபட்டதாலேயே இந்த வேற்றுமை எழுந்து தோன்றுகின்றது எனக் கூறுவதற்கில்லை. தாய் தந்தை என இரு வேறு பெற்றோர் வழியே ஒருயிர்ப்பொருள் தோன்றுவதில் இத்தகைய வேற்றுமைதோன்ற இடமுண்டு. எந்தக் குழவியும் தன் பெற்றோரில் ஒருவரைப்போலவே முழுதும் அமைந்துவிட முடியாது. ஆண் உயிரணுவும் பெண் உயிரணுவும் இயைந்ததன் பயனே உடலயாம். அணுக்கோல் உயிர்மின் என்பனவற்றின் பயனாகக்

குடிவழி குடிவழியாகப் பல பண்புகள் தொடர்ந்து வருவதனை முன்னரே கண்டோம்.

பொது நிலை :— உயிரணு உயிர்ப்பொருளாக வளர்ந்து வரும்போது இந்த உயிரணு இந்த உறுப்பாகத்தான் மாறும் எனக் கூறக்கூடும் என்றோம். (பக்கம் - 45) தொடக்கத்தில் அவ்வாறு இன்ன உறுப்பாக வளரும் எனக் குறிக்கப்பெற்ற உயிரணுவை அறிஞர் அகற்றிவிட்டு ஆராய்கின்றனர். இவ்வாறு அகற்றப்பட்ட உயிரணுவின் தொழிலைச் செய்ய அகற்றிவிடப் படாது நிற்பவற்றில் ஓர் உயிரணு அங்குவந்து வேண்டிய உறுப்பினை வளர்க்க அந்த அறிஞர் கண்டனராம். எடுத்துக் காட்டாகத் தவளையைக் கூறுகின்ற இடத்தில் உயிரணுவின் இடைப்புரையே எலும்புக்கூடாக மாறும் என்று பொது-முறையை விளக்கினோம். ஆராய்ச்சிவாணர் இடைப்புரையை எடுத்துவிட்டபொழுது எலும்புக்கூடு தோன்ற இடமில்லை யன்றோ? ஆயினும் தவளை எலும்புக்கூட்டோடேயே வளர்ந்து வந்ததாம். கூடாக வளரவேண்டிய அடிப்புரையில் ஒரு பகுதி இடைப்புரையாக வந்து இவ்வாறு எலும்பாகியது என அறிஞர் ஆராய்ந்து கண்டனர். ஒரு முட்டையில் செம்பாதியை அப்புறப்படுத்தி விட்டாலும் மிகுதிநிற்கும் பாதிமுட்டை பாதி உயிர்ப்பொருளாக வளராமல் முழுநிலை உயிர்ப்பொருளாக வளருகிறதாம். எனவே, தொடக்கத்திலே உயிரணுக்களின் தொண்டு சிறப்புநிலைஉறாமல் பொதுநிலையிலேயே இருந்துவரும் என்பதாயிற்று. 'இந்த உறுப்பாகவே வளரும்' என்பதின்றி எந்த உறுப்பாகவேனும் வளரக்கூடியதாக உயிரணு முதலில் விளங்குகிறது. உடலாக முற்றக்கூடிய பிண்டத்தில் எந்த எந்த இடத்தில் உயிரணுக்கள் இருக்கின்றனவோ அவை அந்த அந்த இடத்திற்கேற்ற உறுப்புக்களாக வளர வருகின்றன. தோலாக வளரக்கூடிய உயிரணுக்களைக் கொண்டுபோய் மூளையில்

வைத்தால் அந்த இடத்திற்கேற்ப அது மூளையாக மாறுகிறதே-யன்றிப் பழைய நிலைமைக்கேற்பத் தோலாக மாறி மூளைக்குள் தோன்றுவதில்லை. எனவே கருவானது தொடக்கத்தில் மூளை, எலும்பு, குடர் எனப் பல வேறு நிலைகளாகப் பிரிந்து விளங்-காமல், ஒரு நிலையாகவே விளங்குகின்றதாம். எந்த உறுப்பு எங்கு வளரவேண்டுமோ அங்கு உள்ள அணுக்களும், அவை இல்லையேல் அவ்விடத்திற்கு அடுத்துள்ள அணுக்களும் அவ்வுறுப்பாக வளர வருகிற பொது நிலையிலேயே முதலில் உயிரணுக்கள் விளங்குகின்றன.

## III. கருமாறிப் பாய்தல்

இயற்கைவழி மாற்றம் :- ஆனல், சிறிது காலமானவுடன் உயிரணுக்கள் இந்தப் பொதுநிலையை இழந்து சிறப்பு நிலை-பெற்று வளர்கின்றன. கருவானது சிறிது முதிர்ந்தவுடன் இருதயம் அல்லது குருதி ஈரலாக வளரக்கூடிய உயிரணுக்களை இரண்டாகப் பிரித்தால் முன்போல இடத்திற்கேற்ற உறுப்-பாக வளராது இரண்டு பிரிவும் குருதி ஈரல் என்ற சிறப்பு-நிலைபெற்று விட்டதால் இரண்டு குருதி ஈரல்களாக ஒரு தவளையின் உடலத்திலேயே வளருகின்ற வியப்பைக்காணலாம். இத்தகைய மாறுதல்கள் எல்லாம் கருவின் இயற்கை அமைப்-பால் எழுவனவாம்.

இயற்கைத் தோற்றவழி மாற்றம் :— இவையே அன்றிச்-சுற்றுப்புறச் சூழலாலும் பலவகையான மாறுதல்கள் எழு-வதனை உயிர் நூற்புலவர்கள் ஆராய்ந்து கண்டுள்ளார்கள். தவளைமுட்டை ஒன்று முற்றிவளர்வதற்கு முன் ஒருயிரணு இரண்டாகப் பிரிந்த ஈருயிரணு நிலையிலேயே இருந்தபோது அதனை ஓர் ஆராய்ச்சியாளர் தலைகீழாகப் பிடித்துக் குழப்பிக்-

கலக்கினராம். இதன்பயனுக இந்த முட்டை இரட்டைத் தவளைகளாக வளர்ந்ததாம். இது இயக்க நூல் வகையாக எழுந்த மாறுதலாம் (Mechanical Change). சூடுநிலையின் பயனு-கவும் (Temperature) கருவிலே மாறுபாடுகள் தோன்று-கின்றன. குறித்ததோர் அளவிற்கு மேற்படாமல் சூடுநிலை மிக்குவருமானல் கருவின் வளர்ச்சி மிக விரைந்து நிகழக்காண-லாம். எக்ஸ்ரே (X-Ray) என ஆங்கிலத்தில் வழங்கும் ஊடுருவு கதிர்கள் பாயுமானல் கருவின் உள்ளணு (Nucleus) சாகுமாம். ஆனல், கருவாய் வளரும் ஆற்றல் அப்போது கெடுவது இல்லை. இங்குக் கூறியவை அனைத்தும் பூதநூற்படி வரும் இயற்கைத்தோற்ற மாற்றங்களால் (Physical changes) எழுவனவாம்.

இயற்கை அமைப்பு வழி மாற்றம் :— இயற்கைத் தோற்-றமேயன்றி இயற்கையமைப்பும் மாறுவதனை இயற்கை அமைப்பு மாற்றம் அல்லது வேதிமாற்றம் (Chemical change) என வழங்குவர். மருந்துகளைக்கொண்டு பொதுவாக இத்தகைய மாற்றத்தினை எழுப்புவது உண்டு. உயிர்ப்பொரு-ளிடையே கருநிலையில் இத்தகைய மாற்றத்தை எழுப்பினல் உயிர்ப்பொருள் மாறிவரும். மீனின் சினையை நிலவியம் (Magnesium), குளிரியம் (Ether), நறவம் (Alcohol) என்ற இவற்றில் ஏதேனும் ஒன்றில் ஊறவைத்தபோது ஓர் ஆராய்ச்சி-வாணர் அந்தச் சினை ஒருகண் படைத்த பேய் மீனுக வளரக் கண்டனராம்.

பருநிலை வழி மாற்றம் :— ஆராய்ச்சிவாணரின் மூளையின் ஓட்டம் நின்றுவிடவில்லை. தவளை முட்டை இயற்கையாக நீரில் கிடப்பதனை ஓர் ஆராய்ச்சியாளர் எடுத்து மற்றொரு தவளையின் உடலில் செலுத்திவிட்டார். அது தவளையாய் மற்றோர்

தவளையின் உடலுக்குள்ளே முற்றியது. என்னவாயிற்று? போக்குவரவிற்கும் இடம் இல்லை. உணவுதேட வழியும் இல்லை. நம் குடலுக்குள் புகுந்த நாகப்பூச்சி குடரை உறிஞ்சி வாழ்வது-போல இந்த முட்டையும் கொள்ளை உயிரியாக (Parasite) மாறி வளர்ந்ததாம். [கொள்ளை உயிரியாவது, வேறோர் உயிர்ப்-பொருளைப் பற்றிக்கொண்டு உயிர்வாழத், தான் ஒரு முயற்சியும் செய்யாது, தான் பற்றிய உயிர்ப்பொருளின் உடலையே குடித்து வாழும் நாகப்பூச்சி, பேன், நாயுருவி போன்று விளங்கும் உயிர்ப்பொருளாம்.] இங்கு எழுந்த மாற்றம் சுற்றுப்புறச்-சூழலில் ஏற்படும் பருநிலை வேறுபாட்டால் (Gross environ-mental change) எழுந்ததாம். இவ்வாறு எழும் மாறுதல்கள் புராணக் கதைகள்போலப் பலப்பலவாம்.

சாறுவழி மாற்றம் :— நம் உடலிலுள்ள பல வகையான உறுப்புக்களில் நம் உடல்வளர்ச்சியில் ஈடுபடுவன சிலவுள. சில சாறுகள் நம் உடலில் பாய்கின்றன. புளியேப்பம் புளிப்பது ஏன்? இரைப்பையில் புளிப்பான ஒரு சாறு பாய்கிறது. உமிழ் நீரும் ஒரு சாறும். இவற்றினும் வேறாகச் சில சாறுகள் நேரே இரத்தத்திற் பாய்கின்றன. அவை ஊறும் உறுப்புக்களைத் தூம்பில்லாச் சுரப்பிகள் (Ductless glands) என வழங்கலாம். இத்தகைய சுரப்பிச்சாறுகளால் கருவளர்ச்சியில் மாறுதல்கள் தோன்றும். உதாரணமாகப் புரிசைச் சுரப்பிச் (Thyroid gland) சாற்றால் தவளைக்குஞ்சு பூதம்போன்ற பெருந்தவளை-யாக மாறுகின்றதாம்.

பழக்கவழி மாற்றம் :- பழக்கத்தின் பயனாக உறுப்புக்கள் வளரவும் பழக்கமில்லாதபோது ஒடுங்கித் தேயவும் காண்-கின்றோம். பயன்படும் நிலைமைக்கு ஏற்ப உறுப்புக்களின் அமைப்பும் மாறிவருமாம். இடுப்பெலும்பு படை படையாக

அடுக்கிப் படுக்கவைத்த ஊசிகளின் இயைபாய் அமைந்துள்ள-தாம். மேலுள்ள உடலின் சுமை பெரிதாம். வில்லைப் (Spring) போல அதனைத் தாங்குவதற்கு இத்தகைய அமைப்பே பெரிதும் உதவுகின்றது. இந்த இடுப்பெலும்பு முறிந்தபோது பிறழ்ச்சி-யின் காரணமாக ஊசிபோன்ற அமைப்பானது குறுக்காக நிற்கும் நிலையில் அல்லாமல் நேராகநிற்கும் நிலையில் பழைய எலும்புகள் குருந்து விட்டுக் கூட வரலாம். அவ்வாறு கூடினல் ஊசிபோன்ற அந்த அமைப்பு நேராகநின்று உடலின் சுமையைத் தாங்க இயலாது. ஆகையால், அவ்வாறு கூடிவிட்டநிலையிலும் நேராக நிற்கும் ஊசிகள் பழமைபோலக் குறுக்காக மாறிவளர்-கின்றனவாம்.

அளவு மாற்றம் :— தேவைக்கு ஏற்றபடி உறுப்புக்களின் அமைப்பேயன்றி அவற்றின் அளவும் மாறிவருகின்றதாம். ஈயினையும் எறும்பினையும் பிடித்துத் தின்னும் தவளைக்கு மரக்-கறி உணவையே ஊட்டிவருவோமானல் மரக்கறி உணவை உண்ணும் உயிர்ப்பொருள்களின் குடர் மிக மிக நீண்டு விளங்குவதுபோல இந்தத் தவளையின் குடரும் நீண்டு வளரு-கிறதாம்.

எண்பேர் எச்சம் :— உள்ளம் வெளிப்படத் தோன்றும் நிலையே உடலமாம். நடத்தை என்பது உடலின் இயக்கமே-யாம்.

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"
(திருமந்திரம்)

என்கின்றார் திருமூலர். உடலம் கருவிலே பலவகையாக மாறு-கின்றது. அம்மாற்றம் பிற்கால வாழ்க்கையை அடியோடு கெடுப்பினும் கெடுக்கலாம்.

> "சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
> கூனுங் குறளும் ஊமும் செவிடும்
> மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு
> எண்பேர் எச்சம் என்றிவை எல்லாம்
> பேதமை யல்லது ஊதியம் இல்லென
> முன்னும் அறிந்தோர் கூறினர்" (புறம்—28)

என்பது புறநானூறு. இந்த எண்பேரெச்சத்தின் வளர்ச்சியினை ஒருசிறிது அறிவோம். அவற்றின் மனச்சிதைவு கருவில் எழுந்த உடற்சிதைவாலேயே விளைந்தது எனலாம். இப்படிப் பலவகையாலும் மாறுதல்கள் எழ இடமிருப்பதால் "ஒரு மனிதனுக்குக் குறிப்பிட்டதோர் உறுப்பு இருப்பதேன்? அதனைக் குறிப்பிட்டதோர் வகையிலே மட்டும் என் பயன் படுத்தல்வேண்டும்?" என்பன போன்ற கேள்விகளுக்கு நேராக விடை அளிக்கமுடியாது. பல வேறுவகையான காரணங்களின் சிக்கலையே நாம் அந்த நிலையில் விளக்கிவைத்தல் வேண்டும்.

## IV. உயிர்ச்சரக்கு

உயிர்ப்பொருள் அமைப்பு :— உயிரணுக்களின் கூட்டம் பல வேறுவகையான உறுப்புக்களாக மாறிவந்தாலும், பலவேறு மாறுதல்களை மேற்கண்டவாறெல்லாம் அடைந்தாலும், அந்த உறுப்புக்கள் வெவ்வேறே தனிப்பட்டுச்சிதறாது ஒருங்கியைந்து ஓர் அமைப்பாகவே நிலைபெற்று ஒன்றோடொன்று முரண்பா-டின்றித் தொடர்புற்று வளர்வதே உயிர்ப்பொருளின் சிறப்-பியல்பாகிய வளர்ச்சி எனலாம். ஈதே இங்கு வருவதொரு

வியப்பாம். வெறும் உறுப்புக்களின் கூட்டம் அன்று உயிர்ப் பொருள். அது ஒற்றுமை பெற்றதோர் அமைப்பேயாம். இதனையே உயிர்ப்பொருள் அமைப்பு (Organic relation) என்பர். வளர்ச்சிதொடங்கியதும் கருவின்தொடக்கத்திலிருந்த ஒற்றுமை சிதைகின்றது. பல உறுப்புக்கள் சிறப்பு நிலைபெற்று எழுகின்றன. ஆனால், தொழில் நிலையில் மாறுபடாததோர் இயைபு அவற்றினிடையே தோன்றுகின்றது. நிலை ஒற்றுமை மறையத் தொழிலொற்றுமை நிலவுகிறது. காலும் காதும் கண்ணும் கையும் வெவ்வேறு பிரிந்து நின்றாலும் இவற்றின் இயக்கத்தினிடையே ஓர் இயைபு விளங்குகிறது. இத்தகைய இயைபு நரம்பமைப்பினாலேயே எழுகின்றது எனலாம்.

உயிர்ப்பொருளின் சுரணை :- வெளிப்பொருள்களிடையே மக்கள் எவ்வாறு பொருத்தமுற்றுத் திருத்தம் பெற்று வருகின்றார்கள் என்பதனை ஆராய்வதே உள்ள நூல் ஆராய்ச்சியாம். இவ்வாறு பொருத்தமுற்றுத் திருத்தம் பெறல் கருவிலேயே தொடங்குறது. உலகம் தாக்க நாம் எதிர்தாக்கி வருகின்றோம். ‘வெளிப்பொருள்கள் நம்மைத் தாக்கியபோது மட்டுமே நம்முடைய எதிர்தாக்கல் எழும்’ என்று கூறுவதற்கு இடமில்லை. பசி எடுக்கும்போது நாம் இயங்குவது நம் உள்ளிருந்து எழும் தூண்டுதலுக்கு ஏற்ப நாம் எதிர் ஊன்றி நிற்பதேயன்றி வெளிப்பொருளின் தாக்குதலுக்கு ஏற்ப எதிர் ஊன்றி நிற்பதன்றாம். வெளிப்பொருள் வழியாகவோ, உடலின் உள்ளாகவோ எழுகின்ற தூண்டுதலுக்கு ஏற்றவாறு துலங்கிவரும் சுரணையே உயிர்ச்சரக்கின் (Protoplasm) இயல்பாம். தூண்டுதலை எதிர்கொண்டு ஏற்றுவரும் நிலைமை பலவேறு வகையாக விளங்குவதாலேயே உள்ளத்தின் வளர்ச்சியைப் பற்றிப் பேசமுடிகிறது. உயிரற்ற பொருளோ தன்மேல் தாக்கல் எவ்வளவில் எழுகின்றதோ அவ்வளவிலும், தாக்கல்

எவ்வகையில் எழுகின்றதோ அவ்வகையிலும் எதிர்தாக்கிவருகின்றது. இவ்வாறு ஒரே இயல்புகொண்டு விளங்குவதால் அங்கு ஒரு நடத்தையும் இல்லை, உள்ளத்தின் வளர்ச்சியும் இல்லை. தூண்டலை எதிர் ஏற்கும் நிலை (Receptivity), தாக்கலுக்கு எதிராகத் தாக்கும் நிலை (Reaction), சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்ப மாறிநின்று பொருத்த முறுமாறு திருத்தம் பெறுநிலை (Adjusment) என்ற இந்த மூன்று நிலைகளும் உயிர்ச் சரக்கின் அடிப்படையான இயல்புகளாம்.

நரம்பமைப்பு :- உயிர்ப்பொருளின் அமைப்பினைக் காத்து வருவன இரைப்பை, குருதி ஈரல், குடர் முதலியனவாம். இவற்றினிடையே ஓர் ஒற்றுமையை வளர்க்கவும், பயிற்சியும் பழக்கமும் எழவும், எண்ணித் துணிந்தொரு கருமஞ் செய்வதற்கு ஏற்ற இடம் ஏற்படவும் இன்றியமையாது வேண்டப்படுவது நரம்பமைப்பேயாம். நரம்பமைப்பின் வழியாக அன்றி உடலில் ஒரு செயலும் நிகழ்வதில்லை எனலாம். இந்த நரம்பமைப்பில் ஒரு சில, சுற்றுப்புறத்தே கிடக்கும் ஆற்றலின் மாறுதலால் தூண்டப்பெறுவனவாம் (Exteroceptors). வேறு சில உடலினுள்ளே எழும் உள்நிலை மாறுதல்களால் தூண்டப் பெறுவனவாம் (Interoceptors). மற்றுஞ் சில உடலின் நிலை மாற்றத்தால் தூண்டப் பெறுவனவாம் (Proprioceptor). பின்னுஞ் சில உறுப்பினுக்குத் தீங்குவரும் மாற்றங்களால் தூண்டப்பெற்று நோதலை உணர வழிகாட்டுவனவாம் (Nociceptor).

சாய்வு வீதம் :- தண்ணீர் மேட்டிலிருந்து பள்ளத்திற்குப் பாய்கிறது. பல நிலைகளின் ஏற்றத்தாழ்வினை ஆராய்ந்து அவற்றின் சாய்வு வீதக் கணக்கின்படி (Gradient) 'தண்ணீர் எங்கிருந்து பாயும், எவ்வளவு நேரத்திற் பாயும்' என்றெல்லாம்

அறிஞர் முடிவுகட்டுகின்றனர். மின்சாரஓட்டத்தினை அறியவும் இச்சாய்வு வீதக் கணக்கு உதவுகிறது. நரம்பின் இயக்கத்-தினையும் ஒரு வகையான மின்சார ஓட்டமெனக் கருதிப் பேச இடமுண்டு. உயிர்ச்சரக்கைப்பற்றிய சாய்வு வீத நிலையில்தான் Reflex எனப்படும் மறிவினை எழுகின்றது என்பர்.

மறிவினை:- பந்தினைச் சுவரின்மீது எறிந்தால் அது மறித்து மடங்கி மீண்டு எறிந்தார் மேலே வந்து விழும். இது போன்ற இயக்கங்களை மறிவினைகள் எனலாம். தூங்கும்போது கையின் மேல் ஈ உட்காருமானால் அதற்கு எதிராகக் கை அசைந்து வரக் காண்கிறோம். இத்தகைய வினைகளே மறிவினைகளாம்.

## V. பருவங்கள்

கருவின் பருவம் :— மக்கட் கருவின் வளர்ச்சி நிலையை அறிஞர்கள் மூன்று பிரிவுகளாகப் பிரித்து ஆராய்கின்றார்கள். கருவுற்றது தொடங்கி 15 நாட்கள் வரையிலும் முட்டை-யானது (Ovum) கருப்பையில் ஒட்டாமலே வளர்ந்து வருகின்றதாம். அதனை முளைநிலை அல்லது முதற்சூல்நிலை (Germinal Period) என வழங்கலாம். இந்த முளைச்சூல் உருவம்பெறாது இரண்டு திங்கள்வரை வளர்ந்துவருகின்றதாம். ஈதே பிண்டநிலை அல்லது இளஞ்சூல்நிலை (Embryonic period) எனப்பெயர் பெறும். பின்னர் உருப்பெற்று வளர்ந்து பிறக்கின்றவரை உள்ள நிலையை உருநிலை அல்லது முதுசூல் நிலை (Foetal stage) என அறிஞர் பகுத்துப் பேசுகின்றனர்.

உலாப்பருவம் :— வளர்ச்சியினைப் பலவாறாகப் பிரிக்க-வந்தோமாதலின் மக்கள் வாழ்க்கையின் பிரிவினையும் உடனா-ராய்வதும் பொருத்தமேயாம். மக்கள் நிலையைப் பல பிரிவாகக்

கண்டு ஆராய்வது குழவி வாழ்க்கையையும் பல வகையாகப் பிரித்து ஆராய உதவிபுரியும். முதலில் தமிழ்ச்சொல் வழக்காற்றினை ஒரு சிறிது உற்று நோக்குவோமாக. பாட்டுடைத்தலைவன் ஊர்வலம்வரும்போது அவனைக்கண்டு பல பருவத்துப் பெண்களும் காதல் கொள்ளுவதனை உலா என்ற செய்யுள் புனைந்துரைக்கும். அத்தகைய பிரபந்தங்கள் பெண்களை வெவ்வேருக ஏழு பருவங்களில் வைத்துக் கூறக்காண்கிறோம். ஏழு பருவங்களையும்,

“ ஐந்து முதல் ஏழாண்டும் பேதை ;
எட்டு முதல் நான்காண்டும் பெதும்பை
ஆறிரண் டொன்றே ஆகும் மங்கை ;
பதினுன்காதி பத்தொன்பான் காறும்
எதிர் தரு மடந்தை ; மேலாறும் அரிவை ;
ஆறுதலையிட்ட இருபதின் மேலோர்
ஆறுந் தெரிவை ; எண்ணைந்து பேர் இளம் பெண் என்று
ஒரும் பருவத்தோர்க்கு உரைத்தனரே ”

என இலக்கண விளக்கப் பாட்டியல் விளக்குகிறது. 5-ம் ஆண்டு முதல் 7-ம் ஆண்டு வரை பேதைப் பருவமாம். 8-ம் ஆண்டு முதல் 11-ம் ஆண்டு வரை பெதும்பைப் பருவமாம். 12-ம் ஆண்டு முதல் 13-ம் ஆண்டு வரை மங்கைப் பருவமாம். 14 முதல் 19 வரை மடந்தைப் பருவமாம். 20 முதல் 25 வரை அரிவைப் பருவமாம். 26 முதல் 40 வரை பேரிளம் பெண்ணும்.

பிள்ளைப் பாட்டு :— குழவிகளைப் பாடுவது தமிழ் மரபு. அரசர்களையும், கடவுளையும் குழவியாகவைத்துப் பாடுவதில் தமிழ்ப்புலவருக்குப் பெருவிருப்பம். இத்தகைய நூலினைப் பிள்ளைத் தமிழ் என வழங்குவர். அஃது ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இரு வகையாம்.

" கருங்கொலை நீக்கிக் கடவுட் காப்பு,
செங்கீரை, தால், சப்பாணி, முத்தம்,
வாரானை, முதல வகுத்திடும் அம்புலி,
சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னப்
பெறு முறை ஆண்பாற் பிள்ளைப்பாட்டே
அவற்றுட்
பின்னைய மூன்றும் பேதையர்க்காகா ;
ஆடும் கழங்கு, அம்மானை, ஊசல்
பாடுங்கவியாற் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத்தாற் கிளையளவாம்
மூன்று முதல் மூவெழுந் திங்களின்
ஒற்றை பெற்ற முற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே"

ஆண்பாற் பருவம் :- ஆண்பாற் பிள்ளைப்பாட்டில் காப்புப் பருவம், செங்கீரைப்பருவம், தாலப்பருவம் சப்பாணிப்பருவம், முத்தப்பருவம், வாரானைப்பருவம், அம்புலிப்பருவம், சிறு-பறைப்பருவம், சிற்றில்பருவம், சிறுதேர்ப்பருவம் எனப் பத்தும் வரும். குழவி காப்பார் அற்றுக்கிடக்கும் நிலை கல் மனத்-தினையும் கரைக்கும். ஆதலின் கடவுளே காக்கவேண்டும் என வேண்டிக்கொள்வதே காப்புப் பருவமாம். செங்கீரைபோலச் சாய்ந்தாடுவது அல்லது இன்பக்குரல் காட்டிப் பேசத் தொடங்குவது செங்கீரைப் பருவமாம். குழவியைத்-தாலாட்டுவது தாலாட்டுப்பருவத்தே நிகழ்வதாம். கைதட்டி ஒலிப்பது சப்பாணி கொட்டுவதாம். இது நிகழும் பருவம் சப்பாணிப் பருவமாம். 'முத்தந்தா' என்று கூறுவது முத்தப் பருவத்ததாம். "வா" என அழைப்பது வாரானைப் பருவத்த-தாம். திங்களைக் குழவியுடன் ஆட அழைக்கும் பருவம் அம்புலிப்பருவமாம். சிறுபறை கொட்டும் பருவம் சிறுபறைப்

பருவமாம். விளையாடும்போது பெண்குழவிகள் மணலில் சிற்றில் கட்டுவதனை உதைத்தெறிந்து ஓடும் பருவம் சிற்றிற் பருவமாம். நடைவண்டி அல்லது சிறுதேர் உருட்டும் பருவம் சிறு தேர்ப் பருவமாம். மூன்றாம் திங்களிலிருந்து 21 ஆம் திங்கள்வரை ஒவ்வொரு ஒற்றைப்படும் மாதத்திலும் ஒவ்வொரு பருவ நிகழ்ச்சியும் நிகழும் எனச் சிலர் கூறுவர்.

பெண்பாற் பருவம் :— பெண்பாற் பிள்ளைப் பாட்டில் காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வாரானைப்பருவம், அம்புலிப் பருவம், ஊசற்பருவம் எனப் பத்தும் வரும். குழவிகளின் வளர்ச்சிக்கு ஏற்ப விளையாட்டுக்கள் முற்றி வளர்ந்து வருவதனை இந்தப் பருவப் பெயர்கள் குறிப்பது காண்க. மூன்றாம் ஆண்டுவரை ஓர் எல்லை. ஐந்தாண்டுவரை மற்றோர் எல்லை.

இந்நாளைய ஆராய்ச்சி :— இன்றைய ஆராய்ச்சிவாணரும் குழவி நிலையைப் பல பிரிவாகப் பிரித்து வருகின்றனர். பிறந்ததுமுதல் இரண்டு வாரம் வரை அதாவது கொப்பூழ்க் கொடியை அறுத்தது ஆறும் வரை உள்ள பருவம் புனிற்றுப் பருவமாகும். ஈதே புனிற்று நிலையாம் (Neonate period). மூன்றாம் வாரம் தொடங்கி இரண்டாம் ஆண்டின் முடிவுவரை கைக்குழவிப் பருவம், இளங்குழவிப் பருவம் அல்லது இளங்குழவிநிலை (Infancy) என்பர். மூன்றாம் ஆண்டிலிருந்து 12 ஆம் ஆண்டுவரை முதுகுழவிப் பருவம், பைதற் பருவம், பேதைப் பருவம் அல்லது பைதல்நிலை எனலாம். (Childhood) "நம் குழவி புத்தி அறிந்தது" எனப் பேசக் கேட்கின்றோம். ஆதலின் பொதுவாக 12 ஆம் ஆண்டுவரை உள்ள பருவத்தைக் குழவிப்பருவம் எனலாம். பின்னர் உடல் வளர்ச்சி

முற்றும்வரை உள்ள பருவம் இளமைப் பருவம் (Adolescence) ஆம். "இளையம் என்னாது" முதலிய பாடல்களில் "இளமை" இந்தப் பொருளில் வரும். பின்னுள்ள முதிர்ச்சி நிலைப்பருவத்தினைப் பெரியவரானநிலை, முதியார்நிலை என்றெல்லாம் (Adult) வழங்கலாம்.

## VI. கருப்பை வாழ்வு

கருவாராய்ச்சி :— தவளைக் கருவினை ஆராய்ந்ததுபோல மக்கட் கருவை வெட்டியும் சிதைத்தும் வேண்டிய விளையாட்டெல்லாம் விளையாடியும் ஆராய முடியாது. ஆகவே, கீழ்நிலை உயிர்ப்பொருள்களை ஆராய்வதுகொண்டே பெரும்பான்மையும் மக்கட் கருவைப்பற்றிய உண்மைகளை ஒப்புமை வகையாலும் உய்த்துணர்வு வகையாலும் அறிதல் வேண்டும். இந்திய நாட்டு நூல்கள் அனுமானப் பிரமாணம் என்றும், உவமானப் பிரமாணம் என்றும் கூறுவன பயன்படுவது இவ்வாறே எனலாம். தாய்ப் பூனையோடு தொடர்புண்ட சூலினைத் தாயுடலத்தோடு ஒட்டிக்கொண்டு இருக்கிற நிலைமையிலேயே வெளியே எடுத்து அதனை உப்புநீரில் இட்டுவைத்தால் அந்தச் சூல் இறவாமல் வாழ்ந்து வருவதனை உயிர்நூற்புலவர்கள் ஆராய்ந்துள்ளார்கள். பிரத்தியக்ஷப் பிரமாணமாம் காட்சியளவையும் இங்கு உண்டு. மகளிர் பலர் நோய் காரணமாகப் போது காலத்திற்கு முன்னரே சூல் வெளிப்பட (Abortion) வருந்துவதும் உண்டாதலின் அவ்வாறு வெளிப்பட்ட சூல்களை நேரிற்கண்டு ஆராய்தலுக்கும் இடம் உண்டு. கரு வயிற்றிலிருக்கும் போதே ஊடுருவு கதிர் (X-Ray) கொண்டு புகைப்படம் பிடித்துக் காணுதலும் கூடும்.

மறிவினைக் கோள்கை :- கருவின் இயக்கத்தினைப் பற்றி இருவேறு கொள்கைகள் வழங்கிவருகின்றன. ஒரு கொள்கை-

யின்படி முதல் முதல் தோன்றும் இயக்கங்கள் எல்லாம் மறிவினைகளாம். நாம் அடித்த பந்து மறித்து வந்து நம் மீது விழுவதுபோலவே உடல்மேலே பாயும் தாக்குதல்களும் எதிர் தாக்கல்கள் என்ற வடிவில் நம் உடலின் இயக்கமாக வெளிப்படுகின்றன என்பது இத்தகையாரது கொள்கை. கருப்பையினுள்ளே கருவினை இயக்கி வைப்பன புறத்தூண்டல்கள் எனக் கூறுவதற்கு இடமில்லை. கருவின் உள்ளேயுள்ள தசைநார்கள் இயங்குதற்கு வேண்டிய ஊக்கம் அந்தத் தசை நார்களிடத்திலிருந்தே எழுகின்றனவாம்.

இயற்கைச் செய்கைக்கோள்கை:- மற்றொரு கொள்கையின்படி பல பல மாதிரிகளான இயக்கங்கள் இயற்கையில் அமைந்து கிடக்கும் இயக்கங்களே முதல் முதல் செயற்படுகின்றனவாம். உடலின் பலபகுதிகளின் தனித்தனி இயக்கங்கள் இவ்வாறு எழுகின்றனவாம். தொடக்கத்தில் உயிரணுக்கள் ஒன்றற்கொன்று வேறுபாடின்றி ஒரேவகையாய் விளங்கக் காண்கிறோம். உடலம் தலையிலே தொடங்கிக் கீழாக வளர்ந்து வருகின்றதாம். இதனைத் தலைமுதற் கீழ்வரு வளர்ச்சிச் சட்டம் என வழங்குவதுமுண்டு. மற்றொருவகையாக நோக்கும்போது நடுவிடத்தே இருந்து உடலினது முடிவிடங்களின் பக்கமாக வளர்ந்து வரவும் காண்கிறோம். நடுமுதல்புறம்வருவளர்ச்சிச் சட்டம் என இதனை வழங்குவதும் உண்டு. இவ்வாறு இரண்டு வகையாக எழும் வளர்ச்சிநிலையின் பயனாக உடலின் பெரும் பகுதிகளில் தனிப்பட்ட இயக்கம் சிறப்புநிலையுற்று வளரக் காண்கிறோம். நரம்பமைப்பு வளர்ந்து வரும்போது அதன் நடுநிலையாக மூளையும் அதன் பல பிரிவுகளும் பொலிவு பெறுகின்றன. நடுநிலை நரம்பமைப்பால் மறிவினைகளாகத் தனித்தனி எழுந்தவை தொடர்புற்று ஒற்றுமைபெற்று விளக்கமுறுகின்றன எனச் சிலர் நினைக்கின்றனர். மூளை முற்றி

வருவதன் பயனாக எண்ணி எண்ணச்செய்து வரும்போது எண்ணாது எழும் மறிவினைகள் தடைபெறுகின்றன என அறிஞர் தம் ஆராய்ச்சியால் விளக்கியுள்ளார்கள்.

கோமட்டி சாட்சி :— 'செயல்கள், இயற்கையாகவே உயிர்ப் பொருள்களிடையே அமைந்துள்ளன என்றும், தாக்கலுக்கு எதிர்தாக்கலாகும் மறிவினையாம் என்றும் மன்றுடும் இந்த இரண்டு கொள்கைகளையும் முழுப்பொய் என்றோ முழுமெய் என்றோ சொல்லுவதற்கில்லை.' எனக் கோமட்டி சான்று கூறலாம். தொடக்கத்தில் உடல்முழுதும் இயங்கி நிற்கவே காண்கிறோம். இயக்கங்களின் மாதிரிகள் (Patterns) பல இயற்கையில் அமைந்திருந்தும்முதலில் வேறு-பாடின்றியே விளங்குகின்றன. தசையும் நரம்பும் வளர்ந்த பின்னர் உடலின் ஒரு சில பகுதிகள் சில சில வேலைக்கென்றே சிறப்புநிலை உறுகின்றன; உடலின் பிற பகுதிகளினின்றும் தொழில் வகையால் வேறு படுகின்றன. முடிவாக ஒவ்வொரு-வரும் தத்தம் சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்றவாறு பொருத்த-முற்று வரும்போது இந்தப் பலவேறு பிரிவுகளும் ஒற்றுமை பெற்று வெற்றியோடு ஒத்துழைக்க வருகின்றன.

சூலின் இயக்க வளர்ச்சி :- சூலின் வளர்ச்சியினைப்பற்றிக் கர்ப்போபநிஷத்தும், திருவாசகப் போற்றித்திருவகவலும் கூறுகின்றன. நாம் நாடுவது நடத்தையே; ஆதலின், சூலின் இயக்கத்தினையே நாம் ஆராய்தல் வேண்டும். கருவுற்ற இரண்டாம் வாரத்திலேயே சூலானது தானாகவே இயங்கத் தொடங்குகின்றது. மூன்றும் வாரத்தில் அதன் நெஞ்சு, முதல் முதல் துடிக்கின்றது. 'தன்னிடையே எழுந்த ஊக்கத்தால் இயங்கியதசை ஏழாம் வாரத்திலே, மின்சாரம்கொண்டு தூண்டினாலும் இயங்குகின்றது' என்பதனை ஆராய்ச்சியாளர்

கண்டனர். மூன்றும் திங்களில் தசையானது புழுவின் இயக்கம் போலத்தானகவே சுருங்கியும் விரிந்தும் வருகிறது. உள்ளங்-காலைத் தொட்டதும் அதே திங்களில் கால்விரல்கள் விரியவும் அறிஞர்கண்டனர். ஐந்தாம் திங்களில் முதுகந்தண்டின் மேற்-புறத்தினைத் தூண்டியதும் சூலின் நெஞ்சுத்துடிப்பு மிக்குவரு-கின்றதாம். இதே திங்களில், வயிறு, மார்பு, கழுத்து, தலை முதலிய உறுப்புக்கள் ஒருங்கியைந்து இயங்குமுறை தோன்று-கின்றதனை ஆராய்ச்சியாளர் குறித்துவைத்துள்ளனர். உறுப்-புக்களின் ஒத்துழைப்பு அந்த நிலையில் விளங்குகின்றது என்ப-தாயிற்று. ஆறும் திங்களில் கருவின் உதட்டினைத் தொட்டதும் அது வாயை மடித்துச் சுருக்கக் காண்கிறோம். எனவே, இந்த நிலையில் தூண்டுதலுக்கேற்ற எதிர்தாக்கல்கள் சிறப்புநிலை உறுகின்றன என்பது தெளிவாயிற்று. அப்போதுதான் அழுதற்கு வேண்டிய அமைப்புகளும் தோன்றுகின்றன. அதேகாலத்தில் மூளையும்தொழில் புரியத் தொடங்குகின்றது என்பதும் தெளிவாகிறதாம். வளர்ந்திருக்கும் முதுசூலின்நிலை எட்டாந் திங்களிலும், ஒன்பதாம் திங்களிலும் பத்து மாதம் நிரம்பிப் பிறந்த குழந்தை நிலையிலும் பிரித்தறிய முடியாமல் இருக்கக் காண்கிறோம்.

சூல் இயக்கத்தின் இயல்பு :- இவ்வளவும் கூறியமையால் கருப்பையிலேயே பயிற்சியின் பயனுக இயக்கங்கள் சிறப்பு-நிலை உறுகின்றன என்பது தெள்ளத் தெளிவாம். கருப்-பையின் உள்ளே உள்ள சூல் திறமற்றுக் கிடக்கின்றது எனலாம். பாதுகாவலான அறைக்குள் இருப்பதுபோல அமைந்து கிடப்பதால் அதற்குப் பெருங்கேடு ஒன்றும் நேருவதற்கு இடமில்லை. உயிர் அணுக்கள் பல்கிப் பெருகின்றன. உறுப்புக்களும் அமைப்பில் வேறுபாடுற்று வருகின்றன. அவற்றின் தொழிலும் சிறப்புநிலை பெற்று

வளரத் தொடங்குகின்றது. சுரப்பிகளினின்று பாயும் சாறுகளாலும், நரம்பமைப்பின் வளர்ச்சியினாலும் உறுப்புக்-களனைத்தும் ஒத்துழைத்து ஒருங்கிணைந்து ஒற்றுமை பெற்று விளங்கக் காண்கிறோம்.

அடங்குநிலை ஆற்றல் :— பிறந்தபின் தொடங்கப்போகும் வாழ்விற்கென முன் ஏற்பாடாகத் திருத்தங்கள் சூலினிடையே தோன்றிவரக் காண்கின்றோம். இவ்வாறு கூறியதிலிருந்து குழந்தை பிறந்ததும் அது செய்யும் செயல்களில் திறப்பாடு சிறந்து விளங்குகிறது என்று பொருள் கொள்ளுதல் ஆகாது. பரந்து தோன்றப்போகும் உலகவாழ்க்கையில் பலவகையாகத் தோன்ற நிற்கும் நிலைகளினிடையே எல்லாம், உலகப்-போராட்டத்திற்கு ஈடு கொடுக்கக்கூடிய வகையில் சூலின் இயக்கங்கள் பல்வேறு வகையில் பல்கிப் பெருகக்கூடியவாறு அமைந்துள்ள இயல்பே அச்சூலினிடை முற்றிவருகிறது என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும். பிறக்கும்போது குழவியினிடம் மக்கள்தன்மை என்று சிறப்பித்துப் பேசப்-படும் இயல்பும் காணப்பெறுவதில்லை; மக்கள் பண்பாடும் தோன்றுவதில்லை. தாக்கலும் எதிர்தாக்கலுமாக அமைந்த இயக்கங்கள் குறிப்பிட்ட பல பல கோலங்களாக அமைந்து கிடக்கின்றன. சுற்றுப்புற நிலைக்கேற்பப் பொருத்தமுற்றுத் திருத்தம்பெற்று வருநிலையில் வியக்கத்தக்க வகையாய் மாறி அமையக்கூடிய நரம்பமைப்பும் பிறக்கும் குழவியினிடம் தோன்றுகிறது. இந்த அடிப்படையாம் கடைகாலின் மேலேயே மக்கட்கூட்டம், பல வகையான பழக்கங்களையும், மன-நிலைகளையும், எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் பெருங்-கோட்டையாகக் கட்டிவருமாறும், உலகில் வாழ்ந்துவருமாறும் அக்குழவிக்கு உறுதுணையாக நின்று நரம்பமைப்பே காவல் புரிந்து வருகிறது.

## VII. கருவியல்

தேங்காத தேஞேடை :— "பெற்ருேரின் குடிவழியே (Heredity) இக்குழவி என்ன இயல்புகளைப் பெற்றுள்ளது"? எனக் கேட்பது வழக்கமாயுளது. இவ்வாறு கேட்கின்ற மனப்பான்மை முற்றும் மாறுதல் வேண்டும். மக்கள் இயல்பு மாருததொன்றன்று. தலைமுறை தலைமுறையாக ஒரே நிலையில் தேங்கிக்கிடப்பதும் அன்று. எப்பொழுதும் இயங்கிக்கொண்டே இருப்பதொன்ரும்; தேங்காத தேஞேடையாம். எனவே, சுற்றுப்புறநிலைக்கு ஏற்ப மாறிவருவது ஒன்ரும். மக்கட்கியல்பான பல வகையான ஆற்றல்கள், அவரவரது சிறப்புநிலைக்கு ஏற்பப் பலபல அளவில் பலபல கலவைநிலையில் ஒத்தியங்கும் ஒரு தனிப்பெருங் கோலமாகவே ஒவ்வொருவரும் விளங்கி வருகின்றனர். பெற்ருேரின் குடிவழியாக வரும் இயல்புகள் மட்டும் ஒருங்கு இயைந்தோர் கலவையே குழந்தையாம் என எண்ணுவது தவறு. அந்த இயல்புகள் வாழ்க்கையில் இயங்கிவரும் ஆற்றல்களேயன்றித் தனித்து நிற்பன அல்லவாம். இங்ஙனமாயின் அந்த ஆற்றல்கள் இயங்க ஓர் இடம் வேண்டாமோ? அவை ஒன்றை இயக்கவும் வேண்டாவோ? அதுவே மக்கள் நிலையாம். தொடக்கத்தே கருவின் முழுநிலையும், ஒருநிலையாகவே விளங்கி இயங்கிவரக் கண்டோம். பின்னர்ப் பல உயிரணுக்களும் சிறப்புநிலையுற்று வளர்ந்து வரவும் கண்டோம். ஆனல் அப்போதும் அவை அனைத்தும் தனித்தனிப் பிரிந்து வேருகி நிற்பதில்லை எனவும் கண்டோம். ஒருங்கு இயையும் ஒற்றுமையும், ஒத்துழைப்பும் அவற்றிடையே விளங்கவும் கண்டோம். நரம்பமைப்பாலும், சுரப்பிச்சாறுலுமே இத்தகைய ஒற்றுமை விளைகிறது எனவும் கண்டோம். ஒவ்வொரு கருவும் பலபல தனி ஆற்றல்களின் கூட்டுறவு இயக்கமாகவே தொடங்குகிறது. இவ்வாற்றல்கள்

தம்மொடு தாம்முட்டிவாக் கரு இயங்கி வளருமிடத்தே, காணும் பொருளும் காணப்படும் பொருளும் தாக்கியும் தாக்குண்டும் நின்று அனைத்தும் ஒருங்கியங்கி வளருகின்றனவாம். கருவின் வாழ்வும் சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்பத் திருத்தமுற்றுப் பொருத்தம் பெற்று வாழும் வாழ்வேயாம். புலப்பட்டுத் தோன்றாத பொதுநிலைத் திருத்தத்தினின்றும் சிறப்புநிலைப் பயிற்சிகள் என்று கூறத் தக்க மாற்றங்களின் வடிவமாக உடலம் வேறுபட்டு வருவதற்கென முன் ஏற்பாடாகப் பயின்று வளரும் இடமே கருவென்று கூறலாம்.

இயற்கை இடியப்பம் :- இயற்கை அன்னை குழவிகளைக் கருவில் அமைப்பது, நாம் இனியதொரு சிற்றுண்டியைச் சமைப்பது போலாம். இடியப்பம் முதலிய சிற்றுண்டிகளைச் செய்யும்போது மாவை முன்னாகவே பிசைந்து மெத்தெனச் செய்து கொள்ளல் வேண்டும். மாவினை இடியப்பமாகச்சுற்றிப் பிழிந்த பின்னர்ப் பிசைந்து பயனில்லை. மாவினைச் சூடேற்றுவதற்கும் காலம் உண்டு. பிசைவதற்கும் காலம் உண்டு. பிழிவதற்கும் காலம் உண்டு. காலம் தவறி இவற்றில் ஒன்றை முன்னே செயினும் கேடாம்; பின்னே செயினும் கேடாம். அததற்கு உள்ள காலத்தில் அததனைச் செய்தல்வேண்டும். அதே போலக் குழவிகளின் வளர்ச்சியிலும் அததற்கு ஒவ்வொரு காலம் உண்டு. அததனை அப்போதப்போது மாற்றினாலன்றிப் பின்னர் மாற்றமுடியாதாம். மனிதன் இரண்டு கண்களைக் குடிவழி மரபிற்கேற்பத் தலைமுறை தலைமுறையாகப் பெற்று வருகின்றான் என அனைவரும் கூறுவது உண்மையே. குடிவழி இயல்பினை மாற்றமுடியாதெனக் கூறுவது வழக்கம். ஆனால் 'இரண்டு கண் பெற்று விளங்கும் இந்தக்குடி வழியாம் இயல்பினை மாற்றக்கூடிய காலமும் உண்டு' என மீனக்கண் ஆராய்ச்சியால் விளங்கக் கண்டோம் (பக் 49). எனவே குடிவழி இயல்பு

மாறுதலென்று எனக் கூறுவது உண்மையன்றாம். ஒரு காலத்திற்குப் பின் மாற்றமுடியாதென்றே கூறலாம். தக்க காலத்தில் தக்கபடி தக்கநிலையை ஏற்படுத்திவிட்டால், இரண்டு கண் என்ற இயல்பேயன்றி ஒற்றைக் கண்ணையே இயல்பாகக் கொண்ட ஒரு முனிவரும் பிறக்கலாம். முதுகிலும் கண்ணை வளர்ந்து வரச் செய்யலாம். புராணத்திற் காணும் பலபல கோலங்களையும் விளையச் செய்யலாம். ஆனால் அனைத்தும் காலத்தைப் பொறுத்தது என்ற உண்மையை மட்டும் நாம் மறத்தலாகாது.

"மானிடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்,
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்,
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்,
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்,
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்,
ஆறு திங்களில் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டு திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்"

(போற்றித் திருவகவல்)

---

# 4. புனிற்றிளங் குழவி

## I. திரு அவதாரம்

கேட்டறியாக்குரல் :- "நடுங்குவதொரு குரல் தரைமீது கேட்கின்றது ; இதற்கு முன் இதனைக்கேட்டதே இல்லை. இதற்கு முன்னர் இயங்கி அறியாததொரு குரல்வளையினின்றும் எழுகின்றது இக்குரல்.

இருட்டறை :- "மிக மிக ஆழ்ந்ததோர் இருட்டினிடையே வாழ்ந்தவனும். உலகின் அகடுவரையிலும் சென்ற நில அறைக்குள்ளே வாழ்ந்தவனே போல மிக நுண்ணிய விளக்கத்தின் ஒளியினையேனும் அவன் கண்கள் கண்டதில்லையாம்.

மௌன சமாதி: — "பெருமௌனத்தில் வாழ்ந்தவனும். நுண்ணிய ஓசையேனும் அவன்காதில் நுழைந்ததில்லையாம்.

மலர்ச்சியில் ஓர் ஒலி :- "என்றும் நீரினுள்ளேயே வாழ்ந்து வளர்ந்த மகனைப்பற்றிக் கேள்வியுற்றேன். அந்த நீரோ வியத்தகு வெம்மை உடையதாம். அத்தகையவனைத் திடீரெனப் பனிக்கட்டி நீரில் அமிழ்த்துகின்றனர். அவனுடைய நுரை ஈரல்கள் மலர்கின்றன. அவையோ என்றும் மூச்சுவிட்டு அறியாதவை. தோன்றியது முதல் சுருங்கிக் குவிந்து கிடந்த அந்த நுரை ஈரல்களுக்குள்ளே காற்றும் உடனே புகுந்து அவற்றை விரிக்கின்றது. உடனே நுண்ணிதின் நடுங்கும் ஒரு குரல் தரைமீது கேட்கின்றது. இதற்கு முன் இதனைக் கேட்டதே இல்லை. இதற்குமுன் இயங்கி அறியாததொரு குரலினின்றும் எழுகின்றது அவ்வொலி.

ஓய்வு:- "அவனே இத்தனை நாளும் ஓய்வெடுத்திருந்தான். குறைவிலா நிறைவாம் அந்த ஓய்வினைக் கற்பனைக் கண்களாலேனும் யாரே காணுதல் கூடும்? உண்ணும் கவலையும் அவனுக்கு இருந்ததில்லை. வேறொருவர் அவனுக்கென உண்டு வந்தனர். அவனுடைய உடலின் ஒவ்வோர் அணுவும் ஓய்வு பெற்றிருந்தது. அவனுடைய உயிர்வாழ்க்கைக்கேற்ற சூடு-நிலையை வேறோர் உயிர் இயங்கி எழுப்பியது. இரத்தத்திற் பாயக் கூடும் நஞ்சினை எதிர்த்தோ நோய் அணுக்களை எதிர்த்தோ, போரிடும் தொழிலும் உள்ளுறுப்புக்களுக்கு இல்லை. வேறோர் உயிர்ப்பொருளின் உறுப்புக்கள் அந்தப் பெருங்கடனைத் தமது என ஏற்று ஆற்றிவந்தன. உயிர்க்-காற்றைப் பெற்று உயிர்ப்பதும் இன்றியே ஒளிர்ந்தான். உயிர்ப்பொருளிடையே அவனைப்போலப் பேறு பெற்றார்யாரே! நெஞ்சின் துடிப்பொன்றே அவன் செய்தவேலை. அந்த நெஞ்சமோ அவனுக்கு முன்னரும் துடித்து வந்தது. ஆம். அவன் உருப்பெறுவதற்கு முன்னரே அவனுடைய நெஞ்சம் பிறநெஞ்சினும் இரண்டத்தனை துடித்தது. இதுவே மனிதனது நெஞ்சம்.

ஏசு:— "ஈதோ அவன் முன்னுக்குக் கால் எடுத்து வைக்கின்றான். அனைத்துத்தொழிலினையும் தன் மீது வைத்துச் சுமக்கத் தலையை நீட்டுகின்றான். ஒளியும் அவனைச் சுடுகின்றது. ஒலியும் அவனைக் காய்கிறது. உடலின் உள்ளுக்குள்ளான ஒவ்வோர் அணுவும் இவ்வாறு குலுங்கி, நடுங்கி, வருந்திநிற்க அவன் முன்னுக்கு வரும்போது பேரொலி ஒன்று இசைக்கின்றான். "ஏன் என்னைக் கைவிட்டாய்" என்பது அப்புலம்பல். இறந்தொழிந்த ஏசுவும் உயிர்த்தெழுந்த ஏசுவும் இவ்வாறு முதன் முதலாகத் தன்னிடத்தே ஒருங்கு நிழலிட மனிதன் இந்த நிழலொளியாக விளங்குகின்றான்" (Kaye).

அவதாரம் :— ஒவ்வோர் உயிரிடையேயும் ஆண்டவன் திருவவதாரம் செய்கின்ருன் என்ற உண்மை ஒவ்வொரு குழவியினிடத்தேயும் விளங்குவதனை இந்தப் பாடலைக்கொண்டு மாண்டிசோரி அம்மையார் விளக்கி வைக்கின்ருர்.

உயிர்க்கரு :— "ஒவ்வோர் உயிரணுவும் அச்சடையாளம் ஒன்றும் தோன்ருதபடி அடங்கிக்கிடக்கும் உயிர்ப்பொருளின் அமைப்பினைத் தன்னிடத்தே கொண்டு விளங்குவதுபோல ஒவ்வொரு புனிற்றிளங் குழவியும் அண்டத்திடையே தனது கடமையைச் சரிவர நிறைவேற்ற வேண்டித் தன் சுற்றுப்புறச் சூழலோடும் தொடர்புபெற்று ஒளிரவருகிற தன் ஆன்மாவின் உண்மைத் தன்மைக்கேற்ற சிறப்பியல்பானதொரு கோல அமைப்பினைத் தன்னிடத்தே கொண்டு திகழ்கின்றது. இந்த ஆன்ம இயல்பிற்கேற்ற மீநிலைத் தொழிற் பண்புகள் விளங்க வேண்டி அவற்றிற்குத் தக்கதொரு வடிவோடு இந்த அண்டத்திலே பொருத்தமுறுதற்கு ஏற்றதோர் உடலமும் அமைகிறது. உடற்கருவாக வளர்ந்து முற்றிப் பிறக்கும் புத்தம் புதுக்குழவி மற்ருெரு கருநிலையில் உயிர்க்கரு என விளங்குகிறது. எனவே மனிதனது இயற்கைக் கோலத்தைக் குழவியே வெளியிடுதல் கூடும். உடற்கருவினைப் பல உறைகளினிடையேயும் பல திரைகளினிடையேயும் காவலாகவைத்து அமைத்ததுபோல, இல்லாமையிலிருந்து எழுந்து உருப்பெற்றுத் தோன்றும் இந்த உயிர்க்கருவின் படைப்பு விளக்கத்தின் மென்மைக்கும் நுட்பத்திற்கும் ஏற்ப இந்த உயிர்க்கருவினுக்கு நிறைந்த காவலும் நிரம்பிய சூழலும் இன்றியமையாது அமைப்பதும் வேண்டப்படும்". ஈது மாண்டிசோரி அம்மையாரின் கருத்தாம்.

## II. புரட்சியிலொரு பொருத்தம்

இரத்தப் புரட்சி :— பிறக்கும்போதே, இதற்கேற்பக் குழவி புறநிலைச்சூழலோடு பொருத்த முற்றுவரத் தொடங்கு-

கிறது. பிறப்பே ஒரு புரட்சி. ஒரு பெரிய இரத்தப் புரட்சி. களைத்து இளைத்துக் குழவி உள்ளுலகிலிருந்தும் வெளியுலகிற்கு வருகிறது. கருவூரிலிருந்து உறையூர்க்குப் புறப்பட்ட பயணம் முடிவடைகிறது. உயரப்பறப்போர் மேலுலகிற் காற்றுக்குத் தடுமாறி மூச்சுவிட முடியாது திணறுவதுபோல அவ்வுலகத்திலிருந்து இவ்வுலகத்திற் புகுந்த குழவியும் அலறிக் கதறுகிறது. பிறந்தவுடன் சிலபோது குழவியின் முதுகெலும்பில் மஞ்சள் நிறமான 'ஓடிப்பொருள்' (Fluid) இருக்கக் காண்கிறோம். பிறக்கும்போது ஏற்பட்ட கேடின் பயனாகும் ஈது. நல்லகாலமாகத் தலையோட்டினை இயற்கை அன்னை மெத்தெனவே அமைத்துள்ளாள். பிறந்த பின்னர்த்தான் நாளடைவில் இந்தத் தலையோடு வல்லென்றாகி முற்றுகிறது. மெத்தென்றில்லையானால் அது அமுங்கிக் கொடுக்காது; எளிதிற் பிறப்பதே அருமையாம். உடம்பின் எலும்புகளும் முற்றாத குருந்து நிலையிலேயே பெரும்பான்மையும் உள்ளனவாம். பிறக்கும் போது உடலில் உள்ள எலும்புகளின் தொகை 270 ஆம். முதியோருக்கு உள்ள எலும்பின் தொகை 206 ஆம். எனவே வளர வளர எலும்புகள் வல்லென்றாகி, ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்கின்றன என்பதாயிற்று.

முதலிமைப்போது :- உறுப்பினோடு உறுப்பாய்த் தாயோடு ஒட்டிக் கொண்டிருந்த குழவி பிறந்ததும் தனிப்பட்டு வாழத் தொடங்குகிறது. கருவிலோ குருதியோட்டம் தாயின் குருதியோடு சேர்ந்து குதித்து ஓடுகிறது. குழவி தனிப்பட்டபோதே குருதியோட்டமும் தனிப்படுகிறது. ஆக்ஸிஜன் என்றும் (Oxygen) பிராணவாயு என்றும் வழங்கும் உயிரியத்தை உட்கொண்டு குருதியினைத் தூயதாக்கி வரவேண்டும். நுரையீரல் இதற்கென முன்னரே ஏற்பட்டுள்ளது. உயிரியம் மூளையின் இயக்கத்திற்கும் இன்றியமையாது வேண்டப்-

படுவதாம். முதல் மூச்சோடு மூளை இயங்கத் தொடங்குகிறது எனலாம். உயிர்ப்பின் இந்த அடிப்படையான உயர்வினைக் கருதியே தமிழர் ஆன்மாவை உயிர் எனவழங்கி வருகின்றனர் போலும். முது சூல் நிலையில் கொப்பூழ்க் கொடியை இறுக்கியதும் கழுத்தை இறுக்கி விட்டாற்போலச் சூல் தட்டுத் தடுமாறி திணறக் காண்கின்றோம். பிறந்ததும் குழவி அழுதால்தான் மூச்சுவிடத் தொடங்கியது புலனாகும். அழுகையே பேரிழவின் அறிகுறி எனக் கொள்ளும் நம் உலகம் பிறக்கும்போது பெருவாழ்வின் அறிகுறி என அதனையே கொண்டாடுகிறது. முரண்பாட்டில் எழும் புதுமைகளில் தலைசிறந்தது இது. அழாதபோது மருத்துவர் குழவியைத்-தட்டிப் புடைக்கின்றார்; ஆட்டிப் புடைக்கின்றார்; குளிர்ந்த தண்ணீரை வாரி வாரி இறைக்கின்றார். 'எவ்வாறேனும் அழாதா' என்பதே எல்லோர்க்கும் உள்ள பேர் அவா. நடுங்குவதோர் குரல் எழுகிறது.

பொருத்தம் :— குழவியின் குருதி ஈரலும் வெளி நிலைக்-கேற்ப புறச்சூழலோடு இணக்கமுற்று வரக்காண்கின்றோம். 5 மாதத்திய சூலின் இருதயம் 134 முறை துடிக்கும். இரண்டாம் ஆண்டில் 100 முறை துடிக்கும். நன்றாக முதிர்ந்து பெரியோனானபோது 81 துடியே துடிக்கும். தன் உறுப்புகளும் சுற்றுப்புறச்சூழலும் மாறிவருவதற்கேற்பக் குழவி இணக்க-முற்று வரும் நிலை இதிலிருந்தும் நன்கு விளங்கும். குழவி பல பல தூண்டல்களை உணருகின்றது. ஒலியைக் கேட்டுணரக் கூடியநிலையிலேயே குழவி பிறந்த உடன் விளங்கக்காண்கிறோம். தூங்கும்போதும் குழவி ஒலியை உணருகின்றது. குழவி விழித்துக் கொள்ளாதபடி அந்த ஒலி எழுதல் வேண்டும். உடனே அதன் நாடித்துடிப்பு மிக்குவரும்; மூச்சு விடுதல் குறைந்து வரவும் காணலாம். மூச்சுவிடுதலும், நாடித்-

துடிப்புமாம் இந்த இரண்டும் இவ்வாறு ஒன்றினேடொன்று ஒருங்கியைந்து ஒலிகேட்ட குழந்தையது இயக்கத்தின் தனிக் கோலமாக விளங்கக் காண்கிறோம். வெளி உணவினை உட்கொள்ளவேண்டிய கட்டாயமும் பிறந்தவுடன் பிறக்கின்றது. ஈது ஒரு புதுப் பழக்கம் அன்றோ? வெளிக்குப் போவதும் புதுமுறையேயாம். முழுவிழிப்பும் புது வாழ்க்கையைச் சேர்ந்த தொன்றே; இதற்குமுன்னே கருப்பையில் இவ்வாறு விழித்திருந்திருக்க முடியுமோ? இயங்குவதும் பொருள்களைத் தொட்டுக் கையாளுவதும் மக்களொடு பழகிவருவதும் குழந்தைக்கு ஏற்பட்ட புதிய வாழ்வின் சிக்கல்களேயாம்.

புரட்சியிற் புரட்சி:-இத்தகைய குழவியின் வருத்தத்தைக் குறைக்க ஒருவரும் முயலுவதில்லை. அனைவரும் தாயினையே நோக்குகின்றனர். தாயினும் துணையற்றதன்றோ தனிக்குழவி? நுட்பமும் மென்மையும் அறியாத கைகள் அப்பச்சிளங் குழவியை முருட்டுத்தன்மையுடன் கல்லெனக்கருதிக் கையாள வருகின்றன. அழுகையே அப்பச்சிளமண் பேசும் மொழி. அதனையும் சரிவரக் கேட்பாரில்லை. கையாற் பிடித்து நோயாளியை யாரேனும் தூக்குவாரோ? நோயாளியை விட நொந்து பிறந்துகிடக்கும் குழவியை அங்ஙனமன்றோ தூக்குகின்றனர்? வாராத விருந்தாக வந்தானை நம் உலகம் வரவழைக்கும் முறை நன்று நன்று! ஆறறிவு படைத்த மக்களிடை அன்றி இந்த முறையை வேறெங்கும் காணமுடியாது. விலங்குகளும் பறவைகளும் தமதிளைய வள்ளல்கள் பிறப்பதற்கு முன்னரே அன்பே உருவாகி எத்தகைய அமைதியான இடத்தைத்தேடி உதவுகின்றன? ஒளியும், ஒலியும் தாக்காதவாறு அவற்றிற்கு என்ன ஓய்வைத் தருகின்றன? அன்பன்றோ அங்கு நிலவுகிறது? மக்களோ அதனை இன்னமும் அறிந்தார்களில்லை. அன்பென்பது அவர்களது எதிர்காலப் பேச்சேயாம்.

செயற்கை வாழ்வினிடையே குழவியே வேண்டாமென வெறுத்து நிற்கும் தாய்மையின் ஆரவார நாகரிகத்தின் எதிரே, தன்னை நோயாளி என ஒருவரும் உணராத உலகிலே, நோயாளியாகப் பிறக்கின்றது குழவி. இந்தத் துணையற்ற நிலையில் பலகுழவிகள் தலையில் ஊறுபெற்றுத் தலைவீங்கி நிற்கின்றன. சில செவிடாகின்றன. சில குருடாகின்றன. வாணாளெல்லாம் வீணாளாக அலையும் இக்குழவிகள் உலகினை வெறுத்துப் போராடினால் அது ஒரு வியப்பாமோ? புரட்சியில் எழுந்த புரட்சியாக அவர்கள் வாழ்வு கொந்தளிப்பில் அல்லலுறுகிறது.

## III. பொறியும் புலனும்

புலனுவதில்லையோ :— குழவி கண்ணையும் காதையும் கவரும் பொருள்களிடையே கிடக்கின்றது. ஒன்றும் அதற்குப் புலனாகுவதாகத் தோன்றவில்லை. ஒன்றும் நடவாதது போலவே கிடக்கின்றது. புலப்பொருள்களை இது கவனிப்பது இல்லையோ? அல்லது கவனித்தும் அதற்குத் தக்கபடி எதிர் ஊன்றி நிற்கக் கூடிய ஆற்றல் இதற்கு இன்னும் வளரவில்லையோ? இவ்வாறெல்லாம் ஐயம் எழுவது இயல்பே. பொறிவழியே பல வகையான புலன்களையும் அறியும் நிலை குழந்தைகளிடையே பிறக்கும் போதே வளர்ந்தமைந்துள்ளது. அவ்வாறு அறிவதற்குத் தகப் பல வகை உறுப்புக்களும் எதிரூன்றி நிற்கிற இயக்க நிலை மட்டும் பிறந்த பின்னரே அமைந்துவரத் தொடங்குகிறது. குழவியின் பொறிகளை அறிஞர் ஆராய்ந்து கண்டவற்றை அறிந்தால் இந்த உண்மை விளங்கும்.

•

ஆராயும் முறை :— அறிஞர் பொறியுணர்வை ஆராய்ந்து வரும்வகை அருமையுடையதாகும். பேசாத பச்சிளங்குழவி

வெளிப்பொருளை உணர்கின்றதா இல்லையா என எப்படி அறிவது? ஒளியின் எதிரே கண்ணிலுள்ள பாவையின் இயக்கங்களை அறிஞர் ஆராய்கின்றனர். அந்த இயக்கங்களை அளந்தறிய முயல்கின்றனர். எதிர் தோன்றும் ஒளிப்பொருள்களின்மேல் குழவி தன் பார்வையை ஊன்றவைப்பதற்கு எவ்வளவு நேரமாகின்றது என்பதனையும் கணக்கிடுகின்றனர். அசையும் ஒளிப்பொருள்களைக் குழந்தைகளின் கண்கள் எவ்வாறெல்லாம் பின்பற்றுகின்றன என்பதனையும் ஊன்றி நோக்குகின்றனர். குழவி ஒளிப்பொருளைத் தொடர்ந்து பற்றிப் பிடிக்க முயலுவதனையும் கண்டுவைக்கின்றனர்.

மறிவினைமுறை :— செயற்கை மறிவினை வழியாகவும் அன்னோர் ஆராய்கின்றனர். மறிவினை யாதென ஆராய்வோம். இயற்கையாக எழுவதாம் அது. அதனைச் செயற்கையாகவும் எழவைப்பதே இந்நாளைய ஆராய்ச்சி. சோற்றைக் கண்டதும் வாயில் நீர் ஊறுவது ஓர் இயற்கை மறிவினையாம் (Reflex). சோறு இங்குத் தூண்டுதல் எனும் ஊன்றலாம்; நீர் ஊறுவது துலங்குதல் எனும் எதிரூன்றலாம். சோறு வருந்தோறும் மணி ஒன்று அடித்து வருவோமானால் சில நாள் பழகியதும் மணி அடித்ததும் வாயில் நீரூறத் தொடங்குகிறது. இதுவே செயற்கை மறிவினை. மணி அடித்தல் இங்கே சோறென்ற இயற்கைத் தூண்டுதலினிடத்தே விளங்கும் செயற்கைத் தூண்டுதலாம். இவ்வாறு இயற்கைத் தூண்டுதல்களோடு நாம் ஆராய வேண்டுவதனையும் இணைத்துச் செயற்கைத் தூண்டுதல்களாக எழுப்பிக் குழவியின் எதிரூன்றல்கள் எவ்வாறு எழுகின்றன என ஆராய அறிஞர் முற்படுகின்றனர். உணவினை ஒட்டியோ, பிறவற்றை ஒட்டியோ எழும் இயற்கைத் தூண்டுதல்களோடு பலவகை நிறமுடைய ஒளிகளையும் செயற்கைத் தூண்டுதலாக இணைத்து விட்டுப் பழக்கமான பின் இவற்றில்

எந்தநிற ஒளியைக் குழந்தை தேர்ந்தெடுத்து விரும்பிப்பார்க்-கின்றது என ஆராய்ந்துள்ளனர். இத்தகைய ஆராய்ச்சிகளின் பயனாகச் சில முடிவிற்கு அறிஞர் வந்துள்ளனர்.

கட்புலன் :—ஒளியைக் கண்டவுடன் தலையின் அடிப்-புறத்தினைப் பின்னுக்குத் தள்ளிக்கொள்ளும் மறிவினையையும் அறிஞர் குறித்து வைத்துள்ளனர். குழவி உடலை ஆட்டிப் புடைத்துக் கொண்டு அழுவது இருட்டில்தான் மிக்கு விளங்கு-கின்றது. ஒளி மிகுதிப்பட்டு வரவர அந்த இயக்கமும் அழுகையும் குறைந்து கொண்டே வருகின்றன. அழுகையை நிறுத்துவதில் நீலநிறமே தலைசிறந்து விளங்குகிறது. அதற்கு அவ்வகையில் அடுத்து விளங்குவது பசுமை நிறமாம். செம்மை நிறத்தின் ஆற்றல் பச்சை நிறத்திற்குப் பிற்பட்டதேயாம். ஒளிப்பொருள்களைக் கண்டதும் எழும் இயக்கங்கள் முழு-வதனையும் கணக்கிட்டு அவற்றில் 'இயைபுபெற்ற இயக்கங்கள் எத்தனை? இயைபு பெறாது தனித்தனி எழும் இயக்கங்கள் எத்தனை'? என ஒப்பிட்டுப் பார்த்தால், நாளேற நாளேற இயைபு பெற்ற இயக்கங்களின் வீதம் ஏறிக் கொண்டே வரக் காண்கின்றோம். எனவே இயக்கங்களின் இயைபு பழக்கத்தின் பயனே என்பது தெளிவாகிறது. குழவி பிறக்கும்போதே நிறங்களை வேறுபிரித்தறியும் என்று கூறுவதற்கு இல்லை. நிறவேறுபாட்டுணர்வும் பழக்கத்தின் பயனே. குழந்தையின் மூன்றாந் திங்களில் நிறத்தையும் ஒளிற்றி (Gray) னையும் வேறு பிரித்தறிய அதனால் முடிகிறது. இரண்டாம் ஆண்டின் முடி-விற்குள் செம்மை, மஞ்சள், பச்சை, நீலம் என்ற நான்கு நிறங்களை வேறு பிரித்தறிகிறது. ஒரு நிற வட்டத்தினிடையே வேறு நிறங்களை ஒன்றன்பின் ஒன்றாகவைத்துச் சுழற்றிவந்தால் எந்த நிறவேற்றுமையைக் குழவி பின்பற்றுகிறது என ஆராயலாம். இவ்வாறு ஆராய்ந்தபோது செம்மையே குழவி-

களின் கண்ணைக் கவர்கின்றதாம். அந்த வகையில் மஞ்சள், நீலம், பச்சை என்பவை படிப்படியாகக் குழவியின் மனத்தைக்-கவரும் ஆற்றல் குறைந்து நின்று விளங்குகின்றனவாம். ஆண் பெண் வேற்றுமையும் இங்கு நுழையக் காண்கின்றோம். ஆணைவிடப் பெண் குழவிகளே நிறங்களை வேறு பிரித்து அறிவதில் சிறந்திருக்கக் காண்கின்றோம்.

சேவிப்புலன் :— செவிப்புலனை ஆராயும்போது எதிர்-பார்க்காத வியப்பொன்று காண்கின்றோம். சூல் நிலையிலேயே ஒலியை உணர்ந்து வந்த குழவி பிறந்ததும் செவிடுபோலத் தோன்றுகிறது. ஒலியினைக் காதால் மட்டும் உணர்கின்றோம் என்பது இல்லை. காடுகளில் பெரிய ஆணியை நிலத்திற் பாய்ச்சி அதனை வாயிற்கடிக்கும்போது காதிற்குக் கேட்காத ஒலியும் கேட்கின்றதாம். ஒலியலைநிலை அசைவு வடிவாக ஆணி-வழியே எலும்புகளிற்பாய்ந்து புலனாகிறது. அதேபோலச் சூலும் செவிவழியாக அன்றி எலும்புகள் வழியாக ஒலியை அறிந்திருக்கலாம். பிறந்த குழவியின் காதில் கோழை நிறையப் படிந்திருக்கவும் காண்கின்றோம். இதனால் செவியின் கூர்மை மழுங்கிக் கிடப்பதும் இயல்பே. உரத்த ஒலிகளை அத்தகைய நிலையிலும் குழவிகள் கேட்கவே செய்கின்றன. பிறந்த பத்து நாட்களுக்குள் செவிப்புல உணர்வு செப்பமடை-கின்றது. கோழை வெளியாவதனாலோ, இயற்கையான வளர்ச்-சியினாலோ, பழக்கத்தினாலோ, இவை மூன்றும் ஒருங்கு நிகழ்வ தனாலோ இந்தத் திருத்தப்பாடு நிகழ்கின்றது எனலாம். குழந்தைக்கு நன்றாகச் செவிப்புலனாகும் ஒலி உரத்தும் இருத்தல்வேண்டும்; திடீர் என எழுதலும் வேண்டும்; மிகச் சிறுபொழுதே ஒலித்தலும் வேண்டும். நீண்ட நேரம் தொடர்ந்து ஒலிக்குமானால் குழந்தையின் இயக்கம் குறைந்து கொண்டே-வருகிறது. குழவியின் கவனத்தை எழுப்புவது தூண்டலின்

உரமன்று. தூண்டுதல் வடிவக்கோலத்தில் எழுகின்ற வேற்றுமையே கவனத்தைத் தட்டி எழுப்புகின்றது எனக் கூறுவது பொருந்தும்.

சுவைப்புலன் :- சுவையை உணரும்பொறி சுவை அரும்புகளாக (taste buds) நாவில் பரந்துகிடக்கின்றன. சுவைப்புலனுக ஏதேனும் நாவழியே தாக்கும்போது எழுகின்ற எதிர்வினை இருவகையாம். உடன்பாட்டு நிலையை விருப்பு எனலாம். எதிர்மறை நிலையை வெறுப்பு எனலாம். குழவியிடத்தே எழுகின்ற விருப்பமான எதிர்வினை விரைந்து உறிஞ்சுதலாக வடிவம் கொள்ளுகிறது. வெறுக்குஞ் சுவையானுல் முகத்தைக்கோணிக்கொண்டு உடலை எல்லாம் முறுக்கி நின்று குழவி அழவே தொடங்குகின்றது. புனிற்றிளங்குழவி சர்க்கரைத் தண்ணீர் முதலியவற்றின் இனிப்பை (Sugar) விரும்புகிறது. உப்பையும், (Salt) நரந்தங்காடி (Citric acid) முதலியவற்றின் புளிப்பையும், கொய்னு (Quinine) முதலியவற்றின் கைப்பையும் வெறுத்து நாவால் குதட்டி அப்புறத்தே தள்ளுகிறது. இங்கும் ஒரு புதுமை. இது நாம் ஊன்றிக் கவனியாததால் எழுகின்ற புதுமையேயாம். கைப்புச் சுவையினை விடப் புளிப்புச்சுவையையே குழவி மிகமிக வெறுத்துத் தள்ளுகிறதாம். பெரியவர்களான பின் இந்தநிலை மாறி விடுகின்றதன்றோ ?

நாற்றப்புலன் :— நாற்றத்தினை அறியும் பொறி மூக்கிலே இருக்கின்றது. உரமான தூண்டல் எழுமானுல் மூக்கிலே உள்ள தோலில் எரிவு எடுக்கிறது. ஆகவே அது ஊற்றுப் புலனுகுமேயன்றி நாற்றப்புலன் அன்றும்.பிறந்த உடன் நாற்றப் புலன் நன்குவளர்ந்து இருப்பதில்லை. நவாசாரத்தைக் குழந்தையின் மூக்கினருகே கொண்டு சென்றுல் அந்த ஆவி பட்டதும்

பிறந்த குழந்தையும் தும்மத் தொடங்குகிறது. ஆனால் இது கொண்டு நாற்றப்புலன் பிறந்ததும் முற்றுநிலை அடைந்துள்ளது என்று கூறுவதற்கு இடமில்லை. இது மூக்கில் எழும் ஊற்றுணர்வாம் எரிவினால் எழுவதேயன்றி நாற்ற உணர்வால் எழுவது அன்றாம்.

ஊற்றுப் புலன்கள் :— தோலிலே சூட்டினை அறியும் பொறியும் உண்டு. குளிரினை அறியும் பொறியும் உண்டு. தொடுதலை அறியும் ஊற்றுப்பொறியும் உண்டு. நோவினை அறியும் பொறியும் உண்டு. குழவி பிறந்ததும் குளிரினை நன்கு உணருகிறது. பிறந்ததும் குழந்தை அழாமல் இருக்குமானால் மருத்துவர் குளிர் நீரை வாரி இறைத்துத் திணறச்செய்து அழை ஊட்டக் காண்கின்றோம். பிறந்த குழந்தையின் முகமும், உள்ளங்காலும், உள்ளங்கையும் தொடுபுலனை உணர்வதில் சிறந்து விளங்குகின்றன. நோவினை அறியும் நொப்புல உணர்வு அவ்வாறு சிறந்து விளங்கக்காணோம். காலிலோ, முகத்திலோ, குண்டு ஊசியை எடுத்து ஒரு முறை குத்தினாலும் புனிற்று-நிலைக் குழவி வாளா கல்லே போலக் கிடக்கின்றது. ஆனால் தொடர்ச்சியாகக் குத்திக்கொண்டே வந்தால் குழவியினிடை எதிருன்றல் எழக்காண்கின்றோம். நொப்புலனை அப்போது அது அறிகின்றதெனத் தெளிவாகிறது. இந்த மாறுதல் எதனாலாகியது ? ஒன்றன்பின் ஒன்றாகக் குத்தியதன் பயனாக எழுந்த பழக்கமா ? அல்லது ஒவ்வொரு குத்துதலாலும் எழும் சிறுபயன்கள் ஒருங்குசேர்ந்து உரம் பெறுவதால் எதிருன்றலை எழுப்பும் ஆற்றலைப் பெறுகின்றனவா ? நாள் ஏற ஏற எதிருன்றலை எழுப்புதற்கு வேண்டியிருக்கும் இத்தகைய தூண்டல்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வரக்-காண்கின்றோம். பிறந்த 40 மணிக்கெல்லாம் முகமானது இத்தகைய புலவேறுபாட்டை உணரக்கூடிய சிறந்த நிலையை

அடைகிறது. காலானது அந்த நிலையை அடைய 75 மணி நேரம் குழவி வாழவேண்டும். புனிற்றிளங் குழவியின் முகத்திலே கையை அழுத்தினால் அது அந்தக் கையைத் தள்ள முயல்கிறது. ஆயினும் அம்முயற்சியில் முகத்தில் அழுத்தும் கையை நேரே பிடிக்க முடியாது குழவி தவறித் தவறிப் பிடிக்கும். நாள் ஏற ஏற இந்தத் தவறுதலின் எண்ணிக்கை குறைந்துகொண்டே வரக் காண்கிறோம். இது பழக்கத்தின் பயனேயாம். அசைவு அல்லது இயக்கத்தினை (Movement) அறியும் பொறி அசைந்து வருகின்ற தசையினுள்ளே பதிந்து கிடக்கின்றது. இந்தப் புல உணர்வு தொடக்கத்தில் சிறந்து விளங்குவதில்லை என்றாலும் விரைவில் புலப்படத்தோன்று-கின்றது. அழும் குழவியை ஆட்டியதும் அமைதியடையக் காண்கிறோம் அன்றோ? அழுங்குழவியை ஓயவைத்து அமைதியான நிலையில் தூங்கவைப்பதற்கு இந்த உண்மையைப் பயன்படுத்திக் கொண்டன்றோ பண்டைக் காலத்திலிருந்து மக்கள் தொட்டிலையும் ஏணையையும் குழவிக்கு என அமைத்துத் தாலப் பருவப் பாடலையும் பாடி வருகின்றனர்.

## IV. மறிவினைகள்

ஊன்றலும் எதிர் ஊன்றலும் :— உலகப் பொருள்கள் நம்மைத் தாக்குகின்ற தாக்கலை எல்லாம் புல நரம்புகள் (sensory nerves) வழியாக நாம் அறிகிறோம். இதற்கு ஏற்றபடி எழும் எதிரூன்றல்கள் எல்லாம் பலவகை இயக்கங்-களாக வெளிப்படுகின்றன. இவ்வாறு இயங்குவன இயக்க நரம்புகளாம். புலநரம்பும் இயக்க நரம்பும் தொடர்புற்றுக் கிடந்தாலன்றி ஒரு புலனுணர்வு எழுந்தபோது அதற்கு ஏற்ற இயக்கம் எழுவது இயலாதாம். பிறக்கும்போதே புலநரம்பு-களும் இயக்கநரம்புகளும் நடுவிடத்தே தொடர்புற்றுக்கிடக்-

கின்றனவாம். இதனலேயே தூண்டுதல் எழுந்ததும் குழவி துலங்குகின்றது. ஊன்றல் எழுந்ததும் எதிர் ஊன்றல் எழு-கின்றது. ஊன்றல் எதிரூன்றலாராய்ச்சியாலேயே உலகமும் நாமுமாக வாழ்கின்ற வாழ்க்கையை ஆராய்தல் கூடும்.

நரப்புக்கிளர்ச்சி பாய்தல்:- நரம்பின் வழியே கிளர்ச்சிகள் பாயப் பாய நரம்பணுக்களின் (Neurcnes) இடையேயுள்ள வெளியிடத்தில் அந்த அணுக்களின் தொடர்பை உண்டாக்கும் பிரிவுகள் வளர்ந்து கொண்டே வருகின்றனவாம். ஏதேனும் ஒரு தூண்டுதல் எழுமானல் நரம்புகள் வழியே முதலில் அந்தக்கிளர்ச்சி எங்கும் பாயத்தொடங்குகிறதாம். அவ்வாறு பாய்ந்த பாய்ச்சல்களில் ஒருசிலவே தக்கதோர் எதிர்வினையை எழுப்பும் இடத்தில்பாயும். வெற்றியின்பம் பிறக்கிறது. ஒரு சில தடைப்பட்டுப் போகும். மறுபடியும் தூண்டல் எழுமானல் தடைப்பட்ட வழிகளாக அன்றி, வெற்றி எழுந்தவழியாக அந்தக்கிளர்ச்சி பாய்தல் இயல்பேயாம். இவ்வாறு வெற்றி இன்பமும் தோல்வியின் ஆருமையும் புலனுதலே எதிர்வினைச் சட்டம் என (Law of Reactions) அறிஞர் பேசுகின்றனர்.

வேறிரண்டு சட்டம் :- "ஊன்றலுக்கேற்ற எதிர் ஊன்றல் எழுவதற்குத் தக்கவாறு நரப்புத்தொடரின் அமைப்பானது பண்ணுற்று நின்ருல் (தயாராக இருந்தால்) ஓர் மகிழ்ச்சி பிறக்-கிறது; இல்லையேல் ஆருமை தோன்றுகிறது." என்பதே அந்தச் சட்டம். ஆறுதல் ஆருமைச்சட்டம் (Law of satisfaction-annoynce) கொண்டு மகிழ்ச்சிதந்த எதிரூன்றல் பழக்க-மாவதனை ஆராய்ச்சிளாளர் விளக்கிவைக்கின்றனர். "திருப்தி அல்லது ஆறுதலை விளக்கும் தொடர்புகள் வலியுறுகின்றன. ஆறுதலைத் தராது ஆருமையை விளைக்கும் தொடர்புகளோ-தேய்ந்து மறைகின்றன" என்பதே அந்தச் சட்டம். பல

நாட்களுக்கு முன்னர் நிகழ்ந்த எதிருன்றலைவிட அண்மையில் நிகழ்ந்ததே வலியுடையதாம். இதனை விளக்கப் பழக்கச்சட்டம் (Law of use) என்பதனை அறிஞர் பயன்படுத்துகின்றனர். "சிறிது நேரத்திற்கு முன் ஓடிய நரப்புத் தொடர்வழிகளே நிலைக்கின்றன. பிற மறைகின்றன." என்பதே அச்சட்டம். இவ்வாறு பழக்கத்தின் பயனாகப் பல இன்றியமையாத தொடர்புகள் நரம்பமைப்பில் எழுகின்றன.

மறிவினையின் இயல்பு :— உள்ளத்தின் இயற்கையை ஆராய்கின்ற அறிஞர்கள் ஒரு சில வினைகளை மறிவினை என வழங்கிவருவதனை முன்னரே கண்டோம். "கல்லூரிக்குப் போவதா? வேலையிற் சேர்வதா?" என்பது போன்ற சிக்கலான கேள்விகளை எண்ணித் துணிந்து செய்யவருகின்றோம். ஆனால் கண்ணெதிரே விளையாட்டுக்காக எவரேனும் ஊதியபோது நாம் கண்ணை இமைப்பதில்லை என நண்பரோடு பணயம் வைத்திருந்தாலும் நம்மையும் அறியாமல் கண் இமைக்-கின்றோம். இத்தகைய வினைகள் எழும்போது. எண்ணித் துணிவது என்பதே இல்லை. எண்ணத்தினையும் மீறியன்றோ இவை எழுகின்றன. எண்ணம் எழும்போது புல நரப்பின் வழியே பாய்ந்த கிளர்ச்சி மூளை முதலிய நடுவிடத்தே தயங்கி நிற்கின்றது. பலவகையாகச் செய்யக்கூடிய நிலையில் 'நல்லது எது' என்ற நாட்டம் எழுகின்றது. 'நல்லது' என்று பழக்-கத்தினாலோ எண்ணிப்பார்த்ததனாலோ கண்டதொருவழியாக இயக்கநரம்புகளிற் கிளர்ச்சி பாய்ந்து இயக்கமாக மாறுகிறது. இத்தகைய எண்ணம் எழாத மறிவினையிலோ புலநரம்புவழியே சென்ற கிளர்ச்சி நேரே இயக்க நரம்பு வழியே பாய்கிறது என்பர். மறிவினை எழுதற்கு வேண்டும் நரம்பமைப்புத் தொடர்கள் இயற்கையாகவே அமைந்து கிடக்கின்றன என்பது ஒருசாரார் கொள்கை. பழக்கத்தின் பயனாக எழு-

கின்றன என்பது மற்ருெருசாரார் கொள்கை. இதனை முன்னரும் கண்டுவந்தோம். மறிவினையாவது விரைந்து எழுவதாம்; வரையறுத்த வழியே எழுவதாம். எண்ணிச் செய்யவாராது எண்ணமின்றி இயற்கையாகவே எழுவதாம். எப்பொழுதும் இயங்கும் நிலையில் பண்ணமைந்து தயாராகக்-கிடப்பதாம். பழக்கத்தால் மாருததாம். இவ்வாறெல்லாம் இயற்கைக் கொள்கையினர் மறிவினையைப்பற்றிக் கூறி மன்ருடுகின்றனர். ஆனல் ஆராய்ந்து பார்க்கும்போது மறிவினையிலும் மாருதநிலை என ஒன்றைக் காணேம். பழக்கத்தால் மறிவினையும் மாறி வரவே காண்கின்றேம். மறிவினைகள் என வழங்கி வருவனவற்றில் சிலவற்றை ஆராய்ந்தால் இந்த உண்மை நன்கு புலனுகும்.

பாவைமறி :— கண்மணியிலுள்ள பாவை (பாப்பா) பேரொளியைக் கண்டால் சுருங்கவும், ஒளியில்லாதபோது விரியவும் காண்கின்றேம். பூனையின்கண் இரவில் மணிபோல விரிந்து ஒளிர்ந்தும் நண்பகலில் கோடுபோலச் சுருங்கி மழுங்கியும் நிற்கவில்லையா? ஆனல் பிறந்த உடன் குழந்தையின் கண்ணில் பேரொளியைப் பாய விட்டாலும் பாவையில் ஒரு மாறுதலும் காணேம். பிறந்த இரண்டு மணிக்குப் பின் மிக விரைந்து இந்த மறிவினை தோன்றுகிறது. மாருத இயற்கை-யமைப்பு என்பதனை எவ்வாறு நம்புவது?

கால்விரல் மறி (Plantor Reflex) :— உள்ளங்காலைத் தடவியதும் கால் விரல்கள் விசிறிபோல விரிகின்றன. காலும் விரலும் சிறிது வளைந்து கொடுக்கின்றன. இந்த மறிவினை புனிற்றிளங்குழவியிடம் தோன்றினும் நீண்டநாள் நிலைத்து நிற்பதில்லை.

பற்றுமறி (Grasping Reflex) :— ஏதேனும் ஒரு பொருளைக் கையருகே கொணர்ந்து தொட்டதும் புனிற்றிளங்-

குழவி முதலில் கையை மூடிக்கொள்ளுகிறது. பின் இறுக்கிக் கொள்கிறது. இதுவும் எல்லாக் குழவிகளினிடையேயும் ஒரு படித்தாக விளங்கக்காணேம். ஒரு குழவியிடத்தேனும் எப்பொழுதும் ஒரு படித்தாக நிகழக்காணேம். 'குழவி தூங்குகிறதா? வேறு தொழில் செய்கிறதா?' என்றறிந்தாலன்றி இந்த மறிவினையின் போக்கினை அறிய முடியாது. இந்த நிலைமாற்றங்களுக்கு ஏற்ப எல்லாம் இந்த மறிவினையிலே மாற்றம் எழக்காண்கிறேம். மூன்றும் திங்களோடு இந்த மறிவினையே மறைந்து போகிறது. புதிய நடத்தைகள் எழுதலின் பயனுகப் பழைய நடத்தை மறைதலும் இயல்பேயாம். மனிதவாழ்விற்கு இதனுல் என்னபயன் உண்டு? குரங்கு போலக் காட்டில் கொம்பைப் பிடித்துக்கொண்டு ஊசலாடிய காலம்போய் வானில் பறக்கும் காலத்திற்குள் புகுகின்ற மனிதனுக்கு இந்த மறிவினை ஏன்?

நடத்தைக் கோலம் :— இவ்வளவும் கூறினமையால் மறிவினையைப் பற்றிய உண்மைகள் நமக்குப் புலனுகி இருக்கும். பூனையின் சூலை உப்புநீரில் இட்டுவைத்து ஆராய்ந்த வரலாற்றினை முன்னரே கூறினேம். அந்தச்சூலின் வளர்ச்சியைத் தொடர்ந்து ஊன்றி நோக்கிவரும்போது, அத்தகைய விலங்குகள், பிறப்பதற்கு முன்னேயே, பயிற்சியும் பழக்கமும் இயற்கையாகவே பெற்றுவரக் காண்கின்றேம். மூச்சுவிடுவது, நடப்பது, உண்பது முதலிய இயற்கை வினைகளோ இந்த விலங்குகளிடையே கருப்பைக்கு உள்ளேயே தொடர்ந்து வளர்ந்து வரும் இயற்கையானதொரு பயிற்சியின் பயனும். முதலில் எந்த வினையும், எந்த இயக்கமும் தனிப்பட்ட நிலையில் தோன்றுவதில்லை. உடல் முழுவதும் பரவி ஒருங்கு இயைபு பெறுத நடத்தை வடிவங்களின் பல வகையான கோலங்களாகவே (Behaviour Pattern) ஒவ்வோர் இயக்கமும் தோன்றுகிறது.

பின்னே பழக்கத்தின் பயனாகத் திருந்தித் திருந்திச் சிறப்பு நிலையை அடைந்து, பிற இயக்கங்களோடு இயைபு உற்றதொரு நடத்தைக் கோலங்களாகச் சிறப்புநிலை உறுகின்றன. எனவே, ஒவ்வொரு நடத்தைக் கோலத்திலும் பயிற்சியின் பயனைக் காணலாம். பழக்கமும் அதிலோர் இன்றியமையாததோர் உறுப்பாம். மறிவினைகளும் இவ்வாறு திருத்தமுற்று எழுவனவேயாம்; மாறுவனவே ஆம்; மறைவனவுமாம். மாறி மாறி வளையக்கூடிய நிலையே குழவி நிலையின் சிறப்பியல்பாம். ஈது இல்லையானால் பழக்கம் எங்கே? கல்வி எங்கே? மனித-வாழ்வும் நாகரிகமும் எங்கே? இவ்வாறு மாறித் திருத்த-முறுகிற இயல்பு மனிதவாழ்வின் அடிப்படையானால், இத்-தகைய சிறப்பியல்பு மறிவினையில் மட்டும் இல்லாது போதற்கு வழியொன்றும் இல்லையாம்.

## V. நடத்தை

### (i) கண்ணின் எதிர்வினைகள்

கண் கண்மணி :— கண்ணிற் சிறந்த உறுப்பில்லை. குழந்தையின் கண்ணே ஓர் அழகு. அசையும் பொருள்களைப் பார்க்கும்போது கண்கள் அவற்றைத் தொடர்ந்து சென்று நோக்குகின்றன. இவ்வாறு தொடர்ந்து இயங்குவது மட்டு-மன்றி ஒருசிலபோது ஒருநிலையிலிருந்து மற்றொருநிலையில் திடீர் என இயங்கி நோக்குவதும் உண்டு. குழவியைச்சுற்றிச் சுழற்றுவோமானால் அப்போது இந்த இருவகை இயக்கங்களும் ஒருங்கு நிகழக்காண்கிறோம். அதன் உடம்பில் சூடுபடும்போது இவ்வாறு நிகழக்காணலாம். ஒரு கண் இயங்குவதுபோல மற்றொரு கண்ணும் இயங்கிவருகிறது. இரண்டு கண்ணும் ஒருமுகப்பட்டு ஒரு பொருளைப் பார்க்கவரும் நிலையோ குழந்தைபிறந்த முதலிரண்டு வாரத்திற்குள்ளேயே பழக்கமாகி

விடுகிறது. பிறந்தவுடன் தூங்கும்போது கண்கள் எந்த நிலையிலும் இருக்கும். இது கண்டு அஞ்சி நடுங்கும் புத்திளந்தாயர் பலர். பெரியோரிடத்தில் காணப்படுவதுபோலக் கண்கள் அகன்று நின்று மேனோக்கி அமைவதும் பழக்கத்தில் வந்து விடுகின்றது.

கண்ணிமை :— கண்ணைத்திறப்பது, எல்லா இயக்கங்களோடும் ஒத்து நிகழக் காண்கிறோம். இமையையோ, நெற்றியையோ, மூக்கையோ, கன்னத்தையோ தொட்டதும் குழவி கண்ணை மூடிக்கொள்ளுகிறது. கடுநாற்றமும், கைப்புச் சுவையும், பேரொளியும், ஒலியும் குழவியின் கண்ணை மூடிவிடுகின்றன. அழும்போதும், தும்மும்போதும் குழவி கண்மூடி நிற்கக் காண்கிறோம்.

பாவை :— கண் எதிரே பேரொளி வந்ததும் பாவை சுருங்குகிறது. உரமாக அழுத்தப்பெற்றபோதும், ஒளி குறையும்போதும் பாவை விரிகிறது. ஒரு கண்ணிலுள்ள பாவை இயங்குவதுபோல, மற்றொரு கண்ணின் பாவையும் இயங்கிவருகிற இயைபையும் புனிற்றிளங் குழவியினிடம் காண்கின்றோம்.

கண்ணீர் :— அழுகையோடன்றோ குழவியின் வாழ்வு தொடங்குகின்றது? அழுகையோடு கண்ணீரும் உடன் வழியக் காண்கின்றோம். மூக்கு எரியும்போது கண்ணீர் ததும்புவதனைக் குழவியிடத்தேயும் நாம் காணலாம்.

### (ii) முகத்தின் எதிர்வினைகள்

முகம் :- குழவியின் எதிர்வினையாக அதன் முகத்திடையே எழும் செயல்களினை இனிக் காணலாம். கீழ்க்கண்டவாறு

மேனாட்டு ஆசிரியர் ஒருவர் குழவியின் மறிவினைகளைச் சுருக்கமாக வரைந்துள்ளார்.

வாயைத் திறத்தல், வாயை மூடுதல்.

வாய்நிலை மாற்றம் :— மேல் உதட்டினையோ கீழ் உதட்டினையோ வாயின் ஓரத்தையோ தொட்டதும் குழவி வாயைத் திறந்து தொட்ட இடத்தை உள்ளுக்கு இழுத்துக்கொள்கிறது.

உறிஞ்சுதல் :— பால் குடிக்கும் நிலை ஈதேயாம். பசி எடுத்ததும் இந்த நிலையைக் காணலாம். இது சுவைபட்டாலும் எழும்; வாயைத்தொட்டாலும் எழும்.

முகங்கோணல், முகஞ்சுண்டல், முகநெறிப்பு.

முகத்தினைத் தூக்கிக்கொள்ளுதல் :— இது கைப்புச்சுவை, உப்புச்சுவை பட்டபோதோ, மூக்கு அல்லது வாய் குத்தப் பெற்றபோதோ எழுவதாம்.

வாயினின்றும் வெளித்தள்ளுதல் :— இது கைப்போ, உப்போ, புளிப்போ, நாவிற்பட்டால் எழும் செயலாம்.

கொட்டாவி விடுதல், வாயில் பொருளை இடுதல் அல்லது நீக்குதல்.

இதழினை இறுகமூடல் :— ஒருவகையாக இதழினைத் தொடும்போது இது எழுவதாம்.

இதழைக்குவித்தல் :- வாயின் ஓரத்தின்மேலோ கீழோ, சிறப்பாகக் குழவி தூங்கும்போது, மெல்லத் தட்டினாலும்,

நாநுனியைத் தொட்டாலும், இனிய பொருளை அதற்குச் சுவைக்கத் தந்தாலும் குழவியினிடம் இந்த இயக்கம் எழுந்து விளங்கக் காணலாம்.

முகம் சுளித்தல் :— கைப்புச்சுவையோ, பேரொளியோ, பேச்சொலியோ எழும்போது எதிர்வினையாகக் கண்களுக்கிடையே நெற்றியில் குறுக்காகப் பள்ளம் விழும்; அதற்கு முன்னும் இவ்வாறு நிகழும்.

நெற்றித்திரைப்பு, வாயோரத்தைக் கீழுக்கு வலித்தல்.

புன்சிரிப்பு :— உண்டபின் இந்த இயக்கம் இயற்கையாக எழும். கிளுகிளுத்தாலும் இதனைக் காணலாம்.

நாவைத்தட்டுதல் :- இது வாயைத் திறக்கும்போது தவறி நிகழ்வது போலும்.

கீழுதட்டை வளைத்தல் :— இது உண்ட நிறைவோடு உடன் எழுவதாம்.

### (iii) குரல் வளையின் எதிர்வினைகள்

அழுகை :— பிறக்கும்போது போலக் கடுமூச்சோடும் எழலாம். நோவு, பசி, திடுக்கீடு, பேரொளி, பேரொலி, வீழ்ச்சி, இரைப்பையின் இடுக்கம், குளிர்ச்சி, சூடு, நோய், பெருந்தடை முதலியவற்றால் இந்த இயக்கம் எழும்.

கூவுதல், தேம்புதல், தும்முதல், இருமல்.

திணறல் :- நாக்கின் அடியினைத் தொட்டாலோ, மூக்கில் பெருங்காயம், நவாச்சாரம் முதலியவை பட்டாலோ இந்த இயக்கம் எழும்.

விழுங்குதல், விக்கல், குமட்டல்.

மூச்சடக்குதல் :— அழும்போது இது நிகழலாம்.

## (iv) தலையின் எதிர்வினைகள்

மேலும் கீழும் தலை இயங்குதல் :- முன்னுக்கோ கீழுக்கோ இயங்குவதனைவிட, மேலுக்கோ பின்னுக்கோ இயங்குவது பலமுறை நிகழக்காண்கிறோம். கடுநாற்றமோ பேரொளியோ எழுந்தாலும், வயிறுமட்டும் தரையில் படும்படி குழவி படுத்தாலும், மார்புமட்டும் தாங்கி நிற்கும்போது சரிந்து விழ வந்தாலும், குழவி தலையைப் பின்னுக்கு வாங்கிக் கொள்ளக் காண்கிறோம்.

பக்கவாட்டமாகத் திருமுதல் :- மூக்கினைச் சிந்த வருவது போன்ற நிலையில் குழவி முகத்தினைத் திருப்பிக் கொள்கிறது. ஒளியோ ஒலியோ வருகிற பக்கமாகவும் குழந்தை தலையைத் திருப்பிக்கொள்ளும். உடலைச் சுழற்றினல் அந்தச் சுழற்சிக்கு எதிர்ப்பக்கமாகத் தலை திரும்பும். குழந்தையின் முதுகு தரையில் படும்படி "மல்லாக்காக" வைத்து அதன் உடலைச் சுழற்றினல் சுழலும் பக்கமாகவே தலை திரும்பும். மார்பினைப் பிடித்துக்கொண்டு இடுப்பினையும் காலையும் மட்டும் சுழற்றினல் எதிர்பக்கமாகவே தலை திரும்பும். பசி எடுக்கும்போதும், அழும்போதும் தலை அந்தப்புறமும் இந்தப்புறமும் திரும்பும்.

தலை நடுக்கம் :- கைப்புச்சுவைக்கு எதிரே எழும் இதனைப் பேராசிரியரும் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலுரையில் குறித்துள்ளார்.

சமநிலை வரும்படி தலையை இயக்குதல் :— உடல் நிலையில் வேறுபாடு எழும்போது சமப்படுத்த இந்த இயக்கம் எழும்.

### (v) கையின் எதிர்வினை

ஆரைமறி (Radial Reflex) :— பெருவிரலின் அடியிலிருந்து நேரே கீழ் இருக்கும் ஆரை எலும்பு என்னும் முன்கை எலும்பின் (Radius) அடிப்பக்கத்தினைத் தட்டுவோமானால், முன்கையும் சிலபோது விரல்களும் நெகிழும். ஈதே ஆரைமறியாம்.

தோள்மறி :— தோள்பட்டையைச் சொறிந்ததும் தோள் இயங்குவதே இந்த மறிவினையாம்.

கைமூடல் :— உள்ளங்கைக்கு உட்பட்ட பொருளைக் குழவி மூடிக்கொள்ளக் காண்கிறோம்.

கை இயக்கம் :— குவிந்தாலோ, கிளுகிளுக்கப்பெற்றாலோ, மூக்கிற்குள் ஏதேனும் பட்டாலோ கையையும், முகத்தையும் குழவி பின்னுக்கு வாங்கிக்கொள்ளும் செயல் நிகழ்கின்றது.

கை அறைதல்:- அழும்போதும், கடுமையான தூண்டல்கள் எழும்போதும் இது நிகழும்.

## (vi) நடு உடலின் எதிர்வினை

முதுகு மறி அல்லது முதுகின்வளைவு :— மூக்கினை முறுக்கினால் குழவி முதுகினை வளைத்துக்கொள்ளக் காண்போம். ஒருபக்கமாகக் கிளுகிளுப்புப் பண்ணினாலும், ஒரு கையை மட்டும் பிடித்துத் தூக்கி வெட்டவெளியிற் பிடித்தாலும் முதுகினை அந்தப் பக்கமாகமட்டும், குழவி, வளைந்து கொடுக்கும்.

முதுகு முறுக்கு :- துடிக்கும்போதும் முதுகு முறுக்கிக் கொள்ளக் காண்போம். தலையைச் சுழற்றும்போது தோளும் இடுப்பும் அவ்வாறு சுழலும் பக்கமாகவே சுற்றும். மார்பினைப் பிடித்துக்கொண்டு தலையைச் சுழற்றினால் இடுப்பின் சுழற்சிக்கு எதிர் பக்கமாகத் தலை சுற்றும்.

வயிற்றுமறி :— ஊசிகொண்டு வயிற்றின் புறத்தோலைக் குத்தினால், வயிற்றின் தசை அனைத்தும் சுருங்கக் காண்போம்.

## (vii) காலின் எதிர்வினைகள்

முழங்கால் தெறிப்பு, முழங்கால் தசைநார்மறி.

கால்வளைவு :— காலிலோ அடியிலோ எரிவு உண்டாக்கினாலும், தலையை மார்பின் பக்கமாகத் தள்ளினாலும் கால் நெகிழ்கிறது. உள்ளங்காற் பக்கமாகக் காலடியும் வளைகிறது.

கால்நீட்டு :— காலடிக்கு எதிரே தள்ளினால் இக்கால் நீட்சி எழுகிறது. அடியும் கணைக்கால் பக்கமாக பின்னுக்கு இயங்குகிறது.

## (viii) காவல் எதிர்வினை

முழங்கால் மறி:-முழங்காலினை உட்பக்கமாகக் கிள்ளினால் அடுத்த பக்கத்து அடி மேலெழுந்து கிள்ளும்கையை அப்புறப்படுத்துகிறது. அவ்வாறே ஒரு காலடியைக் கையாற் பிடித்துக் கொண்டாலும் மற்றோர் காலடி அந்தக் கையினை அப்புறப் படுத்த வருகிறது.

உதைத்தல் :— அழும்போது இது நிகழும்.

அடியிடல் :— புனிற்றிளங் குழவியைத் தரையில் கால் படும் வண்ணம் நேராகப் பிடித்து நின்றால், அது அடியிடுவதனைக் காணலாம்.

அடிவிரல் இயக்கம் :— உள்ளங்காலைத் தொட்டதும் பல வகை இயக்கங்கள் நிகழ்கின்றன.

## (ix) உடலின் பல பகுதிகளும் ஒருங்கியைந்து இயங்குதல்

தூக்கநிலை :- தூங்கும்போது கால் நெகிழ்ந்து மடங்கியும், கை மூடியும், தோளை (upper arm) நேரே நீட்டியும், முன்கையை அதற்குக் குறுக்காவும், தலைக்கு ஒரு போக்காகவும் வைக்கவும் காண்கிறோம். இவ்வாறு பல உறுப்புக்களும் ஒருங்கு இயைந்து இயங்குகின்றன.

தலையும் பின்னிடுப்பும் மேலுக்குத் தூக்குதல் :— 7-ல் இருந்து 15 ஆம் திங்களுக்குள் உள்ள ஒரு குழவி குப்புறக் கிடக்கும்போது வயிற்றின் அடியில் கையைக் கொடுத்து அந்தரமாக மேலே தூக்கினால், குழந்தையின் முதுகு

வளைகிறதனைக் காணலாம். தலையும், பின் இடுப்பும் மேலுக்கு எழும்பி அரை நிமிஷத்திலிருந்து இரண்டு நிமிஷம் வரை அவ்வாறே நிற்கும். தலைகீழே விழுந்தால் பின் இடுப்பும் கீழே விழக் காண்கிறோம். இதனை லாண்டோ (Landau Reflex) மறி என்பர்.

சிலம்பநிலை :— குழந்தையின் தலையைச் சுற்றும்போது சுற்றும் பக்கமாக உள்ளங்கையும் நீள்கிறது. மற்றைய கை மடங்குகிறது. கால்களும் இவ்வாறே இயங்கிவரக் காண்கிறோம். சிலம்பம் (Fencing) விளையாடும்போது நிற்கின்ற நிலைபோல இருத்தலின் இதனைச் சிலம்பநிலை என வழங்குகின்றனர்.

குதிக்கும்நிலை (Springing Position) :— குழந்தையை நேரே பிடித்துக்கொண்டு முன்னுக்காக நேரே சாய்ந்தால் கைகள் முன்னுக்காக நீள்கின்றன. கால்கள் ஒருங்கு சேர்கின்றன. இது குதிக்கும் நிலைபோல் இருத்தல் காண்க.

நீட்டுதல் :— தலை முதுகுபக்கமாக வளைகிறது. கைகள் தலைக்குமேலே தூக்கிக்கொள்கின்றன. கால்களும் நீட்டிக் கொள்கின்றன.

திடுக்கீடு :— தொடக்கத்தில் நிகழும்போது இதனை மோரோமறி (Moro Reflex) என அறிஞர் வழங்குகின்றனர். மூன்று நான்கு மாதங்களில் இது மறைகின்றது. பின்னர்த் திடுக்கிடுதல் நிகழ்கின்றது. இரண்டும் எதிர்பாராது திடீர் எனத் தோன்றுவனவற்றால் எழுகின்றனவேயாம். மோரோமறியில் கைகள் நேரே பக்கவாட்டத்தில் நடுவுடலுக்குக் குறுக்காக நிற்கின்றன. விரல்கள் எல்லாம் விரிந்துகொள்-

கின்றன. நடுவுடம்பு பின்னுக்காக வளைகிறது. தலையும் நீண்டு கிடக்கின்றது. இந்த நீட்சிக்கு அடுத்தாற்போல நெகிழ்ச்சி நிகழ்கின்றது. மெல்லப் பழைய நிலைக்கு வருவதோடும் இந்த இயக்கங்கள் முடிவடைகின்றன. திடுக்கிடும்போது எழும் இயக்கம் நெகிழ்ச்சிநிலை இயக்கமாம். கண் சிமிட்டுதல், தலையை முன்னுக்காக இயக்குதல், அச்சத்தைக் காட்டக்கூடிய நிலையில் முகத்தை அமைத்தல், கையை மேலுக்கும் முன்னுக்குமாக இயக்குதல், முழங்கையை மடக்கிக் கையை மேலுக்குத் தூக்குதல், விரல்களை நெகிழவிடல், நடுவுடலை முன்னுக்காக வளைத்தல், வயிற்றின் சுருக்கம், முழங்காலை மடக்குதல் முதலிய எல்லாம் ஒருங்கியைந்து திடுக்கிடு நிலையில் நிகழக்-காண்கிறோம்.

அலைச்சலும் அழுதலும்.

நகர்தல் :— குழந்தை குப்புறப் படுத்திருக்கும்போது கையும் காலும் உடம்பிற்கு உள்ளே வரத் தலை நிமிர்ந்து இருப்பதனைச் சிலபோது காண்கிறோம். அதன் காலைச் சிறிது நாம் இயக்கினால், கால் பின்னுக்காகப் போகிறது. கைகளும் இயங்கத் தொடங்குகின்றன; கையும் காலும் மாறி மாறி இயங்கலாம்.

நடுக்கம்.

கால்கைநீட்சி :- குழந்தையை நேரே பிடித்துக்கொண்டு சுழற்றினால், காலும் கையும், சுற்றுகின்ற பக்கமாகவே நீண்டு கொள்கின்றன.

கையால் தொங்கும்போது தலைகால் நிலை :- ஒரு குறுக்குக் கம்பியைப் பிடித்துக்கொண்டு தொங்கும் பொழுது, தலை

பின்னுக்காகத் தொங்கும். வயிற்றின் நிலைக்குக் குறுக்காகக் கால்கள் வருகின்றன. தலை முன்பாகத் தொங்குமானால் கால்கள் விரிந்து வருகின்றன.

தும்மலின்போது எழும் இயக்கங்கள் :— காலும் கையும் கடுமையாக இயங்கும்; தொடைகள் வயிற்றுக்காக வளைந்து கொடுக்கும்; முன்கை மடங்கிநிற்கும்; முழங்கை முன்னுக்குத் தள்ளப்பட்டிருக்கும்; பல உறுப்புக்களும் இவ்வாறு தும்மு-கின்ற நிலையில் ஒருங்கு இயைந்து இயங்கிவரக் காண்கிறோம்.

“ ஏனோர் பெருமையன் ஆகினும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந்து அங்குளன்
வானோர் அறியும் அளவல்ல மாதேவன்
தானே அறியும் தவத்தினி னுள்ளே ”

(திருமந்திரம்.)

---

# 5. இளங்குழவி

---

## 1. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

இயற்கையும் செயற்கையும் :— தாயின் இரத்தமே தன்னுடல் முழுதும் ஓடியபோது தாயே உணவு உண்டு வாழ்ந்தாள். அந்த உணவே தாயின் இரத்தமாக மாறிக் குழவி உடலிலும் கொப்பூழ்க் கொடிவழியே பாய்ந்து வந்தது; குழவியும் வாழ்ந்தது. பிறந்ததும் தனியே வாழும் புரட்சி தொடங்குகிறது. இந்த இடர்ப்பாட்டிற்கு இடையே பிறந்த சில

நாள்வரை உடலின் எடை குறைந்துகொண்டே போகிறது. தாயின் பாலும் பிறந்த 3 நாள்வரை திருத்தம் உறுவதில்லை. அதுவரை சுரக்கும் போலிப்பால் வேறு ஒரு சிறந்த தொண்டினைச் செய்கிறது. குழவியின் வயிற்றைக் கழுவித் தூயதாக்க அதுவே உதவுகிறது; குடர் விளக்கம் செய்கிறது எனலாம். வாழ்வுக்கடிப்படை உணவே ஆம். "எதனை உண்பது? எவ்வாறு உண்பது? எப்போது உண்பது? எத்தனை முறை உண்பது?" இதனினும் அரிய ஆராய்ச்சி செய்த விஞ்ஞானப் புலவன் உண்டோ? இயற்கை இத்தனை ஆராய்ச்சியையும் செய்து தாய்ப்பாலைப் படைத்து வேண்டியபோது சுரக்குமாறு அமைத்துள்ள வியப்பே வியப்பு! இந்த இயற்கை அமைப்பினைச் செயற்கை வாழ்க்கையால் சிதைத்துத் தள்ளும் மக்கள் முன்னேற்றம் இதனினும் வியப்பேயாம். ஆனால் இன்றும் தாயும், தாய்ப்பாலும், தாயறிவும், தாயன்பும், செயற்கையுலகின் எதிரே இயற்கையின் இயல்பாய்க் குழவியைச் சூழ்ந்து காத்துவருகின்றன.

பால் குடிக்கும் பழக்கம் :— பால் குடித்தறியாத குழவி பால்குடிக்க அறியவேண்டும். இதற்கெனச் சில இயக்க அமைப்புகள் முன்னரே குழவியினிடம் பலபல கோலங்கள் போலப் பலபல வடிவில் இயைந்து நிலைபெற்றுள்ளன. பால் குடிக்கும் செயலை ஒரு மறிவினை என்பர் சிலர். யாரேனும் குழவியின் உதட்டினைத் தொட்டதும் குழவி உறிஞ்சத் தொடங்குகிறது. ஆனால் பால்குடிப்பதற்கென்றே இயற்கையில் அமைந்த அமைப்பு ஈது எனக் கூறுவதற்கு இல்லை. பழக்கத்தின் பயனாகவே இது இவ்வாறு முடிகிறது. குழவியைக் கீழே வீழ விட்டாலும் உறிஞ்சுதல் தொழில் தொடங்கக் காண்கின்றோம். அதன் தலைமயிரைப் பிடித்து வலித்தாலும் இவ்வாறு இயங்கிநிற்கும். பெருவிரலைக் கிள்ளினாலும் இந்த

மறிவினை எழுகின்றது. பலவகையாலும் எழக்கூடிய இந்த மறிவினை, பழக்கத்தின் பயனாகப் பால் குடிப்பதற்கே உதவி வருகிறது எனலாம். ஈது ஒரு எளிய பழக்கமும் அன்று. நாவின் பலவேறு பகுதிகள் பலவேறு வகையில் அமைந்தாலன்றி உறிஞ்சுதல் கைகூடாது. ஆகவே முதலில் நாவின் இயக்கங்கள் ஒருங்கியைதல் வேண்டும். பிறந்த உடனேயே இந்த ஒற்றுமை புலப்படத் தோன்றுவதில்லை. சிறுகச் சிறுகப் பழகியேவருதல் வேண்டும். மூச்சுவிடுவதும் பாலை விழுங்குவதும் ஒரே குரல்வளை வழியாக நிகழுஞ் செயல்களாம். பாலை விழுங்கும்போது மூச்சினை விழுங்குதலாகாது. இவ்வாறு வேறுவேறு இரண்டு செயல்களும் நிகழப் பழகுதல் வேண்டும். முதலில் இந்தப் பழக்கம் இல்லாமையால் காற்றினை விழுங்கிவிட்டு வயிற்றுநோயால் குழவி வருந்தவும் காண்கின்றோம் அன்றோ? அம்மட்டோ? உதட்டின் இயக்கமும் நாவின் இயக்கமும் மூச்சு விடுவதனோடும், உறிஞ்சுவதனோடும், விழுங்குவதனோடும் ஒருங்கியைந்து நடைபெற வேண்டுமானால், இயற்கையால் அன்றிப் பழக்கத்தினாலன்றோ எழுதல் வேண்டும்? இத்தனைப் பழக்கமும் முதல்வாரத்திலேயே வெற்றியோடு முற்றி விளங்குகிறது எனலாம். கல்வி இவ்வாறு பிறந்தது முதலே தொடங்குகிறது என்பதிலே என்ன ஐயப்பாடு உள்ளது?

கொடிது கொடிது இளமையிற் செல்வம் :- பாலுண்ணப் பழகிய குழந்தை உண்பதே பின்னர்ப் பெற்றோருக்குப் பெருந் தொல்லையாக முடிகிறது எனப் பலர் புலம்புவதனையும் கேட்டுள்ளோம். செல்வக் குழந்தைகள் இந்த வகையில் சீர்கெட்டுக் கிடப்பது நம் மனத்தினை உருக்கும் காட்சியேயாம். "எதனை ஊட்டவேண்டும்? எவ்வளவு ஊட்டவேண்டும்? எத்தனை முறை ஊட்டவேண்டும்?" என்பதனைச் செல்வரின் மருத்துவர்

தெளிவாக எடுத்துக் கூறுகின்றார். ஆனாலும் என்ன பயன்? குதிரையை நீரருகேகொண்டு செல்லலாம்; குடிக்கச் செய்வது எப்படி? அமுதினையே குழவியின் எதிர்கொண்டு வைத்தாலும் உண்டு களிக்கக் காணோம். ஒரு சில அந்த அமுதினைத் தொடாமலே இப்படியும் அப்படியும் பார்த்துக்கொண்டே காலத்தினைக் கழிக்கின்றன. வேறு சில மண்ணில் விளையாடுவது போலச் சோற்றைக் குழைத்து விளையாடுகின்றன. மற்றுஞ்சில வாய்க்குள்ளேயே சோற்றை வைத்துக்கொண்டு உள்ளுக்கு விழுங்காமலே குழப்பிக் குழப்பித் தாடையில் முட்டைகிளப்புகின்றன. அதற்கும் அடுத்தபடி என்ன? வெளியே துப்புவது தான். வெருட்டினால் இவை வயிற்றைப் புரட்டிக்கொண்டு நிற்கின்றன. சோற்றைக் கண்டாலும் அலறிக் கதறும் செல்வக் குழந்தைகளும் பலவேயாம். சோற்றருகே வாராது ஒட்டாரம் செய்து மல்லுக்கட்டும் குழந்தைகளே இந்தக் கூட்டத்தின் தலைவர்கள் எனலாம். இவ்வாறு சோறு என்றாலே மற்போராய்ப் பெருவெறுப்பானால் பசி ஏது? செல்வத்தின் பயனை என் என்பது! உண்பதற்கு என எழுந்த செல்வம் உண்பதனையே தடுத்துநிற்பது என்னே! என்னே! "கொடிது கொடிது இளமையில் வறுமை" என்று பாடிய பாட்டைக் "கொடிது கொடிது இளமையிற் செல்வம்" என்றே இத்தகைய நிலையில் பாட வேண்டும்.

ஆள் மாற்றம் :— பசியே எடுக்காமற்போவது மட்டுமன்று இங்கு நிகழும் கோளாறு. இந்த ஒட்டாரமும் மற்போரும் வாழ்க்கையின் பிற துறைகளிலும் பாய்கின்றன. உடுப்பதிலும் ஒட்டாரம், படுப்பதிலும் போராட்டம், பள்ளிக்குச் செல்வதிலும் பகையாட்டம். இத்தகைய குழவிகள் சுற்றி நிற்பார் மேல் எல்லாம் எரிந்து விழுந்து கெடுகின்றன. உதைத்துக் கொள்வது, ஓடி ஒளிவது, முணுமுணுப்பது, வாளா ஒரு

வாட்டமாய்க் கிடப்பது - இத்தகைய நரக வாழ்வில் இவை இடர்ப்படுகின்றன. பிற்காலத்தே ஹிட்லரைப் போலப் பிறரை அடக்கி ஆண்டு வெருட்டி மருட்டுவோராய் வளர்கின்றவர்கள் இக்குழவிகளே. அமைதியாய், அன்பாய், இன்பமாய் உண்ணப் பழகிய குழவிகளோ பிறர் உரிமையைப் பாராட்டுகின்றன. உயர்ந்தோரின்கீழ் அடங்கி நடக்கின்றன. அவற்றின் உணர்ச்சி-நிலை கொந்தளிப்பின்றி இன்ப அமைதியாய் விளங்குகின்றது. அவற்றின் நிலையிலும் ஒரு மகிழ்ச்சி கூத்தாடுகிறது. அவற்-றினைக் காண்பதிலும் நமக்கு ஒரு பெருமகிழ்ச்சி பொங்கு-கிறது. அவை நிலைமைக்கு ஏற்பத் திருத்தமுற்றுப் பொருத்தம் பெற்று வாழ்கின்றன. இவ்வாறு ஆளின் தன்மையையே மாற்றி அமைக்கும் வழக்கத்தினை எல்லாவகையாலும் சீர்-திருத்தி அமைக்க முயலுவதே மக்களின் கடமையாம். (ஆளின் தன்மை அல்லது ஆளின் சிறப்பியல்பை ஆளுமை-Personality - என வழங்கி வருவோமாக. ஆள் என்பது ஆண் மகனையே உணர்த்திய காலமும் உண்டு. அதிலிருந்து வீரத்தைக் குறிக்கும் "ஆண்மை" என்ற சொல் பிறந்தது. இப்போதோ சிற்றாள் பெரியாள் என ஆணையும் பெண்ணையும் உணர்த்தும் பொதுச் சொல்லாக ஆள் என்பது வழங்கி வருகிறது. ஆள் என்பது உகரம் பெற்று ஆளு எனவும் வழங்கும். அதனோடு தன்மை என்ற பொருள் தரும் "மை" ஈற்றைச் சேர்த்து, ஆளுமை என வழங்குவது மரபு வழு அன்றாம்.)

பழக்கமறிந்து பழகுதல் :- உண்ணும் பழக்கத்தினை எவ்-வாறு சிறப்புறச் செய்வது என அறிஞர்கள் கண்ட முடிவை இங்குக் கூறுவது பெரும்பயன் தரும். 'உண்பது பிறக்கும் போதே இயல்பாக நிகழும் செயலன்று' என்பதனை நாம் மறத்தலாகாது. அது கற்றுப் பழகுவதால் அமைகின்றதொரு

நடத்தைக் கோலமே ஆம். குழவிகளிடத்தே நாம் காணும் உணவுச்சிக்கல்கள் எல்லாம் பழக்கமல்லாப் பழக்கத்தால் எழுவனவே ஆம். நல்ல பழக்கத்திற்குக் குழவிகளைக் கொண்டு வரவேண்டியது அதனை வளர்ப்பாரது பெருங் கடமையாகும். பழக்கம் எழ வேண்டுமானால் மாறாத முறையைப் பின்பற்ற வேண்டும். இன்று ஒருமுறை நாளை ஒருமுறை என்றால் பழக்கம் எழுதற்கே இடமில்லையாம். உண்பதிலும் ஒருமுறை வேண்டும். இத்தனை மணிக்கு ஒருமுறை உண்பது என முடிவு செய்தல் வேண்டும். அந்தப்படி மாறாமல் பின்பற்றி வரப் பழகவேண்டும். குழந்தையை எதிர்த்து நிற்பதால் பெருங்கேடே விளையும்; வெற்றியைக் காண்பதும் அருமையாம். தக்க உணவு யாது எனத் துணிந்து, குழவிக்கு வெறுப்புவாராமல் விருப்பே பொங்கும்வகையில், அமைத்தல்வேண்டும். குழந்தைக்கு எப்போது இயற்கையாகப் பசி வருகிறது என்பதனை ஆராய்ந்து அதற்குத்தக உணவுமணியை வரையறுக்க வேண்டும். 10-மணிக்குப் பசி எடுக்கும் குழந்தைக்கு 9-மணிக்கே உணவினை வற்புறுத்தி ஊட்டி வெறுப்பேற்றுவதால் பயன் என்னை? இந்தச் சிறு நுட்பங்களை அறியாமையாலேயே எல்லாக் கொடுமைகளும் வளர்கின்றன எனலாம்.

உரிமையே இனிக்கும்:— வற்புறுத்தல் என்பதே குழவியின் மனத்திற் படிதலாகாது. தானே முழு உரிமையோடும் உண்பதாகக் குழவிக்குத் தோன்ற வேண்டும். மக்கள் வாழ்க்கை உரிமை வாழ்க்கை. குழவியும் உரிமையையே விரும்புகிறது. புழுவும் தடையை விரும்புவதில்லை. ஆகவே, குழந்தையை ஒரு பொம்மை போல நடத்துதலால் தீமையே விளைகிறது. தனக்குமேல் ஒரு கண்காணி, உண்ணும்போதும், உறங்கும்போதும், எப்போதும் சுற்றி அலைந்து திரிவதனை எந்தக் குழந்தையும் விரும்புவதில்லை. ஆகவே குழந்தையின்

நடத்தையைக் கண்காணிக்க வேண்டுவது இன்றியமையாததே-யானாலும் அவ்வாறு நாம் செய்வது அதற்குத் தெரியவே கூடாது.

தான்வாழ உண்ணுதல் :— தான் உண்ணுவது தாய்க்-காகவே என எண்ணுமாறு, "அம்மாவுக்காக உண்ணு" எனக் கொஞ்சிக் கொஞ்சி ஊட்டுதல் கூடாது. ஒவ்வொருவரும் தனக்காவே உண்கின்ற உண்மை குழவியின் மனத்திற் பதிய வேண்டும். வற்புறுத்திச் சோறூட்டினால் தனக்கெனவே உண்பது என்கின்ற உண்மை குழவியின் மனத்தில் எவ்வாறு பதியும் ? அதிகாரத்தைக் கண்டதும் எதிர்ப்பதே மக்கள் இயல்பு. குழவிகள் மல்லுக்கட்டத் தொடங்குவதும் இதனாலே-யாம். உரிமையோடும் தான் விரும்பியதனைத் தனக்காகவே குழவி உண்பதாகத் தோன்றவேண்டும்.

நடந்து காட்டு:- 'உண்ணும்போது உண்ணும் முறையில் நல்ல பழக்கம் ஏற்படவேண்டும்' என்பது உண்மையே. ஆனால் அதனை வாயால் பலமுறையும் கூறி, வற்புறுத்திக் கூவிக் கதறிக் குழவியை அடித்துப் பிடித்துப் பழக்க முயல்வதில் பயனில்லை. நாம் நன்றாக நடந்து கொண்டால் நம்மைப் பார்த்துக் குழவி-களும் நல்ல முறையில் பழகும். ஒரு நாளில் உலகம் தோன்றி வளர்ந்து வாழவில்லை. எறும்பூரக்கல்லும் தேயும். தீய பழக்கம் எழுதற்கு இடம் இன்றிக் குழவிகளை நடக்கவிட வேண்டும். எதிர்த்தோ கண்காணித்தோ அடக்கியாளவோ நாம் வரு-கின்றோம் என்பது குழவிக்குத் தோன்றாமல் இருக்குமாறு செய்வதே இங்குள்ள தந்திரமும் மந்திரமுமாம்.

பிரம்மானந்தம் :— உண்பது என்றால் வாயில் உணவை இட்டு விழுங்குவதோடு முடிகின்றது எனப் பலரும் கருது-

கின்றனர். உண்ணுதல் என்றால் மூன்று வேறு நிலைகளை அதிலே காணலாம். ஒன்று பசித்து அலைவது. இரண்டாவது அப்பசி நீங்க உணவுகொள்ளுதல். மூன்றாவது அப்பசி தீர்ந்ததும் உண்டாகும் ஒருநிறை உள்ளம், ஒரு மகிழ்ச்சி, ஒரு திருப்தி. இந்த மகிழ்ச்சிக்கு இடங்கொடாது, உண்டதும் வேறொரு வேலை தொடங்குவதாலேயே உண்ணற் சிக்கல்கள் பல தோன்றுகின்றன எனலாம். "அன்னம் பிரம்மம்" என்பது உபநிடதம். அந்தப் பிரம்மாநந்தத்தைத் துய்த்து உணர்ந்து நுகரவேண்டாமா?

சோற்றுப் பேச்சு :— உண்பதில் ஈடுபட்டுத் திளைப்பதனை விட்டு விட்டு, உணவைப்பற்றியும் உணவைச் சமைப்பதனைப் பற்றியும், எந்த உணவு சிறந்தது என்னும் சுவை ஆராய்ச்சியைப் பற்றியும் பெற்றோர் குழந்தைகளுடன் பேசக் காண்கிறோம்! அதன்பயனாகக் குழவி பிற உணவை எண்ணி எதிரில் உள்ள உணவை மறக்கின்றது; வெறுக்கின்றது. உணவைப்பற்றிப் பேசி "நன்றாக இல்லை" என்று கற்பிப்பதால் பயன் என்ன? உணவைப் பற்றிய தன் எண்ணத்தினைத் தன்மனத்திற்குள்ளேயே வைத்திருப்பது நல்ல பழக்கம். இவ்வாறு பேசிப் பழகும் பெற்றோரிடையே எந்தக் குழந்தையின் உள்ளத்திலேனும் இந்தப்பழக்கம் வளர இடமுண்டோ?

உணர்ச்சியா உணவா? :— உண்ணும்போது உள்ளக்கிளர்ச்சிக்கு இடமிருத்தல் ஆகாது. உணர்ச்சி மிக்குப் பொங்கும்போது வயிறு வேலைசெய்வது எங்கே? மற்றொரு கேடும் உண்டு. அவ்வாறு எழும் உள்ளக்கிளர்ச்சியும் உணவு வேட்கையும் ஒருங்கு இயைந்துவிடும். கோபம் எழுந்தபோது உணவினையும் கோபிப்பது இயல்பே. இதுவே பழக்கமானால் குழவியின் நிலைதான் என்ன? ஆகவே வெறுப்பும், சினமும்,

தமக்கோ குழவிக்கோ உண்ணும்போது தோன்ற இடமின்றிப் பழக்கவேண்டும்.

பாராட்டு வேட்டை :— சில குழவிகள் எப்போதும் தம்மைப் பிறர் கவனிக்கவேண்டும் என விரும்புகின்றன. மூலையில் வாளா இருக்க அவை விரும்புவதில்லை. எல்லோர் கண்ணிலும் பட வாழ்வதே அவற்றின் நோக்கம். அத்தகைய குழந்தைகள் உணவினை உண்டு போனால் யார் அவற்றினைக் கவனிப்பார்கள்? வேண்டாம் என்ற குழவிதானே நம் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றது. இதனை அறிந்து பிறர் கவனத்தை வலித்திழுப்பதற்காகச் சோற்றை உண்ண மறுக்கும் குழவிகளும் உண்டு. இத்தகைய குழந்தைகளைக் கவனியாது விடுவதே நல்ல முறையாம்.

## II. இறக்குமதி

வழக்கத்திற்கேற்ற பழக்கம் :- உண்பதுபோல வெளிக்குப் போதலும் இன்றியமையாததொரு செயலாம். ஏற்றுமதிக்கேற்ப இறக்குமதியும் உண்டு. வெளிக்குப் போகாது ஒடுக்கும் பழக்கத்தால் கொடுநோய்கள் வருவதனையும் மருத்துவர் வற்புறுத்துகின்றனர். "தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்" குழந்தையின் இயற்கையை அறிந்து கொள்வோமானால், முதல் இரண்டு ஆண்டுக்குள்ளே மிக எளிதில் அதனைப் பழக்கிவிடலாம். 'இயற்கையாகவே குழவி எப்போது வெளிக்குப்போகிறது' எனக்குறித்துவைத்து அதில் உள்ளதொரு முறையினை அறிந்து கொள்ளுதல் வேண்டும். வெளிக்குப் போவதற்கு முன்னரே குழவி அமைதியின்றி இருக்கக் காண்கிறோம். இத்தகைய சின்னஞ்சிறு குறிகளைத் தாயின் அன்பு எளிதில் அறியும். குறித்த நேரத்தில் விழிப்பாக இருந்து

வெளிக்குப் போகுமிடத்தில் குழவியை எடுத்து எடுத்துப் பிறழாமல் விட்டுவருவோமானல் அந்த முறை மணிக்-கணக்கோடு ஒருங்கியைந்து பழக்கமாய் விடுகிறது. பின்னர்க் குழவி இருந்த இடத்திலேயே வெளிக்குப் போகும் நிலைமை அடியோடு ஒழிகிறது.

சில உளவுகள் :— தாய் அருகே இல்லாதபோது குழவி வெளிக்குப் போக வேண்டுமானல் என்செய்வது ? குழவியோ நடக்க அறியாது; பேசவும் அறியாது. தானுக எண்ணித் தாயை அழைக்க ஏதேனும் குறிப்பிட்டதோர் ஒலியை எழுப்ப நாம் அதனைப் பழக்குதல்வேண்டும். அதற்கென ஏற்பட்ட இடத்தில் வெளிக்குப்போவதே இந்தப் பழக்கத்தின் நோக்கம் என்பதனை மறந்து அந்த நோக்கத்திற்குத் தொடர்பில்லாத பிறவற்றினை வற்புறுத்திக் குழந்தையோடு மல்லுக்கட்ட வருவதில் பயனில்லை. சில ஆண்டுகள் ஆனபின்னும் கூட, இரவில் இந்தப் பழக்கம் படியாமற் போகலாம். படுக்கை நனைவது கண்டு பெற்ருேர் வருந்தலாம். ஆனல் அந்த வருத்தத்தைக் குழந்தை காணலாகாது. எதிர்ப்புநிலை இருப்பதாகத் தோன்றலாகாது. தான் பெருந்தீங்கு விளைத்து விட்டதாகக் குழவியின் உள்ளத்திற் படுதலாகாது. குழவி வெளிக்குப் போகும் கால-முறையை அறிந்துகொண்டால் பெற்ருேர் விழிப்பாக இருந்து அப்போதைக்கு அப்போது தூக்கத்திலும் குழவியை எழுப்பிப் பழக்குவிக்கலாம். குழவி தூங்கும்போது படுக்கை நனைந்த உடன், மின்சாரத்தால் ஒலிக்கும் மணி ஒன்று அமைத்தால், தானுகவே குழவி விழித்துக்கொள்ளும். அவ்வாறு விழித்துக் கொள்ளப் பழகுமானல் வயிற்றில் அதற்கேற்ற குறிதோன்றும் போதே விழித்துக்கொள்ளக் குழவி பழகிவிடுகிறது என அறிஞர் ஆராய்ந்து கண்டுள்ளனர். மற்றென்றையும் நாம் மறத்தலாகாது. வேண்டாம் என்ற கருக்காயும் மிக மிக

இனிக்குமாம். ஆகையால் "இதைச்செய்யாதே அதைச்-செய்யாதே" எனத்தடைகள் எழுப்புவதால் தடுக்கப்பட்ட செயல்களே பழக்கத்திற் படிந்து விடுகின்றன. அந்த வழியை அறவே விட்டொழித்து நாம் வேண்டும் பழக்கத்தை நேர்முக-மாகக் கூடியவகையால் எல்லாம் பழக்க முயலுதல் வேண்டும்.

## III. தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது

பழக்கம் படிதல் :— 'பிறப்பதற்குமுன்னே விழிப்புநிலை உண்டோ? இல்லையோ'? என்பதை இன்னம் ஒருவரும் முடிவாகக் கூறினர் இல்லை. காற்றிடையே ஒளியினிடையே முழுதும் விழித்திருக்கும் நிலையானது பிறந்த பின் எழும் பெரும் புரட்சியேயாம். விழிப்பென்றால் உறக்கமும் உடன் எழுகிறது. குழந்தை உறங்கவும் பழகிக்கொள்கிறது. ஒவ்-வொரு செயலிலும் பலவகை இயக்கங்கள் பலவகை வடிவில் இயைந்து பலவகையான கோலங்களாக அமையும். இவ்-வடிவினைக் "கோலம்" என வழங்கி வருவோமாக. உறங்கும் முறையாம் கோலம் மாறி மாறி வரக் காண்கிறோம். முதல் திங்கள் முழுதும் தன்வாணாளில் முக்காற்பகுதிக்குமேல் குழவி தூங்கியே கழிக்கின்றது. முதல் ஆண்டின் முடிவில் வாணாளில் அரைப்பங்கே உறக்கத்தில் கழிகிறது. 18-ம் ஆண்டிலோ வாணாளில் மூன்றில் ஒரு பங்காக உறக்க வாழ்வு குறைகிறது. தொடர்ந்து தூங்கி வருகிற பொழுதின் அளவும் நீண்டுவரக்-காண்கிறோம். முதல் திங்களில் குழவி 3½ மணி நேரமே தொடர்ந்து தூங்குகிறது. அப்பொழுதெல்லாம் பெருந்தூக்கம் இல்லை. சிறுசிறு தூக்கமே குழவி தூங்குகிறது. முதலாண்டின் முடிவிற்குள் தொடர்ந்து தூங்கும்பொழுது 9½ மணி நேரமாக நீளுகிறது. முன் எல்லாம் ஒரு நாளில் 11 முறை தூங்கிய குழவி ஓர் ஆண்டின் முடிவில் 6 முறையே தூங்க-

வருகிறது. உறங்குவதும் பெரும்பாலும் இரவிலே உறங்குவதாகவே முடிவில் முடிகிறது.

ஊணும் உறக்கமும் :— இந்த உறக்கத்தினிடையே ஒரு சிறந்த முறையும் பழக்கமும் ஏற்படவேண்டுமானல் தடையற்ற தூக்கம் வருதல் வேண்டும். குழந்தையின் தூக்கத்தினைக் கலைப்பன எல்லாம் வயிற்றுக் கோளாறுகளேயாம். வயிற்றின் இயக்கத்திற்குத் தக்கவாறு உறக்கம் வருமாறு பெற்ருேர் வயிற்றின் இயல்பினையும், முறையினையும் அறிந்து பழக வைக்கவேண்டும். இரவு எல்லாம் குழவி அழுகிறதே என்று அடிக்கடி பால்கொடுத்து ஓயவைப்பது என்ருல், அக்குழவி அடுத்தடுத்து மேலும் மேலும் அழுவதேயன்றி அமைதியாக இருப்பது எங்ஙனம் கூடும்? இயற்கையாகவே நாளுக்கு நாற்பதுமுறை தூக்கம் கலைந்து அழும் குழவி முதலாண்டின் முடிவில் இரண்டு முறையே தூக்கம் கலைந்து நிற்கின்றது. இந்த நுட்பத்தை அறிந்து அதனை ஒட்டி உறங்கப் பழக்க வேண்டும். இந்த நுட்பத்தை அறியாமையாலேயே உறக்கச் சிக்கல்கள் எழுகின்றன.

ஓயாமுன் உறக்கமேன் :– 'தாம் உறங்கும்போது குழவி விழித்திருக்கின்றதே' என்று தம் தூக்கம் குலைவதற்குப் புலம்பும் பெற்ருேர் பலர். 'தூங்கவைப்பது எப்படி' என்பதே பல இளந்தாய்மார்களின் கேள்வி. கருப்பையில் தூங்கப் பழகிய குழவிக்குத் தூங்கக் கற்றுக்கொடுக்க வேண்டியதில்லை; விழித்து வைத்திருப்பதற்கே பழக்கம் வேண்டும். வளரும் குழந்தையின் சுற்றுப்புற உலகில் காணும் பொருள்கள் அதன் வளர்ச்சிக்கு ஏற்ப எண்ணிக்கையிலும் இன்னும் வேறு பல வகையிலும் வளர்ந்து கொண்டே வருகின்றன; அவற்றிலே தன் கண்ணையும் கருத்தையும் செலுத்தி அது

விழித்துக்கிடக்கின்றது. இந்த இயற்கைநெறியைத் தடுப்போமானல் பலவித தந்திரங்களைச் செய்யக்கற்றுக்கொண்டு நம்மை ஏமாற்றிவிட்டுத் தன் விருப்பப்படியே குழவி வாழ முயல்கிறது. ஆகவே, நம் முயற்சி அனைத்தும் நம்மை அக்குழவி ஏமாற்றும் வகையை அதற்குக் கற்றுக் கொடுப்பதாகவே முடிகின்றது. 'கண்ணைக்கவரும் பொருள்களிடையே கண்ணை மூடிக்கொள்ள வேண்டும்' என்று கூறிக் குழவியை எதிர்பார்ப்பது என்ன அறியாமை! பாலூட்டி வளர்ப்பது எல்லாம் பாவை போலவும், பலாக்கட்டை போலவும் விழுந்து கிடக்கவோ? பால் அத்தனையும் ஊக்கமாகப் பொங்கும்போது குழவி படுத்து உறங்குவது எங்கே? விழிப்புநிலையில் ஊக்கம் பொங்கி வழிவது கண்டு, தாம் அளித்த பாலின் திருவிளையாடல் எனப் பரிந்து பாராட்டாது முணுமுணுத்து ஓலமிடுவதில் பயன் என்ன? விழித்துநின்று வேண்டிய அளவு கையையும் காலையும் ஆட்டினலன்றோ ஊக்கம் எல்லாம் ஓய்ந்து குழவி தூக்கம் கொள்ளும். ஆதலால் ஆடவேண்டிய வரையிலும் குழவிகளை ஆடவிடவேண்டும். பின்னர்க் கண்ணைக் கவரக்கூடிய பொருள்கள் உள்ள இடத்திலன்றி அமைதியும் ஓய்வும் பெறக்கூடிய இடத்தே குழந்தைகளைத் தூங்கவிடவேண்டும். 'சுற்றப்புறச் சூழலோடு உயிர்ப்பொருளுக்கு, உள்ளதோர் பெருங்காதலே விளையாட்டு' என அறிந்தால் அக்குழவிகளின் ஆரவாரத்திலும் நமக்குக் காதல் பொங்கும்.

## IV. புறநிலைக் காதல்

குழவியின் மனவாழ்வு :— குழவி சுற்றப்புறத்தைக் காதலிக்கின்றது என்றோம். 'சின்னஞ்சிறு பச்சைப்புனிற்றிளங் குழவியும் மனவாழ்வு வாழ்ந்து வருகிறது' என்பது கடவுள் தன்மை சான்றதொரு மறைபொருளாம். அது தன் மன வளர்ச்சியின் போக்கிலேயே அற்புதம் எனத் தக்க பல பல

அதிசயங்களைச் செய்து முடிக்கின்றது. பழக்கமாய் விட்டதனாலேயே இவற்றைப் புதுமையாகக் காணாது புறக்கணித்துக் குருடர்போல இவற்றெதிர் நிற்கின்றோம். அந்தச் சின்னஞ்சிறு மனத்தே உயிர்த்து நிற்கும் உள்ளத்துடிப்புகள், அனைவரும் மருண்டு திடுக்கிடத்தக்க புதுமைகளை எல்லாம் செய்து வருமாறு குழவியைத் தூண்டுகின்றன. முதியோர் அவற்றில் ஓர் அக்கறையும் இன்றிச் சுவையொன்றும் அங்கு உணராது குருடராய்ச் செவிடராய் ஒழிகின்றனர். இவ்வாறு அற்புதங்களைச் செய்து வரும் குழவியின் மருட்கை மிக்க படைப்புநிலைச் செயற்பாட்டினை உணராது ஒழிகின்றனர். இந்தச் செயற்பாடு எத்தகையது? நனவின் அடிநிலை மனத்தினின்றும் (Sub-conscious mind) பொங்கி வருகின்றன பல நுண்ணிய மெய்ப்பாடுகள் (Emotions). இந்த மெய்ப்பாடுகாளின் தொடர்ச்சி நிலையே, குழவிகளிடத்துத் தோன்றும் மேற்கூறிய செயற்பாடு என்று கொள்ளலாம். அந்தத் தொடர்ச்சி நிலை புறநில உலகினைத் தொட்டதும் நனவுநிலை (Consciousness) என்பது உருப்பெற்று மேலோங்கிக் கோபுரமெனச் சமைந்து திகழ்கின்றது. புனிற்றிளங் குழவியின் வாழ்க்கையில் அதன் மனத்தகத்தே எழுகின்ற இந்தக் கூத்து ஓர் அன்புக்கூத்தாம். இதனையே சுற்றுப்புறச்சூழல் மீது பொங்கி எழும் காதல் எனக் கண்டோம். தீச்செயல்கள் என நாம் அங்கே காண்பன எல்லாம் குழவியின் உள்ளத்தில் எழுந்த தேவைகள் தீராமையால் அங்கே பொங்கிய கொந்தளிப்பும், குழப்பமும், நெருக்கடியும் வெளித்தோன்றுகின்ற நிலைகளேயாம். அந்த நிலையில் குழவி தன்னைத்தான் காத்துக்கொண்டு தன் உயிர் நாடுவதனைப்பெற முயல்கின்றது.

•

சுற்றுப் புறத்தில் ஓர் அமைதி :— உடற்கருவினைக் காக்க இயற்கை அன்னை கருப்பையைத் தந்து உதவியதுபோல

உயிர்க்கருவைக் காக்கத் தக்கதொரு புறநிலைச் சூழலை முதியவர்கள் தந்து உதவவேண்டும் எனக்கூறினோம். அவ்வாறு தந்துதவினால் குழவி அப்பொருள்களினிடையே மூழ்கித்திளைக்கிறது. தாயினை அணைத்துக் கட்டிக்கொண்டு குழவி புலனுவதனைக் காண்கின்றோம் அன்றோ? தோள்மீதும், மார்புமீதும், மடிமீதும், விளையாடும் விளையாட்டை எல்லாம் பிள்ளைத் தமிழாகத் தமிழர் பரக்கப் பாடியுள்ளனர். ஒவ்வொரு பொருளையும் தொட்டும், துழாவியும், பற்றியும், ஈர்த்தும், தூக்கியும், சுவைத்தும், கண்டும், ஆட்டியும் நின்று குழவி அததில் ஈடுபடுகின்றதன்றோ? இவ்வாறு தன் உடல்முழுதும், உள்ளம்முழுதும், உயிர் முழுதும்கொண்டு குழவி ஆராய்கின்ற உலகம் நாளுக்கொருமுறை மாறிவந்தால் குழவி நாளுக்கு நாள் திடுக்கிட்டுப்போம் அன்றோ? ஆதலின் குழவி துருவி ஆராய்கின்ற உலகம் பல நாள் மாறுதிருத்தல் வேண்டும். இரண்டு ஆண்டுகள்வரை சுற்றியுள்ள சூழலை அப்படியே மனத்திற் படம்பிடித்துக் கொள்ளக் கூடியதோர் தனிப்பெருஞ்சுரணை குழவியினிடத்தே பொலிந்து விளங்கக் காண்கிறோம். இச்சூழலிடையே சிறிது மாற்றம்காணினும் குழவி பெரும் புரட்சி எழுந்ததாக உணர்ந்து அமைதியின்றிப் புலம்புகிறது. பழைய செவிலி தன் வலது கையை ஒரு குழவியின் கழுத்தின்கீழும் இடதுகையை அதன் காலின்கீழும் வைத்துத் தூக்கும் பழக்கத்திற்கு மாறாக இடதுகையைக் கழுத்தின் கீழும் வலது கையைக் காலின் கீழும் வைத்துப் புதிய செவிலி தூக்கியதனை உணர்ந்த குழவி அழுது புலம்பி நோயுற்றதாம். வழக்கம்போலத் தன்னைத்தன் சிறு கட்டிலில் படுக்கவையாது பெரிய கட்டிலில் வளர்த்தியதினால் மற்றொரு குழவி அழுது புலம்பிச் சவலைபாயத் தொடங்கியது. மருத்துவர்கள் இந்த உண்மையை உணராததால் ஒன்றும் செய்ய மாட்டாமல் திகைக்க மாண்டிசோரி அம்மையார் இந்த

உண்மையை உணர்ந்து சிறியதொரு கட்டிலில் வளர்த்தியதும் அழுகை அடங்கியதாம்; குழவியும் பழையபடி ஆடி விளையாடிக் களித்ததாம்.

சடங்கு :— பின்னர் மூன்றும் ஆண்டில் ஒழுங்குமுறை-யுணர்ச்சி ஓர் அமைதியை அடைகிறது. குழவி, விளையாட்டிலும் பொருள்களை இருந்த இடத்தில் காண்பதிலேயே திளைத்து இன்புற்று வருகிறது. கண்ணும்பூச்சி விளையாட்டிலும் மறைந்த இடத்திலேயே மறுமுறையும் மறுமுறையும் மறைந்து நின்றால்தான் குழவிகளுக்கு வேடிக்கையாகத் தோன்றும். புதிய இடத்தில் மறைந்து நின்றால் மகிழ்ச்சியே எழுவதில்லை; திடுக்கிடே எழுகின்றது. மாண்டிசோரி அம்மையார் குழவி-களோடு விளையாடி இந்த உண்மையை உணர்ந்தனர். சடங்-காளரைப்போலச் செய்ததனையே திரும்பத் திரும்பச்செய்யும் நிலையே குழவிகளுக்கு இனிக்கின்றது. பழையகால மக்களது பாடல்களிலும் இதுபற்றியன்றோ திருப்பித் திருப்பி மடங்கி-வரும் பகுதிகள் மிக்குக் காண்கின்றன. கலையின் குழவி-நிலை இயல்பே இது எனலாம். இத்தகைய அனுபவங்களே புற உலகின் மூலை முடுக்குகளையும், எல்லைப்புறங்களையும், திக்குத் திகந்தங்களையும் அறிவதற்கு வேண்டிய திசையறி கருவியொன்றைக் குழவியின் உள்ளத்தில் அமைத்துத் தருகின்றன. அதன் பயனாகக் குழவி எளிதில் உலகிடையே தடையின்றித் திரிந்து வருகின்றது.

புறமும் அகமும்:- இந்த ஒழுங்குணர்ச்சியிடையே ஒன்றாய் இயைந்து தோன்றும் இருவேறு நிலைகளைக்காணலாம். ஒன்று புறநிலையாம். புறச்சூழலின் பகுதிகளின் தொடர்பாட்டை ஒற்றித்து உணர்வதே இந்தநிலையாம். மற்றொன்று அகநிலையாம். தன் உடலுறுப்புக்களினையும் அவற்றின் இயக்கங்களையும் அவற்றின் நிலையையும் உணர்வதே இந்த நிலையாம். குழவியின்

தெரிவுநிலை, புறநிலைவழியே மெல்லச் சமைந்து வருவ-தொன்றும். புலப்பாட்டு நிலையின் அகமுகச் செயற்பாடு அறிவாராய்ச்சியாம் அச்சாணியைச் சுற்றியே சுழலுகிறது எனலாம். மனத்தே பதியவைத்துக் கொள்ளவேண்டிய-வற்றைக் குழவி மிகமிகத் தெள்ளத் தெளிந்த நிலையில் பதிய வைத்து வருகின்றது. தெளிவுநிலையாலும் விளக்க-நிலையாலுமேயே குழவி ஒன்றின் நின்றும் ஒன்றை வேறு-பிரித்துவரும்படி அதன் "தான்" என்ற தன்மை அதன் மனத்தினை உருப்படுத்துகின்றது.

குழவியின் நுட்ப உணர்வு :— சுற்றுப்புறச் சூழலோடு குழவிகொள்ளும் அன்பினைக் குழவியின் நடத்தை நன்கு விளக்குகின்றது. இரண்டாம் ஆண்டிலேயே, நாம் காணாத சிறுபொருளையும் குழவி கண்டுவருவதனை மாண்டிசோரி அம்மையார் பரக்கப் பேசுகின்றனர். தோட்டத்திலே விளை-யாடிக் கொண்டிருந்த ஒருகுழவி சிறு புழு ஒன்று நெளிவது கண்டு அதிலே ஈடுபட்டுக் களிக்கூத்தாடி மாண்டிசோரி அம்மையாரை அழைத்துப் போய்க் காட்டியதாம். அம்மையார் கண்ணுக்கோ அச்சிறு புழு முதலில் தோன்றவில்லையாம். மற்றொரு குழவி ஒரு படத்தைக் கொண்டுவந்து "கூகூ" என்றதாம். "கூகூ" என்று மோட்டார் வண்டி என வழங்கும் தானோடியை அக்குழவி அழைப்பது வழக்கமாம். காட்டிலுள்ள மரங்களைக் காட்டும் அப்படத்தில் வண்டி ஒன்றும் காணோம். ஆனால் தெருவெனத் தோன்றும் அப்படத்தின் ஒருபகுதியில் அந்த அம்மையார் கண்ணுக்கும் எளிதிற் புலனாகாத ஒரு சிறு புள்ளியை அக்குழவி அம்மையாருக்குக் காட்டிக் "கூகூ" என்றதாம். அந்த நிலையில் அதன் கற்பனை மிகப் பொருத்த-மானதேயாம். அவ்வளவு நுட்பமாக விளங்குகிறது இளங் குழவியின் உணர்வுநிலை.

இளமையின் வளைவு :— குழவிகளிடத்தே விரைந்து திருத்தமுற்று மாறுகின்ற நிலையும் இந்தப் புறநிலைக்காதல் காரணமாக வேண்டியபடி திருந்துநிலையே ஆம் எனலாம். குழவிப்பருவமே பயிற்சிக்குரியபருவம். இளமைதான் வளைந்து கொடுக்கும். அப்பொழுது சுற்றுப்புறச் சூழலிலிருந்தும் பல பல தூண்டல்கள் குழவியைத் தாக்குகின்றன. வேண்டிய-வாறெல்லாம் வளைந்துகொடுக்கும் அந்தப் பருவத்தில் சுற்றுப்-புறத் தாக்கல்களிடையே எத்தனையோ பலவகையாகக் குழவி எதிரிட்டு நிற்கின்றது. ஒருவகையில் எதிரிட்டு நின்றநிலை வேண்டிய பயனைத் தரவில்லையானால் குழவி மிக விரைந்து வேறொரு வகையாக மாறிநின்று வேண்டியதனைப் பெறு-கின்றது. மாறிநின்று திருத்தமுறும் நிலையின் புதை பொருள் ஈதேயாம். ஒவ்வொரு குழவியும் அமெரிக்காவைக் கண்டறிந்த கோலம்பசைப் (Columbus) போலவும், ஆப்பிரிக்காவில் சுற்றித்திரிந்து பலருக்கும் நன்மை செய்வித்த லிவிங்ஸ்டனைப் (David Livingston) போலவும் சுற்றுப்புறச் சூழலையும் சுற்றுப்புற மக்களையும் துருவித்துருவி ஆராய்கின்றது. பலபல விஞ்ஞானப் புதுமைகளைப் பழைய காலத்தே கண்ட ஆர்கி-மிடிஸ் (Archimides) என்பாரைப் போலவும் இக்காலத்தே கண்ட பாரடே (Faraday) முதலியோரைப் போலவும் ஒன்றை ஒன்றுடன் முடிபோட்டுத் தொடர்புபடுத்தி தட்டித்தடுத்துப் பலபல செய்காட்சிகளைச் செய்து உண்மை அறிவதில் பேராவல்கொண்டு திரிகின்றது. நியூடனைப்போல (Newton) "ஆப்பில்பழம் ஏன் விழுகிறது" என எண்ணி எண்ணி அதனை நோக்கியே பசியை மறந்து நிற்கின்றது. குழவிகள் நம்மைக் கேட்கும் கேள்விக்கும் முடிவில்லை. "அங்கே போகாதே! அதனைத் தொடாதே! வளவள எனக்கூவாதே" என்றெல்லாம் கதறிக் குழவிகளின் உள்ள வெள்ளத்தைத் தடுத்துச் சிறைப்-படுத்தித் தேக்கிப் புழுக்க விடுகிறோம். ஈதே குழவி உள்ளத்தின்

கொடுங்கொலையாம். அந்த உள்ளத்தின் ஓட்டத்தினை அவ்வாறு தடுத்திடலாகாது; தேங்க விடுதலுமாகாது; வளைந்து கொடுக்கும் நயமான இளமையின் இயல்பினை எஃகென வெட்டையாக மாற்றி விடுதலுமாகாது. கொள்ளத்தக்கன புதியன ஆயினும் அவற்றைக் கற்றுவரவும், தள்ளத்தக்கன பழையன ஆயினும் அவற்றை மறந்துவரவும், நம்மாலான வரையிலும் உதவிசெய்து வரவேண்டும். அப்பொழுதுதான் மக்கட் பிறப்பின் முழுப்பயனையும் இந்த உலகம் துய்க்க முடியும்.

## V. குழவி ஒரு பாட்டு

முகத்திற்கு முகம் வேறுபடும் :— ஒரு குழவியைப்போல் மற்றொரு குழவி இருப்பதில்லை. ஒருவர் முகம்போல ஒருவர் முகம் இருப்பதில்லை. வளர்ந்து வளர்ந்து வர இந்த வேறு-பாட்டின் பொருள் நன்கு விளங்கிவருகிறது. ஒருவன் கூலி-யாளாகின்றான்; மற்றொருவன் நாட்டின் தலைவனாகின்றான். ஒருவன் திருடனாகின்றான்; வேறொருவன் நாட்டின் பொருள்-நிலைத் தலைவனாகின்றான். ஒருவன் வெறியாளனாகின்றான்; பின்-னொருவன் அறிவாளனாகின்றான். குழவிகளிடையே காணக்-கிடக்கும் வேற்றுமைகளை எல்லாம் புறக்கணித்து விடாமல் அனைத்தையும் பயன் படுத்தும் கல்விமுறையை அமைப்பதே இக்காலச் சிக்கல்களுள் எல்லாம் அருமையான சிக்கலாம். எதிர்காலத்திலேனும் இந்தச் சிக்கல் தீருமோ? யாம் அறியோம். கல்விமுறை ஒரு சிறந்த கலையாக இன்று கருதப் பெறுவதும் இதனாலேயேயாம். குழவிகளிடையே காணக்கிடக்கும் இந்த வேற்றுமைகளுக்காக மனம் இரங்குவார் பலர். எந்திரம் ஒரே வகையான பொருளைக் கோடிக்கணக்கில் வெளியே தள்ளுவது போல ஒரே வகையான கல்வி முறையின் பயனாக, மேல்

வாரியாக ஒன்றுபட்டுத்தோன்றும். மாணவர்களைக் கல்லூரி-களாம் எந்திரங்கள் கோடிக் கணக்கில் வெளியே தள்ளிவரு-கின்றன. இதன்பயனுகவே இத்தனைத் துன்பங்களுக்கும் இடையே உலகம் இடர் உற்று வருகின்றது. ஆனால், இந்த நூற்றாண்டில் ஒரே வகையான போர்முறைக் கல்வியை வற்புறுத்துவோர் இடையேயும் புதிய கொள்கை ஒன்று எழுந்துதோன்றி வலியுற்று வருகிறது. ஒவ்வொரு குழவி-யையும் அதற்குத் தகுந்த சிறப்பு நிலையில் வைத்து வளர்த்தல் வேண்டுமாம். அக்குழவிகளினிடம் காணும் வேற்றுமை-களுக்கு மேலான இடம், இந்த உலக அமைப்பில் எழுதலும் கூடும். குழவி நிலையிலேயே 'இந்த வேறுபாடுகளில் எது உயர்ந்தது? எது தாழ்ந்தது?' என்று எவ்வாறு கூறக்கூடும்? ஆதலின் எதனையும் புறக்கணிப்பதற்கு இடமில்லை. குழவி-யுடன் ஆட வருவாரது நலத்திற்கு ஒருகேடும் வாராதபடி காத்து ஒவ்வொரு குழவியையும் கட்டின்றி உரிமையோடு தானாக வளரக்கூடிய வகையில் வளரவிட வேண்டும்.

கல்விக்கலை :— புதுக்கல்வி முறையாகிற சிறந்தகலை குழவி பிறந்ததும் தொடங்குகிறது. ஒவ்வொரு கலையும் சிறந்த-தொரு நோக்கமே கொண்டு மிளிரக் காண்கின்றோம். இந்தப் புதுக்கல்வி முறையும் ஒவ்வொரு குழவியின் சிறப்பியல்-பினையும் திருத்தமுற்று விளங்குமாறு செய்வதனையே நோக்க-மாகக் கொண்டு திகழ்கின்றது. ஒவ்வொருவரும் ஓர் அழகிய பாட்டேஎனலாம். பாட்டு ஒன்றுபோல் ஒன்று விளங்குவதில்லை. ஒவ்வொரு பாட்டிற்கும் ஒவ்வொரு நோக்கமுண்டு. பல வேறு வகையாகப் பல அடிகளாகப் பாட்டுப் பரந்து ஓடினும் அந்தப் பாட்டின் பல உறுப்புக்களும் ஓர் ஒற்றுமை கொண்டு ஒரே நோக்கத்துடன் செல்கின்றன. அங்ஙனமே ஒவ்வொரு-வருக்கும் ஒரு நோக்கமுண்டு. அதனை நோக்கியே அவர்

வாழ்க்கை ஓடக் காணலாம். அதுவே அவர்தம் தனிவீறு. பல வளமும் பெற்று விளங்கும் மக்கள் வாழ்க்கைக்கு ஒவ்வொருவருடைய தனிவீறும் முழுநிலைமையுற்று வளர்ந்து பல வளமும் பெற்றுச் செழித்துச் சிறந்து நின்று உதவுமாறு செய்வதே கல்வியின் நோக்கமாம். ஓர் அழகிய இசைப் பாட்டில் ஒவ்வொரு சுவரமும் தன்தன் சிறப்பியல்போடு, பாட்டில் முழுநிலைக்குத் தகுந்த இடத்தில் அமைந்து பாட்டிற்கு உயிர் நிலையாக வருவதுபோல மக்கட் கூட்டத்திலும் ஒவ்வொருவரும் தக்க இடத்தில் இருந்து உயிர்நிலையாக விளங்குதல் வேண்டும். மக்கட் கூட்டத்தில் அறிஞனும் உயிர் நிலையாக அமைகின்றான். கொலையாளியைக் கொலை செய்வானும் உயிர்நிலையாக அமைகின்றான். ஒவ்வொருவனும் தன்னால் ஆன சிறந்த தொண்டை நிறைவேற்றுதல் வேண்டும். ஈதே முன்காலத்தில் அறிஞர்கண்ட வர்ணாச்ரம முறையின் அடிப்படையாம். அது சாதிப்பித்தாக மாறியதாலேயே கேடுகள் எழுந்தன.

மக்கட்கூட்டமும் தனிமனிதனும் :— ஒவ்வொருவனும் செய்யும் உதவியின் வடிவத்திற்கு ஏற்ப அவனவன் வாழ்ந்து வரும்போது அந்த வாழ்வின் வழியே அந்த உதவியும் மக்கட் கூட்டத்திடை பாய்ந்துவரும். ஒவ்வொருவனும் பல பேறுகளையும் குடிவழி மரபுமுறையே குடியாட்சி உரிமையாகவே பெற்றோனாவன்; சுற்றுப்புற நிலைகள் அனைத்தும் ஒவ்வொருவனிடத்தும் அவனவனையே நடுநிலையாகக் கொண்டு விளங்குவனவாம். தன்பேறுகள் குடியாட்சியின் உரிமைகளாக விளங்கவும், சுற்றுப் புறச்சூழல்களின் நடுவிடம் ஒரு வகையால் தானேயாகத் திகழவும், ஒவ்வொருவனும் ஒளிர்கின்றான். அவ்வாறு ஒளிர்கின்ற நிலைக்கேற்ப ஒவ்வொருவனும் தன்னை மதித்தொழுகவேண்டும்; அப்பேறுகளை எல்லாம்

உயர்நிலை ஆற்றல் பெற்று ஓங்குமாறு உலகிற்கும் தனக்குமாகப் பயன் படுத்துவதனையே ஒவ்வொருவனும் தன் கடமையாகக் கொள்ளவேண்டும். போசாங்கே (Bosanquet) என்ற பேராசிரியர் இவ்வாறு கூறுகின்றார். இந்தக் கொள்கைப்படி ஒரு மக்கட் கூட்டத்தின் உயர்வு தனிமனிதனது வீறுகொண்டே விளங்கிவருகிறது என்பதாயிற்று. மக்கட் கூட்டத்தின் சிறப்பு, மேற் கூறியவாறு ஒருவனிடத்தே அவதாரமாகித் தோன்றுத-போது அவனுடைய தனிநிலை வீறும் விளக்கமின்றி மங்கு-கிறதாம். மக்கட் கூட்டமும் தனிமனிதனும் இசையும், பாட்டும், அதன் தனிநிலைச் சுவரமும்போல ஒன்றுலொன்று பெருமையுற்று இயைந்து வாழ்வதே வாழ்வாம். ஒவ்வொரு-வனுடைய தனிநிலையும் பாட்டே போலப் பலவகை இயக்கத்-தினிடையே தோன்றும் ஒற்றுமைக் காட்சியாக விளங்கு-கிறது. பாட்டும் ஒரு படைப்பேயாம். அங்கும் புறத்திருந்து வற்புறுத்தும் நிலை இல்லை. பாட்டு தனக்குள் தானே உரிமைபெற்று உலவுகிறது. அங்ஙனமே வற்புறுத்துவார் இன்றித் தனக்குள் தானே உரிமைபெற்று இயங்குவதே சிறந்த வாழ்வாம். பாவிலே இலக்கணவிதி முதலிய கட்டுப்-பாடுகள் விளங்கினாலும் அவை பாவிற்குப் புறமானவை அல்ல; பாவின் நடைக்கும் தனிநிலைக்கும் அடிப்படையாக அமைவன ஆம்; அகநிலை ஒழுங்கு முறையாம். அங்ஙனமே ஒவ்வொருவரது வாழ்விலும் விளங்கும் இயற்கையின் கட்டுப்-பாடும், ஒழுங்குமுறை முதலியனவும் அத்தகைய சிறந்த-வாழ்வின் அடிப்படையாக விளங்குகின்றன.

வேற்றுமையில் ஓர் ஒற்றுமை:- இவ்வாறு இந்த வேற்றுமை-களிடையே ஓர் ஒற்றுமையைக் காண்கின்றோம். உயிரணுவி-லிருந்து மனிதன் வரையிலும் வளர்ந்து விளங்கும் உயிர்ப் பொருள் ஒவ்வொன்றும் இந்த உண்மையை விளக்கிவைக்-

கின்றது. முற்றிநிரம்பி நிற்கின்ற நிலையில் வேற்றுமை எல்லாம் செழுமையின் வளப்பமாகத் தோன்றுவனவே ஆம். உயிர்ப் பொருள் தன்நிலையை உலகெதிரே நிலைநிறுத்தி வரும்போது இருவேறு இயக்கங்கள் எழுகின்றன. ஒன்று தன்னைக்காத்து வரும் இயக்கம். மற்றொன்று புதிதாகப் படைத்து வரும் இயக்கம். இவை இரண்டும் தனித்தனி விளங்குவன அல்ல. ஆனால் வளர்ச்சியின் இடையே இவை இயைந்து ஒருங்கு இயங்கும் போதும் இவற்றின் தனிவீறு மாறாது வருதலைக் காணலாம். இந்த இயக்கங்கள் பல நிலைகளில் எழும்போது இவற்றில் ஒன்றன் தனிநிலைமை விளங்கி முற்றி மற்றொன்றின் தனிநிலை இயக்கத்தினிடையே ஒற்றித்துப்போய் மறையக் காண்கின்றோம். தாயினோடு ஒற்றித்து நின்ற சூல் குழவியாகத் தனிநிலை பெற்று வேறு படுகிறது. ஒரு வகை வளர்ச்சியின் பயனாக நனவற்ற உயிரணு நனவுள்ள உயிர்ப்பொருளாக மாறி முயற்சிநிலையுடன் விளங்கிவரக் காண்கிறோம். மற்றொரு வளர்ச்சியின் பயனாக உயிரின் இயக்கங்கள் பலபல வகையாகக் கலந்து உயிர்ப்பொருளமைப்பாகச்சிறந்து விளங்கக் காண்கிறோம். இந்த இருவேறு வளர்ச்சியின் பயனாக உயிர்ப்பொருள் உலகோடு பல வகையாகத் தொடர்புற்று வளர்ந்தாலும், தன் தனிநிலைமை இழவாது வருவதோடு, மேலும் மேலும் சிறந்த மதிப்புடைய தன் செயற்பாடுகளிடையே தன் சிறப்பியல்பை வெளிப்படுத்தி வருவதனையும் காண்கின்றோம். பாவலன் உள்ளத்தே கற்பனைத்திறம் என்கிறஊற்றில் கசிந்தூறுகின்றது உட்பாடு. இது உள்ளத்தே தோன்றுவது. இதுவே மொழி வடிவான பாட்டாகத் தோன்றுவதே இதன் வெளிப்பாட்டு நிலையாம்; அப்போது அந்த உட்பாடு புலப்பட்டுச் சிறந்து விளங்கும்; அதுபோல, உயிர்ப்பொருளும், பலவேறு சிக்கலுற்றுப் பரந்து வளர்ந்து உலகோடு பேரியைபு பெற்று விளங்கி வருகின்ற உள்ளமைதியாய் விளங்கும்; அதன் வெளிப்பாட்டு

நிலையே செயற்பாடுகளாம்; இவற்றிடையேதான் உள்ளமைதியாய் முன் நின்றது பின் சிறந்து தோன்றுகின்றது.

பதிவு செய்தல் :—நனவிலி என்கிற மனநிலையை ஆராய்கின்ற ஆராய்ச்சியாளர்கள் விளக்கி வைப்பது போல, இப்போதுள்ள நம்மனம் முன்னைய மனநிலையோடு பெரிதும் தொடர்ப்பாடு உடையதாம். வாழ்க்கையில் வாழ்ந்து வரும்போது புறநிலையும் அகநிலையும் இமைதோறும் மனத்தகத்தே தொடர்ந்து பதிந்துகொண்டே வருகின்றன. அனுபவத்தால் கற்றுக்கொள்வதென்பது இதனாலேயே எழுகின்றது. ஈதே நினைவில் வைத்துக்கொள்வதாக முற்றுகின்றது. உயிரணுவிலிருந்து மனிதன் வரையிலும் இது முற்றிச் சிறந்துவரக் காண்கின்றோம்.

வாழ்வின் சந்தம் :- மாறிமாறி உறங்குகின்றோம்; விழித்திருக்கின்றோம்; பசிக்கின்றது; உண்கின்றோம். உறக்கம், வயிற்றின் இயக்கம் முதலிய உடற்கூற்றியக்கங்களில் எடுத்தலும் படுத்தலுமாக மாறி மாறி வருகின்றதொரு சந்த அமைப்பினைக் காண்கிறோம். உடலும் ஒரு பாட்டாகின்றது. இசையையோ பாட்டையோ அறிந்த நிலையில், இசையின் முதல் சுருதியையோ பாட்டின் முதலடியையோ கேட்டவுடன் நம் மனத்தில் அந்த இசையோ பாட்டோ முழுதும் விளங்கத்தோன்றி வெளிப்படுவதனைக் காண்கின்றோம். அங்ஙனமே உயிரின் வளர்ச்சியும் ஒரு பாட்டாம்; ஓர் இன்னிசையாம். உயிரணு இரண்டாகப் பிரியும் இசைப் பாட்டானது தொடங்கியதுமே அப்பாட்டின் பிற்பகுதிகளாம் உயிர்வளர்ச்சிகள் அனைத்தும், குடிவழியாகத் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்துவரும் ஒரு சிறந்த கலவையினுள்ளே, இயங்கிவரத் தொடங்குகின்றன.

ஒற்றுமையில் வேற்றுமை :— மேற்கூறிய இருவகை வளர்ச்சிகளையும் இருவகை இயக்கங்களையும் பதிவுநிலை (Mneme), உயிர் ஊக்கநிலை (Horme) என்ற இரண்டாக வழங்கலாம் என்கின்றார் நன் (Sir P. C. Nunn) என்ற ஆசிரியர். ஒன்று காக்கும் இயக்க நிலைக்கு வித்து; மற்றொன்று படைக்கும் இயக்க நிலைக்கு வித்து. ஒவ்வொரு செயலினும் இவை தோன்றுகின்றன. வாழ்க்கையின் வரலாற்றில் இவை மாறி, முற்றி, முதிர்ந்து, சிறப்பு நிலையுற்று அகன்றகன்று வருகிற பலபல நிலைகளின் ஒருங்கு இயையும் தொடர்பாய்க் கலவையாய் ஒற்றுமை பெற்று ஒளிர வருகின்றன. எண்ணத்தின் நான்கு வேறு நிலைகளை வாலஸ் (Graham Wallace) என்ற பெரியார் விளக்குகின்றார். ஒன்று எண்ணுதற்குத் தக்க நிலையில் நிற்றல். அதுவே பண்ணுறு நிலையாம் (Preparation). இரண்டாவது அந்த எண்ணம் கருவுற்று வளரும் நிலையாம் (Incubation); இது வெளிக்குத் தோன்றாநிலை. உள்ளுக்குள்ளேயே எண்ணம் முற்றிப் பழுக்கின்றது. மூன்றாவது விளக்கமுற்றுத்தோன்றும் நிலையாம்(Illumination); இங்கே விளக்கம் உண்டாவது போலத் தோன்றுகிறது. நான்காவது அதனைச் சரிபார்க்கும் நிலையாம் (Verification). இவ்வாறு நான்கு வேறுநிலையாக எண்ணம் தொடர்ந்து விளங்குவதில், காக்கும் இயல்பினால் முன்பதிந்து கிடந்தவை, படைக்கும் இயல்பினால் புத்தம் புது நிலை பெற்று வெளியே தோன்றுவதனைக் காண்கின்றோம் அன்றோ? குழவியின் செயலிலிருந்து அறிஞர் செயல்வரை அனைத்திலும் இந்த இரு வேறு இயல்பினையும் காணலாம். இதனாலேயே ஒற்றுமையிடை வேற்றுமையும் விளங்கிவரக்காண்கின்றோம். குடிவழிவரும் இயல்புகளிடையே தனிமகன் வீறு பெற்றுத் தோன்றுவது இதனாலேயாம்.

ஒற்றுமைக்கும் வேற்றுமைக்கும் உள்ள ஒற்றுமை :- இந்த வேற்றுமைக்கு அடிப்படை ஒற்றுமையே ஆம். ஒற்றுமையை

வளர்ப்பதும் இன்றியமையாததாம். குழவியின் சுற்றுப் புறச் சூழலிடையே பல நாள்வரை ஓர் ஒற்றுமை விளங்கவேண்டும் எனக்கண்டோம். உலக வாழ்க்கையிலேயே, வழக்கம், சடங்கு முதலியவற்றிற்கு ஒருதனி இடம் உண்டு. வழக்கம், உடை, நடை முதலியன பழமை அழியாது வாழ்ந்து வருவதனைச் சுட்டுகின்றன எனலாம். பழகியதனைத் திருப்பித் திருப்பிச் செய்வதில் ஓர் இன்பம் பிறக்கின்றது; உயிர்ப் பொருளுக்கு ஓர் உறுதிப்பாடு தோன்றுகிறது. அந்த உறுதிப்பாட்டில் நின்றுமே புதுமைப் படைப்பிலே தாவி ஒருவன்வேற்றுமையை வளர்த்தல் கூடும். சந்தம் கூத்து முதலியவற்றின் அடிப்படை, திரும்பித் திரும்பி நிகழ்கிற மடக்கு நிலையேயாம். சந்த இன்பமும், கூத்து இன்பமும் உயிரின் ஆழ்ந்த நிலைகளாம். அந்த ஆழ்ந்த நிலையில் தோன்றும் அமைதியின் இடையேதான் அதனை உயிர் நீந்திக்கடக்கத் தொடங்குகிறது. இயற்கையின் சந்தமாகிய பகலிரவின் மாற்றம், அறுபொழுதின் போக்கு முதலியவற்றோடு வாழ்வின் சந்தமும் ஒருங்கியைந்து இசை-யாய்ச் சிறந்து விளங்கக் காண்கிறோம். ஓடும் எந்திரம் ஏதேனும் ஒரு தடையால் நின்றாலும் சுழல் உருளை (Fly wheel) சுற்றிக் கொண்டே இருந்து எந்திரத்தை இயக்குவது போல, வாழ்க்-கையில் தடை எழும்போதும், நாம் தயங்கும் போதும் பழக்க வழக்கத்தால் சில செயல்களைச் செய்துகொண்டே போகக் கூடுமென நன் என்ற பேராசிரியர் கூறுகின்றார். வழக்கங்கள், சடங்குகள் முதலியன இவ்வாறு உயர்ந்த குறிக்கோளின் சிறந்த அடையாளங்களாக நம் மனத்திற் பதிந்து போகின்றன. ஆகையால் பொருளற்றன எனத்தோன்றும் இவற்றிற்கும் ஆழ்ந்தபொருள் உண்டென்பது தெளிவாகிறது. இவை உணர்ச்சியை எழுப்பி வளர்த்து மக்கட் கூட்டத்திடையே ஒற்றுமையை நிலை நாட்டுகின்றன. இவ்வாறு காண்பதால் குழவியின் சிறப்பு நிலையைச் சிறப்பு நிலையிலேயே வளர்த்தல்

வேண்டும் என்பதற்கும், பொது நிலையையும் பாராட்டுதல் வேண்டும் என்பதற்கும் முரண்பாடு இல்லாமை நன்கு விளங்கும்.

---

## VI. குழவியே நாகரித்தின் அரும்பு

திக்கற்றநிலை :— உயிரின் உண்மை இயல்புகள் குழவி நிலையிலேயே அரும்புவிடுகின்றன. பிற உயிர் வகைகளின் குழவிகளோடு மக்கட்குழவிகளை ஒப்பு நோக்கினுல் மக்கட் குழவிகள், தாமே வாழக் கூடாத நிலையில் வருந்தி அலையக் காண்கிறேம். குழவிவாழ்வது ஒருபுறம் இருக்க; நிற்கத்தான் முடியுமோ?'எடுப்பார்கைப்பிள்ளை' என்ற பழமொழியும் உண்டு. முட்டையினின்றும் வெளிவந்த குஞ்சோ கால்களை ஊன்ற வைத்துநின்று நெல்லைக் கொறிக்கத் தொடங்குகிறது. மக்கட் குழவியோ மூச்சுவிடவும் அறியாமல் கதறி அழுகின்றது. கத்தி அழுவதாலன்றோ குழவி முதல் முதல் மூச்சுவிட முடி-கின்றது. மக்கள் வாழ்வே அங்ஙனம் அழுகையிலேயே தொடங்குகின்றது. ஒரு சில நாட்களில் பிற உயிர்வகைகள் பயின்று தேர்வனவற்றை மாதக்கணக்கில் மக்கட்குழவி கற்க-வேண்டி இருக்கிறது. நடப்பதற்கு முயலுவதும் ஓர் ஆண்டு ஆன பிறகேயாம். பேசத் தொடங்குவது இரண்டாம் ஆண்டி-லாம். தன்கையே தனக்குதவி என்பது மக்களைப் பற்றிய உண்மை அன்ரும். கூட்டுறவின் பெருமையே இவர்களிடம் பேசப் பெறுகின்றது.

ஓரத்திற் பிறந்த வீரம்:- இயற்கை அன்னை மக்கட் குழவி-களிடத்தில் மட்டும் இத்தகைய ஓரவஞ்சனையைக் காட்டுவா-னேன்? எல்லாம் நல்லதற்கேயாம். பிறவுயிர்கள் செய்யக்கூடிய

வேலைகள் அனைத்தும் சில மாதங்களில் சிறப்புநிலை அடைவ-தால் அவற்றின் திறமை அனைத்தும் அவ்வளவோடு முடி-வடைகிறது. பிறந்த இடத்திலேயே வாழத்தான் அவை அறியும். புதியநிலைகள் ஏற்படின் இவற்றிற்கு ஏற்பப் பொருத்த முற்று வாழ அவை அறியாமல் மாண்டு போகவே காண்-கின்றோம். மக்கட்குழவியோ உலகிடை வளர்ந்து வியத்தகு செயல்களைச் செய்துவருகிறது. அண்டத்தை நோக்கக் கொசு-கெனச் சிறுத்துள்ள மனிதன், தன் உலகிலுள்ள நாடுகளைத் துருவித் துருவி ஆராய்ந்தும் முன்பின் அறியாத விலங்குக-ளோடும் பல உயிர்ப்பொருள்களோடும் வாழ அறிந்தும், காற்றிற் பறந்தும், மீனினும் சிறக்க நீரிடை வாழ்ந்தும் வருவதேயன்றி, அப்பாலுக்கு அப்பாலான வான மீன்களையும் எண்ணி அண்டத்தையே எடையிட்டும் விளையாடி வருகின்றான். இத்தனைத் திறமைக்கும் அடிப்படையான செயற் பழக்கங்கள் பலநூறு வகையில் மக்கட்க் குழவி நிலையிலேயே எழுகின்றன. குருவிக் குஞ்சின் எதிரே சிறு பொருள் ஒன்று விழுந்து-கிடந்தால் அதனைக் குத்திக் கொறிக்கவே அது அறியும். மக்கட் குழவியின் எதிரில் ஒரு பொருள் வருமானால் குழவி இப்படித்தான் நடக்குமென உறுதியாகக் கூறமுடியுமோ? தொடும், புரட்டும், உருட்டும், தடவும், பற்றும், பறிக்கும், அழுத்தும், ஆட்டும், தட்டும், தகைக்கும், வாயில் வைத்துச் சுவைக்கும்; மோதி இடிக்கும்; வீசி அடிக்கும்; பல்லில் கடிக்கும். இன்னும் எத்தனையோ பல வகையாக எல்லாம் செய்யும். பலவேறு வகையாகச் செய்யப் பழகுவதாலேயே பலவேறு வகையாகப் பிழைக்கவும் இடம் உண்டாகிறது. குழவிப்பருவம் மக்களிடையே நீண்டு வருவதால் ஏற்படுகின்ற பெரும்பயன் ஈதேயாம். இதனால் அந்தக் குழவிப் பருவத்-தினைச் செவ்விய வழியிற் பயன் படுத்தவேண்டிய கடமை நன்கு புலனாகும்.

"வடிக்கொள் அஞ்சனம் எழுதுசெம் மலர்க்கண்
மருவி மேலினிது ஒன்றினை நோக்கி
முடக்கிச் சேவடி மலர்ச்சிறு கருந்தாள்
பொலியும் நீர்முகில் குழவியே போல
அடக்கி ஆரச் செஞ்சிறுவிரல் அனைத்தும்
அங்கையோடு அணைந்து ஆனையிற் கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றிலேன். அந்தோ!
கேசவா! கெடுவேன் கெடுவேனே"

பெருமாள் திருமொழி.

---

# 6. வளருங் கோயில்

---

## I. வளர்ச்சி

மூளையின் சுரப்பு :— உடலுக்கும் உள்ளத்திற்கும் நெருங்கியதோர் இயைபு உண்டு. உடலுக்கும் வேறாக உள்ளம் என ஒன்று இல்லை என்பாரும் உள்ளனர். கல்லீரலிலிருந்து பித்தம் சுரக்கிறது; அதுபோல மூளையினின்றும் அறிவு சுரக்கின்றது என்பது இத்தகையார் கொள்கை. "சுண்ணும்பும் பாக்கும் வெற்றிலையும் சேர்ந்ததும் செம்மை நிறம் பிறப்பது போல, நிலம் நீர், தீ, வளி என்ற பூதங்களின் கூட்டரவில் அறிவு பிறக்கின்றது." (சிவஞானபோதம் பாடியம்) என்பது பழைய உலோகாயதர் கொள்கை. "வெளியே உள்ளார் காதிற் படாதபடி தன் உள்ளுக்குள்ளேயே ஒருவன் பேசிக்கொள்கின்ற செயலே எண்ணம் எனப்பெறும்" என்பர் (Watson) வாட்சன் என்ற அமெரிக்க அறிஞர். ஈது எப்படியாயினும்,

உடலம் கெட உள்ளமும் கெட்டுவரக் கண்கூடாகக் காண்கிறோம். உடலம் முற்றி வளர்ந்த நிலைமையில்தான், முற்றி வளர்ந்த உள்ளத்தின் செயலும் புலப்படத் தோன்றுகின்றது. அபினி முதலிய மருந்துகள் உடலைக் குலைப்பதுபோல உள்ளத்தையும் குலைக்கின்றன. மூளை கெடுமானால் உள்ளமும் கெடுகின்றது. குழந்தையின் உடலோடு குழந்தையின் உள்ளமும் வளர்ந்து வருதலின் உடல் வளர்ச்சியை ஆராய்வது இன்றியமையாததாகிறது.

வளர்ச்சியின் காரணம் :— குழவி முழுநிலையை அடைய வேண்டுமானால் மூன்று வேறு காரணங்கள் இயங்கி வரக் காண்கின்றோம். இந்தக் காரணங்களில் முதலாவதாக நிற்பது தலைமுறை இயல்பாம் (Heredity). மீன்சினை மீனாவதும், மக்கட்கரு மக்களாக வளருவதும் இந்தக்குடிவழி இயல்பினாலேயேயாம். இந்தக் காரணந்தான் முதலில் இயங்கத் தொடங்குகிறது. உயிரணுக்கள் பொதுநிலைமாறிச் சிறப்புநிலையை அடைவதற்குள் தலைமுறை இயல்பிலும் சில மாற்றங்களை எழுப்பக்கூடும் எனக் கண்டோம். இரட்டைக் கண் ஒற்றைக் கண்ணாகவும் மாறவில்லையா? வளர்ச்சி என்பதே இரண்டாம் காரணமாம். சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் உள்ள வேற்றுமை இதனாலேயே எழுவதாம். இந்தவேற்றுமையினை அடுத்துக் காண்போம். மூன்றாவது காரணம் கற்றுக் கொள்ளும் பயிற்சி நிலையாம். இந்த மூன்று காரணங்களும் ஒன்றன்பின் ஒன்றாக இயங்கி வருகின்றன. இவையே அன்றி ஒவ்வொரு குழவிக்கும் தனித்தனிச் சிறப்பு நிலைகளும் உள்ளன. சுற்றுப்புறச் சூழலும் விளங்குகிறது. பொழுதுநிலை, சூடுநிலை, உடற்பயிற்சி, ஊட்டம், நோயின்மை முதலியனவும் இவற்றுள் அடங்கும். இதுவரையும் கூறிவந்தமையிலிருந்து மேற்கூறிய மூன்று காரணங்களும் ஒருங்கு இயைவது

நன்கு புலனுகிறது. வளர்ச்சி இல்லையானுல் உயிரணு சூலாக வளருவது எங்ஙனம்? கருப்பையிலேயே பயிற்சியும் தொடங்கக் கண்டோம்; குடிவழிநிலையும் விளங்கக் கண்டோம். இவை எல்லாம் பொதுநிலையாம். சிறப்பு நிலையில் இயங்குவதனையே இங்கு ஆராய்கின்றேம். தலைமுறை இயல்பினை முன்னர்க் கண்டோம். பயிற்சியால் நிகழ்வதனைப் பின்னர்க் காண்போம். இதுபோது வளர்ச்சியை ஆராய்வோமாக.

வளர்ச்சியும் பயிற்சியும் :— வளர்ச்சியாவது உயிர்ப்பொருளின் அமைப்பைப் பற்றிய நியதிவழியே, உடலின் உள்ளே உள்ளதோர் ஆற்றல் இயங்கி வருவதேயாம். தனிப்பட்ட முயற்சியால் அதனை மாற்றி அமைக்க முடியாது. உயிர்ப் பொருளின் திறம் அனுபவத்தாலும் கொள்கையாலும் திருத்த முறும். இவ்வாறு உயிர்ப்பொருளின் இயக்கங்களால் திறமை மாற்றம் அடைவதே பயிற்சியாம். மேல் வாரியாக வளராது நிற்பதுபோலத் தோன்றும்போது, உள்ளாக வேறு வகையான வளர்ச்சி எழலாம். பிறக்கும்போதே மூளை வெளி அமைப்பில் முற்றி வளர்ந்து நின்றாலும், அதனுள் இருக்கும் பல பகுதிகளின் அமைப்போ பின்னரே வளர்கின்றது. அதன் எடையின் வளர்ச்சி குழவியின் நடத்தையின் வளர்ச்சியோடு ஒத்து நிகழ்கிறது. குழவி இருக்கவும் நடக்கவும் கற்கும்போதுதான் உடலின் சமநிலையை அடக்கி ஆளும் சிறு மூளை நன்கு வளர்ந்து விடுகிறது.

## II. உடல் வளர்ச்சிப் புள்ளிகள்

ஆராயும் முறை :— உடல் வளர்ச்சியைப், பற்றிய பல குறிப்புகளை அறிஞர்கள் சேர்த்து வைத்துள்ளார்கள். இவர்களுடைய ஆராய்ச்சிகள் இரண்டு வகையாக நிகழ்கின்றன.

ஒன்று தொடர்நிலை ஆராய்ச்சி. ஒரே குழவியைப் பிறந்ததி-லிருந்து அது வளர்ந்து முற்றும்வரை ஆராய்வதே தொடர்-நிலை ஆராய்ச்சியாம். இவ்வாறு பல குழவிகளை ஆராய்ந்து கண்ட முடிவுகள் ஒருபுறம் கிடக்கின்றன. ஒருநிலை ஆராய்ச்சி என்பது மற்றொன்றாம். இதன்படி 'ஓராண்டு குழவிகளை எல்லாம் ஆராய்வது' 'ஈராண்டு குழவிகளை எல்லாம் ஆராய்வது' என ஆராய்ந்து அந்த அந்தக்காலத்தில் எவ்வளவு எவ்வளவு உயரம், எவ்வளவு எவ்வளவு எடை இருக்கவேண்டும் என்ற புது உண்மையை ஆராய்ச்சிவாணர் அறிந்து வந்துள்ளனர்.

உடல் எந்திரம் :— நமது உடலமும் ஓர் எந்திரம். மிக மிக வியப்பான எந்திரம்! சிறுசிறு எந்திரங்கள் இப்போது இருப்பதுபோல இருந்த நிலையிலேயே இல்லாமல் மரம்முதலிய-வற்றினை உட்கொண்டு நாளடைவில் சிறுகச் சிறுகப் பெரியவை ஆகுமானால் அது எவ்வளவு வியப்பாகும்! முன் தோன்றிய உயிர்அணுக்கள் பிரிந்து பல்கி எண்ணிக்கையிலும் மிக்கு வருகின்றன; அளவிலும் பெருத்து வருகின்றன. முதியோ-ரிடம் இருக்கும் உயிரணுவின் எண்ணிக்கையும் பிறந்ததும் குழவியினிடம் இருக்கும் உயிரணுவின் எண்ணிக்கையும் ஒன்றேயாம். ஆகையால் பிறந்தபின் எழுகிற வளர்ச்சி இந்த எண்ணிக்கையின் வளர்ச்சிஅன்று; அளவின் வளர்ச்சியேயாம். கருவறையில் இருந்ததனைவிட பிறக்கும்போது அளவில் அரைக்கோடி மடங்கு குழவி மிகுதியாகி விடுகின்றதாம். முதலாண்டின் முடிவில் அதினும் மும்மடங்கு மிகுதியாம். 11-ம் ஆண்டுவரை வளர்ச்சிவீதம் குறைந்து வருகிறது. அப்போது உயரமும் எடையும் மிகுந்து வரத் தொடங்கு-கின்றன. உயரும்போது சுற்றுவளர்ச்சி குறைந்தும், சுற்று-வளர்ச்சி மிகும்போது உயரவளர்ச்சி குறைந்தும் வருகின்றன-வாம். உயரத்திற்கும் மூச்சுவிடும் ஆற்றலுக்கும் உள்ள

வீதத்தை ஓர் அளவையாக அறிஞர் கொள்கின்றனர். மூச்சு-விடும் கனஅங்குலத்தை உயரத்தின் அங்குலத்தால் வகுத்தால் 5½ வயதில் 1.16 என்ற எண் வருகிறது. 17 ஆம் ஆண்டில் 17 என்ற எண் வருகிறது. இந்த எண் வயதோடு ஏறி-வருவது வெளிப்படை.

உயிரணு வளர்ச்சி :— உயிரணுக்கள் ஒவ்வோர் உயிர் இனத்திற்கு ஏற்ப ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஒரு குறிப்-பிட்ட அளவு வளரவும், ஒரு குறிப்பிட்ட காலம் வரை வாழவும், இயற்கையிலேயே அமைந்து கிடக்கின்றன எனலாம். ஒவ்வோர் உறுப்பும் அதனதன் வளர்ச்சியை ஒட்டிய இயற்கைச் சட்டத்தின்படி வளர்ந்து வரக் காண்கிறோம். பிறந்ததில் இருந்து வளர்ந்துவரும் நிலையை ஆராய்ந்தால் மூளை 4 மடங்கு எடை மிகுந்து வருகிறது. குருதி ஈரல் 13 மடங்கு மிகுகிறது. நுரையீரல் 20 மடங்கு மிகுமாம்.

குழவியின் உறுப்பும் முதியவர் உறுப்பும் :—முதிர்ந்த நிலையில் தலை நம் உடலில் அரைக்காற்பங்கே உள்ளது. குழவி நிலையிலோ மூன்றில் ஒரு பங்காம். பெரியோரின் தலை குழந்தையின் தலையைவிட இரண்டு பங்காம். குழந்தையின் உடல் நீளத்தை விடப் பெரியோரின் உடல் நீளம் மூன்று பங்காம். குழவியின் கைநீளத்தை விடப் பெரியோரின் கைநீளம் நான்கு பங்காம். குழந்தையின் கால் நீளத்தைவிடப் பெரியோரின் கால் நீளம் ஐந்து பங்காம்.

உறுப்புக்களின் வளர்ச்சி வீதம் :— குழவி நிலையில் முகத்திற்கும் உடலிற்கும் உள்ள வீதம் ஒன்றிக்கு மூன்றாம். முகத்தைவிட உடல் மூன்று பங்கு என்றபடி. பெரியோர் நிலையில் முகத்திற்கும் உடலிற்கும் உள்ள வீதம் ஒன்றுக்கு

எட்டாம். முகத்தைவிட உடல் எட்டுப்பங்கு என்றபடி. உடல் எடையில் தசை எடை பிறக்கும்போது நூற்றுக்கு 23 ஆம்; எட்டாம் ஆண்டில் 27 ஆம்; பதினைந்தாம் ஆண்டில் 33 ஆம்; 16 ஆம் ஆண்டில் 44 ஆம்; 20 ஆம் ஆண்டில் 45 ஆம். தசை வீதம் வயதேற ஏற மிக்கு வருதல் காண்க. ஏறக்குறைய காற்பங்கில் இருந்து அரைப்பங்காக மாறுகிறது எனலாம். குருதிஈரலின் அளவுக்கும், குருதிநாடியின் அளவுக்கும் உள்ள வீதம் குழவி நிலையில் 25க்கு 20 ஆம்; புத்தியறியும் பருவத்தே 140 க்கு 50 ஆம்; பெரியவரானபோது 290 க்கு 61 ஆம். குருதியின் வளர்ச்சி இதிலிருந்து நன்கு புலனாகும். 13 ஆம் வயதில், தான் அடையப் போகும் முழு உயரத்தில் எட்டில் ஒரு பங்கும், எடையில் மூன்றில் இரண்டு பங்கும், மார்பின் சுற்றளவில் ஐந்தில் நான்கு பங்கும், தசை இயக்க வேகத்தில் ஐந்தில் நான்கு பங்கும், தசை வன்மையிற் பாதியும், பையன் பெற்று வளரக் காண்கின்றோம்.

உடலும் உறுப்புக்களும் :— உடலின் முழு அமைப்பு 100 என்று வைத்துக்கொண்டால் குழந்தை வளர்ந்து வரும் போது அதன் பல உறுப்புக்கள் அந்த 100 ல் எத்தனைபங்கு என்பதனைக் கீழேகண்டு ஒப்பிடுக.

| காலம் | தலையும் கழுத்தும் | நடுஉடல் | கைகள் | கால்கள் |
|---|---|---|---|---|
| 1. கருவில் 2ஆம் திங்கள் | 45 | 50 | 3 | 3 |
| 2. கருவில் 6ஆம் திங்கள் | 37 | 40 | 8 | 15 |
| 3. பிறக்கும்போது | 27 | 49 | 9 | 15 |
| 4. 2-ம் ஆண்டு | 22 | 50·5 | 9 | 17·5 |
| 5. 6-ம் ஆண்டு | 15 | 51 | 9 | 25 |
| 6. முதிர்ச்சி | 7 | 53 | 15 | 30 |

## வயதிற்கு ஏற்ற எடையும் உயரமும்.

(ஆண் என்பது ஆண்குழவி ; பெண் என்பது பெண்குழவியைக்குறிக்கும்)

| வயது ஆறு | | பிறந்த உடன் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| உயரம் (அங்குலம்) | ஆண் | 20·5 | 29·5 | 33·5 | 36·5 | 39 | 42·5 | 45 | 47 | 50 | 52 | 54 | 56 | 58 | 60 | 63 |
| | பெண் | 20·5 | 29 | 33 | 36 | 39 | 41·5 | 45 | 47 | 50 | 52 | 54 | 56 | 58 | 60 | 62 |
| எடை (இராத்தல்) | ஆண் | 7·5 | 21·5 | 26·9 | 31 | 34·5 | 39 | 45 | 52 | 58 | 64 | 71 | 78 | 85 | 94 | 111 |
| | பெண் | 7 | 20 | 25 | 29.5 | 33 | 38 | 43 | 50 | 58 | 64 | 71 | 79 | 89 | 101 | 114 |

(Tables of National Child health Council) 5 இல் இருந்து 14 ஆம் ஆண்டு வரை ஆண் குழவிகளின் எடையில் உடைக்காக நூற்றில் 3½ பங்கு கழித்துவிடவேண்டும்; பெண் குழவிகளின் எடையில் நூற்றுக்கு 3 பங்கு கழித்துவிடவேண்டும்.

# உடல் வளர்ச்சியின் அளவை

| பள்ளியிற் படிக்கும் வருஷம் | | குழவி | 1 | | 2 | | 3 | | 4 | | 5 | | 6 | | 7 | | 8 | | 9 | | 10 | | 11 | | 12 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வயது | | 5½ | 6 | 6½ | 7 | 7½ | 8 | 8½ | 9 | 9½ | 10 | 10½ | 11 | 11½ | 12 | 12½ | 13 | 13½ | 14 | 14½ | 15 | 15½ | 16 | 16½ | 17 | 17½ |
| 1. உயரம் (அங்குலம்) | பெண் | 42·9 | 45.2 | 46.3 | 47·2 | 48·3 | 49.4 | 50·4 | 51·1 | 52 | 53·3 | 54 | 55·2 | 56·9 | 57·7 | 59·7 | 59·5 | 60·5 | 61·3 | 62·5 | 62·6 | 63·3 | 63·5 | 63·7 | 63·4 | 63·9 |
| | ஆண் | 43 | 45·4 | 46·6 | 47·9 | 48.3 | 49.5 | 50.1 | 51·4 | 52·2 | 53.6 | 54·8 | 55·3 | 56·7 | 57·1 | 57·82 | 58·0 | 69·5 | 61·0 | 62·2 | 63·7 | 65·7 | 66·3 | 67·4 | 67·5 | 67·5 |
| 2. எடை உயரக்கெழு | பெண் | 0·93 | ·92 | ·95 | 1·02 | 1·04 | 1·11 | 1,13 | 1·13 | 1·18 | 1·22 | 1·33 | 1·36 | 1·49 | 1·51 | 1·55 | 1·62 | 1·69 | 1·73 | 1·76 | 1·84 | 1·83 | 1·84 | 1·85 | 1·86 | 1,87 |
| | ஆண் | 0·95 | ·95 | ·96 | ·98 | 1·07 | 1·09 | 1·12 | 1·17 | 1·19 | 1·23 | 1·3 | 1·33 | 1·33 | 1·42 | 1·46 | 1·52 | 1·51 | 1·55 | 1·59 | 1·63 | 1·78 | 1·79 | 1·88 | 1·9 | 1·88 |
| 3. எடை இராத்தல் | பெண் | 40·1 | 41·7 | 44·2 | 48·1 | 50·4 | 54·7 | 57·1 | 57·5 | 61·5 | 64·8 | 71·7 | 74·7 | 82·8 | 87·1 | 91·8 | 96·4 | 102·3 | 105·8 | 110·3 | 115·3 | 115·6 | 116·9 | 117.9 | 119 | 119 |
| | ஆண் | 41 | 42·9 | 44·8 | 46·9 | 51.7 | 54·2 | 55·9 | 60·4 | 62·1 | 60·9 | 71·4 | 73·2 | 75·5 | 81 | 84·6 | 89·5 | 90 | 94·9 | 98·9 | 104·9 | 115·9 | 118·9 | 127·1 | 128·5 | 127 |
| 4. மூச்சுவிடும் ஆற்றல் கன ஆங்குலம் | பெண் | 40 | 60 | 63 | 71·3 | 77·9 | 81·8 | 83·5 | 87·3 | 91·7 | 100·9 | 106·6 | 114 | 119 | 128 | 141·3 | 146·2 | 147·7 | 153·5 | 15·88 | 164·5 | 172·6 | 176·5 | 178.8 | 183 | 185 |
| | ஆண் | 50 | 65·6 | 70 | 77·2 | 82·4 | 85·6 | 92·6 | 95·7 | 105·9 | 111·5 | 123·2 | 131·6 | 126·2 | 134 | 140·5 | 150·8 | 152·9 | 162·5 | 173·8 | 191·7 | 210 | 212·6 | 222·6 | 236·4 | 238 |
| 5 உயிர் நிலை உயரக்கெழு | பெண் | 0·93 | 1·33 | — | 1·51 | 1·61 | 1·65 | 1·66 | 1·71 | 1·76 | 1·89 | 1·98 | 2·07 | 2·09 | 2·22 | 2·38 | 2·46 | 2·44 | 2·5 | 2·54 | 2·63 | 2·73 | 2·78 | 2·81 | 2·89 | 2·9 |
| | ஆண் | 1·16 | 1.44 | 1·5 | 1·61 | 1·71 | 1·73 | 1·85 | 1·86 | 2·03 | 2·05 | 2.25 | 2,21 | 2·22 | 2·35 | 2·52 | 2·79 | 2·57 | 2·66 | 2·79 | 3 | 3·23 | 3·25 | 3·3 | 3.5 | 3.53 |

எடை உயரக் கெழுவும் உயிர்நிலை உயரக்கெழுவும்:— கிர்க்பாட்ரிக் (Kirkpatrick) 17½ வயது வரை எடையையும், உயரத்தினையும், எடை உயரக் கெழுவினையும் (Weight-Height Coefficient=$\frac{\text{Weight}}{\text{Height}}$) உயிர்நிலை உயரக் கெழுவினையும் கொடுத்துள்ளார். (Vital height Coefficient=$\frac{\text{Breathing Capacity}}{\text{Height}}$) எடை உயரக்கெழு என்பது எடையை உயரத்தால் வகுத்துப்பெறும் எண்ணும். உயிர்நிலை உயரக்கெழு என்பது மூச்சுவிடும் ஆற்றலை உயரத்தால் வகுத்துப் பெறும் எண்ணும். உடல் உரத்தினை இவை கொண்டு நன்கு அறியலாம்.

## III. புள்ளிகள் வெளியிடும் உண்மை

பொதுவும் சிறப்பும் :— மேலேகுறித்த அட்டவணையைக் கண்டதும் சில உண்மைகள் நமக்குப் புலனாகின்றன. உடல் வளர்ச்சி என்பது சிக்கலான இயக்கங்களின் தொடர்ச்சியாம். ஆகையால்தான் உடலின் ஒவ்வோர் உறுப்பும் வெவ்வேறு வீதத்தில் வளர்ந்து வருகின்றது. ஒரு சிறு பகுதிகள் முற்றிய நிலையில் இருக்கத்தக்க அளவினை ஏறக்குறையக் குழவி நிலையிலேயே எட்டிப் பார்க்கின்றன. உடலில் பல உறுப்புக்களிடையே ஒன்றற்கும் மற்று ஒன்றற்கும் உள்ள வீதம் வயதிற்கு ஏற்றவாறு அளவில் மாறிவரக் காண்கிறோம். எனினும், இத்தகைய பல அளவுகளுக்கும் இடையே பொதுவாக நோக்கும்போது ஒரு தொடர்பும் விளங்குகிறது. “எடைஉயர அட்டவணை”யிற்கண்ட பொது நிலையோடு ஒரு குறிப்பிட்ட குழவியின் எடை உயரத்தை ஒப்பிட்டுக் குழவியின் ஊட்டத்தைப் (Nutrtion) பற்றியும் உடல் நலத்தைப் பற்றியும் அறுதியிட்டுக் கூறலாம்.

ஆண் பெண் ஓட்டம் :— குழந்தை பிறந்ததுமுதல் 18 திங்கள் வரை மிக விரைந்து உடல் வளர்ந்து வருகின்றது. பின்னே மெல்ல இடையீடின்றி இளமைப் பருவம்வரை (adolescence) உடலம் வளர்ந்து வரக் காணலாம். இந்தப்பருவம் பெண்களுக்குப் பன்னிரண்டாம் ஆண்டிலும் ஆண்களுக்கு பதின்மூன்றாம் ஆண்டிலும் தொடங்குகிறது. இந்தப் பருவத்திலேதான், முன்னெல்லாம் ஆண்களுக்குப் பின்னணியில் நின்ற பெண்கள் முன்னணியில் வந்து நிற்கின்றனர். பன்னிரண்டாம் ஆண்டிலிருந்து பதினான்காம் ஆண்டு வரை பெண்களே உயரத்தில் சிறந்து விளங்குகின்றனர்; பதினைந்தாம் ஆண்டு வரை எடையிலும் சிறந்து விளங்குகின்றனர். இதற்குள்

ஆண்கள் இந்த ஓட்டத்தில் பெண்களைப் பிடிக்கவந்து பெண்களுக்கு முந்தியும் ஓடி வெற்றி அடைகிறார்கள்.

வளர்ச்சியின் அடிப்படை :— உடல் வளர்ச்சிக்கு அடிப்படை ஆனவற்றை வேறொரு வகையாகவும் சில ஆசிரியர் கூறுவர். உயிர்அணு அன்றோ இவ்வாறு எல்லாம் வளர்ந்து முற்றித்திகழ்ந்து சிறப்புறுகிறது? தலைமுறையின் இயல்பன்றோ உடல்வளர்ச்சி? மக்கள் இனத்திற்கே பொதுவான இயல்புகள் சில. இந்த இனத்தில் குறிப்பிட்டதோர் குடிக்குச் சிறப்பான இயல்புகள் சில. பெற்றோரிடையே கண்ட இயல்புகள் சில. இவையனைத்தும் குடிவழி என்பதில் அடங்கும். ஈதே வளர்ச்சியின் முதல் அடிப்படையாம். உடம்பின் பலவேறு பிரிவுகளாக நிற்கும் உறுப்புக்களுக்கு ஏற்றவாறு அவ்வவற்றின் வளர்ச்சியும் நிகழக் காண்கிறோம். எனவே உறுப்புக்களின் சிறப்பியல்பே இரண்டாவது அடிப்படையாம். குழந்தைகளுக்குக் கூந்தல் நீண்டு வளருவதில்லை. அததற்கு ஒரு காலம் உண்டு. ஆகவே காலம் என்பது வளர்ச்சியின் மூன்றாவது அடிப்படையாம். ஆணுக்கு மீசை முளையுமே அன்றிப் பெண்ணுக்கு முளைப்பதில்லை. இத்தகையனவே ஆண் பெண் என்ற பால் வேற்றுமையைக் காட்டும் பால் அமைப்புகளாம். மீசை முதலிய வளர்தல் இந்தப் பால்அமைப்புக்களின் முற்றிய நிலையைப் பொறுத்ததாம். எனவே பால்வகை வளர்ச்சியின் சிறப்பியல்புகள் நான்காம் அடிப்படையாம். சுரப்பிகளின் நிலையே ஐந்தாம் அடிப்படையாம்.

## IV. சுரப்பிகளின் ஆட்சி

தூம்பில் சுரப்பி :— இந்த இருபதாவது நூற்றாண்டில் நம் உடலில் கிடக்கும் இச்சுரப்பிகளைப் பற்றிச் சிறப்பாக

அறிஞர்கள் ஆராய்ந்து சில உண்மைகளைக் கண்டு பிடித்து உள்ளார்கள். கல் ஈரல் முதலியவற்றிலிருந்து பித்தம் முதலிய சாறுகள் உடலில் பாய்கின்றன என முன்னரே உலகம் அறிந்து இருந்தது. தாய்ப்பால், கண்ணீர், உமிழ்நீர் முதலியனவும் இத்தகைய சுரப்பிச் சாறுகளேயாம். இந்தச் சாறுகள் சுரக்கும் தசையுருளைகளைச் சுரப்பிகள் (Glands) என அறிஞர் வழங்குகின்றனர். நெறிகட்டிக்கொள்வது என்பது சுரப்பிகளின் வீக்கமே ஆம். பித்தம் முதலிய ஊறும் சுரப்பிகளுக்கு அவ்வாறு ஊறும் சாறு பாயும் கால்வாய்களாகத் தூம்புகள் (ducts) அமைந்துள்ளன. தூம்பில்லாத சுரப்பிகளே (ductless glands) இப்போது பெரிதும் ஆராய்ச்சிக்கிடமாவன. இவற்றின் சாறு நேரே இரத்தத்திற் பாயும்.

புரசை :- நெஞ்சுப் பெருஞ் சுரப்பியைப் புரசைச் சுரப்பி (Thyroid gland) என வழங்குகின்றனர். இதன்சாறு உடலிற் பாயுமானால் உடல் பெருத்துப் பூதமாம் எனத் தவளை ஆராய்ச்சி வழியே கண்டோம்.

மாங்காய்ச் சுரப்பி (Adrenal glands) :— ஆண் பெண் என்ற வேற்றுமையை அறிய நிற்கும் அடிப்படையான அறிகுறிகளை முதனிலைப் பாலறிகுறிகள் (Primary sexual characteristics) எனலாம். மீசை முதலியவை அந்த அறிகுறிகளோடு ஒருங்கு தோன்றுதலின் உடனிலைப் பாலறிகுறிகளாம் (secondary sexual characteristics). மாங்காய்-ஈரலுக்கு (Kidney) அடுத்துள்ள சுரப்பியை மாங்காய்ச் சுரப்பி (Adrenal gland) எனலாம். இது அகணியும் புறணியுமாக இருக்கக் காண்கிறோம். இதன் புறணிச் சாறு மிகுதியாகப் பாயும்போது மீசை முதலிய உடனிலைப் பாலறிகுறிகள் வளர்கின்றன. நோய் காரணமாக இளமையிலேயே

இச்சாறு பாயும்போதுதான் குழவிகள் மீசையோடு தோன்றிக் குறட்பூதம் ஆகின்றன.

கழுத்துக் கணையச் சுரப்பி (Thymus gland) :- கழுத்துக் கணையச் சுரப்பி ஒன்று உள்ளது. கழுத்துக் கணையத்தருகே இருப்பதால் இது இப்பெயர் பெறுகின்றது. பால் அமைப்பினை வளர்க்கும் பிறசுரப்பிகள், குறித்த பருவம்வரை இயங்காதபடி குழவிநிலையில் இந்தச் சுரப்பியே காத்து இயங்கி வருகிறது. அதனாலேயே குழவி நிலையில் பால் அமைப்பு முற்றி வளர்வதற்கு இடம் இல்லை. ஆற்றல் கெட்டொழிவதற்கு இடமின்றி ஆற்றல் அனைத்தும் பிற உறுப்புக்கள் உரம் பெற்று வளர்வதற்கு இந்தச் சுரப்பி இவ்வகையால் பேருதவி புரிகின்றது எனலாம்.

தலைச் சுரப்பிகள் :- தலையில் இரண்டு சுரப்பிகள் மேலும், ஒருசுரப்பி கீழுமாக மூன்று சுரப்பிகள் இருக்கின்றனவாம். இவற்றைக் கீழ்த்தலை முன்சுரப்பி (Prepituitary gland) கீழ்த்தலைப் பின்சுரப்பி (Postpituitary gland) மேற்றலைச் சுரப்பி (pineal gland) என வழங்கலாம். கீழ்த்தலைப்பின்சுரப்பியும் பாலறிகுறிகளைச் செயற்படுத்துவதாம். மேற்றலைச் சுரப்பியும் இங்கொரு தொண்டு புரிகிறது. மாங்காய்ச் சுரப்பி (adrenal gland) யின் புறணி பாலமைப்பினை முற்றவிடும் எனக் கண்டோம். அந்தப் புறணியைக் குறித்த பருவம் வரை இயங்காதவாறு அடக்கி ஆளுவதே மேற்றலைச் சுரப்பியின் கடமையாம். பிறந்தபின் ஏழு, எட்டு ஆண்டுகள் வரையில் பெருகி வளரும் இந்தச் சுரப்பி பின்னர்ச் சுருங்கி விடுகிறது. அதனாலேயே அந்த வயதிற்குப் பிறகு மாங்காய்ச் சுரப்பியின் புறணி இயங்கத் தொடங்கிப் பால் அமைப்பினை வளர்க்கின்றது. சுரப்பிகள், உடல் வளர்ச்சியை எவ்வாறு எல்லாம் அடக்கி

ஆள்கின்றன என்பது இங்குச் சுருங்கக் கூறியதிலிருந்து ஒரு சிறிது விளங்கி இருக்கும்.

## V. வளர்ச்சி வீதம்

பொது :— பிறப்பதற்கு முன்னர் உறுப்புக்கள் எல்லாம் ஏறக் குறைய ஒரே வீதத்தில் வளர்ந்து வருகின்றன. பிறந்த உடனே இவற்றினிடையே வளர்ச்சிவீதம் பெரிதும் மாறு பட்டிருக்கக் காண்கிறோம். பொது வளர்ச்சியை நோக்கு-மிடத்து நான்கு வேறு நிலைகள் தோன்றுகின்றன. இளங்-குழவிப் பருவத்தில் (Infancy) வளர்ச்சி மிக விரைந்து நிகழ்-கின்றது. பேதைப் பருவத்தின் (Childhood) முதலிலும், இடையிலும், முறையாக மெல்ல உடல் வளர்ந்துவரக் காண்-கிறோம். பேதைப் பருவத்தின் கடைசியிலிருந்து மறுபடியும் மிக விரைந்த வளர்ச்சி தொடர்ந்து நிகழ்கிறது. இளமைப் பருவத்தின் (Adolescence) பிற்பகுதியில் வளர்ச்சி மெல்லவே நடக்கிறது. இதுவே வளர்ச்சியின் பொதுத் தோறணியாம் (Pattern). இந்தப் பொதுத் தோறணிக்-கேற்பவே எலும்பு, தசை, மூச்சமைப்பு முதலியவற்றின் அளவும் வயிறு உடல் முதலியவற்றின் எடையும் வளர்ந்து வருகின்றன. சில உறுப்புக்களின் சிறப்புநிலைத் தோறணியைக் கீழே காணலாம்.

நரம்பு :— நரம்பின் வளர்ச்சி பிறந்தவுடன் மிக மிக விரைந்து வளர்கிறது. பின்னே இளங் குழவிப் பருவத்தும் (Infancy) முது குழவிப் பருவத்தின் (Childhood) முதலிலும் மாறி மாறி, விரைந்தும் மெல்லவுமாய் வரும் வீதத்தில் வளர்கிறது. பின்னர் முது குழவிப் பருவத்தின் கடைவரையிலும் மெல்லவே வளர்ந்து வருகிறது. மூளை-

யானது ஆறுவது வயதிலேயே தன் முழு அளவில் நூற்றுக்குத் தொண்ணூறு (90%) பங்களவு வளர்ந்து விடுகிறது.

நிணநீர் நிலை (Lymphoids) :— இவை இளங்குழவிப் பருவத்திலும் முதுகுழவிப் பருவத்தின் முதலிலும் மிக விரைந்து வளரக் காண்கின்றோம். அதன் பின்னர் மெல்ல வளர்ந்து வந்த அந்த வளர்ச்சியின் உயர்நிலையைப் புத்தியறியும் பருவத்தே (Puberty) அடைகின்றன. இந்த ஏற்றத்தின் பின் இறங்கிக் குறையவே தொடங்குகின்றன.

கணையச் சுரப்பி :— கழுத்துக்கணையச் சுரப்பி முதலில் பெருவளர்ச்சி அடைந்து பின் இளமைப் பருவத்தில் சுருங்கி விடுவதனை முன்னரே கண்டோம்.

பிறப்பிடம் :— பிறப்பிட வளர்ச்சியை நோக்கும்போது பிறவிக்குரிய உறுப்புக்கள் பத்து வயது வரை ஒடுங்கிக் கிடந்து புத்தியறியும் பருவத்தில் மிக விரைந்து வளர்ந்து வருதல் வெளிப்படை.

மாங்காய்ச் சுரப்பி :— மாங்காய்ச் சுரப்பி, (Adrenal glands) குழவி பிறப்பதற்கு முன்னே மிக விரைந்து வளர்கின்றதாம். ஆனால் பிறந்த பதினைந்து நாளுக்குள் எடையில் பாதியாகக் குறைந்து விடுகின்றது. இவ்வாறு குறைந்த குறைபாடு பதினாறும் ஆண்டு வரையில் நீங்குவதில்லை. சிறப்பாக இதனுடைய புறணி இளங்குழவிப் பருவத்தில் வாடி வதங்கிக் கிடக்கின்றதாம். அதனாலேயே மீசை முதலிய உடனிலைப் பாலறி குறிகள் வளராமல் கிடக்கின்றன என முன்னரே கண்டோம்.

கருப்பை :— பெண் குழவிகளிடையே கருப்பையும் (womb) இதேபோலப் பிறப்பதற்கு இரண்டு திங்களுக்கு

முன்னரே மிக விரைந்து வளர்கின்றது. பின்னர்ப் பிறந்த பதினைந்து நாட்களுக்குள் அதன் அளவு சுருங்கி ஒடுங்குகிறது. பத்தாம் ஆண்டுவரை இவ்வாறு ஒடுங்கி நிற்கின்றது; பின்னர் வளர்கின்றது.

முடிவு :— இவ்வாறு பல உறுப்புக்களும் உடலின் அமைப்பும் கருப்பையில் வளர்ந்து வந்த நிலைமைக்கு மாறுகச் சிறப்பு நிலையுற்று உலகவாழ்வில் தாம் செய்யப்போகும் தொண்டிற்கேற்ப வளர்ந்துவரக் காண்கிறோம்.

## VI. பாலும் வளர்ச்சியும்

ஆணும் பெண்ணும் :— மேலே குறித்த அட்டவணையில் உடல் வளர்ச்சி பாலுக்குத் தக்கவாறு வேறுபடுவதனையும் காண்கின்றோம். பொதுவாக நோக்குமிடத்துப் பெண்களுடைய வளச்சி உயர்நிலை அடைவது 12½ ஆண்டிலாம். ஆண்களுடைய வளர்ச்சி உயர்நிலை அடைவது 14¾ ஆண்டிலாம். பெண்களைவிட ஆண்கள் பொதுவாக ஐந்து அங்குலம் உயர்ந்திருக்கக் காண்கிறோம். இங்ஙனமே ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே எடையிலும் வேற்றுமை தோன்றுகின்றது. மற்றொரு வேற்றுமையும் பால்வேற்றுமையால் எழுவதனை அறிஞர்கள் குறிப்பிட்டு உள்ளார்கள். மணிக்கட்டு எலும்புகள் முற்றிவரும் நிலையிலும் வேற்றுமை உண்டாம். இந்த முதிர்ச்சி நிலையிலும் பெண்களே முந்துகின்றனராம். பல் முளைத்தலும் உடல் முதிர்ச்சியைக் காட்டும் ஓர் அறிகுறி எனலாம். பெண்களுக்கே முந்திப் பல் எல்லாம் முளைத்துவிடுகின்றனவாம். இருபாலரிடையேயும் வளர்ச்சி வீதத்தில் தோன்றும் வேற்றுமையை முன்னரே குறித்தோம்.

## VII. சிறப்புநிலை வளர்ச்சி

முன் பின் வளர்ச்சி:— ஒவ்வோர் உறுப்பும் உடல் அமைப்பும் உயர்நிலை அடையும்போது எவ்வளவில் இருக்கும் எனக்கண்டோம். பொதுவாக இவற்றின் வளர்ச்சி எப்போது மிகுதிப்பட்டுத் தோன்றும் எனவும் அறிந்தோம். ஆனால் இவ்வளவும் பொதுநிலையேயாம்; சராசரி நிலையேயாம். தனிப்பட்டவர்களை ஆராயும்போது இந்த அளவிலும் இந்தப் பருவத்திலும் வேறுபாடு தோன்றுகிறது. உயர்நிலை அளவிலும் உயர்நிலையடையும் பொழுதிலும் இவ்வாறு வேறுபாடு தோன்றுகின்ற இடத்திலும் ஓர் இயைபு புலனாகிறது. உயரமாக வளரும் குழவி பெரியவரான பின்னும் உயரமாகவே விளங்கும் எனப் பொதுவாகக் கூறலாம். இதற்குச் சில புறனடைகள் உள்ளன என்பது உண்மை. 5 வயதில் உயரமாக வளர்ந்துவிட்ட குழவி 9 வயதிலும் உயரமாகவே வளரும். ஆனால் பேரிளமைப் பருவத்தில் உயரம் எவ்வாறு முடியும் என முன்னாகவே கண்டறிந்து கூறுவது வெறியாட்டத்தில் குறிகூறுவது போலாம். பல குழவிகளிடத்திலே இந்த வளர்ச்சியின் முதிர்ச்சி பலவேறு வகையாகத் தோன்றுகிறது. இதனைப்பற்றியும் பொதுவாகச் சில உண்மைகளைக்கூறலாம். ஒரு சில குழவிகள் 10, 11 ஆம் ஆண்டில் மிகவிரைந்து வளர்கின்றன. வேறு சில 13, 14 ஆம் ஆண்டில் மிக விரைந்து வளர்கின்றன. இவற்றினிடையே வளர்ச்சிநிலையில் தோன்றும் வேற்றுமையை அறிஞர் எடுத்துக்காட்டி உள்ளனர். முன்னாக விரைந்து வளர்ந்த கூட்டம் பின்னைய கூட்டத்தைவிட முதலில் குள்ளமாகவே இருந்து பின்னர் உயரமாக வளர்ந்து முடிவில் குள்ளமாகவே அமைந்துவிடுகின்றது. பின்னாக வளரத்தொடங்கிய கூட்டமோ முதலில் உயரமாகிப் பின்னர்க் குள்ளமாய் முடிவில் உயரமாகவே அமைந்து விடுகின்றது.

பிற காரணம் :— வளர்ச்சிக்கு அடிப்படையான ஐந்து காரணங்களை முன்னரே கண்டோம். வளர்ச்சியினிடையே நாம் காணும் வேறுபாடுகளுக்குக் காரணம் என்ன? "மக்கள் இனம் எவ்வளவு உயரம் வளரும்? உறுப்புக்கள் எவ்வளவின-வாக இருத்தல் வேண்டும்" என்பனவற்றை அறுதி இடுவது தலைமுறை இயல்பேயாம். ஆனால் மக்கள் வளர்ச்சியில் தோன்றுவது தலைமுறை இயல்பு மட்டுமன்று; பிற இயல்பு-களும் வாழ்விடை வந்து பாய்கின்றன. அவை வளர்ச்சியை ஒரு சிறிதளவே மாற்றி அமைக்கக்கூடும் என்பதனை மறக்க-லாகாது. இவ்வாறு பல வேறுபட்ட இயல்புகளும் ஒருங்-கிணைந்ததன் பயனே வளர்ச்சியாம்.

சுரப்பி :— இந்தப் பலவேறு இயல்புகளில் வளர்ச்சியை மாற்றி அமைப்பதில் பேராற்றல் படைத்தது தூம்பிலாச் சுரப்பிகளின் இயல்பேயாம். அவ்வப்போது வளர்ச்சியின் வீதம் மிக்கும் குறைந்தும் வருவதற்குச் சுரப்பிகளே காரணமாம். இந்தச் சுரப்பிகள் அனைத்திலும் வளர்ச்சியை அடக்கி ஆள்-வதில் தலைமை பூண்பது கீழ்த்தலைச் சுரப்பியே (Pituitary gland) ஆம். இதிலிருந்து இரண்டுவகைச் சாறுகள் பாய்-கின்றன. ஒன்று வளர்ச்சியைத் தூண்டுவதாம். மற்றொன்று பால் அமைப்பை முற்றச் செய்வதாம். இவற்றில் இளங் குழவிப் பருவத்தும் முதுகுழவிப் பருவத்தும் பாய்வது வளர்ச்சியைத் தூண்டும் சாறேயாம். இவை இரண்டும் இளமைப் பருவத் தொடக்கத்தில் ஒருங்கே பாயத் தொடங்கு-கின்றன. உடலும் வளர்கிறது; பால் அமைப்பும் முதிர்ந்து வருகிறது. இரண்டு ஆண்டு இவ்வாறு பால் அமைப்பு முதிர்ந்த பின் வளர்ச்சியைத் தூண்டும் சாறு தடைப்பட்டு ஒழிகிறது; நீண்ட எலும்புகள் வளர்வது நின்று விடுகிறது. பிஞ்சியிற் பழுத்த முதிர்ச்சிநிலை தக்க காலத்திற்கு முன்னரே தோன்று

மானுல் உடல் வளர்ச்சி குறித்த காலத்திற்கு முன்னுகவே தடைப்பட்டுப்போகும். அதனுலேயே முன்னுக முதிர்ச்சி நிலையை அடைவோர் பின்னுக முதிர்ச்சி நிலையை அடைவாரினும் குள்ளமாக இருக்கக் காண்கிறோம்.

## VIII. வளர்ச்சியை அடக்கி ஆளல்

நல்வளர்ச்சி நூல் :- இவ்வளவும் அறிந்து பயன் என்னை? அறிவுநூல் ஆராய்ச்சியின் பயன் இயற்கையை அடக்கி ஆளுதல் அன்றோ? அங்ஙனமாயின் எல்லோரும் நன்ருக வளர்ந்து திறம்பட இயங்கும் முழுநிலை உறுப்புக்களைப் பெற்று வாழுமாறு செய்தல் அன்றோ இந்த ஆராய்ச்சியின் முடிந்த முடிபாதல் வேண்டும்? எனினும் அடக்கி ஆளும் நிலை ஏற்படவில்லை என்ருல் அறிவாராய்ச்சி இல்லை என்பதற்கு இல்லை. வானநூல் அறிஞர் எதனை அடக்கி ஆளுகின்றனர்? அங்ஙனமே இங்கும் என்க. மன வளர்ச்சி உடல் வளர்ச்சியைப் பொறுத்திருத்தலின் இதனை ஆராய்வதும் இன்றியமையாததே ஆம். நல்ல ஆண்மகனும், நல்லபெண் மகளும் கூடிவாழ இடந்தர வேண்டுமே யன்றிப் பிறவழியாகக் கூடிவாழச் சமுதாயம் இடந்தருதல் ஆகாது என்று வளர்ச்சிநூல் (Eugenics) அறிஞர் கூறுகின்றனர். இங்கே உள்ள சிக்கல் எல்லாம் "நல்ல" என்பதற்குப் பொருள் கொள்வதிலேயே உள்ளது. தொழுநோய் பைத்தியம் முதலியவற்றைத் தீமை என ஒதுக்குவது எளிதேனும் பிறநிலைகளைப்பற்றி அப்படித் தீதோ நன்றோ என முடிவிற்கு வருவது அருமையாம்.

உணவும் உலகப்போக்கும் :- எனினும் உலகவரலாற்றைப் பொதுவாக நோக்குமிடத்து மக்களின் உடலின் அளவு மிக்குவருவதே உலகின் இயற்கைப்போக்கு எனக்கூறலாம். புத்துல-

கத்தைப்பற்றி அறிஞர் பேசுகின்றனர். பசியும் பிணியும் நீங்கி நாடு செழிக்கவேண்டும் என்பதே பண்டை நாள் முதல் இந்நாள்வரை மக்களது பேரவாவாம். பசியும் பிணியும் பல கவலையும் இன்றி உலகம் வாழவருமானல் உடல் வளர்ச்சியில் நேரும் குறைபாடுகளிற் பல அடியோடு மறையும். உடலமும் முற்றி முழுநிலையைப் பெறும். உடலெனப்படுவது உணவின் பிண்டம். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே. உடலை வளர்த்தோர் உயிர் வளர்த்தோரே. நல்லுணவே நல்லுடலை வளர்ப்பதாம்.

சுரப்பிகளின் கோளாறு :— சுரப்பிகள் காரணமாகவும் சில குறைபாடுகள் தோன்றலாம். தோன்றும் பொழுதே ஆராய்ந்து இக்குறைபாடுகளை நீக்கிக்கொள்ளுதல் வேண்டும். இளங்குழவிப் பருவத்தும் முது குழவிப் பருவத்தும் பொது நிலையினின்றும் மிகவும் வேறுபட்டநிலை தோன்றிய உடனேயே அதனை மருத்துவர் உதவிகொண்டு ஆராய்ந்து தீர்த்துக் கொள்ளுதல் வேண்டும். இல்லையேல் பின்னே இளமைப் பருவத்தில் அத்தகைய கோளாறுகளைப் போக்கிக் கொள்ளுவது அருமையினும் அருமையாம். மக்கட் கூட்டத்திடை அறியாமை நோயே முதல் அகலுதல் வேண்டும். "நோயெல்லாம் இயற்கையே; இவற்றைத் தீர்ப்பதேது?" என்ற தலைவிதி மனப்பான்மை ஒரு சிறிது ஒழிதல் வேண்டும்.

## IX. அறிவும் வளர்ச்சியும்

அறிவும் உடலுரமும் :- அறிவு நிலைக்கும் உடல் வளர்ச்சிக்கும் ஒருவகை இயைபு இல்லாமல் இல்லை. அறிவிற்சிறந்த குழவிகள் பெரும்பான்மையும் உடல் வளமுற்ற குழந்தைகளாகவே விளங்குகின்றன. அவர்களுடைய உடல்

வளர்ச்சியும் விரைந்து நிகழக் காண்கிறோம். அறிவிற் பெருங்குறைபாடு பெற்ற குழவிகளைப் பொதுவாக நோக்கும்போது அவை உடல் வளர்ச்சியிலேயும் குறைபட்டுப் பிற்பாடாக வளர்ந்து முடியக் காண்கிறோம்.

உடற் கூற்று வயது :— உடலும் உறுப்புகளும் வளருகின்ற நிலைக்கும் வயதிற்கும் ஒரு தொடர்புண்டு. அவ்வாறே உடலுறுப்புக்களின் இயக்கமும் வயதிற்குத் தக்கவாறு மாறி அமைந்து வளர்ந்துவரக் காண்கிறோம். இந்த வயதில் இத்தகைய உடற்கூறும் இத்தகைய உடலுறுப்பியக்கமும் அமைதல்வேண்டும் என அறிஞர்கள் பொதுநிலையை ஆராய்ந்து முடிவுகட்டி உள்ளார்கள். ஆகவே உடற்கூற்றமைப்பு வயதும் (Anatomical age), உடற்கூற்று இயக்க வயதும் (Physiological age) இயற்கை வளர்ச்சிக்கறிகுறியாய் இயற்கை வயதோடு (Physical age) ஒத்துவர, மூன்றும் பொதுவாக ஒன்றாகவே விளங்கக் காண்கிறோம். இயற்கையான வளர்ச்சி சில பல காரணங்களால் தடைப்பட்டோ மிகுதிப்பட்டோ வருவதுமுண்டு. அப்போது ஆண்டிற்கு ஏற்ற இயற்கை வயதும், உடற்கூற்றமைப்பு வயதும், உடற்கூற்றியக்க வயதும் வெவ்வேறாக விளங்கக் காண்போம். இவற்றை ஒப்பிட்டுப் பார்ப்பதால் இயற்கை வளர்ச்சியின் உண்மை நிலையை அறியலாம்.

அறிவும் உடல் வளர்ச்சியும் :- ஆண்டு வயதோடு அறிவு வளர்ச்சியும் பேர் இளமைப் பருவம் வரை தொடர்புண்டுவரக் காண்கிறோம். ஆனால் உடற்கூற்றமைப்பு வயதும், உடற்கூற்று இயக்க வயதும், அறிவுநிலை விளக்கத்தோடு ஒற்றுமைத் தொடர்பு உடையன எனக் கூறுவதற்கில்லை. குறித்த காலத்திற்கு முன்னரே சில குழந்தைகள் புத்தியறி-

கின்றன. பால் அமைப்புகள் அளவிற்குமேல் வளர்ந்து வரும் நிலை ஈதேயாம். இவ்வாறு பிஞ்சியிற் பழுத்த குழவிகள், உடற் கூற்றியக்க வயதிலும் உடற்கூற்றமைப்பு வயதிலும் பெரிய-வர்களானுலும் அவற்றிற்குத் தக்கவாறு அறிவுவளர்ச்சி அடையக்காணேம். இயற்கை வளர்ச்சியும் அறிவு விளக்கமும் தொடர்புடையனவேனும் மாருநிலையாகிய ஒற்றுமைத் தொடர்பு பெற்று விளங்குவன அல்லவாம். ஆகையால் ஒன்றினை அறிந்ததும் மற்ருென்றினை உய்த்துணர்ந்து முன்னுகக் கூறமுடியாதாம்.

பிற உடலமைப்பும் அறிவும் :- நரம்பமைப்பும், எலும்-பமைப்பும், தசையமைப்பும் ஒரு வகையாகத் தொடர்புண்டு கிடப்பதால் இயற்கை வயதிற்கேற்ப இவை எவ்வாறு வளர்ந்து வரும் என அறிஞர்கள் உண்மையை விளக்கிவைக்கின்ருர்கள். நரம்பமைப்போ அறிவு விளக்கத்தோடு நேரே தொடர்புண்டு கிடக்கின்றது. கொக்கிப்புழு (Hook wom) உடலில் மிக்கு இருந்தால் அறிவு விளக்கம் சுடர்விட்டெரிய இடம் தோன்ருது போகின்றதாம். 'சுரப்பிகளுக்கும் அறிவு விளக்கத்திற்கும் தொடர்புண்டோ' என்றறியும் ஆராய்ச்சி இன்னம் ஒரு முடிவிற்கும் வரவில்லை. புரசைச் சுரப்பியின் அளவிற்கும் உடல் அளவிற்கும் தொடர்பு இருக்கலாம் எனத் தோன்று-கிறது. ஆனல் அதற்கும் அறிவு விளக்கத்திற்கும் ஒற்றுமைத் தொடர்பு ஏதேனும் இருப்பதாகத் தோன்றக்காணேம். இவ்வளவோடு இப்போது நாம் அமைதல் வேண்டும்.

"உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே" (திருமந்திரம்)

# 7. இயக்கத்திணை உலகம்

## I. மனவளர்ச்சியின் வகை

இயக்க வளர்ச்சி:- கோவ்கா (Koffka) என்ற பேராசிரியர் மனம் நான்கு வகையாக வளர்ந்து வருகிறது என்கிறார். முதலாவது வகை தசை இயக்கத்தின் துலக்கமுறையேயாம். இயக்கங்கள் முதலில் தாமாகவே எழுகின்றன. இயக்கங்களைப் புலனாக அறியும் பொறி இயங்கும் தசையிலேயே உண்டு எனக் கண்டோம். ஆகையால் உணர்வின்றி எழுந்த இயக்கங்கள் பின் உணரப்பெறுகின்றன. இந்த உணர்வு எழுந்ததும் பின்னர் நாமே இந்த இயக்கங்களை நாம் வேண்டியபோது எழுப்ப முடிகின்றது. குழவி பேசுவதில்லை யாதலின் அதன் மனநிலையை அதன் நடத்தை கொண்டே அறிய முடியும். நடத்தையோ இயக்கங்களின் கோலமேயாம். இயக்கமோ தசையின் இயக்கமேயாம். தொடர்பற்றுச் சிதறுற்று எழுகிற பல இயக்கங்களும் முழுநிலை அடைகின்றன. புதுபுது இயக்கங்களும் வளர்கின்றன. இந்த இயக்கநிலை முதலில் புறப்பொருள்களைப் பற்றிக்கொள்வதாக அரும்பி, காலெடுத்து நடந்து வருவதாகப் பூத்து, பேசும் ஆற்றலாகக் காய்த்து, யோகாசனங்கள் முதலியவாக முற்றி, இசையும் கூத்துமாகப் பழுத்து, இனிய வாழ்க்கையாக இன்பச் சாறு கொழித்து மகிழ்ச்சிதரக் காண்கிறோம்.

புலனுணர்வின் துலக்கம் :— மனவளர்ச்சியின் இரண்டாவது வகையாக அவர் கூறுவது புலனுணர்வின் துலக்கமே ஆம். தொடர்புபெறாத, அல்லது தொடர்பு விளக்கம் பெறாத

பல தோற்றங்களின் கோலங்களாகவே உலகம் குழந்தைக்கு முதலில் தோன்றுகிறது. இந்தக்காட்சி படிப்படியாக வளர்ந்து முற்றுகிறது; அதில் அனைத்துப் பொருளும் தக்கதோர் வகையில் உறுப்புக்களாக அமைந்து வெற்றிதரும் நிலையில் கலந்தியங்குகின்றன; குழப்பத்திற்கோ, மயக்கத்திற்கோ இடமின்றி அவை ஒற்றுமை பெற்றுப் பொலிகின்றன; உண்மைக் காட்சியாக விளங்கிவருகின்றன; உலகத்தைப் பற்றிய நம் நோக்கமும் இங்கு அவ்வாறு முழுநிலையை அடைகிறது.

அகப்புற இயைபு :- மூன்றாவதாக அகநிலை நடத்தையும் புறநிலை நடத்தையும் ஒருங்கு இயைகின்ற வகையில் மன-வளர்ச்சி நிகழ்கின்றதாம். தோற்றங்களும் துலங்கிவரு-கின்றன. இயக்கங்களும் எழுகின்றன. இவை தனித்தனி எழும் நிலைமையும் உண்டு. கறுப்புக்கோடும் மஞ்சட்கோடும் பெற்ற கம்பிளிப்புழு கோழிக்குஞ்சியின் எதிரே தோன்று-கிறது. இது தோற்றநிலை. எதிரே ஓடவும் கோழிக்-குஞ்சினுக்குத் தெரியும். இது இயக்கநிலை. அத்தகைய கம்பிளிப்புழு கைப்பாக இருப்பதனைக் குத்தி உணர்ந்த கோழிக்குஞ்சியின் உள்ளத்தே இந்தத் தோற்றநிலையும் இயக்கநிலையும் ஒருங்கியைகின்றன; இதன்பயனாக அத்தகைய கம்பிளிப்பூச்சியின் தோற்றத்தைக்கண்ட உடனே குஞ்சு ஓட்டம் பிடிக்கின்றது.

எண்ணம் :- எண்ணங்களின் வடிவாக எழும் நடத்தையின் துலக்கமே மனவளர்ச்சியின் நான்காவது வகையாம். சிறுவன் தனியே இருக்கின்றான். அவனுடைய நாவில் நீர் ஊறுமாறு நறுமணம் வீசிக் கண்ணைக்கவரும் வகையில் அழகாகப் பல நிறமுள்ளதோர் பால் அப்பம் பொலிந்து தோன்றுகிறது.

அதனை உண்ணும் வேட்கை பொங்கி எழுகிறது. ஆனால் அத்தகைய இனிய பொருள்களைத் தன்னைக் கேளாமல் எடுத்த-லாகாதெனப் பல இனிய உணவுகளையும் ஊட்டி வளர்க்கும் தாய் கூறியது அவன் மனத்தில் நினைவிற்கு வந்துவிடுகிறது. 'என்ன செய்வது' எனத் துணியமாட்டாது தயங்குகின்றான். அற ஒழுக்கம் வளரும் வகை இவ்வாறுதான். பொருள்களை நேரேவைத்து இயங்குவதைவிட்டு எண்ணங்களால் எண்ணிப் பார்த்து இயங்கக்கூடிய நிலையை மனம் அடைந்துவிடுகிறது. பின் வருவதனை முன்னாகவே மனக்கண்ணால் எண்ணிக்கண்டு ஒரு முடிபுக்கு வருகின்ற வழக்கம் இவ்வாறு பழக்கத்திற்கு வந்துவிடுகின்றது. இத்தகைய பழக்கத்தினை வளர்ப்பதே கல்வியின் நோக்கமாகும். இங்குக்கூறிய நான்குவகை வளர்ச்-சியில் முதல்வகையான வளர்ச்சியாகிய இயக்கநிலைத் துலங்கலை இங்குச் சிறிது உற்று நோக்குவோமாக.

## II. நரம்பமைப்பு

வளர்ச்சி :— வளர்ச்சி என்றால் தசை உரம் பெற்று வளர்வது என்பது தெளிவாம். தசையானது ஊட்டம் பெற்று வளர்ந்தால் மட்டும் போதாது. அத்தசைகளை இயக்குகிற நரம்-பமைப்பும் முற்றிவர வேண்டும். தசை வளர்ச்சியினை அறுதி-யாக அளவிட்டுக் கூறுவது அருமையாம். நம்மால் அடக்கி ஆள முடியாத பல காரணங்களின் பயனாக இயக்கத்தினைத் துலக்கும் தசைச் சுருக்கம் எழுகின்றது. உடல் உறுப்புக்-களும் முற்றி வரவேண்டும்; வளர்ச்சியும் நிகழ்தல் வேண்டும். இவை இரண்டினையும் வேறு பிரிக்க முடிவதில்லை. உடல் வளர்ச்சி என்றால் உடலமும் உடல் உறுப்புக்களும் பெருகித் தம்முழுநிலையின் எல்லையை அடைந்து விளங்குவதாம். முற்றுதல் என்றால் வளரத் தொடக்கிய உறுப்புக்களும்

அமைப்புகளும் தம் கடமையைக் கடைபோகச் செய்யக்கூடிய செவ்வியடைந்து நிற்றலாம். இங்ஙனம் கூறியதில் நின்றுமே இவை இரண்டும் ஒன்றை ஒன்று அவாவி நிற்கின்ற நிலையும், இவற்றைப் பிரித்தறிய வாராத இணக்கமும் நன்கு புலனும்.

நரம்பு வட்டம் :— பலவேறு இயக்கங்கள் எழுவது பலவேறு நரம்புத் தொடர்கள் அமைந்திருப்பதாலேயாம். தசைகள் இயங்குவது நரம்பினாலே; ஆதலின் நரம்புகளைப்பற்றி ஒரு சிறிது அறிந்து கொள்வதும் நலமே ஆம். உலகம் பலவகையாக நம்மீது ஊன்றிவருகிறது. அதற்குத் தக்கவாறு அதன் எதிரே நாமும் பலவகையாக எதிரூன்றி வருகின்றோம். உலகம் ஊன்றிவருதல் உடலிற் படுமிடமே புகுவாயாம் (Receptor); எதிர் ஊன்றி இயங்குமிடமே இயங்குவாயாம் (effector). இவை இரண்டினையும் பொருத்திவைக்கும் இடமே பொருத்துவாயாம் (adjustor). இடிகேட்டதும் திடுக்கிடுகின்றோம். இடி புலனாகும் உடலமைப்பே செவியாம். இவ்வாறு புலனாகும் இடங்களில் ஒவ்வோர் எந்திர அமைப்பு இருத்தலின் அவ்விடங்களைப் பொறிகள் என்பர். ஒலியைக் கவரும் பொறி செவியேயாம். செவியின் அடியில் ஒலி நரம்பு (auditory nerve) தொடங்குகிறது. அதுவே புகுவாய் நரம்பாம் (Sensory nerve). இது உள்செல் நரம்பாம் (afferent nerve). இந்த நரம்பு, பொருத்துவாயாக அமைந்த நடுவிட அமைப்பில் (Central nervous system) போய் முடிகிறது. நடுவிட அமைப்பில்தான் முன் மூளையும் (Cerebrum) சிறு மூளையும் (cerebellum) முகிழி மூளையும் (Medulla oblongata) கிடக்கின்றன. அங்கே எழும் பொருத்தத்திற்கு ஏற்ப, இயக்கவகை வெளிச்செல் நரம்புகள் (Efferent nerves) வழியாகத் தசைகளை இயக்கும் கட்டளை-

யானது நரம்புகளுள் பாய்கிறது. பின்னர் அது தக்க தசைகளை இயக்குதல் காரணமாகத் திடுக்கிடுதல் என்ற எதிர் ஊன்றல் தோன்றுகிறது.

கப்பர் சட்டம் :— நரம்பு நரம்பணுக்களால் ஆகியதாம். நரம்பணுவின் (neurone) உடலம் இடையே கிடக்க, நரம்பணுவின் மூளை (axon) ஒன்ருய் ஒருபுறம் ஓட, நரம் பணுவின் வேர்கள் (dendrites) பலவாய் மற்ருெரு புறம் ஓட அமைந்திருக்கக் காண்கிருேம். இந்த வேர்கள் வளர்வதனைப் பற்றியதோர் உண்மையைக் கப்பர் என்பவர் விளக்கிவைத்துள்ளார். அதனை அவர் பெயர்கொண்டே கப்பர் சட்டம் என உலகம் வழங்கிவருகிறது (Kapper's law of neurobiotaxis). 'புகுவாயினின்றும் இயங்குவாயை நோக்கி ஆற்றல் பாயும்போது நரம்பணுக்களின் புகுவாயிலிருந்து ஆற்றலை நோக்கி இருக்கும் புறத்தே இந்த வேர்கள் தோன்றிப் பல்குகின்றனவாம்.' என்பதே அந்தச் சட்டம்.

நரம்போட்டம் :- புறத்தேயுள்ள ஒலி முதலியனவாகிய ஆற்றல், புகுவாய் நரம்பின் தொடக்கதிலுள்ள நரம்பணுவைத் தாக்க, அது அடுத்த நரம்பணுவைத்தாக்க,இவ்வாறு தொடர்சியாய் அணுக்களின் வழியே பொருத்துவாயை ஆற்றல் அடையுமாம். அவ்வாறே ஒரு நரப்பணு மற்ருெரு நரப்பணுவை இயங்குகின்ற தொடர்ச்சி நிலையில், அவ்வாற்றல் பொருந்துவாயில்வந்து முடிந்து, வேண்டிய செயலை எழுப்பி விடுகிறதாம். ஒரு நரம்பணுவிலிருந்து மற்ருெரு நரம்பணுவிற்குப் போவது யாது? ஒருவகை ஆற்றலே பாய்கிறது எனலாம். இதனை மின் ஓட்டத்தோடு ஒப்பிடுவோரும் உளர். நரம்பணுவில் எழும் வேதிமாற்றம் (Chemical change) பாய்கின்ற ஆற்றலே என்பர் பலர்.

கூடல்வாய் :— ஒரு நரம்பணுவிற்கும் மற்றொரு நரம்பணுவிற்கும் இடையே சிறிது வெளியிடமுண்டு. இதனைக் கூடல்வாய் (Synapse) என வழங்குகின்றனர். மேலே சுப்பர் கண்ட உண்மை இந்தக் கூடல்வாய் நிலைபேறடைந்து விளங்குதலையே தெளிவுறுத்துகிறது. கூடல்வாய், ஒருவழி மூடி (Valve) போல நிற்கின்றது. ஆற்றலை ஒரேவழியாகத் தான் இக்கூடல்வாய் ஓடச்செய்கின்றது; எதிர்வழியாக ஓடவிடுவதில்லை. ஒரு நரம்பணுவிற்கும் மற்றொரு நரம்பணுவிற்கும் இடையே தொடர்பொன்றும் இன்றி வெள்ளிடையே தோன்றுதலால் முதலில் நரம்புக்கிளர்ச்சி ஓடுவதற்குத் தடையாகவே இக்கூடல்வாய் விளங்குகின்றது. ஒருமுறை தன் வழியே ஆற்றல் ஓடிப் பாய்ந்ததும் பின் எல்லாம் அதே வழியாக, அக்கூடல்வாய், ஆற்றலை எளிதே பாயவிடுகின்றது. இதன் காரணமாகவே பழகிய சில குறிப்பிட்ட வழியாக ஆற்றல் பாய்ந்தோடி வழக்கங்களை வளர்க்கும் நிலை ஏற்படுகின்றதாம்.

கட்டு நிலை :— தொடக்கத்தில், கருப்பையில், நரம்புக் கிளர்ச்சி பாயப் பழகிய வழி ஒன்றும் ஏற்படாமையால் எல்லாப் புறத்திலும் பாய்கின்றது. குழவி பிறந்து வளர்ந்து முதுமை அடைந்த பின்னும் இந்த முதல் நிலையைக் காணவேண்டுமானால், கூடல்வாயில் ஏதேனும் நஞ்சினை ஊட்டியதும் காணலாம். உடனே குறித்ததொருவழியில் மட்டும் ஆற்றலைப் பாய்ச்சித் திருத்தும் இயல்பு கூடல்வாயில் கெட்டுப் போகின்றது. ஆற்றல் சுற்றும் முற்றும் எங்கும் பாய்கிறது. நரம்பமைப்பு முதலில் இவ்வாறு எப்புறத்தும் பாய்கின்ற கட்டற்ற நிலைகெட்டு, ஒருவழியே மட்டும் பாய்கின்ற கட்டுற்ற நிலை எழுந்தால் மட்டுமே நரம்பமைப்பு திறம்படச் செயலுறும். ஒவ்வொரு நிலையிலும் உடம்பு அனைத்தினையும்

ஆட்டிக் கொண்டிருப்பதால் பயன் என்ன? அந்த அந்த நிலைக்கு ஏற்பக் குறிப்பிட்டதொரு செயல் எழுந்தாலன்றோ வாழ்க்கை வெற்றி பெறுதல் கூடும்? ஒருவழி பாய்கின்ற நிலையை வளர்ப்பது கூடல்வாயே ஆம்.

நரம்புவட்ட வளர்ச்சி :- நமது கண்ணைக் குத்த ஒருவன் கையைத் தூக்கிக்கொண்டு வருகிறான். நம் கண் இமைகள் நம்மையும் அறியாமல் மூடிக்கொள்கின்றன. இவ்வாறு புகுவாயும் இயங்குவாயும் நேரே தொடர்ந்து நிற்பதனைக் கீழ் நிலை நரம்புத்தொடர் (Sensori - motor arcs of the spinal level) அல்லது வட்டம் என வழங்கலாம். இத்தகைய நரம்புத் தொடர் வட்டங்கள் பலவும் ஒன்றோடொன்று முரண்படாது ஒருங்கு இயைந்து இயங்க வேண்டுமானால் அவை ஒன்றோடொன்று தொடர்பு பெற்று விளங்குதல் வேண்டும். இந்தத் தொடர்பும் பல பல வட்டங்களாக இயைபுபெற்று அமைந்து இடைநிலை நரம்புத்தொடர் அல்லது வட்டம் (arcs of the intermediate level) எனப் பெயர்பெறும். இந்த இடைநிலை நரம்புத் தொடர்களும் ஒருங்கு இயைந்து இயங்குமாறு பல வேறு வட்டங்களாக இணைந்துள்ளன. இவையே மேல்நிலை நரம்புத் தொடர்கள் அல்லது வட்டங்கள் (arcs of the higher level) எனப் பெயர் பெறும். கீழ்நிலை நரம்புத்தொடர் முதுகந்தண்டோடு தொடர்பு பெற்று விளங்கும். மற்றைய இரண்டு வட்டங்களும் மூளையோடு தொடர்பு உடையனவாம். பிறக்கும் பொழுதே இடைநிலைத் தொடர் முற்றி நிற்கக் காண்கிறோம். மேனிலைத் தொடரோ பிறந்த பின்னரே தொடர்பு பெற்றுப் பல்கிப் பெருகிவருகிறது.

## III. மறிவினைக் கொள்கை

சூல்நிலை :- முதல் முதல் இயக்கம் எவ்வாறு எழுகிறது? இயங்குதினைப்பொருளெனச் சிறப்பிக்கப் பெறுவன இயங்கத்

தொடங்குவதுதான் எங்ஙனம்? பிறப்பதற்கு முன்னரே கருப்பையில் ஏற்படும் அழுக்கத்தினுலோ, சூற்பிண்டத்தின் உள்ளிருந்து எழும் தூண்டுதலாலோ இயக்கநிலை எழுகிறது. கூடல்வாய் முற்றி அமையாமையால், ஆற்றல், குறிப்பிட்ட ஒரு வழியே பாயாது எங்கும் புரண்டு பாய்கிறது. சூல் முழுதும் முறுக்கிக்கொண்டு வளைகிறது. தற்செயலாகச் சில தசைகள் இயங்குவது உடல்நிலைக்குப் பெரும்பயனை விளைத்தலின் அந்நரம்பும் அத்தசையும் தொடர்புறுகின்றன. அந்த இயக்கமும் பழக்கமாகப் படிந்துவிடும். பிறந்த பின்னரும் இவ்வாறு தற்செயலாக எழும் இயக்கங்கள் பலப்பலவாம். நரம்பமைப்பு முற்றிவரவில்லை என்பதனை நோக்கமற்ற இந்த இயக்கங்களே நன்கு விளக்கிவைக்கின்றன. குழந்தை வளர வளரத் தற்செயலாகத் தனிப்பட்டு எழும் இயக்கங்கள் ஒருங்கிணைந்து தொழிலுறும் இயக்கங்களாக மாறிவரக் காண்கிறோம்.

பற்றுமறி (Grasp Reflex):— இது எவ்வாறு வளர்கின்றது என்பதனை விளக்கப் 'பற்று மறி' என்பதனைச் சிறிது ஆராயலாம். தற்செயலாகத் தொழிற்படும் இயக்கங்களில் ஒன்று, கருப்பையிற் கிடக்கும் சூலின் விரல்களை அதன் உள்ளங்கையின் உள்ளே உறுத்திவைக்கின்றது. அவ்வாறு உள்ளங்கையை உறுத்துகின்ற உணர்ச்சியும் எழுகின்றது. இந்த உணர்ச்சியே முன் எழுந்தசெயலை மனத்தில் நன்கு பதியவைத்து வற்புறுத்துகிறது. இயக்கத்தினைப் புலனாக அறிகின்றோம் என்றும் அந்த இயக்கப்புலனை அறியும் பொறி தசையிலே உள்ளடங்கிக் கிடக்கின்றதென்றும் முன்னரே கண்டோம். இயக்கப் பொறி, செயலை நிலைபெறவைப்பதற்கு இன்றியமையாது வேண்டப்படும் என்பதனை நாம் மறத்தலாகாது. இந்த இயக்க உணர்ச்சி புகுவாய் வழியாகப் பாயும்-

போது எங்குப்போய் முடியும்? இந்த உணர்ச்சி எழும்போது நரம்பாற்றல் எந்த இயங்குவாய் வழியாய்ப் பாய்ந்ததோ அந்த வழியாகவே மறுமுறையும் பாயும். அண்மையிற் பாய்ந்து பழகிய இடம் அதுவே அன்றோ? அவ்வாறு பழகிய இடத்திலேயே பாயும் எனவும் கண்டோம். இதன் பயனாக மேலும் விரல்களை மூடிக் கையை அச்சூல் இறுக்கிக்கொள்ளு-கிறது. இயக்க உணர்ச்சி இயக்கத்தினையும், இயக்கம் இயக்க உணர்ச்சியினையும் தொடர்ந்து வற்புறுத்திவரும். இதனால் கையிற் பட்டவுடன் எந்தப் பொருளையும் பற்றிக்கொள்ளுவ-தாகிய பற்றுமறி நிலைபேறு அடைகிறது. இதனால் இயக்-கத்தின் கோலம் (Pattern) ஒன்று தனியே அமைகின்றது. சுற்றுப்புறச்சூழலை அடக்கி ஆளும் கருவியாக இதுவே பயன்படுகிறது.

இயக்கங்களின் வகை :— இவ்வாறு இயக்கங்கள் பல வகையாம். சிற்றுறுப்புக்களின் இயக்கங்களும் ஊன்றி ஆராயத் தக்கனவேயாம். கண்ணின் இயக்கம் விரல்களின் இயக்கம் முதலியவை, பின்னே பின்னே எழும் பிற இயக்கங்-களில் எல்லாம் ஒருங்கியைந்து வரக் காண்கிறோம். நம் அறிவு வளர்ந்து விரிவதும் ஒருவகையாக நோக்குமிடத்து இவ்வாறு ஒருங்கியைந்து வருதலாகவே தோன்றும். "எந்த உறுப்பு இயங்குகிறது? எந்த முறையில் இயங்குகிறது? எவ்வளவு இயங்குகிறது" என்று எல்லாம் கண்டுவைத்து ஒப்பு நோக்குதல் வேண்டும். சில இயக்கங்கள் தாமாகவே எழும் இயக்கங்களாம். இவற்றில் சில விரும்பத்தக்கவை; சில கொள்ளத்தக்கவை; சில தள்ளத்தக்கவை; சில தடுக்கத்-தக்கவை. குழவி குதித்து வருமானால் அதனைத் தடுக்க வேண்டியதில்லை. குழவி நன்றாக ஊட்டம் பெற்று வளர்கிறது என்பதன்றோ அங்கு விளங்குகிறது? வாளா விரலைத் தெறித்துக்

கொண்டே இருக்குமானால் அத்தகைய பயனற்ற செயலைத் தடுக்கத்தான் வேண்டும். இவை தற்செயலாகவும் எழலாம்; பழக்கமாகவும் படிந்திருக்கலாம்; குழவி களைத்துப்போயினமையாலும் இவை தோன்றலாம். இவற்றைத் திருத்தாமற் போனால் வளர்ச்சி முன்னேறுவதற்கு மாறாக பின்னேறிப் போகக் காண்போம். முடிவில், முதியோனும் புனிற்றிளங் குழவிபோல நோக்கம் என்பது ஒன்றுமே இன்றி இயங்கி வருவான். நிற்க. வேறு சில தாமே எழும் இயக்கங்களாக இல்லாமல், வேறு சில ஊன்றலுக்கு எதிர் ஊன்றலாக எழும் இயக்கங்களாக விளங்குகின்றன. இந்த எதிர் ஊன்றல்கள் விரைந்து எழுவனவாகவும், காலந் தாழ்ந்து எழுவனவாகவும் இரண்டு வகையாக இருக்கக் காண்கிறோம். புகுவாயிலோ, இயங்குவாயிலோ ஏதேனும் ஓர் குறைபாடு தோன்றுவதால் காலந்தாழ்த்தல் நிகழ்கிறது. விளையாடல்களில் பெரிதும் பழகிவருவதால் எதிரூன்றல் விரைந்து எழுந்து தக்கவழியில் இயங்கத் தொடங்குகிறது. ஆனால் மிகவிரைந்து எதிரூன்றல் வருவதும் விரும்பத்தக்கதன்றும். தாமாக எழும் இயக்கங்கள், எதிரூன்றல்களாய் எழும் இயக்கங்கள் என்ற இரண்டு வகையினும் வேறாகத் 'தொடர்ந்து .பரவும் இயக்கங்கள்' என மூன்றாவது வகையும் உண்டு. புன்னகை புரிவது என்றால் எத்தனை தசைகள் ஒருங்கியைந்து இயங்குகின்றன? வெகுண்ட நிலையாக எழும் இயக்கங்களும் இத்தகையனவே.

முதலாண்டைய இயக்கம் :— இந்த இயக்கங்களின் பல வகையினை உணர்வதற்குக் குழவியின் இயக்கங்கள் சிலவற்றை ஆராய்வோமாக. முதல் திங்களிலே வாயினைச் சுற்றியே இயக்கங்கள் எழுகின்றன. பால் குடித்தல் அழுதல் முதலிய இயக்கங்களைக் காண்க. இவற்றிற்குப் பின்னர், நெற்றியிலே இயக்கங்கள் பல எழுகின்றன. ஒளி வேறுபாட்டினாலே

கண்ணை அப்புறமும் இப்புறமும் திருப்புவதற்கு ஏற்பப் பல தசைகளையும் சுருக்குவது நெற்றியிலே நிகழக் காண்கிறோம். இதற்குப் பின்னுக எழும் இயக்கங்கள் முழங்கையைப் பற்றியினவாம். கையிற்பட்ட பொருளை வாயிற்கொண்டு போகும்போது முழங்கை அன்றோ இயங்குகிறது? மூன்றுந் திங்களுக்குள் கண் வழியாகவும், காது வழியாகவும் சில இயக்கங்களைக் குழவி அடக்கி ஆண்டு வருகிறது. ஒளிவரும் வழியாகக் குழவி தலையைத் திருப்புகிறது. இப்போதும் ஊன்றல்கள் ஏதோ சில எதிரூன்றல்களை எழுப்புகின்றனவே அன்றி இந்தவகையில்தான் அந்த எதிரூன்றல்கள் எழ-வேண்டும் என எதிரூன்றல்களை ஊன்றல்கள் வரையறுத்து எழுப்புவதும் இல்லை; துணை செய்து வழிகாட்டுவதும் இல்லை. மூன்றும் நான்காம் திங்களில் குழவி இடையே ஒரு ஒற்றுமையைக் காண்கிறோம். தாமாக எழும் இயக்கங்கள் இன்னும் மறையவில்லை; தோன்றியே வருகின்றன. குழவி பொருள்களைத் தொட்டுப் பார்க்கிறது. அங்கும் இங்கும் வாளா அதன் கண் திரிந்து அலைகிறது. உடனே பளபளப்-பான பொருள் ஒன்றைக் கண்டதும் நோக்கமற்ற இச்-செயல்கள் நின்று விடுகின்றன. இவ்வாறு அமைந்து கிடக்கும் நிலையே குழவி முதல் முதல் ஊன்றிக் கவனிக்கும் நிலையாம். இத்தகைய இடையீட்டின் போதுதான் நரம்பணுவின்வேர் வளரும்போலும். ஆறு, ஏழு, எட்டாம் திங்களில் குழந்தை பல பொம்மைகளைப் பலவேறு நிலைகளில் இயங்கிக் கண்டு வருகிறது. இந்த நிலைகளில் பலவேறு உறுப்புக்களின் இயக்-கங்கள் பலவேறு கோலங்களாக இயைந்து நின்று காட்சி தருகின்றன.

இயக்கம் எண்ணமாதல் :— அகத்தே உள்ள பலவேறு நரம்பணுக்களும் பலவேறு வகையில் தொடர்புற்றுப் புதுப்

புதுக்கோலங்களாக விளங்கி வருகின்றன. தற்செயலாக நிகழும் இயக்கங்களாலும் குழவி வேண்டியவாறு இயக்கங்களை எழுப்பக் கற்றுக்கொள்கிறது. சிலவேறு இயக்கங்களைச் செய்ய முயன்று வெற்றி பெறும்போது திருப்பித் திருப்பி அத்தகைய இயக்கங்களைச் செய்யக் குழவி விரும்புகிறது. அது ஓர் எழுத்தையே திருப்பித் திருப்பிச் சொல்லி அலப்பிக் கொண்டு இருக்கக் காண்கிறோம். இந்த இயக்கநிலைகள் பல-வேறு சாய்வு வீத நிலையிலும் (Gradient) பல வேறு வகையிலும் விளங்கிவருகின்றன. எத்தனையோ இயக்கப் புலன்கள் (Motor sensations) எழுகின்றன. எத்தனையோ நரம்பணுக்கள் பலவகையான தொடர்பு பெற்றுச் சிறக்-கின்றன. குழவி சுற்றுப்புறநிலைப் பொருள்களைத் தன்னோடு பொருத்தி ஒற்றுமைக் காட்சியாகக் கண்டு அவற்றைக் கொண்டு தான் செய்யும் இயக்கங்களாகவே அவற்றை உணர்-கிறது; அப்போது அவை அனைத்தினையும் ஒற்றுமை இயக்க-மாகத் தன் நரம்பமைப்பே தனக்கு உணர்த்த உணருகிறது குழவி; இதுபோது அவற்றிடையே, பந்து என்றும் பொம்மை என்றும் தனிப்பொருள்களையும் இவ்வாறு இயக்கவடிவமாம் தனிப்பொருள்களாகவே உணர்கின்றது. வெவ்வேறு வகையாக அத்தனிப் பொருள்களைக் கையாளும்போது எழுந்த நரம்புத் தொடர்களின் பயனாக, வேறு வேறு இயக்கவுணர்வாக உணர்ந்த பழக்கத்தாலேயே தனிப்பொருள்களின் உணர்வு எழுகிறது எனலாம். தனிப் பந்தின் எண்ணமும் தனிப் பொம்மையின் எண்ணமும் இந்த உணர்வேயாம். இயக்கவளர்ச்சி எண்ண-மாகப் பழுப்பது இவ்வாறேயாம்.

சாயல் பிடித்தல் :- திருப்பித் திருப்பி ஒன்றையே செய்து வருவதில் குழவிக்குப் பெருவிருப்பம். நரம்பாற்றல் அண்மையிற் பாய்ந்த வழியிலேதான் பாயும் எனக் கண்டோம்.

பெரியோர் செய்வது போலச் செய்து சாயல் பிடிப்பதிலும் குழந்தைக்குப் பெருவிருப்பமே. குழந்தை பால் உண்கிறது; தாய் புன்னகை புரிகின்றாள். குழவியும் அங்ஙனமே சாயல் பிடிப்பதுபோலப் புன்னகை புரிகின்றது. முகத்திலிருக்கும் தசைகள் அமைதி அடைந்து சுருங்குகின்றன. குழவியின் முகத்திலும் புன்னகை தோன்றுகிறது. புன்னகையானது இன்பநிலையோடும், உணர்வோடும், தாயின் புன்சிரிப்போடும் ஒருங்கு இயைந்து இனியதாகின்றது. தானாகத் தற்செயலாய் குழவியின் இடையே எழும் இயக்கத்தோடு மற்றொரு-வரிடையே எழும் இயக்கம் ஒத்திருக்குமானால் அந்த இயக்கம் குழந்தையின் நரம்பமைப்பில் முன்னமே இயங்கிப் பழகிய நரம்பணுக்களைத் தூண்டி அதே இயக்கத்தை வேண்டியபோது செய்யக் கூடிய நிலையை உண்டுபண்ணிவிடுகின்றது.

முந்நிலைக் கோலம் :- திரும்பத் திரும்ப ஒரே வகையாக இயங்கவேண்டி நரம்பணுக்கள் பல வகையான கோலங்களாக அமைந்து விளங்கி வருகின்றன எனக் கண்டோம். தாம் அமைந்து வரும் முறைக்கு ஏற்ப இந்தக் கோலங்கள் பல வகையாகப் பல்குகின்றன. நரம்பமைப்பில் இயற்கையாகப் பிறக்கும்போதே விளங்கும் கோலங்களை முதல் நிலைக் கோலங்கள் எனலாம். பின்னே உடற்கூறு இயங்கிவரும்போது பொதுத் தொடர்புகள் தோன்றுவதால் உடற்கூற்று இயக்கக் கோலங்கள் தோன்றுகின்றன. இவை முதல்நிலைக் கோலங்-களோடு தொடர்புடையனவாம். பின்னே தோன்றும் கோலங்கல் அழிக்கப்பெற்று வேறு தொடர்களோடு இயைந்து பொதுக் கோலமாக வளரலாம். எனவே, அடிப்படையான முதல்நிலைக் கோலங்கள் சில என்றும், இவற்றின் இயைபால் எழுகின்ற இரண்டாம் நிலைக் கோலங்கள் சில என்றும் கூறலாம் என்பதாயிற்று. இந்த இரண்டாம் நிலைக் கோலங்-

களின் இயைபினால் எழும் மூன்றாம் நிலைக் கோலங்களும் சிலவாம்.

எடுத்துக் காட்டு :- இவற்றிடையே விளங்கும் வேற்றுமையை ஓர் எடுத்துக்காட்டு கொண்டு விளங்குவது ஏற்புடைத்தாம். விரலை மடக்குவது என்பதனை எடுத்துக்கொள்வோமாக. தானாக இந்த இயக்கம் எழலாம். இது முதல் நிலைக் கோலமாம். எதிரே நிற்கின்ற தாயானவள் விரலை மடக்கிக் கொள்வதனைக் கண்டு குழவி தானும் விரலை மடக்கலாம். இது இரண்டாம் நிலைக் கோலமாம். ஈரமான களிமண் கிடைத்ததும் அதனைப் பிசைந்து விளையாடுகிறது குழந்தை. பின்னர்க் குழவியின் படைப்புத் தொழில் தொடங்குகிறது. தான் கண்ட பொருள்களைப்போல் எல்லாம் களிமண்கொண்டு செய்ய முயல்கிறது. அப்பொருள்கள் ஊனக்கண் எதிர் இல்லை; மனக்கண் எதிரேயே உண்டு. குழவி அப்பம் சுடுகிறது. புளியங்கொட்டை கொண்டு வீட்டின் கூடம் நிறையப் பெரிய பெரிய வீடுகளைக் கட்டுகிறது. இங்கும் விரல் மடங்கக்காண்கிறோம். ஆனால் இங்கெல்லாம் தான் படைக்கப் போகும் பொருளைப்பற்றிய உணர்வு முன்னாக மனத்தகத்தே தோன்ற அந்த உணர்வினைப் பின்பற்றிக் குழவி வீட்டையும் பொருளையும் படைத்து வருகின்றது. அதன் வெற்றியைக் கண்டு அடுத்துள்ளாரும் அதனை வாரி அணைத்து முத்தம் இடுகின்றனர். அதனால் அச்செயல்கள் வலியுற்று நிலைபேறடைகின்றன. இவை எல்லாம் மூன்றாம்நிலை, நான்காம்நிலை நரம்பணுக்கோலங்களாக அமைந்த நரம்புத் தொடர்களின் பயனே ஆம்.

## IV. இயற்கைச் செயல்

நம்ப முடியுமா :— இந்த முறைப்படி இயக்கங்கள் எல்லாம் மறிவினைகளாகவே முடியும். முன் முன்னாக நரம்

பாற்றல் ஓடிய வழியே நரம்பணுக்கள் தொடர்புற்று விளங்குவ-தாலே, பின் பின் எழும் இயக்கங்கள் முன்னைய முறையாகவே எழுந்து விளங்குகின்றன என்றாகும். பல ஆசிரியர்கள் இதனை ஒப்புக்கொள்வதில்லை. குழவியின் கண் பொருள்களைப் பார்க்கும்போது பாவை சுருங்கியும் விரிந்தும்வர, இரண்டு கண்மணிகளும் ஒருங்கியைந்து காண்கின்ற நிலையில் எழும் இயக்கங்களை முன்னரே கண்டோம். கண்ணின் பின்னே காட்சிப்புலனை மூளைக்குக் கொண்டு செல்லும் காட்சி நரம்பு கண்ணை ஒட்டிக்கிடக்கின்றது. இதுவே கண் நரம்பாம். மேலே கூறிய மறிவினைக் கொள்கைப்படி கண்ணை இயக்கும் நரம்பு ஒவ்வொன்றோடும், கண் நரம்பு பல்வேறு வகையில் தொடர்புண்டு கிடத்தல் வேண்டும். கண்ணின் இயக்கமோ, பார்ப்பதற்கு முன் கண் இருந்தநிலை, பார்க்கும்போதிருக்க வேண்டியநிலை என்ற இவற்றை எல்லாம் பொறுத்திருக்கும். கண் உணர்வு வழியேதான் நம் இடவுணர்வு எழுகின்றது. எத்தனையோ வெவ்வேறு கோணங்களிலிருந்தும் உலகினைக்-கண்டு வருகின்றோம். இத்தனைக்கோடி வேற்றுமைக்கும் அடிப்படையாகக் கோடி கோடித் தொடர்புகள் நரம்பமைப்பில் விளங்குகின்றன என யாரேனும் நம்பமுடியுமா? கண்ணில் புல அமைப்பும் இயக்க அமைப்பும் தனிப்பட்டு நிற்காமல் ஒன்றாக இயைந்த உடற்கூற்றியக்க அமைப்பாக விளங்குகின்றன எனல் வேண்டும். அந்த அமைப்பின் உள்ளே சமநிலை மாறும் போதெல்லாம், ஒவ்வோர் உறுப்பும் மற்றைய உறுப்புக்களோடு ஒருங்கியைந்து இயங்கிச் சமநிலையைக் காத்துவருகின்ற இயல்பும் அந்த ஒற்றுமை அமைப்பில் திகழ்கின்றது என்பர் கோவ்கா முதலிய ஆசிரியர். இந்த அமைப்பு எவ்வளவு சிக்கலற்ற நிலைமையில் இருக்க முடியுமோ அவ்வளவு சிக்கலற்ற நிலையில் அமைந்து அப்போதைக்கு அப்போது, சமநிலை பிறழ்ச்சி எழும்போதெல்லாம், திருத்தமுற்றுச்

சமநிலை அடைந்து மாறிக்கொண்டே வருகிறது. சமநிலை என்பது பொருத்தமுற்றுத் திருத்தம் பெற்ற நிலையேயாம்.

சேவிப்புலச் சான்று :- செவிப்புல உணர்வு எழும்போது விளங்கும் இயக்கங்கள் இதனை வற்புறுத்துகின்றனவாம். ஒலி இரு செவிகளையும் ஒரே பொழுதில் வந்து அடைவதில்லை. ஒரு செவியைக் கடந்து மற்றொரு செவியை அடைவதற்குச் சிறிதுநேரம் பிடிக்கும். ஒரு செவியினைவிட மற்றொன்று சிறிது தொலைவில் இருக்கின்றது. ஒலியும் தொலைவிற்கேற்ப காலம் தாழ்த்து ஓடிவரும். எனவே குழவி ஒலிவரும் பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொடுக்கிறது. வலப்புறத்திலிருந்தோ, இடப்புறத்திலிருந்தோ ஒலி வருமானல் அது வரும் இடத்தைத் தவறின்றிக் குறித்து உணர்வது இந்த வகையால் எளிதாம். மேலிருந்தோ கீழிருந்தோ ஒலி வருமானல் அப்போது ஒலி எழும் இடத்திலிருந்து செவிவரையிலுள்ள தூரம் இரண்டு செவிக்கும் ஒன்றேயாம். ஆதலால் அந்த இடத்தை அவ்வாறு குறித்தறிய முடிவதில்லை. தும்மல் போன்ற சிறு ஒலிகள் எழுந்தாலும் குழந்தை அதன் பக்கமாகத் திரும்புவதில்லை. தொடர்ந்து ஒலி எழுந்தால் மட்டுமே குழவி தலையைத் திருப்புகிறது. சில ஒலிகளைக் குழவி கேட்பதே இல்லை; சில ஒலிகளை வேறுபிரித்து அறியவே முடியாது. இந்த இயக்கங்கள் அனைத்தும் உள்ளே கிடக்கும் நரம்பணுக்களிடையே பழக்கமாகிவிட்ட தொடர்நிலையால் எழுவன அல்ல. புலநிலையும், இயக்கநிலையும் உடற்கூற்று இயக்க அமைப்பாக ஒருங்கு இயைந்து நிற்கின்ற நிலையையே இவை அனைத்தும் வற்புறுத்துகின்றன. முதல் முதல் எழும் இயக்கங்களில் என்ன பழக்கத்தை நாம் எதிர்பார்த்தல் கூடும்?

மறிமாற்றம் :— வேறு சில இயக்கங்களும் இந்த உண்மையை வற்புறுத்தக் காண்கின்றோம். பிறந்த

குழந்தையின் உள்ளங்காலைத் தொட்டதும் கால்விரல்கள் மேற்பக்கமாகத் தூக்கிக்கொள்கின்றன. சில நாட்கள் ஆனதும் இந்த முறை மாறி விடுவதால் கால்விரல்கள் கீழ்ப்புறமாக மடிகின்றன. பழக்கத்தால் தொடர்புற்றவை இவ்வாறு மாறுவானேன்? இந்த மாற்றம் குழவியின் நன்மையை நோக்கியதாம்; பழக்கத்தால் எழுவது எனக் கூறுவதற்கு இல்லை.

முதல்நிலையும் முடிவுநிலையும் :— பால்குடிக்கும் தொழில் முதலியன நரம்பணுக்களின் தொடர்பினாலேயே எழுவன எனக் கூறுவதற்கு இடமில்லை. பிறந்ததும் எழுகின்ற இத்தகைய செயல்கள் பிறப்பதற்கு முன்னரே தொடராக அமையப் பழகுவது எங்ஙனம் கூடும்? இத்தகைய செயல்களை 'இயற்கைச் செயல்நிலை' என்று (Instinct) ஒரு சில அறிஞர் வேறு படுத்திக் கூறுகின்றனர். இவை 'பசி ஆறுதல்' முதலிய முடிவினையே நோக்கி நிற்கின்றன. பிற இயக்கங்கள் ஊன்றுதலும், எதிர்ஊன்றுதலுமாகவே விளங்குகின்றன. இயற்கைச் செயல்களோ முடிவுநிலையால் சிறப்புறுவன. பிறசெயல்களோ தொடக்க நிலையால் சிறப்புறுவன. இயற்கைச் செயல்கள் பிற செயல்களினும் சிக்கலுற்றனவாம்; எத்தனையோ தசைகள் ஒருங்கு இயைந்து இயங்கவேண்டும். பால் குடிக்கும் செயல்நிலையைப் பசி எடுக்கும்போது தூண்டுவது பாலேயாம். பாலின் இயல்பிற்கேற்ப இச்செயல் மாறுபடும். போதிய அளவு தித்திப்பு இல்லையானால் குழவி அப்பாலைக் குடிக்க மறுக்கின்றது. எனவே தூண்டுதல் நிலையில் எழும் நுட்பமான இத்தகைய மாறுதல்களால் இவ்வாறு குடிப்பதும், மறுப்பதுமாகிய முரண்பட்ட செயல்களும் எழலாம். முழுதுமாய் ஒற்றித்து நிற்கும் உடல் நிலையில் குறிப்பிட்டதோர் நிலை ஏற்பட்டால் மட்டுமே இத்தகைய இயற்கைச் செயல்நிலை

இயங்கும். பசி இல்லை ஆனால் பால் குடிப்பது எங்கே? முன்னைய அநுபவம் ஒன்றும் இல்லாதபோதும் இயற்கைச் செயல்நிலை இயங்கும். பால் குடித்து அறியாத குழவி பிறந்ததும் பால் குடிக்கின்றதன்றோ? இயற்கைச் செயல்நிலைகள் மறிவினைகளின் தொடரே என்ற கொள்கையைப் பின்னரும் ஆராயவேண்டிவரும். ஆதலின் இங்கே இவ்வளவில் அமைதல் வேண்டும்.

## V. உயிர்க்கருவின் திருவிளையாடல்

வாழ்க்கை மண்டலம் :— "உடல் வழியே உயிர்க்கரு உருப்பெற்று வருகின்றது." என மாண்டிசோரி அம்மையார் கூறியதனைக் கண்டோம். இக்கருத்திற்கும் இயக்கத்தின் துலக்கத்திற்கும் உள்ள தொடர்பினையும் அந்த அம்மையார் விளக்கி உள்ளனர். மனிதன் தன் கையைக்கொண்டு உழைத்தே தன்னை வளர்த்து வருகின்றான். பறவைகள் முதலியனவோ இயற்கையினிடையே உணவினை எளிதிற் பெறுகின்றன. மனிதனே தனக்கு வேண்டியவை அனைத்தினையும் மனிதனிடத்தேயே பெறுகின்றான். இயற்கைக்கும் அப்பாற்பட்டதேயாகிய கடவுள்தன்மை சான்ற கூட்டுறவுவிளங்குகிற சுற்றுப்புறச் சூழலில் வாழ்க்கையின் வேலைப்பாட்டாலேயே இந்த உலகம் காக்கப்பெற்று வருகின்றது. உலகினைச்சுற்றி நிற்கும் வாயு மண்டலம் போல இயக்க வடிவாம் வாழ்க்கை மண்டலமும் விளங்குகிறது. படைப்புத் தொழிலாக வேலை செய்யுமோர் உட்பாடும் குழவியிடத்தே இயற்கையாகவே விளங்குகிறது. அதனை மறைத்துமறுக்கவரும்முதியோரின் மனப்பான்மையை என்னென்பது? இயற்கையை மறைத்து வெளிப்படையானதொரு வேலையைத் தன் செயற்பாட்டினாலும் அறிவுள்ள முயற்சியினாலும் செய்து முடிப்பதே முதியோரின் கடமை-

யாம். முதியோர் உலக வேலைகளைப் பங்கிட்டுக்கொண்டு ஒவ்வொருவர் ஒவ்வொரு துறையிற் பிரிந்து நின்று செய்து வருகின்றனர். எங்கே தடை சிறிதாகத் தோன்றுகின்றதோ அந்தவழியே மட்டும் சென்று வேலை செய்து முடிக்கின்றனர். குழவி அத்தகைய கூலியாள் அன்று. அஃது ஒரு படைக்கும் கடவுள். விடாது வேலை செய்துகொண்டு போவதாலேயே அது தன் படைப்புத் தொழிலைச் செவ்வனவே நிகழ்த்திக்கொண்டே போகின்றது. அந்தோ! அத்தகைய குழவியினை ஆள வருகின்றான் முதியவன். உண்மையில் முதியவன் நிறை நிலையை அடைவது இந்தக் குழவியின் வாயிலாகவேயாம். அடிமை ஆண்டானாகும் தலை தடுமாற்றம் ஈதேயாம்.

இன்பத்திற்குப் போக்குவீடு :— குழந்தையின் வேலை அதனது உள் எழும் தேவையினைத் தீர்த்து ஆறுதல் அளிக்கின்றது. அவ்வாறு அதன் உயிர் முற்றி வருகிறது. அங்கே குழவி முதியோரைப்போலத் தடை இல்லாத வழியில் இயங்குவதில்லை. பிறருடைய வேலையனைத்தையும் தனது எனக்கொண்டு ஏமாற்றிப் பயனுறுதலும் முதியவர் நிலையில்போலக் குழிவி நிலையில் இல்லை. வேலைசெய்து களைத்துப்போவது குழந்தையின் இயல்பு அன்று. வேலையே குழந்தையின் உடலையும் உயிரையும் வளர்க்கும் அமிர்தமாம். முதியோரைப் போலக் கூலிக்காகக் குழவி உழைப்பதில்லை. படைக்கும் திறன் உள்நின்று பொங்கி இவ்வாறு கூத்தாடுகின்றது. இதுவரை கூலிக்கு உலகைத் திருத்திவந்த முதியவன் குழவியைப்போல இன்பத்திற்குப் போக்குவிடாக உழைத்து உலகினைப் படைத்து அமைக்கக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். எனவே முதியோர் வாழ்க்கையும் குழவிவாழ்க்கையும் இருவேறு வாழ்க்கையாம்.

அழகுலகு :- ஆனல் குழவியே வாழ்க்கையின் இயல்பினை முழுதும் விளக்கிவைக்கின்றது. தற்காப்பு உட்பாடுகள், இனக்காப்பு உட்பாடுகள் என உட்பாடுகளை (Impulses) இரண்டாகப் பிரிக்கலாம். இவற்றின் வரலாறு இடைநடுவே தோன்றுவதொன்றன்று. காலத்தினிடையே தனி உயிர்ப்பொருள்களைக் கொண்டுசெல்வது தற்காப்பு உட்பாடு ஆம். காலத்தையும் கடந்த அப்பாலுக்கு அப்பாலினிடையே அழியாதவாறு இனத்தைக்கொண்டு செல்வது இனக்காப்பு உட்பாடாம். இவ்வாறு காலத்தையும் காலங்கடந்த நிலையையும் ஊடுருவிச் செல்லும் ஓர் அறிவு ஒளியே இந்த உட்பாட்டினைக் கல்வி நிலையாகவும், தாய்மை நிலையாகவும் விளக்கிவைக்கின்றது. படைப்பினை விளக்கிவரும் வாழ்க்கையின் புதுமையிலே வேரூன்றி எழுந்த இந்த உட்பாட்டின் விளைவே அன்பாம். குழவியின் வேலை எல்லாம் அன்பில் எழும் கலை விளக்கமேயாம் ; இவ்வேலைகள் பயனை நோக்காதனவாதலின் ஞானிகள் செயல்போல மாசற்றவையேயாம். புற உலகத் தேவைகளைப் பற்றிப் புழுங்கிநின்று, தேங்கி அழுக்கேறுத உயர்ந்ததொரு கலையை, மக்கள், தம் வாழ்க்கையில் வெளிப்பாடாகப் புலப்படுத்தி வரக்கூடியதோர் அழகுலகில், குழவி இவ்வாறு இயங்கி வருமாறு நாம் உதவி செய்தல் வேண்டும். ஞான மார்க்கத்தின் வளர்ச்சி இங்ஙனம் அமைகிறது.

கர்மமார்க்கம் :— உட்பாடு உள்ளுக்கு ஓடி மறைகிறது. தசைகள் புத்தம் புதிய கடவுளது ஒழுங்குநிலையை எதிர்பார்த்து உரம் பெற்றுக் கீழ்ப்படிந்து நிற்கும் நிலையில் விளங்குகின்றன. இவற்றை எல்லாம் ஆன்மாவின் தொண்டில் ஈடுபடுத்தவேண்டும் ; அதற்காக இவற்றை ஒருங்கு இயையவைக்கவேண்டும் ; அதற்காக அகத்தெழும் முயற்சிநிலையின் ஏவலைத் தசைகள் எதிர்பார்த்து நிற்கின்றன. இனத்தியல்பை

மட்டுமோ இவைகள் வெளிப்படுத்துகின்றன? தனிவீறு பெற்ற ஆன்மாவின் சிறப்பியல்பையும் அன்றோ வெளிப்படுத்தி நிற்கின்றன? தசை என்பது நம் இயக்க உறுப்புக்களின் கலவை நிலையேயாம். உயிர்த்து நிற்கும் மக்கள் ஆன்ம உலகிடையே வெளிப்பட்டு இயங்கவேண்டும்; அதற்கு உடலிடையே வடிவுகொண்டுஅவதாரம் செய்தல் வேண்டும். உயிர்க்கருவும் புறச்சூழலும் ஊடாடும் திருவிளையாடலினிடையே தனிமகன் தன்னைத்தான் உருப்படுத்திக்கொண்டு, தன்னைத்தான் நிறைவாக்கிக் கொள்கின்றான். அந்தக் கருமமார்க்கமே இயக்கமாம். சுற்றுப்புறச்சூழல்மீது கொண்ட காதலாம் பக்தி மார்க்கத்தையும் குழவி இயங்கி அன்றோ வெளிப்படுத்துகிறது ?

## VI. சிவபூசையிற் கரடி

கடவுள் கும்பகருணனுதல் :— இயக்கங்கள் தொடங்கியதும், குழவியை வரவேற்கும் முறையில், முதியோரிடை ஒருவேற்றுமை தோன்றுகின்றது. முன் எல்லாம் குழவிவாளா கிடந்து பார்த்தும், கேட்டும் வருவதனை ஒருவரும் தடுப்பார் இல்லை. புலனுணர்வு வகையால் உலகினை வென்று தனதாக்கிக்கொள்ள வந்துள்ளது குழவியேயாம். குழவி இயங்கத் தொடங்கி, நடந்தும், தொட்டும் வரும்போது நிலைமைமாறி விடுகிறது. முதியோரின் இரக்கம் அன்று இந்தப் புது நிலைமைக்குக் காரணம். தலைமேலே பொருளை வீழ்த்திக்கொள்ளுமே என அஞ்சுவதுபோல, முதியோர் தம்மையும் பிறரையும் ஏமாற்றி ஏமாறுகின்றனர். தம் பொருள் கெடாது காக்கும் பேராசையே இதற்குக் காரணமாம். ஒன்றுக்கும் உதவாத பொருள்களையும் குழவி தொடாதபடி காக்க முயல்கின்றனர். இவ்வாறு தற்காப்பாக நிற்கும் நிலையைத் தம் நனவுநிலையில் வைத்துக் கண்டு உணரமுடியாது, தம் அன்பினாலேயே

இவ்வாறு குழவியைக் காத்துவருவதாக முதியோர் மனப்பால் குடிக்கின்றனர். ஈதோர் ஏமாற்றம் இருக்கும்படி! உறுதியான உள்ளம் படைத்தோர் தம் எண்ணத்தைக் குழவியின் மனத்திலே ஏற்றிவிடலாம். இவ்வாறு எண்ணம் ஏற்றற்கு முதற்படி குழவியை உறங்கவைப்பதேயாம். குழவியின் ஓழிவிலா இயக்கத்தைப் பொறுக்கமுடியாது தமக்கு ஓய்வு வேண்டிக் குழவியைத் தொட்டிலில் கிடத்தி வற்புறுத்தித் தூங்க வைக்கின்றனர். கடவுளைக் கும்பகருணனுக்கும் பெருமை இவர்களுடையதேயாம்.

யானைநடை குழவி நடை :— யானையோ வலிய உடலும் காலும் பெற்றது. எனினும் அது நடப்பது ஓர் அரிய செயலேயாம். குழவியோ உடல் உரம் அற்றது; கால் உரம் அற்றது. நடப்பதும் நான்கு காலால் அன்றி இரண்டு காலாலேயாம். ஆதலின் யானை நடப்பதிலும் குழவி நடப்பது அருமையினும் அருமையேயாம். எனினும் அதில் ஒரு மகிழ்ச்சி கொள்கிறது. ஆனால் கட்டின்றி வேண்டியவாறு அதை நடக்கவிடுவார் யார்? "ஆண்டவன் அடியார்க்குத் தலையை வைக்கவும் இடமில்லை" என்று புலம்பினார் ஒரு பெரியார். ஆண்டவன் திரு அவதாரமாம் இக்குழவிக்குக் காலடி எடுத்து வைக்கவும் இடமில்லையே என்று தான் நாம் புலம்புதல் வேண்டும்.

இரு புரட்சி :- வாழ்க்கையில் இரண்டு வேறு புரட்சிகள் எழுகின்றன. ஒன்று நடக்கக் கற்றுக்கொள்வது. மற்றொன்று பேசக் கற்றுக் கொள்வது. இவை இரண்டுமே குழவியின் சாதகத்தின் இராசிச் சக்கரமும் அம்ச சக்கரமும் எனலாம். இவற்றிலிருந்து குழவியின் எதிர்கால வாழ்க்கையை நுண்ணிதின் அறிந்து கூறலாம். மனத்தின் இயக்கம்

கைவழியே புலனுகிறது. எண்ணம் செயலாக உருப்பெறுகிறது. உயிர்ப்பொருள்களில் வரலாற்றிலேயே ஈதோர் புது முறையேயாம். மக்களது இறந்தகாலத்தை மொழியில் எழுதிவைக்கும் இந்தப் புத்துரிமைக்கு ஈடாவது யாது? வெற்றொலியாய்க் காற்றில் தேய்ந்து ஒழிவதன்றே கைகொண்டு கல்லிற் பொறித்து வைக்கப்பெற்று ஊழுழிதோறும் நிலைபெறுவதாக மாறுகிறது. அழிவதனை அழியாததாக மாற்றும் சித்து முறை இதுதான்.

கையாட்சி :— மனம் வெளிப்பட்டுத் தோன்றுவதற்கு மட்டுமன்றி சுற்றுப்புறச் சூழலிடையே பல வகையான தொடர்ப்பாடுகளையும் பெறுவதற்கு ஏற்ற நுட்பமும் சிக்கலும் நிறைந்த கருவியாக விளங்குவது கையேயாம். மக்களைக் கட்டி வைக்கவேண்டாம். அவர்கள் கையைக் கட்டினுல் போதும். பெண்ணின் கையைப் பிடிப்பது திருமணம் ஆகிறது. கை அறைதலே பெருஞ்சூளாகிறது. இதிலிருந்தும் உள்ளூர விளங்குகிற "தான்" என்பதன் அறிகுறியாக நனவடி நிலையில் (Subconcious) விளங்குவது கையே என்று தெளிவாகிறது. பொருளைத் தொடுவதனைக் கையாளுதல் என்று வழங்கிவருகின்றோம். அன்றோ? குழவி, உலகினை இவ்வாறு கைகொண்டு ஆளவருகிறது. பசிகொண்ட நாய் தசையற்ற வெற்றெலும்பினையும் மூலையிற்கொண்டு சென்று பிறர்வந்து தன்னை ஓட்டி விடுவதற்கு முன்னரே விரைந்து கடித்துக் கடித்துச் சுவைப்பதே போலக் குழவியும் பொருள்களைக் கையால் தொட்டும் பற்றியும் வருகிறது; ஓட்டவருவாரும் ஓடிவருகின்றனர்.

உரிமை :- குழவியின் உள்ளத்தினையும் அதனை வெளிப்படுத்தி இயங்கும் உறுப்புக்களையும் குழவியின் தன்மைநிலையே இத்தகைய ஒருப்பாட்டு அனுபவங்களால் ஒற்றுமை

ஆக்கிவருகிறது எனலாம். ஆதலின் குழவி தானே இயங்கி வரும்போது தான் விரும்பிய செயலைத் தானே செய்து முடித்து வருதல் இன்றியமையாததாம். இச்செயற்பாடு அக்-குழவியின் பலவகைக் குடும்பச் சூழலுக்கும் சமுதாயச் சூழலுக்கும் ஒத்து நின்று பழக்க வழக்கங்களோடு தொடர்பு பெற்று விளங்குகிறது.

சாயல் :— குழவி செய்து வரும் செயலுக்கும், சாயல் பிடிப்பது என நாம் வழங்குவதற்கும் வேற்றுமை உண்டு. சாயல் பிடிப்பது என்றால் ஒன்றனைக் கண்டதும் செய்தது போலச் செய்வதாம். குழவி நிலையில் இந்த நிலை இல்லை எனலாம். தான் கண்டவற்றைத் தன் மனக்களஞ்சியத்தில் சேர்த்துப் பின் தன்னுள்ளேயே ஊறவைத்துத் தனதேயாக்கி ஒவ்வொரு செயலையும் குழவி செய்து வருகின்றதாம். பேச்சாக எழுவதும் அங்ஙனமே புதியதொரு படைப்பேயாம்; கிளிப் பேச்சு அன்று; ஒரு சிறந்த கலை வெளிப்பாடே எனலாம்.

சந்த வேறுபாடு :— முதியோர் செய்வதனைப் பார்த்து அவர்களைப்போல அறிவு ஆராய்ச்சியால் விளங்கக்கூடிய நோக்கத்தோடும் செயல்களைச் செய்து வருவதற்கு முன், முதியோர் அறியக்கூடாத வகையில் தனக்கேற்ற நோக்கத்-தோடும் குழவி இயங்கித் தொழில் புரிந்து திளைக்கின்றது. ஒரே வேலையைப் பன்முறையும் செய்கின்றது. ஒன்றை எடுத்து வேறு இடத்தில் வைப்பதும், திரும்பவும், முன் இடத்தில் வைப்பதுமாக மாறி மாறிப் பொழுதெல்லாம் குழவி கழிக்கும். பெட்டியைத் திறப்பதும் மூடுவதுமாகவே பொழுதினைக் கழிக்கலாம். முதல் முதல் தத்திப் பேசும் மழலைப் பேச்சுப்போல, முதல் முதல் தட்டித் தவறிச் செய்ய வரும் இவற்றை மழலைச் செயல்கள் எனலாம். தமக்கு

விளங்காத இந்தச் செயல்களைக் கண்டதும் முதியோர் மனம் எரிகிறது. தம் குழவில் இந்தத் தகுதி இன்மையைக்காண அவர்கள் மனம் பொறுப்பதில்லை. தம் பொருள்கள் அனைத்தும் குழவியின் கையில் சிக்கிக் கெடுவதாகக் கருதிக் குழவிக்-கெனத் தாம் அனைத்தையும் இழப்பதாகப் பேசிவருகின்றனர். தாம் அழிய மாறி நிற்பதாகத் தம்மைத்தாமே புகழ்ந்து கொள்ளுகின்றனர். குழவியின் போக்கின் சந்தமும், முதி-யோரின் போக்கின் சந்தமும் வேறுபடுகின்றன. குழவி காலங் கடந்த நிலையில் செய்ததையே திருப்பித் திருப்பிப் பொழு-தெல்லாம் செய்து நிற்கின்றது. முதியோரோ காலச் சக்கரத்-திற்குள் சிக்கி, உலகினும் விரைந்து ஓட முயன்று வெறி-யாட்டம் ஆடுகின்றனர். ஒவ்வொருவருக்கும் தத்தம் உள்ள நிலைக்கும் ஆளுமைக்கும் ஏற்ப உடல் வடிவம் அமைந்-திருப்பது போல, இயக்கத்தினிடையே ஒவ்வொரு சிறப்பு நிலைச் சந்தமும் உருப்பெற்று முற்றி நின்று அமைகிறது. குழவியின் இயக்கத்தின் சந்தத்தைத் (Rhythm) தம் சந்தத்-தோடு ஒருங்கு இயையவைப்பது நல்ல நடையுடையானைப் பக்கவாதம் உடையானோடு நடத்திவைப்பது போலாம். குழவியின் உரிமைப் போக்கிடையே முதியோர் உதவவருவது போல உரிமையைக் கெடுப்பதே அக் குழவியின் மனக்-கோளாறின் தொடக்கம் என யாரே அறிவர்! குழவி வாழ்வில் முதியோர் வருகையே சிவபூசையில் கரடி புகுதலாம். "ஜப்பானிலே, மறு உலகத்தினர் வந்து குழவிக்குத் தொல்லை கொடுக்கவந்தால் வீசி எறிய வேண்டிக் குழவிகளின் கல்லறையில் கற்களைவைப்பது ஓர் வழக்கமாம். அங்ஙனமே நம் குழவிகள் அருகிலும் அதனை வீணே அலைக்கழிப்பாரைத் தாமே வீசித் தாக்கும் கற்கள் இராவோ" என மாண்டிசோரி அம்மையார் முதலியோரது மனம் எண்ணுவது இயல்பு-தானே.

## VII. தன்னைப் படைக்கும் தனி அன்பு

எண்ண ஏற்றம் :— பிறர் நம்மனத்தே தம் எண்ணத்தை எளிதில் ஏற்றிவிடக்கூடிய பருவம் நம் குழவிப் பருவமேயாம். நனவுநிலை அப்போதுதான் உருப்பெற்று வருகிறது. புறப்பொருள் உணர்ச்சியும், படைப்பு நிலையில் ஒளிர்கிறது. வெளிப்படையான தடைகளைக் குழவி எதிர்த்து நிற்கின்றது. புறத்திருக்கும் மக்களது முயற்சிநிலை குழவியின் செயலிடையோ, அறிவிடையோ பல தடைகளைப் புகுத்திவிடலாம்; குழவியின் உள்ளுக்குள் விளங்கும் சுரணையினைப் "புறநிலைச் சூழலின் மேலுள்ள அன்பு" என வழங்கலாம். எண்ண ஏற்றத்திற்கு (Suggestion) இடம் கொடுத்து நிற்றல் இந்தச் சுரணையின் பயனேயாம். "குழவி தன்னுடைய இயல்புக்கேற்ப வளர்ந்துவரும் சந்தர்ப்பத்தினை இழந்தபோது, பலூனில் சென்ற ஒருவன் காட்டிலே இறங்கியதும் திடீரென அந்தப் பலூனும் காற்றில் ஓடிவிடக்கண்டு வாடுகிற அவனைப் போலக் குழவி தோன்றுகிறது." என்று மாண்டிசோரி அம்மையார் பரிந்து பேசுகின்றனர்.

சிறை :- உயிர்ப்பொருள் எல்லாம் உயிர்ப்பின் இயல்பாம் இயக்கத்தோடு விளங்கிநிற்கக் காண்கிறோம். தன் தசைக்குள்ளே கட்டுண்டு இயங்குதலின்றிச் சிறைப்பட்டுக் கிடக்கின்றவனது கீழ்நிலைத் துன்பமோ செவிடு, குருடு, முதலாயினோர் கீழ்நிலைத் துன்பத்தினும் மிக மிகக் கொடியதாம். நம் கண்ணில் அமைந்த புகைப்பட அமைப்பினும் சிறந்தது வேறு எங்கே உண்டு? நம் காதில் உள்ள யாழ் அமைப்பினும் சிறந்தது வேறு எங்கே உண்டு? இவற்றை வழங்கிவரும் "தான்" என்ற பொருளைப்பற்றி எண்ணுகின்றோம். வெளிப்பொருளினும் அப்பாற்பட்டு உயர்ந்து விளங்கும் ஒருபொருள்

தன் செயல்களினை ஆண்டுவருமாறு, "தான்" என்பது தன் கருவிகளுக்கு உயிர் கொடுத்து இயங்கி அவற்றைத் தனதாக்கி இயக்கிவருமாறு செய்வதே, வாழ்க்கையின் அடிப்படையான நோக்கமாம்; கல்விமுறையின் நோக்கமும் அதுவே ஆம். அந்த உயர்பொருள் உள்ளுக்குள்ளாக உட்பாடாக விளங்குதல் வேண்டும். அறிவு கோலங்கொண்டு விளங்கும் படைப்பு நிலையோடு கூடிய ஆன்ம இயல்பே இதுவாம்.

அன்பாம் அறிவு:—"வாழ்க்கையின் முயற்சி அனைத்தும் வாழ்க்கையின் சட்டதிட்டங்களுக்கு ஏற்ப எல்லாக் கடமைகளையும் நிறைவேற்றுகிறது; பொருள்களினிடையே, ஓர் இசைவினை விளைவிக்கின்றது; நனவு நிலையை அன்பு என்ற வடிகொண்டு சென்று, எட்டுகின்றது; இவ்வாறு முடிந்து சிறக்கின்றது. இதனை 'இயக்கநிலை உள் துடிப்பு' எனக் கூறுவதற்கு இல்லை. செடி கொடிகளோ கதிரவனது ஒளியின் எதிர் ஒளியாம். அதுபோல அன்பாக முற்றும் வாழ்க்கையின் முயற்சியும் தசையியக்க உட்டுடிப்பின் எதிர் ஒளியாம். இந்த அன்பு என்பது பொதுவாக நாம் உணர்ந்து வருவது போன்ற மெய்ப்பாடு அன்று. அன்பாக எவற்றையும் கண்டு எவற்றோடும் ஒன்றாகித் தன்னைத்தானே ஆக்கிப் படைத்துக் கொள்ளும் அறிவே இந்த அன்பாம் "அன்பின் அறிவு" என டாண்டே கூறியதன் நுட்பம் ஈதேயாம்" என்கின்றார் மாண்டிசோரி அம்மையார். "அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே, அறிவே சிவமாய் அமர்ந்திருப்பாரே" எனத்திரு மூலரும் அன்பினையும் அறிவினையும் ஒன்றாக்கிச் சிவம் எனப் பெயரிடுதல் காண்க. பிறர் காணாததைக் குழவி காணுவது இந்த அன்பின் இயல்பாகிய உண்மை இன்ப அறிவின் சுரணையேயாம். குழவிதன் புறநிலைச் சூழலிடையே சிறப்பு நிலையில் வைத்து மிக விரும்புவது முதியோரையே ஆம். ஒரு புறம் குழவியினுடைய படைப்பு

நிலையின் ஊக்கம் அதனை இயக்கி வைக்கிறது. மற்றொருபுறம் இதனை அறியாது தடை எழுப்பி நிற்கும் முதியோரும் நிற்கின்றனர். இவர்கள் மேலும் அதன் அன்பு வெள்ளம் பொங்கி வழிகிறது. முதியவர்மேல் பாயும் அன்பும், அதன் இயல்பான படைப்பு ஊக்கமும், இவ்வாறு முரண்பட்டு எழும்போது குழவியின் உயிர் நிலையில் ஒரு கொந்தளிப்பு எழுகின்றது. அந்த அகநிலைக் குழப்பம் புறநிலையில் 'கீழ்ப்படியாமை' முதலிய வடிவங்கொண்டு வெளிப்பட்டுத் தோன்றுகிறது. 'இவ்வாறு உயிர்ப் போராட்டத்தினிடையே, குழவி சிக்கி அலைகின்றது.' என அறியாது குழவியை வெறுக்கின்றோம்; அதனை வாளா இருக்கவேண்டுகின்றோம். எந்த நிலையிலும் தாயும் தந்தையும் தூங்குகிற போக்குடையவர்கள். புதிய உயிர்ப்பொருள் ஒன்று அவர்களை அந்தத் தூக்கத்திலிருந்தும் எழுப்ப வெளிவரவேண்டும் என இயற்கை அன்னை அறிந்தாள் போலும். அதனாலேயே குழவி அவ்வாறு அவர்களிடம்தோன்றி வந்துள்ளது. வந்தும் என்ன பயன்? அதனால் திருத்தம் பெற்று உய்ந்து போகாமல் அதனையும் தம்மைப்போலக் கெடுக்க முயல்கின்றனர். இந்தக்கெடு நிலையே உலகில் குழவியின் இயக்க நிலையைத் தடுத்து நிற்கக் காண்கிறோம்.

"காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்
சேயவிடம் அண்மை செல்லவும் வல்லது
காயத் துகிற்போர்வை யொன்று விட்டாங்கொன்றிட்டு
ஏயு மவரென்ன ஏய்ந்திடுங்காயமே."

(திருமந்திரம் 2131)

---

# 8. இயக்க நிலை வளர்ச்சி

## I. நடை

சிறப்பியக்கங்கள் :— இதுவரை இயக்கத்தினைப் பற்றிப் பொதுவாக ஆராய்ந்தோம். ஒவ்வோர் இயக்கமும் சிறப்பு நிலையுற்று விளக்கக் காண்கிறோம். இயக்கங்களின் கோலம் (Pattern) பலவேறு கோலங்களாகத் தோன்றுகின்றது. இந்தப் பலவேறு கோலங்கள் குழந்தையின் வாழ்க்கையில் பல வேறு காலங்களில் அந்த அந்தப் பருவத்திற்கேற்ப மலர்ந்து வருகின்றன. ஆதலின் இயக்கத்தினைப்பற்றிப் பொதுநிலையில் பேசிப்போவதால் போதிய பயன் இல்லை. பலவேறு இயக்கங்களையும் சிறப்புநிலையில் ஆராய்ந்தால் மட்டுமே பயன்பெறலாம். ஆகவே, ஒவ்வொன்றினையும் தனித்தனியே காண்பதுதான் சிறப்பாகும். குழவியினிடத்தே காணும் சில சிறந்த இயக்கங்களை உற்றுநோக்கினால் மேலும் சில உண்மைகள் விளங்கும். அவற்றை அறிந்தால் குழவிகளை நன்கு பழக்கும் வகையின் உண்மையினை நாம் உணர்தலும் கூடும்.

நடையின் வரலாறு :— நடை என்பது மக்கள் வாழ்க்கையிலேயே ஒரு புரட்சி எனக் கண்டோம். (பக் - 163) இதன் வரலாற்றைச் சிறிது காணலாம். குழவி கருப்பையில் இருக்கின்ற காலத்தில் கைகால் முடங்கிக் கிடக்கின்றது. இத்தகைய குழவி பிறந்ததும் கைகால்களை நீட்டி மடக்கி வாழ வருகின்றது; குப்புறப்படுத்து வளர்கிறதைக் காண்கிறோம். முதல் திங்களில் அவ்வாறு படுத்திருக்கும்போது முகவாய்க் கட்டையைத் தூக்கிக்கொள்ளப் பழகிவிடுகிறது. இரண்டாம்

திங்களில் மார்பையும் தூக்கப்பார்க்கிறது. மூன்றும் திங்களில் மல்லாந்து முதுகிற் கிடக்க வருகிறது; பொருள்களை எட்ட-முயன்று முயன்று தவறி விடுகிறது. நான்காம் திங்களில், பிறர் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்தால் உட்காருகிறது. ஐந்தாம் திங்களில், தாயின் மடியிலே இருந்து பொருள்களைப் பற்றிப் பிடித்துக்கொள்கிறது. ஆறும் திங்களில் உயர்ந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தால், எதிரே கயிறு கட்டப்பெற்றுத் தொங்கி ஆடும் பொருளைப் பற்றிப்பிடிக்-கின்றது. ஏழாம் திங்களில் நாற்காலியின் சார்போ, பிறர் உதவியோ இன்றித் தனியே குழவி உட்கார்ந்திருக்க முடியும். எட்டாம் திங்களில் பிறர் உதவிகொண்டு அது நிற்கிறது. ஒன்பதாம் திங்களில் பிறர் உதவி இன்றி ஏதேனும் ஒரு பொருளைப் பற்றிப் பிடித்துக்கொண்டு நிற்கிறது. பத்தாம் திங்களில் குழவி தவழ்ந்து வருகிறது. பதினோராம் திங்களில் யாரேனும் தன்கையைப் பிடித்துக்கொண்டால் நடக்கத் தொடங்குகிறது. பன்னிரண்டாம் திங்களில் ஏதேனும் ஒரு பொருளைப் பிடித்துக்கொண்டு எழுந்து நிற்கிறது. பதின் மூன்றும் திங்களில் படிகளின்மேல் ஏறுகிறது. பதினாலாம் திங்களில் தனியே ஒரு பற்றுக்கோடோ சார்போ இல்லாமல் தானே நிற்க முயல்கிறது. பதினைந்தாம் திங்களில் தனியே நடந்து வளர்கிறது. இவ்வாறு படிப்படியாக நடையானது வளர்ந்து முற்றுகிறது.

தவழ்தல் வரலாறு :— தளர்நடை இடுவதற்கு முன்னர்க் குழவி தவழ்ந்தே நம் மனத்தைக் கவர்கிறது. இதன் வளர்ச்சி-யினையும் இங்கே குறிக்கலாம். பிறந்த உடன் குழவி மார்பிற் கிடந்து கால்களை நீட்டி முடக்கி உதைத்துக்கொள்கிறது; 'பஞ்சாங்க நமஸ்காரம்' செய்வதேபோலக் கிடக்கின்றது. பின்னர்க் கைகளை நீட்டிக் காலை மாற்றி மாற்றித் தூக்கித்-

தாழ்த்தி வருகின்றது; கையை ஊன்றி மார்பைத் தூக்கி-கொண்டு கிடக்கின்றது. அடுத்தாற்போல மார்பு மேலும் கீழும் வரக் கையை மாற்றி மாற்றி முன்னாக வைத்துத் தவழ்கிறது. பின்னர் மார்பு தரையின்மேல் படாமல் உடலை மேலே தூக்கிக்கொண்டு கையையும் காலையும் ஊன்றி நிற்கின்றது. அடுத்தபடியாகக் காலை நீட்டி நிற்காமல் மடக்கிக்கொண்டு காலின்முட்டி தரையில்படக் கைமேல் ஊன்றி நிற்கிறது. இந்த நிலையிற் பழகிய பின்னர்க் குழவி காலை மாற்றி மாற்றித் தவழ்ந்து நடக்கிறது.

படியேறுதல் :— பதின்மூன்றும் திங்களில் குழவி படியேறும் என்றோம். குழந்தைகள் படிக்கட்டுகளிலுள்ள படிகளில் ஏறப் பழகுவதனையும் அறிஞர்கள் குறிப்பெடுத்து வைத்துள்ளார்கள். இடது காலை முதற்படியில் வைத்துக்-கொண்டு வலது கையை இரண்டாம் படியின்மேல் குழவி வைக்கும். பின், வலது காலை முதற்படியில் வைத்து இடது கையை இரண்டாம் படியில் வைக்கும். அடுத்து வலதுகை மூன்றும் படிமேல் போகிறது; இடதுகால் இரண்டாம் படிமேல் ஏறுகிறது. பின்னர் வலதுகால் இரண்டாம் படி-மேலும், இடதுகை மூன்றும் படிமேலும் ஏறிநிற்கக் காண்-கிறோம். இந்தமுறை மாறியும் வரலாம். ஆனால் ஏறும் முறையை ஒரு முறைகண்டு பிடித்ததும் அந்த முறை நிலை பேறுற்று விளங்கக் காண்கிறோம்.

நிலை :— குழவி படுத்திருந்து, நின்று, பின் நடக்கின்றது எனக் கண்டோம். குழந்தை இருக்கும் நிலையினையும், நிற்கும் நிலையினையும் அறிஞர் ஆராய்ந்து உள்ளனர். உடலில் உள்ள உறுப்புக்கள் ஒன்றுக்கொன்று ஒரு குறிப்பிட்ட முறையில் பழக்கமாக அமைய வருவதே நிலையாம். (Posture).

நடத்தல், தவழ்தல், நிற்றல் முதலியவற்றைக் காண்க. ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொருதனிநிலை உண்டு. நிற்பதற்குத் தசைகளிற் போதிய வலிமையும், உரமும் இருத்தல் வேண்டும். குழவியை நிற்கப் பழக்கவைக்கும்போது முதலில் கையைப் பிடித்துத் தூக்குகிறோம். ஆனால் குழந்தையோ முதலில் உட்கார்ந்துதான் பின் நிமிர்கிறது; குத்துக்காலிட்டு வளைத்துக் கொண்டு பின்னுக்காகச் சாய்கிறது; பின்னே நாற்காலிமேல் காலைத் தொங்கவிட்டுக் கொண்டு உட்காருவதுபோல நிற்க-வருகிறது. அடுத்தபடியாகக் கால்மேல் ஊன்றி நிற்கப் பழகுகிறது. ஆனால் அந்தப் பழக்கம் உடனே நிலைபேறு அடைவதில்லை. நாம் பிடித்துக் கொண்டாலும் கால் மடிந்து மடிந்து விழுந்துவரவே நடக்கக் காண்கிறோம். பின்னர்த் தவழ்ந்து கையை ஊன்றிக்கொண்டு எழுகிறது. இதன் பின்னரும் உட்கார்ந்து இருந்து பின்னும் முன்னும் சாய்ந்து எழுந்து நிற்கிறது. ஒரே நிலையில் நீண்டபொழுது இருந்தால் குழவிக்குக் களைப்பு தோன்றுகிறது. தசை உரமின்றிக் கிடந்தாலும், வலிந்திருக்க வைத்தாலும் விரைவில் களைப்பு எழும். அதனால், நிலைகேடு உண்டாம். குழந்தை பல கோணலாக நிற்கவோ இருக்கவோ பழகிவிடுகிறது. நல்ல நிலையில் இருக்கவும், நிற்கவும் பழக்கி விடுவதற்குக் குழந்தை-யின் இயல்பை ஊன்றி ஆராய்ந்து வரவேண்டும். உரமில்லாத தசைகளைத் தக்கவழியில் பழக்கி வலிவேற்றுதல் வேண்டும்.

நடை முற்றுதல் :- நடக்கின்ற நடையின் இயல்பு முற்றி வளர்கின்ற நிலையினை இனிக் காண்போம். குப்புறக்கிடக்கும் குழவி ஊன்றி எழுந்து நகர்ந்து தவழ்ந்து, இருந்து நின்று நடக்கத் தொடங்குகிறது. இந்த நடை திருத்தம்பெற, ஆறு மாதங்கள் ஆகின்றன. நடையில் வேகம் மிக்குவருகிறது. தளர் நடை நீங்கி உறுதியுடன் நடக்கும்போது தாண்டின்

அளவும் நீண்டுவருகிறது. காலினை முதலில் பரப்பிக்கொண்டு நடக்கும்போது தாண்டு, நீளத்தில் குறைந்து இருந்தாலும், அகன்று இருக்கக் காண்கிறோம். பழகப் பழக நீளம் மிக்கு வரும்; அப்போது பரப்பிக்கொண்டு நடக்கின்ற நிலைமாறும். நேர்நேராகக் காலைவைத்து நடக்கும்; இங்கே தாண்டின் அகலம் குறைகிறது. இந்தக் குழவியின் அடிச்சுவடுகளை நோக்கினால் மற்றொரு திருத்தமும் விளங்கிறது. காலடி நேராக இல்லாமல் வலப்புறத்தது வலமாகத் திரும்பிக் கோணியும், இடப்புறத்தது இடப்புறமாகத் திரும்பிக் கோணியும் தொடக்கத்தில் இருக்கும்; நடக்கப் பழகிய பின்னர்க் காலடி அவ்வாறு கோணாது நேராக நிற்பதனை அடிச்சுவடுகளிலிருந்தும் அறியலாம். முதலில் நடக்கும்போது கையை வீசிக்கொண்டும், முகத்தை எல்லாம் பலவாறாகக் கோணிக்கொண்டும் குழவி நடக்கிறது. திருத்தம் பெற்றபின் இத்தகைய வேண்டாத இயக்கங்கள் படிப்படியாகக் குறைந்துவந்து முடிவில் அடியோடு மறைந்து விடுகின்றன.

நடையின் படிகள்:- நடை திருத்தம்பெற்று வருவதிலே, ஏழு வேறு படிகளை அறிஞர்கள் குறித்து வைத்துள்ளார்கள். முதல் நிலையில் இரண்டு காலையும் ஊன்றி முன்னுக்குச் சாய்ந்துநின்ற நிலை மாறிக் குறைந்துவரக் கால்களைச் சிறிதளவு மட்டும் மடக்கிக்கொண்டு குழவி நிற்கின்றது. இரண்டாம் நிலையில் குழவி தானே முயன்று உடலைச் சாய்த்து உடல் முன்னும், கால் பின்னும் வரநிற்கின்றது. மூன்றும் நிலையில் காலை மாற்றி மாற்றிக் காலடி எடுத்துவைக்க முயல்கின்றது. முன் எல்லாம் பெரியோர் தன்னை அக்குளில் பிடித்துக்கொண்டு நிற்க நடந்ததுபோக, நான்காம் நிலையில் கையைப் பிறர் பிடித்துக்கொண்டதும், குழவி தான் நின்ற நிலையிலிருந்தே அடி எடுத்துவைக்கின்றது. ஐந்தாம் நிலையில்

நடக்கும்போது சமநிலை பிறழ்ந்து விழாதபடி கையை முன்னுக்குத் தூக்கி ஆட்டிக்கொண்டே நிலைத்து நிற்க முயன்று நடக்கிறது. ஆறும் நிலையில், வீணே இவ்வாறு கையை இயக்குவதனைவிட்டுக் கையைக் கீழே இறக்கிக் கொண்டு, முன்னுகச் சாய்ந்து நடக்கின்றது. ஏழாவது நிலையில் உறுதி வளர்ந்து வருதலின், கைவீசி நிமிர்ந்து நடக்கிறது.

நடையும் உடையும் :— குழவிப் பருவத்தே சில தாய் தந்தையர் தம் குழவிக்குப் பல உடைகளையும் உடுத்திக் கண்டு களிக்க விரும்புவதால் குழவியால் இயங்கவே முடிவதில்லை. தடை தாண்டி ஓடும் ஓட்டம்போல, நடப்பதும் பெருந்-தொல்லையாக முடிகிறது. முதியோரின் போலி அன்பு குழவியின் உரிமையை எவ்வாறெல்லாம் தடுத்து வருகின்றது என எண்ணும் போதே நம் மனம் நடுங்குகிறது.

வடக்கும் தெற்கும் :— உலகத்தில் வடக்குப் பகுதியில் இருக்கும் காலப் பொதுநிலைக்கும், தெற்குப் பகுதியில் இருக்கும் காலப் பொதுநிலைக்கும் வேற்றுமை உண்டு எனத் தரைநூல் வல்லார் கூறுகின்றனர். இதற்கும் வளர்ச்சிக்கும் ஏதோ தொடர்புண்டுபோலும். வடக்கிருப்பார் தெற்கிருப்-பாரினும் பொதுவாகக் காலந்தாழ்த்தே நடக்கப் பழகு-கின்றனர்; இதற்கு ஏற்பத் தெற்கிருப்பார் விரைந்து பேரிளமைப் பருவத்தினை அடைகின்றனராம்.

நடையும் மாங்காய்த் தலையும் :— நேராக நின்று நடக்கும் உயிர்ப்பொருள் மனிதனே ஆம். இவனே ஆறறிவுடையவனும். ஆதலின், நடைக்கும் அறிவிற்கும் ஒரு தொடர்பினை எதிர்-பார்க்கலாம். அங்ஙனமே அறிவு நிலைக்கும் இத்தகைய இயக்கங்களுக்கும் ஏதோ ஒரு தொடர்புண்டு என ஆராய்ச்சி

வாணர் காண்கின்றனர். மாங்காய்த்தலையும் தேங்காய்த்-தலையுமாய் அறிவற்று வளரும் குழவிகள் பொதுவான அறிவு பெற்று வளரும் குழவிகளைவிடக் காலம் தாழ்த்தே நடக்கக்-கற்றுக்கொள்ளக் காண்கிறோம்.

நடையும் பாலும்:— ஆண் பெண் என்ற வேற்றுமை நடையிலும் விளங்கிவரக் காண்கிறோம். பெண்கள் முந்தி-வளர்ந்து விடுவதுபோல, நடப்பதிலும் ஆண்களை விடப்-பெண்களே முந்திக்கொள்கின்றார்கள். இந்த இயக்கங்களை எல்லாம் ஆராயும்போது உடல் வளர்ச்சி, தலையிலிருந்தும் தொடங்கிக் கீழாகப் பரந்து சென்றதுபோல இந்த இயக்கங்-களைக் கற்றுக்கொள்ளுகிற நிலையும் தலையினின்றும் தொடங்கிக் கீழாகப் பரந்து செல்லக் காண்கிறோம். இங்குக் குறிப்பிட்ட பலவகை இயக்கங்களையும் உற்றுநோக்கினால் இயக்கத்தின் வளர்ச்சி உடற்கூற்றமைப்பு முற்றிவருதலைப் பொறுத்திருக்-கிறது என்பது தெளிவாம். வளர்ச்சி என்பது உயிரணுக்கள் எண்ணிக்கையிலோ அளவிலோ மிக்குவருவதாம். பிறப்பதற்குமுன் எண்ணிக்கை மிக்குவரும்; பிறப்பதற்குப்பின் அளவு மட்டுமே மிக்குவரும். முற்றுதல் என்றால் அந்த அணுக்களின் இயல்புகளும் தொடர்புகளும் வளர்ந்து வருவதாம். இயக்கங்கள் திறம்பட நிகழவேண்டுமானால் நரம்பமைப்பும் முற்றிவளர்தல்வேண்டும். தவழ்தல் என்றாலும் நடத்தல் என்றாலும் பலவேறு உறுப்புக்களின் இயக்கங்களையும் ஒருங்கு இயையவைத்து அடக்கி ஆளவேண்டும். இதற்குப் பெரு மூளையும், சிறு மூளையும், முதுகந்தண்டமைப்பும் முற்றி வளர்தலும் வேண்டும். பிறப்பிலேயோ, பிறந்தபின்னோ இந்த நரம்பமைப்பில் கோளாறு உண்டாயிருக்குமானால் குழந்தை நடக்கவேண்டிய பருவந்தாண்டிப் பலகாலம் நடவாமலே இருக்கக் காண்கிறோம்.

நடையும் உடலுரமும் :- நடை இயக்கம் வெளிப்பட்டுத் தோன்றி வரும்போது, அதற்கு ஏற்ற உறுப்புக்கள் உரம் பெற்று வளர்ந்து முற்றி வருதலும் வேண்டும். கற்றுக் கொண்டு பழகும் பழக்கமும் வேண்டும். இந்த இரண்டிலும் உடல் முற்றும் நிலையே இந்த இயக்கத்திற்கு இன்றியமையாத வேண்டற்பாலதாம். ஆதலின், உடலம் உரம் பெற்று வளர்வதற்கு முன்னர்ப் பெற்றோர் காற்றுப் பறந்து எவ்வளவுதான் நடக்கவைத்துப் பழக்கினாலும் குறித்தகாலத்திற்குமுன் இந்த இயக்கம் நல்ல நிலையில் எழுவதில்லையாம். நடப்பதற்கு உடல் உரம் வேண்டும்; ஆதலின் ஊட்டம் குறைந்து கணைநோய் (Rickets) முதலியவற்றால் வாடும் குழந்தைகள் பொதுவாக நடக்கவேண்டிய காலத்திற்குப் பின்னர்த்தான் நடக்கப் பழகுகின்றன.

முற்றுதலின் முன் பழக்கம் வீண் :— பயிற்சியினால் இயக்கம் துலங்கிவரும் என்பது உண்மையானால், அந்த இயக்கம் எழுவதற்கு வேண்டிய உடலுறுப்பு முற்றிவளர்வதற்கு முன்னரே பயிற்சி அளிப்பதில் பயனில்லையாம். இருபத்து இரண்டாம் மாதத்திலிருந்து இரண்டு குழவிகளை வாரத்தில் ஐந்து நாள்களில் காலை 9 மணியிலிருந்து மாலை 5-மணிவரை அறிஞர் ஆராய்ந்து வந்தனர். ஒரு குழவிக்கு விளையாட்டுப் பொருள்களைக் கொடுத்து வந்தனர். மற்றொரு குழவியை இயக்கங்களிற் பழகவிட்டு வந்தனர். நான்கு ஆண்டுகள் கழித்து ஒப்பிட்டுப் பார்த்தபோது இயக்கங்களிற் பழகிய குழவி மற்றைய குழவியினும் இயக்கங்களிற் சிறந்து விளங்கக் கண்டோம். குழவி உயரமாக வளரும்போது உடலின் ஏணிலை (Centre of gravity) மாறுகிறது. இரண்டாம் ஆண்டில் நிற்கும்போது சமநிலையில் இருப்பது ஒரு வகையாம்; ஆறும் ஆண்டில் நிற்கும்போது சமநிலை இருப்பது வேறு வகையாம். கால் எலும்புகள் நீண்டு வளர்-

கின்றன அன்ருே? ஆகவே அதற்கு முன்னர்ப் பழகிய பழக்கம் பின்னர்ப் பயன் படுவதில்லையாம். மேற்கண்ட இரண்டு குழவிகளிடையே ஆரும் ஆண்டில் அறிவுநிலை வேற்றுமை ஒன்றும் காணேமாம். ஆனல் இயக்கங்களை ஒருங்கு இயையவைப்பதில் இயக்கங்களிற் பழக்கம் பெற்ற குழவி சிறந்து விளங்கியதாம்.

## II. கைத்திறம்

கையே கருவி:— குறுக்காக நடந்த விலங்குநிலை மாறி மனிதன் நெடுகநிற்க முயன்றபோதே மக்களது நாகரிகம் தொடங்கியது எனலாம். தரையில் ஒட்டிக்கொண்டு அதனையே கண்டுவரும் நிலையைவிட்டு மனிதன் வானை நோக்க முயல்கின்ருன். பிறரை நேருக்குநேர் பார்த்துப் புழங்கும் கூட்டுறவு வாழ்க்கை அப்போது மக்களை அணைத்தலாக வளர்கிறது. கைகள் இரண்டும் தரையோடு ஒட்டிக் கிடந்தவை விடுதலை பெறுகின்றன. மேல் நோக்கிய கண் வானத்தைக்கண்டு உயர்ந்த உட்கோளோடும் வானநூல் முதலியவற்றை ஆராயத்தொடங்குகிறது. உண்மையிற் பரந்தநோக்கம் வளரக் காண்கிருேம். விடுதலை அடைந்த கை பல பல தொழிலும் செய்து வருகிறது. கொம்பும், கோரைப் பல்லும் அற்ற மனிதன் அருகில் உள்ள கல்லும் கொம்பும் கொண்டு, கொம்பு படைத்தவற்றையும், கோரைப்பல் படைத்தவற்றையும் அடக்கி ஆள்கின்ருன்; கருவிகளை அமைக்கின்ருன். கருவி நாகரிகம் தொடங்குகிறது. கை அவனுடைய இயற்கை உறுப்பு. கருவி அவனுடைய செயற்கை உறுப்பு. பல கருவிகளைப் படைக்கும் மனிதன் பல்லாயிரம் கை படைத்தவனுகின்ருன். கருவிகளை இயக்குவது அன்ருே கைத்திறன்? நம் மனப் பண்பாட்டை விளக்கும் நாகரிகம் கருவி நாகரிகமேயாம். எந்திரமும் ஒரு கருவியேயாம். ஆதலின் கைத்திறனே நம்

மனத்தின் பலவகை நிலைகளோடும் தொடர்புண்டு கிடக்கின்றது. அதனாலன்றோ கைத்திறனும், செய்திறனும், உள்ள நூலில், ஆராயப் பெறுகின்றன. கைத்திற வளர்ச்சியோடு உலகினை அடக்கியாளும் நிலையும் வளர்வதனைக் கீழேகாணலாம்.

முதலாண்டாளுகை :- நான்காம் திங்களில் குழவி கிலுகிலுப்பைகொண்டு விளையாடுகிறது. ஐந்தாம் திங்களில் ஆடும் வளையத்தை எட்டுகிறது; ஒரு கையிலிருந்து மற்றொருகைக்குப் பொருளை மாற்றிக்கொள்கிறது. ஆறாம் திங்களில் கிண்ணத்தை அதன் கைப்பிடியைப் பிடித்துக்கொண்டே எடுக்கிறது. ஏழாம் திங்களில் இரண்டு சிறு சதுரக்கட்டிகளைக் கையில் ஒன்றாக எடுத்துக்கொள்கிறது. எட்டாம் திங்களில் வளையம்கட்டிய கயிற்றைப் பிடித்திழுத்து வளையத்தை அடைகிறது. ஒன்பதாம் திங்களில் மணியை அசைத்து ஆட்டி அடிக்கின்றது. பத்தாம் திங்களில் கரண்டியை எடுத்து கிண்ணத்தின்மேல் தட்டுகிறது. பதினோராம் திங்களில் பலகையில் உள்ள தொளையில் விரல் விடுகிறது. பன்னிரண்டாம் திங்களில் கிண்ணத்தின் அடியில் உள்ள விளையாட்டுப் பொருளை எடுக்கின்றது. பதின்மூன்றாம் திங்களில் எழுதுகோல் கொண்டு கீறுகிறது.

இரண்டாம் ஆண்டுவரை :- 14 ஆம் திங்களில் துணியில் சுற்றிவைத்திருக்கும் பொம்மையை அவிழ்த்து எடுக்கிறது. 14 ஆம் திங்கள் குழவி மூன்று சதுரக் கட்டிகளை எடுத்துப் பிடித்துக்கொள்கிறது. 16 ஆம் திங்களில் மணிகளைப் பெட்டியில் வைக்கின்றது; வட்டப் பெட்டியின் மூடியை அதன்மேல் இடுகிறது. 18 ஆம் திங்களில் ஒரு கிண்ணத்தில் கொள்ளக்கூடிய 10 சதுரக்கட்டிகளையும் இடுகிறது. 20 ஆம் திங்களில் சதுரக்குழியில் சதுரக்கட்டையை இடுகிறது. 22-ஆம் திங்களில் நீள் சதுரப் (Oblong) பெட்டியின் மூடியை

அதன் மேல் இடுகிறது. 24 ஆம் திங்களில் காகிதத்தை மடிக்க முயல்கிறது. 27 ஆம் திங்களில் கண்டபடி கிறுக்குவதனைவிட்டு எழுதக்கண்ட கோட்டைப்போலக் கோடு வரைகிறது. 30 ஆம் திங்களில் காகிதத்தைச் சரியாக மடிக்கின்றது.

பற்றிக்கோள்ளுதல் :— கைத்திறன் வளர்வதனையும் ஆராய்தல் வேண்டும். முதலிலே நிலைபேருன இயக்கக் கோலம் ஒன்றும் இல்லையாம். சிறுகச் சிறுகவே இவை வளர்கின்றன. இவை வளர வளரக் கைத்திறன் செவ்விபெற்று வரக் காண்கின்றோம். பொருள்களைக் கையாற் பற்றிக்கொள்ளும் முறையை எடுத்துக் காட்டாக ஆராயலாம். நான்காம் திங்களின் முடிவில், குழவி, சிறு சதுரக்கட்டி அருகே இருக்குமானுல், உற்று நோக்குகிறது; அதனைப் பற்ற விரும்புகிறது ; 10 முறை முயன்ருல் 9 முறை பற்றமுடியாது போகிறது. குழவி வளர வளரத் தவறுதலும் குறைந்து வருகிறது. 10 ஆம் திங்களில் 10 முறை முயன்ருல் ஒரு முறையே தவறுகின்றது. 5 ஆம் திங்களில்தான் கையால் அழுத்துவது போன்றதோர் இயக்கம் எழுகிறது. 6 ஆம் திங்களில் அருகில் உள்ள பொருள்களை எட்டித் தட்டித் தள்ளிக்கொள்ளப் பார்க்கிறது; அழுந்தப் பற்றுதல் என்ற இயக்கமும் எழுகின்றது. விரல்களுக்கும் உள்ளங்கைக்கும் இடையே அப்பொருளைக் குழவி பற்றிப் பிடித்துக் கொள்ளப் பார்க்கிறது. 7 ஆம் திங்களில் கைகொண்டு பற்றுதல் என்று கூறக்கூடியதோர் இயக்கம் தோன்றுகின்றது. 8 ஆம் திங்களில் குழவி உள்ளங்கையைக் கொண்டு பற்றவருகிறது; விரல்களை ஒன்ருகச் சேர்த்து அமைத்துப் பற்றவிரும்பும் பொருள்களை உள்ளங்கைமேல் வைத்துக்கொள்ள முயல்கிறது. சுட்டுவிரலால் பற்ற முயலுவது ஓராண்டு முழுதும் முடிந்த் பின்னரே ஆம். ஓராண்டு முடியவரும்போதே, குழவி, எழுதும் சுண்ணம்புக் கட்டியைப் பிடித்துக்கொள்ளுகிறது. ஒன்றரை ஆண்டு முடிய

வரும்போது அதுகொண்டு கிறுக்கத் தொடங்குகின்றது. குறுக்கும் நெடுக்குமான கோடுகளைக்கண்டு அவற்றைப் போலவே, இரண்டரையாண்டு முடியும்போது, எழுதுகிறது. ஏழாம் ஆண்டில் தன் கழுத்துப் பட்டையைத் தானே முடிந்து கொள்கிறது.

## III. இடக்கை வழக்கம்

உடலமைப்பு :— கைத்திறனைப்பற்றிக் கூறும்போது பலர் வலக்கையில் பல தொழிலும் செய்துவரச் சிலர் இடக்கையில் பல தொழிலும் செய்து வருவது நினைவிற்கு வருகிறது. இடைக்கையான் என எள்ளனம் செய்வது இந்த உலக இயல்பு. இடக்கையினருக்கும் வலக்கையினருக்கும் அறிவு நிலையிலும் மன நிலையிலும் ஏதேனும் வேற்றுமை உண்டோ? இவ்வாறு சிலர் இடக்கையினராதல் ஏன்? சிலர் வலக்கையினர் ஆதல் ஏன்? உடலமைப்பைப் பற்றியே இந்த வேற்றுமை எழுகின்றது என்பர் ஒரு சிலர். குடிவழியாக வரும் இயல்பு என்பர் வேறு சிலர். கருப்பையில் எந்தப்புறம் சூல் ஒடுங்காது கிடந்ததோ அந்தப் புறத்துக்கையே நன்கு இயங்க வருகிறதாம். உள்ளுறுப்புக்கள் உடலின் இருபுறத்தும் சரிசமமாக அமையாததாலும் இந்த வேற்றுமை எழலாம். இருபுறத்தும் உள்ள குருதிக் குழைகளின் வளர்ச்சி வீதத்திலும் வேறுபாடு காண்கிறோம். முதலில் ஒருகை பழக்கத்திற்கு வருகிறது. இடக்கையினும் வலக்கையே பழக்கத்திற்குப் பொதுவாக வருகிறது. கையிலிருக்கும் எலும்புகளின் அளவும் வலப்புறத்திற்கு இடது புறம் மாறும் என்பர். பெருமூளையில் வலப் புறமும் இடப் புறமும் இவ்வாறு வேறுபாடு தோன்றவே வளர்கின்றனவாம்.

பயிற்சி :— இங்ஙனம் உடலமைப்பையே காரணமாகக் கூறுவோர் ஒரு புறமிருக்கப் பல பல செயல்களையும் கற்றுக்

கொண்டு பழகவரும் பயிற்சி முறையைப் பின்பற்றியே ஒரு சிலர் வலக்கையினராகவும், ஒரு சிலர் இடக்கையினராகவும் பழகிவிடுகின்றனர் என்பது வேறு சிலர் கொள்கை. கருப்-பையில் நேர்ந்த பழக்கத்தாலோ, பெற்றோர் அல்லது செவிலியர் வலக் கையினராகவோ இடக் கையினராகவோ இருந்து பழக்குவதற்கு ஏற்பப்படியும் பழக்கத்தாலோ, இந்தவேற்றுமை எழலாம் என அவர்கள் கூறுகின்றார்கள். பால் குடிக்கும் போதும், ஒன்றைப் பற்றவரும்போதும், பொருள்களைக் கையாளும்போதும், சார்பாகக் கையை ஊன்றும்போதும், தவழும்போதும், எந்தக் கையைக் குழவி பழக்கி விடுகின்றதோ, அந்தப் பழக்கமே நிலைத்துவிடுகின்றது என்றும், அந்த அறிஞர்கள் விளக்கி வைக்கின்றார்கள்.

பழக்கம் :— குழவிகள் எந்த எந்தப் பருவத்தில் எந்த எந்தக் கையைப் பயன்படுத்தி வருகின்றன என அறிஞர்கள் உற்றுநோக்கி ஆராய்ந்து குறித்து வைத்து உள்ளார்கள். முதல் ஆண்டில் குழவிகளிற் பல ஏதேனும் ஒரு புறத்துக் கையினையே பெரிதும் பயன்படுத்தக் கண்டனர். ஆறும் திங்களிலிருந்து பதினோராந்திங்கள் வரையில் குழவிகளிற் செம்பாதி வலக்கையைப் பயன்படுத்தியும், செம்பாதி இடக்-கையைப் பயன் படுத்தியும் வருகின்றனவாம். எட்டாம் ஆண்டிற்குள் வலக்கை வழக்கமோ இடக்கை வழக்கமோ மாறாது நன்கு படிந்துவிடுகிறது. கைப் பழக்கம் கையை மட்டும் பற்றியதன்று; அந்தப் புறத்து உறுப்புக்கள் அனைத்-தினையும் பற்றிய பொதுநிலையேயாம். வலக்கையாளர் இடக்கை யாளர் எனக் கண்டுபிடிக்க இரண்டு கையாலும் எழுதவைத்து ஆராய்கின்றனர். ஐந்தாவது வயதுவரையில் குழவிகள் ஒரு கையால் ஒரு பக்கமாக எழுதியும், மற்றொருகையால் முன்ன-தற்கு எதிர்ப்புறமான இயக்கங்களை எழுப்பி எழுதியும் வரு-

கின்றனவாம். ஒன்பதாவது வயதிற்குள் இந்தப் போக்கு மறைந்துவிடுகிறது.

கேடு :— இடக்கை வழக்கத்தால் பெருங்கேடொன்றும் இல்லை. அவ்வாறு கேடு எழுகின்றதென்றால் அது நாமே வருவித்துக் கொள்வதே ஆம். பெரும்பான்மையோர் வலக்கையினராக இருப்பதால், இடக்கையினரைக் காணும்போது நோயாளிகளைப் பார்ப்பதுபோலப் பெற்றோரும் சுற்றியுள்ளோரும் பார்த்து வருகின்றனர். இந்தச் சுற்றுப்புறநிலையால் இடக்கை வழக்கம் இழிந்த வழக்கம் என அக்குழவியும் நம்பத்தொடங்குகிறது; பிறர் எல்லாம் தமக்கு வேறுபட்டிருப்பதாலே அவர்களை எல்லாம் பகைக்கின்ற மனப்பான்மையும் வளர்கிறது ; அதன்மனமும் முறிந்து போகிறது. வீணே இவ்வாறு குழவியும் வாடப் பெற்றோரும் வருந்த நேரும் இந்தக் கொடுமையை என் என்பது? ஆனால் குழவியைத் தொடக்கத்திலேயே குழவியின் மனத்திலுறுத்தாதபடி தக்க வழியிற் பழக்கினால் இடக்கைக் குழவியை வலக்கைக் குழவியாகப் பழக்கிவிட்டு வளர்க்கலாம். காலந்தாழ்த்தாற் பயனில்லையாம்.

## IV. செய்திகள்

சில செய்திறன் :— கைத்திறனைக் கண்டோம். வேறுசில செய்திறன்களையும் சுருக்கமாகக் கண்டறிவது விரும்பத்தக்கதாம். வயதிற்கு ஏற்பக் குழவிகள் அந்த அந்தச் செயல்களில் எவ்வாறு முன்னேறித் திறம்பெற்று வருகின்றன என அறிஞர்கள் குறித்துவைத்து உள்ளார்கள். ஆராய்ச்சியாளர், பல அடி உயரமுள்ள பெட்டியின்மேலே குழவியை நிறுத்தி உதவியோடோ,, உதவியின்றியோ குதிக்கச் செய்கின்றனர். உதவியின்றிக் குதிக்கும் உயரம் வயதிற்கு ஏற்ப உயர்ந்து வருதல் காண்க.

குதித்தல் :—

(1) 24ஆம் திங்களில் 18அங்குலம் உயரமுள்ள பெட்டியினின்று குழவி உதவியோடும்குதிக்கின்றது
(2) 24 „ „ 12 „ „ „ „ உதவியின்றிக் „
(3) 31 „ „ 18 „ „ „ „ „ „
(4) 33 „ „ 18 „ „ „ „ „ „
(5) 34 „ „ 22 „ „ „ „ „ „
(6) 36 „ „ 28 „ „ „ „ உதவியோடும் „
(7) 37 „ „ 28 „ „ „ „ உதவியின்றிக் „
(8) 43 „ „ 28 „ „ „ „ „ „
(9) 46 „ „ 28 „ „ „ „ „ „

சமநிலை தளராது காத்தல் :— 10 அடி நீளமும் 1 அங்குல அகலமும் உள்ள நேர்வழி ஒன்றினை அறிஞர் அமைக்கின்றனர். 4 அடி விட்டமும் (diameter) அங்குல அகலமும் உள்ள வட்ட வழியினையும் அமைக்கின்றனர். குழவியை இவற்றிலே நடந்துவரச்செய்து எத்தனை முறை தவறுகின்றது என ஆராய்கின்றனர். வயது ஏற ஏறத் தவறுதல் குறைந்துவருதல் காண்க.

12 a

(1) 28 ஆம் திங்களில் நேர் வழியில் 4 இல் இருந்து 6 முறை அடிவைப்பதில் தவறி விடுகிறது.
(2) 28 ,, ,, வட்ட ,, 4 ,, ,, 6 ,, ,, ,, ,,
(3) 31 ,, ,, நேர் ,, 1 ,, ,, 3 ,, ,, ,, ,,
(4) 35 ,, ,, வட்ட ,, 1 ,, ,, 3 ,, ,, ,, ,,
(5) 37 ,, ,, நேர் ,, தவறுவதே இல்லை.
(6) 45 ,, ,, வட்ட ,, தவறுவதே இல்லை.

பந்தெறிதல்:—பெரிய பந்து 16¼ அங்குலம் விட்டம் உள்ளது. சிறிய பந்து 9½ அங்குலம் விட்டம் உள்ளது. இவற்றை வீசி எறியுமாறு குழவிகளை ஏவுகின்றனர். வயது ஏற ஏற வீசி எறியும் தொலைவும், பந்தின் பருமையும் மிக்குவருதலைக் காண்க.

(1) 29 ஆம் திங்களில் 5 அடி தொலைவு சிறிய பந்தை வீசி எறிகிறது.
(2) 30 ,, ,, 5 ,, ,, பெரிய ,, ,, ,,
(3) 33 ,, ,, 7 ,, ,, சிறிய ,, ,, ,,
(4) 43 ,, ,, 7 ,, ,, பெரிய ,, ,, ,,
(5) 44 ,, ,, 9 ,, ,, சிறிய ,, ,, ,,

(6) 52 ஆம் திங்களில் 11 அடி தொலைவு சிறிய பந்தை வீசி எறிகிறது
(7) 53 ,, ,, 9 ,, ,, பெரிய ,, ,, ,,
(8) 57 ,, ,, 13 ,, ,, சிறிய ,, ,, ,,
(9) 63 ,, ,, 11 ,, ,, பெரிய ,, ,, ,,
(10) 65 ,, ,, 15 ,, ,, சிறிய ,, ,, ,,

பந்தடித்தல்:— மேற்கண்ட இரு பந்துகளையும் கீழே விழுந்து மேல் எழுமாறு அடிக்கவிட்டு ஆராய்ச்சியாளர் ஆராய்கின்றனர். வயது ஏற ஏறப் பந்தை அடிக்கவும், உயரம் மிக்கு எழுமாறு ஒரு கையால் அடிக்கவும் குழவி பழகிவிடுகிறது.

(1) 24 ஆம் திங்களில் சிறிய பந்தினை ஒரு கையால் 3 அடி மேல் எழுமாறு அடிக்கிறது
(2) 40 ,, ,, ,, ,, ,, ,, 5 ,, ,, ,, ,,
(3) 46 ,, ,, பெரிய ,, இரு ,, 5 ,, ,, ,, ,,
(4) 65 ,, ,, ,, ,, ,, ,, 7 ,, ,, ,, ,,
(5) 71 ,, ,, ,, ,, ஒரு ,, 3 ,, ,, ,, ,,

பந்தினைப் பிடித்தல் :— மேற்கண்ட இரு பந்துகளையும் வீசி எறிந்தால் குழவி அதனைப்-பிடித்துக் கொள்ளுமாறு ஆராய்ச்சியாளர் ஏவுகின்றனர். வயது ஏற ஏறத் தவறாது பிடித்து வருதலோடு பிடிக்கும் முறையும் திருத்தமுற்று வருதல் காண்க.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | 34 ஆம் | திங்களில் | பெரிய | பந்தைக் | கையை நேரே நீட்டி | 3 | இல் | 1 | முறை | பிடிக்கிறது |
| (2) | 35 ,, | ,, | ,, | ,, | முழங்கையை உடலில் வைத்து | 3 | ,, | 1 | ,, | ,, |
| (3) | 37 ,, | ,, | சிறிய | ,, | கையைநேரே நீட்டி | 3 | ,, | 2 | ,, | ,, |
| (4) | 38 ,, | ,, | ,, | ,, | முழங்கையை உடலில் வைத்து | 3 | ,, | 1 | ,, | ,, |
| (5) | 44 ,, | ,, | பெரிய | ,, | முழங்கையை உடலில் வைத்து | 3 | ,, | 2 | ,, | ,, |
| (6) | 50 ,, | ,, | சிறிய | ,, | ,, ,, ,, | 3 | ,, | 2 | ,, | ,, |
| (7) | 51 ,, | ,, | பெரிய | ,, | முழங்கையை பக்கத்தில்வைத்து | 3 | ,, | 1 | ,, | ,, |
| (8) | 55 ,, | ,, | சிறிய | ,, | ,, ,, | 3 | ,, | 1 | ,, | ,, |
| (9) | 58 ,, | ,, | பெரிய | ,, | ,, ,, | 3 | ,, | 2 | ,, | ,, |

## V. சில குறிப்புகள்

இயக்கத்தில் ஒரு சந்தம்:- குழவிகள் இயங்கிவரும்போது அந்த இயக்கத்திற்கு ஏற்பத் தாளம்போடலாம் எனத் தோன்றுகிறது. இதனை இயல்பெனக் கூறுவதற்கு இல்லை. குழவி இதனைக் கற்றுக்கொள்ளுகிறது என்றே கூறவேண்டும். பல வகையான இயக்கங்களைக் குழவி தானே செய்து வருகையில் இத்தகைய இசை பிறக்கின்றது எனலாம். தாளத்திற்கு ஏற்றாற்போல இயங்கவேண்டுமானால் உடலும் நன்கு வளர்ந்து அமைதல் வேண்டும். இரண்டாம் ஆண்டிலிருந்து 5 அல்லது 6 ஆம் ஆண்டு வரையிலும் இத்தகைய இசை உணர்வு மிக்கு எழுந்து விளங்கக் காண்கிறோம். அந்த வயதில் இத்தகைய பழக்கத்தை எளிதில் விளைவித்தல் கூடும். நீக்ரோ (Negro) என வழங்கும் கருங்குடி மக்களின் குழவிகள் நன்கு பாடுகின்றனவாம். குழவியைத் தக்க பருவத்தே தக்க வழியில் வளர்த்தால் இசையுணர்வை வளரச் செய்யலாம். ஆனால் இசையினைத் தாளந் தவறாமல் உணரவேண்டும் என வற்புறுத்துவதில் பயன் இல்லை. குழவி தன் முறைப்படி அதற்கு ஏற்ற வேகத்தோடு ஆடவும் பாடவும் விட்டுவிடுதல் வேண்டும். பேசும்போதும், கையைத் தட்டும்போதும், நடக்கும் போதும், ஊசலாடும்போதும் தாம் விரும்பியபடி இசை உணர்வினை வளர்க்கவிடவேண்டும். பின்னர்த் தாளமும் சரிப்பட்டுப் போகும். அவ்வாறின்றி இடை இடையே தடை செய்து வருவோமானால் இசையுணர்வே கெட்டொழியும்.

ஒருங்கு இயைந்து வளரல் :- இயக்கங்கள் ஒருங்கியைந்து கோலங்களாக (Patterns) அமைகின்றன. இவை முறையாக வளர்ந்து பரவக் காண்கிறோம். முதலில் கண்களின் இயக்கங்களே ஆளப்பெற்று ஒருங்கியைய வருகின்றன. அடுத்தாற்

போலக் கழுத்துத் தசைகளின் இயக்கங்கள் ஒற்றுமை பெற்று விளங்குகின்றன. மூன்றும் மாதத்திற்குள் குழவி அப்புறமும் இப்புறமும் கழுத்தைத் திருப்புகின்றது. பின், தலையையும் மார்பையும் தூக்கிக்கொள்கின்றது. நான்காம் மாதத்திற்குள், கண், தலை, கழுத்து முதலியவற்றின் இயக்கங்கள் ஒருங்கியைய வருகின்றன. ஒருங்கியைய வருகின்ற நிலை பின்னர்த் தோளுக்காக இயங்குகின்றது. தோள்களும் கைகளும் ஒருங்கு இயைந்து இயங்குகின்றன. கையால் தொடுவதும் பற்றுவதும் முதலான தொழில்கள் நிகழ்கின்றன. குழவிகள் 15 ஆம் வாரத்தில் விளையாட்டுப் பொருள்களை வைத்து விளையாடுகின்றன. 38 ஆம் வாரத்தில் குழவி கவிழ்ந்து கொள்கிறது. அதற்கு அப்புறம் குழவி பின்னுக்காகப் போகிறது; தவழ்கிறது; நிற்கிறது; நடக்கிறது; ஓடுகிறது. கருப்பையில் வளர்ச்சிநிலையும் தலையிலிருந்து கீழுக்கு இறங்கி வந்ததுபோலத் தசைகளின் இயக்க வளர்ச்சியும் இவ்வாறு தலையிலிருந்து இறங்கிவரக் காண்கிறோம்.

துலக்கம் யாது (Development) ? :— 'இயக்கங்கள் துலங்கி வருகின்றன; வளர்ந்து வருகின்றன' எனப் பேசுவதன் பொருள் என்ன ? என்ன நிகழ்கின்றது ? ஊன்றலின் பின் எதிரூன்றல்கள் எழும் வேகம் விரைந்து வளர்ந்துவரக் காண்கின்றோம். இது வளர்ச்சியின் முதல் இயல்பாம். புதிய புதிய எதிரூன்றல்களைக் குழவிகள் கண்டுகொள்கின்றன. ஈதே இரண்டாம் இயல்பாம். தற்செயலாக எழும் பொருளற்ற இயக்கங்கள் மறைகின்றன. ஈதே மூன்றும் இயல்பாம். குழவி உரிமையாக இயங்கிவரும்போதுதான் இத்தகைய வளர்ச்சி வளம் பெற்று வருகிறது. ஆதலின், குழவிகளின் இயக்கங்களைத் தடுத்தலாகாது. இந்தத் தடைகளே முடிவில் காலையும் கையையும் பிணிக்கும் விலங்குகளாக மாறிவிடு-

கின்றன. குழவிகளே அவை விரும்பியபடி இயங்கவிட வேண்டும். வீணே இயக்கங்கள் குறைந்து பின் தாமே மறைந்து போகின்றன. ஓரியக்கத்திற்குப் பதிலாக ஓரியக்கம் திருத்த முற்றுச் செயற்கை மறிவினைகளாக வளரக் காண்கிறோம். குழவி கரண்டியை வாயில் வைக்கின்றது; அதனை ஒன்றின் மேல் மோதுகிறது; தவறிக் கரண்டி கீழே விழுகின்றது; இதனைக் கண்டபின் குழவி தானே கரண்டியைக் கீழே எறிகிறது; இவ்வாறே ஒவ்வோர் இயக்கங்களிலிருந்தும் செயற்கை இயக்கங்கள் புதிய புதிய முறையில் தொடர்பு பெற்று வளரக் காண்கிறோம். இவ்வாறெல்லாம்தான் இயக்கங்கள் துலங்கி வருகின்றன.

இயக்கத்தின் துலக்கம் :— இயக்கங்கள் நன்கு துலங்கி வரவேண்டுமானால் குழவியின் இயக்கத்தினிடையே தடையொன்றும் நிகழ்தல் கூடாது; வேண்டியவாறு இயங்கவிடவேண்டும். அத்தகைய உரிமை வாழ்க்கையில் பலவகையான இயக்கங்களும் தோன்றும்; இவை ஒருங்கு இயைந்தும்வரும்; துலக்கமுற்றும், திருத்தம் பெற்றும் தோன்றும். உடல் முற்றிவரக் குழவிக்கு நல்ல ஊட்டந் தரவேண்டும். ஓடியாடி விளையாடுகிற குழவிகள் பெருந்தொல்லை கொடுத்து வந்தாலும் பெரியவர்களாகி வரும்போது தகுதிபெற்றோராய் வளர்வர். தசையின் வன்மை வளர்வது மட்டுமே செயற்படு நிலையின் நோக்கம் எனக் கருதல் ஆகாது. உலகிலே குழவி வளர்ந்து வாழ்ந்து வரும்போது எத்தனையோ புதிய புதிய நிலைகள் எழும். அந்த நிலைகளுக்குத் தக்கவாறு குழவி பொருத்த முற்றுத் திருத்தம் பெற்று வாழ்தல் வேண்டும். இயக்கங்கள் அனைத்தும் துலக்கமுற்று விளங்கினாலன்றி இத்தகைய பொருத்தப்பாடு எங்ஙனம் எழுதல் கூடும்? அறிவுநிலையில், விளக்கம் இத்தகைய பொருத்தங்களிடையே அன்றோ நன்கு

பொலிகிறது? இயக்கத்தின் துலக்கமும் அறிவின் விளக்கமாக முடிவது இவ்வாறே என்பது தெளிவாகிறது.

தசையாட்சி :— தசையை அடக்கி ஆளுவதினாலேயே இயக்கங்களை அடக்கி ஆளலாம். தசை ஆட்சி தசையைப் பெருக்கவைப்பதாலும் வாராது. தசையாற்றல் பொங்கி வழியவிடவேண்டும்; முரண்பட்டு நிற்கும் தசைகளிடையே நுட்பமானதொரு சமநிலையை வளர்க்கவேண்டும்; இவற்றாலேயே தசையாட்சி கைவரப்பெறும். ஓர் இயக்கம் நிகழ வேண்டுமானால் ஒரு தசை சுருங்கவேண்டும்; மற்றொருதசை விரியவேண்டும்; ஒன்று இறுகவேண்டும்; மற்றொன்று நெகிழ வேண்டும். இவ்வாறு முரண்பட்ட இரண்டு வேறு தனி இயக்கங்களும் மிகமிக நுட்பமான அளவில் எழுந்தால் மட்டுமே இவற்றின் பயனான இயக்கம் எழுதல் கூடும். கோபம் முதலிய பொங்கும்போது தசைகள் விறைத்துக் கொள்கின்றன; இயக்கமே எழுவதில்லை. அத்தகைய நிலையில் இயக்கம் துலங்கிவருவது அருமையேயாம். அத்தகைய நிலைகள் எழாதபடி காத்தல் வேண்டும். நுட்பமான நிலையில் தசைகள் இயங்கவேண்டுமானால் அவ்வியக்கங்கள் இயற்கைச் செயல்களைப்போலவும், மறிவினைகளைப் போலவும் பழக்கத்திற் படிந்துவிடவேண்டும். எல்லாவகையான இயக்கங்களையும் தங்குதடையின்றி எழுப்பி வருவோமானால் இவற்றின் நுண்ணிய வேற்றுமையும் புலனாகிப் பின் பழக்கமாகிவிடும். “அப்படிச் செய்யாதே! இப்படிச் செய்யாதே!” என இயக்கத்தினைக் குழவி தொடங்குவதற்கு முன்னரே தடுத்து வருவோமானால், குழவி இயக்கங்களில் ஒன்றனையும் நல்ல முறையில் செய்ய அறியாது திகைத்து நின்றுவிடுகிறது.

கெட்ட பழக்கம் :— சில குழவிகள் எழுதும்போது, பல்லைக் கடித்தும், தலையை முறுக்கியும் நிலையாக எழுதி

எளிதில் களைத்தும் போகின்றன. தக்கவழியில் பழக்கப் பெறுமையாலேயே இத்தகைய கேடுகள் விளைகின்றன. அடிக்கடி குழவியை வைது வருவதாலும், அளவுக்கு மேற்பட்ட கட்டுப்பாட்டாலும் இவ்வாறு நிகழ்கிறது. முறுக்கிய நிலை நீங்க நெகிழவிட்டு ஓய்வு எடுக்கக் குழவியால் ஆவதில்லை. ஆகவே குழவி தன் நடத்தையை அடக்கி ஆளமுடியாமல் வாடுகிறது எனலாம். இதன்பயனாகக் குழவி பலவகை இயக்கங்களிலும் ஈடுபடாது அஞ்சித் தயங்குகிறது. அது உலகினைவிட்டு ஓடி ஒளிந்து கொள்வதுபோலத் தோன்றுகிறது. மக்கட் கூட்டத்தினிடையே கூடி வாழ்வதும் அதற்கு முடிவதாவதில்லை. இங்கே, வாழ்க்கையின் பல சிக்கல்களும் மனமுறிவு முதலியனவும், சிலபோது, தோன்றலாம்.

உரிமை :- ஆதலால், கட்டுப்பாடு, அளவிற்குமேலிராத படி பழக்கவேண்டும். பிறருக்கோ குழவிக்கோ கேடுவராத நிலையில் குழவி விரும்பியவாறு பலவகை இயக்கங்களையும் தானாகச் செய்து காண விடவேண்டும். தாளத்திற்குப் பொருத்தமான வகையில் இயங்கிவருமாறு குழவியைப் பழக்குதலும் வேண்டும். இசைவுபெற்ற இயக்கங்களையே "கூத்துத் தமிழ்" என்றனர் பழந்தமிழர். இந்த இசைக்கூத்தில் பழகும்போதும் கட்டுப்பாட்டை வற்புறுத்துவதில் பயனில்லை. நாம் கொடுக்கும் பழக்கம் தடைசெய்யும் வடிவில் எதிர்நிலைப் பழக்கமாக எழுவதில் பயனில்லை; செயல்களை எழுப்பிவிடும் உடன் பாட்டுப் பழக்கமாகவே வளர்தல் வேண்டும்.

## VI. சில நுட்பங்கள்

முற்றும் போது பழகுக :— குழந்தைகளைப் பயிற்றுவதில் சில நுட்பங்கள் உள்ளன. அவற்றினை அறிவதும் நல்லதே

ஆம். ஒவ்வொரு நிலையையும் சிறப்பாக ஆராயவேண்டும். வேண்டிய உடலுறுப்பு முற்றுவதற்கு மிக மிக முன்னரே பயிற்சி தொடங்குவதிலும் பயன் இல்லை. மூங்கிலைக் குருத்தாக இருக்கும்போதே வளைத்துப் பயனில்லை; வளைக்கமுடியாதபடி முற்றிய பின்னர் வளைத்தாலும் பயனில்லை. உடல் நிலை முற்றி வரும் நிலையோடேயே பயிற்சியும் தக்கவழியிற் பொருத்த-முற்று நிகழ்தலே பயனுடையதாம்.

தானாக எழும் இயக்கம் :— தானாகவே குழவி செய்து வரும் இயக்கங்களை அடிப்படையாகக் கொண்டே பிற இயக்-கங்களையும் இயக்கங்களின் புதிய புதிய தொடர்ப்பாடுகளையும் எழுப்பப் பழகுதல் வேண்டும். கைத்திறனும் செய்திறனும் வளர வழிகாட்டுவன அவையே ஆம். அவற்றினைத் தடுத்து-விட்டால் பயிற்சி எங்கே? வெறுங்கையை முழம் போடுவது போல ஆகும்.

தசைப் பயிற்சி :— பல வகை இயக்கங்களின் தொடர்-பாக விளங்கும் செயல்களைக் குழவிக்குக் கற்பிக்க வேண்டுவது இன்றியமையாததேயாம். ஆனால், அவற்றைக் கற்பிப்பதற்கு முன்னர் அத்தொடர்ப்பாட்டில் ஒருங்கியைந்த-தாய் விளங்குகிற இயக்கத்தினைச் செய்து வருவதற்காக வேண்டி, அந்த இயக்கத்தில் இயங்கவரும் தசைகளை இயக்கி, விரும்பியவகையில் எல்லாம் அடக்கியாளுமாறு குழந்தையைப் பயிலவிட வேண்டும். இவ்வாறு தசைகளை ஆளக் கற்ற குழவி சிக்கலான இயக்கங்களையும் எளிதில் எழச்செய்து காட்டும்.

குழவி பொறியன்று :— குழவியினிடத்தே எழும்-இயக்கங்கள் உயிரற்ற பொறியினிடத்தே எழும் இயக்கங்கள் அல்ல. மாறுது ஒரே படித்தாக எப்பொழுதும் ஒரே அளவில்

நிகழும் எந்திரங்களின் இயக்கங்கள், மழையிலும் வெயிலிலும், குளிரிலும், காற்றிலும், இரவிலும், பகலிலும், பிறர் சுற்றி நிற்பினும், நிற்காவிடினும், ஒருமுறை நிகழ்ந்தது போல ஒரு மயிரிழை அளவும் தவறாது பின்னும் பின்னும் நிகழ்ந்து வரும். குழவி அத்தகைய பொறி அன்று. அப்போதைக்கப்போது இருக்கும் தன் அகநிலைக்கும் புற-நிலைக்கும் தக்கவாறு அவற்றோடு பொருத்தமுற்று மாறிமாறி அது இயங்கிவரும். இந்த நிலைகளை எல்லாம் அறிந்தே, நாம் அதனைப் பழக்குதல் வேண்டும்.

உடல் நிலை :— குழவியின் உடல் நிலையையும் அறிந்தே பழக்குதல் வேண்டும். இரண்டாம் ஆண்டில் இருந்த கால் எலும்பு ஆறும் ஆண்டில் மிக வளர்ந்துவிடுகிறது; உடலுக்கும் காலுக்கும் உள்ள வீதம் மாறுகிறது. எனவே இரண்டாம் ஆண்டில் நின்ற சமநிலை ஆறும் ஆண்டில் இருப்பதினும் வேறும். இதற்குத்தகவே பழக்கங்களும் எழுதல் வேண்டும். எனவே பழக்கம் உடல் நிலை, சுற்றுப்புறநிலை இவை அனைத்தோடும் பொருத்தமுற வேண்டும்.

அறிவு :— கைத்திறனும் செய்திறனும் திருத்தமுற வேண்டுமானல், அக்குழவி செய்யவேண்டியதனைப் பொதுவாக அது அறியுமாறு செய்தல் வேண்டும். எதற்காக அந்தச் செயல் எழவேண்டும் என்பது குழவிக்குத் தெரிந்தால் போதும். அந்தச் செயலின் பலவகை நிலைகளையும், சிறு நுட்பங்களையும், பலவேறு உறுப்புக்களையும் விளக்கிக்கொண்-டிருக்க வேண்டாம். அதனல் தெளிவும் பிறவாது; ஊக்கமும் பிறவாது. திகைப்பும், தயக்கமும் குழப்பமுமே பிறக்கும்.

விடுதலை :— குழவி தவருகவே செய்யக் கற்றுக்கொண்-டாலும் அதனை வைதோ வற்புறுத்தியோ மறுத்து நின்றால்

எதிர்ப்பினையே வளர்த்தவர் ஆவோம். குழவி வேண்டாத-தனைச் செய்யும்போது சில தாயர் "செய்யாதே செய்யாதே" என இரைகின்றனர். குழந்தையோ துள்ளித் துள்ளி அதனையே செய்கிறது. ஆனால் சில தாயரோ "செய்யாதே" என்று தடை ஒன்றும் எழுப்பாது, குழவியின் கருத்தினை வேறொன்றன்மேல் திருப்பிவிடுகின்றனர்; முன்னைய நிலைமை வாராதபடியும் பார்த்துக்கொள்ளுகின்றனர். ஈதே சிறந்த வழியாம். செய்திறனைப் பயிற்றும்போதும் இங்ஙனமே செய்தல்வேண்டும். பயிற்றும்போது வெறுப்போ வருத்தமோ நோயோ விளையாதபடி பயிற்ற வேண்டும். கட்டுப்பட்ட நிலையில் மெல்ல எழும் இயக்கங்களிலும் தங்குதடையின்றி வீசியாடும் இயக்கங்களைத் தாமே விரும்பிச் செய்யுமாறு விட்டுப் பழக்கினால் பிற இயக்கங்கள் எளிதில் வரும் என்பதில் ஐயமில்லை.

## VII. அறிவும் இயக்கமும்

இயக்கமும் மனநிலையும் :— குழவியின் உள்ளத்தியல் பினை ஆராயவந்த நாம் இயக்கங்களை ஆராய வேண்டுவதன் இன்றியமையாமையை மேலும் வற்புறுத்த வேண்டுவதில்லை. இயக்கத்திற்கும் மனநிலைக்கும் உள்ள இயல்பு நேர் முகமாக விளங்கக் காண்கிறோம். உறுப்புக்களின் இயக்க நிலையைக் கண்டவுனே மனநிலையையும் அறிதல் கூடும். தலை ஒரு பக்கமாகச் சாய்ந்து இருக்குமானால் 'குழந்தை அச்சத்திற் பழகிய பயங்கொள்ளி' எனக் கூறலாம். உடல் நிலை நேராக இல்லாமற்போனால், "நரம்பாற்றல் உடலின் ஒரு புறத்திலேயே மிக்கு ஓடுகிறது" எனலாம். அடுத்தது காட்டும் பளிங்கு-போல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம். "நெற்றியில் கோடு விழுந்திருந்தாலும், கண் சோர்ந்திருந்தாலும், வாய் கோணிக்

கொண்டு தளர்ந்துஇருந்தாலும், 'குழவி இன்பமாகவாழவில்லை' என்று அறிந்து கொள்ளலாம். கையைத்தோளுக்கு நேராக நீட்டி உள்ளங்கையைக் கவிழ்த்துக்கொண்டு நிற்கச் செய்தால் நன்கு வளர்ந்து பழகிய குழந்தை அரைநிமிஷம்வரை நேரே நீட்டிக் கொண்டிருக்கும். அச்சத்தாலும் பிறவற்றாலும் மனம் சிதைந்த குழவியானால், விரல் மூட்டுகள் சிறிது உயர்ந்தும், மணிக்கட்டுச் சிறிது சோர்ந்தும், பெருவிரல் பின்னுக்காக விரிந்தும், இருக்கக் காண்போம். சுறுசுறுப்பாய் ஓடி விளையாடும் குழந்தையானால், மணிக்கட்டுப் பின்னுக்காகப் பரந்து நிற்க, விரல்கள் சிறிது மடங்கி இருக்கக் காண்போம். நேராக நிற்கும் கையில் பெருவிரல் சோர்ந்து இருக்குமானால், குழந்தைக்குக் களைப்பு வருகிறது என்பதற்கு அந்த அமைப்பே முதல் அறிகுறியாம். அஞ்சி வெருண்டு நிற்கும்போது விரல்கள் எல்லாம் விரிந்து கொள்கின்றன. கையை இறுக மூடிக்கொள்ளும் குழந்தையே உணர்ச்சி மிக்க குழந்தையாம். ஆகையால் நிலைசிதைந்து நிற்கும்போது, குழந்தையை அடித்து மேலும் வெருட்டுவதிற் பயனில்லை. அதன் மனநிலையை அறிந்து ஊக்கம் கொடுத்து மகிழ்ச்சியூட்ட வேண்டும்.

மனநோயும் இயக்கமும் :— மேலே பலவகை இயக்கங்களையும் தனித்தனியே ஆராய்ந்தோம். குழவியின் உள்ளத்தைப்பற்றி ஆராயும்போது அதன் தவழ்தலையும், நடத்தலையும், கண் இமைத்தலையும், கை வீசுதலையும் பற்றி ஆராய்வது ஏன் என ஐயம் தொடர்ந்து எழுவதும் இயல்பே. குழவியின் மனத்தை நடத்தை கொண்டே அறிய முடியும் எனக்கண்டோம். இயக்கங்களின் வழியாகவே குழவியின் அறிவு மின்னிப் பொலிகிறது. இயக்கங்களின் துலக்கத்திற்கும் உள்ளத்தின் துலக்கத்திற்கும் இயைபு இருப்பதனை அங்கங்கே

குறித்து வந்தோம். இயக்கங்களும் உள்ளத்தின் செயல்களும் நரம்பமைப்பைப் பொறுத்திருக்கக் கண்டோம். ஆகவே இயக்கங்கள் துலக்கமுற்றுத் திருத்தம் பெற்று வருமுறையில் நரம்பணுக்கள் வளர்ச்சியுற்று வருமாயின் நரம்பைப்பற்றி வளரும் உள்ளத்தின் செயல்களும் வளர்ந்து திருத்தம் பெறுமன்றோ? மூளையின் கோளாறுகளை ஆராய்கின்ற மருத்துவர்கள் அத்தகைய மனநோயும், வெறிநோயும், மூளை நோயும் தோன்றும்போது அவற்றை உடலுறுப்பின் இயக்கங்களிடையே தோன்றும் மாறுதல்களின் வழியே அறிந்து வருகின்றார்கள். இதனாலும் இயக்கங்களுக்கும் மனநிலைக்கும் உள்ள தொடர்பு நன்கு விளங்குகிறது.

இயக்கமும் அறிவும்:— அன்றியும் மனவளர்ச்சி என்பது எங்கே தெள்ளத்தெளிய விளங்குகிறது? நடை, கருவியைப் பயன்படுத்துதல், பேசுதல் முதலிய தலைசிறந்த தொழில்களிடையே மனவளர்ச்சி நன்கு புலனாகிறது எனலாம். அங்கெல்லாம் சிறப்பியல்பாக விளங்குவது பலவகை இயக்கங்கள் ஒருங்கியைந்து இயங்குவதேயாம். இவ்வளவும் கூறியமையால் இயக்கங்களைப்பற்றி உள்ளநூலில் ஆராய்வதன் நுட்பம் வெளியாயிருக்கும். ஹெலன் கூம்பர் (Helen-Comber) என்ற அம்மையார் சில குழவிகளின் அறிவு துலக்கமுறாது இருப்பதற்கு அவற்றின் இயக்கங்கள் திருத்தமுறாமையே காரணம் என்றும், அந்த இயக்கங்களின் சில வேனும் திருத்தம் பெறுமாறு அக்குழவிகளைப் பயிற்றி விட்டால் அவற்றின் அறிவு நிலையும் திருத்தமுற்று வளரக் காணலாம் என்றும் தம்முடைய அனுபவத்தினைத் தம்நூலில் பரக்கப்பேசி, 'எத்தகைய பயிற்சி கொடுக்கவேண்டும்' என்றும் விரிவாக எடுத்து விளக்கியுள்ளார். (Movement, a Clue to brain action)

அறிவு நிலை வயதும் இயக்கமும் :— விரலால் தட்டுதல் முதலிய செயல்களை நோக்கி ஆராய்ந்தபோது, குறித்த காலத்திற்குள் எழுகின்ற இவற்றின் எண்ணிக்கை வயதிற்கேற்ப ஏறிக்கொண்டே வருகின்றதாம். ஆனால், இவ்வாறு ஏறி வருவதற்கும் அறிவு விளக்கத்தை அறுதியிட்டுக் காணும் அறிவுநிலை வயதிற்கும் தொடர்பொன்றும் இருப்பதாக ஆராய்ச்சியால் இதுவரை விளங்கவில்லை.

"துடிக்குறடு உருட்டி ஓடித் தொடக்கு நாய் பாசம் சுற்றிப்
பிடித்தறுத்து எயினப் பிள்ளைப் பேதையர் இழைத்த வண்டல்
அடிச்சிறு தளிரால் சிந்தி அருகுறு சிறுவரோடும்
குடிச்செறி குரம்பை எங்கும் குறுநடைக்குறும்பு செய்து
(கண்ணப்ப நாயனார் புராணம்)

---

# 9. உணர்வு உலகம்

---

## I. குழவி உள்ளம் குழவி உள்ளமே

முதியவரின் முன்னிலை அன்று :— மனவளர்ச்சியின் இரண்டாவது வகை எது? புலனுணர்வின் துலக்கமே எனக் கண்டோம். குழவியின் உள்ளத்தினைக் குழவி உள்ளமாகவே ஆராய்ந்தால்தான் இந்தத் துலக்கம் நன்கு புலனாகும். குழவி உள்ளத்தினைக் குழவி உள்ளமாக ஆராய்வது தான் இருபதாம் நூற்றாண்டு கண்ட உண்மை. முதியவர் உள்ளத்தினை அறிவதற்காகக் குழவி உள்ளத்தினை அறிவது வேறு; அதுவே

முன்னைய ஆராய்ச்சி. குழவியை அறியக் குழவி உள்ளத்தினை அறிவதுவேறு; இதுவே இன்றைய ஆராய்ச்சி. குழவிநிலையைப் பற்றிய சில செய்திகள், முதியவர் நிலையைப்பற்றிய செய்திகள், இந்த இரண்டையும் கோவைபடுத்தினால் மட்டும் அக்கோவையின் உண்மை விளங்காது; அது உள்ளத்தின் வரலாறாகிவிடாது. ஒவ்வொரு செய்தியின் உட் பொருளை உணர்ந்தாலன்றி வரலாறு என்ற பேச்சுக்கு இடம் ஏது? தனிச் செய்திகளை அறிவதால் அந்தச் செய்திகள் மட்டும் விளங்கிவருமேயன்றி உள்ளத்தின் வளர்ச்சி புலப்படத் தோன்றாது. இந்தச் செய்திகளைத் தனித்தனியாக அவைகள் நிலை பெற்ற நிலையில் வைத்துக் காணாது, அவை இயங்கிவரும் நிலையில் வைத்துக் கண்டால் மட்டுமே, வரலாறு என்ற கருத்து நன்கு விளக்கம் பெறும். உள்ளத்தின் செயற்பாட்டு நிலையே சிறந்ததாம். ஒரு செயலின் முன் நிலையையும் அறிதல் வேண்டும்; பின் நிலையையும் அறிதல் வேண்டும்; அப்போது 'மனம் மாறா நிலையாகத் தேங்கிக் கிடக்கின்றது' என்ற எண்ணம் ஒழிந்து, வளர்ச்சியின் உண்மைத் தன்மை புலனாகும். அந்த வளர்ச்சிப் போக்கினிடையே "அவ்வவற்றின் நோக்கம் என்ன? பொருள் என்ன? எந்த எந்த நிலையில் எவை எவை எழுகின்றன? அந்த அந்த நிலைக்கும் அவ் அவற்றுக்கும் உள்ள தொடர்பு என்ன?" என்று ஆராயாது, முதியோரின் உள்ளத்தையே நோக்கமாக வைத்து ஆராய்வதால் பிறழ்ந்த உணர்ச்சியே எழும். குழவியின் உள்ளத்தினை முதியவரது உள்ளத்தின் முன்னிலையாகவைத்து ஆராயாது குழவி உள்ளமாகவே வைத்து ஆராய்தல் வேண்டும்.

வேற்றுமை ஏன்?:— குழவியின் உள்ள நிலை முதியவர் உள்ள நிலையினும் வேறாக அமைந்து கிடக்கின்றது. ஏன்? குழவியின் உள்ளம் புத்தம் புதியது. அனுபவங்கள் தத்தம் பல பல வண்ணங்களையும் குழவி உள்ளத்தில் பூசி வரவில்லை.

ஆனல், முதியவர் உள்ளம் ஒற்றுமைப்பட்டுத் தோன்றுவது போலக் குழவி உள்ளமும் ஓர் ஒற்றுமை பெற்றே விளங்கு-கிறது. இந்த ஒற்றமைப் பாட்டின் இயக்கமாகவே எந்த உள்ளத்தின் இயல்பினையும் ஆராய்தல் வேண்டும். "அந்த நிலையில் அது அவ்வாறு இயங்குவது ஏன்?" என ஆராயும் போது அந்த உள்ள நிலையின் நுட்பம் அனைத்தும் செவ்விதில் விளங்கும். ஆகையால் "உள்ளத்தின் செயற்பாடு எந்த எந்தப் பருவத்தில் எழுகின்றது? எந்த எந்த முறையில் எழு-கின்றது?" என ஆராய்தல் வேண்டியதே ஆயினும் அது அடிப்படையான ஆராய்ச்சி அன்றும்.

வினை வேறுபாடு :— உள்ளத்தின் செயல்முறைகள் முதலில் வேறுபாடின்றி விளங்குகின்றன. புகைப்படம் பிடித்த கண்ணாடியை அதிலுள்ள உருவைத் துலக்கிவரும் மருந்துகளில் போட்டால், முதலில் குழம்பி நிற்கும் படம், மெல்ல மெல்லத் தெள்ளத் தெளியத் துலங்கிவரும். அது போலக் குழவி மனமும் துலங்கிவரக்காண்கிறோம்! 1. மறிவினை என்றும், 2. உள்ளத்துடிப்பால் எழும் வினைகள் என்றும், 3. நோக்கத்தோடு எழும் இயற்கைச் செயல்கள் என்றும், 4. வேண்டும் என்று செய்துவரும் வினைகள் என்றும், செயல்களை அறிஞர் நான்காகப் பகுக்கின்றனர். எனினும் அவை அனைத்தும் ஊன்றலுக்கு எதிரூன்றலாக விளங்குகின்றன எனலாம். ஆகவே, எந்த எதிரூன்றல் எழவேண்டுமானாலும் ஊன்றல் புலப்பட வேண்டுமன்றோ? எனவே, புலவுணர்வு இன்றியமையாது வேண்டப்படுவது ஒன்றும்.

நனவின் வரலாறு :— புலவுணர்வு நனவுநிலையில் எழுவ-தாம். 'தொடக்கத்தில் நனவுநிலை எப்பொழுது எழுகின்றது' என்ற கேள்வியே குழவி உள்ளத்தினைக் குழவி உள்ளமாகக்

கண்டு ஆராய்கின்ற ஆராய்ச்சியின் அடிப்படையாம். முதல் முதல் விளங்கும் நனவுநிலை முதல் முதல் தோன்றும் இயக்கங்களோடு ஒத்த இயல்புடையதாம். இதனாலேயே இயக்கநிலை வளர்ச்சியின் பின்னர் இந்த ஆராய்ச்சி எழுகின்றது. முதலில் தோன்றும் நனவுநிலையானது தொடர்புற்று விளங்குவது உள்ளத்தின் செயற்பாடோடு அன்று; செயற்பாட்டு நிலையின் வளர்ச்சியோடுதான் அது தொடற்புற்று விளங்குகிறது. முதலில் பல வகையாகக் குழவியைத் தூண்டிவரும் ஊன்று-தல்களிடையே விளங்கும் குழவியின் புல உணர்வு எப்போது எழுகின்றது? சுற்றியுள்ள உலகப் பொருள்களின் அருள் நிறைந்த தோற்றத்தைப் பொறுத்ததேயாம் அப்புல உணர்வு. ஐம்புல உணர்வும் தனித் தனியே எழுந்து தொடர்பின்றிக் குழவியின் நடத்தையில் விளங்குதலின், ப்ரேயர் (Preyer) என்பவர் ஒவ்வொரு புலனையும் அறிய ஒவ்வொரு நனவுநிலை தனித்தனியே உண்டு எனக் கூறலாயினர். இவ்வாறு புல உணர்வுநிலை வெவ்வேறு புலன் நிலையாகத் தோன்றுவது நனவுநிலை வேறுபட்டு விளங்குவதால் அன்று. வெளித்-தோன்றும் பொருள்கள் குழவி நிலையில் ஒன்றுபட்டு விளங்-காமல் வேறுபட்டு விளங்குவதாலேயே இவ்வாறு வெவ்வேறு புலனிலையாகத் தோன்றும் எனல் வேண்டும். குழவிநிலையில் தோன்றும் தோற்றங்களிடையே ஓரியைபினை முதல் முதல் அவை தோன்றும் போதே குழவி எவ்வாறு அறிதல் கூடும்? உலகின் பலவகைத் தோற்றங்களையும் வேறுபிரித்தறிந்து ஒருங்கியைய வைத்துக் காணவேண்டுமானால் இத்தகைய வேறுபாட்டுப் புலவுணர்வு நிலைகளும் தனித்தனி முதலில் விளங்கிவருவதும் இன்றியமையாததேயாம்.

இயக்கமே உணர்வாதல்:- குழவியினிடம் முதல் முதல் தோன்றும் நனவுநிலை, தூக்கத்திலிருந்து அப்பொழுதுதான்

விழித்துக்கொண்ட முதியோரின் நனவுநிலையே போன்றது. இந்திய நாட்டு அறிஞர்கள் இந்த உவமையைக் கூறி உண்மையை விளக்கிவைக்கின்றார்கள். நனவுநிலையில் முதல் முதல் குழவி உணர்வது தனது செயற்பாடுகளையேயாம். நனவுநிலைக்குப் பொருளாவன அதன் செயற்பாட்டின் வேறு-பாடுகளேயாம். வெளித்தோற்றங்களைக் கண்டபோது அவற்றிற்கு ஏற்பக் குழவி மாறி நிற்கும் நிலையின் உணர்வே முதல் முதல் நனவு நிலையாகக் குழவிக்குத் தோன்றுகிறது. வெவ்வேறு நிலையில் வெவ்வேறு வகையாக இந்த உணர்வு மாறி வருவதனால் ஒரு தோற்றமே பல பொருள்பட நிற்கலாம். மரப்பந்தின் தோற்றம் அதனைக் குழவி எட்டப் போவதாகவும், வாயில் வைப்பதாகவும், எடையாகவும், வழுவழுப்பதாகவும், வீசி எறிவதாகவும், "தட்" என விழுந்து ஒலிப்பதாகவும், உருண்டு ஓடுவதாகவும் உணரப் பெறலாம். இயக்கமே எண்ணமாகப் பழுக்கும் என முன்னர்க்கண்டோ மன்றோ? பல நாள் வரை குழவி செயற்பாட்டினை நோக்கியே பொருளுக்கு இலக்கணம் கூறும். "நாற்காலி உட்காருவது. கிண்ணம் சோறுண்பது" எனக் குழவிகள் கூறிவருதல் காண்க.

எதிரூன்றல்கள் :— இவ்வாறு உலகத்தோடு பழகிவரும் போது உலகத் தோற்றங்களிடையே காணப்பெறும் பொது நிலையே வற்புறுத்தப் பெற்றுவரும், குழவி பொருளை எவ்வாறு உணர்கின்றது என அறிய வேண்டுமானால் குழவி எதிரூன்றி-வரும் முறையை உணர்தல் வேண்டும். குழவி பேசாதாகலின் இந்த வழியன்றி வேறுவழி இல்லை. உள்ளத்தின் செயற்பாடு, முதல் முதல் தானாகத் தோன்றுவதில்லை. சுற்றி வந்து பாய்-கின்ற தூண்டுதல்களை அடக்கி ஆள முயலும் பொழுதேயே குழந்தை செயலுற வேண்டிய நிலை எழுகிறது. அவ்வாறு அடக்கி ஆள முயலும் போதன்றோ குழவி பொருளை உற்றுப்

பார்க்கிறது? பல பல தோற்றங்களிடையே குழவி பழகியபின் ஒரு குறிப்பிட்ட தூண்டுதலைத் தானே வேண்டி அடைய விரும்புகிறது. அத்தகைய தூண்டுதலை அடைந்தால் அதனை நீண்ட நேரம் நிலைபெறுவிக்க முயல்கின்றது. எதிரே தோன்றாத பொழுதும் முன்னைய தூண்டல் நனவு நிலையில் இருப்பிடம் பெறலாம். அப்பொழுது அப்பொருள் கருத்துப் பொருளாகவே நனவு நிலையில் இடம் பெறுதல் கூடும். முன் நிகழ்ந்த தூண்டல் இவ்வாறு எண்ணமாக விளங்குகிறது என்பதாயிற்று. இந்த எண்ணம் குழவியின் உள்ளத்தே துடிதுடித்து நின்று ஒரு குறிப்பிட்டவகையில் குழவியை இயங்கிவரச் செய்கிறது. முன்னே தூண்டலாக நிகழ்ந்த போது எழுந்த செயற்பாட்டினோடு விளைந்த இன்பம், துன்பம், முதலிய பயன்கள் இப்போது எண்ணத்தில் விளங்கிவருவதே உணர்ச்சி எனப்பெறும். புலவுணர்வில் உணர்ச்சி ததும்புவதன் காரணம் இவ்வாறு நன்கு விளங்குவது காண்க.

## II. பொறிகள்

உலகம் :— ஆகவே, புல உணர்வு இவ்வாறு எவ்லா-வற்றிற்கும் அடிப்படையாக விளங்குகின்றது எனலாம். குழவியின் எதிரே தோன்றும் உலகமே அது முதிர்ந்த பின்னும் அதன் எதிரே தோன்றுகிறது. ஆனால் குழவி நிலையிலேயே இத்தோற்றம் அனைத்தையும் அறிந்தவர் ஒருவரும் இல்லை. சுற்றுப்புற நிலையே உலகமாய்த்தோன்றும் தோற்றத்தினை ஒவ்வொரு பருவத்திலும் ஒவ்வொரு வகையாகப் பொருள் பண்ணிக்கொண்டே வருகின்றோம். குழவி நிலையில் சுற்றுப் புறத்தோற்றத்தால் எழும் பொருள் வேறு; முதிர்ந்த நிலையில் எழும்பொருள் வேறு. இந்த வளர்ச்சியினையும் ஆராய்தல் வேண்டும்.

சக்திமயம் :— உலகம் ஆற்றல் வடிவமானது. "சர்வம் சக்திமயம் ஜகத்". ஒலி என்றும், ஒளி என்றும், சூடு என்றும், இயக்கம் என்றும், பலவேறு ஆற்றல்களின் வடிவயாக இந்த உலகம் நம்மைத் தாக்கி வருகிறது. அவ்வாறு தாக்கிவரும்-போது உயிர்ப் பொருள்கள் படிப்படியாக உயர்ந்துவரும் நிலையில் அந்த ஆற்றல்களோடு ஈடுகொடுக்க அவற்றைப் பிரித்-தறியும் 'இந்திரியங்கள் அல்லது பொறிகள்' நரம்பமைப்பில் சிறப்புநிலையுற்று வளர்ந்து வருகின்றன. வெளிப்பொருள்களை நிற வேற்றுமையோடும் உள்ளே படம் பிடித்துக் காட்டும் படம் பிடிப்பானிலும் சிறந்த அமைப்புடன் கண் என்ற பொறி ஒளியின் தாக்குதலுக்கு ஈடுகொடுத்து வருகிறது. 1000 நரம்-புடைய பேரியாழினும் சிறந்த நிலைமையில், பலவேறு ஒலி-களின் இயல்பினை எல்லாம் பிரித்தறிந்தும், ஒன்றாக இயை-வித்தும் நம் செவிப்பொறி என்பது ஒலித்தாக்கலுக்கு ஈடு கொடுத்து வருகின்றது. தோலிற்கிடக்கும் ஊற்றுப் பொறியும், குளிர் அறிபொறியும், சூடறிபொறியும், நோவறிபொறியும், தசையின் இயக்கங்களை அறிய அத்தசைகளிடையே கிடக்கும் இயக்கப் பொறியும், சுவையினை அறியும் நாப்பொறியும், மணத்தினை அறியும் மூக்குப் பொறியும், ஆற்றலின் பிற-வகையான இயக்கங்களை வேறு படுத்தி அறிந்து வெவ்வேறாக ஈடு கொடுத்து நிற்கின்றன.

பொறியாற்றல் :- பொறிகள் தத்தம் கடமையைச் செய்ய வேண்டுமானால் செய்யத்தக்க ஆற்றல் பெற்றன ஆதல் வேண்டும். இல்லையானால் மனிதன் குருடாய்ச், செவிடாய்ப், பிறவாய் வாழவேண்டும். ஆற்றல்களின் வேற்றுமையை நுட்பமாக அறியக்கூடியபடி பொறி கூரியதாகவும் அமைதல் வேண்டும். "எஃகு செவி" முதலியவாகக் கூறுதல் காண்க. தோற்றம் எழுமானால் அதன் பொருள்யாது என அறியும்

ஆற்றலும் வேண்டும். ஆனால் அறிவாராய்ச்சி வேறு; உணர்வு வேறு. உணர்வுநேருக்கு நேரே காட்சிப்பொருளைப்பற்றி எழும். அறிவாராய்ச்சியைக் காட்சி யளவை என யார் கூறுவர்?

புலன் :— 'தோற்றத்தின் பொருள் யாது' என அறிதல் என்றால் என்ன ? உலகத்தினிடையே நாம் வாழ்ந்து வரும்போது, உலகத்தினை நமக்கேற்ப இயன்றவரை மாற்றியும், உலகத்திற்கு ஏற்ப நாம் மாறியும் வருவதே நம் வாழ்க்கையாம். இத்தகைய மாற்றம் நிகழ உலகை உணர்தல் வேண்டும் அன்றோ? உணர்வுதான் என்னை? தன் எதிரே காட்சிப்பொருளாய்ப் புலப்படுவனவற்றிற்குக் குழவி காணும் பொருளே உணர்வாம். இவ்வாறு குழவி காணும் பொருள் தொடக்கத்தில் செயலாகவே தோன்றும் என மேலே கண்டோம். சில போது நமக்குத் தோன்றுவதுபோலப் புலன்களின் பொருள் எண்ணமாகவும் தோன்றலாம். இவ்வாறு குழவி காணும் பொருள் தொடக்கத்தில் செயலாகவே தோன்றும் என மேலே கண்டோம். சிலபோது நமக்குத்தோன்றுவதுபோலப் புலன்களின் பொருள் எண்ணமாகவும் தோன்றலாம். இவ்வாறு புலன்கள் பலவற்றிற்குப் பொருள் காணும்போது பலவற்றினிடையேயும் பொது நிலை விளங்கி வரக் காண்கிறோம். அதனால் பொது நிலையுடைய உணர்வுகள் பலபல இனங்களாக வகை வகையாகப் பிரிகின்றன. ஒவ்வொரு வகையினையும் ஒவ்வொரு கோலமாகக் காணலாம்.

## III. பொருள் பண்ணுதல்

செய்தி வெள்ளம் :— பொருள் காணுதல் அல்லது பொருள் பண்ணுதல் என்றால் என்னை? நம் எதிரே தோன்றும் சுற்றுப்புறச் சூழலில் பல தோற்றங்கள் விளங்குகின்றன.

சுவரில் எழுதிய ஓவியம்போல இவை மாருது நிற்பன அல்ல. இவற்றில் சில பல இயக்கங்களாகத் தொடர்புபெற்று மாறு-கின்றன. இத்தொடர்புகளையே செய்திகள் எனலாம். உலகினை மாருக் காட்சியாகக் காணுது, செய்திகளின் தொடர்ச்சியாகக் காண்பதே இந்நாளைய நோக்காம். உலகம் செய்தி வெள்ளத்தின் பெருக்கேயாம். துணி, சுவர் முதலிய நீளப் பொருள்களிடையே அடி அளவிளைப் பொது நிலையாக உணர்ந்து இவை யனைத்-தினையும் அளந்தறிய வருதல்போல, இந்தச் செய்தி வெள்ளப் பெருக்கின் ஓட்டத்திலேயும் ஒரு முறையை நம் மனம் கண்டு விடுகிறது. ஒரு சில செய்திகளோ, செய்திகளின் உறுப்புக்-களோ, திருப்பித் திருப்பி வரக் காண்கிருேம். இந்த இயக்-கங்கள் ஒரு குறிப்பிட்ட முறையிலும் திரும்பத் திரும்ப நிகழ்ந்துவரக் காண்கிருேம். மாறுகிற நிலையிடையே இவ்வாறு மாருது திருப்பித் திருப்பி வருவனவற்றைச் செய்தி எனத் தனிப்படுத்தி அறிகிருேம்.

ஆக்டன் விளக்கம் :— ஆக்டன் (Ogden) என்பவர் இதனை விளக்கும் முறையைப் பின்பற்றி இவற்றினைக் காண்-போமாக. தீக்குச்சியினைத் தீப்பெட்டியில் பூசியுள்ள மருந்தின் மேல் கீறும்போது "பர்" என்ற ஒலியும், கீறியதும் "சுறு சுறு" என்ற ஒலியும் எழுகின்றன. எழுந்ததும் ஒளிதோன்று-கிறது. இந்த இயக்கங்கள் தீக்குச்சியைக் கிழிக்கும்போ தெல்லாம் இவ்வாறு தோன்று முறையிலேயே கோவை பெற்று ஒரு செய்தியாக அமைகின்றன. ஆதலின், இவை இவ்வாறு தோன்றும் முறையிலேயே கோவைபெற்று ஒரு செய்தியாக அமைகின்றன. இந்த நிலையில் மனம் அச்-செய்தியில் ஒரு பகுதி நிகழ்ந்ததும் முழுதும் நிகழ்ந்ததாகவே கொண்டு செயலுறுகின்றது. நம்மையும் அறியாமல் இவ்வாறு நிகழ்தல் கூடும். செயற்கை மறிவினையைப்பற்றி முன்னே

கூறியபோதும் இந்த இயல்பினைக் கண்டோம். உணவைக் கண்டு வாயிலும் வயிற்றிலும் நீர் ஊறநின்ற நாய், தொடர்ச்சி-யாகப் பலநாள்வரை உணவு வருவதற்கு முன்னாக மணி ஒலி கேட்டுப் பழகியபோது, உணவு வருவதற்கு முன்னரே மணி ஒலி கேட்டதும் வாயிலும் வயிற்றிலும் நீர் ஊற நின்றதனை ருஷிய ஆராய்ச்சியாளராம் பாவ்லோவ் (Pavlov) என்பார் விரித்துக் கூறியுள்ளார்.

குறி அறிதல் :- மணி ஒலியும், உணவும் ஒரு செய்தியாக நாயின் மனத்தில் இயைந்து விட்டபடியால், மணி ஒலிக்கும் உணவு என்ற பொருளையே நாய் கண்டு விடுகிறது. உணவு வரும்போது எழும் நிகழ்ச்சிகள் மணி ஒலி கேட்டவுடனேயே நிகழ்கின்றன. அவ்வாறே தீக்குச்சியைக் கிழிக்கின்ற "பர்" என்ற ஒலி கேட்டதும், 'தீ ஒளி, எழும்' என்று எதிர்பார்க்-கிறோம். அதுவே "பர்" என்ற ஒலிக்கு நாம் காணும் பொருளாம். பாவ்லோவின் நாய், மணி ஒலிக்கு உணவு என்று பொருள் கொண்ட பொழுது அப்பொருள் எண்ணமாக எழுந்தது என்பதற்கில்லை. பழக்கத்தின்பயனாக நரம்பமைப்பில் எழும் தொடர்ப்பாட்டின் இயக்கமாகவே இந்தப் பொருள் விளங்குகிறது. அகட்டுநீர் வயிற்றில் பாய்வதனை நாய் அறிய முடியாது; இருப்பினும் அதன் வயிற்றை அறிந்த பாவ்லோவ் இந்த உண்மையினைக் கண்டார்.

அனுபவமும் உணர்வும் :— முன்னே கண்ட மஞ்சள் நிற மாம் பழத்தின் சுவை, அளவு, வழவழப்பு, சாறுடைமை முதலியவற்றை அத்தோற்றத்தின் பொருளாகக் குழவி உணர்-கிறது. இவ்வாறெல்லாம் பல வகையாக மாம் பழத்தைக் குழவி நுகர்ந்திருப்பதாலேயே இப்பொழுது, இந்த வகையில் விரும்பத்தக்க இனிய பெரிய வழவழப்பான மாம்பழம் என்ற

உணர்வு எழுகிறது. ஆதலினுல் அந்த மஞ்சள் தோற்றத்தைக் கண்டதும் குழவி நாவில் நீர் ஊறி நிற்கிறது. அநுபவம் ஆழ அகலப் பரந்து வரும்போது உணர்வும், ஆழ அகலப் பரந்து வருகிறது. குழவியின் எதிரே தோன்றும் பூவின் தோற்றம் அதன் மனத்திடை எழுப்பும் பொருள் நிலைவேறு; மரநூற் புலவர் எதிரே தோன்றும் பூ அவர் மனத்திடையே எழுப்பும் பொருள் நிலைவேறு.

சிக்கல் :- குழந்தைக்கு வயது ஏறஏறப் புலன்களிடையே உணர்வு பெற்றுவருகிற ஆற்றலும் வளர்ந்து வரக்காண்கிறோம். பொதுமை நிலையைப் பயன் படுத்தும் ஆற்றலும் வளர்ந்து வருகிறது. கருத்திடையே மட்டும் தோன்றும் பொதுமை இயல்புகளையும் எண்ணி ஆராயும் ஆற்றல் இளமைப் பருவத்திற்கு முன்னரே வளர்ந்து விடுகிறது. இந்த உணர்வு வளர்ந்து வருகிற நிலையில் குறித்ததோர் உணர்வு எழுவதனை நன்கு விளக்கிவைக்க வேண்டுமானுல் முன்நிகழ்ந்த பழைய அநுபவம் யாது என அறிதல் வேண்டும். எந்த நிலைக்கிடையே, எந்த இயற்கை அமைப்பினிடையே, அந்த உணர்வு எழுகின்றது என்பதனையும் உணரவேண்டும். அப்போது இருந்த மனநிலையினையும், இயல்பினையும் அறிதல்வேண்டும். உணர்கின்றவன் நோக்கம்யாது? அவன் மனதின் போக்கு என்ன? இயற்கையில் உணர்வைத் தூண்டுவனயாவை? அவற்றின் நிலை என்ன? இயல்பு என்ன? இவற்றினையும் உணர்தல் வேண்டும். இவை அத்தனையும் உணர்வினை உருப்படுத்துவன ஆம். உலகம் ஊன்றுவது நமக்குப்புலனுக வேண்டுமானுல், அது நம்மைத் தூண்டிவிடத் தக்கதாகவும் தூண்டப் போதியதாகவும் இருத்தல் வேண்டும். அத்தகைய நிலை எழவேண்டுமானுல் சுற்றுப்புறச் சூழலிலே தக்கதும் போதியதுமான நிலை ஒன்று காட்சியாகவோ பிறவகையாகவோ எழுதல் வேண்டும். இந்த

நிலைக்கு எதிர் ஊன்றக்கூடிய நிலையில் நம்முடைய பொறி அமைப்புகள் தகுதி பெற்றும் இருத்தல் வேண்டும்; பண் அமைந்தும் (தயாராகவும்) நிற்கவேண்டும்.

## IV. பார்வை நுட்பம்

பார்வை:— மக்கள் வாழ்க்கையில் உலகப் பொருளை அறிந்து வருவதில் பார்வையே பெரிதும் பயன் படுகின்றது. ஆனால் பார்வையிற் குறைபாடு தோன்றும்போது அவ்வுணர்வு வழியாக எழுகிற செயல் நிலையிலும் குறைபாடு தோன்று-கின்றது. முற்றும் குருடாய் இருக்கும் குழவிகளைவிடப் பார்வையிற் சிறிது குறைபாடுடைய குழவிகள் தம் தொழிலைச் சீர்கேடாகவே செய்துவரக் காண்கின்றோம். ஆகவே, அத்-தகைய குறைபாடுடைய குழவிகளைப் பார்வைப் பயிற்சியில் பழக்கிவைப்பதால் அவர்களது குறைபாடுடைய பொறி, சுமக்க முடியாத பெருஞ்சுமையைச் சுமக்கவந்து பெருங்-கேடுறுகிறது. அவர்களுக்குக் குறைபாடுடைய பொறியை வழிகாட்டியாகப் பழக்க முயலுவதிலும் குறைபாடின்றி நிறை நிலையில் விளங்கும் வேறொரு பொறியினை வழிகாட்டியாகக் கொண்டு அவர்கள் வாழுமாறு பழக்கிவிடுவதே சாலச்-சிறந்ததாம். குருடர் முதலோருடைய வாழ்க்கை இந்த நுட்பத்தையே நமக்குக் கற்பிக்கின்றது. கண் கொண்டு செய்யக்கூடிய வேலைகளைக் கையால் தடவியும் செய்தல் கூடும். கண்ணால் அறியக்கூடிய தொலைவை ஒலி வேற்றுமையினாலும் காற்றசைவின் வேற்றுமையினாலும் அறியலாம். காது கேளாத செவிடன் நாம் பேசும்போது நம் வாய் அசைதலில் எழும் வேறுபாடுகளை உற்றுநோக்கியே, 'என்ன பேசுகிறோம்' என்று அறிந்து கொள்ளுகிறான். எனவே ஒரு பொறி குறைவுற்று விளங்கினால் வேறொரு பொறியின் உதவியால் அதனை நிறைவு செய்யலாம் என்பதாயிற்று.

## V. அக்கறையும் பொறுப்பும்

அறிவே அன்பு :- அக்கறை (Interest) இருக்குமானால் எதனையும் உற்றுக் கவனிக்கின்றநிலை எளிதில் எழுகிறது. மழுங்கித் தோன்றும் தோற்றமும் உற்றுக் கவனித்தால் விளக்கமாகிவிடுகிறது. பொதுவாகக் கேளாத ஒலியும் உற்றுக் கேட்டால் நுட்பமாகப் புலனாகிறது. உணர்வு விளக்கம் நம் உணர்ச்சி நிலையைப் பொறுத்ததாகும். விருப்புநிலையில் எழுகிற விளக்கம் வெறுப்பு நிலையில் எழுவது இல்லை. "அறிவே சிவமாவது ஆரும் அறிகிலார்; அன்பே சிவமாவதாரும் அறி-கிலார்"; என்ற திருமூலர் "அறிவும் அன்பும் இரண்டு என்பர் அறிவிலார்" என்றும் கூறுவர்போலும். அன்புக் கண்கொண்டு பார்க்கும்போது, முன் விளங்காத பல குறிப்புகள் தோன்று-கின்றன. பிறர் கண்ணிற்குக் குழவியிடையே தோன்றாத குறிகள் தாயின் அன்புக்கண்ணிற்குத் தோன்றி விடுகின்றன. தன் குழவி சிறப்பாகச் செய்யும் செயல், பேசும் பேச்சு, முதலியவற்றை நடந்ததுபோலச் செய்தும் பேசியும் காட்டுவ-தோடு அவ்வாறு நிகழ்ந்த நாள் முதலிய குறிப்பினையும், பிற சுற்றுப்புறச் சூழலினையும் நன்கு மனத்திற் பதியவைத்துக்-கொண்டு எந்நாளும் மறவாது தாய் போற்றி வருகின்றாள்.

கூட்டுறவு உணர்வு :- குழவி மனத்தோடு தாயின் மனம் ஒன்றுகிற விருப்பு நிலையில் இங்ஙனம் உணர்வுநிலை சிறந்து விளங்கக் காண்கிறோம். ஆகவே, குழவிகளிடையே உணர்வு நிலையை வளர்க்க வேண்டுமாயின் பிறருடைய மனநிலையோடு ஒத்துநிற்கும் மனப்பான்மையை வளர்த்தல் வேண்டும். எதிர்ப்பினைப் பொறுக்காத மனநிலை உணர்வின் கண்ணைக் குருடாக்கிவிடும். பிறர் மனநிலையைப் பொறுத்துக்கொண்டு வாழ்வதனையும், ஒப்புரவினையும் வளர வழிசெய்தல் வேண்டும்.

அப்போதுதான், பிறர் போக்கினையும், நோக்க வேறு-பாட்டினையும் குழவி நன்கு அறிந்து தன் உணர்வு நிலைக்குத் தக்க நிலையில் சீர்திருந்தி அமைந்து வளர முடியும். உலகத்தில் குழவி தனியே வாழப்போவதில்லை. பலருடன் கூடி வாழப்போகிற குழவி பிறர் மனநிலையைப் போற்றுவதும் வேண்டற்பாலதே ஆம்.

ஒட்ட ஒழுகுதல் :- தோன்றும் புலனுக்குப் (Sensation) பொருள் செய்வதே காட்சி உணர்வாதலின் (Perception) ஒருவன் தன் புல அனுபவத்திற்குத் தான் கண்ட பொருளையே முழுதும் நம்பி அதனையே உண்மை எனக்கொண்டு அதன்படி தன் தொழிலைச் செய்யப்போதல்தான் இங்கு விளங்குவ-தொரு சிறப்பியல்பு. உணர்வு ஓர் அகநிலையே ஆம். புறத்-தார்க்குப் பயன் படுமாறு இது திருந்தி அமையவில்லை என்றால் வெறும் பகற்கனவாக முடியும். புறத்தார்க்குப் பயன்-படவேண்டுமானால் பிறர் உணர்வுநிலையையும் ஒப்புநோக்கும் மனப்பான்மை வளர்தல் வேண்டும். ஒரே சுற்றுப்புறச் சூழலில் வாழ்கின்றவர்களில் இருவர் கூட ஒருவரைப் போன்றே ஒருவர் அனுபவம் பெற்றுவருவதாகச் சொல்ல முடியாது. பூவின் காட்சி என்பது குழவிக்கு ஒருநிலையிலும், மா நூற்புலவர்க்கு வேறொரு வகையிலும் நிகழ்வதனை முன்னரே குறித்தோம். பலருக்கும் எழும் பூவின் அனுபவம் போன்றவை பொதுவாக ஒரு தன்மையனவே எனக் கருதினாலும் அவை எழுகிற புற-நிலைக்கும், அகநிலைக்கும் தக்கவாறு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையாகத் தோன்றுகிறது. ஆகவே ஒவ்வொரு-வரும் அவ்வப்போது தாம் தாம் நிற்கும் புற உலகிற்கும் அக உலகிற்கும் தக்கவாறு பொருள்செய்து கொள்கின்றனர். உண்மையை எல்லாவகையான அநுபவமுடைய மக்களும் அறியவேண்டும். நம் அனுபவத்தினையே நம்பிப் பிறர்

அனுபவத்தினை எள்ளி நகையாடுதல் தக்கதன்றாம். இந்த உண்மையினைக் குழவி அறிந்து வருதல் நல்லதாம்.

## VI. அணுவும் ஒருப்பாட்டு வடிவமும்

அணுக்கோள்கை :— குழவியின் உணர்வுநிலை வளரும் முறை யாது? ஒருசாரார் கொள்கையின்படி குழவி தனித் தனியாகப் பல பொருள்களை உணர்கிறதாம். தனித்தனி உணர்வுகளும் தனித்தனி மன அணுக்களாம். இவற்றின் சேர்க்கையாலேயே எண்ணம் முதலியன எழுகின்றனவாம். பழக்கத்தில் ஒன்றாக நிற்கும் பொருள்களையும் ஒன்றாக இயங்கும் பொருள்களையும் ஒன்றாகவே உணர்ந்து வருகின்றோம். இவ்வாறு இணைந்து நிற்கும் நிலையாலேயே பொருள்கள் தொடர்பு பெற்று இனம் இனமாகப் பிரிகின்றன. ஒருங்கு தோன்றுவதாலேயே பலவகை இனங்களும் ஒன்றாகி வருகின்றன. இவ்வாறே பொதுமைநிலை உயர்ந்து கொண்டு போகின்றதாம். ஆங்கில உள்ளத்தியற்கை நூற்புலவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பன்னிப் பன்னிக் கூறிய கொள்கை இதுவே ஆம்.

ஒருப்பாட்டு வடிவம் :— இவ்வாறு மனநிலையை அணு அணுவாகச் சிதைத்துக் காண்பதில் பலருக்கும் விருப்பம் இல்லை. மனவளர்ச்சி ஒரு கூட்டற் கணக்கு அன்று; ஒற்றுமைக்கிடமாம் உயிர்ப்பொருளமைப்பு ஆம் என்றோம். மனநிலையிடையே ஓர் ஒற்றுமைப் பாட்டைக் காண்பதே இந்நாளைய ஆராய்ச்சியின் நோக்கமாம். மனநிலையை மட்டும் ஒற்றுமை நிலையிற்காணாது மனத்தின் செயல்கள் இயல்புகள் முதலிய அனைத்தினையும் ஒற்றுமையாகக் காண்கின்றனர். மனமும் சுற்றுப்புறமும் ஒற்றித்து நிற்கவும் காண்கின்றனர்.

'தொடக்கத்தில் அணு அணுவாய்ப் பிரிந்து நின்றே உண்டானவை பின்னர் ஒன்று சேர்ந்து உணர்வாகவும் எண்ணமாகவும் எழுகின்றன' என்பதனை மறுத்து 'முதலில் வேறுபாடின்றித் தோன்றியநிலை பின்னர்ப் பல பல வடிவமாகப் பிரிந்து துலங்கி ஒருங்கியைந்து தோன்றுகின்றது' என்பதே ஒருபாட்டு வடிவநிலை (Configuration - Gestalt)க் கொள்கையாம்.

ஓவியக் கோலம் :— சுற்றுப்புறநிலையில் நாம் காண்பது அந்தச் சுற்றுப்புறநிலையில் எழுதிய ஓவியம்போலத் தோன்றுகிறது. அவ்வாறு தோன்றும் பல பொருள்களும் தனித்தனியே பிரிந்து நின்று தோன்றுவதில்லை. ஒன்றுக்கு ஒன்றுள்ள தொடர்பெல்லாம் ஒருப்பட்ட வடிவமாகத் தனிநிலைக் கோலமாகத் தோன்ற, அவ்வடிவத்தின் உள்ளுறுப்புக்களாக அனைத்தும் தோன்றுகின்றனவாம். வானத்தே இருளில் வான்மீன்கள் ஒளிர்கின்றன. ஒவ்வொரு வான்மீனையும் ஒவ்வொரு புள்ளியாகத் தனித்தனியே கண்டவர் யாரும் இல்லை. அது நம் மனப்போக்கும் அன்று. குதிரை முக வடிவமாகச் சிலவற்றைக்கண்டு அசுவனி என்றனர் முன்னோர்; அடுப்புப் போன்றமைந்தன என வேறு சிலவற்றின் அமைப்பை ஒருபாட்டு வடிவமாக்கிப் "பரணி" என்றனர். கரடியின் வடிவமாக வேறு சிலவற்றைக் கண்டனர். அவையே வேறு சிலர்க்குக் கலப்பையாகவும் மற்றுஞ் சிலர்க்குச் சப்தரிஷி மண்டலமாகவும் காட்சிதந்தன. வேட்டையாளாகவும் (Orion) அவனது சிறு நாயும், பெருநாயுமாக இன்னும் சில வான் மீன்களைக் கண்டனர். ஆகவே உணர்வென்பது கூட்டற் கணக்கன்று. முறையின்றிப் போர்போராக அடுக்குகிற அடுக்கும் அன்று. ஒன்றுகவே எழுகின்ற ஓவியக்கலையே எனலாம்; படைப்பு எனலாம். புறப்பொருள்களின் தோற்ற இயைபிற்கேற்ப மனம் கோலமிடுகிறது எனலாம்.

முழுநிலை :— மனத்தினை மட்டும் ஒருப்பட்ட வடிவமாகக் காண்கிறோம் என்பது இல்லை. உடல்நிலை, புறநிலை, மனநிலை என்ற அனைத்தும் ஒருப்பட்ட வடிவமாகின்றன எனலாம். அதனால் அன்றோ ஒவ்வொருவரும் ஒவ்வொரு சிறப்புநிலையில் விளங்குகின்றனர். ஒவ்வொருவரின் சிறப்புநிலையை அவரவர் ஆளுமை எனக்கூறலாம் எனக்கண்டோம். இந்த ஆளுமையின் வேறுபாட்டால் அவரவர் அனுபவமும் உணர்வுநிலையும் வேறு-படும். ஒருவருக்கேயுங்கூட, புறநிலைக்கும், அகநிலைக்கும் தக்கவாறு அவ்வப்போது உணர்வுநிலை மாறுபட்டும் வரலாம். புலனுக்கு நாம் காணும் பொருள், நம் அகநிலைக்கு ஏற்ப-மாறும். துவரப் பசித்தபோது சுவையில்லா உணவும் அமுத-மாகிறது. பசியில்லாதபோது அமுதமும் வேம்பாகிறது.

புறநிலை :- புறநிலைக்கு ஏற்பவும் உணர்வு மாறும். பட்டுப் புடவைகளை இருட்டில் வைத்து விளக்கொளியிற் கண்டால் அவை கண்ணைக் கவர்ந்து மின்னிப் பொலிகின்றன. வெளியே வெயிலில் கொண்டுவந்தபோது அவ்வளவு சிறப்பதில்லை. அதனால் தான் விற்போர் அவற்றை அந்த நிலையில் வைத்து மின்சாரத்தையும் செலவுசெய்து மிக்க விலைக்கு விற்று வரு-கின்றனர். இவ்வாறு வேற்றுமை நன்கு புலனாகும் இடத்தே உணர்வுநிலை சிறந்து விளங்குகிறது.

குழவியின் புறநிலை :— "குழவியின் உணர்வுநிலையை வெளிப்புறநிலை, பெரிதும் மாற்றி அமைக்கின்றது" என்ற உண்மையை நாம் அறிதல் வேண்டும். அகநிலை முற்றிவாராத குழவி நிலையில், புறநிலைக்கு அடங்கியே குழவி வளர்ந்து வருகிறது எனலாம். அக்குழவி பூனையைக்கண்டு அஞ்சினால், அவ்வாறு அஞ்சும் அந்தப் பூனையின் எதிரே, தான் மிக மிக விரும்பும் சிற்றுண்டியையும் மறந்து விடுகின்றது. அப்போது

வற்புறுத்திச் சிற்றுண்டியை ஊட்ட முயன்ருல் அந்தச்-சிற்றுண்டியையும் பூனையோடு ஒருங்குசேர்த்து வெறுத்து வருகிறது. பூனையை அக்குழவி விரும்பச்செய்ய வேண்டு-மானுல், குழவி உண்ணும்போது மிகமிகத் தொலைவில் பூனையை முதலில் வைத்துப் பழக்கி, நாளடைவில் குழவி உண்ணும்போதெல்லாம் பூனையைச் சிறுகச் சிறுக அதன் அருகில் கொண்டுவந்தால், உணவினை விரும்புநிலை பூனையின் மேலும் விருப்பமாய்ப் பாயக்காண்போம்.

## VII. வேறுபாட்டுணர்வு

வேற்றுமைக் காட்சி :- ஒருப்பாட்டு வடிவமாகக் காணும் ஒற்றுமைக்காட்சி மட்டும் உணர்வினை எழுப்புவதில்லை. ஒரு-பொருளைப் பிறவற்றினும் வேருகப் பிரித்துக்காணும் வேற்றுமைக் காட்சியும் வேண்டும். இவ்வாறு ஒன்றிலிருந்து பிறிதொன்றினை வேறுபடுத்திக்காணும் இயல்பு குழந்தையின் வயதோடு வளர்ந்துகொண்டே வருகிறது. இந்த இயல்பு வளர வேண்டுமானுல் உடலின் இயற்கை அமைப்பு முற்றிவர வேண்டும்; பயிற்சியும் வேண்டும். கண்கொண்டு பார்க்கும்-போது கண் பார்க்கின்ற எல்லை குழவிக்குக் குறுகியும் முதி-யோர்க்கு அகன்றும் இருத்தல் வெளிப்படை. பெரிய அகன்ற எல்லையை ஒற்றித்துக் காணும் ஆற்றல் குழவி நிலையில் வளர-வில்லை. சுற்றுப்புறப் பொருளைப் பார்த்துப் பழகிவரும்போது நரம்பமைப்பிலும் பல வகையான தொடர்புகள் எழுந்து வருகின்றன; அப்போது உடலுறுப்பின் இயக்கங்களோடு கண்ணின் இயக்கமும் ஒருங்கியையும்; அதனுல், காணக்-கூடிய எல்லையானது சுற்றிச் சுற்றி அகன்றுகொண்டே போகிறது.

சிறப்பிலிருந்து போது :- குழவியின் உணர்வுநிலை முதலிற் காட்சிப் பொருள்களிடையே தோன்றுகிற சிறப்பு நிலையையே

அறிகிறது. பின்னர்ப் பொதுநிலையை அறிந்து வருகிறது. குறிப்பிட்ட நாயையும், பூனையையும் புட்டியையும், பொம்மை-யையும் மட்டுமே, நாய், பூனை, புட்டி, பொம்மை என வழங்கு-கிற குழவி நாள் ஏற ஏறப், பொதுவாக எல்லா நாய்களையும், பூனைகளையும், புட்டிகளையும், பொம்மைகளையும் அந்த அந்தப் பெயரிட்டு வழங்கவருகிறது. முதலிற் சிறப்புப் பெயராக இருந்ததைப் பொதுப்பெயராக மாற்றுகின்றது. "நாகரிக-மற்ற மொழிகளைப் பேசும் ஆப்பிரிக்க நாட்டிலே பலா, மா, முதலிய சிறப்புப் பெயர்களே அன்றி மரம் என்ற பொதுப் பெயர் வழங்குவதில்லை" எனமொழி ஆராய்ச்சி வாணர் எடுத்துக்காட்டுகின்றனர். குழவிநிலையும், குழவிமொழி-நிலையும் இவ்வகையில் ஒன்று எனலாம். பொதுநிலையை உணர்ந்து பொதுப் பெயர்களை வழங்கிவந்த பின்னரே பொது-நிலையைக் காட்சிப்பொருளாக மட்டும் காணாது கருத்துப் பொருளாகவும் காணுகிறநிலை வளருகிறது. புறநிலை உரு உணர்வு (Concrete) வெற்றுநிலை உணர்வாக (Abstract) இவ்வாறு உயர்கிறது.

பொதுவிலிருந்து சிறப்பு :- மற்றொருவகையாக நோக்கினால் முதலில் பொது நிலையாகக் காணுதலே பின்னர்ச் சிறப்புநிலைக் காட்சியாக முற்றிவருகிறது என்றும் கூறலாம். முதலில் ஏதோ ஒருபொருள் எனத்தோன்றுவது வேறுபாட்டுணர்வால் குறிப்பிட்டதொரு பொருளாய்ச் சிறப்பாகத் தோன்றும்; நிர்விகற்பக்காட்சியின் பின் சவிகற்பக்காட்சி தோன்றும் என்பர் இந்திய தத்துவநூல் அறிஞர். தொலைவில் தோன்றும் பொருள் அருகில் வரவர விளக்கமுறும். இது புகைப்படம் எடுத்த கண்ணாடியை மருந்தில் இட இட உருவம் துலங்கி வருவது போலாம். ஏதோ ஒருபொருள் எனத் தோன்றுவது அனுபவத்தின் ஆழத்திற்கு ஏற்பச் சிறந்து வரக் காண்-

கின்றோம். தொலைவில் மஞ்சட்பொருளாக விளங்கிய மாம்பழம், கைப்பட்டு உருளும்போது பந்தாய்த் தோன்றிக் கடிபட்டதும் புதிய விருந்தாகவும் சிறந்து இனிக்கின்றது. முன்தோன்றாத குறிப்புகள் வயது ஏறஏறத் தோன்றுகின்றன.

அடையாளம் குறைந்து வருதல் :— தோற்றத்தின் முழு நிலையும் தோன்றிய பின்னரே குழவி நிலையில் எதிரூன்றல் எழுகின்றது. ஆனால் வயதேற ஏற இந்த எதிரூன்றலை எழுப்புவதற்காகத் தோற்றவேண்டிய பகுதி குறைந்து கொண்டே வருகின்றது. உணவினைக்கண்டு நீரூறி நின்ற நாய் பழக்கத்தின் பயனாக மணி ஒலி முழுதும் கேட்ட பின்னரே நீரூறி நிற்கின்றது. பின்னர் மணி ஒலி முழுவதும் ஒலிக்கும் வரையில் காத்து இராமல், மணி ஒலிக்கத் தொடங்கியதும் நீருறி நிற்கின்றது. சில நாள்போக மணி அருகே மணி ஒலிப்பவன் போனதும் அந்த நிலையை அடைகிறது. மேலும் பழகினால் மணி உள்ள அறையில் மனிதன் நுழைந்ததும் நாவிற்குள் நீரூறி நிற்கின்றது. பின்னர்க் கதவு திறந்ததும் அவ்வாறாகின்றது. முடிவு நிலையைக்காட்டும் அறிகுறிகள் படிப் படியாகப் பழகப் பழகக் குறைந்து கொண்டே வருவது காண்க. நாம் அறியக்கூடிய எல்லையானது பல வகை நிலைகளின் ஊடாட்டத்தால் பழக்கத்தில் குறைந்துகொண்டே வருகிறது. எழுத்துக்கூட்டிப் படிக்கின்ற குழவி சில எழுத்துக்களையே ஒன்றாக உணரக்கூடும்; பழகினால் சில சொற்களை ஒன்றாக ஒரே பொழுதில் உணரும். மேலும் பழகப் பழகப் பல சொற்றொடர்களையும் ஒருங்கு இயையவைத்து உணர்கின்றதன்றோ? இவ்வாறு வயது ஏற ஏற ஒருங்கு இயையவைத்து உணரும் எல்லை அகன்றுவரக் காண்கிறோம்.

உணர்வு வீதம் :— உணர்வு வீதமும் இதன் பயனாக மிக்குவரும். அதாவது பொருள்களை மிக விரைந்து குழவி

உணர்கின்றது என்பதாம். தனித் தனியே பொருள்கள் நில்லாமல் பல வகையான தொடர்நிலைகளாக மேலும் மேலும் தொடர்புபெற்று விளங்கிவரக் காண்கிறோம். படிக்கத் தொடங்குமுன் வெறுங்கோடுகளாகக் கண்டவற்றைப் படிக்கத் தொடங்கியதும் அவை பழக்கத்தின்பயனாக வெறும் எழுத்துக்களாகவும் சொற்களாகவும் பொருள் தொடர்புள்ள சொற்றொடர்களாகவும், பெருஞ் சொற்றொடர்களாகவும், பத்திகளாகவும், பல வகை நிலைகளில் விளங்கும் தொடர்களாகவும் அமைந்து மேலும் மேலும் தொடர்பு பெற்று வருவது கண்கூடு. இவ்வாறு பெருந்தொடராக இயைந்து விட்டால் அத்தொடரின் தொடக்கத்தினை அறிந்ததும் முழுதினையும் உய்த்துணரும் பழக்கத்தால் மிக விரைந்து படிப்பது எளிதாகிறது. இந்த வகையாலேயே உணர்வுவீதம் மிக்குவருகின்றது எனலாம்.

நன்கு விளங்குதல் :— இந்த ஒற்றுமையிடையே வேறுபாட்டு உணர்வு எவ்வாறு எழுகின்றது? ஒரு தோற்றத்திடையே அந்தத் தோற்றத்தின் பிற உறுப்புக்களைவிடச் சில உறுப்புக்கள் நன்கு தோன்றுமானால் அவை பிறவற்றினும் சிறந்து நிற்கின்றன. நல்ல பாம்பு ஆடக்கண்டவன் அதன் படத்தை உணராது இருக்க முடியுமோ? படமே சிறந்து எழுந்து விளங்குகிறது. ஒற்றுமை இடையே வேற்றுமை எழுவது இங்ஙனமேயாம். அசையாத நிலையில் அசைவதே குழவிக்கு நன்கு புலனாகிறது.

குழவிப் பழக்கம் :- உலகிடையே வாழ்ந்து வரும்போது, வேற்றுமை தோன்றும்போதே அதனைக் கண்டுவரக் குழவி பழகிவருதல் வேண்டும். மாறிக்கொண்டு வருவதன்றோ இந்த உலகம்! தொடர்ந்து வேறுபட்டுவரும் அனுபவத்தின் பயனை நன்கு துய்க்க வேண்டுமானால், குழவி இந்த வேறுபாட்டு

உணர்வில் தலைசிறந்து விளங்குதல் வேண்டும். அறிவு வளர்ச்சியும் ஆராய்ச்சியும் ஒருவகையால் நோக்குமிடத்து ஒன்றோடொன்றினை ஒப்பிட்டுக் காண்பதேயாம். நுட்பமான வேற்றுமைகளையும் விரைந்து காணும் ஆற்றல் வளர்ந்து வந்தாலன்றி அத்தகைய அறிவு வளர்ச்சி எங்ஙனம் எழுதல் கூடும்? அத்தகைய அனுபவங்களும் குழவிக்குத் தோன்றி வளருமாறு நாம் வகைசெய்ய வேண்டும்.

காவலும் உணர்வும் :— தானே போய்ப் பொருள்களைத் துருவித் தேடிக் கண்டுபிடித்து அறிந்து உணரும் நிலையில் குழவியை வாழவைத்தல் வேண்டும். "எதனையும் கண்டும் தொட்டும் வரக் குழவியை விட்டுவிட்டால் விலையுயர்ந்த பொருளை உடைத்து விட்டால் என் செய்வது? அறிவு வளர்ச்சியின் பொருட்டு ஆயிரமும் அழிக்க நாம் முன் வந்தாலும் குழவியைக் காத்தல் வேண்டாமா? பெரும் பொருளைத் தன்மேல் குழவி உருட்டிக் கொண்டால் என் செய்வது? கூரிய கத்தியைத் தொட்டுக் கையை வெட்டிக் கொண்டால் என்செய்வது?" இவ்வாறெல்லாம் கேட்டுக் குழவியைப் பூட்டிவைக்கவோ, இடுப்பில் இடுக்கித்திரியவோ விரும்புவோர் பலர். ஆனால், அவ்வாறு செய்வது அறிவுடைமை ஆகாது. குழவிக்குக் கேடுவாராத நிலையிலும், பொருட்கேடு-வாராநிலையிலும் பொருள்களை அடுக்கியோ, மறைத்து வைத்தோ, குழவியை மனம் போல ஆடவிட்டு உலகினை அறியச் செய்ய வேண்டும். குழவிகளது அறிவினை வளர்க்கும் பொருள்களைக் கண்ணைக் கவரும்படி அவற்றிற்கு எட்டும் நிலையில் வைத்தால் விரும்பியபடி அவற்றைக் கையாண்டு குழவி வளரும். மாண்டிசோரி அம்மையார் கண்ட பள்ளி-களில் குழவிகள் கண்ணாடிப் பொருள்களையும் உடைபடாமல் பொறுப்புணர்ந்து காப்பாற்றி வருகின்றன. "உடைப்பாய்

உடைப்பாய்'' என்று கூவி, உடைக்கும் எண்ணத்தையே குழவியின் மனத்தில் ஏற்றி விட்டால் குழவி தன்னையும் அறியாமல் உடைப்பது இயல்புதானே. அரிய பொருள்களையும், கேடுவிளைக்கும் பொருள்களையும், குழவியின் கைக்கு எட்டவிட்டுப் பின் புலம்புவதால் என்ன பயன்? செல்வர்களுடைய வீட்டில் நாய்க்கும் தனியறை உண்டு; குழவிகட்கு எனத் தனி இடம் இருப்பதில்லை. தனி இடம் இருக்குமானால் பிற இடங்களில் வந்து அவை தாமும் அலைந்து பிறர் மனத்தினையும் புண்ணாக்க வேண்டுவதில்லை. ஒரு பெரிய குடும்பமும் ஓர் அறையிலேயே வாழும் இந்த ஏழை நாட்டில் குழவிகட்கு எனத் தனி இடம் கேட்பது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுதல் போன்றதாம். மாண்டிசோரிப் பள்ளிகள் முதலில் ஏழைகளுக்கென்றே எழுந்தன என்பதனை நாம் மறத்தலாகாது. சிறு குழவிகளைப் பிறந்ததிலிருந்து வளர்க்கும் பள்ளிகள் (Creche) இப்போது ருஷியா முதலிய மேனாடுகளில் தோன்றி இத்தகைய பழக்கங்களைப் பல ஆண்டுகளாகத் தந்து வருதலின் இவ்வாறு உலகப் பொருள்களை எல்லாம் குழவி உணர்ந்து வரும் நிலையில் வளர்த்தல் அருமையானதொன்றன்று; உறுதியும் ஊக்கமுமே வேண்டும்.

வேற்றுமை விளக்கம் :— எந்திரங்களின் இடையே வாயைப் பிளந்து நிற்கும் வழிப்போக்கனுக்கும் அதனை ஓட்டி வரும் பொறியாளனுக்கும் உள்ள வேற்றுமையைக் காணும் போது இந்த வேறுபாட்டு உணர்வின் சிறப்பு நன்கு விளங்குகிறது. மின்சாரத்தை நகரத்திற்குள் அனுப்பும் நிலையம் ஒன்று உள்ளது. மின்சாரத்தைச் சேர்த்து வைத்து அனுப்பும் எந்திரங்கள் அங்கு இயங்குகின்றன. இதனைக் கண்டறியாத காட்டாள் ஒருவன் கடபட ஒலியைக் கேட்கின்றான்; விரைந்த சுழற்சியைக் காண்கிறான். "விளக்கு முதலிய ஆற்றலைத்

தந்தனுப்புவன இவையோ" எனக் கூறினால் "அது எப்படியோ!" என வாயைப் பிளக்கின்றான். "ஏதோ திருமாலின் ஆழிதான் சுற்றுகிறது; அன்று திரௌபதிக்குப் புடவை தந்து உதவியது போல இன்று விளக்கிற்கு எண்ணெய் ஊற்றுகிறது போலும்." என்று எண்ணாததெல்லாம் எண்ணி வியந்து நிற்கின்றான். அந்த எந்திரங்களை இயக்குபவனோ மின்சாரத்தின் இயல்பு, அது தோன்று நிலையை எழுப்பும் முறை, அந்த முறையை அந்த எந்திரங்கள் பின்பற்றி இயங்கும் இயக்கம், அந்த இயக்கம் எழுவதற்கு அப்பொறியில் அமைந்த கடையாணி மரையாணி முதலிய ஒவ்வொரு சிறு சிறு உறுப்பும் உதவுகிற நுட்பம் — இவை அனைத்தினையும் நன்கு வேறுபடுத்தி விளக்கமாக உணர்கின்றான். ஒவ்வொரு சிற்றுறுப்பும் சிற்றுறுப்பின் பகுதியும் வேறுபட்டு அவன் மனத்தே விளங்குகின்றன.

## VIII. அறிவும் உணர்வும்

அறிவு - உணர்வு :— அறிவுநிலைக்கும் உணர்வுநிலைக்கும் ஒருதொடர்பு உண்டு. நல்ல அறிவு நிலைமையில் உள்ள குழவிகளுக்கும், மாங்காய்த்தலை தேங்காய்த்தலையாக அறிவற்று வளரும் குழவிகளுக்கும் இடையே உணர்வுநிலை வளர்கின்ற முறையில் தோன்றுகிற வேற்றுமையை அறிஞர் ஆராய்ந்து உள்ளனர். உணர்வு வளர்கின்ற அளவில் மட்டுமே வேற்றுமை உண்டே அன்றி, வளர்கின்ற உணர்வின் இயற்கையில் வேற்றுமை இல்லையாம். அவற்றின் வாழ்க்கையினையும், ஊன்றல்களிடையே அவை எதிருன்றி நிற்கிற நிலையினையும் கண்டால் அவற்றின் அறிவற்றநிலைமை எல்லோருக்கும் தெளிவாகிறது. அறிவுநிலைக்கு இன்றியமையாதன ஆகிய இயல்புகளை அவற்றின் உணர்வு நிலையில் காண்பது அருமை.

கட்டை போன்ற வாழ்க்கையே அவற்றின் வாழ்க்கையாம். புறப்பொருள்களைக்கண்டு துலங்குவது எப்போதோ சிலபோதே ஆம். விளக்கப் பொலிவின்றித் தோன்றும் அவற்றின் முகமே அதனைத் தெளிவுறுத்துகின்றது. அவற்றின் மனவாழ்க்கையின் வறுமை அங்ஙனம் உள்ளது. 'பிற்பாடரானவர்களுக்கு' என ஏற்பட்ட பள்ளிக்கூடங்கள் இத்தகைய குழவிகளிடம் கைப்பழக்கங்களை விளைவித்து வேலையாட்கள் முதலியோராக அவை உலகிடை வாழுமாறு செய்து வருகின்றன.

## IX. பட உலகு

படம் :— பிறகுழவிகளோடு இக்குழவிகளைப் பல வகையிலும் ஒப்பிட்டு அறிஞர் பார்த்துள்ளனர். பலவகை ஆராய்ச்சியிலும் குழவிகள் எழுதும் படத்தினை ஆராய்வதே குழவிகளின் மனத்தினை உள்ளவாறு படம் பிடித்துக் காட்டுகின்றதாம். இவ்வாறு குழவிகள் தமது விருப்பம் போல எழுதிவருகின்ற படங்களைப் பார்த்து அக்குழவிகளது உணர்வு நிலையின் வளர்ச்சியினை அறியலாம். இந்த ஆராய்ச்சியினையும் அறிஞர் பலர் செய்து முடித்து உள்ளனர். இந்தப் படங்கள் அந்த அந்தப் பருவத்தில் குழவிகள் வாழ்ந்து வருகின்ற உலகத்தினைச் சுட்டிவருகின்றனவாம். 'முட்டையே உலகம்' எனக் கருதிப் பின் 'கூண்டே உலகம்' என எண்ணிப் பின் 'தோட்டமே உலகம்' என அறிந்து, பரந்த உலகம் மிக மிகப் பரந்துபோவதை உணர்ந்து, பறந்து சென்ற குருவியைப் பற்றி ஆங்கிலப் பாட்டு ஒன்று உண்டு. அங்ஙனமே குழவியின் உலகமும் இவ்வாறு பரந்து வருகிறது. குழந்தை முதல் முதல் வரையத் தொடங்கும் போது தன்னைச் சுற்றியுள்ள மக்கள் வடிவத்தினையும், வீட்டின் வடிவத்தினையும் எழுதி வரைகின்றதாம். முதியோர்கள் தங்கள் கண்ணிற்கு எவ்வாறு

ஒருபொருள் தோன்றுகின்றதோ அதுபோல எழுதுவர். குழந்தைகளோ தாங்கள் அறிந்ததுபோல எழுதுகின்றன. தங்களுக்குச் சிறந்தன எனப்பட்டவையை மட்டும் எழுதுகின்றன. எங்கிருந்து பார்க்கின்றோம் என்பதற்கு ஏற்பப் பெரியவர்கள் எழுதுவர்; இயற்கையில் தோன்றும் தொடர்பும் அங்கு விளங்கும். குழவிகளிடம் அவற்றை எதிர்பார்த்தலாகாது. எல்லாம் தம் நோக்கிலிருந்தே எழும்; அதுவும் அகநோக்கே. வயிற்றை எழுதிப் பின் தலை நினைவிற்கு வந்தால் தலையைக் கீழேயும் குழவி எழுதும்; அருகிலும் எழுதும். கிறுக்குகின்றது என்றே சொல்லவேண்டும். நுட்பங்கள் புலனாவதில்லை. அவை வெற்றுக்குறிப்புகளே அன்றி அனைத்தும் விளங்கும் படங்கள் அல்லவாம்.

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு எய்தாக் கடை" — (குறள்)

---

# 10. உணர்வு நிலை வளர்ச்சி

---

## I. வடிவம்

வடிவ வேறுபாட்டு உணர்வு :- இதுவரையிலும் பொதுவாக உணர்வினைப்பற்றி ஆராய்ந்தோம். இனிச் சிறப்பாகச் சில உணர்வு நிலைகளைக்காணல் வேண்டும். காட்சிப் புலனும் எல்லை அனைத்தையும் ஏறக்குறைய ஒருபடித்தான பொருளையே சுட்டுகிற முழுநிலையாகக் குழவி கண்டு வருகிறது. அங்குக்காணும் பல குறிப்புக்களை அது பொருள் படுத்துவதில்லை.

குழவியின் உணர்வுநிலையில் தெளிவும் இல்லை; வரையறை-யுற்ற வடிவமும் இல்லை. அதன் அக்கறைக்கும் உணர்ச்சி நிலைக்கும் தக்கவாறு அதன் உணர்வுநிலை, நீரின் வடிவம் போலக் குழம்பி எளிதில் மாறிமாறி வருகிறது. குழவியின் வேறு பாட்டுணர்வை எழுப்புவது யாது? இரண்டு வேறு நிலை-களுக்கும் இடையே தோன்றும் வேற்றுமை எவ்வளவுக்கு எவ்வளவு தெள்ளத் தெளியப் புலப்பட்டுத் தோன்றுகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு அந்த வேற்றுமை எளிதில் விளங்கி-வரும்.

செய்க்காட்சி :— இதனை ஆராய்ந்தறிய உள்ளத்தியற்கை நூல் அறிஞர் சில சோதனைகள் அல்லது செய்க்காட்சிகள் (Experiments) செய்து வந்துள்ளனர். 24 பெட்டிகளில் கற்கண்டை வைத்து அவற்றின் மூடியின்மேல் டைமண்ட் (Diamond) அல்லது வைரம் எனவழங்கும் சாய்சதுர வடிவத்தினை வெண்மையாகத் தீற்றினர்; அதன்மேல் சிலுவையைக் கறுப்பாக வரைந்து வைத்தனர். கற்கண்டு இல்லாத பெட்டியையும் இவற்றிடையே நுழைத்தனர்: அதன் மூடியின்மேல் வெள்ளை நிறமான வைர வடிவத்தின்மேல் கறுப்பு நிறமான சதுரவடிவத்தினை வரைந்தனர். கற்கண்டின் மேல் குழவிகள் கொள்ளும் விருப்பத்தினை அடிப்படையாகக் கொண்டு இந்தவடிவ வேற்றுமையை எவ்வாறு குழவி உணர வருகின்றன என ஆராய்ந்தனர். இந்த 25 பெட்டிகளையும் கண்ட குழவிகள் மேலுள்ள வடிவங்களின் வேறுபாட்டை உணர்ந்தே 'கற்கண்டுள்ள பெட்டி இது. கற்கண்டு இல்லாப் பெட்டி இது' எனப்பகுத்தறிந்து தாம் விரும்பும் கற்கண்டுள்ள பெட்டியைத் தேடி எடுத்தனவாம். இத்தகையை வேறு-பாட்டுணர்வு குழந்தை பிறந்த ஆறும் திங்களிலேயே விளங்கி-வரக்கண்டனர். வடிவத்தை வேறுபடுத்தி உணர்வதற்குக்

கோணங்களே சிறந்த வழிகாட்டியாம். சிறு குழவிகள் தெளிவான வட்டவடிவினைவிட்டுச் சிக்கலுள்ள கோணங்களாக அமைந்த வடிவங்களையே விரும்பிப் பொறுக்கி எடுக்கின்றன-வாம்.

## II. இடம்

இடவுணர்வும் உலகமும் :- வலம் இடம் எனப் பகுத்-தறிகிற இடவுணர்வு குழவியினிடம் முதலில் உற்றறியும் ஊற்றுணர்வாகவே எழுகிறது. எந்தப் பக்கத்தில் தொடு-கின்றூர்கள் என்பதனைக் குழவி எளிதில் உணர்கின்றது. இந்த வகையாக உணர்வதில் குழவி முதியோரைவிடச் சிறந்திருக்-கிறது என்றே கூறவேண்டும். கண்களிரண்டையும் ஒருங்-கியையவைத்துப் பார்க்கத் தொடங்கியதும் குழவி வலமிட-மாகத் திரும்பிப் பார்க்கின்றது. கண்ணுணர்வும் இட உணர்வை வளர்க்கவருகிறது. மேல், கீழ், தொலைவு, அருகு, வலம், இடம் என்ற பலவகை உணர்வுகளும் இவ்வாறு தெளி-வடைகின்றன; உலகமாக விரிகின்றன.

ஊறும் காட்சியும் :- உற்றுணர்வால் எழுகிற இடவுணர்வின் எல்லை சிறிதளவேயாம். உற்றுணர்வு உடலைத் தாண்டி எவ்வாறு விளங்கமுடியும்? கண்ணுணர்வால் எழும் இடவுணர்வின் எல்லை வானமும் மண்ணும் தழுவி நின்று எதிரே காட்சி-யளிக்கும். தொடுவானத்தின் எல்லையையே எல்லையாகக் கொண்டு அது விரிந்து வருகிறது; இயற்கை முழுதுமாக மலர்கிறது. எண்ணவும் முடியாத அத்துணைத் தொலைவில் உள்ள வான்மீன்களிடையேயும் இந்த இடவுணர்வு தொடர்பு பெற்று ஒன்றுகி விளங்குகிறது. 'ஊற்றுவகை இடவுணர்வே கண்வகை இடவுணர்வாக வளர்கிறது.' எனச் சொல்வதற்கு

இல்லை. இவை இரண்டும் ஒருதொடர்ச்சியாக அமையவில்லை; அணுவும் மலையுமாக மாறுபட்டுக் கிடக்கின்றன.

ஒருப்பாட்டு வடிவம் :- மிகவிரைந்தோடும் தானேடிகளை (Motor car) இன்னம் சில நாளில் ஒவ்வொருவரும் ஓட்ட-வரலாம். அப்போது கண்வகை இடவுணர்வு இன்றியமையாத சிறப்பினதாக வேண்டப்படும். ஆதலின் அதனை ஆராய்வதும் இன்றியமையாததேயாம். இரண்டு பொருள்களின் இடத்-தொடர்பினை அறியவேண்டுமானல் எல்லையில்லாத வெட்ட வெளியில் வைத்து அறிவது அருமை. ஒவ்வொரு பொருளையும் சுற்றி அதன் எல்லையாகச் சில குறிகள் இருக்கு-மானல் இடத்தொடர்பை அவற்றின் வழியே எளிதில் அறிய-லாம். வானத்திலே இரண்டு வேறு வான்மீன்களைப் பகுத்தறிய வேண்டுமானல் முக்கோணமாகவோ, நாற்கோணமாகவோ, வேறுவடிவமாகவோ இருக்கும் வான்மீன் குழுக்களைக் காண்கிறோம். எப்படி? இரண்டு குழுக்களில் ஒவ்வொன்றையும் தனித்தனியே அமைத்துக்கண்டு தொடர்பினை உணர்கின்றோம். உரோகிணியில் உள்ள ஆல்டிபெரான் என்னும் விளக்கமான வான்மீனையும், காலபுருஷ மண்டலமெனும் ஓரியனில் (Orion) உள்ள திருவாதிரை எனும் விளக்கமான வான் மீனையும் இவ்வாறன்றே உரோகணியின் எல்லைக்குட்பட்ட-தொன்ருகவும், காலபுருஷ மண்டலத்தின் எல்லைக்குட்பட்ட-தொன்ருகவும் வைத்து உணர்கின்றோம்.

செய்க்காட்சி :— ஓர் ஆராய்ச்சிவாணர் இரண்டு பலகை-களில் ஒவ்வொன்றிலும் 42 ஆணிகளை வரிசைக்கு ஏழாக 6 வரிசைகளாக அடித்துவைத்தார். அந்த இரண்டில் ஒரு பலகையில் உள்ள ஆணிகளில் சிலவற்றில் ஒவ்வோர் வளை-யத்தை மாட்டிவைத்தார். அதனைப் பார்த்து மற்ருேர்

பலகையிலும் அவ்வாறே வளையங்களை அவ்வவற்றிற்கு நேரான ஆணிகளில் மாட்டுமாறு குழவிகளைக் கேட்டுக் கொண்டார். இரண்டு பலகைகளிலுள்ள வரிசைகளும் நேராக இருக்கும்படி பலகைகளும் நேராக அமைந்தபோது குழவிகள் தவறாது வளையங்களை மாட்டிவிட்டனவாம். அவ்வாறு நேராக இல்லாது பிறழ்ந்து மேலும் கீழுமாகத் தோன்றும்படி பலகைகளை ஒன்றற்கொன்று கோணி இருக்க வைத்தபோது நேரெல்லை காணமுடியாமல் தவறித் தவறிக் குழவிகள் மாட்டி இடர்ப்பட்டனவாம். இரண்டு ஆண்டு குழவிகளினும் நான்கு ஆண்டு நிறைந்த குழவிகள் இவ்வாறு தவறாது மாட்டுவதில் சிறந்து விளங்கினவாம்.

மற்றொரு செய்க்காட்சி :- மற்றோர் ஆராய்ச்சி நிகழ்ந்தது, குழந்தை இருக்கும் இடத்திலிருந்து ஒரு மீடர் (Metre) தொலைவில் பந்துகளை அறிஞர் ஒருவர் வரிசையாக வைத்தனர். பல பல ஆண்டுகள் நிறைந்த குழவிகள் இதில் கலந்து கொண்டன. பந்துகள் ஒன்றற்கொன்று ஒரே இடையீட்டில் அமைந்து கிடந்தன. இடையீட்டில் எவ்வளவு வேற்றுமையைக் குழவி அறிய முடியும் என்பதே இங்குக் கேள்வி. 5 சென்டி மீடர் அளவுள்ள சிறு வேற்றுமையையும் குழவிகள் நன்கு உணர்கின்றன என அறிஞர் அறிந்தனர். இரண்டரை ஆண்டில் இருந்து நான்கு ஆண்டுகள் முடிவதற்குள் இந்த உணர்வு இவ்வாறு முற்றுகின்றதாம்.

பல படிகள் :— வடிவம், அளவு, தொலைவு என்ற இடவுணர்வு வகைகள், குழவி பள்ளிக்குப்போகும் முன்னர் முதிர்ச்சி பெறாமலே கிடக்கின்றன. ஆனால் பள்ளிக்குச் சென்றதும் விரைவில் இத்தகைய உணர்வு முதிர்ச்சி பெற்று விடுவதால் பல நுட்பமான வேற்றுமைகளை உணர்வதில் குழவி

திறம் பெற்று விளங்குகிறது. இந்த முதிர்ச்சியினைப் படிப் படியாக உயரும் பல நிலைகளாகப்பிரித்துக் காணலாம். இதனை வரையறுக்க ஓரறிஞர் செய்த ஆராய்ச்சி இதனை நன்கு விளக்கும். முக்கோணவடிவமான ஐந்து பெட்டிகளை ஒரு வகையில் ஒன்று சேர்த்தால் ஒவ்வொரு பெட்டியாகும். இவ்வாறு அமைப்பது ஒரு விளையாட்டு. ஒரு பலகையில் துளை ஒன்று வெட்டி இருந்தது; அதில் மரத்துண்டு ஒன்றை ஒரேவகையாகத்தான் போடமுடியும்; இவ்வாறு போடுவது மற்றொரு விளையாட்டு. வேலிக்குள்ளே குழவி இருக்க-வேண்டும். வேலிக்கு வெளியே பல பல பொருள்கள் இருக்கும். பல பல் நீளத்திலுள்ள கொம்புகள் குழவியின் அருகே கிடக்கும். இந்தக் கொம்புகளை எடுத்து அவற்றின் உதவியால் அந்தப் பொருள்களை எல்லாம் குழவி உள்ளிருந்தே தன் அருகே தள்ளிக்கொணர்ந்து எடுத்தல் வேண்டும். இது மூன்றாவது விளையாட்டு. பொருளைக் குழவிகள் பார்க்க முடியாதபடி வைக்கவேண்டும்; அதனோடு கொம்பு ஒன்று கயிற்றால் கட்டி இருக்கும்; இந்தக் கொம்பு போகின்றவழியை மட்டும் கண்டு பொருள் எந்தப்புறம் செல்கிறது எனக் குழவி கூறவேண்டும். இது நான்காவது விளையாட்டு. பலவயது நிலைகளில் உள்ள குழவிகள் இவற்றை விளையாட வந்தன. ஆனால் இரண்டு வயதிற்கு உட்பட்ட குழந்தைகள் இந்த விளையாட்டையே உணர்ந்துகொள்ள முடியவில்லை. இதுவே உணர்வுநிலை வளர்ச்சியின் முதற்படி. இரண்டு வயது முடிந்த குழவிகள் இந்த விளையாடல்களை எல்லாம் சரிவர ஆட-முடியாமற் போனாலும் இவை என்ன விளையாட்டு என்பதனைச் சிறுகச்சிறுக அறிந்து அந்த அந்த இடவேற்றுமையைக் கருத்தில் கொள்வதுபோலச் சிறிது மாறி நிற்கின்றன. ஈதே இரண்டாம்படி. நான்காம் ஆண்டு ஆகும்போது இந்த விளையாட்டினை முழுதும் அறிந்து கொண்டாற்போல

விளையாடல்களுக்குத் தக்கவாறு நடந்து கொள்கின்றன. ஈதே மூன்றாவது படியாம். என்றாலும் 8 ஆம் ஆண்டுவரை நான்கு திசைகளைப்பற்றிய உணர்வு தெள்ளத் தெளியப் பொதுநிலை அறிவாக முற்றுவதில்லை. திசையறிவு வேரூன்ற ஒரு-வழியையும் கற்பிப்பதில்லை போலும். ஆனால் பேசக் கற்றுக்-கொள்ளவில்லையா ? அவ்வாறு பேசி வளர்ந்து வரும் போது ஒற்றுமை வேற்றுமைகளை உணரும் உணர்வு நன்கு முற்றி அமையவேண்டும் அன்றோ? ஆகவே நன்றாகப் பேசும் குழவி இந்த உணர்வில் சிறந்து விளங்குகிறது. திசை அறிவு முற்றியநிலையே நான்காம்படியாம்.

## III. பண்பு

எண் :- பொருள்களின் பண்பினைக் குழவிகள் உணரும் முறையினையும் ஆராய்ந்து பல உண்மைகளை அறிஞர்கள் கண்டுள்ளார்கள். இந்த உண்மைகள் குழவியின் உள்ள வளர்ச்சியை நமக்கு நன்கு விளக்குவனவாம். 25 திங்கள் முடிந்தவுடன் ஒரு குழவிக்குக் கற்கண்டுத் துண்டொன்றை ஓர் ஆராய்ச்சியாளர் கொடுத்தார். அதன் தமக்கையிடம் இரண்டு துண்டுகளைக் கொடுத்தார். அந்தச் சிறுகுழவி இந்த எண்ணிக்கையிலுள்ள வேற்றுமையை உடனே அறிந்து கொண்டு தனக்கும் தமக்கைக்குப் போலவே கொடுக்க வேண்டும் என மன்றாடத் தொடங்கியது. மேலும் இரண்டு திங்கள் (27 ஆம் திங்கள்) முடிந்ததும் அக்குழவி தான் வைத்திருந்த ஐந்து பொருள்களில் ஒன்று குறைவதனைத் தெரிந்துகொண்டு அழுததாம். 29 ஆம் திங்களின் முடிவில் 5 வரையுள்ள பொருள்களின் எண்ணிக்கையில் உள்ள வேற்றுமையை அது தெரிந்து கொண்டதாம். 43 ஆம் திங்களுக்குள் பொருள்களை இரட்டை இரட்டையாக

வைத்துக் குழவி உணர்ந்து கொண்டதாம். 47 ஆம் திங்களுக்குள் பொருள்களை மும்மூன்ருக அடுக்கக் கற்றுக் கொண்டதாம். அவற்றில் அவ்வாறே ஆறு பொருள்களைப் பிரித்து எடுக்கவும் தெரிந்து கொண்டதாம். 62 ஆம் திங்களுக்குள் பொருள்களை விட்டுத் தனியே எழும் வெற்று எண்களில் (Abstract number) ஓர் விருப்பம் பிறந்ததாம்; 5, 3, என மனத்தாலேயே வேறுபிரித்து உணர முடிந்ததாம்.

குழவியும் விலங்கும் :- தமக்கைக்குக் கொடுத்ததுபோலத் தனக்கும் கொடுத்தாக வேண்டும் என மன்ருடிய ஈராண்டுக் குழவி, ஒன்று இரண்டு என எண்ணி வேற்றுமையைக் கண்டதாகக் கூறமுடியாது. பல காட்டு மிராண்டிகள் நான்கிற்குமேல் எண்ணல் முடியாது. இருப்பினும் அவர்கள், தங்களிடம் இருந்த சிலபொருள்களில், ஒன்று குறைந்தால் "குறைகிறது" எனப் புலம்புகிருர்கள். பூனையும் தன்குட்டிகளில் ஒன்று குறைந்தால் உணர்ந்து கொண்டு வீடுமுழுதும் கத்தி அலைகிறது. பூனை எண்ணுவது எங்கே? இங்கெல்லாம் பொருள்களை விலங்கும் குழவியும் ஒருப்பாட்டு வடிவக் கோலமாகவே காண்கின்றன. அங்கு ஒரு பொருள் குறையுமானல் அந்தக்கோலத்தில் வடிவமே மாறித் தோன்றுமாதலின் குறைதலை உணர்வது எளிதாகும். நான்கு குட்டிகளையும் நாற்கோண வடிவமாகக்கண்ட பூனை அவற்றில் ஒன்று குறையும்போது முக்கோண வடிவமாகக் காணுமானல், வேற்றுமை தெள்ளத் தெளிய விளங்கும் அன்ருே? முன்னிருந்தது இப்பொழுது இல்லை என்பதும் புலனுகும் அன்ருே? இவ்வாறுதான் இவை அனைத்தும் அறிகின்றன எனல் வேண்டும்.

எண்ணின் படிகள் :- இவ்வாறு எண்ணை அறிந்துவரும் உணர்வுநிலையின் வளர்ச்சியில் நான்கு வேறு படிகளைப் பிரித்து

அறியலாம். எண்களுக்குப் பதிலாகப் பொருள்களின் நிலை அமைப்பை ஒருப்பாட்டு வடிவமாகக் கொண்டு, அவற்றின் இயல்பினை உணரும் நிலையே முதலாவது படியாம். இது அளவினைப் பொறுத்தது அன்று; இயல்பினையே பொறுத்த-தோர் ஒருப்பாட்டு வடிவமாம். இந்த நிலையில் குழவி ஒன்று இரண்டு எனப் பேச அறியாது, "நிரம்ப" "பல" என்றெல்-லாம் பேசுகிறது. இனி இரண்டாவது படியிலும் பொருள்-களின் அமைப்பிலே தோன்றுகிறதொரு வடிவமாகவே குழவி எண்ணைக் காண்கிறது. முதற்படியில் பொருள்களை முழுநிலை-யாக வைத்துக் குழவி கண்டது. இரண்டாவது படியில் பொருள்களைச் சிறிது விரிவாக உணர்ந்து வருகிறது எனலாம். இது புற எண்ணைப் பொறுத்ததோர் ஒருப்பாட்டு வடிவநிலை-யாம். இந்த நிலையில் பொருள்களையே ஒன்று இரண்டு எனக் குழவி எண்ணுகிறது. மூன்றாவது நிலையில் எண்ணும் போதும் பொருளைத்தான் எண்ணுகிறது. ஆனால், நேரே பொருளை எண்ணுவதற்குப் பதிலாக ஒவ்வொரு பொருள்-களுக்கும் ஒவ்வொரு விரலைச் சார்பாகக்கொண்டு விரல் விட்டு எண்ணுகிறது. "சார்த்தியளத்தல்" என்பது ஈதேயாம். நான்காவது நிலையே வெற்று எண் நிலையாம். புறப்பொருளைப் பற்றாது ஒன்று இரண்டு என எண்ணை மட்டும் பிரித்தறிந்து எண்ணுவதே இந்த நிலையாம். இது கண்மூடியும் எண்ணுகிற நிலையாம்.

பிற உணர்வு :— இதுபோலக் கால உணர்வு, எடை உணர்வு, அளவு உணர்வு, நிறை உணர்வு, வடிவ உணர்வு முதலியவற்றையும் வயது ஏற ஏறக் குழவி நன்குணர்ந்து வருகின்றது. குழவிகள் நன்கு வளர்ந்தபிறகே அவைகளுக்குக் கால உணர்வு புலப்பட்டுத் தோன்றுகின்றது. எடை உணர்வோ மூன்றும் ஆண்டிலிருந்தே நன்கு வளரத் தொடங்குகிறது.

ஆறும் ஆண்டிற்குள் 3 சீர் அல்லது க்ராம் எடையிலிருந்து (Gram) 24 சீர் அல்லது க்ராம் எடைவரை வேறு பிரித்தறியக் குழவி பழகிக்கொள்கிறதாம். நீள அகல உணர்வினைப் பற்றிக் காணும்போது 3½ வயதிற்குள், 2 அங்குலத்திற்கும் 2½ அங்குலத்திற்குமுள்ள வேற்றுமையைக் குழவி அறிந்து கொள்கிறது. நிறம் முதலியவற்றினைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம். (பக்....75)

## IV. உன்னிப்பு

உன்னிப்பும் அக்கரையும் :— உன்னிப்பு நிலையிலும் குழவியினிடத்தே மாறுதல் காண்கிறோம். உன்னிப்புநிலை எவ்வளவு நேரம் தொடர்ந்து விளங்குகிறது என்று அளந்து பார்ப்பதில் மட்டும் போதிய பயன் உண்டாவதில்லை. குழவி, தான் செய்வதனைத் தொடர்ந்து உன்னிப்பாக நின்று செய்து வரும் காரணத்தை அறிய வேண்டும்; அதுவே குழவியின் மனநிலையை விளக்குவதற்கு மிக மிகப் பயன் உடையதாம். பள்ளிக்குப் போவதற்கு முன்னரே ஒரு தொழிலைத் தொடர்ந்து செய்யும் நிலை குழவியினிடம் தோன்றிவிடுகிது. அது வயதேற ஏற வளர்ந்து கொண்டே வருகிறது. குழவி ஓர் ஒலியையே தொடந்ர்து ஒலித்து நிற்கவும் காண்கிறோம். வயதினுக்கு எற்ப உன்னிப்பு மிக்குவருகிறதற்குக் காரணம் வயதன்று; பிறக்கும்போது கண்ட பொருள்களிடத்தேயே, வயது வரும்போது அனுபவம் ஆழ்ந்து வருகிறது; அதனாலேயே அங்கு முன் காணாத பல புதுமைகளைக்கண்டு களிக்கின்றது. வயது ஏற ஏற விளையாடும் பொருள்களும் பல நிலையோடு விளங்குவனவாக மேலும் மேலும் சிக்கலாகிக் கொண்டே வருகின்றன. குழவியின் அறிவும் அனுபவமும் விருப்பங்களும் பல்கிப் பெருகிக்கொண்டே வருகின்றன.

இவை காரணமாகவே உன்னிப்பும் அக்கறையும் விளங்கித் தோன்றுகின்றன.

பயன் நோக்கம் :— இந்த உன்னிப்பு நிலையை வேரூன்றி வளருமாறு செய்துவிட வேண்டும். இதற்கு என்னவழி? ஒருவேலையை ஒருவன் பல மணிநேரம் செய்து வருவது ஏன்? உழவன் பல நாள் வயலைக் காத்து உழைத்து வருவது ஏன்? அவனுடைய உன்னிப்பு மாதக் கணக்காய் நீண்டு வருகிறதோடு முடிகிறதா? இல்லை. உழவின் பயனாகச் சோறு கிடைக்கும் என உழவன் எதிர்பார்க்கின்றான். "இவ்வாறு உழைத்தால்-தான் பின் எல்லாம் பசியின்றி வாழமுடியும். இல்லையானால் பட்டினியால் வாடவேண்டும்." என உணர்கின்றான். அங்ஙனமே குழவியும் தான் செய்யுந் தொழிலின் பயனையும் இன்றியமையாமையையும் உணர்தல் வேண்டும். 'நாளைவரும் பலாக்காயினும் இன்றுவரும் களாக்காய் மேல்' என்ற எண்ணம் வளர்தல் ஆகாது.

காலந்தாழ்த்த எதிரூன்றல் :— இவ்வாறு காத்திருப்பது என்பது அருமையே. ஆனால், வாழ்க்கையில் ஏற்படுகிற ஓர் நிலையின் பயனை உணர்ந்ததும் உடனே அதற்கேற்ற செயல் எழுவது பல பொழுதும் நேருவதில்லை. அக்கறை குறையாமல் இருந்து வரவேண்டும். அப்போது காலம் தாழ்த்தாலும் எதிரூன்றல் எழும். ஆதலின், குழவி இவ்வாறு காலந்தாழ்த்து நேரும் நிலைக்கும் பழகிக்கொள்ள வேண்டும். குழந்தைகளின் எதிரூன்றல்கள் இவ்வாறு காலந்தாழ்ந்துவரப் பழகிவிடுவ-தனையும் காண்கிறோம். இது இயற்கையில் தோன்றுவதோர் இயல்பேயாம். பொம்மை ஒன்றைக் குழவி காண்கிறது. பல பெட்டிகளில் ஒன்றில் பொம்மையை வைத்து விடு-கின்றோம். குறிப்பிட்ட காலம் கழிந்த பின்னர்த்தான்

எடுக்கலாம் எனக் கூறுகின்றோம். எத்தனை நேரம் குழவி இவ்வாறு காத்திருக்கும்? இவ்வாறு காத்திருக்கும் நேரம் வயது ஏற ஏற வளர்ந்து கொண்டே வருகிறது. 13 ஆம் திங்களில் குழவி 20 அல்லது 25 இமைப்போதே காத்திருக்கும். 30 ஆம் திங்களில் 52 இமைப்போது வரை காத்திருக்கும். 6 அல்லது 8 ஆண்டானால் 25 நிமிஷம் வரை காத்து இருக்கின்றது.

காத்திருப்பது :- ஆனால் இவ்வாறு காத்திருப்பது என்பது எளிதில் இயலுவது ஒன்றன்று. இவ்வாறு ஆராய்ச்சி செய்வதற்கு என ஏற்படுத்திய செய்காட்சியில் பங்கு எடுத்துக்கொள்ளும் குழவி, தான் பொம்மையை எதிர்பார்த்து இருக்கும் நிலையில் தன்னுடைய நடத்தைக்கு வழிகாட்டியாக ஏதேனும் ஒரு குறியைப் பின்பற்ற வேண்டும். மண்டியிட்டு உட்கார்ந்தோ, நின்றோ அப்பெட்டியைப் பார்த்திருப்பதும் உண்டு. இவ்வாறு ஏதோ ஒரு நிலையில் குழவி அமைந்து விளங்குகிறது. அந்தப் பொம்மையைப் பெட்டியிலிருந்து எடுக்கும் வரை இவ்வாறே இருக்கின்றது. சிறு குழவி அப்பெட்டியை உற்றுப் பார்த்துக்கொண்டே இருக்கும். வயதேற ஏற இப்படி இருப்பது இல்லை. குழவி அப்புறத்தேயும் போய் விளையாடிப் பின்குறித்த நேரத்திற்குத் திரும்பிவரும். இங்கே பொம்மையை எடுக்க வழிகாட்டும் அறிகுறியாகப் "பொம்மை" என்ற சொல்லே போதியதாம். அந்தச் சொல் நினைவிற்கு வந்ததும் பொம்மையிடம் வயதான குழவி ஓடிவருகிறது.

## V. அழகுணர்வு

அழகு பழகுதல் :— அழகு நாட்டம் ' ஒருவரிடத்தே விளங்குவதுபோல மற்றொருவரிடம் விளங்குவதில்லை. ஆகையால் இதனைப் பொதுமக்கள் இயல்பு எனக் கருதாது,

தனிமக்களின் சிறப்பெனக் கூறுவோர் உளர். கல்விமுறையே இந்த அழகு நாட்டத்தினை வளர்த்து வருகிறது. பெரியவர்கள் எனத் தக்கவர்கள் அழகு நாட்டமாக வாழ்ந்து வந்தால், பிறரும் அவர்கள் அடிச்சுவட்டினைப் பின்பற்றி அழகு நாட்டமாய் வாழ்வது இயல்பாகிவிடும். தலைசிறந்த அழகுப் பொருள்கள் சுற்றுப்புறச் சூழலில் விளங்கி வருமானால், குழவிகளின் வாழ்வில் அவை மேல் வரிச்சட்டமாக அமைவதனைக் காணலாம்.

குழவியின் இயல்பு:- அழகு காரணமாக நன்கு மதிக்கப்படும் பொருளினை அழகுச் சுட்டுடையது எனலாம். மக்கள் தம் வாழ்க்கையின் உறுதிப்பொருள் எனக் கடைப்பிடித்து நாடுவன அழகு, நன்மை, உண்மை என்ற மூன்று பெருஞ் சுட்டுக்களாம் (Values). தனிமக்களின் மனப்போக்கு, மரபாகி வழங்கிவருகிற அழகின்மேல் வரிச்சட்டங்களிடையே பழகுகிறது. அவர்கள் பயிலும் கல்விமுறையால் மாறிச் சிறக்கின்றது. பின்னர் அழகு நாட்டத்தில் ஈடுபடவருகிறது. அழகுநாட்டம் சந்த உணர்வாக விளங்குகிறது என இயக்கத்தினைப்பற்றி ஆராய்ந்தபோது கண்டோம். நம்முடைய உயிர்ப்பு முதலியன சந்தத்தோடு இயங்குவதனையும் கண்டோம்; புற உலகச் சந்தத்தோடு (Rhythm) ஒத்து இயங்குவதனையும் குறிப்பிட்டோம். இயல்பாகவே குழவிகள் பாடி ஆடிவரும் போக்கினையும் சுட்டினோம். பாட்டிலே வரும் கற்பனை, பாட்டில் எழும் காட்சி, சொல்லின்பம், குறிப்புப் பொருளாய்ப் புதை பொருள்போலத் திடீரெனத்தோன்றி இன்பம்தரும் இறைச்சிப் பொருள் அல்லது தொனிப்பொருள், மெய்ப்பாட்டில் எழும் உணர்ச்சி ததும்பும் சுவை இன்பம், முழுதுமாய தெளிவு நிலை, பாட்டின் இசை - இவை அனைத்தும் மொழி நடையை அறிந்த குழவியின் மனத்தைக் கவருவதனைக் கூறவேண்டாம்.

கலை அனுபவம் :— இவ்வாறு உள்ளுணர்வாக எழுவது உணர்ச்சியால் ஒற்றுமை பெற்று இன்பமாகிறது. உயர்ந்த நோக்கம், வேணவாவாக விளக்கமுற்று ஒளிர்வதே கலையாம். பாட்டினைக் கேட்டதும் அகத்தே ஒரு மாற்றம் எழுகிறது. சிலருக்கு மயிர்க்கூச்செறியும்; பின்னும் பலவகையான மெய்ப்பாடுகளும் எழும். உருவகமே பொதுமக்களின் பாடல். சொறியினையும் (படை) படர்தாமரையாகக் காணும் கண்ணும் உண்டன்றோ? உருவகத்தில் ஒற்றுமைக் காட்சியே விளங்குகிறது. உவமைகூறி விளங்குவது அன்று அங்குள்ள நோக்கம். இரண்டு பொருள்களையும் ஒன்றாய்க் காண்பதே அங்குள்ள சிறப்பு. ஒரு பொறியால் உணருவதனை மற்றொரு பொறியால் உணரும் சுவைகொண்டு வழங்குவதும் மரபாகிவிட்டது. நாவில் உணர்வது இனிமை; இதனைச் செவிப்புலனுக்கும் ஏற்றி 'இனிய இசை' என வழங்குவது காண்க. குழவியின் விளையாட்டனைத்தும் கலையே என்ற கருத்தினையும் கண்டோம். பயனை நோக்காது எழுகிற செயலனைத்தும் வேள்வியாதல் போல அவை கலையுமாம். எனவே, குழவியின் விளையாட்டெல்லாம் கலையாட்டமானால் அழகு நாட்டத்திற்குக் குறைவு ஏது? மேற்கூறிய பல நுட்பங்களைப் பிரித்தறிந்து உணர்ந்து துய்த்துக் குழவியானது இன்பம் பெறுமாறு செய்தல் வேண்டும்.

ஆறுபடிகள் :— அழகு நாட்டத்தினை வளர்ப்பன ஆறுவேறு வகையாக நிலைபெற்று உள்ளன எனலாம். முதலாவது கைத்திறனும். கருவிலே திருவுடையார் எனப் பலர் பேசுவது உண்மையே. கைத்திறன் கருவிலே உருப்படுவது ஒன்றன்று. கைத்திறன் வளரக்கூடிய நிலை இயல்பாகவே அமைந்து கிடக்கலாம். இருந்தாலும் கைத்திறன் பழக்கத்தால் முற்றுவதேயாம். சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்; வைத்ததொரு கல்வி மனப்பழக்கம். பெருநோயாளியாக

இருப்பவன் ஓடாவியாவது எங்ஙனம் கூடும்? கலைகளில் விருப்பம் இல்லாதவன் அவற்றில் விருப்பம் பெறுவதும் என்றும் இல்லையாம். இத்தகைய பழக்கம் பெறப் போதிய ஆற்றலும், இவ்வாறு நீண்டகாலம் பழகக்கூடிய மனப்-போக்கும் வேண்டும். இவையே இரண்டாவது அடிப்படையாம். எதற்கும் அறிவுவேண்டும். பொது அறிவோடு தொடர்பு உடையதாகக் கலை அறிவும் விளங்கவேண்டும். ஈதே மூன்றாவது அடிப்படையாம். ஆனால் கலையுணர்வு அறிவாராய்ச்சியால் எழுவதன்றாம். கண்டு களிக்கும் உணர்வினில் வல்லோரது சுவையுணர்வே நான்காவது அடிப்படையாம். இருப்பதனை இருந்தபடி காண்போன் புகைப்படம் பிடிப்பானேயாம். பொருள்களிடையே புதியதொரு பொருத்தத்தினைப் படைத்துக் காண்போனே பாவலனாம். பாவலனைப் பிரமன் என்றனர் குமரகுருபரர். படைப்போன் அவனேயாம். இதற்கு இன்றி அமையாததாம் கற்பனைத்திறனே ஐந்தாவது அடிப்படையாம். இத்தனையும் இருந்தும் என்ன பயன்? தன் கைத்திறன் இயங்கிவரும்போது, கலையின் அழகுநிலையைக் கண்டவுடன் அழகில்லாதவற்றைவிட அழகுள்ளதையே அழகென முடிந்த முடிபாக ஐயந்திரிபற உணர்ந்து துய்த்து அழகு என்று துணிகிற தீர்ப்புநிலையே ஆறாவது அடிப்படை-யாம்.

உரிமை:- நம்மையும் நம் செயல்களையும் கைத்திறனையும் நாமே ஆராய்ந்து வருவதால் இந்த அழகின் பெருஞ் சுட்டுநிலை (Value) வேரூன்றி வளர்கிறது. குழவியின் இடையேயும் மக்கள் வாழ்க்கையின் உறுதிப்பாடாகிய இந்தச்சுட்டுநிலை இங்ஙனமே வளர்ந்து வரும். ஆகையால் குழவி, தானே பல-வற்றையும் திறம் பெறச் செய்து காணுமாறு வேண்டிய பொருள்களை அதன் கைக்கெட்டும்படி வைத்தல் வேண்டும்.

அதன் இயற்கைச் சந்தம் (Rhythm) கெடுமாறு அலற்றுதல் கூடாது. அழகிய பொருள்களிடையே குழவியை வாழவிடுதல் வேண்டும். சுற்றுப்புறச்சூழல் மனிதனை மாற்றி அமைத்தல் கூடும். ஆகையால் அழகிய சுற்றுப்புறச் சூழலிடையே வாழும் குழவி, தானாகவே அழகிய பொருள்களை ஒப்பு நோக்கித் தன் வேலையை ஆராய்ச்சிக் கண்கொண்டு காணும்; கலைக்கு வேண்டிய கைத்திறனும் ஒருங்கு வளரும்.

வயதும் அறிவுணர்வும் :— ஐந்தாண்டுகளுக்குள்ளேயே குழவி இத்தகைய படைப்புத் தொழிலில் ஈடுபட்டுவரத் தொடங்குகிறது; பல பொருள்களை அமைத்து வர முயல்கிறது. குழவியின் நடத்தைக் கோலங்கள் தாளச்சீர் பெற்ற இசைச் சந்தம் உடையன போலத் தோன்றக் காண்கிறோம். குழவி தன் விருப்பம் போலச் செய்துவரும்போது அதன் செயல் அனைத்திலும் இத்தகைய இசைக்கூத்துணர்வு பெருகிச் சிறந்து தோன்றக் காண்கிறோம். எல்லாச் செயல்களிலும் இந்த இயல்பு வளருமாறு குழவியை அதன் விருப்பப்படி பாடி ஆட விடவேண்டும் என முன்னரே கண்டோம். அப்போதுதான் கலையின் நுட்பம் குழவியின் மனத்தில் நன்கு பதியும். சுவையை அறியவேண்டுமானால் நாமே உண்ணுதல் வேண்டும்; பிறர் உண்டு பயன் இல்லை; பிறர் சுவையைப் பற்றிப் பேசியும் பயனில்லை. அங்ஙனமே குழவியும் கலையைச் சுவைக்க வேண்டுமானால் அதுவே துய்த்தல் வேண்டும்; பிறர் துய்த்தும் பயனில்லை. பிறர் பேசியும் பயனில்லை; கலைநுகர்ச்சியும், பாராட்டும், பன்னிரண்டாம் ஆண்டில் ஓர் உயர்நிலையை எட்டிப்பார்க்கின்றன. ஆகவே இவை வளர்வது : மூன்றும் ஆண்டிலிருந்து பதினோராம் ஆண்டுவரை என்பது தெளிவாகிறது. குழவி வாழ்க்கையே கலையுணர்வை உருப்படுத்தற்குத் தக்க வாழ்க்கையும் சிறந்த பருவமுமாம்.

## VI. சில காட்சிகள்

கற்பனை :- அனுபவத்திற் கண்ட பொருள்களை உலகத்தில் நிகழும் செய்திகளோடு ஒத்தவகையிலோ, ஒவ்வாத வகையிலோ மனக்காட்சியிலே வேறொரு முறையாகச் சேர்த்து அமைப்பதே கற்பனையாம். குழவி தன்னுடைய விளையாட்டுப் பொருள்களை எல்லாம் வீசி எறிந்து உடைக்கும் பொழுது, இத்தகைய கற்பனைச் செயலையே செய்து களிக்கின்றது எனலாம். இது அப்பொருள்களை அழிப்பதாய் நமக்குத் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் இது குழவி செய்யும் படைப்புத் தொழிலே ஆம். இது குழவி வாழ்க்கையில் தோன்றுகிற ஒரு புதுமையாகும். உலகத்தினிடையே தான் கண்ட பொருளை இவ்வாறு குழவி நேராகவே உடைத்தெறிந்து வேறுவகையில் புத்தம் புதுமுறையில் தன் மனத்திற்கு ஏற்ப அமைத்துக் காண்கிறது. குழவி தன்கற்பனா சக்திகொண்டு இயற்கையை வழிபடும் முறை இதுவேயாம். இந்த நுட்பத்தை அறியாமல் 'உடைக்கின்றதே' என அதன் மேல் சீறி விழுகின்றோம். குழவிகள் பொருள்களை முதலில் மேல்வாரியாகவே அறிந்து வருகின்றன. இந்தப் புறநிலை அறிவுகொண்டு பொருள்களை ஆராய்ந்துவரும்பொழுது அவை உண்மையாக ஒப்புமை இல்லாதவற்றையும் ஒன்றெனவே கண்டுவருகின்றன. பெயரளவில் ஒப்புமை உடையனவற்றையும் அவை ஒன்றெனத் துணிந்து விடுகின்றன. சிலேடை அணியில் ஈடுபடாத புலவன் உண்டோ? ஆனால், சிலேடையில் என்ன ஒப்புமை உண்டு? ஒப்புமை யல்லாததனை மேல்வாரியான சொல் ஒப்புமையால் ஒன்றெனக் கொண்டு சிலேடை பாடுகின்றான் பாவலன். பாவலன் குழவியாக விளங்குகின்ற நிலைமையை இந்த ஈடுபாடு நன்கு விளக்குகிறது. இதுவே குழவி நிலையிலும் விளங்கித் தோன்றுவதோர் ஒற்றுமைக் காட்சியாம்.

இக்காட்சி பல பொருள்களை மூட்டைகட்டிவைத்ததுபோலத் தோன்றும் (Syncretism). சிறு சிறு வேற்றுமைகளைப்பற்றிக் குழவி கவலை கொள்வதில்லையாம். மனிதனை எழுதுவது என்றால் வயிற்றினை மேலும் தலையைக் கீழுமாகச் சில குழவிகள் எழுதுமாம். பல உறுப்புக்களையும் அடுத்தடுத்து எழுதுவதும் உண்டாம். கழற்சிக்காய் மூட்டையே போல, ஒருமுறையோ, இயல்போ இல்லாத குவியற் காட்சியே இதுவாம். "மயிர் நிறைந்த கையும் காலும் உடைய பேய் சுண்ணாம்பு பெற வேண்டித் தன் கைவிரலை, மூடியிருந்த கதவின் துளைவழியே நீட்டியபோது உள்ளிருந்த குடியானவன் அதனைப் பேயென அறிந்தான். உடனே கத்தியால் அரிந்துகொண்டான்" - இந்தக் கதையினைக் கேட்ட குழவி பிறவற்றினை எல்லாம் மறந்து 'மயிர்க்கால்' என்ற குறிப்பினை மட்டும் விடாமல் பற்றிக்கொண்டு குரங்கினைக் கண்டதும் பேயென நம்பிக் குரங்கினிடத்தே நடக்கக் கண்டதனை எல்லாம் பேயினிடத்தே கண்டதாக எல்லோரிடமும் வியந்து கூறிச் செல்கிறது. சோற்றைக் கண்டதும் இமயமலை என்றும், அதன் மேலிட்ட பருப்பைப் அதன் மேலுள்ள பொன்னுலாகிய கொடுமுடி என்றும், ஊற்றும் நெய்யைக் கங்கையின் ஓட்டம் என்றும், நம்பி மகிழும் குழந்தை உள்ளத்தை (Robert Louis Stevenson) ராபர்ட் லூயி ஸ்டீவென்சன் அழகான சொல் ஓவியமாக ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இவ்வாறு எண்ணிப் பழகிய புலவர்கள் பின்னே குண்டோதரன் முதலியோர் உண்டதனைப் புனைந்துரைக்க வரும்போது சோறு முதலியவற்றை இமயமலை முதலியவாக உருவகம் செய்வது புதுமை அன்று.

○

பிற்காட்சியும் பொருளல் காட்சியும் :— ஒரு பொருளைப் பார்த்துக்கொண்டே இருந்து கண்ணை மூடிக்கொள்வோ-

மாளுல், அக்காட்சி சிறிது நேரம் வரையில் தொடர்ந்து தோன்றும். ஆனல், குழவி நிலையிலே இத்தகைய காட்சி, பல ஆண்டுகள் சென்ற பின்னும், பொருளெதிரே இல்லாத-போதும், எழுகின்றதாம். கண்ணை மூடாதபோதும் அத்தகைய காட்சி தெள்ளத் தெளியச் சில குழவிகளுக்குத் தோன்று-கின்றதாம். (Eidetic Imagery). சிற்சிலபோது முதலிற்-கண்ட பொருளினும் நிறத்தாலும், வடிவத்தாலும் இன்ன பிற குறிப்புக்களாலும் இத்தோற்றம் வேறுபட்டு இருக்குமாம். இதனை உருவெளித்தோற்றம் எனக்கூறல் தகும். குழவி இதனை நம்புவதில்லை. "நினைவிற்குக் கொண்டுவருதல்" என்ற முயற்சியை நாம் அறிவோம். இக்காட்சி அந்த முயற்சி அன்ரும். உருவெளித் தோற்றமாய்க் கண்ணுக்குப் புலப்படு-வதனை 'வெறும் நினைவு' என எங்ஙனம் கூறுதல் கூடும்.?

Jaensch :- ஜேன்ஷ் என்பவர் இதனைப்பற்றி விரிவாக ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். ஆருவது வயதில்தான் இந்த உருவெளித்தோற்றம் உயர்ந்த நிலையை அடைந்து தோன்று-கிறதாம். இளமைப் பருவம் தொடங்கியதும் இது மறை-கின்றதாம். இவ்வாறு காணும் காட்சிநிலை குழவிக்குக் குழவி மாறுபடுகின்றதாம். சிலருக்கு இந்த உருவெளித் தோற்றம் தங்கள் தொழிலைச் செய்ய உதவிகின்றதாம். வேறுசிலருக்குத் தடையாக நிற்கின்றதாம்.

போய்த் தோற்றம் :— உணர்வென்பது புலத்தோற்றத்-திற்குப் பொருள் பண்ணிக் கொள்வதே எனக் கண்டோம். இவ்வாறு பொருள் கொள்வது உண்மைப் பொருளானல் அதுவே மெய் உணர்வாம். தவருன பொருளானல் பொய் உணர்வாம்; திரிபு உணர்வாம். இருட்டிலே கட்டை கள்வனகத் தோன்றலாம். மாலைப்போதில் கயிறு பாம்பாகத் தோன்றலாம்.

ஆனால், புலனுக்கும் அதற்கு நாம் பண்ணிக்கொள்ளும் பொருளுக்கும் ஒரு தொடர்பே இல்லாதபோது காண்பதனைப் பொய்த்தோற்றம் என்றே கொள்ளுதல் வேண்டும். பெரியோர்களும் தூக்கத்தில் கொசுகு வலை கையிற் சிக்கும்போது தம்மைப் பகைவர் கட்டித் தூக்கிக்கொண்டு போவதாகக் கனக் காண்கின்றனராம். இத்தகைய மனநிலை குழவிகளிடத்தேயும் உண்டு. குழவிகள் புறநிலையினும் அகநிலையிலேயே மிக்க நம்பிக்கை உள்ளவர்கள். ஆதலின், அவைகள் "பேயைக் கண்டேன்" எனக் கூறி அலறுவது வியப்பன்று. வீணான அச்சங்களை மூட்டும் கதைகளைக் குழவிகளுக்குக் கூறுவதால் வரும் கேடு ஈதாம். கனக் காண்கின்றதனையே நேரில் நிகழ்கிறது என எண்ணி அஞ்சி நடுங்கிக் குழவி கூவலாம். இத்தகைய நிலை எழும்போது அக்குழவியின் மூளை கெட்டது என அஞ்சி நடுங்குகிவதிற் பயனில்லை. இது ஒரு நோய் நிலை அன்று; குழவிகளிடையே காணும் பொது இயல்பேயாம். புலனுக்குப் பொருள் கொள்ளும் முறையில் குழவியை விடப் பெரியவர்களே சிறந்து நிற்கின்றார்கள். அவர்களுடைய பழைய அனுபவம் அவ்வாறு பொருள் கொள்ளும் நிலைக்குப் பெரிதும் உதவுகிறது. பொருள்கொள்ளும் நிலை பெரியவர்களுக்கே மிகுதியும் எழுகிறது. ஆதலால், திரிபுணர்வு மிக்கு எழவும் அங்குத்தான் இடமுண்டு. எனினும் குழவிகளிடத்தே போலத் திரிபுணர்வு அவர்களிடத்தே எழவில்லை என அறிகின்றோம். அவர்களுடைய அனுபவமே இவ்வாறு பிறழாதபடி அவர்களைக் காக்கின்றது எனலாம்.

பகற்கனவு :— இயங்கிப்புழங்கிவருவதிலேயே குழவிகளுக்குப் பெருவிருப்பம். அக்குழவிகளை அவ்வாறு நனவுலகில் தொழில் செய்யாதபடி தடுத்தால் அவை தம்முடைய கனவு உலகில் இயங்கிப் புழங்குகின்றன. குழவிக்கு ஒன்றும் தெரியா-

தென வைது வருவோமானால் தன்னுடைய பெருமையைக் கனவு உலகில் காட்டிக் கண்டுகளிக்கிறது. குழவிக்கு இதுவே எளிதாகும். உலகத்திடையே காணும் வாழ்க்கையின் முட்டுப்பாட்டிற்குள் சிக்காமல் நினைவு உலகிலும், கனவு உலகிலும் சென்று தன் செயற்பாட்டின் மேன்மையைக்கண்டு மகிழ்கிற வழக்கம் பழக்கத்திற் படிந்துவிடும். தடைபட்டும் வையப்பட்டும், அடக்கப்பட்டும், ஒடுக்கப்பட்டும் வருகிற குழவிகளிடமே இத்தகைய பழக்கம் இயல்பாக எழுகிறது. மனம் ஒரு துலாக்கோல்; அதில் கனவு ஒருதட்டு; நனவு ஒரு தட்டு; நனவு என்ற தட்டானது சாய்ந்தால் கனவு என்ற தட்டு உயரத்தானே வேண்டும். இத்தகைய கொடும் பழக்கத்திற்கு ஆளாகும் குழவிகள் முடிவில் உலகத்தில் வாழ அறியாமல் வீணே ஒழிகின்றன.

பகற்கனவுக்கு மருந்து :— ஏதேனும் ஒன்றனைக் குழவி செய்யவரும்போது பெரியோர்கள் இடையே புகுந்து, வைதும், அடித்தும், கூவியும், அலப்பியும் வந்தால், அதன் மனம் சிதைந்து, உடைந்து போகும்; தன் நம்பிக்கையையும் அது இழந்து கிடக்கும். ஒருபோதேனும் தன்செயலில்வெற்றி பெறுமாறு அத்தகைய குழவியைத் தூண்டி மேலும் மேலும் தொழில் புரிய ஊக்கம் அளித்தல் வேண்டும். அப்போதுதான் சிதைந்த மனம் சீர் பெறும். தம்முடன் விளையாடத்தக்க குழவிகள் இல்லாது தனியே வளர்கின்ற குழவிகளும் இங்ஙனமே மனக்கோட்டை கட்டத் தொடங்குகின்றன. அச்சத்தால் அடக்கி ஒடுக்கப்பட்ட குழவிகளும் அங்ஙனமேயாம். அவைகள் காணும் கனவைக் கேட்போமானால் அவற்றின் மனநிலை நன்கு விளங்கும். சுவையான உணவை உண்ணுதலாகாதெனத் தடுக்கப்பட்ட குழவிகள் சுவையுள்ள உணவுகளைத் தாம் உண்பதாகக் கனவு காண்கின்றனவாம்.

இத்தகைய மகிழ்ச்சியைக் கனவிலேனும் இந்தக்குழவிகளுக்கு இயற்கை அன்னை தந்து உதவுகின்றாளே! இதுவும் இல்லையானால் இவற்றின் நிலைதான் என்ன? செய்ய முடியாத செயல்களைச்செய்யுமாறு இத்தகைய குழவிகளை ஏவுவதில் பயனில்லை. அவை வெற்றியின் சுவையைக் காணுமாறு நம்மால் ஆனவரையிலும் முயலுதல்வேண்டும். பின்னர்க் கனவுலகிற் செல்லாது நனவுலகில் வாழக் குழவி பழகிவிடும். இவ்வாறு உலகின் பலவகை அனுபவங்களும் அதன் மனத்திற் பதிந்து நிரம்புமானால் கனவுலக அனுபவங்கள் வெறும் நிழலாய்ச் சுவையின்றித் தாமாகவே மறையும். இதுவே இத்தகைய குழவிகளைப் பயிற்றும் முறையாம்.

## VII. ஒருப்பாட்டு வடிவம்.

உணர்வுமாறுதல் :- உலகத்தே தோன்றுவன ஓவியத்திற்காணும் வரியும் பரப்புமே அல்ல; பொருள்களேயாம். இப்பொருள்களின் குறிப்புகள் நம்செயலோடு பொருத்தமுற்றுத் தோன்றும் தொடர்பாடே நம் எதிரே காட்சி அளிக்கின்றது. உலகிடையே நாம் வாழ்ந்து வரும்போது நம் அனுபவத்திற்கு ஏற்ப இந்தத் தொடர்ப்பாடும் மாறிவருகிறது. முதலில் தோன்றும் முதல் நிலைப் பொருள் ஒன்றாம். பின் தோன்றுவன இரண்டாம் நிலைப் பொருள் முதலியனவாம். மாம்பழத்தை வழவழப்பான பந்தெனக் கருதிய குழவி அதன் சுவையை உணர்ந்ததும் அப்பழம் உணவுப் பொருளாகவும் மாறிவிடுகிறது. உருட்டி ஆடும் இயக்கத்தோடு மட்டும் தொடர்பு பெற்ற மாம்பழத் தோற்றம் பின்னே உண்ணும் இயக்கத்தோடும் தொடர்பு பெறுகிறது. சுவை தரும் பழத்தைப் பந்தாக உருட்டினால் சுவை கெடும் என உணர்ந்ததும் பந்து என்ற எண்ணம் மறைகிறது; உணவென்பதே நிலை

பெறுகிறது. நம் இயக்கத்திற்கு ஏற்ப இவ்வாறு பழைய நிலை மாறியும் புதிய நிலை தோன்றியும் வரக் காண்கிறோம்.

பேச்சு :— முதியவரின் உலகம் அவர்கள் அனுபவம் அனைத்துமேயாம். இந்த முழுநிலை எங்ஙனம் எழுகின்றது? இதில் பல பல வேறு பாடுகள் எங்ஙனம் எழுகின்றன? பேச்சு வளர்ந்து வரும்போது மொழியின் முறைவழியே மனம் வளரும் வளர்ச்சி ஒன்றாம். இங்கே சொற்கள் பல நிலைகளைச் சுட்டும் குறிப்புகளாகவே வருகின்றன. இந்தச் சொற்கள் பல வகையாக எழலாம். குழவி தானே ஒரு பொருளுக்குப் பெயரிடுவதும் உண்டு. பிறர் பெயரிடுவது கேட்டுக் குழவி வழங்குவதும் உண்டு.

பிறவகைக் குறிப்புகள் :— சொற்களே இன்றி நிறம் முதலியவற்றை அறிகுறியாக அறிந்து பொருள்களை உணர்ந்து வரும்போதும் இத்தகைய வளர்ச்சி நிகழ்கிறது. ஒரு கதையில் வரும் தந்தையைச் செம்மை நிறமாகவும் தாயினைப் பசுமை நிறமாகவும் குறித்துக் காட்டுவதிலும் இத்தகைய வேறுபாட்டு உணர்வினை வளர்க்கலாம். மொழி இத்தகைய வேறுபாட்டு உணர்வினை எழுப்புவதில் சிறந்து விளக்குவதைப் பின்னர்க் காண்போம். மொழி அவ்லா முறையாலும் இந்த வேறுபாட்டு உணர்வு பரவி வரக் காண்கிறோம். ஒப்புமை நோக்கி ஒப்புமையின் ஏற்றத் தாழ்வின் வழியே பொருள்களை வரிசையாக வைப்பது ஒரு முறையாம். படங்களில் நிறங்களை எல்லாம் காணலாம். எடுத்துக் காட்டாகச் சிலவற்றைக் கண்டறியலாம். பலர் சிலவற்றை விரும்பி வருநிலையிலும் வேற்றுமை காணலாம். பயிற்சியாலும் வேற்றுமை காணவரலாம்.

நிறவேறுபாடு :— குழவி பளபளப்பான பொருள்களைக் காண்கிறது. பின்னர்ப் பொருள்களை அடையவோ காணவோ இருட்டுப் புறமாகப் பார்க்காமல் ஒளியுள்ள புறமாகவே பார்க்கவேண்டுமென உணர்கிறது. இவ்வாறு ஒளியும் இருட்டும் வேறுபட்ட பின் ஒளி மழுங்கிய நிறத்திலிருந்து பளபளப்பான நிறங்களை வேறு பிரித்து அறிந்து அவற்றில் ஈடுபடுகிறது. முதலில் வெறுந்தோற்றம் எழுகிறது. பின்னர் அதில் பழகப் பழக எதிர்தோன்றும் தோற்றம், இருட்டும் ஒளியுமாய்க் கலந்த ஒருப்பாட்டு வடிவமாக விளங்க, அதில் இருட்டையும் ஒளியையும் வேறு பிரித்தறிகிறது. அந்தக் கோலத்திடையே பலவகை நிறத்தை மழுங்கலும் பளபளப்புமாக ஒருங்கு இயையவைத்ததோர் ஒருப்பாட்டுக் கோலமாகக் காண்கிறது; பின்னர் அங்கேயே பழக்கத்தால் பகுத்துணர்ந்து கண்டு வருகிறது; நிறமும் நிறமற்றதுமாக உணரத் தொடங்குகின்றது. பழகப் பழக அவ்வாறு தோன்றும் நிறத்தினிடையேயும் பல வேறு ஒருப்பாட்டு வடிவங்களைப் பலவேறு கோலங்களாகக் கண்டு நிறங்களின் வேறுபாடுகளை உணர்கின்றது. பல நிறங்களைக்கண்டு வரும்போது மனத்திற் படிந்துவரும் நினைவானது நிறம் என்ற பொதுநிலையை அறிகின்றது. இவ்வாறு ஒருப்பாட்டு வடிவக்கோலங்கள் ஒன்றனுக்குள் ஒன்றாகச் சிறப்பு நிலையில், புகைப்படம் துலங்கி வருவதுபோலத் துலங்கித் தெள்ளத் தெளிய வேறுபட்டுத் தோன்றுகின்றன; இதனாலேயே குழவி பொருள்களின் வடிவம் முதலிய வேறுபாட்டினையும் அறிந்து வருகிறது எனலாம்.

ஒற்றுமையில் வேற்றுமை :— குழவி முதலில் மேல் வாரியான ஒப்புமையையே காண்கின்றது. வயது ஏறிய பின் முன்கண்ட காட்சியை மறுக்கவும் வரலாம். அதன் வளர்ச்சியினைச் சரியாக விழாத புகைப் படத்திற்கும் சரியாக விழுந்த

நல்ல புகைப்படத்திற்கு உள்ள தொடர்போடு, ஒப்புமை காட்டி விளக்கலாம். முன் ஒருங்கு வைத்து அறிந்த ஒன்றினைப் பின் பிரித்துத் தனியே காட்டினால் குழவி அறிவ-தில்லை. முழுநிலை ஒருப்பாட்டு வடிவமாகவே குழவியின் முதல் உணர்வு எழுந்து உள்ளது என்பது இதனால் நன்கு விளங்குகிறது. வயது ஏற ஏற அதனிடையே பல பிரிவு-களையும் குழவி தானாகவே பகுத்து உணர்கின்றது. ஒரே பொருளைப் பல நிலைகளிலிருந்து கண்டு வரலாம். அதனால் பல வகைத் தோற்றங்கள் எழுகின்றன. நம் உணர்வோ அவ்வாறு பல வகையாக மாறுவதில்லை. ஒரே வகையான ஒருப்பாட்டு வடிவமாகவே ஒரு பொருள் ஓர் உணர்வென்று திரண்டு பொருள்பட்டு நிற்கின்றது. குழவிகளின் ஓவியத்தில் ஒரு மாறு நிலையைக் காண்கிறோம். இந்த ஒருப்பாட்டு வடிவம் வயது ஏற ஏறத் திருத்தம் பெற்று வேறுபாட்டு நுட்பங்களோடு வளர்ந்து பெருகுகிறது.

"காதின் மீதணி கற்பகத் தொத்தினா்
ஊது தேனிறகு ஊன்றி இருந்தோலும்
போது தேன்முகத் துப்புரு வக்கொடி
நோத லேகொல் நொசிந்துள வாங்களே"

(சூளாமணி.)

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்

(குறள்)

# குழவி உள்ளம்

(இரண்டாம் பாகம்)

---

## 11. இயற்கைச் செயனிலை

---

### I. சில கொள்கைகள்

தொழில் முதல்நிலை :— நாம் இயங்கிவருகின்றோம்; பல தொழில்களைச் செய்து வருகின்றோம். ஒரு தொழிலைச் செய்யும்போது முதற்காரணம் வேண்டும்; துணைக்காரணங்கள் வேண்டும். செய்வோன் வேண்டும்; அப்போதுதான் செயப்படு பொருளாம் காரியம் தோன்றும்; பயனும் விளையும். ஏதோ ஒன்றன் பொருட்டு அத்தொழில் எழுந்திருத்தல் வேண்டும். இதனைப் பொருட்டு எனலாம். இது நோக்கமாகவும் விளங்கலாம்.

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
இன்னதற் கிதுபய னாக என்று
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின் முத னிலையே.

என்பது தொல்காப்பியம். ஒரு பானையைச் செய்ய மண் வேண்டும். ஈதே முதற் காரணம். சக்கரம் வேண்டும்; தக்க இடம், தக்க காலம் முதலிய அனைத்தும் வேண்டும். இவை துணைக்காரணங்களும் நிமித்தங்களுமாம். குயவனும்

வேண்டும். இவனே செய்வோன். தொழிற்பாடும் எழுதல் வேண்டும். ஈதே வினை. அப்போது பானை ஆகிய காரியம் தோன்றுகிறது. இதுவே செயப்படுபொருள். சோறு சமைத்தல் முதலிய பயன் விளையும். எதற்காக இந்த வேலை? கூலிக்காக வேலை செய்யலாம்; பசி ஆற வேலை செய்யலாம். இதுவே பொருட்டு என்பது. இங்கு இரு வேறு நிலைகளைக் காணலாம். ஒன்று புறநிலை, மற்றொன்று அகநிலை. நம்மை ஒரு தொழில் செய்யுமாறு தூண்டுவது எது? புறநிலைத் தூண்டுதலும் உண்டு. அகநிலையாக ஊக்குகிற ஊக்கியும் உண்டு. அகநிலை ஊக்கியை நம்முடைய நோக்கம் என்றும் வழங்குவர். உயிர்ப் பொருளின் முழுநிலையும் ஒருப்பட்டு நிற்பதே ஊக்கிநிலையாம். வெளிப் பொருளோ தன் முகமாக நம்மை ஈர்க்கின்றது. மணமுள்ள சோறு நாவில் நீர் ஊற வைக்கின்றது; நம்மை உண்ணத் தூண்டுகிறது. நம்மை இவ்வாறு இயக்கிவைக்கும் இதனை இயக்கி (Incentive) எனலாம். ஆனால் பசி எடுத்தாலன்றோ உண்கின்றோம். ஆதலின், பசித்த நிலையில் எழுகிற சோற்று வேட்கையே உள்ளிருந்து நம்மை ஊக்குகிறது. ஆதலின் அதுவே ஊக்கியாம். விருப்பம் அல்லது வேட்கை எனப் பொதுவாக ஊக்கியை வழங்கி வருகிறோம். அதன் இயல்பினை அச்சொற்களும் நன்கு விளக்குகின்றன. புறச்செயலின் குறிப்பு (Intention) வேறு; இந்த ஊக்கி வேறு. கள்வன் திருடிவிட்டு ஓடும்போது காவலாளன் பிடிக்கவந்தால் தலைமீது தடியால் அடித்துக் கொன்றுவிட்டு ஓடிப் பிழைக்கின்றான். அவன் செயலின் உட்கோள் அல்லது குறிப்பு கொலையே எனலாம். ஆனால் அவனுடைய உட்கோள் அது அன்று; அவன் விரும்பியது தப்பி ஓடுதலே அன்றிக் கொல்லுதலன்று. சட்டம் (Law) அகநிலையை ஆராய்ந்து அறிய முடியாது; ஆதலின், புறச்செயலின் குறிப்போடு அமைதலே வேண்டும்; அதனையே தண்டித்தலும் வேண்டும். இவ்வளவும்

கூறியமையால் நாம் இயங்கிவரும்போது எழும் பல வேறு நிலைகளையும் வேறு பிரித்தறிவது எளிதாகும். அருஞ்சொற்களைப் பயன் படுத்துவதும் விளக்கத்திற்கு வழியேயாம். அனைத்தையும் காரணம், நோக்கம், விருப்பம், கருத்து என்றே வழங்கிவந்தால் மயக்கம் அன்றி விளக்கம் எழுவதற்கில்லை.

பல கோள்கை :— குழவியின் ஊக்கிநிலையை விளக்கப் பல கொள்கைகள் வழங்கிவருகின்றன. சில செயல்களை இயற்கைச் செயல் என்பர். இவற்றை உள்நின்று தூண்டுவதனை உட்பாடு (Impulse or the Subjective Instinct) என்பர். இயற்கைச் செயல் எழும் நிலைக்கேற்ற அமைப்பினையும் "Instinct" என்ற சொல்கொண்டு வழங்குவர்; ஆதலின் அதனை இயற்கைச் செயல் நிலை எனலாம். அந்த இயற்கைச் செயல்நிலை உடலமைப்பிலேயே பிறந்துள்ளது என்றும், உடல்நிலை வளர்ச்சிக்கு ஏற்பத் தக்க காலத்தில் மலர்ந்து விரிகின்றது என்றும் ஒரு சிலர் கருதுகின்றனர்.

இருநிலை ஊக்கிகள் :— ஒருசிலர் ஊக்கிகளை முதல் நிலை ஊக்கிகள் எனவும், உடனிலை ஊக்கிகள் எனவும் பிரிக்கின்றனர். எதனையும் அறிவதற்கு முன்னரே பசி முதலிய போல விளங்கும் இயற்கை ஊக்கிகளே முதனிலை ஊக்கிகளாம். (Primary motives) இத்தகைய பசி முதலியவற்றைத் தாய் தணித்து வரும்போது அவள் கொஞ்சி விளையாடுவதனையும் குழவி விரும்புகிறது; வேணவாக் கொள்கிறது. தாய் அருகேயே இருத்தல் வேண்டும் எனக் குழவிகள் அழுவது இதனாலேயாம். இவை போன்றவை முதனிலையோடு உடன் நின்று விளங்கியவை; ஆதலின் இவற்றினை உடனிலை அல்லது இரண்டாம் நிலை ஊக்கி (Secondary motive) எனலாம். ஊக்கியின் இயல்பு சிக்கலானதாம்; உயிர்ப்பொருளின்

அமைப்பைப்பற்றியதும் ஆகும். அந்த அந்த உயிர்ப்பொருளின் அமைப்பிற்கு ஏற்ப இவை மாறி வரும். பூனை அஞ்சி நீருக்குள் குதித்து நீந்துவதில்லை; வாத்து அஞ்சி மரத்தின்மீது ஏறுவதும் இல்லை. ஆமை அஞ்சியபோது ஓட்டிற்குள் ஒடுங்கி நிற்பதன்றி ஓடுவதில்லை; முயல் பகையினைக் கண்டால் ஓடுவதன்றி முகத்தையும் கால்களையும் உடலுக்குள் ஒடுக்கிக் கொள்வதில்லை. ஊக்கி முன்னைய அநுபவத்தையும் பொறுத்து விளங்குகிறது. பயன்படாது ஒழிந்த ஊக்கிகள் பின் இயங்குவதில்லை. பசி எடுத்தபோது அழுத குழவி தாய் தன் அருகே வருதலை உணர்கிறது. அந்த அநுபவத்தின் பயனாகத் தாயைத் தன்னருகே கொண்டுவர இது ஒருவழி என அறிகிறது; தாய் வந்தவுடன் பசியாற்றிக் கொள்ளவும் இது வழி என உணர்கிறது. இவ்வாறு அறிந்ததன் பயனாகக் குழவி தாயை அடக்கி ஆளுகிறது. இயற்கைச் செயலை இவ்வாறு விளக்கி வைப்பாரும் உண்டு.

இரு கோள்கை:- இயற்கைச் செயலைப்பற்றிய கொள்கை மிக மிகப் பழையதாகும். ஒரு சிலர் வெளித் தோன்றும் புறநிலைகளை மட்டும் வற்புறுத்தி வருகின்றனர். மறிவினை என நாம் முன்னர்க் கண்டோமன்றோ? முன்வினை பின் வினையைத் தானே எழுப்பும் முறையில் அந்த மறிவினைகள் தொடர்புபட்டு விளங்கும் நிலையே இயற்கைச் செயல்நிலை ஆம். இயற்கைச் செயல்நிலை ஒவ்வொன்றிலும் புறநிலை இயக்கங்கள் எப்போதும் ஒரேவகையாக எழுவனவாம் என்பர் அன்னோர்.

## II. மறிவினைக் கொள்கை

மறிவினை :— மறிவினைகளை மேலும் உற்று நோக்குதல் வேண்டும். மறிவினைகள் சில சிறப்பியல்புகளோடு விளங்கு-

கின்றன. ஊன்றலும் எதிர் ஊன்றலும் அங்கே சிக்கலற்றுத் தோன்றுகின்றன. மறிவினைகள் ஒரே தன்மையாக மாறு- நிலையில் இயங்கிவருதலே ஒரு புதுமை என்பர். 'ஊன்றல் ஒரு குறிப்பிட்ட வழியே மாறிவருமானால் எதிர் ஊன்றல் அவ்வழியே மாறிவரும்' என மறிவினை நிலையில் இதனாலேயே கூறுவதற்கு இடமில்லை. ஆனால், முன்னே ஒடுங்கி இருந்த உறுப்பு இயங்கத் தொடங்குமானால், எதிர் ஊன்றலும், தன் இயல்பில் மாறி நிற்கும். மறிவினை இயக்கங்கள் ஒருவனோடு உடலிற் பிறந்த அமைப்பினைப் பொறுத்தனவே அன்றிப் பிறந்த பின் அவன் கற்றுக்கொள்வன அன்றாம். அவை உயிர்ப் பொருளுக்கு மிகச் சிறந்த பயனை விளைவிப்பனவாம்; கேடு வாராது உயிர்ப் பொருளைக் காத்தும் வருவன ஆம்; புறநிலைச் சூழலுக்கு ஏற்ப உயிர்ப்பொருளை மாற்றித் திருத்திப் பொருந்த வைப்பனவுமாம். மற்றோர் ஒற்றுமையும் இவற்- றிடையே காண்கின்றோம். ஒருபுறத்தே ஊன்றல் எழும்போது மற்றொருபுறத்தே வேறோர் ஊன்றல் எழுமானால், எதிர் ஊன்றலும் மாறிவரும். பசி எடுப்பவன் உண்ணப் போகலாம். அங்கு எதிரே வேறு ஒருவன் வெட்ட வருதலைக் கண்டால் உணவை விட்டு ஓடிப் பிழைக்கவே பசித்தவனும் பார்ப்பான். 'எவ்வளவு ஆற்றல் எழுதல் வேண்டும்'? 'எத்தகைய ஆற்றல் வெளிப்பட்டு உயிர்ப்பொருளை இயக்குதல் வேண்டும்'? என்ற இத்தகைய நிலைகளைத் தூண்டுதலே வரையறுக்கலாம். ஆனால் சட்டியில் இருப்பதுதானே அகப்பையில் வரும்? உடலில் எவ்வளவு ஆற்றல் எழக்கூடுமோ அதற்கு மேலும் எழுவது எங்ஙனம் கூடும்? மறிவினைகள் இந்த வகையால் இயல்பாக உடலில் எழுவன என்றும், நம்முடன் கூடப் பிறந்தன என்றும் ஒருசிலர் கருதுகின்றனர். ஆனால், இவையும் பயிற்சியால் பண்பட்டு வருவதனை முன்னரே குறித்துவைத்- துள்ளோம்.

முடிவுநிலை நோக்கம் :— 'இத்தகைய மறிவினைகளின் தொடர்பே இயற்கைச் செயல்நிலைகளாம்' என்பது தார்ண்டைக் (Thorndike) போன்ற அறிஞர்களது கொள்கை. நடத்தையில் காணப்படும் ஒவ்வொரு செயலும் மூன்று நிலைகளாகத் தோன்றுகின்றதாம். உள்ளிருந்தோ, புறத்திருந்தோ தூண்டுகிற நிலை ஒன்று; அதன் பயனாக எழும் எதிர் ஊன்றல் இரண்டாவது நிலையாம். தூண்டலுக்கும் எதிர் ஊன்றலுக்கும் இடையே தோன்றும் இயைபு மூன்றாவது நிலையாம். இயற்கை அமைப்பாய் எழுகிற நடத்தையானது மறிவினையினும் வேறாக விளங்குவதற்கு இல்லை. மறிவினையை ஆராயும்போது நாம் கண்டதுபோல, எந்த நடத்தையினை ஆராயும்போதும் தூண்டுதலாம் ஊன்றுதலையே இன்றியமையாததாகக் காண்கிறோம். அதுவே செயலை விளைவிப்பதாகக் காண்கிறோம். ஆனால் இயற்கைச் செயல்நிலை என நாம் கூறுவனவற்றிலோ தொடங்கு நிலையாம் தூண்டுதலைவிட முடிவுநிலையே செயலை விளவிக்கின்றது எனலாம். ஈயானது உடல்மேல் உட்கார்ந்தால் அதுவே தூண்டுதலாக, அதனை ஓட்டுவது என்னும் தொழில் எதிர் ஊன்றலாக எழுகிறது. இந்தச் செயலை விளைவிப்பது அல்லது தூண்டுவது ஈயின் செயலாம். அதுவே தூண்டுதல் என்றோம். பசி எடுத்த குழவி பால் உண்பது ஓர் இயற்கைச் செயல். பசி போக்குதலை முடிவு நிலையாகக்கொண்டு எழுகிறது. இவ்வாறே ஒவ்வோர் இயற்கைச்செயலும் ஒவ்வொரு முடிவுநிலையை நோக்கி நிற்கக் காண்கிறோம். முயற்சிகள் பல வகையாக மாறி மாறி வேறுபட்டு வந்தாலும், அந்த முடிவுநிலை தோன்றுகிற வரையிலும் இயற்கைச் செயனிலை தொடர்ந்து செயற்பட்டு வருவதனையும் இங்குக் காண்கிறோம். பசியைத் தீர்க்கப் பல வேறு வகையில் முயன்று வந்தாலும் பசியால் எழும் இயற்கைச் செயல்நிலை பசி ஆறும்வரை ஓய்வதே இல்லை.

## III. மறுப்பு

ஆற்றிகளும் அலைப்புகளும் :— ஆனால், ஒரே இயற்கைச் செயல் நிலையில் இவ்வாறு வேறு வேறு செயல்கள் தோன்று-வானேன்? முடிவு நிலையை அடைந்ததும் இந்தச் செயல்கள் ஓய்வானேன்? நரம்பமைப்பில், புகுவாய் நரம்புகளும் இயங்கு-வாய் நரம்புகளும் பல பல வகையில் தொடர்புண்டு கிடப்பதால், ஒரே நிலையிலும் பலவேறு தொடர்புகளுக்கு ஏற்பப் பலவேறு செயல்களும் எழ இடம் உண்டாம். ஆனால், இவ்வாறு செயல்கள் மாறிக்கொண்டு வருமானல் இவை அனைத்தும் முடிவுநிலையை நோக்கியே வருவது ஏன்? உயிர்ப்பொருள் குறிப்பிட்டதோர் அமைப்போடு பிறக்கின்றதாம். அந்த அமைப்பில் பல நிலைகள் விளங்குகின்றன. சில நிலைகள் விரும்பி எதிர் கொள்ளப் பெறுகின்றன; வேறுசில வெறுத்துத் தள்ளப் பெறுகின்றன; அல்லது மாற்றப் பெறுகின்றன. கொள்ளப் பெறுபவை ஆறுதலை விளைப்பதால் இயற்கை ஆற்றிகள் (Original satisfiers) எனப் பெயர் பெறும். தள்ளப் பெறுபவை நம்மை அலைக்கழிப்பதால் இயற்கை அலைப்புகள் (Original annoyers) எனப் பெயர் பெறும். நம்முடன் பிறந்ததெனப் பெறும் இந்த அமைப்பின் இயல்பு-தான் என்னை? ஒரு சிலவழியே நரம்பாற்றல் ஓடுமாறு செய்து அந்த ஆற்றல்களை வெளிப்படுத்துவதோடு பின்னை தக்ககாலம் வந்ததும் நரம்பாற்றல் சென்று இயங்குதற்காக வேறு வழிகளையும் பண்படுத்திவைப்பதும் இந்த அமைப்பின் இயல்பாம். அதனலேயே ஒருவகையாக முயன்று பார்த்து முடியாமற்போனல் உடனே பண்படுத்தப் பெற்று நிற்கும் வேறொரு வகையாக முயல்கின்றோம். இவ்வாறு நரம்பாற்றல் இயங்கும் வழிகள் பண்படுத்தப் பெற்று நில்லாதபோது குன்று முட்டிய குருவிபோலத் தத்தளிக்கின்றோம். எனவே,

பண்ணமைந்து நிற்கும் நரம்பணுக்கள் இயங்கத் தொடங்குவது ஆறுதலை அளிக்கின்றது; இயங்காமல் இருப்பது அலைக்கழிப்பதாக முடிகிறது. முதலில் தொடங்கிய செயல் முடிவுநிலையை விளைவிக்காமல் அலைக்கழிப்பாக நின்றுவிட்டால், வேறு வகையான எதிர் ஊன்றல்கள் வெளிப்படுகின்றன. இவ்வாறு இயங்கிக்கொண்டே சென்று முடிவில் ஆறுதலைப் பெறலாம். சிலபோது இடையே களைப்புத் தோன்றிச் செயற்பாட்டை அடியோடு நிறுத்தி விடலாம்; அப்படி நேர்ந்தாலன்றி, முதல் எழுந்த தூண்டல் முடிவு நிலையைக்காணும் வரையிலும் பல வேறு செயல்களை எழுப்பிக் கொண்டே இருக்கும். இது ஒரு கொள்கை.

எல்லை இல்லையா :- இந்தக்கொள்கை உயிரற்ற எந்திரங்களின் இயக்கத்தை விளக்குவதுபோல இருக்கின்றதே அன்றி உயிர்ப்பொருளின் இயக்கத்தை விளங்குவதாகக் காணோம். கருதியதனை விளையாத இயக்கத்தின் பின்னே மற்றோர் இயக்கம் தானே இந்தக் கொள்கையின்படி எங்ஙனம் எழுதல் கூடும்? ஒரு சிலந்தி ஈ ஒன்றைப் பிடிக்க முயல்கின்றது. பலவாறு இயங்கி வருகின்றது. சிலந்தி அடுத்து அடுத்துச் செய்து வரும் முயற்சிகள் அவ்வப்போது ஈ தப்பித்துக் கொள்ளச் செய்துவரும் நிலைக்குத் தக்கதாம். புலனாகும் அமைப்பும், இயங்கிவரும் அமைப்பும் ஒரே அமைப்பாகப் பொருத்தமுற்று நிற்கும் என்று கண்டோம். துலாக் கோலில் ஒரு தட்டு உயர, மற்றொன்று இயற்கையாகத் தாழ்வதுபோல இவ்விரண்டும் அவ்வப்போது மாறி நிற்கும் நிலைக்கு ஏற்பப் பொருத்தமுற்றுத் திருத்தம் பெறும் என்றும் முன்னர்க் கண்டோம். அவ்வாறு கொள்ளாக்கால் அவ்வப்போது ஈ நிற்கும் பலவேறு நிலைகளும் தனித் தனியே பல வேறு ஊன்று நிலையாக விளங்குகின்றன எனக் கொள்ளவேண்டும்;

அவ்வாறு பலவேறு நிலைகளாக இருப்பதற்கு ஏற்ப நரம்புக்கிளர்ச்சி பாய்வதால் பலவேறு எதிர் ஊன்றல் நிலைகளாகிய செயல்களை எழுப்புகிற நரம்பு வழிகளும் இயற்கையிலேயே அமைந்து கிடக்கின்றன என முடிவு செய்தல் வேண்டும். அங்ஙனமானால் இந்த வழிகள் கணக்கற்றனவாக அன்றோ இருத்தல் வேண்டும். கோடிக்கணக்காக வருகிற எல்லையற்ற நிலைகளை நம்புவது இயலாதாம்.

மூடுவழியும் திறந்தவழியும் :— எனினும் தார்ண்டைக் ஒருவகையில் நோக்குமிடத்து நல்லதொரு விளக்கமே காட்டியுள்ளார் எனலாம். உடற்கூற்றியக்க நிலையைப் பொறுத்த வரையில் எதிரூன்றல்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம் என்பதாயிற்று. பசியடங்க உண்ணுகின்ற செயலுக்குப் பின் பசி நம்மை இயக்குவதில்லை. மற்றொருமுறை பசி எடுக்கும் வரை அந்த வகையில் ஆறுதல் பெற்று விடுகிறோம். அங்கே செயல் இயங்கும் வழி மூடிக்கொண்டு அடைபட்டது எனலாம். பின், பசி எடுக்கும்போது அந்தவழி மறுபடியும் திறந்து கொள்ளும். இத்தகைய முடிவுநிலை எதிரூன்றல்களை மூடுவகை எதிரூன்றல்கள் என வழங்கலாம். ஆனால், பசியாற உண்ணுவது போன்ற முடிவுநிலைச் செயல்களோ, சோற்றுக்கு உழைக்கும் முயற்சிகள் முதலியனபோல அவ்வாறு முடிவு பேறுடையனவாகத் தோன்றுவதில்லை. பசி நம்மை மேலும் மேலும் இயக்கிக்கொண்டே இருக்கிறது. அங்கே செயற்படும் வழி திறந்தே இருக்கிறது. முடிவு நிலைக்கேற்பப் பண் அமைந்து விளங்கும் செயல்களே தோன்றுகின்றன. பண்ணுறுத்தும் (தயார்செய்யும்) செயல்களைத் 'திறப்புவகை எதிரூன்றல்கள்' எனலாம். முடிவு நிலையை அடைந்தாலன்றி மேலும் செய்யவேண்டி, வழி திறந்தே இருக்கின்றது என்ற எண்ணமே தடித்து வருகிறது. திறப்பு வகை எதிரூன்றல்கள், மூடுவகை எதிருன்றல்கள்

என்ற இவற்றிடையேயுள்ள வேற்றுமையைத் தார்ண்டைக் கொள்கை ஒரு சிறிது விளக்கிவைக்கின்றது என்பதனை நாம் ஒப்புக்கொள்ளுதல் வேண்டும்.

இந்தத் தொடர் ஏன்? :—தார்ண்டைக் கொள்கையின் படி இந்த மறிவினைக் கோவையில் ஒவ்வொரு செயலும் அதற்கு முன் நிகழும் செயலோடு மட்டுமே நேரே தொடர்புண்டு கிடக்கின்றது. அவர் கொள்கைப்படி இந்தத் தொடர்புகள் தட்டித் தவறி எழுவன ஆம். அவ்வாறானல் அவை அனைத்தும் ஒரே முறையில் அமைந்து கிடப்பானேன்? தற்செயலாக எழுந் தொடர்புகள் ஒவ்வொரு முறையும் ஒரே வகையாக அமையாது பல்வகையாக அமைவது உலக இயல்பு அன்று. கோழிக்குஞ்சு நெல்லைக்கண்டு கொத்திக்கவ்வி விழுங்குகிறது. காணுதல், கொத்துதல், கவ்வுதல், விழுங்குதல் என்ற நான்கு தொழில்கள் இங்கு உள்ளன. இவை ஒவ்வொன்றும் தற்செயலாக எழுவதானல், எல்லாக் கோழிக் குஞ்சினிடத்தும் நாம் இப்போது கண்டுவருகிறபடி ஒரே வகையில் இருக்க வேண்டுவது இல்லை; பல வகையாக இயைந்து வரலாம். நெல்லை விழுங்கிக் கவ்விக் கொத்திக் காண்கிற நிலையும் எழலாம். அவ்வாறு எல்லாம் எழுவது இன்றிக் குறிப்பிட்ட ஒரே ஒரு முறையில் தொடர்புண்டு எழுவது ஏன்? இவ்வாறு தொடர்நிலை இயக்கமாக இயைந்து விளங்குவது ஏன்.?

ஒரு பாட்டு :— பசியால் அலையும் பூனை தன் பசியினை ஆற்றிக்கொள்ள முயன்று செய்கிற செயல்கள் தற்செயல்களாகத் தோன்றும் தனிச்செயல்களாக விளங்குகின்றன? பசி எடுக்கும்போது தோன்றுவன, பசி அடங்கியபோது முடிவன—இப்படி ஒருப்பட்டுத் தொடர்ந்து இயைந்து விளங்குகிற செயல்களாக அன்றோ அவை தோன்றுகின்றன. சநிபம

எனத் தொடர்பற்ற தனிச்சுவரங்கள்போல அன்றிச் சுவரங்கள் ஒன்றுபட்டு இயைந்து இயங்கிவரும் இசைப் பாட்டைப் போன்றன்றோ இந்தச் செயல்கள் இசைவு பெற்று விளங்குகின்றன. இப்படி கோவ்கா என்ற ஆசிரியர் உவமை வழியே தம் கொள்கையை வற்புறுத்துகின்றார்.

துணையா முதலா :— இயற்கைச் செயனிலையிலும் தூண்டலுக்கேற்ப எதிரூன்றல் மாறும் என்பது உண்மையே; ஆயினும் இந்த எதிரூன்றல் தூண்டலால் மட்டும் துலங்கப் பெறுவது அன்றாம். பசி எடுக்கும்போது பாற்சோற்றைக் கண்டால் பூனை நடந்து வருவதற்கும், எலியைக் கண்டால் நடந்து வருவதற்கும் வேற்றுமை உண்டு. தூண்டலுக்கு ஏற்ப எதிரூன்றல் இயற்கைச் செயனிலையிலும் மாறி வரும் என்பதற்கு இது தக்க எடுத்துக்காட்டாம். தூண்டலாலேயே எதிரூன்றல் துலங்கப் பெறும் என்றால் எப்போதும் இந்தத் தூண்டல் இந்த எதிரூன்றலை எழுப்புதல் வேண்டும்? அங்ஙனம் காணோம். பசியில்லையானால் பூனை பாற் சோற்றையும் புறக்கணிக்கிறது; எலியையும் புறக்கணிக்கிறது. இயற்கைச் செய்னிலையில் தூண்டல் இயக்கத்தினைத் தூண்டும் ஒரு நிமித்தமேயாம்; ஒரு துணையேயாம். அது இயக்கத்தினை விளைவிக்கும் அடிப்படையான காரணம் அன்றாம்.

அடக்கமும் இயக்கமும் :— மற்றொருவகையிலும் மறிவினைக்கும் இயற்கைச் செயனிலைக்கும் உள்ள வேற்றுமை தெளிவாகிறது. மறிவினை அடக்கநிலையாகும்;தானே இயங்காத நிலையாம். மறிவினையைச் செய்யும்போது நாமே செய்வதாகத் தோன்றுவதில்லை. இயற்கைச் செயனிலையோ ஐயத்திற்குச் சிறிதும் இடமின்றி உயிர்பொருளின் முழு நிலையும் இயங்கும் நிலையாம். உயிர்பொருள்களின் தேவைகளே இயக்கங்களை

ஊக்குவன ஆம். தேவைகள் நிறைவேறியதும் இந்த இயக்கங்களும் முடிவடைகின்றன. இயற்கைச் செயல் நிலையின் இயக்கம் புலப்பொறிகளோடு குறிப்பிட்டதொரு தொடர்புடையதாகும். அது நிமித்தமாகச் செயல்கள் மேலே கூறியவாறு எழுகின்றன. இவ்வாறு நிமித்தமாக அமையும் தூண்டல்கள் உயிர்ப்பொருளின் இனவகைக்கு ஏற்ப வேறுபட்டு வருகின்றன. பசி எடுக்கும் போது பூனை எலியைக்கண்டு பாய்கிறது. பசி எடுக்கும்போது குழவி அவ்வாறு பாய்வதனைக் காணோம்.

## IV. முடிவறியாது முடிவை நோக்குவது

இயற்கைச் செயலும் துணிந்து செயலும் :— ஓர் ஊரைப் போய்ச்சேரவேண்டும் என்று முடிவுசெய்து, நாமே விரும்பித் துணிந்து செய்யும் செயலைப்போல இயற்கைச் செயல் நாமே துணிந்து செய்வது ஒன்றன்று. பசி முதலியன நம்மை ஊக்குகின்றன; செயற்படுத்துகின்றன. ஆனால், செயனிலை இயங்கத் தொடங்கியபின் நாமே துணிந்து செய்யும் செயல்கள் எங்ஙனம் நாம் கருதித் துணிந்த முடிவினை நோக்கித் தயங்காது முன்சென்று கொண்டே இருக்கின்றனவோ, அங்ஙனமே இயற்கைச் செயல்களும் இயங்கத் தொடங்கியபின், தயங்காது முன்சென்று கொண்டே இருக்கின்றனவாம். நாமே துணிந்து ஒரு செயலைச் செய்து வரும்போது ஊரை அடைதல் முதலிய முடிவுகள் முன்னரே நமக்குத் தெரிந்தவையேயாம். ஆனால், இயற்கைச் செயனிலையின் முடிபினை இவ்வாறு முன்னாகவே அறிய முடியாது. பசி எடுக்கும்போது பூனைக்குப் பாற்சோறுதான் கிடைக்கும் என்றோ, எலிதான் கிடைக்கும் என்றோ முன்னாக ஏதேனும் தெரியுமா.?

பாட்டும் கூத்தும் :- இயற்கைச் செயனிலையில் இவ்வாறு, முன் சென்று இயங்குவதோ உண்டு; முடிபினை அறிதலோ

இல்லை. ஆனல், முடிவினை அறியாமலே அதனையே நோக்கி முன் செல்வது எங்ஙனம் கூடும்? நாடகத்தினைக் கண்டு களித்தவர்களும், இசையினைக் கேட்டு மகிழ்ந்தவர்களும் முடிவினை அறியாமலே முடிவினையே நோக்கிநின்று "இன்னமும் முடியவில்லை" என்று கூறிக் கதையோ, பாட்டோ முடியும் வரை காத்திருத்தலை உலகில் காண்கின்றோம். நாம் பார்க்கும் நாடகத்தின் கதையினைச் சிலபோது அறியாமலே சென்று நாம் பார்க்கின்றோம். கதையினை முன்பின் அறியோம்; ஆதலின் முடிவினையும் அறியோம். ஆனல், கதை முடியும் வரை "கதை முடியவில்லையே!" என்ற உணர்ச்சி உள்ளூறப் பாய்ந்து விளக்குகிறது. அதனலேயே வீட்டுக்குப் போகாமல் கூத்து மேடையின் எதிரே காத்திருக்கின்றோம். மேலும் கதை நடைபெற வேண்டும் என்றே நமக்குத் தோன்றுகிறது. ஆனல், 'இவ்வாறுதான் இந்தக் கதை நடைபெறவேண்டும்' என்று கூறத் தக்கபடி அதன் முடிபினை நாம் முன்னுக உணரவில்லை. கதை முடிந்ததும் "முடிந்தது" என்ற ஓர் ஆறுதல் எழுகிறது. மேலும் மேலும் முடிவினை நோக்கி எதிர்பார்த்திருந்த நிலை மறைகிறது. அவ்வாறே முன்பின் கேட்டறியாத இசைப் பாட்டினைக் கேட்டு வரும்போது, அதன் முடிபினை அறியோம். ஆனல், அது முடியும் வரை "முடியவில்லை" என்ற உணர்ச்சியோடு மேலும் மேலும் பாட்டின் ஒழுக்கை எதிர்பார்த்து நிற்கின்றோம். இவ்வாறே இயற்கைச் செயல் நிலையிலும் "முடிவு யாது" என முன்னர்த் தோன்றுமற் போனலும், முடிவினையே நோக்கிச் செயல்கள் நிகழ்தல் கூடும். பசியுணர்ச்சி வழியாக எழும் செயல்களும் இயங்க வேண்டிய வழியைக் காட்டிவருகின்றன அன்றே? உணவின் இன்றியமையாமை உடலில் ஒரு நெருக்கடியை விளைவிக்கின்றது. இயக்கமே இந்த நெருக்கடியின் பயனுக எழுகிறது; ஆதலின், இந்த நெருக்கடி தீரும் வழியாக அந்த இயக்கம் இயங்கிவரும்.

அகநிலை புறநிலை :— இந்த நிலையில் எழுகிற நடத்தைத் அகநிலை நடத்தையும், புறநிலை நடத்தையுமாக விளங்கும். அக-நிலை நடைடத்தையே உணர்ச்சியாம். புறநிலை நடத்தையே செயல்களாம். இந்த அகநிலை நடத்தை புறநிலை நடத்தையைப் பின் தொடர்ந்து அதன் நிழல்போலத் தோன்றலாம். அவ்வாறு அன்றிப் புறநிலை நடத்தைக்கு முன்னாக விளங்கி இன்றி-யமையாது எழும் தேவையை நேரே சுட்டுவதாகவும் அந்த அகநிலை நடத்தை தோன்றலாம். எனவே, இயற்கைச் செயனிலையை எழுப்பும் இந்த ஆற்றல்களைக் கொண்டே இயற்கைச் செயனிலையை வரையறுத்தல் வேண்டும். கள் குடிக்கவேண்டும் எனத் தோன்றும் தேவை பழக்கத்தால் எழுந்த செயற்கைத் தேவையாம். அவ்வாறன்றி உணவு வேட்கை போன்றவை இயற்கைத் தேவை நிலைகளாம். இத்தகையனவே இயற்கைச் செயல்நிலைகளாம்.

தேவை :— இந்த இயற்கைச் செயல் நிலையானது உயிர்ப்-பொருளின் இயற்கை நிலையைப் பொறுத்ததாம். இதனை ஊக்கும் தேவையும், தேவையை நிறைவேற்றிவைக்கும் முறையுமாக அமைந்த அமைப்பு நம்முடன் கூடப் பிறந்த-தாம். உயிர்ப்பொருளும், இயற்கைச் செயல் நிலையில், மாறா நிலையில் தேங்கிக்கிடப்பது இல்லை; இயங்கு நிலையிலேயே விளங்குகிறது. அமைதி நிலையில் அன்றி ஆகிவரு நிலையாம் ஆக்க நிலையில் விளங்குகிறது. அது நிலையாக நிற்கும் நிலை அன்று. மாறி மாறிச்செல்லும் இயக்க நிலையாம். சுற்றுப்புறச் சூழலும் உயிர்ப்பொருளின் எதிரில் அங்ஙனமே, மாறா நிலையில் இருந்தது இருந்தபடி இல்லாமல், தேவைக்கு ஏற்ற-வாறு மாறி மாறித் திருத்தமுற்றுப் பொருத்தம் பெற்று ஆகி-வருகிற ஆக்க நிலையிலியே இயங்கிக்கொண்டு போகிறதாம். தேவை முடியும் வரையிலும் முற்றுப்பாடு ஒன்றும் இன்றிக்

குன்றபாடாகவே தோன்றுகிறது. தேவை தீர்ந்ததும் முற்றுப்பாட்டு நிலை அகத்தும் தோன்றுகிறது; புறத்தும் தோன்றுகிறது. "எதிர்பார்ப்பது" என்பது பின்னர் அந்த நிலையில் அகத்தும் இல்லை; புறத்தும் இல்லை. இசையினைக் கேட்டுவரும்போதும், கூத்தினைக் கண்டுவரும் போதும், பாட்டோ, கூத்தோ முடிவுபெறுமளவும்வரை எதிர்பார்த்து நிற்கும் குன்றபாட்டு நிலையும், அவை முடிந்தவுடன் ஒரு நிறைவு நிலையும் தோன்றுகின்றன எனக் கண்டோம். இவை புற நிலையும் அகநிலையும் ஆகத் தோன்றுகின்றன என்றும் கண்டோம். அதேபோல இயற்கைச் செயனிலையாகிய இங்கும் இவ்வாறு காண்கின்றோம்.

இயக்கம் உணர்வின் தொடர்ச்சியே :— உயிர்ப்பொருள் ஊன்றலுக்கு எதிர் ஊன்றலாக முழுநிலையில் இயங்கிவருகின்றது. பசித்த பூனை எலியைப் பார்த்ததும் பாய்கிறது. உணர்வு இவ்வாறு எழுகின்றபோது இந்த உணர்வின் வழியே இயக்கம் எழுகின்றது என்பதாயிற்று. ஆகையால், அந்த் இயக்கத்தினையும் உணர்வு நிலையின் தொடர்ச்சியே என்று கூறிவிடலாம். அந்த இயக்கம் உணர்வினால் வரையறுக்கப் படுகின்றதே அன்றி நரம்பணுக்களிடையே முன்னரே அமைந்து கிடக்கும் தொடர்ப்பாட்டினால் வரையறுக்கப்படுவது இல்லை. ஈயைப் பிடிக்கும் சிலந்தியின் செயல் ஈ நிற்கும் நிலையைச் சிலந்தி உணருவதற்கேற்ப மாறி மாறி வரக்கண்டோம் அன்றோ? விரைந்து எதிரே வருகின்ற பொருளைக் கண்டதும் இமைக்கின்ற இயல்பு குழவிகளிடையேயும் காணக் கிடக்கின்றது. ஆனால், பிறந்ததும் சிலநாள் வரை விரைந்து இயங்கும் பொருள் இந்த இமைத்தலை எழுப்புவது இல்லையாம். இமைத்தலை எழுப்புவது முன்னரே அமைந்து கிடந்த நரம்பணுக்களின் தொடர்பே ஆனால், இமைத்தல் என்

எழவில்லை? பிறந்த சிலநாள்வரை, மிக விரைந்து எழும் இயக்கங்களைக் குழவி உணருவதே இல்லை. உணர்வே பின் எழும் இயக்கத்தினை வரையறுப்பது; ஆதலின், பிறந்தவுடன் இமைப்பதாம் இயக்கமும் எழுவதே இல்லை.

எந்திரமோ :— உயிர்ப்பொருள் ஓர் எந்திரம் அன்று; அது ஒரே வகையில் இயங்கும் என்பதும் இல்லை. எவ்வாறு தொடங்கினாலும் உயிர்ப்பொருளுக்கு ஏற்றவாறு இயக்கம் முடிதல் வேண்டும். ஆதலின், முன்னரே தொடர்பு பட்டுக் கிடக்கும் நரம்பமைப்பே இயக்கங்களை வரையறுக்கின்றது என நம்புவதற்கு இல்லை. கணக்குப்போடும் எந்திரத்தில் இரண்டு வேறு தொடர்புகளை மாற்றி மாட்டி விடுவோம் ஆனால், கணக்குகள் அனைத்தும் தவறிப் போகக் காண்கிறோம். ஆனால், உயிர்ப்பொருளோ அங்ஙனம் அன்று; ஒரு வகையால் முடியாததனை மற்றொருவகையால் முடித்து வெற்றி பெறுகிறது. ஈதே இங்குள்ள அறிவு விளக்கமாகும்.

## V. சில கருத்துக்கள்

இருவேறு இயல்பு :— இயற்கைச் செயல் நிலையின் இருவேறு இயல்புகளைக் குறித்தல் வேண்டும். இயக்கத்தின் இன்றியமையாமை ஒன்று. அங்ஙனம் எழுந்த தேவையைக் குடிவழியே வந்த முறையால் தீர்த்துக் கொள்வது இரண்டாவதாம். வெளியே காட்டில் வாழ்ந்த அணில் கொட்டைகளைப் பின்னர்ப் பயன் படுத்துவதற்காக மண்ணில் புதைத்து வைத்துப் பழகியுள்ளது. வீட்டிற் பழகி வளர வரும்போதும் கல் தரையில் அங்ஙனமே புதைக்க முயல்கிறது. "இது எந்திரத்தின் செய்கையன்றோ?" என்ற ஐயம் எழலாம். அணில் இவ்வாறு தவறாக இயங்க வந்ததற்குக் காரணம்

வீட்டிற்குள் இருக்கும் கல்தரையின் நிலையை உள்ளவாறு உணராமையாலேயாம். அந்த உணர்வு எழாமையால் அதற்கு ஏற்றபடி இயங்கும் இயக்கமும் எழவில்லை. எனவே, 'இயற்கைச் செயல்நிலை மாறாதது ஒன்று' எனக் கொள்வதற்கு இல்லை எனலாம். ஆதலின், மாறாது வரும் மறிவினைகளினும் வேறே ஆம். நாமாக விரும்பிச் செய்யும் செயல்கள் நாளடைவில் பழக்கத்தின் பயனாகச் செயற்கை மறிவினையாக நிலைபெற்று விடுவதுபோல, இயற்கைச் செயல்களும் பழக்கத்தில் இயற்கை மறிவினையேபோல நிலை பெற்று விடலாம்.

மறிவினையின் ஆற்றல் :— இயற்கைச் செயல் நிலை உயிர்ப்பொருளின் இன்றியமையாத தேவை காரணமாக எழுகின்றது. உலகத்தோற்றத்தை அறிந்து வருகிற கண் முதலிய புகுவாய் எல்லைகள் செயற்பாடு நிகழ்வதற்கு இன்றியமையாதனவே; எனினும், உயிர்ப் பொருளின் நடத்தையை ஊக்கி, இயக்கும் ஆற்றல்கள் அந்தப் புகுவாய் எல்லையில் இல்லை. ஆதலினாலேயே, தூண்டலைச் செயலின் நிமித்தமே அன்றி காரணம் அன்று என்று கண்டோம். மறிவினை எழும்போது இன்றியமையாத தேவை ஒன்றும் உள்ளுக்குள்ளே விளங்குவது இல்லை; உள் எழும் ஆற்றல் காரணமாக மறிவினை எழுகிறது என்பதற்கு இல்லை. ஆதலின் மறிவினையை விளைவிக்கும் ஆற்றல் புகுவாயின் எல்லைக்குள் இருந்தே வந்ததாதல் வேண்டும்.

குடிவழி எங்கே :— இயற்கைச் செயல்நிலை குடிவழியே எழுவது எங்ஙனம்? ஒவ்வோர் எதிர் ஊன்றலையும் உயிர்ப்பொருளின் பல உறுப்புக்களது தனித்தனி இயக்கங்களின் சேர்க்கை எனக் கொள்வோமானால் தனித்தனி இயக்கங்கள் எத்தனையோ வகையாகச் சேர்ந்து வரக்கூடும்? எத்தனையோ

வகையாக நிகழக்கூடிய இடத்தே குறிப்பிட்டதோர் எதிர் ஊன்றல் ஏற்படுவது என்பது (Probability) மிக மிகக் குறைவாகவே நிகழும். ஆதலின், உயிர்ப்பொருளின் 'முழுநிலை இயக்கமாகவே' எழுகிறது. அந்த எதிர் ஊன்றல், அந்த எதிரூன்றலை ஒவ்வோர் உறுப்பின் காரணமாக இவ்வளவு இவ்வளவு பங்கு எழுந்தது எனப் பங்கிட்டுப் பிரிப்பது இயலாததாம். நாம் குடிவழியாகப் பெறுவது குறிப்பிட்ட எதிரூன்றல்களும் அன்று. அவற்றின் கூட்டமும் அன்று. எதிர் ஊன்றல்களை எழுப்பத்தக்கதோர் இயல்பினையே அக நிலையாகக் குடிவழியே பெற்று வருகிறோம். இயற்கையும் மக்கட் கூட்டமும் ஆகிய புறநிலைகளோடு இயைந்து இந்த அகநிலைகள் நம்முடைய நடத்தையை வரை அறுக்கின்றன என்பது ஒரு சாரார் கொள்கை.

வெளிப்பாட்டு இயக்கங்கள் :- உள்ளே தோன்றும் மனநிலையை வெளிக்குக் காட்டும் சில இயக்கங்கள் உள்ளன. அச்சம் முதலியவற்றை வெளிப்படுத்துகிற நடுக்கம் முதலியவற்றை, இது காரணமாக, வெளிப்பாட்டு இயக்கங்கள் (Expressive acts) எனலாம். மனிதன் தானாக ஒன்றைத் தெரிவிக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு இத்தகைய இயக்கங்களை எழுப்புவதில்லை. உணர்ச்சிக்கும் இந்த வெளிப்பாட்டு இயக்கங்களுக்கும் உள்ள தொடர்பு என்ன? பசி எடுத்ததும், பூனையைக் கூட்டில் அடைத்து அந்தக் கூட்டிலிருந்து "எவ்வாறு அது தப்பி வெளிவருகிறது.? எவ்வளவு நேரத்தில் தப்பிவருகிறது?" என்றெல்லாம் தார்ண்டைக் ஆராய்ந்தாராம். கூட்டிற் புகுந்ததும் உள்ளக்கிளர்ச்சி பொங்குகிறது. இது எவ்வாறு நமக்குத் தெரியவருகிறது ? பூனையின் அலைச்சலால் தெரிகிறது. இந்த அலைச்சலைப் பலவாறு நிகழும் செயல்களிலும் காணலாம். இவற்றிலிருந்து உணர்ச்சி பொங்குகின்ற

நிலையை அறியலாம் எனக் கண்டார். ஒரு நிலையிலே பல வகை எதிர் ஊன்றல்களும் எழும் என்ற தம் கொள்கைக்கு ஏற்பப் பலவாறு, பூனை இயங்கி வருவதனையே உள்ளக் கிளர்ச்சி எனத் தார்ண்டைக் கூறுகின்றார்.

## VI. ஒருப்பாட்டு வடிவம்

அகங்கையும் புறங்கையும் :— கோலர் (Kohler) என்பாரும், கோவ்கா (Koffka) என்பாரும் இதனைப் பொருத்தமற்ற கொள்கை என்று கூறி வேறு வகையாக விளக்கிவைக்கின்றனர். கூட்டிற்குள் பூனை அகப்பட்டதும் அந்தப் புதுநிலைக்குத் தக்க எதிரூன்றலாக அதன் உள்ளம் கிளர்ச்சியுறுகிறது; புதுமை காரணமாக அலையவும் செய்கின்றது. இந்த உள்ளக்கிளர்ச்சி ஒரு முகப்படாது குழம்பிக் கிடக்கின்றது; என்றாலும் அக்கிளர்ச்சி இயங்கும் ஆற்றல் படைத்ததேயாம். இதனாலேயே பூனை இயங்குகின்றது. இவ்வாறு தன் புதுநிலையைப் புகுவாய் அமைப்பில் எழுகின்ற தூண்டுதல் வழியே உணர்ந்ததும் அந்த உணர்விற்கு ஏற்ப எதிரூன்றல்கள் எழுகின்றன. எதிரூன்றல்களாம் செயல்களும் அந்த உள்ளக் கிளர்ச்சியே போலக் குழம்பித் தோன்றுகின்றன; இருந்தாலும் இயங்கும் ஆற்றல் நிறைந்து செயற்பட்டுவரக் காண்கிறோம். இயக்கங்கள் திடீரென மிக்கு விளங்கிப் பின் படிப்படியாகக் குறைந்து இயக்குவதே இயல்பாம். இந்தப் புறநிலையையே நாம் காண்கின்றோம். அகநிலையும் அங்ஙனமேயாம் என உய்த்துணர்கின்றோம். திடீரென எழுதல், படிப்படியாகக் குறைதல் என்ற சொற்றொடர்கள் அகநிலை புறநிலை என்ற இரண்டிடத்திலும் ஒரே பொருள் உடையன. ஓர் உயிர்ப் பொருளின் புற இயக்கத்தினைக் கண்டுவருபவனிடத்தே அந்த இயக்கம் முழுநிலையாகப் பதிந்து தோன்றுவது கண்டு

அவ்வுயிர்ப் பொருளின் மனநிலையினையும் அறிந்து அதற்கு ஏற்ப அவன் இயங்கிவருகின்றான். ஆதலின் அகங்கைக்கும் புறங்கைக்கும் உள்ளதுபோல புற இயக்கத்திற்கும் அக இயக்கத்திற்கும் அடிப்படையான தொடர்பு இருத்தல் வேண்டும்.

ஓதலும் கேட்டலும் ஒன்றுதல் எங்ஙனம் :- ஒவ்வொரு நடத்தையின் சிறப்பியல்பான கோலமும் ஓர் ஒற்றுமை நிலையாக விளங்குகிறது; ஓர் அமைப்பு முறையாகத் தோன்றுகிறது; ஓர் தொடர்ப்பாட்டோடு நிலவுகிறது. அவ்வாறு நடந்து வரும்போது உயிர்ப்பொருளினது 'நடுநிலை நரம்பமைப்பின்' இயக்கத்தினிடையே ஓர் ஒற்றுமை தோன்றுகிறது; இந்த ஒற்றுமை வழியாக நடத்தை அமைப்பின் அமைதியும் வெளித்தோன்றுகிறதாம். நடுநிலை நரம்பமைப்பின் இயக்கத்திலே தோன்றும் இந்த ஒற்றுமைத் தொடர்பாகிய ஒருப்பாட்டமைதி எப்படி எழுந்தது? முன்னரே ஒருப்பாட்டமைதிக் கோலங்கொண்ட அனுபவத்தின் பயனாக இந்தச் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப எழுந்ததாதல் வேண்டும். அலைகின்ற பூனையின் புறச்செயலைக் காண்கின்றோம். பசிக்கு அலைகின்றதென அதன் அகநிலையை உய்த்து உணர்கின்றோம். பசிக்கு அலைதல் போன்ற குறிப்பிட்டதொரு நடத்தைக் கோலம் கொண்டு விளங்கும் உயிர்ப் பொருளாகிய பூனையின் அனுபவமும், நம்முடைய அனுபவமும் இவ்வாறு கூறத்தக்க நிலையில் ஒத்தன ஆதல் வேண்டும். இல்லையேல் இவ்வாறு புறநிலைச் செயலைக்கண்டு அகநிலையை உய்த்து அறிவது இயலாதாம். வீணையில் வல்ல இசைப் புலவன் உணர்ச்சி ததும்பி நிற்கின்றான். இந்த உணர்ச்சியின் ஒருப்பாட்டமைதி அந்த வடிவிலேயே மாறி மாறிவரும் தாளச்சீருக்கு ஏற்ப அவன் தசைகளை இயக்குகின்றது. அவன் இயக்கும் வீணையும்

ஒலிக்கின்றது. அவனுடைய தசை இயக்கங்களின் ஒருப்பாட்டு அமைதியை வீணையில் இருந்து எழும் ஒலியிற் காணலாம். அந்த ஒலியும் அந்த ஒருப்பாட்டமைதியாம் வடிவோடேயே கேட்போன் செவியிற் புகுகிறது. அதே ஒருப்பாட்டு அமைதியாகவே கேட்போனும் உணர்கின்றான். கேட்போன் செவிப்புல ஒருப்பாட்டு அமைதியும் வீணையை மீட்டினனது தசை இயக்கத்தின் ஒருப்பாட்டமைதியும் இவ்வாறு ஒன்றுதல் காண்க. இங்ஙனமே பூனையின் உள்ளக் கிளர்ச்சியாம் ஒருப்பாட்டமைதியும் நம் கட்புலனுகும் அதன் புறச்செயலின் ஒருப்பாட்டமைதியும் ஒத்து நிகழும் என்பர். ஆகவே, ஒவ்வோர் இயக்கமும் இவ்வாறு உள்ளத்தின் நிலையை வெளிப்படுத்தி நிற்கக் காண்கிறோம். முகம் சுளிக்கும் குழந்தை கைப்பினையும் புளிப்பினையும் வெறுக்கும் நிலையை அங்ஙனம் வெளியிடுகின்றது எனலாம்.

குழவியும் முதியரும் :— முதலில் குழம்பிக் கிடக்கின்ற மனம், பலவேறு வகையில் இயங்கக் கூடியதாக நிற்கின்றதாம். ‘ஒரு நிலையிலே பலவகை இயக்கங்களும் எழுதல் கூடும்’, என்ற தார்ண்டைக் கொள்கைக்கு இது துணை செய்வதாகக் கொள்ளலாம். இளகி வளைந்து பலவகையாக உருப்பெற்று வரும் மன அமைப்பிற்கும், அவ்வாறு இளகி மாறாது ஒரு படித்தாகவே நிற்கும் மன அமைப்பிற்கும் உள்ள வேற்றுமையே குழவியின் மனநிலைக்கும் முதியவரின் மன நிலைக்கும் உள்ள வேற்றுமையாம். இந்த வேற்றுமையைத் தார்ண்டைக் இவ்வாறு காண்கின்றார் இல்லை. நரம்பணுக்களின் தொடர்பில், தனித் தொடர்பிற்கும் சிக்கலான தொடர்பிற்கும் உள்ள வேற்றுமையாகவே குழவி மனநிலைக்கும் முதியவர் மன நிலைக்கும் உள்ள வேற்றுமையை அவர் கருதுகிறார். அவர் கொள்கைப்படி இயக்கங்கள் அனைத்தும் நரம்பணுக்களின்

தொடர்பாகவே விளங்குதலின் நரம்பாற்றல் பாயும் வழியிலேயே அவர் தம்முடைய நாட்டத்தைச் செலுத்துகிறார்; அந்த வழிக்கேற்ப விளக்கந் தருகின்றார்.

கண்ணும் கண்ணாடியும் :— குறிப்பிட்ட நடத்தையை எழுப்ப 'எத்தகைய வடிவத்தில் தூண்டல் எழுதல்வேண்டும்? எத்தகைய நிலையில் தூண்டல் இயங்கவேண்டும்?' என்பதன்றோ, நரம்பின் வழியை ஆராய்வதனை விடச் சிறந்ததோர் ஆராய்ச்சியாகும்? ஓர் உயிர்ப்பொருளின் அனுபவத்தைப் புற உலகம் மட்டும் வரையறுக்க முடியாது. அந்த உயிர்ப் பொருளின் இயற்கை அமைப்பும் அதனை வரை அறுக்கின்றது. வெள்ளைக் கண்ணாடியைக் கண்ணில் அணிந்து உலகநிறங்களைக் காண்போமானால் நாம் பார்க்கும் நிறங்களைப் புற உலகமே வரையறுக்கின்றது என்று கூறலாம். ஆனால் நீலக் கண்ணாடி முதலியவற்றை அணிந்து நோக்கும்போது புற உலகம் மட்டும் நாம் காணும் நிறங்களை வரையறப்பதில்லை. நாம் அணிந்துள்ள கண்ணாடியும் வரையறுக்கின்றது. அதுபோல நம் மனமும் நிறமுள்ளதொரு கண்ணாடியாம். ஆதலின், அது காணுகிற தோற்றம் அதன் இயல்பிற்கும் புறநிலைக்கும் பொருந்தியதாகவே எழும். ஒரு குழவி பிறந்ததும் அது உலகினை அனுபவிக்கும் நிலை முதியவரான நாம் அனுபவிக்கும் நிலையினும் வேறேயாம். இசையையே அறியாதவன் இசைப் பாட்டினை முதல் முறை கேட்கும்போது அனுபவிக்கும் அனுபவம், இசைப்புலவன் அப்பாட்டினை அனுபவிக்கும் அனுபவத்தினும் வேறாகவே விளங்கும். அது போலவே, குழவியின் உலக அனுபவமும் முதியோரின் உலக அனுபவமும் வேறுபடுகின்றன. முதியோர் காணும் உலகத்தோற்றம் அவர்கள் புறநிலை நடத்தையோடு பொருத்தமுற்று விளங்குவதுபோலக் குழவி காணும் உலகத்தோற்றம் அதன் புறநிலை

நடத்தையோடு பொருத்தம் உற்று விளங்கும். இவ்வாறு குழவியின் நனவு நிலையும் நடத்தையும் பொருத்தமுற்றன்றோ விளங்கும்? ஒரு பொருளை உணரும்போது அதன்வழியே எழுகிற இயக்கமும் அந்த உணர்வு நிலையின் தொடர்ச்சியே என முன்னர்க் கண்டோம்.

உணர்வும் நடத்தைம் :— குழவி இளைப்பாறி நின்றால் இயங்குகிறது; களைத்தால் வாளாகிடக்கின்றது. உணவு வேண்டுமானால் தாய் எடுத்துப் பால் ஊட்டும்வரை அழுகிறது; வயிறு நிறைந்ததும் பால் குடிப்பதில்லை. அக் குழவியின் நடத்தை இவ்வாறு ஒரு சில வகையில்தான் வேறு பட்டுக்-கிடக்கின்றது. மற்றைப்படி அதன் நடத்தை ஒரு படித்தாகவே விளங்கக் காண்கிறோம். நாமும் அக்குழவி நிலையில் இருந்தால் நம் நடத்தையும் அப்படித்தான் இருக்கும். குழந்தையின் உணர்வுநிலை எவ்வாறு அமைகிறதோ அதற்கு ஏற்ப அதன் நடத்தையும் அமைகிறது.

ஒருப்பாட்டு வடிவம் :— குழந்தை அமைதியாகக் கிடக்-கின்றது. புறநிலைத் தூண்டல் அதன் புலப் பொறிகளின் மேல் தாக்கும்போது அதன் அமைதி குலைகிறது. அதனிடையே விளங்கிய சமநிலை பிறழ்கிறது. புறநிலையை ஒரே வகையாகக்-கண்டு வாளாகிடந்த குழவி அந்தப் புறநிலையின் இடையே ஏதேனும் பளபளப்பாக ஒரு பொருள் இயங்கிப் புலப்படத் தோன்றும்போது, வாளாகிடந்த முன்னைய நிலை பிறழ, இயங்கத் தொடங்கி அந்தப் பொருளைக் காண்கிறது. வரை-யறையின்றிக் குழம்பி மங்கலாய் ஒரே வகையாகக் கிடந்த பழைய அடிப்படைத் தோற்றத்தினிடையே தெள்ளத் தெளிய வரையறையுற்று விளங்கிவருகிற பளபளப்பே தோற்றமா-கிறது. இந்தப் பண்பு தோன்றும்போது, விருப்போ

வெறுப்போ இன்றிக் கிடக்கும் நடுநிலை அல்லது நொதுமல் நிலையாகவே கிடந்த அடிப்படை ஏறக்குறைய ஒருபடித்தாகவே தோன்றுகிறது எனலாம். நடத்தையில் இருந்தும் அனுபவத்தின் தோற்றத்தை உய்த்து உணரவேண்டுமானல், வேறுபாடு புலனுகாதவாறு வாளா கிடக்கும் நடத்தைக்கு ஏற்றதாகவே அந்த நிலையில் எழுகிற உலகத்தோற்றமும் வேறுபாடு இன்றி மழுங்கி விளங்குதல் வேண்டும். இவ்வாறு குழம்பிக்கிடக்கும் அடிப்படையினிடையே முதல் முதல் எழுகின்ற தோற்றம் அக்குழப்பத்தின் எதிர்ஒளியாக விளக்கம் பெற்று எழும்; குழப்பமே எல்லையாக அமைய அத்தோற்றம் ஓர் உருப்பெற்றுவரும். இப்படித்தான் ஒவ்வோர் உணர்வும் தெளிவு பெற்றுத் தெளிவு பெற்று ஒருப்பாட்டு வடிவமாக அமையும். அத்தோற்றம் நனவிடை விளங்கும் போதும் குறிப்பிட்டதொரு வடிவமும் அவ்வடிவம் எழுகிற அடிப்படையுமாகப் பிரிந்து விளங்கும். இவ்வாறு பிரிந்த பிரிவுகள் அடிப்படையில் ஒன்றே ஆதலின், ஒவ்வொன்றும் தனித் தனியே மற்றையவற்றைத் தாங்கித் தன்னுள் அடக்கிக் கொண்டு நிற்கும் எனலாம். ஒவ்வொன்றும் மற்றையவற்றின் இயல்பாலும் தொடர்பாலுமே சிறப்புநிலை பெற்று விளங்கும் எனலாம். விளக்கத்தின் எல்லையோ மழுங்கிய நிலையே எனக் கண்டோம். இவ்வாறு மங்கலும் விளக்கமுமாக ஒன்றற்கு ஒன்று எல்லையாக உடனிகழும் தோற்றமே ஒருப்பாட்டு வடிவம் எனப் பெறும். படத்திலும் இப்படித்தானே காண்கிறோம். ஒருப்பாட்டு வடிவம் ஒரு படம் போன்றது எனலாம்.

முதலுணர்வும் சிக்கலே :- இவ்வாறுதான் குழவியினிடம் உணர்வு எழுகின்றது எனல் வேண்டும். வேறு வகையாகக் குழவி ஒன்றனை உணருவதற்கு வழி இல்லை. அதனிடத்தே அகநிலையிலிருந்து அதனை ஊக்குவதற்குத் தூண்டுதலாக

அமையக் கூடியது யாது? குழவியின் உள்ளம் முறையற்றுக் கிடக்கும் நிலையிலிருந்து பலநிலைகளாக வேறு வேறு பிரிந்து வருவதால் முறைபெற்றுவருகிறதுஎன்று கொள்ளலாம். அவ்வாறு கொண்டால் முதலெழும் தூண்டல்கள் சிக்கலற்றவையாய்த் தனிநிலையாக விளங்கிய பின்னர், இந்தத் தனி நிலைகள் தொடர்புற்றுச் சிக்கலாகி இயங்கிவருகின்றன எனல்வேண்டும். ஆனால், 'முதல் எழும் தூண்டல் அவ்வாறு சிக்கலற்று விளங்குகிறதா' என்பதே கேள்வி. முதல் முதல் குழவியின் மனத்தினைக் கவர்வது மக்களின் குரலேயாம். ஒரு குழவி அழுமானால் மற்றொரு குழவியும் அழுகிறது. மக்கட்குரலைப் பிற ஒலியினின்றும் பிரித்தறிவது பெருஞ்சிக்கலே ஆம்; தனி நிலையாக உணரக்கூடியது அன்றாம். தமக்கு நண்பரையும், நண்பல்லாதாரையும் பிரித்து அறிவது சிக்கலானதன்றோ? முதலில் தோன்றும் தோற்றம் உணர்வு நிலையும் உணர்ச்சி நிலையுமாக வெவ்வேறு பிரிந்து தோன்றுவதில்லை. காண்பானும் காணப்படு பொருளுமாய் நிற்கும் வேறுபாட்டினைக் குழவி முதலில் கற்றுக்கொள்ளுகிறதே அன்றி இயல்பாக அறிவதில்லை. எனினும், முதலில் தோற்றம் எழும்போதே இந்த வேறுபாட்டின் வேர் ஓடுகிறது என்றே சொல்ல வேண்டும். குழந்தை களைத்து நிற்கும்போது அதன் நனவுநிலை தொடர்பற்றுச் சிதறுண்டதோர் ஒருப்பாட்டு வடிவமாகவே தோன்றுகிறது. ஆனால், சிதறுண்டவற்றைச் சிறப்புநிலையுற்றன என்று சொல்லுவதற்கு இல்லை. அவை ஒரே வகையாகப் பொதுநிலையில் மழுங்கித் தோன்றுவனவேயாம். இந்த அனுபவத்தை உணர்ந்தபின் குழந்தையின் உள்ளம் ஒற்றுமையின்றிப் பலதிறப்பட்டு விளங்குகிறதென்று எவ்வாறு கூற முடியும்? ஆதலின், குழவியின் உலகமும் தொடக்கத்திலிருந்தே ஒன்றுபட்டு விளங்குகிற உண்மையை உணர்தல் வேண்டும்.

## VII. மாறுதலும் மறைதலும்

இயற்கைச்செயல் மாறுதல் :— குழந்தை பிறந்ததும் பல பல தூண்டல்கள் குழவியின் கருத்தை இயற்கையாகவே கவர்கின்றன. இன்றியமையாத தேவைகளை நோக்கினல் மக்களது இயற்கைச் செயல்நிலைகள் எண்ணற்றனவாய் விரியும். ஒரு படித்தாக நிகழும் செயல்களை எண்ணிப் பார்த்-தாலோ அவை எண்ணிக்கையில் குறைந்து வரக் காண்போம். இன்றியமையாத தேவையைத் தீர்த்துக்கொள்ளும் வழிகள் அனுபவத்தின் பயனுக மாறிவருகின்றன. எல்லாப் புழுக்-களையும் ஒன்று போலக் கொத்தி வந்த கோழிக்குஞ்சு மஞ்சட் கோடு உள்ளதாய்க் கைப்பதனை அனுபவத்தில் அறிந்தபின் அத்தகைய புழுவைமட்டும் கொத்தாமல் விட்டுவிடுகிறது.

பருவத்தே பயிர்சேய் :— இந்த இயற்கைச் செயல்கள் தோன்றி நாளடைவில் மெல்ல மறையவும் காண்கின்றோம். பல செயல்கள் முதலில் தோன்றியவை ‘பற்றுமறியே’ போல பின்னே மறையக் கண்டோம். இந்த இயற்கைச் செயல்நிலைகள் எழுந்து விளங்குவதற்கேற்ப அவ்வக்காலத்தில் அததற்குத் தகுந்த பயற்சி தருவதே கல்வியின் நோக்கம் என்பர் கிர்க்-பாட்ரிக் (Kirkpatrick) என்ற ஆசிரியர். இயற்கைச் செயல்-களை, உண்ணல், அஞ்சி ஓடுதல், போராடல் போன்ற தற்-காப்புச் செயல்கள் (Self preservative Instincts) என்றும், கூடுகட்டுதல் போன்ற இனவளர்ச்சி இயற்கைச் செயல்கள் (Race Instincts) என்றும், கூடிவாழ்தல் போன்ற கூட்டுறவு இயற்கைச் செயல்கள் (Social Instincts) என்றும், உலகத்-தோடு ஒட்ட ஒழுகல்போன்ற இணக்க இயற்கைச் செயல்கள் என்றும் (Adaptive Instincts), சட்டப்படி நடத்தல் முதலிய ஒழுங்குமுறை இயற்கைச் செயல்கள் (Regulative

Instincts) என்றும், பொருள்களைச் சேர்த்து வைத்தல் படைத்தல், வெளியிடல், புணைந்து கொள்ளுதல் முதலிய போன்ற பிறவகை இயற்கைச் செயல்கள் (Unclassified Instincts) என்றும் ஆறு பிரிவாக வைத்து அவர் ஆராய்கின்றார்.

## VIII. மக்டுகல் கொள்கை

இயற்கைச் செயல்நிலை :— இயற்கைச் செயல் நிலையை இந்த நூற்றாண்டில் பரக்க ஆராய்ந்து மன்றுடுபவர் மக்டுகல் (Macdougal) என்பாரேயாம். இயற்கைச் செயல் நிலையில், உடல் நிலையிலே தோன்றும் குறைபாடே தேவையாக முற்றுகிறது. அந்தத் தேவையைத் தீர்த்துக் கொள்ள எழும் வேட்கையே விடாயாம். பசி எடுக்கும்போது சோற்றின்மேல் விடாய் (Appetite) அல்லது வேட்கை எழுகிறது. அகநிலையாக உயிர்ப்பொருளை ஊக்குகின்ற 'ஊக்கி' யும் அங்கு உண்டு எனக் கண்டோம். ஈதே உள்ளக்குறிப்பாம். இந்த 'ஊக்கி' இயங்கத் தொடங்கினால் பின் உயிர்ப்பொருள் வாளா இருக்க முடிவதில்லை. இந்த நிலையே உள்துடிப்பு அல்லது விதுப்புறவு (Impulse) எனலாம். ஆனால், குறித்த ஒரு பொருளைக் கண்டால் தான் இயற்கைச் செயல்நிலை கிளர்ந்து எழுகின்றது. கல்லைக் கண்டபோது பசி என்ற இயற்கைச் செயல்நிலை இயங்குவதில்லை. கல்லை உண்பார் யார்? சோற்றைக் கண்டபோது உண்ணப்போகின்றோம். இயற்கைச் செயல்நிலை ஒரு பூட்டுப்போன்றதாம். அதற்கு ஏற்ற திறவுகோல் வந்தால் மட்டுமே பூட்டானது திறக்கும். பசி எடுத்தபோது விளங்கவரும் உண்ணுதில் தொழிலாம் பூட்டைத் திறந்து வைக்கும் திறவுகோல் சோற்றைக்காண்பதேயாம். ஒருபொருளைக்கண்டு உணரும் உணர்வுத்துறையே இவ்வாறு திறவுகோலாக

அமைகிறது. இயற்கைச் செயல் நிலை இயங்கும்போது அலை புரண்டோடும் ஆற்றலை அந்த அந்த நிலைக்கு எற்ற உறுப்புக்களில் மடைகட்டிப் பாய்ச்சி உடலை இயக்குவது இயக்கத்துறையே ஆம். இந்த ஆற்றல் உள்ளத்தாற்றலும், உடலினாற்றலுமாக விளங்கும். ஒடுங்கிக்கிடந்த அடங்குநிலை ஆற்றல் (Potential energy) காட்சிப்பொருளைக் கண்டதும் வெளிப்பட்டு விளங்கித் தோன்றுகிற இயங்கும் ஆற்றலாக (Kinetic Energy) மாறுகிறது. இயற்கைச் செயலின் முடிவுநிலையிலேயே முழுநோக்காக இருந்து வருகிறோம். அக்கரையோடு (Interest) 'உன்னிப்பாக' (Attention) இருக்கின்ற இயல்பும் அங்கு எழுகின்றது. 'கருமமே கண்ணாயினர்' என்றான்றே குமரகுருபரரும். ஆற்றல் பொங்கி வழியும்போது பொதுவாக எழும் மன மழுச்சியும் உடற்கிளர்ச்சியும் மெய்ப்பாடு எனப்படும்.

உடல்நிலையும் மனநிலையும் :— இயற்கைச் செயல்நிலை ஒரு மனநிலையாகும்; ஓர் உடல் நிலையும் ஆகும். ஒவ்வொரு மனநிலையும் ஒன்றை அறியும் அறிவுநிலையும், விருப்பும் வெறுப்புமாம் உணர்ச்சி நிலையும், ஒன்றைச் செய்யப் பதைபதைக்கும் இயற்றி நிலையுமாக மூன்று வேறு இயல்புகளோடு விளங்குவது போல, இயற்கைச் செயல்நிலையும் மூன்று வேறு நிலைகளாக விளங்குகிறது. இங்கே பூட்டு என நாம் மேலே கூறிய உணர்வுத் துறையே அறிவு நிலையாம்; உள்துடிப்பே இயற்றி நிலையாம். நாம் செய்யும் செய்கைகளின் குறிப்பு, செய்கைக் குறிப்பும் (Intention), உள்ளக் குறிப்பும் (Motive) என இருவகையாம். மேலே கூறிய 'புறச்செயற் குறிப்பும்' 'ஊக்கியும்' இவையேயாம். கள்வன் ஓடும்பொழுது காவலர்கள் பிடித்துக் கொண்டால் சிறைக்கஞ்சிக் காவலர்களில் ஒருவனது மண்டையைக் கள்வன் உடைத்து விடு-

கின்ருன். அவன் அடித்த அடியின் செய்கைக்குறிப்போ மண்டையை உடைத்தலேயாம். உள்ளக்குறிப்போ அச்சமாம். எனவே, அச்சம் அழுகை முதலிய உணர்ச்சிகளே உள்ளக் குறிப்பாக வரக்காண்கிருேம். அச்சம் எழுந்தபின் அஞ்சி ஓடுதலும் நிகழ்கின்றது. ஆதலின், அச்சத்தையே இயற்கைச் செயல்நிலை எனக்கூறுவோரும் உள்ளனர். ஆனல், அச்சம் முதலியவை இயற்கைச் செயல்நிலையில் தோன்றும் உணர்ச்சி-களே; 'உட்பாடுகளே' (Impulse) ஆம்.

எடுத்துக் காட்டு:- அஞ்சி ஓடுதல் என்பதனை ஓர் எடுத்துக்-காட்டுவழியாக விளக்கி இங்குக்கூறிய பலவேறு நிலைகளையும் சுட்டலாம். (1) கரடியின் காட்சி புலனுகின்றது (Sensation). அதன் முகமாகத்திரும்பி அதனைக் காட்சிப் பொருளாகக் (Object) கண்டு உணர்கிருேம் (Perception). ஈதே ஊன்றலாம் (Stimulus). (2) பின்னர் எழுவதே கேடுநிலை உணர்தலாம் (Perception of danger). (3) முன்னுகவே இயைபுண்டு அமைந்து கிடக்கும் நரம்புகள் நாம் ஓடிப் பிழைக்கும் வகையில் பொருத்தம் உறுகின்றன. உள்-துடிப்பாம் நரம்புப் பொருத்தம் ஈதேயாம். (4) பின்னர் ஓடு-கிருேம். ஈதே எதிர் ஊன்றலாம் (Reacton). (5) இந்த எதிர் ஊன்றல் இதுபோதே நிகழாமற்போனல் பண்ணுறுத்தும் எதிரூன்றல்கள் நிகழ்கின்றன. உடல்நிலை மாறுதல்களும் வெளிப்பாட்டு இயக்கங்களும் எழுகின்றன. அவற்றை நாமும் புலனுறுகின்ருேம். (6) அவற்றை உள்ளக் குறிப்போடு ஒன்று படுத்தி ஒற்றுமைக் காட்சியாக உணர்தலே மெய்ப்-பாடாம் (Emotion). (7) பின்னர், அவற்ருல் ஊக்கம் பெற்று ஓடுகின்ருேம். ஈதே முடிவான எதிரூன்றலாம். (8) கரடியின் நின்றும் தப்பிப் பிழைத்ததால் நிலைமுழுதும் மாறி விடுகிறது. கரடி ஊன்று பொருளாக எதிரே இல்லை. முன்னே எழுந்த

இயக்கத்தொடர் இவ்வாறு முடிவடைகின்றது. ஓர் ஆறுதலும் அமைதியும் உண்டாகின்றன.

## IX. மக்டூகலது பாகுபாடு

மக்டூகல் :- மக்டூகல் என்ற ஆசிரியர் இயற்கைச் செயல்நிலைகளைச் சில பலவாக ஆராய்ந்து, அவை மக்களது தனிவாழ்க்கைக்கும் கூட்டுறவு வாழ்க்கைக்கும் இன்றியமையாத சிறப்பின என்று விளக்கிவைக்கின்றார்.

(1) பேணுதல் :— பேணுதல் என்பதே தலைசிறந்த இயற்கைச் செயல் நிலையாம். அது குழவியைப் பாலூட்டிச் சீராட்டிப் பாராட்டி வருவதேயாம். இங்குத் தோன்றும் மெய்ப்பாடு தாய்மையாம். கட்டி அணைத்து முத்தமிட்டு உச்சிமோந்து பால் சுரந்து நிற்கும் தாய்மையினை அறியாதார் யார்? இதனை வாற்சலியம் என வடமொழியாளர் வழங்குவர். தாய்மையும் மகன்மையும் ஒன்றற்கொன்று இயைபுடையனவாக விளங்குகின்றன. சண்டையிடும் ஆண்மானிடத்தில் தோன்றிய கொம்புகள் பின்னர்த் தற்காப்பாம் பயனை நோக்கிப் பெண்மானிடத்தும் பரவியது போலத் தாயிடை எழுந்த பேணுதல் என்னும் இந்த இயற்கைச் செயல்நிலை இனத்தை வளர்க்கும் பயனை நோக்கித் தந்தையிடத்தும் பரவியதாலேயே குடும்பம் என்பது தோன்றுகிறது.

(2) போரிடல் :— மகவுக்கு ஏதேனும் கெடுதி செய்வாரோடு பெற்றோர் வெகுண்டு போரிடுகின்றனர். போரிடுவதே இரண்டாவது இயற்கைச் செயல்நிலையாம். சில விலங்குகளுக்கு இதற்கெனவே கொம்பும் கூரிய பல்லும் நகமும் இயற்கையில் அமைந்து கிடக்கின்றன. ஆற்றலை உயிர்ப்

பொருளின் திறத்தை விளக்குகின்றது. இந்த ஆற்றல் பொலிவுறுவது வெகுளி பொங்கிவழியும் நிலையில்தான். வெகுளியே இந்த இயற்கைச் செயல் நிலையில் தோன்றும் மெய்ப்பாடாம்.

(3) விடுப்பு (Curiosity) :— மூன்ருவதாக விடுப்பு என்கின்ற இயற்கைச் செயல் நிலையையும் அதற்கு ஏற்ற மருட்கை என்ற மெய்ப்பாட்டையும காண்கின்ரும். குழவி "அஃது என்ன? இஃது என்ன?" எனத் தொடர்ந்து கேட்டு வருவது இந்த இயற்கைச் செயல் நிலையாலேயாம். மற்றைய செயல் நிலைகள் எழுவதற்குமுன் எல்லாம் இந்தச் செயல் நிலையும் சிறிதளவு தோன்றும் எனலாம்.

(4) அருவருப்பு:- நேர்வாளம், பிணம், முதலியவற்றைக் கண்டால் அருவருப்பு எழுகிறது. இதற்கு ஏற்ற மெய்ப்பாடு வெறுப்பு என்பதேயாம். அச்சம் எழுமாஞல் அச்சப் பொருளேக்கண்டு ஓடி விடுகின்ரும். அருவருப்பு நிகழும் போதோ வெறுக்கும் பொருளே அப்புறப் படுத்த முயல்கின்ரும். ஈதே இந்த இரண்டற்கும் உள்ள வேற்றுமையாம்.

(5) ஓட்டம் பிடித்தல்:— வெகுண்டு போராட முடியாத போது அஞ்சி ஓட்டம் பிடிப்பதே உலக இயல்பு. இது உயிரின் தற்காப்பிற்கு இன்றியமையாததாம். ஓட்டம் பிடித்தல் என்ற ஈதே ஐந்தாம் இயற்கைச் செயல் நிலையாம். அதற்கு ஏற்ற மெய்ப்பாடு அச்சமாம்.

(6) உணவு தேடல் :- ஆருவது இயற்கைச் செயல்நிலை உணவு தேடலாம். இதற்கு ஏற்ற மெய்ப்பாடு பசி என்பதாம். நம்மைச் செயலுறுத்துவது நம்முடைய உயிர் ஆற்றலேயாம்.

ஒரே வகையான உயிர் ஆற்றலின் பலவகையான பிரிவுகளே இயற்கைச் செயல் நிலைகளாம். உயிர் ஆற்றல் இவ்வாறு பல பிரிவுகளாகச் சிறப்பு நிலையுறத் தொடங்கியபோது முதல் முதல் பிரிந்து விளங்கியது இந்த உணவு நாட்டமேயாம்.

(7) கூடிக்குலாவுதல் :— குழு நாட்டம் அல்லது கூடிக் குலாவுதல் என்பது ஏழாவது இயற்கைச் செயல் நிலையாம். யானை, ஓநாய் மான், மக்கள் முதலிய உயிரினத்தைச் சேர்ந்தவை கூட்டம் கூட்டமாகவே வாழ்கின்றன. இவை தனி நின்றால் படும் பாட்டினைப் புலம்பல் என்ற மெய்ப்பாட்டாகக் கூறலாம்.

(8) சேர்த்துவைத்தல் :— சேர்த்துவைத்தல் என்பதே எட்டாவது இயற்கைச்செயல் நிலையாம். பலவகைப் பொருள்களையும் கொண்டுவந்து சேர்த்தும் புதைத்தும் வைத்தலை எல்லா மக்களிடையேயும் காண்கிறோம். உண்ணலாகாப் பொருள்களையும் சில பறவைகள் தம் கூட்டில் சேர்த்து வைக்கின்றனவாம். 'எனது' என்று கூற முந்தும் புறப்பற்றே ஈதாம். இதற்கேற்ற மெய்ப்பாட்டினை உடைமை என்று தமிழர் வழங்குவர். செல்வத்தை நுகர்ந்து இன்புறாது நினைந்து இன்புறுவதே இந்த மெய்ப்பாடாம்.

(9) வீடமைத்தல் :— ஒன்பதாவது இயற்கைச் செயல்நிலை வீடமைத்தல் என்பதாம். வளை தோண்டி வாழும் எலியும், கூடுகட்டி வாழும் பறவையும், புற்றெழுப்பும் செல்லும், தேனடை அமைக்கும் தேனீயும் வீடுகட்டி வாழ்வனவேயாம். இதற்கு ஏற்ற மெய்ப்பாடு படைப்புள்ளமாம். குழவி, கண்டதனை எல்லாம் திருத்தி அமைக்கின்றது. குழந்தை பொருள்களை உடைத்து எறிவதும், திருத்தி அமைக்கவேயாதலின் அதுவும் படைப்பு உள்ளத்தின் பயனேயாம்.

(10) அழுகை :— பத்தாவது இயற்கைச் செயல்நிலை அழுகையாம். தன்னால் ஒன்றும் செய்ய இயலாதபோது அழுகையே எழுகிறது. இதற்கு ஏற்ற மெய்ப்பாடு அவலமாம். இந்த அழுகையே தாய்மையை எழுப்புவதனைக் கண்டோம்.

(11) இறுமாப்பு :— பதினோராவது இயற்கைச் செயல்நிலை தன்னேடுப்பு அல்லது இறுமாப்பு என்பதாம். அகப்பற்று என்று இதனையே கூறுவர். 'நான்' என்ற முனைப்பு எண்ணத்தால் தம்மை உயர்வாகக் கருதி நிற்பவரும் (Superiority Complex), இழிவாகக் கருதிநிற்பவரும் (Inferiority Complex) உலகில் எங்கும் உள்ளனர். இவற்றை முறையே உடன் பாட்டு அகப்பற்று என்றும், எதிர்மறை அகப்பற்று என்றும் ரீபோ (Ribot) என்ற ஆசிரியர் கூறுகின்றனர். முன்னதனைப் பெருமித மெய்ப்பாடு என்றும், பின்னதனை இளிவரல் மெய்ப்பாடு என்றும் தமிழர் வழங்குவர்.

(12) தன்னொடுக்கம்:— பன்னிரண்டாவது இயற்கைச்செயல் நிலையே மேற்கூறிய இளிவரல் தோன்றும் இடத்துக் காணும் தன்னொடுக்கமாகும். "குணம் பொல்லேன்" என்று கூறிக்கொள்ளும் நிலை ஈதேயாம். கூட்டமாக வாழுகின்ற உயிரினங்கள் தம்மில் ஒன்றனைத் தலைமையாகத் தேர்ந்து எடுத்து அதற்கு அடங்கி நடக்கக்காண்கிறோம். ஆண்டானும் அடிமையும் என்ற தொடர்பும் உலகிடை உண்டன்றோ? புத்தம்புது ஆள் வீட்டிற்குள் நுழைந்ததும் தாயின் மடியிலிருக்கும் குழவி தன் முகத்தினைத் திருப்பிக் கொண்டு பேச்சின்றிக் கீழ்க்கண்ணால் பார்க்கும்போது இளிவரல் உண்டேயன்றி அச்சம் இல்லையாம்.

(13) சிரிப்பு :— பதின்மூன்றாவது இயற்கைச் செயல்நிலையே சிரிப்பாம். இதற்கேற்ற மெய்ப்பாடு நகை என்பதாம்.

நகையினை விளைக்கும் பொருள்கள் பொதுவாக வருத்தத்தையும் வெறுப்பையும் உண்டு பண்ணுவன ஆதல் ஒரு வியப்பேயாம். சிறுவாட்டமும் சிறுவருத்தமும் உண்டாகும் நிலையில் சிரிப்புப் பிறக்கின்றதாம். பெருவருத்தம் உண்டாகும்போது அஞ்சியோ வருந்தியோ நிற்கின்றோம். ஒருவரது தலைப்பாகை நசுக்குண்டால் சிரிக்கின்றோம். தலையே நசுக்குண்டால் அஞ்சி நடுங்குகின்றோம்; இரங்கிப் புலம்புகின்றோம். ஈதே மக்டூகல் கூறும் விளக்கமாம்.

(14) இணைவிழைச்சு :— பதினான்காவது இயற்கைச் செயல்நிலை இணைவிழைச்சு என்பதாம். காமத்தால் ஆணும் பெண்ணும் கூடிவாழ்வது ஈதேயாம். இதற்கு ஏற்ற மெய்ப்பாடு காமமேயாம். இயற்கைச் செயல்நிலை பிறந்த உடனேயே செயற்படாது வளர்ந்தபின் செயற்படுதலும் உண்டு என்பதற்கு ஈதொரு நல்ல எடுத்துக் காட்டாம். நம் உடலிலுள்ள சுரப்பிகள் இந்த இயற்கைச் செயல் நிலையை இயக்கி வைப்பதனை முன்னரே குறித்து வைத்துள்ளோம்.

மீப்பண்பு :— இவ்வாறு பலவகைப்பட்ட இயற்கைச்செயல் நிலைகள் இயங்கி வரும்போது இவற்றில் எவை மிகுதியும் பழக்கமாய் விடுகின்றனவோ அவற்றிற்கு ஏற்ப மக்கட் பண்பும் மாறிவரக் காண்கின்றோம். மீப்பண்பு (Temperament) எழுவது இங்ஙனமேயாம். இயற்கைச்செயல் நிலைகள் கண்ணும் மூக்கும் போல உறுப்புக்களல்ல; நம்வாழ்க்கையை இயக்கிவைக்கும் உயிர் ஆற்றல் அந்த அந்த நிலைக்கு ஏற்பக் கொள்ளும் பலவகை வடிவங்களே இவையாம். உயிர்ப்பொருளை மாறாத நிலையில் வைத்து ஆராயாது ஆற்றலின் இயக்கமாகக் (Dynamic) கொண்டு ஆராய்வதற்கு இவர் கூறும் இயற்கைச் செயல்நிலை என்ற கருத்து மிகப்பெரிதும் உதவும் என மக்டூகல் என்ற ஆசிரியர் கூறுகின்றார்.

"ஒன்றதாய் அநேக சக்தி யுடையதாய் உடனுய் ஆதி
அன்றதாய் ஆன்மாவின் தன் அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்றுபோத்திரு வத்தை நிகழ்த்திச் செம்பினிற் களிம்பேய்ந்து
என்றும் அஞ்ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே"
(சித்தியார். — 170)

---

# 12. உணர்ச்சி

---

## I. ஊக்கம்

சில தவறுகள் :— உணர்ச்சியை விளக்கும் சொல்-கொண்டே, குழவியின் நனவு நிலையையும், வழங்கிவருகிறோம். நனவற்றுக் கிடந்தால் உணர்ச்சியற்றுக் கிடக்கிறது என்கிறோம். அல்லது "சிரிக்கின்றது", "அழுகின்றது" என்று சொல்லி முடிக்கின்றோம். இது காரணமாகக் குழவி நிலையை ஆராய்ந்தவர்கள் தவறான கொள்கைகளுக்கு ஆளாகி விடு-கின்றார்கள். குழந்தையின் வாழ்க்கையை அதன்நிலையிலிருந்து ஆராயாது நம்முடைய நிலையிலிருந்தே ஆராய்கின்றோம். நம் உணர்ச்சியினை எல்லாம் குழவியின் செயலிடையே கண்டு விடுகின்றோம். இது முதலாவது தவறும். உலகமும் குழவியுமாய் இயைந்து நிற்கும் ஒருமைப்பாட்டினை ஆராய முற்படாது அழுகை சிரிப்பு எனச் சில சொற்களில் குழவியின் செயல்களைச் சுருக்கிக்கூறி "அவ்வளவே இங்கு ஆராய உள்ளது" எனக்கருதி அமைந்து விடுகின்றோம். இது இரண்டாவது தவறும். குழவியின் உணர்ச்சிநிலை சிக்கலான-தேயாம். ஆதலின், அதன் பல வேறு நிலைகளையும் கூடிய வரையில் பிரித்து ஆராய்தல் வேண்டும்.

துடுக்கு :— பெற்றோர்களே இந்த இருவகைக் குற்றத்திற்கும் ஆளாகிக் குழவியின் நிலைமையை முற்றும் உணர்ந்தவர்கள்போலப் பேசுகின்றனர். அறியாமையினும் திரிபுணர்வே மிகமிகக் கொடியதாம். தாம் விரும்பாததனைக் குழவிகள் செய்தலாகாது என்பதே பெற்றோர்களது நோக்கம். தமக்கு விருப்பமானது குழவிக்கு எங்ஙனம் விருப்பம் அளிக்கக்கூடும் என எண்ணிப் பார்ப்பதும் இல்லை. குழவி ஒரு செயலை ஏன் செய்ய வருகின்றது என ஊன்றி நோக்கும் நோக்கமும் அவர்களுக்கு இல்லை. அவர்களுக்கு அவ்வாறு ஆராயப் பொழுதும் இல்லை; அனைத்திற்கும் மேலாக மனமும் இல்லை. துடுக்காய் இருக்கின்ற குழவியினை அடக்கப் பலரும் முயல்கின்றனர். ஆனால், அந்தக்குழவி ஆற்றல் மிக்க குழவி என்பதனைப் பலர் அறிவதில்லை. ஆற்றல் பாய வேறு இடம் இல்லாமையால் துடுக்கான செயலில் இந்த ஆற்றலைச் செலவிடுகின்றதென அறிந்தோர் நல்ல வழியில் அந்த ஆற்றல் பாயுமாறு வகைசெய்வர். இல்லையானாலும், வளர்ந்த பின் அக்குழவியே பிறரால் போற்றப் பெறும் நிலைக்குக் கிளைவ் போல இயல்பாக வரலாம்.

இயங்குநிலை :— குழவியின் உணர்ச்சி வளர்ந்து மாறிக் கொண்டே வருவதாகும். ஆற்றலின் பலவகைப் போக்குகளே உணர்ச்சிகளாம். இவற்றினை இயங்கு நிலையிற் கொண்டு ஆராயாது, தேங்கிக் கிடக்கும் நிலையாக உணர்ந்து திருத்த முயல்வது அறியாமையேயாம். தேங்கிக் கிடக்கும் குளம் அல்லது ஏரியின் மதகை அடைப்பதால் கேடில்லை. ஓடிக்கொண்டே இருக்கும் ஆற்றினைத் தடுத்தால் வெள்ளமன்றோ பொங்கும்? உலகமும் குழவியுமாக ஒற்றித்து நிற்கின்றபோது எத்தனையோ நிலைகள் ஒருங்கியைந்து வருகின்றன. இவை அனைத்தையும் ஒருங்கு வைத்து ஆராயாது, உணர்ச்சியின்

ஒரு சில வெளித்தோற்றங்களை மட்டும் ஆராய்வதால் போதிய பயன் இல்லை; திரிபுணர்வே எழும்.

ஊகமும் உண்மையும் :— குழவியின் உணர்ச்சியை அண்மை நிலையிலிருந்து காணுதல் வேண்டும். குழந்தைகளது நடத்தைகள் எதனால் எழுகின்றன என்று கூறுவது எளிதன்று. குழவிகளைப் பலவகையாக அழச்செய்து சில அறிஞர்களது எதிரே விட்டபோது அந்த அழுகைகள் ஏன் எழுந்தன என்று அந்த அறிஞர்கள் கூறமுடியாமல் விழித்தார்களாம். அழுகையை எழுப்பிய தூண்டலை அறிந்திருந்தால், அழுகையின் வரலாற்றை அவர்கள் நன்கு விளக்கி வைத்தார்களாம். ஆகையால், நடத்தைக்கும் அகநிலை உணர்ச்சிக்கும் ஒருவகைப் பொருத்தம் உண்டேனும் அந்தப் பொருத்தத்தை உணர்வது அருமையே ஆம். உணர்ச்சி முதலில் சிறப்புநிலை உறாமலே கிடக்கின்றது. குழவி பல வேறு அளவில் விளங்கும் உள்ளக் கிளர்ச்சியை வெளியிடுகிறது. அதனுடைய எதிர் ஊன்றல்கள் அவ்வப்போது எழும் சிறப்புநிலைக்கு ஏற்ப உரம்பெற்றுத் தோன்றுகின்றன. துன்ப அழுகை, என்றும் இன்ப நகை என்றும் விளங்குவது பல நாளான பழக்கத்தினாலேயேயாம். இதனை அறியாது குழவியின் அழுகையில் தம்முடைய அழுகையையே காண்கின்ற அறிஞர்களும் உள்ளார்கள். பிறந்த உடன் குழந்தை அழுவது கண்டு ஒரு சிலர் தீய உலகத்திற் புகுந்ததற்காகக் குழவி எழுப்பும் அவலக் கூப்பாடே அந்த அழுகை எனப் பேசத் தொடங்கினர். காண்ட் (Kant) என்ற பேரறிஞர் குழவி சினந்து அழுகின்றது என்றார். ஆட்லர் (Addler) என்பவரோ குழவி தன் இளிவரல் நிலைமைக்கு இரங்கி அழுகின்றது என்கிறார். குழவியைப்பற்றி அறிஞர்கண்ட கனவெல்லாம் இவ்வாறு பொய்யாய்ப் பழங்கதையாய் ஒழிகின்றன. பிறந்த

குழவி தன் உடலுக்கு இன்றியமையாது வேண்டப்படும் உயிரியத்தை (Oxygen) நாடி நிற்பதால் அதனைப் பெற முயலும் முயற்சியே அழுகையாக வடிவம் கொள்ளுதலின், அழுகின்றது என்பதே உண்மையாம்.

## II. உண்மை வடிவம்

போக்குவீடு :— குழவி முதலில் வாளா கிடக்கின்றது. அனைத்து உறுப்பும், அனைத்து நிலையும் சமநிலையில் அமைதி பெற்று விளங்குகின்றன. இத்தகைய குழவியின் எதிரே புறமானதொரு தூண்டல் எழுகின்றது. பளபளப்பான-தொரு மின்னல் திடீரென ஓடி மறைகிறது. அமைதியாக இருந்த குழவி தன் சமநிலை கெட்டு நிற்கிறது. ஆற்றல் வெள்ளம் அதனைக்காக்கப் பொங்கி வழிகிறது. அந்த ஆற்றல் அனைத்தும் இயக்கமாகத் தானே மாறுதல் வேண்டும். பிறழ்ந்த நிலையின் நின்றும் அமைதிபெற எவ்வாறேனும் இயங்கி ஆற்றலை வெளிப்படுத்த வேண்டும். அழும்; உதைத்துக் கொள்ளும்; கையையும் காலையும் நீட்டி முடக்கும்; இன்னும் பல வகையாக இயங்கிப் பின் ஓயும். முதலில் குழவியின் இடத்தே எழும் எதிர் ஊன்றல்கள், நிலை பெற்றதெனச் சொல்லக்கூடிய எந்த முறையிலும் எழுவன ஆகக் காணேம். ஆதலால், குழவி பல பல வகையாக இயங்கி வருகிறது. அந்த இயக்கங்களில் ஒருசில அமைதியையும், ஆறுதலையும் விளைவிக்-கின்றன. அதன் பயனாக அவை பழக்கத்தில் பதிந்து-விடுகின்றன. பழக்கமானபின் உணர்ச்சி பொங்குவது இல்லை. ஆனால், பின்னரும் பழக்கமான செயலோ, பொருத்தமுற்று ஒருங்கு இயைந்த செயலோ தோன்ற முடியாது தடைப்பட்ட போது செயற்கு என எழுந்த ஆற்றலும் தடைப்பட்டு வெள்ள மாகப் பொங்குகிறது; பாய இடமறியாது எங்கும் வழியத்

தொடங்கி உள்ளக் கிளர்ச்சியாய் வெளிப்படுகிறது. வெளிப் படையான இயக்கம் தடைப்பட்டபோது ஆற்றல் வெள்ளம் நம்மை ஆட்டிப் படைக்காதபடி அதற்கு ஒரு போக்குவீடாக அமைந்ததே உணர்ச்சியாம்.

உணர்ச்சி திருத்தல்:- வளர்ச்சியின் காரணமாக உணர்ச்சி திருத்தமுற்று வருகின்றதாம். குழந்தையிடத்தே உட்டுடிப்புகள் எல்லாம் ஒருங்கியைய வாராமையால் அதனுடைய நடத்தைகளும் அறுதியிட்டுக் கூறக்கூடிய வகையில் வேறு பட்டு விளங்கவில்லை. ஆதலின், புறநிலைத் தோற்றங்களைக் கொண்டு குழவியின் உணர்ச்சிகளைப் பாகுபடுத்துவதில் பயனில்லையாம். பொதுநிலைச் செயற்பாட்டின் பல முகங்களில் உணர்ச்சிவகையான நடத்தையும் ஒரு சிறந்த முகமே எனலாம். புதுவகையான நிலையில் உயிர்ப்பொருள் சிக்கியபோது, அதற்கு ஏற்பப் புதுவகையாகப் பொருந்த வேண்டிய இடத்து எழுவதே உணர்ச்சியாம்.

மறிவினையும் உணர்ச்சியும் :— உணர்ச்சி வகையான நடத்தையின் இயல்பினைத் தெள்ளத் தெளிய அறியவேண்டி அதனை மறிவினையோடு ஒப்புநோக்குதல் வேண்டும். பொருத்தம் உறுத நிலையில் பொருத்தமுறவரும் உணர்ச்சிகள் ஒருமுகப்படாது சிதறிப் பரந்திருக்கக் காண்கிறோம். மறிவினை எழும்போதுபோல் அன்றி உணர்ச்சி எழும்போது தூண்டுதல் மிக உரம்கொண்டு தோன்றுகிறது. அதற்கு எதிரே எதிருன்றல் நிலையும் முன்னமைப்பாக அமைந்து கிடப்பதில்லை. உரம் குன்றிய தூண்டுதல்கள் ஏதோ ஒரு வகையான குறிப்பிட்ட எதிருன்றலைக் குறிப்பிட்ட சிறியதொரு எல்லைக்குள் எழுப்பும். உரம் மிக்க தூண்டுதலோ அவ்வாறன்றிப் பரந்து தோன்றும் பலவகை எதிருன்றல்களை எழுப்பி விடுகின்றது. வயிறு

குலுங்கும்; நெஞ்சு துடிக்கும்; கைகால் நடுங்கும்; மயிர்க்கூச்செறியும். இவ்வாறு உடல் முழுதும் பரவிய எதிர் ஊன்றல்கள் பல எழலாம். இத்தகைய எதிர் ஊன்றல்களே உணர்ச்சி வகையான எதிர் ஊன்றல்களாம். பிறவகை எதிர் ஊன்றல்கள் உணர்ச்சியற்றனவாம். குறிப்பிட்டு வரைஅறுத்துக் கூறியதொரு நடத்தை எழவேண்டிய இடத்தே, தடை முதலிய காரணங்களால் குறிப்பிட்டுக் கூறமுடியாதபடி சிதறிக்கிடக்கும் நடத்தை நிகழும்போது, நடத்தையில் நிழழுகின்ற இந்த மாற்றம் நனவுநிலையில் பதிந்து தோன்றுவதில்லை. உள்ளக் கிளர்ச்சியை எழுப்பாத தூண்டல், தங்கு தடையில்லாத வழியாகவே புகுந்து ஓடி நடத்தையை விளைவிக்கின்றது. உரம் மிக்க தூண்டலோ தங்குதடை மிக்கு இருக்கும் வழியிலும் பாய்ந்து ஓடுகிறது. அதனாலேயே தங்குதடை காரணமாகச் சிதறிக்கிடக்கும் நடத்தை எழுகிறது.

## III. வெள்ளம் பொங்குகிறது

மூவகை இயக்கம் :— நம் இயக்கங்களை எழுப்புவன மூன்று வகையான உறுப்பு அமைப்புக்களாம். ஒன்று கை முதலியவற்றை இயக்கும் அமைப்பாகும். இது எலும்பைப் பற்றி நிற்கும் தசை அமைப்பாம். வயிற்றிலுள்ள உறுப்புக்களையும் இயக்கிவைக்கும் தசை அமைப்பு மற்றொன்றாம். எலும்பியக்கம் நாம் வேண்டியபோதெல்லாம் எழும். அது நாம் அடக்கி ஆளும் தசை இயக்கமாம். வயிற்றியக்கம் நாம் வேண்டியபோது எழாது. அது தானாக இயங்கும் தசை இயக்கமாம். தானாக இயங்கும் தசை அமைப்பு உடல் முழுதும் தொடர்புற்றுக் கிடக்கின்றது. உணர்ச்சி நிலையில் வயிற்றியக்கமே எழுகிறது. "வயிறு எரிகிறது; குலை நடுங்குகிறது" என்று கூறுவது இதனாலேயாம். இந்த இயக்கத்தில்

கண், தோல் முதலிய உறுப்புக்களும் ஈடுபடுகின்றன. தானே இயங்கும் நரம்பமைப்பால் இந்த இரண்டாம்வகை இயக்கங்கள் எழுகின்றன. கோபம் எழும்போது மாங்காய்ச் சுரப்பியின் (Adrenal gland) சாறு குருதியிற் பாய்கின்றதாம். எனவே, மூன்றும் அமைப்பாகச் சுரப்பிகள் உணர்ச்சிவகை நடைத்தையில் ஈடுபடக் காண்கிறோம்.

இவற்றின் வேகம் :— எலும்பியக்கமோ குறிப்பிட்ட ஓரிடத்தே எழுவதாம். ஆதலின், இது எழ நேரம் செல்வதில்லை. விரைந்து எழவே காண்கிறோம். தாமே இயங்கும் நரம்பமைப்போ உடல் முழுதும் பரவி நிற்பதாம். இது முழுதும் இயங்கத்தொடங்குவது என்றால் நேரமே பிடிக்கும். இயங்கிய பின் முழுவதும் ஓய்வதென்றாலும் நேரமே பிடிக்கும். நரம்பினும் குருதிக்குழைகள் மிகப் பரந்தனவாம். ஆதலின், சுரப்பியின் சாறு குருதிமுழுதும் பாய முன்னினும் பெரும்பொழுதாகும். பாய்ந்தபின் ஓயவும் பெரும் பொழுதாகும். குறிப்பிட்ட இடத்தே இயக்கம் எழவேண்டும் என்றால் எலும்புவகை இயக்கமே எழும் எனலாம். தெருவில் போகும்போது விரைவாக ஓடிவரும் தானோடி நம்மீது மோதவருகிறது. உடனே எலும்பியக்கம் எழ அப்பாற் குதித்து ஓடிப்பிழைக்கின்றோம். ஆனால், அது அச்சத்திற்கு இடமான நிலையாதலின் நாம் திடுக்கிட்டபோது ஆற்றல் பொங்கி வழிகிறது. அந்த ஆற்றல் தங்குதடைகளை எல்லாம் முட்டித்தள்ளி அப்பால் ஓடுகிறது. எலும்பு நிலை எதிரூன்றளவில், அந்த ஆற்றலின் ஓட்டம் ஓயவில்லை. தானே இயங்கும் நரம்பமைப்பும் செயலுறுகின்றது. எலும்புநிலை இயக்கம் தொடங்கிய பின்னர் இந்த இரண்டாம் வகை இயக்கம் எழுந்து, முதல்வகை இயக்கம் முடிந்தபின்னும் தொடர்ந்து விளங்குகிறது. தானே இயங்கும் நரம்பமைப்பின் எதிரூன்றல்

ஓய்வதற்கு முன்னரே சுரப்பிகளின் எதிரூன்றலும் எழத்-தொடங்குகிறது. அதுவே ஓய நீண்ட நேரமாகும். தீங்கு 160 வது விநாடியில் நீங்கிய பின்னரும் இந்த அமைப்பு இயங்கக் காண்கிறோம். மேற்கூறிய இந்த மூன்றன் இயக்க வீதத்தைக் கீழ்க்கண்ட படம் நன்கு விளக்குகிறது.




ஒரு சிக்கல் :— இவ்வாறு தீங்கினின்றும் நாம் தப்பிய பின்னும் உடல் நடுங்குகிறது. நெஞ்சு துடிக்கின்றது. எனவே பெருந் தீங்குகளுக்கு ஈடு கொடுக்கத்தக்க நிலையில் நம்முடைய உடலமைப்பு விளங்குகிறது என்பதாயிற்று. காட்டில் மனிதன் கொடிய விலங்குகளோடு வாழ்ந்தநாளில் இத்தகைய அமைப்பு வேண்டி இருந்ததுபோலும். நம்முடைய நாகரிக வாழ்க்கையில் அத்தகைய பெருந் தீங்குகள் எழக்கூடிய நிலைகள் மிகமிகச் சிலவேயாம். எனினும், நம் உடலமைப்பு நாகரிக வளர்ச்சிக்கு ஏற்ப மாறவில்லை. அதனால், தீங்கு நீங்கிய பின்னும் வயிறு நடுங்கி நெஞ்சு துடித்து நிற்கும்போது 'ஏதோ உள்ளுக்குள் ஒன்றும் சரியாக இல்லை.' என்ற எண்ணமே எழுகிறது. நமக்கே இவ்வாறானால் குழந்தையின் நிலை எவ்வாறிருக்கும்? ஆகவே, குழவியின் உள்ளக் கிளர்ச்சியைக் காணும்போது இந்த உண்மையை மறவாது ஆராய்ந்து அதற்கு உதவுதல் வேண்டும்.

அவ்வாறு செய்யாதவரை என்ன செய்வது? நோயாளியை அடித்து, வெருட்டி, மருட்டுவோர் உண்டோ?

கடுஞ்செயல் :- உணர்ச்சி கிளரும்போது கடுஞ்செயல்கள் நிகழக் காண்கிறோம். குரங்கு ஒன்று துரத்தி வரும்போது அதற்கு அஞ்சி ஓடும் சிறுவன் குட்டிச்சுவரைத் தாண்டிக்குதிக்கின்றான். பின்னர் அச்சமற்ற அமைதி நிலையில் அதிற் பாதியளவும் குதிக்கமுடியாது தயங்குகின்றான். எனவே, உணர்ச்சிகள் இத்தகைய செயற்கருஞ் செயல்களை விளைவிக்கவே அமைந்துள்ளன எனலாம். ஒருவகையாகச் செய்த செயல் விரும்பிய அமைதியைத் தாராவிடின், அமைதிவரும் வரையிலும் மேலும் மேலும் மாறி மாறிப் பல செயல்களையும் செய்வதற்கு வேண்டிய ஆற்றலும் ஊக்கமும் உணர்ச்சியின் வழியே எழுகின்றன. வேண்டிய செயல் வெற்றியோடு முடியாவிடின் மேலும் ஆற்றல் பாய்ந்து கொண்டே இருக்கும். அது காரணமாகத் தானாக இயங்கும் நரம்பமைப்பு முன்னினும் முறுக்கேறி நிற்கிறது. உடல் முழுதும் துடிக்கின்றது.

வெள்ளந் தடுத்தல் :— ஆகையால், ஆற்றல் இவ்வாறு பொங்கி வரும்போது அதனைத் தடுப்பது பெருங்கேடாய் முடியும். வெள்ளத்தைக் கையால் தடுத்தால் நம்மையும் தள்ளிக் கொண்டு வெள்ளமும் ஓடும். ஆகவே, குழவி அழுதோ, சீறியோ, முரண்பட்டு நிற்கும்போது, அதனை வெருட்டி, மருட்டித் திடீரென ஓயவைப்பது நல்லதன்றாம். அழும்போது "அடிக்கிறேன்பார்" என வெருட்டினால் குழவி அஞ்சி அழுகையை உடனே நிறுத்தினாலும், தன்னையும் அறியாமல் தேம்பிக்கொண்டே கிடக்கின்றது. குழவி உணர்ச்சி பொங்கி நிற்கின்றபோது சுற்றுப்புறச் சூழலோடு அது அவ்வாறு பொருத்தமுற வருகின்றது என்பதனை நாம் உணர்தல்

வேண்டும். பொருத்தமுற வருவது பொருத்தமின்மை எழுந்ததாலன்றோ? ஆகையால், இந்தப் பொருத்தமின்மை எந்த வகையால் எழுந்தது என்பதனை நாம் ஆராய்தல் வேண்டும். ஆராய்ந்து அறிந்தபின் தக்கவகையில் பொருத்த-முற்று நிற்குமாறு வகை செய்தல் வேண்டும். இல்லையானால் உணர்ச்சி என்னும் புயற்காற்றினால் குழவி உள்ளம் சிதறுண்டு கெட்டுவரக் காண்கிறோம்.

## IV. பொருத்தமுறு நிலை

மூன்று படி நிலைகள் :— உணர்ச்சி வகைப் பொருத்தம் மூன்று வேறு நிலைகளாக விளங்கக் காண்கிறோம். முதலில் உணர்ச்சி எழ நிற்கும் குழவியினிடம் ஒரு மாற்றம் நிகழ்கிறது. இதன் அகநிலை அனுபவமே உணர்ச்சி என்று வழங்கப் பெறு-கிறது. வயிற்றுநோய் முதலியவற்றால் குழவி அழுதுவரக் காண்கிறோம். ஈதே முதல் நிலையாம். அடுத்தபடியாகக் குழந்தையைச் சுற்றியுள்ள இயற்கைப் புறநிலையில் மாற்றங்கள் எழுகின்றன. ஈதே எல்லாவற்றினும் சிறப்புடையதாம். கீழே தரையில் தவழும் குழவியைத் தானாக அது இறங்க முடியாத மிக உயரத்தில் விட்டுவிட்டால் தன் சுற்றுப்புற நிலையில் மாறுதல்கண்டு அது உணர்ச்சி பொங்கி நிற்கிறது. அழுது புலம்புகிறது. ஈதே இரண்டாம் நிலை. மூன்றாம் நிலையில் பிறரைத் தன் வழியே திருப்பக் குழவி முயலுவதனைக் காண்-கிறோம். முதல் நிலையில் வயிற்றுநோய் முதலிய உடல்நோயைக் குழவி தன்நிலைபாகவே கொண்டது. இரண்டாம் நிலையில் சுற்றப்புற நிலையைத் தன்னிலையாகவே கொண்டது. மூன்றாம் நிலையில் பிறர் நிலையையும் தன்னிலையாகவே கருதிப் பழகிவிடு-கின்றது. அப்போது பிறர் நிலையோடு தன்நிலை பொருத்தம் அற்றுக் கிடக்குமானால் உணர்ச்சி பொங்கி வழிகிறது. இந்த மூன்று நிலைகளும் உணர்ச்சி வகை வளர்ச்சியின் மூன்று

படிகளாம். மேற்படியில் ஏறும்போது கீழ்ப்படி மறைந்து போகாது விளங்குகிறது. உலகோடு ஒட்ட ஒழுகாமையாலேயே பின்னர்க் குழவிகளுக்குப் பெருங்கேடுகள் விளைகின்றன. ஆதலின், குழவியை வளர்ப்போர் முன்முன் நிலைகளில் இருப்பதைவிடப் பின்பின் எழும் நிலைகளிலேயே விழிப்பாக இருந்து அதனைத்திருத்தம் பெறவளர்த்தல் வேண்டும். குழவி அகநிலைப் பொருத்தம் பெறத் தொடங்குவதிலிருந்து மக்களோடு முழுப் பொருத்தமும் பெற்று முடியும் வரை அவ்வாறு அனைத்து வகையாலும் பொருத்தம் பெற்று வருமாறு அதற்கு உதவுதலே நமது கடமையாகும். உணர்ச்சி நிகழ்த்திவருகிற தொண்டு படிக்குப்படி மாறிக்கொண்டே வருகிறது. இவ்வாறு பலபடப் பரந்து உள்ளதனுக்கு இலக்கணம் கூறுவது எங்ஙனம் முடியும்? அந்த அந்த நிலைக்கு ஏற்ப எழும் குழவியின் நடத்தையை அறிந்து தக்கபடி வளர்ந்துவரத் துணை செய்வதே பெற்றோர் கடமையாம். இந்த உண்மைநிலை விளங்கி விடுமானால் பிற நுட்பங்களைத் தாயின் அன்பே அறிந்து செய்து வெற்றி பெறும் என உறுதிகூறலாம்.

தற்காப்பு :— உணர்ச்சியின் இயக்கத்தைக் காவல் நிலை இயக்கம் எனக் கூறவும் கூடும். பிறந்த உடன் முதல் முதல் எழும் இயக்கம் அழுகையேயாம். இது உணர்ச்சிவகை இயக்கமேயாகும். குழந்தை வாழ்வதா சாவதா என்பதே அந்த இயக்கத்தைப் பொறுத்து உள்ளதாம். தன்னுடைய இருப்பினுக்கே உலைவைக்கும் சுற்றுப்புற நிலையினின்றும் தன்னைக் காத்துக்கொள்ளுமாறு உணர்ச்சி பொங்கி வழியும்போது பல உடற்கோணல்கள் இடையே ஆற்றல் அழுகையாக வெளிப்பட்டு மூச்சுவிடும் அமைப்பை இயக்கிவிடுகிறது. மூச்சுவிடத் தொடங்கிய பின் பசியாற் சாவதா வாழ்வதா என்ற கேள்வி பிறக்கிறது. அப்போதும் ஆற்றல் பொங்கி

வழிகிறது. குழவி அதன் பயனுகக் காலேயும் கையையும் அலேத்துக்கொண்டு நிற்கின்ற நிலேயில் அழுகையும் தோன்று-கிறது. தாயும் அந்த அழுகையினேக் கேட்டுப் பால் கொடுக்-கின்ருள். மோரோ மறிவினே என்பது பேரொலி கேட்டபோது எழுவதாம். கால் விரல்களேயும், கைவிரல்களேயும் விரித்துக் கைகளேப் பக்க வாட்டமாகவும் காலே நேராகவும் வீசி முதுகை வளேத்துக்கொண்டு தலேயை உந்திக்கொள்ளும் இந்த நிலே பேரொலி கேட்டபோது எழுகின்றதாம். பேரொலியோடு எழும் தீங்கினின்றும் தப்புவதற்கு எனவே இது எழுவது எனலாம். நீண்டு விரிந்த உறுப்புக்கள் எல்லாம் பின்னர் நெகிழ்ந்து மடங்குகின்றன. கைக்கு எட்டிய பொருள்களே எல்லாம் இறுகப் பிடிக்கின்ற மற்ருேர் மறிவினேயும் தற்காப்-பிற்கு என எழுந்தது போலும். நான்காம் மாதத்தில் மோரோ மறிவினே மறைகிறது. பின்னர், அது தோன்றிய இடத்தே திடுக்கீடு என்பது எழுந்து தோன்றக் காண்கிருேம். கண்ணினே இமைத்து, தலேயை முன்னுக்குத் தள்ளி, தோள்களேத் தூக்கி முன்னுக்குத் தள்ளி, வயிற்றைச்சுருக்கி, முழங்காலே மடக்கிக்-கொண்டு நிற்க, விரல்கள் நடுநடுங்க, அச்சம் என்று வழக்க-மாகக் கூறும் குறிகள் முகத்திலே தோன்ற அமைவதே திடுக்கிடு நிலேயாம். திடீரென்றும் உரத்தோடும் எழுகின்ற எந்தத் தூண்டலும் குழவியைத் திடுக்கிடச் செய்யும். ஆனுல், முதியோர்களும் பலவகை நிலேகளிலும் திடுக்கிட்டுவரக் காண்கிருேம். இதனுல், குழவியினிடத்தே எழுந்த உணர்ச்சிநிலே முதலில் தோன்றும்போது இருந்ததற்கும், முற்றிவளர்ந்த பின் முதியோரிடை இருப்பதற்கும் ஓர் இயையும் இல்லாத போக்கில் மாறிவருவதனே நாம் நன்கு அறியலாம்.

பேச வாய் உண்டோ:- இவ்வாறு தீங்கெனத் தோன்றும் தறுவாயில் தற்காவலாகவே உணர்ச்சி முதல் முதல் எழக்

கண்டோம். ஆனல், அப்போது எழுகின்ற அகநிலை உணர்ச்சி-யனுபவத்தை மேலும் மேலும் அனுபவிப்பதற்காகக் குழவி அதனை வளர்த்துப் பழக்கிக் கொள்ளலாம்; குழவி அச்சத்தை ஊட்டும் நிலைகளை விளைவித்துக்கொண்டு அஞ்சும் அனுபவத்தில் ஈடு படலாம். சுண்ணும்பு பூசிய பழைய வீட்டில் குழவி ஒன்று படுத்திருக்கிறது. தன் அருகே இருந்த சுவரி-லிருந்தும் சுண்ணும்பின் படை கீழே திடீரென விழுவது கண்டு அது திடுக்கிடுகிறது. பின்னர் அதன் உண்மையை உணர்ந்ததும் திரும்பவும் திரும்பவும் சுண்ணும்புப் படை விழுமாறு தானே காலைச் சுவர்மேல் உதைத்துத் தன் மீது தள்ளிக்கொள்ளுகிறது. இது விளையாட்டாக முற்றி அமைவ-தற்கு முன்னர், இவ்வாறு தள்ளுந்தோறும் குழவி சிறிது நடுங்கி நிற்கவே காண்கிறேம். 'கொலை முதலியவற்றைக் கண்டு நடுங்காதவர்கள் உண்டோ? வெறுப்பனவற்றை விரும்பு-வாரும் உளரோ'? என நீட்டிப் பேசுவாரை உலகம் அறியும். ஆனல், அசையும் படங்களிலும் (Movies), பேசும் படங்-களிலும் (Talkies) நமக்கு உணர்ச்சி ஊட்டுவனவாகப் பெரிதும் வருவன பெருங்கேடுகளும், அவற்றினின்றும் வியத்தகுநிலையில் தப்பிவரும் வீரச்செயல்களுமே ஆம். மக்கள் வெறுப்பன எனத் தகும் பெருங்கேட்டை விரும்பிக் காணச் செல்லும் மக்கக் கூட்டம் ஆயிரக்கணக்கில் அமைந்ததா? கோடிக்கணக்கில் அமைந்ததா? நாகரிகம் வளர்ந்-திருக்கும் நிலையில் உணர்ச்சிநிலையை இயங்குமாறு செய்து கொள்ள இவற்றினும் வேறுவழி எது? பெரியோர்களே வெறுக்கத்தக்கனவற்றை விரும்பிக் காசும் செலவழித்து அச்சத்தினைத் தம்முன் வரவழைத்துக்கொண்டு அஞ்சி நடுங்கி இன்பம் உறுவார்களானல் குழவிகள் அவ்வாறே நாம் வெறுக்கும் உணர்ச்சி இயக்கங்களை விரும்பி வளர்ப்பதில் என்ன வியப்பு? வேண்டிய பொழுதெல்லாம் உதவிநாடி

அழுதழுது விரும்பியவற்றைப் பெற்ற குழவிக்கு அழுகையே விருப்பமாகி விடுகிறது. அதனாலேயே, அது சிலபோது விடாது அழுகின்றது. உண்மையை உணராது அத்தகைய குழவியைத் தாய் 'பேய்' எனக் கருதுவதில் என்ன பயன்? பெருங்கேடுகளைப் படம் எடுத்துக்காட்டும் அசையும் படங்களை விரும்பிவரும் நமக்கு இக்குழவியை வெறுத்துப் பேசவாய் உண்டோ? "அழுகையினை யாரேனும் விரும்புவாரோ?" எனக் கேட்கின்ற பெரியோர், 'கொலையும் களவும் புலப்படத்தோன்றும் அசையும் படத்தை யாரேனும் விரும்புவரோ' என்று கேட்கும் துறவிகளுக்கு முதலில் விடை அளித்தல் வேண்டும்.

குதிரையைக் குடிக்கவைத்தல் :- இங்கெல்லாம் குழவியின் எண்ணமும் பெரியோரின் எண்ணமும் மாறுபடாமல் இருக்க முடியுமோ? ஆதலின், இத்தகைய இடங்களில் நம் எண்ணத்தின்படியே குழவி நடக்குமாறு வற்புறுத்திக் கற்றுக் கொடுக்க முயல்வது வீண் செயலேயாம். அழுதுகொண்டே இருக்க விடுவது குழவியின் பின்வாழ்க்கைக்கு நன்று அன்று என்று கருதினால் அதனை விட்டொழிக்குமாறு பெரும்பேச்சுப் பேசுவதிலும் அடித்துப் பிடித்து வெருட்டுவதிலும் பயனில்லை. அவ்வாறு செய்யும்போதெல்லாம் குழவியின் எண்ணம் 'வேண்டாம்' என நாம் தடுப்பதன் மேலேயே பாய்ந்து நிற்பதால், பழைய நடத்தையே உறுதிப்பட்டு உரமேறிவரும். வேண்டாம் என்று தடுக்கும் பழமே குழவிக்கு மிக மிக இனித்து வருவது இதனாலேயேயாம். ஒரு நடத்தையை மாற்ற வேண்டுமானால் குழவியை அதனினும் சிறந்ததொரு நடத்தையில் பழக்குதல் வேண்டும். சிறந்தது என்றால் முதியோர் சிறந்தது என்று கருதுவதன்று. குழவியும் முன்னைய நடத்தையினும் மிக மிக விரும்புவதாய் முதியோரும் தீயது அன்று

எனக் கருதுவதாய் உள்ள நடத்தையே சிறந்த நடத்தையாம். குழவிக்கு விருப்பம் இல்லாத ஒன்றை வற்புறுத்திப் பழக்கத்தில் கொண்டுவர முயல்வது தண்ணீர் வேட்கையற்ற குதிரையைக் குளத்தில் நீர் குடிப்பச் செய்வது போலாம்.

## V. போலி நிலை

பிறரை ஆளும் முயற்சி :- சுற்றுப்புறச் சூழலோடு குழவி பொருத்தமுற்றுவரும் நிலையிலேயே முதல் முதல் உணர்ச்சி எழுகிறது. இந்த உணர்ச்சி பிறரையும் இயக்கிவைக்கின்றது. இதனைக் குழவி உணர்ந்ததும் உணர்ச்சிதோன்ற வேண்டா-நிலையிலும் பிறரை அடக்கி ஆளவேண்டி உணர்ச்சியைஎழுப்பிப் பயன் படுத்தப் பழகிக்கொள்கிறது. பசி எடுக்கும்போது அழும் குழவி, அழையினைக் கேட்டதும் தாய் ஓடோடியும் வந்து எவ்வகையாலும் தன்னை அமைதியுறச் செய்வதனைக் கண்டு, தான் வேண்டுகின்றவற்றை எல்லாம் அழு-தழுதே பெற்றுவரத் தெரிந்து கொள்ளுகிறது. தாயை மட்டும் அறிந்த குழவி இவ்வாறு கெடுவதுபோலப் பலரையும் அறிந்து பலரோடு பழகும் குழவி அடியோடு கெடுவதில்லை. பிறரிடம் இந்த மந்திரம் பலிப்பதில்லை; ஆதலின் அழுகை பழக்கத்திற் படியாது ஒழிகிறது. மக்கள் ஒருவர்போல் ஒருவர் இருப்ப-தில்லை. பின் எல்லாம் மக்களோடு கூடிவாழப்போகும் குழவி, தன் குழவிப் பருவத்திலேயே இவ்வாறு பலரோடும் பழகி-வருவது பயனுடையதேயாம். வாழ்க்கையிற்பெருந்தோல்வியும் ஏமாற்றமும் வாராது நிற்க இது ஒரு சிறந்தவழியாம். பலவகை மக்களோடு, பலவகையில் பழகக் குழவி கற்றுக்கொள்ள வேண்டுமானால் குழவியைத் தனித்து இருக்க விடாமல், பலரோடும் பழகிவர விடவேண்டும். 'பின்னே பார்த்துக் கொள்ளலாம்' என்று இராமல் முன்னாகவே இந்தப் பழக்கத்தைத் தொடங்கி வைப்பதே மேலாம்.

அழுங் குழவி :— பருவத்திற்கும் நிலைக்கும் ஏற்ப உணர்ச்சி மாறிப் பொருத்தம் உற்றுத் திருத்தம் பெற்று வந்தால் மட்டுமே குழவி நல்ல வகையில் வளர்ந்து வருகிறது என்று கூறக்கூடும். கடற்கரைக்குப் போகின்றோம். இரண்டு இளங்குழவிகள் நீரின் அருகே நிற்கின்றன. பெரிய அலை ஒன்று மோதுகிறது. குழவிகளில் ஒன்று கூவிக் கதறிக் குதித்து எழுந்து தரையின்மேலே உயரச் சென்று தன்மீது அலைபடாத படி நின்று விடுகிறது. மற்றொரு குழவியோ அசையாது அங்கேயே நின்று அழுகிறது. இரண்டும் மூன்று ஆண்டு நிரம்பிய குழவிகளே. ஏன் இந்த வேற்றுமை? அழுகிற குழவி தன்பெற்றோரை அழைக்க விரும்பி அழு-கின்றது என்று கூறுவதற்கும் இல்லை; பெற்றோரோ அருகில் இல்லை. தமக்குப் பயன்படும் வகையில் தம் உணர்ச்சிநிலை இயங்கிவர வாழ்பவர் சிலர். பொருளற்றுப்போன உணர்ச்சி-நிலையைப் பயனொன்றும் இன்றித் திருப்பவும் திரும்பவும் பழக்கத்தின் பயனாக எழுப்பிக்கொண்டே வருவார் வேறுசிலர். குதித்து எழுந்த குழவி முன்னைய இனத்தைச் சேர்ந்தது. அழுது நின்ற குழவி பின்னைய இனத்தைச் சேர்ந்தது. இது அழுவதனைத் தவிர வேறு ஒன்றனையும் தெரிந்து கொள்ள-வில்லை. ஆதலின், அழுதே தொலைக்கின்றது. இத்தகையார் பெரியவர்கள் ஆனாலும் இவர்களைக்கண்டு பிறர் "என்ன குழந்தையைப்போல அழுகிறாயே வெட்கமில்லையா" என்று பல முறையும் இடித்து உரைக்கவே வாழ்ந்து வருகின்றார்கள்.

போலி நகை :— உணர்ச்சி வளர்ந்து வருகின்ற நிலையில் மற்றொரு புதுமையும் காண்கின்றோம். முகத்தினைச் சுளித்துக் கொண்டு இருப்பது நல்ல நடத்தை அன்று என நாகரிக-உலகம் வெறுத்து வருகிறது. நம் மனநிலை எவ்வாறாயினும் நகை முகம்கொண்டு வாழ்வதே நாகரிகம் என நம்மொடு

பழகிய குழவியும் நம்பிவிடுகிறது. நம்மைப் பிறர் எளனம் செய்யும் போதும் புன்னகை கொண்டு போலிவாழ்வு வாழ்வதே நம் வழக்கமாகி விட்டது. வேறு ஒருவர் நகைச் சுவை ததும்பப் பேசுவதாகக் கொண்டு பிறர் அனைவரும் நகைத்து வரும்போது அந்தப் பேச்சும் அந்த நகைச்சுவையும் நமக்கு விளங்காது போனாலும் அறியாதவர்கள் என்ற பெயர்வாங்க அஞ்சி நாலுபேர் சென்ற வழியில் நாமும் சென்று நகைத்து நிற்கின்றோம். நம்முடைய நாட்டில் ஆங்கிலம் அறியாத மக்களும் ஆங்கிலச் சொற்பொழிவு நிகழும் கூட்டத்தில் அதனை அறிந்து உள்ளக்கிளர்ச்சி உற்றவர்கள் போலக் கைதட்டியும், கலகல என நகைத்தும் பிறவாறு ஆரவாரம் செய்தும் வரக் காண்கின்றோம். 'குழவி நிலையில் இயற்கையாகவே உணர்ச்சி தோன்றும் நிலைக்கும், உணர்ச்சி தோன்றாத இடத்தில் எல்லாம் உணர்ச்சி தோன்றுவதுபோலக் காட்டிக்கொள்ளும் செயற்கை நிலைக்கும் உள்ள வேற்றுமை வட முனைக்கும் தென்முனைக்கும் உள்ள வேற்றுமையேயாம்' என்று சொன்னால் அது உண்மை உரையே அன்றிப் புனைந்துரை அன்றாம்.

திருத்தமுறவழி :— உணர்ச்சி திருத்தமுற வளர்ந்து வருகிறதா என்று அறியச் சிறந்ததோர் அறிகுறி உண்டு. நிலைக்குத் தக்கவாறு உணர்ச்சி எளிதில் மாறி அமைதல் வேண்டும். வெற்றி வாழ்வின் அடையாளம் அதுவேயாம். சிக்கல் எழும்போதெல்லாம் தெள்ளத் தெளிய அந்தச் சிக்கலை உற்று உற்று நோக்குவதே அதனை எளிதில் தீர்க்கும் வழியாம். ஆகவே, குழவியினிடை உணர்ச்சிக் கோளாறுகள் எழுமானால் அந்த உணர்ச்சியைக் குழவி அறியாதவாறு வெருட்டியும் மருட்டியும் பயன் என்ன? நிகழ்வதனை உணரும் சூரணை இவ்வாறு அழிந்துபோன பின் அதனைத் திடீரென உணர்ந்து

குழவி திருத்திக்கொள்வது எங்ஙனம் கூடும்? குழவி தங்கு-தடையின்றித் தன்னுடைய உணர்ச்சிநிலைத் துலக்கங்கள் பல வேறு வகையிலும், பலவேறு அளவிலும் இயங்கும்படி பழகி வரவேண்டும். உணர்ச்சி நிலையின் எதிருன்றல்கள் குழவி-யிடத்தே எல்லையில் மிக்கு வருதலும் வேண்டும்; வகையில் பல்கிவருதலும் வேண்டும். அவ்வாறு மிக்கும் பல்கியும் வரு-மாகில் குழவியின் வாழ்க்கை வளம் பெற்றதாகிறது; உணர்ச்சி நிலையும் தக்கவகையில் வளர்ந்ததாகிறது. இவ்வாறு வளரவிடாது குறுகிச் சுருங்கி நிற்கும் உணர்ச்-சியையும் தடுக்க முற்படுவோமானல், அக்குழவியின் எண்ணம் எல்லாம் அவ்வுணர்ச்சியிலேயே ஈடுபட்டு அதனையே மேலும் மேலும் வளர்த்து வரும்; ஆதலின், உணர்ச்சிநிலைக் கோளாறு எழுகின்ற சிக்கல்நிலை யாதென உணர்தல் வேண்டும். உணர்ந்து அச்சிக்கலைத் தீர்ப்பதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருத்தல் வேண்டும். அவ்வாறு இருப்பின் நம்முடைய தடை ஒன்றும் எழாதபோதும் உணர்ச்சிநிலை தானே மாறிவரக் காண்போம்.

உலகம் பலவகை :— ஒரே நிலையில் பிற மக்களிடத்தே பலவகை உணர்ச்சியை எழுப்பலாம். ஒருவனிடத்தேயும், ஒரே செயல் பல நிலைகளில் பலவகை உணர்ச்சிகளை எழுப்-பலாம். ஒரே வகையான உணர்ச்சி பலவகையான நிலைகளில் எழுதலும் கூடும். "ல, ல, ல, ல," என ஓர் ஒலியையே திருப்பித் திருப்பிச் சொல்லி விளையாடும் குழவி அதிலே ஓர் இன்பம் காண்கிறது. அதன்காரணமாக ஆற்றல் பொங்கி வழிய, மேலும் மேலும்பன்னிப்பன்னி அந்த ஓர் எழுத்தினையே பேசி நிற்கின்றது. அதன்பெற்றோர்கள், அந்த இன்பத்-தினைக்கண்டு தாமும் இன்புற்று நிற்கின்றார்கள். ஆனல், அடுத்த அறையில் படுத்திருக்கும் நோயாளிப் பாட்டனரோ குழவியின் குரலைக்கேட்டுத் தலையில் அடித்துக்கொண்டு சீறி

விழுந்து தெருவிற்கு ஓடுகின்றார். வேறு ஒரு குழவி இந்தச் செயலைக்கண்டு உற்று நோக்கி வாளா பார்த்துக்கொண்டிருக்கிறது. எனவே, ஒரே செயல் இவ்வாறு பலவகை உணர்ச்சிகளைப் பலரிடையே எழுப்பிவரக் காண்கிறோம். பசி எடுக்கும் போது பால் புட்டியைக்கண்டதும் தாவிக்குதித்து இன்பமாய் ஓடிய குழவி, பசி அடங்கிய பின் மேலும் பாலினை ஊட்ட எண்ணிப் பால் புட்டியைத் தன் வாயருகே தாய் கொண்டுவரும் போது, அதனை நாவால் அப்புறம் தள்ளி வெறுத்து முகத்தினையும் திருப்பிக்கொள்கிறது. ஒருவரிடத்திலேயே இவ்வாறு ஓரே பொருள் பலவகையான உணர்ச்சிகளைப் பலவேறு நிலைகளில் எழுப்பிவரக் கண்கிறோம். உவகை பொங்கிவரும் உணர்ச்சிநிலை, விளையாட்டுப் பொருள்களைக் கண்டபோதும், குழவியினிடத்தே எழுந்து விளங்கும்; வாய்க்கு இனியபொருள்களைக் கண்டபோதும் மிக்குத்தோன்றும்; குழவிகளோடு விளையாடும் போதும் நிலவி நிகழும். எனவே, இவ்வாறு ஓரே உணர்ச்சிநிலை ஒருவரிடமே பலவேறு பொருள்களால் எழும் என்பதாயிற்று.



## VI. அச்சம்.

புறநிலை:- இந்த உணர்ச்சிகள் குழவியினிடம் எழும்போது அவற்றால் தீமை வாராதபடி காக்க வேண்டிச் சில பழக்கங்கள் அதனிடம் படிந்து வரவேண்டும். அவ்வாறு குழவியை வளர்க்கும் நிலையில், சில நுட்பங்களை அறிதல் இன்றியமையாததாம். ஆதலின், சில மெய்ப்பாடுகளை இந்த நோக்கத்துடன் ஆராய்வது பயனுடையதாம். அச்சம் என்பது குழவியினிடம் எழுவதனை நாம் எவ்வாறு அறிதல் கூடும்? குழவியோ வாய் விட்டுக் கூற அறியாது. அதன் நடத்தையைக் கொண்டே உணர்தல் வேண்டும். 'நம் எண்ணத்தைக் குழவியின் மீது

ஏற்றுகின்றோம்.' எனச் சிலர் கூறுவதும் உண்டு. மோரோ மறிவினை தோன்றி மறைந்த பின்னரே திடுக்கீடு மறிவினை வளர்கின்றது எனக் கண்டோம். இவற்றையே அச்சத்தின் முதல் நிலை எனச்சிலர் கொள்கின்றனர். அச்சம் எழும்போது வயிற்றின்மேல் இருக்கும் குழியில் பெரும் பள்ளம் விழுவதுபோல ஓர் உணர்ச்சி உண்டாகிறது. இதனையே "குலை நடுங்குகிறது" எனக் கூறிவருகின்றோம். ஆனால், குழவிக்கும் இவ்வாறே தோன்றுகின்றது என எவ்வாறு கூறமுடியும்?

செயற்கை அச்சம் :- அச்சம் பெரும்பான்மையும் பழக்கத்தால் எழுந்ததே அன்றி இயற்கை அன்றும். ஆனால், வாட்சன் (Watson) என்ற அறிஞர், பிறந்தது முதல் குழவிகளை ஆராய்ந்து, அச்சம் விளைப்பவை யாவை எனக்கண்டு விளக்கியுள்ளார். திடீர் என்று உரமாக எழும் தூண்டல்கள் அச்சத்தினை எழுப்புகின்றனவாம். பேர் ஒலி, நோய் முதலியவைகள் அச்சப் பொருள்களாம். பிடித்துக் கொண்டே இருந்து திடீர் எனக் குழவியைக் கீழே விட்டுவிடுவதுபோலச் செய்தாலும் குழவி அஞ்சுவதாகத் தோன்றுகின்றதாம். ஐந்தாம் ஆண்டு முடிவதற்குள் இவை மறைகின்றன. உடம்பில் காயம்படாதபடி அஞ்சுவதும், விலங்கு முதலியவற்றிற்கு அஞ்சுவதும் எஞ்சிநிற்கின்றன. ஆறும் ஆண்டில் புது வகையான அச்சம் ஒன்று தோன்றுகிறது. இல்லாத பொருள்களும், கற்பனைகளும் அச்சமூட்டத் தொடங்குகின்றன. இருட்டில்போவது என்றால் அச்சம், பேய் என்ற அச்சம், இன்னும் எத்தனையோ வகையான அச்சங்கள் எழுகின்றன. வயது ஏற ஏற இயற்கைக்கு அப்பாற்பட்ட நரகம், பூதம் முதலியவற்றினைப் பற்றிய அச்சமே வளர்ந்துகொண்டு வருகிறது.

பலவகை அச்சம் :- அச்சத்தின் புறநிலைச் செயல்களைக் கண்டு அகநிலை இயல்பினைக் கூறமுடியும் என உறுதி கூறுவ-தற்கு இல்லை. சிறுகுழந்தைகள் தங்களுடைய உணர்ச்சியைத் தங்குதடை இன்றி வெளியிடுகின்றன. வயது ஏற ஏறப் பல-வகையானக் போலிநிலைகள் வளர்ந்து வருவதால் அச்சம் எனக்கூறும் வெளி நிகழ்ச்சியைக் கண்டதும் அங்கெல்லாம் அச்சம் உண்மையில் உண்டு எனக் கூறுவதற்கு இல்லை. முன்னே நாம் கூறியபடி குழவிகள் அஞ்சி நடுங்கும் நிலையைத் தாமே விரும்புமாறு தம்மைப் பழக்கிக் கொண்டு பேயின் கதைகளையும் மாயாவிக் கதைகளையும் கேட்டு மகிழ்கின்றன. குழவி அஞ்சி நடுங்கியதும் பெற்றோரும் பிறரும் அதனை அருகே அழைத்து, மடிமீது இருத்திக் கொஞ்சிக் குலாவி அது வேண்டியவாறேல்லாம் செய்து அதற்கு ஓர் ஆறுதலை விளைவிப்பதனை அது நன்கு உணர்ந்ததும், போலியாக அஞ்சுவது போலக் காட்டிக்கொண்டு பிறரை அடக்கி ஆளத் தொடங்குகிறது. குழந்தை தான் வெட்கப்படுவதனை மறைப்பதற்காக நிற்கும் நிலையும் அச்ச நிலை போலத் தோன்றலாம். குழவி தன் அறியாமையை வெளிக்குக் காட்டு-வதற்கும் அஞ்சலாம். ஏதேனும் தவறு ஒன்று செய்து விட்டதாகக் குழவி உணரும்போது அந்த உணர்வே அச்ச-மாகக் குழவியை வாட்டலாம். பல அச்சங்கள் செயற்கை மறிவினையாக எழுவனவேயாம். பேரொலிகேட்டுக் குழவி திடுக்கிடும் என அறிந்த வாட்சன் என்பார் அப்பேரொலி எழுந்தோறும் அக்குழவியின எதிரே குழிமுயலை உடன் தோன்றுமாறு பழக்கத்திற்குக் கொண்டுவந்ததால் பேரொலி கேட்டு அஞ்சிய குழவி இந்தப் பழக்கத்தின் பயனாகக் குழி-முயலையும் கண்டு அஞ்சத் தொடங்கியது. இவ்வாறு பழக்கத்-தால் செயற்கை மறிவினைகளாக எழும் அச்சநிலைகள் பலப்-பலவாம்.

ஒத்துணர்ச்சி :— தன்னுடைய வலியற்ற நிலையையும் திறமற்ற நிலையையும் உணர்ந்த உணர்ச்சியாலும், இளிவரற் சுவையாலும் அச்சம் எழுந்து வளரும். இத்தகைய அச்சம் ஆக்கப் பாட்டிற்கு உதவாததொரு வீண் உணர்ச்சியேயாம். பெற்றோரும் பிறரும் தாம் எண்ணியபடி குழவி உரம் பெற்று விளங்காமையால் வாடுவதனை அக்குழவி கண்டதும் ஏதோ பெருந் தவற்றினைத் தான் செய்துவிட்டதாகவே அது நம்பி வாடி வதங்குகிறது. பெற்றோரின் வாட்டத்தைக் கண்டவுடன் குழவி அஞ்சி நடுங்கவும் காண்கிறோம். இதனாலும் அச்சமே ஓங்கி வளர்கிறது. படியாத குழவி ஒன்றன் ஆசிரியர் அதன் தலையை வெட்டிவிட்டதாகவும், அதனால் இரத்தம் வெள்ளமாக ஓடியதாகவும், வேறு ஒரு குழவியை வேறோர் ஆசிரியர் அடி அடி என்று நையப் புடைத்ததாகவும் இவ்வாறு நெஞ்சம் நடுங்கும் கதைகளைக் கேட்கும்போதும் குழவியின் மனத்தில் அச்சம் வளருமேயன்றி அதன் திறமை வளருவதே இல்லையாம். குழவி தானே அஞ்சி நடுங்காதபோதும், தம் பெற்றோர் அஞ்சி நடுங்கும் குறிகளைக்கண்டு தானும் அவர்கள் போலவே அஞ்சி நடுங்கி நிற்கிறது. ஓர் ஆராய்ச்சியாளர் தாய்மாரின் அச்சங்களையும், அவர்களது குழவிகளின் அச்சங்களையும் கணக்கிட்டுப் பார்த்தபோது அச்சம்மிக்க தாய்மாரின் குழவிகளே பெரிதும் அச்சமுடையனவாக விளங்கக் கண்டாராம்.

போலியும் உண்மையும் :— இவ்வளவும் கூறியமையால் குழவியின் அச்சம் எவ்வாறு எழுந்து வளர்கின்றது என்பது தெளிவாம். பெரும்பான்மையும் அச்சம் செயற்கையே எனக் கூறியதும் ஒருவாறு உண்மையாதல் விளங்கும். அச்சம் நம்மை அலைகுலைய வைப்பதன்றி எத்தகைய ஆக்கப்-பாட்டிற்கும் பயன் படுவதின்றாம். ஆதலின், அச்சத்தை

வளரவிடுதல் தக்கதன்றாம். நொண்டி என்றும், பூச்சிக்காரன் என்றும், நையாண்டி என்றும் அச்சமூட்டிக் குழவியை வளர்ப்பதனைப் போலப் பெருங்கேடு விளைப்பது வேறொன்றும் இல்லை. ஆனால், அச்சமே வேண்டாம் எனக் கூறுவதற்கும் இல்லை. புலி, கரடி, முதலிய கொடிய விலங்குகளுக்கு அஞ்சாமல் எதிர் சென்று இறப்பதோ மனித வாழ்க்கை.!

அச்சப் பேய் ஓட்டல் :— உலகத்தில் அச்சத்திற்கு ஓர் இடம் உண்டு. எனினும், வீண் அச்சங்களை எழுப்புதல் கூடாது. அவற்றைப் பேய் ஓட்டுவது போல ஓட்டி ஒழித்தல் வேண்டும். நேரே அச்சம் வேண்டாம் என எரிந்து விழுந்து தடுப்பது அச்சத்தை மேலும் வளர்க்கும் வழியேயாம். குழவியின் அச்சநிலையை ஊன்றி உற்றுநோக்கி ஆராய்தல் வேண்டும். மேலே நாம் அச்சம் தோன்றும் வகைகளாகக் கூறிய-வற்றில், எந்தவகையால், குறிப்பிட்டதொரு குழவியிடத்தே, அச்சம் தோன்றுகிறது என உணர்தல் வேண்டும். அந்த நிலைக்கு ஏற்ப மாற்றுநிலை ஒன்று அமைத்தல் வேண்டும். அச்சப் பேயினை ஓட்ட அறிஞர்கள் பல வழிகளை விளக்கி வைத்துள்ளார்கள். அச்சத்திற்குக் காரணத்தை நேரே போக்க முயலுதலும் ஒரு வழியாம். கொடிய விலங்குகளைக் கூண்டில் அடைத்தலும் கட்டிவைத்தலும் வேண்டும். அந்த நிலையில் வைத்துப் பழக்கிவந்தால் அச்சம் நீங்கும். தீங்கு விளைக்காத முயல் முதலிய விலங்குகளைப்பற்றி எழுகின்ற அச்சத்தைச் செயற்கை மறிவினையை எழுப்பும் வகையாலேயே மாற்றுதல் வேண்டும். குழிமுயலைக் கண்டு அஞ்சிய குழவியின் அச்சத்தைப் போக்கவேண்டுமானால், முன்னர் நாம் குறித்தபடி அக்குழவி விரும்பி உண்ணும்போது அந்த உணவோடு குழி-முயலை உடன் தோன்றுமாறு பழக்கி, உணவினைப் போலவே குழிமுயலையும் குழவி விரும்புமாறு செய்துவிடுதல் வேண்டும்.

வெளிப்பாட்டிற்கு இடமில்லாதபோது சில உணர்ச்சிநிலைகள் உரம் குன்றி மறைந்துபோகக் காண்கிறோம். பூனையைக் கண்டு அஞ்சுகின்ற குழவியின் எதிர் பூனையே தோன்றாதவாறு செய்து விட்டால், அத்தகைய அச்சமே எழ இடம் இல்லையாம். ஆனால், இங்கு ஒரு குறை உண்டு. பூனையைக் கண்டு அஞ்சுகிற அச்சம் பெரிதாகி உடலில் ஊறி நின்று இருந்தால் பூனை இல்லாதபோதும், கனவிலும், நிழலிலும் பூனையைக் கண்டு நடுங்கி அஞ்சிவரும். குறிப்பிட்ட நிலையில் வீணே அஞ்சுவது அறிவின்மையாம் எனச் சொல்லால் முழக்கி விளக்கிவைப்பது பழையநாள் தொடங்கி இன்றுவரையிலும் பெற்றோரும் பிறரும் கையாளும் முறையாம். பேசப் பேசக் குழவிக்கும் பெரிதும் எரிச்சலே உண்டாகும். அஞ்சும் பொருளில் நாட்டம் செலுத்தாதபடி குழவியின் நாட்டத்தை வேறு வழியில் திருப்பிவிடுவதும் சிறந்த வழியேயாம். ஆனால், எப்போதேனும் ஒருமுறை இருமுறை இவ்வாறு ஏமாற்ற முடியுமே அன்றி எல்லா நிலையிலும் இந்த வழியைப் பயன் படுத்த முடியாது. அந்த அந்த நிலைக்குத் தக்கவாறு இங்கே கூறிய முறைகளில் ஒன்றையோ பலவற்றையோ கையாண்டு வெற்றி பெறுதல் வேண்டும்.

## VII. வெகுளி

தடை :— அச்சத்தினைப் பற்றிச் சில குறிப்புகளைக் குழந்தையை வளர்க்குமுறையில் பயன்படுமாறு கண்டறிந்தது போல வெகுளியைப் பற்றியும் அறிதல் வேண்டும். வெகுளியில் ஆற்றல் பொங்கி வழிவதால் திறம்படச் செயல் புரிந்து சிறக்கவரும் நிலையினையும் முன்னரே குறித்துள்ளோம். வெகுளி என்பது ஏதேனும் ஒரு தடை தோன்றி நம்செயலைச் சிதைக்கும்போது எதிரூன்றலாக எழும் ஓர் உள்ளக்கிளர்ச்சி-யாம். இந்தச் சிக்கலற்ற நிலையிலிருந்து பலவகையான சிக்கல்-

களர்க வெகுளி வளர்கிறது. தடைமிக்கு வருமானல் வெகுளியே அச்சமாக மாறுவதும் உண்டு. தணிகட்டுதல் உடையணிதல், உடைகழற்றல், குளித்தல், உறங்கப்போதல் என்ற பலவகைச் செயல்களிடையேயும், பிறர்வந்து இடை-புகுந்தால், சிவ வழிபாட்டில் கரடி புகுந்ததாகக் கருதிக் குழவி வெகுண்டு வீழ்கிறது. குழவியினிடம் வெகுளி வெளிப்படும் வடிவினையும் அறிந்துள்ளோம். மேலும் மேலும் குதிப்பது, உதைத்துக்கொள்வது, தரையைக் காலால் தட்டுவது, தரையில் வீழ்ந்து புரள்வது, ஒன்றும் செய்யாமல் விறைத்து நிற்பது, உண்ண வாய் திறவாது இறுக மூடிக்கொள்வது, பேச்சுக் கற்றுக்கொண்டபோது மறுத்துரையாடுவது, சூள் உரைப்பது, வைவது - இவ்வாறு எல்லாம் குழவிகளிடையே வெகுளி வெளிப்படக் காண்கிறேம். முன்னர் நாம் கண்டது போல இந்த வெகுளி என்பது போராட்டத்திற்கு ஏற்ற மெய்ப்பாடு என்பதும் தெளிவாகிறது. சண்டித்தனமும், எரிச்சலும், எதிர்ப்பும் குழவிகளிடை ஏன் எழுகின்றன என ஆராய்ந்த அறிஞர்கள், "பெற்றேரோ, பிறரோ, குழவியின் உரிமையை அடிக்கடித் தடுத்துத் தவருன வழியில் நடத்திய-தாலேயே பெரும்பான்மையும் எழுகின்றன" எனக் கூறு-கின்றூர்கள். குழவியினிடம் வெகுளி எழும் முறை இதுவே-யாம். வெகுளி எளிதில் புலப்படவரும் நிலைகள் சில உள. பசித்து வாடும்போதும், களைத்து மெலிந்து கிடக்கும் போதும், நோயால் வருந்தும் போதும் வெகுளி எளிதில் பொங்கி வழியும். இவையே வெகுளி கொழுத்து வளரத்தக்க செழித்த வயல்களாம்.

சிதைவு :— குழவியின் செயலும், நிலையும் சிதைவதனை அது பலவகையாக உணர்கின்றது. இயற்கை வழியாக எழும் சிதைவே பெரும் பான்மையாம். கீழே வீழும் குழவி தரையை

உதைக்கின்றது; சுவர் முட்டினால் குத்துகின்றது. இவ்வாறு கடுமையாக அடித்தும் உதைத்தும் வரும் குழவி வளர வளர இத்தகைய எதிரூன்றல்களின் பயனின்மையைச் சிறுகச் சிறுக உணர்கின்றது. இபற்கையை வெல்லக்கருதி பலவகை எந்திரங்களையும் அடக்கி ஆண்டு சிறந்து திகழ்கிறது. மக்கள் வழியே எழுகின்ற சிதைவினையும் குழவி பின்னர் உணர்ந்து கொள்ளுகிறது. தான் விரும்பியவாறு போகாதபடியும் செய்யாதபடியும் பெற்றோர் தடுத்து வருவதனைக் குழவி உணராதிருக்க முடியுமோ? பெற்றோரையும் அடிப்பதும் பிடிப்பதும் நிகழ்வதோடு மேலே குறித்தபடி எல்லாம் வெகுளி பெற்றோரிடமும் பொங்கி வழியக் காண்கிறோம். இத்தகைய எதிர் ஊன்றல்களும் பெற்றோரிடம் இன்றி மற்றோரிடம் பயன்பட வாராமையால் வேறு வகையாக மக்கள் மனத்தினைக் கவர்ந்து தன்வழியே திருப்ப முயன்று குழவி வெற்றி பெறுகிறது. தானே தன் நிலையையும் செயலையும் சிதைத்துக் கொள்வதனை மூன்றும் படிநிலையாகச் சிறிது காலமானவுடன் குழவி உணர வருவதும் இயல்பேபாம். "இவ்வாறு செய்யாமற்போய் விட்டேனே" என்று, குழவி, கழிந்ததற்கு இரங்குவது புதுமை அன்று. சில குழவிகள் கணக்கைத் தவறாகக் கூட்டியதும் விரலைப் பல்லில் வைத்துக் கடிப்பதனையும், தரையில் கையை அறைந்து கொள்வதனையும், தலையில் அடித்துக் கொள்வதனையும் காணலாம். உலகிடை நாம் சென்ற இடத்தெல்லாம் வெற்றியே நம்மை எதிர் கொண்டழைக்கும் என்பதற்கு இல்லை. ஆதலின், தோல்வியைக் கண்டு மனம் குன்றிப்போகும் மனப்பான்மை குழவியினிடையே எழாதபடி காத்தல் வேண்டும். அங்ஙனமானால், வாழ்க்கையைப் பற்றிய கொள்கைகள் பலவகையான அனுபவங்களின் பயனாக விளங்கி உருப்பட்டு வரும்போது இத்தகைய இடர்ப்பாடுகள் எழாது போகும்.

குறுக்கு வழி :— சிதைவு உணர்வு எழுந்ததும் நேரே செயலுறும் நிலையினை இதுவரை கண்டோம். ஆனால், பல இடங்களில் இவ்வாறு நேரே அந்த எதிர்ப்புத் தோன்றாமல் மறைவாகத் தோன்றவும் காண்கிறோம். நேர்வழியிற்போல ஆற்றல் கடுமையாக இயங்கிவருவதால், கொடுஞ்செயல் புரிந்து நிற்கும் குழவிகளையும் காண்கிறோம். நேர்வழியில் தடை செய்வாரை எதிர்த்த நிலைபோய் மறைவழியில் அந்த எதிர்ப்பு வேறு ஒருவர்மேல் பாய்கிறது. அலுவல் நிலையத்தில் மேலாள் கிளப்பிய எரிச்சலைப் பலரும் தம் கீழாள்கள் மேல்காட்டுவதும், வீட்டிற்குத் திரும்பியபோது குழவியின்மீது பாய்ச்சுவதும் உலகறிந்த உண்மையேயாம். பள்ளி ஆசிரியர் ஒரு குழவியின் செயலைச் சிதைத்தால், அது தன் அருகிலிருக்கும் மற்றொரு குழவி அசைவது கண்டு பின்னையது தன்னை நெருக்குவதாகக் கொண்டு இதன்மேல் வெகுண்டு விழுகிறது. ஒரு குழவியும் அருகே இல்லையானால் தன் பலகையைப் "பொத்" என்று கீழே போடுகிறது. எட்டை வீசி எறிகிறது. இந்த இயல்பு கீழ்நிலை உயிர்ப் பொருள்களிடையேயும் விளங்குவதனை ஆராய்ச்சியாளர் விளக்கிவைத்து உள்ளனர். கூட்டில் எலியை அடைத்து விடுகின்றோம். கூட்டின் கம்பிகளை எலிதாக்குகின்றது. அக்கம்பிகளில் மெல்ல மின்னோட்டம் ஓடுமாறு செய்கின்றோம். எலி கம்பியைத் தாக்கும்போது எல்லாம் மின்னோட்டம் தன்னைத் தாக்குதலால் பதை பதைக்கின்றது. கூட்டில் ஒரு பொம்மையை வீசி எறிகிறோம். அந்த எலி தன் மன எரிவையும், வஞ்சத்தையும் அந்தப் பொம்மையின்மேல் காட்டுகிறது. வீசி எறியப் புத்தகமும் பொம்மையும் குழவியின் அருகே இல்லையானால் சிதைவு நிலையை உணர்ந்த குழவி தன்னுள்ளே பொங்கிய ஆற்றல் ஓய்ந்து அடங்கும் வரை, கதறிக் கூவி, அலைந்து அடங்குகிறது. உள்ளே பொங்கிய ஆற்றல் எவ்வாறேனும் வெளியாக வேண்டுமாதலின், இவ்வா-

றெல்லாம் நடந்து கொள்கிறது என்பது தெளிவாகிறது. இப்படிப்பட்ட நிலையில் அதன் செயற்கையைத் தடுப்பதால் ஆற்றல் ஓயுமோ? ஓயவே ஓயாது. ஆதலின், தடையால் பயன் இல்லை. அந்த ஆற்றலை, நல்லவழியிற் பயன் படுத்த வகை செய்தல் வேண்டும். மேலும் மேலும் தடையையும் தோல்வியையும் குழவி காணுதவாறு வாழும் முறையில் அதனைப் பழக்கிவைக்க வேண்டும். நம்மேல் நம்பிக்கையும், அன்பும், குழவியினிடம் எழுமானுல் அவ்வாறு செய்வது அருமையன்றும். மற்ரொரு மறைவழியும் குழவியினிடம் காண்கின்ரேம். அது மிகத் தீயதாகும். அங்கே இயங்கு நிலையே தோன்றுவதில்லை; அடங்கு நிலையே உண்டு. குழவி உடனே செயற்பட்டு நில்லாமல் தடையினையும் சிதைவினையும் தோல்வியினையும் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுகி நிற்கின்றது. "இந்த நிலையை எவ்வாறு எதிர்த்து நின்று பழிக்குப் பழிவாங்குவது" என்பது இடிந்தமனம் உருப்போடும் மந்திரமாம். அதற்கேற்ப ஒருதிட்டம் வகுத்துக் கொண்டு சமயம் பார்த்திருக்கும் சூழ்ச்சி நிலையில் குழவி நிலைத்து விடுகிறது. மனமுடைந்து போகலாம். தடையும் சிதைவும் மிக்கிருப்பின் குழவி வெகுளி கெட்டு அஞ்சி நடு நடுங்கி நிற்கிறது. இவ்வாறு எழும் பெருங்கேடுகளைப் ப்ராய்ட் (Freud) முதலியோர் விளக்கிக் கூறுவதனைப் பின்னே காண்போம்.

வெகுளி வகைகள் :— ஆதலின், இத்தகைய வெகுளி பொங்கி வழிவதனை எவ்வாறு அடக்கி ஆளக்கூடும் என அறிவது இன்றியமையாததேயாம்; வெகுளிதான் யாது? தடைகளைத் தாண்டும் முயற்சியேயாம். இந்த அடிப்படையை உணர்ந்த பின், அதனைத் தள்ளத்தக்கது எனவோ, இகழத் தக்கதெனவோ எவ்வாறு கூறமுடியும்? தடையைத் தாண்டுவதற்கு எனப் பொங்கும் ஆற்றல் அதற்குத் தக்க வகையில்

பாயவில்லை என்ற குற்றம் ஒன்றே இங்குக் கூறக்கிடக்கின்றது. அவ்வாறு தக்கவழியிற் செலுத்த முயலுவதே பெற்றோர் செய்ய வேண்டியதாம். அச்சநிலையிற்போல இங்கும் வெகுளி எழும் நிலையை நாம் நன்றாக உணர்தல் வேண்டும். வெகுளியும் பல வகையாக விளங்கி வரலாம். உடனே திருத்தம் பெற்று பொருத்தமுற்று நிற்கவேண்டிய நிலையில், தடை விரைந்து எழுவது காரணமாக, வெகுளியும் விரைந்து எழலாம். வெகுளி வந்து இயங்குவதனை அனுபவித்த பின் அதில் ஈடு-பட்டு அந்த அனுபவத்தை மிக மிக விரும்பி, மேலும் மேலும் வெகுண்டு நிற்கலாம். பிறர் கருத்தினைக் கவரவும், எல்லோரையும் தன் முகமாகத் திருப்பவும் ஈதொருவழியாம் என உணர்ந்து அவ்வாறு அவர்களை அடக்கி ஆளக்கருதிய போதெல்லாம் குழவி வெகுண்டு வரலாம். பல முறை வெகுண்டதன் பயனாக வெகுளிநிலை பழக்கத்திற் படிந்து விடலாம். வேறொரு மனநிலையை மறைக்கும் கருவியாக வெகுளித்தோற்றம் பயன் படலாம். தான் கருதியதனை மிக மிகச் சிறப்பாக உள்ளத்தே வைத்து எண்ணியபின் அதற்கு எனத் தடைகள் எழுவதனைக் கண்டதும் வெகுளி பொங்கி வழியலாம்.

சிக்கம் :— இவ்வாறு பல வகையாக எழும் வெகுளி வகைகளில் குறிப்பிட்டதோர் நிலையில் எழும் வெகுளி எவ்-வகையைச் சேர்ந்தது என முதலில் உணர்ந்தால் அன்றி அதனை மாற்றும் வழியை உணர்வது அருமையிலும் அருமையாம். எவ்வாறு தடையைத் தாண்டுவது என அறியாத குழவி பல வழியிலும் ஆற்றல் பொங்கிவழிய வெகுண்டு நிற்பது பற்றி அதனை வெறுக்கப்போமோ? "வளையங்கள் சேர்ந்த சிக்கத்-தினைக் கழற்ற நாம் அறியாதபோது, நாம் எண்ணியபடி அந்த-சிக்கம் கழன்று வாராததால், அதனை நோவது எவ்வளவு

அறிவுடைமையோ, அவ்வளவு அறிவுடைமையேயாம், வெகுண்டுவரும் குழவியை நோவதும்." என ஓர் ஆசிரியர் கூறுகின்றார். சிக்கத்தை ஆராய்ந்து கழற்றும் வழியைக் கற்றுக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனமே வெகுளி நிலையையும் ஆராய்ந்து பொங்கிவழியும் ஆற்றல் தக்கவழியிற் பாய வழி அறிதல் வேண்டும். அவ்வாறு ஆராய்ந்து, மன எரிவினை விளைத்தது யாது என அறிந்தால், அந்தமன எரிவினைத் தீர்ப்பதே வெகுளியைப் போக்கும் தலை சிறந்த வழியாம். அது முடியாதபோது வேறுபிற வழிகளைத்தேட முயல வேண்டும். ஒன்றைக் கருதியபோது அதற்குத் தடையாக எழுந்ததனைப் போக்க முடியாமற்போனால், முன் கருதியதினும் வேறொன்றில் குழவி தன் மனத்தினைச் செலுத்திவருமாறு வழிசெய்தல் வேண்டும். குழவிக்கு அதுவிரும்பி நிற்கும் மற்றொன்றில்தான் அக்கறை பிறக்கும். நாமாக புதியது ஒன்றனை அக்குழவி நாடுமாறு செய்வது அருமையாம். 'கருதின முடிவினை அடையாதவாறு குறுக்கே எதிரிட்ட தடையைத் தாண்டுவது முடியாது' என்ற எண்ணமே தோன்றுதபடி அந்த முடிவினையே குழவி அடைய வேறு வழிகளை உணர்ந்து பின்பற்றிச் செல்லுமாறு அதனை ஊக்கிப் பழக்கிவைக்க வேண்டும்.

பலவழி :— வெகுளியைப் போக்க இவ்வாறு பல வழிகள் இருத்தலின் ஒரே வழிதான் உண்டு என எல்லா நிலைகளையும் ஒன்று போலக் கருதுதல்கூடாது. வெகுளி என ஒன்று தனியே உருப்பெற்று எழுந்து வானிற் பறக்கவில்லை. ஒவ்வொன்றனைக் கருதி முயலும்போது அங்கங்கே எழும் தடையின் மீது முட்டிக்கொள்வதே வெகுளியாதலின் "எந்த இடத்தில் முட்டிக்கொள்கிறோம்." என்பதனை உணர்ந்து அந்த அந்த முட்டுப்பாட்டிற்கு ஏற்பத் தப்பும் வழிகளையும் உணர வேண்டும்.

அனைத்தினையும் கூட்டி முட்டுப்பாடு என்ற ஒரு பெயரால் விளக்க முயலுவது பயனற்றதாம். தன் சுற்றுப்புறச் சூழலோடு மேலும் மேலும் சிறந்த வகையிற் பொருத்தமுற்று வருமாறு குழவிக்கு நாம் வழிகாட்ட வேண்டும். இதனை விட்டு நேரே வெகுளி உணர்ச்சியின் ஆரவாரத்தை அடக்க முயன்றால், தடைபடும் ஆற்றல் வெள்ளம் வேறு ஒரு வழியாகப் பீறிட்டுக் கொண்டு பாயும்; வெகுளி மாறாதாம். மேலும் மேலும் பொங்கிவழியும் அந்த ஆற்றல் பொருத்தமுற்றுப் பாயக்கூடிய வழியையே நாடவேண்டும்.

## VIII. நகையும் மகிழ்ச்சியும்

மகிழ்ச்சி நாட்டம் :- இன்ப ஆக்கமும் துன்ப நீக்கமுமே மக்கள் வாழ்க்கையின் முடிந்தபொருள் எனக் கூறக் கேட்டிருக்கிறோம். மகிழ்ச்சி பொங்குகிறது எனப் பேசுகிறோம். வேதாந்த நிலையிற் புகாமல் நம் நடத்தைநிலையைக் கண்டு உணரும்போதும், சில வகையான செயற்பாடுகள் நிகழும்போதும் அவற்றை ஒட்டி எழும் அனுபவமாகவே மகிழ்ச்சி விளங்குகிறது. ஆதலின், செயலினிடையோ உணர்வினிடையோ அன்றித் தனியே நாடுவது அறியாமையேயாம். மகிழ்ச்சியை மட்டும் நாடுவோர் மகிழ்ச்சி பெறுவதில்லை.

குழவி நகை :- மகிழ்ச்சிநிலை குழவியினிடத்தே எவ்வாறு விளங்குகிறது? இங்கும் அதன் உடல் வேறுபாடுகளைக் கொண்டே நாம் ஒரு முடிவிற்கு வரவேண்டும். மகிழ்ச்சியின் அறிகுறிகள் என நாம் நம்புவனவற்றைக் கொண்டே மகிழ்ச்சி உண்டெனத் துணிதல் வேண்டும். "உவகையும் நகைமுகமும் அனைத்திற்கும் அடிப்படை" என்பது திருவள்ளுவனார் கொள்கை. புன்னகையும், சிரிப்பும், விடாச்சிரிப்பும் என

மகிழ்ச்சியின் பல படிகளை வழங்கி வருகிறோம். குழவியி-னிடத்து இவை விளங்குமாற்றை ஆராய்தல் வேண்டும். குழவி தூங்கும்போது புன்னகை புரியக் காண்கிறோம். உண்ணலும், வெளிக்குப்போதலும், உறங்குதலும் தடை-யின்றி இழும் என நடந்து வருமானல் குழவி புன்நகை பூக்கின்றது. இவ்வாறு உடலமைப்பின் செயல் முறைகள் தங்குதடையின்றி நிகழும்போது தங்குதடையற்ற குழவி நிலையே புன்னகையாக மலர்கிறது. குழவி பிறந்த முதல் திங்களிலேயே இந்த புன்னகையைக் காணலாம். தாயையும் தந்தையையும் அறிவதில் குழவிக்கு ஒரு மகிழ்ச்சி உண்டு. அவர்கள் தன்னோடு விளையாடும்போது புன்னகை எழும். "எத்தகைய விளையாடல்கள் இவ்வாறு புன்னகையை எழுப்பு-கின்றன?" என அறிஞர்கள் ஆராய்ந்து வத்துள்ளார்கள். "சு" "சு" என்பதுபோல நாவினை வாயின் பல இடங்களிலும் வைத்து மூச்சினை உள்ளுக்கு இழுத்து ஒலிக்கின்ற ஒலிகள் பலவும் குழவிக்கு நகை ஊட்டுகின்றனவாம். கையினைத்தட்டித் தாளம் போட்டு வருவதனைக்கண்டும், கேட்டும், குழவி புன்னகை புரிகிறது. கிளு கிளுத்தாலும் (Tickle) குழவி சிரிக்கிறது. குழவியின் கைகளைப் பிடித்துக்கொண்டு நம் தலையைப் பக்கவாட்டத்தில் இருபுறமும் அசைத்துக்-கொண்டே இருந்து, அதன் தலையின் நேரே இருந்த நமது தலையை அதன் வயிற்றிற்காகத் திடீரெனக் கவிழ்ந்து கொடுப்பது ஒரு குழந்தை விளையாட்டு. இவ்வாறு செய்யும் போதெல்லாம் குழவி சிரித்தே வருகிறது. குழவியின் நெற்றியில் நம்நெற்றியை இடி (இது டீ கொடுப்பது என மருவி வழங்குகிறது) கொடுப்பது போலக் காட்டி "இடி", "இடி" (டீ, டீ,) எனக் கூறி அதன் வயிற்றிற்காகச் சாய்ந்து அதன் வயிற்றில் வாய்வைத்து "ப்ரு" என உதட்டினைத் துடிக்கவைக்கும் ஒலியை எழுப்பினல் குழவி சிரிக்கிறது.

இதிலே முன்னைய விளையாட்டோடு கிளுகிளுத்தலும் உண்டு. "தேள் வருகிறது,"; "நண்டு வருகிறது;" என்று கூறிக்-கொண்டே குழவியின் உடலில் பல புறத்தும் நம் கைவிரல்-களில் சிலவற்றை ஓட்டிக்கொண்டே சென்று முடிவாகக் கழுத்தின் அடியிலோ வயிற்றிலோ நெண்டினால் குழவி சிரிக்கக் காண்கிறோம். இதுவும் ஒரு கிளுகிளுப்பு வகையாம். உடலமைப்பு வகையாக எழும் தோற்றமாகிய புன்சிரிப்பு மக்களின் புன்சிரிப்பாக இவ்வாறு வளர்கிறது. இவ்வாறு வளர்ந்தபின் முதலில் தம் இயக்கங்களோடும், பின்னர்ப் பிற இயக்கங்களோடும் தோன்றும் இயக்கமே உண்மைப் புன்-சிரிப்பாக ஓங்குகிறது. குழவியினிடம் இயல்பாகப் பொங்கி-வரும் ஆற்றல், தடையின்றிப் பாயும் நடத்தைகளில் தோன்றும் ஒரு களிப்பே இவ்வாறு புன்சிரிப்பாக மலர்கிறது. வயது ஏற ஏறப் பிறரை எளனம் செய்யும் குழவி சிரிக்கத் தொடங்குகிறது.

பலவகை நகைகள் :— நகை எழுவதனை விளக்கப் பல பல கொள்கைகளை அறிஞர் விளக்கிவைத்து உள்ளனர். இந்தக் கொள்கைகளை ஜஸ்டைன் (Justine) என்பவர் ஆராயவேண்டிப் பல குழவிகளின் சிரிப்பினை அக்கொள்கை-களின்படி பாகுபாடுசெய்து கணக்கெடுத்தார். "முரண்பட்ட செய்கைகளையோ, பொருத்தமற்ற செயல்களையோ காணும்-போதுதான் சிரிப்பு எழுகின்றது" என்பது ஒருசாரார் கொள்கை. தலையில் முதுகின் பக்கமாகக் கண் அமைந்த பொம்மையைக் கண்டால் சிரிப்பது, இந்தக் கொள்கையை மெய்ப்பிக்கும் ஒரு சிரிப்பாகும். பல வகையான சிரிப்புக்-களையும் கணக்கிட்டு ஒப்புநோக்கியபோது, இந்த வகையாக எழும் சிரிப்புக்கள் நூற்றுக்கு 42 ஆகக் கிடந்தன. "காண்-போன் தன்னைத்தானே உயர்வாகக் கருதக்கூடிய நிலையில்

காணப்படு பொருள் இளிவரற் சுவை தோன்ற நிற்பதே சிரிப்பினை விளைவிக்கின்றது'' என்பது மற்றொரு கொள்கை. உருளைக்கிழங்கை வெந்நீரில் வேவ வைக்கின்றபோது தவறாகத் தன்கைக் கெடியாரத்தை உருளைக்கிழங்கு எனக் கருதி நீரில் இட்டபின்னர்த் தவற்றினை உணர்ந்து "பே", "பே" என விழித்து நிற்கும்போது எழுகிற சிரிப்பு இக்கொள்கையைப் பின்பற்றியதே எனக் கூறலாம். இத்தகைய சிரிப்புகள் நூற்றுக்கு ஒன்பதாகவே இருந்தன. "எதிர்பாராத புதுமை தோன்றும்நிலையே சிரிப்பிற்குப் பிறப்பிடம்'' என்பது மற்றொரு கொள்கை. மூன்று பெட்டியை எதிரே வைக்கின்றோம். ஒன்றின் பின் ஒன்றாகக் குழவிக்குக் காட்டி வருகின்றோம். ஒன்றில் மணல் இருப்பதனைக் காண்கிறது; மற்றொன்றில், நீர் இருப்பதனைக்கான்கிறது. மூன்றாவதில் ஒன்றும் இல்லாததை அறிந்ததும் விழுந்து விழுந்து சிரிக்கிறது. இச்சிரிப்பு இந்தக் கொள்கைப்படி எழுகிறது எனலாம். இத்தகைய சிரிப்புகள் நூற்றுக்கு 20 ஆம். "மக்கட் கூட்டத்தோடு கூடிக் குலாவும் நிலையே சிரிப்பினை விளைவிப்பதாம்'' என்பர் வேறு சிலர். விளையாட்டாகப் பேசிச் சிரிப்பதனை யார் அறியார்? ஓடிப்பிடித்தல் முதலிய விளையாடல்களில் பிடித்ததும் குழவி "ஓய்'' எனச் சிரிப்பது இந்த வகையாக எழும் சிரிப்பேயாம். இத்தகைய சிரிப்புகள் நூற்றுக்குப் பதினொன்றாகவே இருந்தனவாம்.

இன்னும் சிலவகைகள் :— "நெருக்கடியின் ஓய்வு தோன்றும் நிலையே சிரிப்பெழும் நிலை'' என்பது ஒருகொள்கை. பள்ளிக்குள்ளே வகுப்பில் அடைபட்டுக் கிடந்த குழவி பள்ளி முடிந்ததும் "ஓய்'' எனச்சிரித்து ஓடிவருவது நல்ல முறையில் நடவாத பள்ளிக்கூடங்களில் நாளும் நாம்காணும் காட்சியேயாம். சுண்ணாம்பில் ஒரு கோடுகிழித்து அதன்மேலேயே

ஒருகையில் குடையும், ஒருகையில் உருளைக் கிழங்கு வைத்த காண்டியும் கொண்டு நடந்து வருகின்ற ஆட்டத்தில், நடக்கும் போது வாயைமூடி உடலையெல்லாம் முறுக்கேற்றி வைத்தது போல நடக்கும் குழவி நடந்து முடிந்ததும் பெருஞ் சிரிப்புச் சிரிக்கிறது. இத்தகைய முறுக்கு நெகிழ்ச்சிச் சிரிப்புகள் நூற்றுக்குப் பத்தாகவே கிடக்கின்றன. சிலபோது தற்காவலாகவும் சிரிப்பு எழும் என்பது சில அறிஞர் கொள்கை. பொருளை இழந்தவன் அழுது புலம்புவதால் நேரிடும் தீமையினின்றும் காக்கவே இத்தகைய சிரிப்பு எழுகிறதாம். அழுகைச் சிரிப்பு என்ற வழக்கும் உண்டு. வெகுளிச் சிரிப்பும் உண்டு. இவை எல்லாம் இயற்கையாக எழும் உணர்ச்சிக்குப் போக்குவீடாக எழுவனவாம். இத்தகைய சிரிப்புகள் நூற்றுக்கு ஆறுக்குமேல் காணப்படுவதில்லை. நனவு நிலையில் படிந்து தோன்றாத களிப்பு, நம்மையும் அறியாமல் எழுவதுண்டு. இத்தகைய களிப்பாலும் சிரிப்புத் தோன்றும். நனவு நிலையில் தோன்றாத நெருக்கடி ஒன்று திடீர் எனத் தீர்ந்ததும் சிரிப்பு இவ்வாறு நம்மையும் அறியாது தோன்றுகின்றதாம். இத்தகைய சிரிப்புகள் நூற்றுக்கு இரண்டேயாம். ஆகவே, "சிரிப்பிற்கெனக் குறிப்பிட்டதொரு பொருள் வேறு தனியே கிடப்பது இல்லை" என்பதாயிற்று. பலவேறு நிலையில் இவ்வாறு எழுந்து தோன்றுதலின், அந்த அந்த நிலைமைக்கு ஏற்ற பொருளுடையதாக விளங்கும் என்பதே முடிபு.

முரண்பாடு :— இவ்வாறு பல கொள்கைகளையும் கூறிவருவோர் இந்தக் கணக்கை ஒப்புக்கொள்வர் என்பதற்கு இல்லை. பிற தலைப்பில் ஐஸ்டைன் காட்டிய சிரிப்புக்களைத் தம் கொள்கைக்கு ஏற்ற தலைப்பின் கீழே அடக்க அன்னோர் முயலுவர் என்று சொல்லவும் வேண்டுமோ? உயர்வும்

தாழ்வும் தோன்றும் நிலை என இவர் காட்டியவற்றை முரண்பாட்டினுள்ளே அடக்கி விடுவது அருமையன்று. இவ்வாறு பிறவற்றை அடக்குவதும் எளிதேயாம். ஆதலின், பலவகைக் கொள்கைகளை அறியும் வகையால் இந்தத் தலைப்புகள் பயன் படுகின்றன எனலாம். பலவேறு வகையாகச் சிரிப்பு எழுகின்றது என்ற உண்மையை இந்தக் கணக்கு நிலைநாட்டுவதாகக்கொண்டு அமைதி அடையலாம். இதற்கு மேலும் சென்று நகையின் இயல்பினை இங்கு ஆராயவேண்டாம். நகையின் முற்றியநிலை எல்லாம், முதியோர் வாழ்க்கையிலும் நடத்தையிலுமே புலப்படத் தோன்றுகின்றன. ஆதலால், குழவியைப் பற்றிய இந்தநூலில் பரக்கப் பேசவேண்டுவதில்லை. இதுபற்றியே பிற உணர்ச்சிகளின் வடிவினையும், இயல்பினையும், எழுகின்ற முறையினையும் பரக்கப் பேசாது குழவி நிலையை அறிவதற்கு வேண்டிய அளவிலும், குழவியை வளர்க்கும் வகைக்கு உதவும் அளவிலும் இங்குக் கூறிவருவதாயிற்று. இதுநிற்க.

நகையின் பயன் - நகையின் பயனை அளவிட முடியாது. சோறு நன்றாகச் சரிக்கவேண்டுமானல் நன்றாகச் சிரிக்க வேண்டும் என்றொரு வழக்கு உண்டு. தடையின்றி வாழும் வாழ்க்கையின் சிறப்பே நகையாம். தடை இல்லாதபோது உடலின் ஆற்றல், இழும் என ஒழுகி மிக்குப் பரவுகிறது வெற்றி விளையும்தோறும் இதனல் உடலில் ஓர் ஊக்கமும் உரமும் தோன்றுகின்றன. தடை எழுகின்றபோது இவை அத்தனையும் மறைகின்றன. தூக்கம் கெட்ட குழவி நகை என்பதின்றி அழுது அலைந்து அலைக்கழிக்கின்றது. வயிற்றின் கோளாறலோ, பிறவேறு வகை நோயாலோ, களைத்து அயர்ந்து சோர்வதாலோ உடலின் சமநிலை பிறழுமானல், நகை அங்கே விளைவது அருமையாம். நகை விளையாத இடங்கள் இவை

என உணர்ந்ததும் இவை வாராதபடி, கூடிய அளவு, தடுத்து வரவேண்டும் என்பதாயிற்று. நகை முகங்கொண்டு வாழும் வாழ்வே நாகரிகவாழ்வு. குழவியின் வாழ்க்கை நிலையில், நகைத்து நிற்கின்ற நிலையே அடிப்படையாக அமையுமாறு அதனைப் பழக்குதல் வேண்டும். மகிழ்ச்சி என்றால் மன எரிவின்றி வாழ்வதே ஆம். "இப்படிச்செய்ய வேண்டும்; அப்படிச்செய்ய வேண்டும்" என்று பேசுவது மகிழ்ச்சி அன்று. மாம்பழத்தை உண்கிறோம். மகிழ்ச்சி அங்கே பொங்கி வழிகிறது. மகிழ்ச்சி உள்ளவரையிலும் பேச்சே எழவில்லை. "நன்றாக இருக்கிறது" என்று பேசுவது மகிழ்ச்சியின் பின் நிலையேயாம். நல்வாழ்வு வாழ வாராது, நேரே மகிழ்ச்சியை நாடிச் செல்வோரும் அதனை அடியோடு கைவிட்டு, மிகு-தொலைவு அப்புறம் செல்வோரேயாம். மகிழ்ச்சியை வளர்க்க வேண்டும்; தங்குதடை இன்றிக் குழவிகளை ஆடவிட்டு அந்த மகிழ்ச்சிநிலையை அவை அனுபவிக்குமாறு செய்தல் வேண்டும்.

"கொதிக்கின்ற வாறுங், குளிர்கின்ற வாறும்,
பதிக்கின்ற வாறு இந்தப் பாரக முற்றும்
விதிக்கின்ற ஐவரை வேண்டாது உலகம்
கொதிக்கின்ற காயத்து நாலொன்று மாமே."

(திருமந்திரம் — 2621.)

---

# 13. நனவிலி மனம்

---

## I. மனத்தின் பல நிலைகள்

மூளைக்கோளாறு:- மூளைக்கோளாறாலும் பிறவகையாலும் வருந்துபவர்களது நோயினை மருந்துகொடுத்தே முன்னெல்லாம் மருத்துவர்கள் தீர்க்க முயன்றார்கள். சென்ற நூற்றாண்டில் சார்கோ (Charcot) என்பவர் இவற்றில் பெரும்பாலானவை மனம் முறிதலால் எழுவனவே என்று கண்டார். அத்தகைய நோயாளர்க்கு வசியநிலை உறக்கத்தை (Hypnotic sleep) விளைவித்து, மனம் முறிந்ததன் காரணத்தை அவர்களே தெரிவிக்குமாறு செய்தார். அவ்வாறு தெரிவித்த உடனேயே அத்தகைய நோய்கள் நீங்கினவாம். ப்ராய்ட் (Freud) என்ற மருத்துவர் இவரிடம் கற்க வந்தபோது இந்த உண்மையை உணர்ந்தார். வசியநிலை உறக்கம் வரச் செய்யாமலே நோயாளியை ஓய்ந்த நிலையில் அமைதியாகப் பேசவைத்து மனமுறிவின் காரணத்தைப் ப்ராய்ட் அறியத் தொடங்கினர். "உடலைப் பற்றிய நோய்களும் எண்ணங்களின் பயனாக எழும்" என்ற உண்மையைக் கண்டார். தம் வாழ்நாள் முழுதும் இத்தகைய நோயாளிகளில் பலரை ஆராய்ந்து நோய்தீர்த்து உதவிவந்தார். அதன் பயனாகத் தாம் உணர்ந்தவற்றைக் கோவை செய்து ஒரு கொள்கையாக உருப்படுத்தி வெளியிட்டுள்ளார். உலகம் பெரும்பாலும் அறியாத இந்த உண்மையை அவர் விளக்கிவைப்பது ஒரு புராணக்கதையே போலத் தோன்றுகிறது. புராணக்கதைகளின் தத்துவார்த்தத்தை அறிவதேபோல அவர்கொள்கையின் உண்மையினையும் அறியவேண்டும்.

குழவி நினைவு :— நாம் கருவுற்ற நாள் முதலாக நிகழ்ந்த செயல்கள் அனைத்தும் நம் மனத்தில் பதிந்தே உள்ளனவாம். அழிவது அன்றோ அருமை. மக்கள் தோன்றியது முதல் நிகழ்ந்த மக்கள் இனத்தின் அனுபவமும் கருவிலேயே உருவுற்று உள்ளதாம். முன்னோரின் நினைவும் நம்முன் ஒளிர்வதாலேயே முன்னோரது உடலே நம் உடலிலும் இயங்கி வருகின்றதாம். ஆனால், பொதுவாக இவை அனைத்தும் நினைவிற்கு வருவதில்லை. ப்ராய்ட் என்பாரிடம் வந்த நோயாளிகள் இப்படி மறந்து போன அனுபவத்தாலேயே நோய் கொண்டு திரிந்தார்களாம். தம்மனநிலை ஆராய்ச்சியால் அந்த அனுபவத்தை மீண்டும் நினைவிற்குக் கொண்டுவருமாறு செய்ததும் நோய்தீர்ந்ததாம்.

மனத்தில் மூன்றுபடை :- ஒரு சில மக்களின் பெயர்களை நாம் நினைவு கூட்டும்போது உடனே நினைவிற்கு வருவதில்லை. "நெஞ்சிலே இருக்கிறது நினைவிற்கு வரவில்லை" என்கிறோம். வேறு வேலையாக இருக்கும்போது அந்தப் பெயர் 'திடீர்' என நினைவிற்கு வருகிறது. இத்தகையவை நாம் அடியோடு மறந்து போனவை அல்ல. எனவே, நினைவுகள் நனவில் இருப்பன, நனவில் அடங்கிக் கிடப்பன, நனவற்றன என மூன்று வகையாம். இதற்கேற்ப நம்மனமும் மூன்று படையாக இருக்கின்றது எனலாம். நனவுநிலை (The conscious) நனவடிநிலை, (The subcnscious) நனவிலிநிலை (The unconscious) என்பனவே, மேற்படை மனம், நடுப்படை மனம், அடிப்படை மனம் என்று ஆகும். வில்லியம் ஜேம்ஸ் (William James) என்ற ஆசிரியர் இவற்றினை விளக்க ஓர் உவமை கூறுகிறார். வடபெருங் கடலே (The Arctic ocean) பனிக்கடலாம். அதிலிருந்து பெரும் பனிப்பாறைகள் அட்லாண்டிக் மாபெருங்கடலிற் (The Atlantic Ocean)

புகுமாம். இவை மலை மலையாக உள்ளவை. ஆனால், நீரின் மேலே இந்தப் பனிப் பெரும் பாறைகளின் கொடுமுடிகள் மட்டுமே சிறிதளவு தோன்றும். பனிப்பெரும் பாறையை முழு மனநிலையோடு ஒப்புமைப்படுத்திக் கூறும்போது சிறிதளவு தோன்றும் கொடுமுடியை நனவுநிலையோடு ஒப்புமை கூறலாம். அவ்வாறு நிலையாகத் தோன்றிக் கிடக்கும் பகுதிக்குக் கீழே-யுள்ள சிறுபகுதி சுற்றியுள்ள அலைவீச்சினால் தோன்றியும் வரும். இதனை நனவடிநிலையோடு ஒப்புமை கூறலாம். இதற்குக் கீழாகப் பெருமலை போலக் கிடக்கும் பனிப் பெரும் பாறை தாக்கினால், பெரிய கப்பல்களும் அச்சு வேறு ஆணிவேறாகச் சிதைந்து உடையக் காண்கிறோம். இதனை நனவிலி நிலைக்கு ஒப்புமை கூறலாம். நனவுநிலை முழுமனநிலையில் கோடியில் ஒரு பங்கே என்றும் கூறிவிடலாம். புறக் காற்றாலும், பிறவற்றாலும் இந்தப் பனிப் பெரும் பாறை தலைகீழாகப் புரளுவதும் உண்டு. அதுபோலச் சிலபோது நனவிலி மனம் நனவாக மாறுவதும் உண்டு. இத்தகைய மனமாற்றம் சிறுகச் சிறுகவும் எழலாம்; திடீர் என்றும் எழலாம்.

## II. காதலும் தடையும்

குழவியின் காதல் :— நனவிலி மனத்தில் நாம் மறந்து போன குழவி அனுபவங்கள் நிறைந்து இருத்தல் வேண்டும். குழவி தாயினிடம் பாலுண்டு இன்புறுகிறது. வெளிக்குப் போகத் தாய் உடனிருந்து உதவிய போது வயிற்று நெருக்கடி தீர்ந்து இன்புறுகிறது. தாலாட்டி உறங்கவைக்கும் போது மகிழ்ச்சியுறுகிறது. பாலூட்டி வாரி அணைத்து முத்தமிட்டு உச்சிமோந்து கொஞ்சிக் குலாவிச் சீராட்டிப் பாராட்டித் தாலாட்டித் தாய் தூங்கவைத்து வரும்போது ஊற்றின்பமும், செவியின்பமும், காட்சி இன்பமும், சூட்டின்பமும், சுவை

இன்பமும், முகரும் இன்பமும், அன்பு இன்பமும் பெற்றுக் "கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியும் இன்பமும் ஒண்டொடி கண்ணே உள" எனக் குழவியும் பாடாது பாடிப் புன்னகை பூத்து நிற்கின்றது. காதலன் கூறும் 'ஒண்டொடி' தன் காதலியேயாம். குழவி கூறும் 'ஒண்டொடி' தன் தாயேயாம். பொதுவாக ஐம்புல இன்ப நாட்டத்தைக் காதல் எனக்கூறலாம். இதனையே ப்ராய்ட் என்பவர் குழவியின் காமம் என்பர். இது கண்டு பலர் நடுங்குவது உண்டு. "குழவி மருங்கினும் கிழவ-தாகும்" எனப்பாடிய தொல்காப்பியர் வழிவந்த தமிழர் இதன் உட்பொருளை அறிவர். குழவி தாயின்மேல் அன்பு கொள்ளும்-போது பிறர்மேல் தாய் அன்பு கொள்வதனைப் பொறுப்ப-தில்லை; தந்தையை வெறுக்கும் இயல்பும் குழவி உள்ளத்தின் இயல்பே என்பது அவர் கொள்கை. ஈடிபஸ் (Oedipus) என்ற அரசிளஞ் சிறுவன் தன் தந்தையைக் கொன்றான் என்று ஒரு கிரேக்கப் புராணக்கதை வழங்குகிறது. தந்தையை வெறுக்கும் நிலை இவ்வாறு முற்றி ஈடிபஸ் நிலையாம் மனக் கோளாறாக வளர்தல் கூடுமாம். இதனை ஈடிபஸ் கோளாறு (Oedipus Complex) எனப் ப்ராய்ட் வழங்குகின்றார்.

தடை :— மேற்கூறிய காதல் இன்பமும் உணவு இன்பமுமே குழவியின் பேரின்பங்கள். இவை நம் நினை-விற்கு வாராமல் மறைந்தது ஏன்? சுற்றுப்புறச் சூழலாய் அமைந்து குழவியை வளர்ப்பவர் அனைவரும் பேருண்டியையும் காமத்தையும் பற்றிப் பேசுவதனை வெறுப்பவரே ஆம்; அவற்றில் நாட்டம் இருத்தல் கூடாது என வற்புறுத்துபவரே-யாம். இதுவே நம் நாகரிகத்தின் இயல்பு. இத்தகைய தடைகளாலேயே இவற்றைப்பற்றி நனவில் எண்ணாத நிலை எழுகிறது. ஆனால், இந்த எண்ணங்கள் அழிவது இல்லை. அழியாத பொருண்மைச் சட்டத்திலும், (Law of Conser-

vation of matter) அழியாத ஆற்றற் சட்டத்திலும் (Law of conservation of energy) நம்பிக்கை கொள்ளும் உலகம் இந்த எண்ணங்கள் மட்டும் அழியும் எனக் கொள்ளுமோ? இவை நனவிலி; மனநிலையை அடைகின்றன.

தணிக்கையாள் :- இந்தத்தடைகள் காரணமாக நனவிலி நிலைக்கும் நனவு நிலைக்கும் இடையே ஓரமைப்பு வளர்ந்து எழுகிறது. போர் நெருக்கடியிலே எல்லாச் செய்திகளையும் துறைத்தனத்தார் வெளியிட விடுவது இல்லை. சில செய்திகளை வெளிவாராமல் தடுத்து விடுகின்றனர். நாம் நண்பர்களுக்கு எழுதிவரும் கடிதங்களையும் தணிக்கை செய்கின்றனர். அங்ஙனமே, உலகம் ஒவ்வும் கொள்கைகளும் எண்ணங்களும் மட்டுமே நனவிற்கு வருகின்றன. அத்தகையன அல்லாதவை நனவிலி நிலைக்கு ஓடிப் பிழைக்கின்றன. இவ்வாறு செய்ய ஓர் அமைப்பு இருத்தல் வேண்டும். அந்த அமைப்பே இந்த எண்ணங்களை மேல் எழாதவாறு தடுத்து விடுகின்றதாதல் வேண்டும். இதனைத் தணிக்கையாள் (Censor) என்றே ப்ராய்ட் வழங்குகிறார். நாம் தணிக்கை அமைப்பு என்போம். ஊராரிடையே கூத்தாட வருபவன் அந்த ஊரார் விரும்பும் கூத்தை அன்றோ ஆடவேண்டும்? அதுபோல உலகம் விரும்பும் எண்ணங்களே நனவுநிலைக்கு வருகின்றன. புனிற்றிளம் பருவம் நீங்கியதும் தாயோடு மட்டுமேயன்றிப் பிறரோடும் குழவி கூடிக்குலாவி ஆடிப் பழகி வருகிறது. தாயின் பின்னேயே திரிந்த காதல்நிலை உள்ளடங்கி மறைகின்றது. பழையவற்றை மறப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும். பின்னர் இளமைப்பருவம் தொடங்கியதும் காதல் எண்ணம் உடல் வளர்ச்சிக்கு ஏற்ப வளர்ந்து வருகிறது. அப்போதும் நனவுநிலை முழுதும் இந்த எண்ணமாகவே தோன்றாததன் காரணம் உலகத்தின் தடையேயாம். 'நனவிலி நிலையில் உள்ள

நினைவுகள் பெரும்பான்மையும் உலகம் கேட்க விரும்பாது தடைசெய்யும் காம எண்ணம் முதலியனவே' என ப்ராய்ட் தம்மிடம் வந்த நோயாளிகளின் மன நிலையை ஆராய்ந்து கண்டார்.

## III. நனவிலி

நனவடி மனம் :— இந்தப் பலவேறு மனநிலைகளின் இயல்பினைச் சில எடுத்துக் காட்டுக்களால் விளக்கினால் தெளிவாகும். காலையில் நண்பரைக் காணப் புறப்படுகின்றார் ஒருவர். அவருடைய வேலையாளின் பெயர் கிருஷ்ணன் என்பதாம். அவன் காய்ச்சலாக இருப்பதால் காப்பி காய்ச்சுவதற்கு இல்லை. "என் செய்வான் பாவம்" என்கிறது அவருடைய நனவு மனம். ஆனால், அவருடைய நனவிலி மனம் உணவிலே ஈடுபட்டுக் "காப்பியின்றி அலையவிட்டானே பாவி" என அவரும் அறியாதபடி வெறுத்து நிற்கின்றது. நனவு நிலையின் அறிவுப் போக்கிற்கும் நனவிலியின் அறிவிற் போக்கிற்கும் இத்தகைய வேற்றுமை உண்டு. பிள்ளைத்தன்மை என இதனைக் கூறுதல் கூடும். முன்னர் இயக்கத்தினைப் பற்றிப் பேசியபோது குழவி நிலையில் எண்ணங்கள் எல்லாம் இயக்க வடிவமாகவே அரும்பும் எனக் கண்டோம். நனவிலி எண்ணங்கள் இயக்கவடிவமான நினைவுகளே என ரிபோ (Ribot) என்ற ஆசிரியர் கருதுகின்றார். இதுநிற்க. நண்பரைக் காணச் செல்லுபவர், வழியிலே இராயர் ஒருவர் வைத்திருக்கும் தண்ணீப்பந்தலில் காப்பி குடித்துவிட்டுச் செல்கின்றார். நனவிலிமனம் இராயரை வாழ்த்துகின்றது. உண்ட இன்பம் அதற்கன்றோ தெரியும்? நனவு நிலையோ 'காசுக்கு வந்த காபி' என இராயரைப் பற்றி எண்ணாமலே போகின்றது. அவர் வண்டியில் ஏறும்போது வண்டியோட்டி "எங்குப்போக வேண்டும்" என்று கேட்கிறார்.

"இராயப்பேட்டை" என்கிறார். அவருடன் செல்பவர் "கிருஷ்ணம்பேட்டை அன்றோ" என நினைப்பூட்டுகிறார். "வாய்தவறிச் சொல்லி விட்டேன்" என்கிறார் அவர். அவர் "கிருஷ்ணன்" என்ற சொல்லை மறந்தது ஏன்? "இராயர்" என்ற சொல்லை நினைத்ததேன்? முழுநிலையையும் அறிந்த நாம் 'இது அனைத்தும் வாயின் தவறு அன்று' என நன்றாக அறிவோம். 'நனவிலி நிலையின் திருவிளையாடலே' என உணர்வோம். காப்பிகொடாத கிருஷ்ணனை மறந்து, காப்பி கொடுத்த இராயரை விரும்பி நினைப்பது, அவரையும் அறியாது இயங்கும் நனவிலி மனத்தின் செயலேயாம். "கைதவறி எழுதினேன்"; "வாய்தவறிப் பேசினேன்" "நினைவிற்கு வரவில்லை", என்று கூறும்போதெல்லாம் இத்தகைய கண்கட்டு வேடிக்கையே நிகழ்கிறது என ப்ராய்ட் என்பார் கணக்கற்ற உண்மை அனுபவங்களைக் கொண்டு தெள்ளத் தெளிய விளக்கி வைக்கின்றார். அமெரிக்காவிலுள்ள மெக்சிகோ வளைகுடாவில் (Gulf of Mexico) இருந்து, சுடுநீர் ஓட்டம் (Gulf stream) ஒன்று, புறப்பட்டு ஐரோப்பாவின் மேற்குக் கரையை வந்து அடைகிறது. இது அட்லாண்டிக் மாபெருங் கடலிலுள்ளே மறைந்தோடிவந்து ஐரோப்பாவை அடையும் போதுதான் வெளிப்பட்டுத் தோன்றுகிறது. அதுபோல நாம்பேசும் பேச்சும், செய்யும் செயலும், வேறு பிறவும் இவ்வாறு நனவிலியாகிய மாபெருங் கடலிடையே மறைந்தோடிப் பின்னர் நனவில் புகுந்து எழுந்து தோன்றுவனவேயாம்.

நனவிலி :— மேலே கூறிய எடுத்துக்காட்டு நனவிலி மனத்தைச் சுட்டுவதிலும், நனவடி மனநிலையைச் சுட்டுவது எனக் கொள்ளுவது பொருத்தமாகலாம். நாம் கூறிய எடுத்துக்காட்டில் தவறு எழுந்ததன் காரணத்தை விளக்க முடிந்தது. இவ்வாறு காரணத்தை விளக்க முடியாதபடி நனவிலி மனத்தே

நின்றும் நம்மை இயக்கிவரும் எண்ணங்களையும் காணுதல் வேண்டும்.

17
83
52
69
84
43
68
——

——

இவற்றைக்கூட்டினால் 416 வருதல் வேண்டும். ஆனால் 411 என்று ஒருவர் கூட்டி விடுகிறார். ஒன்றுகளின் வரிசையில் (units) மேலிருந்து 7, 3, 2, எனக்கூட்டி வரும்போது கடைசி இரண்டு எண்களையும் 3, 8, எனக்கூட்டாது 3, 3, என மூன்றையே இரண்டுமுறை கூட்டுகின்றார். வாய்விட்டுக் கூட்டுகின்றார்; ஆதலின் எங்குப் பிறழ்கின்றார் என்பது நன்கு விளங்குகிறது. கண் 8 இனைக்காணவும் வாய் 3 எனப் பேசுவது ஏன்? 8 இல், 5 இனைக் கைவிட்டு 3 இனைக்கைக்கொண்டது, (அவரையும் அறியாமல்) அவருடைய நனவிலிமனமே யாம். இதுவே ப்ராய்ட் என்பார் கண்ட புதுமை. மக்கள் இனத்தின் பழங்கால நினைவில் 5 என்பது தனிமையையும், ஐம்மையையும் (நொய்மை அல்லது மென்மை) குறிப்பதாம்; மூன்று என்பது பிறப்பித்தல் அல்லது படைத்தல் முதலியவற்றைக் குறிப்பதாம். இணை விழைச்சு, குழந்தை பிறத்தல், படைத்தல் முதலியவற்றைப் பேசுவது தடைபட்டுள்ளது எனக் கண்டோம். தடைபட்ட எண்ணம் தன்னால் முடியும்போதெல்லாம்

இவ்வாறு அறிகுறிகள் வழியாகவும், உவமை வழியாகவும், குறிப்புப்பொருள்நிலை வழியாகவும் வெளிவருமாம். இங்கே மிகமிகச் சுருக்கமாக ப்ராய்ட் என்பாரின் கொள்கையை விளக்கி உள்ளோம். இங்கே கூறியுள்ள பல அடிப்படைக் கொள்கைகளையும் தம் நோயாளிகளின் அனுபவங்களைக் கொண்டே பரக்கப் பேசி நிலைநாட்டுகின்றார் என்பதனை மறத்தல் ஆகாது.

மூலபண்டாரம் :— நனவிலி மனமே மக்களது முழு அனுபவமும் வீற்றிருக்கும் மூலபண்டாரமாம். இந்த உலகில் பலவகையான சூடுநிலைகள், காற்றுநிலைகள், பொழுதுநிலைகள் முதலிய இயற்கைத்தோற்றங்களிடையே வாழ்ந்து வரும்போது அந்த அந்த நிலைக்கேற்ப நம்குருதியும், நுரையீரலும், கல்லீரலும், பிற உறுப்புக்களும் நம்மையும் அறியாது இயங்கிவருவது இந்த நனவிலியின் ஏவற்படியேயாம். தலைமுறை தலைமுறையாக எழுந்த அனுபவத்தின் பயனாக நம்மிடையே பதிந்து வந்த பழக்கங்கள் இவ்வாறு இயக்க-வடிவ எண்ணங்களாகவே நினைவிற்கு வந்து, இயக்க வடிவ-மாகவே இயங்குகின்றன. நனவுநிலையையும் நனவிலி மனமே ஆண்டு வருவதனையே கண்டோம். ஒருசிறு சொல்லோ, ஒருசிறு எண்ணமோ மேலே கண்டபடி ஆற்றல் பொங்கி எழும் நடுவிட-ஊற்றாக விளங்குமானால், மன இயக்கங்கள் அனைத்தையும் இத்தகைய பல ஆற்றல்களின் சிக்கலான நிலை எனக் கூறத் தடை என்ன? இந்த ஆற்றல்களை என்ன என்பது? விருப்பம் அல்லது வேட்கை என ப்ராய்ட் என்பார் வழங்குகின்றார்.

முழுநிலை :— நம்மனம் பல படையாகத் தோன்றினும் ஒரு முழுநிலைப் பொருளேயாம். அவ்வாறாயின், அதில் மிகப் பெரிய பகுதியாகிய நனவிலி.நிலை, நனவு நிலையை, மாற்றி

அமைக்காமல் இருக்கமுடியுமோ? ஆகவே, எவ்வளவுக்கு எவ்வளவு நனவிலியை நனவோடு ஒன்றாய் ஒத்து இயங்கச் செய்கின்றோமோ, அவ்வளவிற்கு அவ்வளவு நம் செயல்கள் முழுநிலைச் செயல்களாக விளங்கும். இல்லையானால், அரைகுறை குழறுபடைகளேயாம். நம் பேச்சிலும் எழுத்திலும் மேற்கண்டவாறு எல்லாம் தவறுகளை விளைவிக்கும் நனவிலிநிலை நம்முள் எந்நாளும் விளங்கி நிற்கும்போதும் தவறின்றியே பலமுறையிலும் எழுதியும் பேசியும் வருகின்றோம். இஃது எங்ஙனம்? இத்தகைய பேச்சும் எழுத்தும் நனவிற்கு மட்டும் அன்றி நனவிலிக்கும் ஒத்துநிகழ்வன என்பது இதனால் விளங்குகிறது. இரண்டாட்டம் வந்தால் மட்டுமே திண்டாட்டம். "குழவிநிலையிலிருந்தே நனவும் நனவிலியும் ஒன்றாய் ஒத்து இயங்குமாறு செய்துவரப் பழக்கிவிடுவதே பெற்றோரின் கடமையும், ஆசிரியர்களின் நோக்கமுமாம்" என ப்ராய்ட் வற்புறுத்துகின்றார்.

உயிர் கொடுத்தல்:— கண்ணாடியின் நிறமும் இயல்பும் அதனைச் செய்யும்போது அதில் சேர்கின்ற சரக்குகளையும் செய்யும் முறையையும் பொறுத்திருக்குமாம். அதுபோல நம் நினைவிடையே வரும் எண்ணமும் நம் மனத்தே இடையீடின்றி உலவிக் கொண்டிருக்கும் விருப்பம், மனப்போக்கு, மனப்பண்பு என்ற இவை அனைத்தையும் பொறுத்ததாம். இந்த வேட்கைகளை மறந்துவிட்டு மனத்தினை ஆராய்ந்தால் பயனில்லை. உயிரற்ற பெருக்கல் வாய்பாட்டைக் குழவி எவ்வாறு விரும்பும்? விருப்பம் எழுமானால் எதனையும் செய்தல் கூடும். கடையிற்போய் அப்பம் வாங்கும்போது "எவ்வளவு கொடுக்க வேண்டும்" என்பதனை அறிய இந்த வாய்பாட்டை உணர்ந்தாலன்றி முடியாதெனக் குழவி தெரிந்து கொள்கிறது. பெருக்கல் வாய்பாடு இவ்வாறு தன்விருப்பத்திற்கு உதவு-

வதனைக் குழவி உணர்ந்ததும் உயிரற்று நின்ற பெருக்கல் வாய்பாடு உயிருள்ளதாகித் தாய்ப்பால்போல் இனியதாகிறது.

எதிர்மறை :— குழவி பொய்சொல்ல வருகிறது என்றால் அதனை ஒரு சாத்தான் எனக் கருதுதல் தகாது. குழவிக்குப் பொய் சொல்லக் கற்பிப்பது மேல்மினுக்கு நாகரிகமேயாம். தடைபட்ட நனவிலி மனம் தடைப்பட்ட எண்ணத்தை முன் கூறியபடி தடைபடாவகையாக வெளிப்படுத்துகின்ற முறையைப் பொய் எனக்கூறிக் கடிந்து பயன் என்ன? தடை இல்லையானால் பொய்யும் இல்லையாம். "பலகையை உடைத்தால் தலையை உடைப்பேன்" எனத் தந்தையார் பிளிறுகிறார். குழவி அடிவயிறுவரை நடுங்கி நிற்கின்றது. தகப்பனார் உடைப்பதனைத் தடுத்தாரே அன்றி, உடைக்க முடியாத பலகையை வாங்கித் தந்தார் இல்லை. பலகை உடையாதிருக்க வழியும் இல்லை. கீழே விழுந்தால் பலகை உடைவதனை யார் தடுக்க முடியும்? ஆகவே, தந்தையார் தடுத்தது உடைத்தல் என்ற செயலை அன்று; 'உடைந்தது' என்று பேசுவதனையே தடுத்தார் ஆதல் வேண்டும். ஆதலின், உடைந்ததனை உடையவில்லை என்றதடைபடாத கூற்றால் கூறிவிடுமாறு நனவிலி மனம் தூண்டுகிறது. இதனையே பொய் என நாம் வரையறுக்கத் துணிகின்றோம். பொய்யினை விதைத்தவர்கள், பொய்யினை அறுவடை செய்வது இயல்பேயாம். உடைத்தலும் உடையாமையும் முழுமன-நிலையில் ஒன்றாகும் வியப்பினை இங்குக் காண்கின்றோம். இன்மை என்பது வெறும் சொல்லேயன்றி இங்கே பொருள் உடையதன்றாம். மனநிலையில் ஒரு பொருளின் எண்ணத்தை இல்லாது செய்ய வேண்டுமானால் வேறொன்றன் எண்ணத்தினை எழுப்புதல் வேண்டும். இல்லையானால் 'இலதென்றலின் உளது' என்ற சிவஞானபோதப் பாட்டை நனவிலி மனமும் பாடும். இதனாலன்றோ, 'உண்ணாதே, உடையாதே,' என்ற தடைகள்,

ஆதமும் ஈவாளும் தோன்றிய நாளிலிருந்து, உண்ணுதலேயும், உடைத்தலேயும் எழுப்பி விடுகின்றன.

## IV. நிலைகளின் இடையாட்டம்

உடலே இயக்குவது :— இவ்வளவும் கூறியமையால் நனவுநிலேயும், நனவிலி நிலேயும், ஒன்றை ஒன்று இயக்கி-வருவது தெளிவாம். "உலகம் ஒவ்வாததனை நனவிலி நிலேயி-லிருந்து நனவுநிலேக்கு, அங்கு இருப்பது இருப்பதுபோலவே, தணிக்கை அமைப்பு வெளிவரவிடுவதில்லே" என்றுகண்டோம். எண்ணம் நம்மை இயக்குகின்றது என்பது ப்ராய்ட் என்பார் கொள்கை. வாட்சன் "எண்ண மென்பது சொல்லே நமக்-குள்ளேயே மிகமிக நுட்பமாக ஒலிப்பதேயாம்." என்று கூறும் கொள்கைக்கு இது ஒத்திருத்தல் காண்க. நம் இயக்கம் மிகமிக நுட்பமாக மெல்லென எழுமானல் அவ்வியக்கம் நம் எண்ணம் போன்றதோர் இயக்கமாம். ஆதலின், பிற இயக்-கங்கள்போல எண்ணம் என்ற இயக்கமும் தானே இயங்கும் நரம்பமைப்பை இயக்கிவரக் கூடுமாம். இந்த நரம்பமைப்பே உடலமைப்பின் இயக்கத்திற்கு இன்றியமையாதவாகிய குருதி ஈரல் முதலிய பல உறுப்புக்களையும் இயக்கிவைக்கின்றதென அறிவோம். ஆகவே, எண்ணத்தாலேயே பல நோய்களும் எழக்கூடும் என்பது ப்ராய்ட் என்பார் கருத்து. மனநோய் என்பது இவ்வாறு எழுவதேயாம். நனவின்றி எழும் இயக்கங்கள் தானே இயங்கும் நரம்பமைப்பால் எழுவனவாம்.

ஒன்றை ஒன்று இயக்குதல் :— நனவு நிலேயும், நனவிலி நிலேயும் ஒன்றனே ஒன்று இயக்கிவருவதற்குக் கிருஷ்ணம்-பேட்டை என்பதனை இராயப்பேட்டை எனக்கூறியது முதலியன எடுத்துக்காட்டுக்களாம். நம் நனவிலி நிலேயை

நனவுநிலையிலும் ஆளுமாறு செய்வதே கல்வியின் நோக்கம் ஆதல்வேண்டும். யோகம் என்பது இதனையே நோக்கமாகக் கொண்டது என்று அறிஞர் கூறுகின்றனர். பல்நோய் மிக்கு வரும்போது, பாடம் படிக்க முடியாது. நோய்க்கும் படிப்பிற்கும் இத்தகைய தொடர்பு இருக்குமானால், நல்வழியில் படிப்பதும், பாடம் சொல்லுவதும் பல் நோயை மறக்கவைக்கவும் கூடும் அன்றோ? இனிய பாடலைக் கேட்கும்போது நோய் அனைத்தினையும் மறக்கின்றோம். நனவிலி மனத்தினையும் நனவிலிநிலை வகையாகவும் அடக்கி ஆளுதல் வேண்டும். வைதும், வற்புறுத்தியும் சில கருத்துக்களை அடக்கிவைக்க முயலுவது 'பூனை கண்ணை மூடிக்கொண்டால் பூ உலகமே இருண்டுவிட்டது' என்று கருதுவது போலவே ஆம். கேட்போர்கள் மேலே இல்லையானால் வானத்தில் இடியே எழவில்லை எனக்கூற முடியுமோ? கேட்கும் காதுக்கு அந்த இடிகேட்கும். அங்ஙனமே தடைபட்ட எண்ணங்கள் மனத்தினில் இல்லை என்பதற்கு இல்லை. தடைபடாத நிலையில் அவை என்றும் வாழ்ந்தே வருகின்றன. அவை நனவிலி நிலையில் இயங்கி நம்மையும் இயக்கியே வருகின்றன. நமக்குத் தெரியாமல் மறைந்துபோக அவற்றை விட்டுவிட்டால் அவை தாம் விரும்பியபடியே இயங்கி வருகின்றன. மறையவிடாது வைத்தால் நாம் விரும்பியபடி அவற்றை அடக்கி ஆளலாம். அவற்றை மறையவிடாது வேண்டியவாறு உருப்படுத்திக் கொள்வதே சிறந்த முறையாம். பொருத்தம் அற்றதே பொல்லாததாம். மலம் என இகழப்படுவதும் எருவாகி முகர்தற்கு இனிய மருக்கொழுந்தினையும் உண்ணுதற்கு இனிய கொடி முந்திரிப்பழத்தினையும், காணுதற்கு இனிய முல்லையே முதலாம் பூக்களையும் விளைவித்துத் தரவில்லையா? ஆதலின், எவற்றையும் ஒதுக்கித் தள்ளும் தீண்டாமைக் கொள்கையில் ஈடுபடாது, அவ்வவற்றிற்குத் தக்க இடத்தில் வைத்து வளர-

விட்டு வாழ்வதே அறிவுடைமையாம். இவ்வாறு பொருத்தம் உற்று வாழ முடியாமையால் மூளைக்கோளாறு கொண்டு அலைந்து கெட்டவர்களையும் ப்ராய்ட் முதலியோர் சீர்திருத்தி நல்வழிப் படுத்த முடியுமானால், அத்தகைய கோளாறு ஒன்றும் பெறாத பச்சிளங் குழவிகளை, ஏன், நல்லவழியில் இந்த உண்மைகளை அறிந்து அவற்றிற்கு ஏற்ப வளர்த்துவர முடியாது? குழவியின் மனநிலை ஒரு காந்தம் போன்றதாம். மகிழ்ச்சியைத் தன்முகமாக நனவு வலித்து இழுக்கும்; நோயை எதிர் முகமாகத் தள்ளும். அதனால், நோய் மற்றொரு முனையிற் சென்று நனவிலியிற்புகும். குழவியின் மனத்தை முழுநிலையாக வளர்க்க வேண்டுமானால் நனவு, நனவிலி என்ற இரண்டினையும் பொருத்தமுற்று ஒன்றாகி வருமாறு, வளரவிடவேண்டும்.

நனவுநிலை இயக்கமும் பிறவும்:- எண்ணங்களும் இயக்கங்களும் நனவிலி நிலையிலும் நனவு நிலையிலும் விளங்குபவையாம். இரண்டு இரண்டு நான்காம். நனவுநிலை எண்ணம், நனவுநிலை இயக்கம், நனவிலி எண்ணம், நனவிலி இயக்கம் என நான்காதல் காண்க. இந்த நான்கும் ஒன்றை ஒன்று இயக்கும் வகையில் பதினாறாக விரியும். இந்தப் பதினாறையும் கீழே காண்போம். முதலில் நனவுநிலை இயக்கம் மேற்கூறிய நான்கினையும் இயக்குவதைக் காண்போம். பின்னர், பின்னைய மூன்றில் ஒவ்வொன்றும் மேற்கூறிய நான்கு நிலைகளையும் இயக்குவதனையும் விளக்குவோம்.

நனவுநிலை இயக்கம் பிறவற்றை இயக்குதல் :- (1) நனவுநிலை இயக்கம் வேறு ஒரு நனவுநிலை இயக்கத்தினை விளைவிக்கும். இது விஞ்ஞானப் புலவர்கள் அறிந்தது ஒன்றே ஆம். மிதியை அழுத்த மிதிவண்டி ஓடுவது இந்த வகையினதே ஆம். (2) நனவுநிலை இயக்கம் நனவுநிலை எண்ணத்தை

விளைவிக்கும். மலை எதிர் நின்று அம்மலையின் தோற்றத்தைக் காணும்போது மலையைக் காண்பது நனவுநிலை இயக்கமாம். அதனால் மலை என்ற எண்ணம் எழுகிறது. இது நனவுநிலை எண்ணமாம் (3) நனவுநிலை இயக்கம் நனவிலி இயக்கத்தினையும் விளைவிக்கும். கரடியைக்கண்டு அஞ்சியவனது குருதியிலே அவனையும் அறியாமல் கன்னற்குழம்பு பாய்ந்து அவன் அவ்விடத்திலிருந்தும் தப்பிப் பிழைத்து ஓடுவதற்கு ஏற்ற ஆற்றலை எழுப்பும் எனக்கண்டோம். இங்குக் கரடியைக் காண்பது நனவுநிலை இயக்கம். ஈரலில் இருந்து கன்னற் குழம்பு குருதியிற் பாய்வது நாம் அறியாது பாய்வதாம். ஆதலால் அது நனவிலி இயக்கமாம். (4) நனவுநிலை இயக்கம் நனவிலி எண்ணத்தை விளைவிக்கும். ஈதே நம்முடைய கல்வி முறையின் நோக்கமாம். மக்கள் இது நாள்வரையிலும் உணர்ந்த அனுபவங்களை எல்லாம் கல்வி கற்பானின் அனுபவமாக ஆக்கிவிடவே கல்விமுறை முயல்கிறது. அது எங்ஙனம் கூடும்? கல்விகற்பானின் நனவிலி நிலையே மக்கள் இனத்தின் அனுபவம் அத்தனையையும் தனதாக்கிக் கொள்ளக்கூடும். படிப்பது நனவுநிலை இயக்கமாம். அது மனத்திற் படிந்து விடுவது நனவிலி எண்ணமாம்.

நனவுநிலை எண்ணமும் பிறவும்:- நனவுநிலை எண்ணம் பிறவற்றை இயக்குவதனை அடுத்த படியாகக் காணுதல் வேண்டும். (5) நனவுநிலை எண்ணம் நனவுநிலை இயக்கத்தை விளைவிக்கும். நாம் ஒரு தொழிலைச் செய்ய முன்னதாக எண்ணித் துணிந்து திட்டம் வகுத்துப் பின்னர் அதன்படி செய்து வருகிறோம். நாம் திட்டம் வகுப்பது நனவுநிலை எண்ணமேயாம். இதற்கு ஏற்பப் பின்னர் எழுகிற செயல் நனவுநிலை இயக்கமேயாம். (6) நனவுநிலை எண்ணம் நனவுநிலை எண்ணத்தை விளைவிக்கும். புகை என்ற எண்ணம் நனவுநிலை எண்ணமாக வந்ததும்

நெருப்பென்ற எண்ணமும் நனவுநிலை எண்ணமாக எழு-கின்றது. இதன் விரிவினைத் தத்துவசாத்திர ஆராய்ச்சியில் பரக்கக்காணலாம். (7) நனவுநிலை எண்ணம் நனவிலி இயக்-கத்தினை உண்டுபண்ணும். பேசவருகையில், உள்நின்று, நனவு நிலை எண்ணம் பேசத்தூண்டுகிறது. ஆனால், பலர் நேரே பேசத் தொடங்காமல், இருமியும் கனைத்தும் நிற்கக் காண்-கின்றோம். அவ்வாறு செய்வதனை அவர்களும் அறிவதில்லை. 'வேண்டும்' என்று செய்வதும் அன்று. தாமே எழும் செயல்களே அவை எனக் கூறலாம். பேசுவதில் நம்பிக்கை-அற்ற நனவிலிநிலை இடைபுகுந்து பேசுவதனைத் தடுத்து இருமுமாறு செய்கிறது. பேசவேண்டும் என விரும்பியது நனவுநிலை எண்ணமாகும்; இருமுவது நனவிலி இயக்கமாகும். (8) நனவுநிலை எண்ணம் நனவிலி நிலை எண்ணத்தை விளை-விக்கும். ஈது ஒருபுதிய கருத்தாகும். குழவிப்பருவத்தே சிலபோது தந்தையைத் தவறாக வெறுத்து நின்ற நிலையும், தாயையே பின்பற்றிச் சென்ற நிலையும், நனவிலிநிலையில் ஊறிப் போகின்றன; அதனால் அத்தகையோர் ஆண் மக்களோடும், பெண் மக்களொடும் பழகிவரும் முறையை முன்னைய நன-விலிநினைவு மாற்றி விடுகின்றதாம். தாயின் பின்னே திரிந்த சிறுவனிடம் ஒரு பெண்ணையும் பின்னே காதலியாதநிலையும் எழலாமாம். தாயின்மேல் எழுந்த எண்ணம் நனவுநிலை எண்ணமே ஆம்; இதன் பயனாகப் பெண்களைக் காதலியாத எண்ணம் இவனும் அறியாது கிடக்கும் நனவிலி எண்ணமே ஆம்.

நனவிலி இயக்கமும் பிறவும் :— மேல், நனவிலிநிலை இயக்கம் பிறவற்றை இயக்கிவருவதனைக் காணலாம். (9) நனவிலிநிலை இயக்கம் நனவுநிலை இயக்கத்தை விளைவிக்கும். நாம் கவனியாது இருக்கும்போதும் நம் எதிரே பல தோற்-

றங்கள் புலனாகி வருகின்றன. அவற்றை நாம் கவனியாமை நம் நனவிலி இயக்கமாம். தோற்றக்காட்சி நனவுநிலை இயக்கமாம். (10) நனவிலி இயக்கம் நனவுநிலை எண்ணத்தினை விளைவிக்கும். நம்மையும் அறியாமல் எழும் பலவகை இயற்கைச் செயல்கள் பல உணர்ச்சிவகை எண்ணங்களை நனவுநிலையில் வற்புறுத்திவரக் காண்கின்றோம். நம்மையும் அறியாமல் அச்சம் எழலாம். அச்ச உணர்ச்சி எழுந்தபின் நனவுநிலை எண்ணமாக அதனை உணர்கின்றோம். நம்மை அறியாமல் எழுந்த அச்சச்செயல் நனவிலி இயக்கமாகும். பின் நாம் அறியும் எண்ணம் நனவுநிலை எண்ணமாம் (11) நனவிலிநிலை இயக்கம் நனவிலிநிலை இயக்கததினை விளைவிப்பதனைப் பற்றிக் கூற வேண்டா. நம்மையும் அறியாது குருதியில் கன்னற் சாறு பாய்கின்ற நனவிலி இயக்கத்தால் துடிதுடிப்பு முதலிய நனவிலிநிலை இயக்கம் எழலாம். (13) நனவிலி இயக்கம் நனவிலி எண்ணத்தினை விளைவிக்கும். இதுவும் புதியதொரு கருத்தேயாம். இயற்கைச் செயலாய் எழுகிற நனவிலி இயக்கத்தின் போது, நனவிலிநிலை எண்ணங்கள் எழுவதும் இயல்பே.

நனவிலி எண்ணமும் பிறவும் :— நனவிலிநிலை எண்ணம் பிறவற்றை இயக்கிவருதலை நோக்குவோமாக. (13) நனவிலிநிலை எண்ணம் நனவுநிலை இயக்கங்களை எழுப்புவதனைச் சில இடங்களில் காண்கிறோம். செல்வத்திற் சிறந்தவர் ஒருவர் விருந்திற்குப் போய் வரும்போதெல்லாம் வெள்ளிக் கரண்டிகளை எடுத்து வருவாராம். அது ஒரு நோயாகி விட்டது. எடுத்துவரும் கரண்டியைப் பயன் படுத்துவதோ விற்பதோ இல்லை. திருட்டெண்ணம் அங்கு இருப்பதற்கு இல்லை. நனவிலி நிலையில் எழுந்த எண்ணம் இவரையும் அறியாமல் எழுந்த எண்ணமேயாம். ஆனால், அந்த எண்ணமோ இவ்வாறு

நனவு நிலையில் காண்டிகளை எடுக்கச் செய்கிறது. இதுநிற்க. பிறமொழியைப் பேசப்பழகும் போது, முன்னரே நாம் அறிந்த தாய் மொழியின் நினைவு நனவிலி எண்ணமாய்ப் படிந்து கிடக்கின்றது. புதிதாகக் கற்கும் மொழியை நாம் ஒலித்து வரும்போது இந்த நனவிலி எண்ணம் இடையே புகுந்து தவறான ஒலிகளை எழுப்பிவைக்கக் காண்கிறோம். தவறான ஒலி எழுவதோ நனவுநிலை இயக்கமாம். (14) நனவிலி நிலை எண்ணம் நனவுநிலை எண்ணத்தை விளைவிக்கும். இதற்குப் பகற்கனவுகளும், உறக்கத்தில் எழும் கனவுகளும் எடுத்துக் காட்டாம். (15) நனவிலி நிலை எண்ணம் நனவிலி இயக்கத்தை விளைவிக்கும். கூட்டற் கணக்கில் "8" ஐ "3" ஆகக் கூட்டியது இதற்கு எடுத்துக்காட்டாம். "3" இல் விருப்பம் நனவிலி நிலை எண்ணமேயாம். இதன் பயனாய்த் தவறாகக் கூட்டுவதோ நனவிலி இயக்கமாம். (16) நனவிலி எண்ணம் நனவிலி எண்ணத்தை உண்டு பண்ணுவதும் உண்டு. இது நம்பத்தகுந்த முறையேயாம். மூன்றில் எழுந்த விருப்பம் ஐந்தில் வெறுப்பை உண்டு பண்ணியது என மேற்கண்ட கணக்கைப் பற்றிக்கூறினோம். இந்த விருப்பும் வெறுப்பும் நனவிலி எண்ணங்கள் அன்றோ?

அனைத்தும் ஒரு சிக்கல் :- இத்தனை வகையாகப் பிரித்துக் காட்டியதிலிருந்தும், ஒரு செயல் எழுவதன் உண்மை வரலாற்றை அறிவது எவ்வளவு பெரியசிக்கல் என்பது தெளிவாம். இது நிற்க. நனவிலியின் பல வகையான போக்கு- களையும் ப்ராய்ட் என்பார் விளக்கியுள்ளார். துன்பு உண்- வேட்கை (Masochism), துன்பு ஊட்டு வேட்கை (Sadism) என இரு வேறு போக்குகள் உள்ளன. நாமே துன்பப்பட விரும்புவது ஒன்று; பிறரைத் துன்பப்படுத்துவது மற்றொன்று. குழவிப் பருவத்தே துன்பூட்டு வேட்கை ஒரு

பொழுது மிக்கு விளங்கும். பூனையைக் குழவி நீரில் அழுத்தும்; ஈயினை அறையும். இதுகண்டு "அரக்கனைப் பெற்றோமே" எனப் பெற்றோர் வருந்த வேண்டியதில்லை. அப்பருவத்தில் எழுவதோர் இயற்கையே ஈதாம். நாளடைவில் இது இயல்பாகவே மறையும். அவ்வாறு மறையாது போகும்போது தான், மனச்சிக்கல் எழுகின்றது. அதனைத் துன்பூட்டு சிக்கல் எனலாம். இத்தகைய கீழ்நிலை விருப்பங்களை மேனிலை விருப்பங்களாக மாற்றும் மனநிலை இரசவாதமே சிறந்த கல்விமுறையாம். உறுப்புக்களை அறுத்து வரும் மருத்துவர்கள் இந்தத் துன்பூட்டும் வேட்கையை மக்கட்குத் தீமை பயவாதபடி உலகத்திற்குப் பயன்படும் வகையில் மாற்றிச் சிறந்து விளங்குகின்றார்கள். உடன்பாட்டு நிலையால் இவ்வாறு விளங்குகிற துன்பூட்டு வேட்கை எதிர்மறை நிலையாலும் விளங்கும். ஆராய்ச்சிவாணர், தவளை முதலிய உயிர்ப்பொருள்களை அறுத்தே ஆராய்ச்சி செய்து வருகின்றனர். இதனைத் தவறு என எதிர்த்துவரும் கூட்டம் (Anti-vivisectionists) இதன் கொடுமைகளை இரத்த எழுத்தால் எழுதி மனம் நடுங்கச் செய்கின்றனர். இவ்வாறு பெருமுழக்கம் செய்பவர்கள், அவ்வாறு அறுக்கும் செயலையே அல்லும் பகலும் எண்ணிவருவதால், அவர்களும் துன்பூட்டு வேட்கையினராம். ஆனால். அந்த வேட்கை எதிர் மறைவடிவில் தோன்றுகிறது. அவ்வளவே வேற்றுமை. "துன்புண்ணும் வேட்கையினரும் உளரோ?" என ஐயம் எழலாம். தம்மைப் பலவாறு வருத்தி நோன்பு நோற்கின்ற பெரியோர் இத்தகைய வேட்கையில் ஈடுபட்டு உள்ளோரே என்பது தெளிவாம்.

## V. சில கோளாற்றின் தொடக்கம்

காணும் வேட்கை — காட்டும் வேட்கை :— காணும் வேட்கைநிலை, காட்டும் வேட்கைநிலை என்ற இரண்டும் உண்டு.

பெண்கள் குளிக்கும் இடத்தே சுற்றித் திரிவோரை உலகம் அறியும். மேனி மினுக்கும் பெண்களையும் உலகம் அறியும். உலகினர் பொதுவாகக் காணவும் காட்டவும் கூடாது என வற்புறுத்தும் பொருள்களைக் காணவும் காட்டவும் பேரவாக் கொண்டு திரியும் நிலைகளே இவையாம். இவை எல்லைகடந்து நோயாகிவிளங்கினால் மனக்கோளாறு என்றே கூறவேண்டும். இந்த இழிநிலையை உயர் நிலையாக்கும் இரசவாதமும் உண்டு. இவ்வாறு இதனை உயர்நிலையாக்கிச் சிர்பட்டுப் பெரும் புகழ் பெறுவோர் பல வகைக் கலையிலும் ஈடு பட்ட பெருமக்களாம். காணும் வேட்கையும் காட்டும் வேட்கையும் இல்லையானால் கலை எங்கே? கலையின் உண்மையான உயரிய அழகு பிறழாத நிலையில் அனைத்தினையும் காணலாம். அனைத்தினையும் காட்டலாம். பொருத்தமற்ற நிலையே பொல்லாத நோய்நிலை. பொருத்தம் உற்றநிலையே பொன்னான கலைநிலை.

தடைபட்ட செயலே உணர்ச்சி :- அச்சம் என்றால் குலை நடுங்குவது போலத் தோன்றுதல் முதலிய இயக்கங்களை புலனாகின்றன. நாம் உணர்ச்சியாக உணர்வன எல்லாம் நனவிலி நிலையில் இவ்வாறு தசையின் இறுக்க நெகிழ்வுகளாகப் பதிகின்றன. உலகில் எழும் எல்லாவகை இயக்கங்களும் ஒரே வகையாக எழுவனவே என இயற்கைத் தோற்றநூற் புலவர் (Physicists) விளக்குகின்றனர். நெம்புகோலும் (Lever) திருப்புமையமுமாக, எழும் இயக்கமே எல்லா இயக்கமுமாம். தசை இயக்கங்களும் இவ்வாறு எழுவனவே. ஒருபொருளை மேலே தூக்கவேண்டும் என்றால் பூமியானது நிலக்கவர்ச்சி ஆற்றலால் அதனைக் கீழுக்கு இழுக்கிறது. நம்முயற்சிக்குத் தடையாய் இருக்கின்ற இந்த நிலையைத் தாண்டுதல் வேண்டும். முயற்சியையும் அதனைத் தடுக்கும் தடையையும் பொறுத்தே எல்லா இயக்கங்களும் எழுகின்றன. உணர்ச்சிவகை இயக்கமும்

இங்ஙனமேயாம். அஞ்சுதல் என்றால் ஓட்டம் பிடிப்பதே அன்றோ? காட்டில் மக்கள் வாழ்ந்து வந்த காலத்தில், அச்சப் பொருளைக் கண்டு ஓடிப்பிழைத்தே வாழ்ந்தனர் எனலாம். நாகரிகம் வளர்ந்து வந்த நிலையில் அச்சம் எழும்போதெல்லாம் ஓட வேண்டும் என்பதில்லை. ஓடுதல் இவ்வாறு தடைபட்ட-போது, அச்ச உணர்ச்சியை மட்டும் உணர்கின்றோம். எனவே, அச்ச உணர்ச்சி என நாம் வழங்குவதும் உணர்வதும் தடை-பட்ட ஓட்டமேயாம். புறநிலையைத் தடுப்பதன்றி அகநிலையை நாகரிகம் எங்ஙனம் தடுத்தல் கூடும்? ஆதலின், புறநிலை மட்டும் மாற அகநிலை மாறாது நிற்கின்றது. காட்டில் வாழ்ந்த நாளில் வெகுளி எழுந்ததும் போராட்டமே மூளும். நாகரிகம் அதனைத் தடுத்தலால் தடைபட்ட போராட்டமாம் உணர்ச்சி-யாகவே இப்போது வெகுளி விளங்குகிறது. மரத்தின் மீதும் குகைகளின் உள்ளும் வாழ்ந்த நாளில் காதல் பொங்குமானால் மக்கள் கட்டி அணைத்துத் தழுவி நிற்பர். நாகரிகம் இதனைத் தடுக்கின்றது. ஆகவே, காதல் தடைபட்ட தழுவுதலாகவே இன்று நிலவுகிறது. வெறுப்பு எழுந்ததும் கொல்லுவதே காட்டுமிருண்டியின் இயல்பு. நாகரிக உலகிலே வெறுப்பு என்பது தடைபட்ட கொலையேயாம்.

இருமுகப் போக்கு :- இவ்வாறு தடைநிலையும் தடையின் எதிர்நிலையுமான இரண்டு நிலைகள் உணர்ச்சியில் விளங்குவது போல, நனவிலி நிலையிலும் இருவேறு நிலைகள் உள்ளன. உரோமர்கள், சேனஸ் (Janus) என்ற கடவுள், முன் ஒரு முகமும் பின் ஒரு முகமுமாக இருந்தனர் எனக் கூறி உள்ளார்கள். சேனசைப் போல நனவிலியும், தன் இருவேறு நிலைகளாம் முகங்களைப் பின்னுக்குப் பின்னாக எதிர் எதிர் கொண்டு நிற்கக்காண்கிறோம். விருப்பும் வெறுப்பும் ஒன்றற்கு ஒன்று எதிர்நிலை இரு முகப் போக்கு உடையனவாதல்

காண்க. இவை இரண்டும் ஒன்றன் இரு முனையேயாம். சூடு குறைவது என்றால் குளிர் மிகுவது என்பது பொருள் ஆதல் போல, வெறுப்பு குறைகிறதென்றால் விருப்பு மிகுகிறது என்பது பொருளாம். இவ்வாறு இரண்டும் உடன்பாட்டுப் போக்கும் எதிர்மறைப் போக்கும் என்ற வகையில் ஒன்றன் நிலையே ஆதல் காண்க. ஆதலின், ஒன்றே எனலாம். ஒருவனை வெறுக்கின்றோம் என்றால் அவனைப் பற்றியே எண்ணி வருகின்றோம் எனலாம். விருப்பிலும் அங்ஙனம் அன்றோ? தம் பேச்சினைக் கேளாத தம் காவலாரை நோக்கி "என்னுடன் பகைக்கும் மூன்று பிறவி வேண்டுமா? என்னை விரும்பும் நூறு பிறவி வேண்டுமா?" என்று தங்களுக்கு ஏற்ற தண்டனையை அவர்களே கூறுமாறு திருமால் விட்டுவிட்டாராம். விருப்பும் வெறுப்பும் ஒன்றுதலை இந்தக் கதையும் விளக்குதல் காண்க. எனவே, குழவி வெறுப்பனவற்றை அதற்கு விருப்பமாக மாற்றுதல் கூடும் என்பது தெளிவாம். இவ்வாறு நிற்கும் நனவிலியின் போக்கையே எதிர்நிலை இருமுகப் போக்கு (Ambivalence) என ப்ராய்ட் வழங்குகின்றார்.

## VI. நனவிலி அமைப்புகள்

மாறு வடிவம் :- இந்த நனவிலியானது இயங்கிவருவதற்கு ஏற்ற சில அமைப்புகளையும் ப்ராய்ட் விளக்குகின்றார். உள்-பொருளைப் பற்றிய எண்ணங்களே தம்மை முன்னுக்கு தள்ளிக் கொண்டு முன்னிலைக்கு வருகின்றனவாம். எண்ணங்களிற் சிறந்தது உள்பொருளைப் பற்றிய எண்ணமேயாம். உலக வழக்கிற்கு உதவுவது அதுவே அன்றோ? உள்பொருளை அடைய ஒரே வழியுண்டு. உடலின் இயக்கமே அந்த வழியாம். இயங்காது ஒன்றனை அடைவது எங்ஙனம் கூடும்? அதனாலேயே இத்தகைய இயக்கத்தினை நனவு நிலை அப்போதைக்கு அப்போது உணர்ந்து வருகிறது.

உள்பொருளைப் பற்றிய எண்ணங்களிற் சிறந்தது, அந்த உள்பொருளை நாமாக ஆக்கிக்கொள்ளும் எண்ணமேயாம். நாமாக ஆக்கிக்கொள்வது என்றால் என்ன? புதிது புதிதாக நம்மைப் போன்ற ஆட்களாக உள்பொருளை ஆக்கிவிடுதலே-யாம். ஈதென்ன எண்ணம்? உலகம் இதனைப் பிள்ளைப்பேறு எண்ணம் எனவழங்கும்; இனத்தைப் பெற்று வளர்க்கும் எண்ணமே ஈதாம். இனத்தை மறித்தும், மறித்தும் படைக்-கின்ற இனப் பெருக்க (Reproduction) எண்ணம் என இதனை வழங்குவதும் உண்டு. ஆதலின், இந்த எண்ணமே பிற எண்ணங்களினும் முந்தி நனவுநிலையில் முதலிடம் பெற்று விளங்குவதும் இயல்பேயாம். ஆனால், நாகரிக உலகம் இவ்வாறு இந்த எண்ணம் முதலிடம் பெறுவதனைத் தடுக்-கின்றது. தணிக்கை அமைப்பு என நாம் கூறியது, இத்தகைய எண்ணங்கள் நனவிலி நிலையிலிருந்து நனவுநிலைக்கு அதே வடிவில் வருமாறுவிடுவதேஇல்லை. ஆனால், வந்தேதீரவேண்டும். வரவிடுவாரோ இல்லை. இந்த நிலையில் அந்த எண்ணம் மாற்று வடிவம் கொண்டே தணிக்கையாளை ஏய்த்து விட்டு மேலே எழுகிறது.

ஒப்புமை :- மாறுவடிவம் என்றால் என்ன? முன்னதற்கு ஒத்தவடிவமேயாம். ஒப்புமை உணர்வின் பெருமையை இங்கு உணர்தல் வேண்டும். பிறந்ததும் முதல் முதல் தாயின் பாலை உண்டகுழவி, இரண்டாம் முறை சுவைத்துண்ணும் போதும் முன்போலவே பால் இனித்துப் பசியாற்ற வருகின்றதைக் கண்டு ஒப்புமை உணர்வில் உவகை பொங்கிவழியத் திளைத்து நின்று வியந்து கிடக்கின்றது. ஒப்புமை நிலையும், உவகையும் இவ்வாறு ஒருங்கு இயைந்து விடுகின்றன. ஒத்தநிலையைக் கண்டதும் அந்த நிலையில் எவ்வாறு நடக்கவேண்டும் என ஆராய வேண்டாம். முன்படியே நடப்பது பழக்கமாகிறது.

முனைப்பு :- அத்தகைய நிலையைத் தாம் நன்கு அடக்கி ஆளலாம் என எவர்க்கும் தோன்றுதலால் 'நான்', என்ற முனைப்பும் அங்கே தடித்துவருகின்றது. 'யான்', 'எனது', எனப் பேசவரும்போது 'எனது' என வழங்கத் தக்கதனையும் குழவி 'யான்' என்றே ஒற்றுமை நயத்தால் கருதிப் பேசுகிறது. 'எனது பொம்மை' எனப் பேச அறிந்தபோதும் 'நான் பொம்மை' என்று பேசுகிறது. தன்னுயிர்போல மன்னுயிரை எண்ணுவது அன்றோ பேரறம்? தான், பிறர் என்ற வேற்றுமை உணர்வு நன்கு எழுந்து வளர்ந்த பின்னரே, ஒற்றுமை உணர்வை வளர்ப்பது அவ்வாறு பேரறமாவதாம். தான், பிறர் என்ற வேற்றுமையே உணராது மயங்குவது அறமன்று; மறமேயாம். குழவியும் தன்னைப் பிறரோடோ, பிறவற்றோடோ ஒன்றெனக் கண்டு மயங்குவதால் வருங்கேடு என்னை? பிறாது தீமையையோ, நன்மையையோ தனதெனக் கொண்டு மயங்கும் திரிபுணர்வே இங்கு எழும் கேடாம். ஏன் இந்த மயக்கம்? சிறிது ஊன்றிப் பார்த்தல் வேண்டும். 'நான்' என்பதன் எல்லை எங்கே முடிகிறது? நம் எதிரே உள்ள உலகம் எங்கே தொடங்குகிறது? நாம் உண்ணும் பொருள் நமது உடம்பிற்கு வெளியே முதலில் இருக்கின்றது. உண்ணும் போது அது நம்மோடு ஒன்றாகி விடுகிறது. முதலில் நம்மினும் வேறாக நாம் கண்ட பொருள்கள் இவ்வாறு நாமாக விளங்க வரவில்லையா? ஆதலின், குழவி பிறவற்றையும் தான் எனக் காண்பதில் என்ன வியப்பு?

தான் பிறராகும் தவறு :— பின்னே இவற்றை வேறு எனக் காண வந்தாலும் ஒன்று எனக் கண்ட முன்னைய அனுபவம், நனவிலி நிலையில் தடித்தே விளங்குகிறது. நம்முடைய போக்கும் எண்ணங்களும் மூன்றும் ஆண்டிற்குள் நிலைபெற்று விடுகின்றன. ஆதலின், புனிற்றிளம் பருவத்தே

பதிந்தவையே பின்னே மாறாத நம் வடிவமாகின்றன. குழவி நிலையில் சிறுவன் தன் தாயையும, சிறுமி தன் தந்தையையும் தாமாகக் கருதுவது பெருவழக்காம். சிலபோது குழவிகள் பெரியவர்களாக வளர்ந்த பின்னும் இந்த ஒற்றுமை எண்ணம் தொடர்ந்து விளங்குகின்றதாம். அத்தகையோர் தத்தம் காதலர்களும் தத்தம் பெற்றோர்களைப் போலவே நடந்து வர-வேண்டும் என விரும்புகின்றனராம். அவ்வாறு நடைபெறாத-போது தம் வாழ்க்கை சிதைந்துகெட வாடி வருந்துகின்றன-ராம். குழவி, தன் முன்தானையைப் பிடித்துத் திரியுமாறு, தாய் விடுவதன் கேடே ஈதாம். இதனைப் பெற்றோரும் பிறரும் கருத்தாய் எண்ணி இதற்கேற்பப் பழகுதல் வேண்டும். ஆனால், பள்ளியிலேனும் தக்க பழக்கம் எழுகிறதா? பள்ளிக்கூடத்-திலும் குழவியைத் தானாக இயங்கவிடாதபோது, மந்தையில் ஓர் ஆடாகவே அது மேய்க்கப் பெறுகிறது. இதன் பயனாகப் பிற குழவிகளோடு தன்னை ஒற்றுமைப்படுத்தியே கண்டு தன் சிறப்பு நிலையை இகழ்கின்றது.

புறத்தெழு அகக்காட்சி - அகத்தெழு புறக்காட்சி:— இவ்வாறு பிறவற்றை எல்லாம் தானாகக் குழவி கண்ட காட்சி இருவகையாகப் பிரிகின்றது. ஒன்று அகத்தே எழுவதனைப் புறநிலையாகக் காணுதலாம். மற்றொன்று புறத்தே எழுவதனை அகநிலையாகக் காணுதலாம். முதலில், குழவி தாயும் தந்தையும் பேசுவதனை எல்லாம் கட்டளையாகக் கருதி வருகிறது. காதில் விழுவதே அதன் மனச்சாட்சியாக நின்று அதனைச் செயற்படுத்துகிறது. வயது ஏறிய பின்னர் முன்னெல்லாம் கட்டளையைச் செவி வழியாகக் கேட்ட பழக்கத்தின் பயனாக, கேளாததனையும் இப்போது தன் கற்பனைசக்தியால் அவ்வாறு மனக்காதில் கேட்பதுபோல நினைத்துக் கொள்கிறது. கட்டளைகளை எல்லாம் தாய் தந்தையர் குரலாகவே கேட்டு

உணர்ந்து இருப்பதால், தன் கற்பனுசக்தியின் வழியே தன் மனச் சாட்சியாக அகத்தெழும் குரலைப் புறத்தே எழும் பிறரது குரல் என்றே நம்பிக் குழவி வளர்ந்து வருகிறது. இதுவே புறத்தெழு அகக்காட்சியாம் (Projection). கதையைப் படிக்கும் பொழுது அதில் வருவார் படும் துன்பத்தினையும், இன்பத்தினையும் தனதெனக் கொண்டு அழுதும் மகிழ்ந்தும் வருமிடத்துப் புறத்தே நிகழ்ந்தவற்றைத் தனதெனக் கொள்ளும் அகக்காட்சி விளங்குகிறது எனலாம். இதுவே அகத்தெழு புறக்காட்சியாம். (Interojection)

தன்னைப் பிறன் எனல் :- இந்த உண்மைகள் குழவியின் மனநிலையை நமக்குச் சிறிது விளக்கும். குழவி, பிறபொருளைத் தான் எனக் கருதிவரும்போது, இன்பம் அல்லாததனைத் தான் அன்று என உறுதியாக நம்பிவிடுகிறது. மேடு தன்னை இடறி-விழச் செய்வதனைக் காணும் குழவி, மேடு தன்னினும் வேறு என உணர்ந்து, அதனை உறுதியுடன் உதைக்கின்றது. மேடு துன்பமூட்டியது போல, இன்பமல்லாதன பிறவும் துன்ப-மூட்டுவனமாகவே தோன்றுகின்றன. ஆதலின், அவற்றையும் மேடு முதலியவற்றைப் போலவே, தனக்குப் புறம் எனக்-கொள்கிறது. குழவி இவ்வாறு வளர்ந்து வரும்போது, உலகம் ஒவ்வாதவற்றையும் சிலபோது செய்து விடுகிறது. “பலகையை உடைக்காதே”! எனத் தந்தையார் கூறியும் பலகையை உடைக்கிறது. இத்தகைய நிலையில் உலகம் ஒவ்வாதது இன்பம் அல்லாததும் ஆகிறது. அதனைக் குழவி தனக்குப் புறம்-பாகவும் கருதுகிறது. அதனைப் பிறர் செயல் என்றே குழவி பேசவும் தொடங்குகிறது. குழவியின் மனப்போக்கு அது. இவ்வாறு உலகம் ஒவ்வாதவற்றைக் குழவி செய்துவிட்டால், அவற்றையும் புறத்தெழு அகக்காட்சியாய்த் தனக்குப் புறமாகவே எண்ணித் தன் செயல் அன்று என்றும், பிறர்

செயலே என்றும் நம்புகிறது. இந்த உண்மையை அறிந்தால் அன்றோ குழவியை வளர்க்கும் நுட்பம் விளங்கும்? வீணே குழவியின் மேல் எரிந்து விழுந்து 'பாவிப்பயலே' எனப் பிளிறுவதால் என்ன பயன்?

இரண்டாம் பிரிநிலை :— இவ்வாறு குழவி உலகிடையே வளர்ந்து வரும்போது, பிறரை எல்லாம் தானகக்கொண்டநிலை மாறித் தன்னை வேறு பிரித்து அறியத்தொடங்குகிறது. ஈதே சிறுவர்களுக்கு ஏற்ற கல்விமுறையின் நோக்கமாகும். உலகை விட்டு, முதல் முதலாகப் பிரிந்து வேறு தோன்றும் நிலை இவ்வாறு எழுகிறது. உலகினைவிட்டு வேறு பிரிந்து இருக்கும் நிலை பின்னர் இரண்டாம் முறையும் எழக்காண்கிறோம். தான் எண்ணியபடி எல்லாம் புறப்பொருள்களை மாற்றி அமைக்க முடியாத குழவி தன் எண்ணங்களை எல்லாம் தான் விரும்பியபடி மாற்றி அமைக்க முடியும் என உணர்கிறது. கணக்கைச் சரிவரப் பள்ளியிற்போட்டு உயர்ந்து விளங்க முடியாத குழவி தான் சரியாகப் போட்டு விட்டதாகவும், பிறரினும் தானே சிறந்து விளங்குவதாகவும் பகற்கனவு காண்பது எளிதன்றோ? அல்னுஷரது ஆகாயக்கோட்டை-களையும், பால் விற்கச்சென்ற ஏழைப்பெண் மன உலகில் அரசனை மணந்து மிடுக்காய் நடக்கும் போது இந்த உலகில் அவள் தலைமீது தூக்கிச் சென்ற பாற்குடம் கீழே விழுந்து உடைய வருந்திய நிலையினையும், குழவிகள் இன்றும் கதை-கதைகளாகப் படிக்கின்றன. வெளிஉலகை விட்டுத் தம் எண்ண உலகிற் புகுந்து பலவகை கனவுகளையும் கண்டு வாழச் சில குழவிகள் தொடங்கிவிடுகின்றன. வெற்றியைச் சுவையாத குழவிகள் இங்ஙனமே வளரும். முதல் முதல் எழுந்த பிரி-நிலையை வளர்த்துவரமுயலும் ஆசிரியர், பின்னர் எழும் இந்தப் பிரிநிலையைத் தடுத்துவர முயலுதல் வேண்டும். குழவி, தன்

ஆற்றல் முழுதும் விளங்கநிற்க வேண்டுமானல், தான் செய்யும் செயலிடையே கண்ணுங் கருத்துமாய் ஈடுபட்டு ஒற்றித்து நிற்கப் பழகிக் கொள்ளுதல் வேண்டும்.

ஈடுசெய்தல் :— இணை இணையாக விளங்கும், நம் உறுப்புக்களில் ஒன்று கெடுமானல், மற்ருென்று ஈடு செய்து வரக்காண்ருேம். கண்ணிரண்டில் ஒன்று கெட்டால் மற்றையது ஒன்றே பார்த்து வருகிறது. கண்ணிரண்டும் கெட்டால் காதுகொண்டும், கைகொண்டும் ஈடுசெய்து, தொலேவு, வடிவம் முதலியவற்றை அறிந்து வாழ்ந்து வருகிருேம். இங்ஙனமே நனவுநிலேயும் நனவிலிநிலேயும், ஒன்றற்கொன்று ஈடுசெய்து வரக்காண்கிருேம். நனவிலிநிலே, தடையொன்றுமின்றி எதிர்நிலே இருமுகப் போக்கோடு விளங்குவதாம். நனவுநிலேயிலோ உலகம் சிலவற்றைத் தடுத்து நிற்றலின், இருமுகத்தில் ஒரு முகமே விளங்குகிறது. தான் இயல்பாக விரும்புவதனேயும், உலகம் தன்னேச் செய்யுமாறு விரும்புவதனேயும் சமநிலேயில் வைக்கவே ஒவ்வொருவரும் முயல்கின்றனர். இவ்வாறு நனவிலிநிலேயின் விருப்பத்தை நனவுநிலே இயக்கம் கொண்டு ஈடு செய்வது இயல்பாகிவிட்டது என முன்னரே கண்டோம். பகற் கனவு இத்தகைய நிலேயில் எழுவதொன்ரும். இவ்வாறு இயங்குவதே ஈடுசெய்தல் (Compensation) என்ற அமைப்பாகும்.

பதிலீடு :— பதிலீடு (Substitution) என்பது வேருேர் அமைப்பாம். ஓர் குறிப்பிட்டபொருள் மேல் எழும் விருப்பத்தை வேருென்றின்மேல் மாற்றிவிடலாம். கற்கண்டின்மேல் எழுந்தவிருப்பத்தை மாம்பழத்தின்மேல் எழும் விருப்பமாக மாற்றி விடலாம். சர்க்கரை இல்லே என்ருல் வெல்லத்தினேப் பயன்படுத்துவது போன்றது இது. ஈடு செய்தலும் பதிலீடும் வேறுவேருகும். நனவிலிநிலேயில் எழுந்த தூண்டு-

தனுக்கு நனவுநிலையில் எழும் துலக்கமே ஈடு செய்தலாம். நனவுநிலையிலேயே ஓர் எண்ணத்திற்கோ, செயலுக்கோ பதிலாக வேறு ஒன்றனை அமைப்பது பதிலீடாம். இவை எல்லாம், நனவுநிலையில் தானாக வரமுடியாதபோது தன் ஆளை ஒருவன் அனுப்புவதுபோலாம்.

மாற்று :- மாற்றி அமைத்தல் என்பது மற்றோர் அமைப்-பாகும். இயல்பாக எழும் நனவுநிலை எண்ணங்கள், மேல் எழ முயலும்போது, அவற்றை நனவுநிலை, உலகவாழ்க்கைக்குத் தக்கவாறு வேறோர் எண்ணத்தால் மாற்றுவதே மாற்றி அமைத்தலாம். செய்யவேண்டியதனைச் செய்ய முடியாது தயங்குகின்றவன் அச்செயலைப்பற்றிக் கேட்க வருபவனைக் கண்டதும் நாணுகின்றான். ஆனால், அந்த நாணத்தினை வெளிக்குக்காட்ட நாணி வந்தவன் மீது சீறிவிழுகின்றான். பள்ளிச்சிறுவர்கள் வகுப்பில் நடந்து கொள்வதனைத்தும் இத்தகைய மாற்றமைப்பேயாம் (Displacement). குழவிகள் அனைத்தும் வகுப்பில் கல்லைப்போல வாளாகிடக்கவேண்டும் என விரும்பினால், அவற்றின் ஆற்றல் அனைத்தும் வேறு எதையேனும் செய்துவருவதில் பாய வேண்டாமா? இவ்வாறு வாளாகிடக்கவேண்டுமானால் புறச்செயல்கள் எல்லாம் மன ஆற்றல்களாக மாறவேண்டும். கீழ்நிலைச் செயல்கள் மேல் நிலைச்செயல்களாக மாறவேண்டும். குழவிகள் தாமாகவே இவ்வாறு மாறிவர வழிசெய்யவேண்டுமே யன்றி நாமே வற்புறுத்திக் கொடுமை செய்து வந்தால் வளர்ச்சி அனைத்தும் பாழாகும். இதனாலேயே தண்டனைகள் நாம் எண்ணிய நன்மையைப் பயவாது எதிர்மாறாகத் தீமையேயாய் முடி-கின்றன.

•

புடம்போடல் :— கீழ்நிலைச்செயலை மேல் நிலைச்செயலாக மாற்றுவதே தூயதாக்குதலாம் (Sublimation). இதனை

மனவகை இரசவாதம் என முன்னரும் குறித்தோம். இங்கு இயற்கை ஆற்றலை மனநிலை ஆற்றலாக ஆக்கும்போது மக்கட்கூட்டம் விரும்பும் வகையில் மாற்றுதல் வேண்டும். மக்கட்கூட்டத்திடையே மிக்குப்பொங்கும் ஆற்றலை நல்வழியில் திருப்புவதே இந்நாளைய பெருஞ்சிக்கலாகத் தோன்றுகிறது. போரிலும் வீண்வேடிக்கையிலும் சென்று பாய்ந்து ஒழியும் இந்த ஆற்றலை மக்களுக்குப் பயன்படும் வழியில், படைப்புநிலை ஆற்றலாக மாற்றுவதே நம் நாகரிகத்தின் கடமையாகும். நீர் எல்லாம் வீணே கடலில்போய் விழுதல் ஆகாது என அணை கட்டித் தேக்கி உழவுக்கும் எந்திரங்கட்கும் பயன் படுத்த முற்படும் உலகம் மக்களாற்றலைப் போரிலும் பிறவற்றிலும் உலகினை அழிக்கும் வகைகளில் பாய விடுவது என்னகொடுமை!

சாக்குப்போக்கு :— நாம் விரும்பும் செயல் ஒன்றினைச்சரி என நிலை நாட்ட எந்தக் காரணமும் நமக்குப் பொருத்தமானதாகத் தோன்றும். மக்கள் தாங்கள் விரும்பும் செயலை நிலைநாட்டக் கூறும் காரணங்களின் வகைகளில் வேற்றுமை காண்பதற்கு இல்லை. நமக்குச் சரியன்று என்று தோன்றும் போதும், அச்செயலைச் சரியே எனக்கூறி நிலைநாட்ட அனைவரும் விரும்புவது உலக இயற்கை. பின் தாமும் அவ்வாறு நம்பி விடுகின்றனர். இதனையே தனது நிறுத்தல் அல்லது காரணம் கற்பித்தல் (Rationalisation) என வழங்குவர். நாம் செய்து வரும் செயல் நனவிலி நிலையால் தூண்டப்பட்டதாம். ஆதலின், உண்மையானகாரணம் நமக்கும் தெரியாது. அதனால், நனவுநிலையில் வேறுகாரணம் கூறி, நிலைநாட்ட முயல்வதே தனது நிறுத்தலாம். நனவிலிநிலையைப் புறக்கணித்தாலும் அதனைப்பற்றிய இந்த அமைப்புகள் எல்லாம் இயங்கியே வருகின்றன. ஆதலால், அதனைப் புறக்கணிப்பது நம்மை ஏமாற்றுவதாக முடிகின்றதேயன்றி

வேறொரு நல்ல பயனையும் விளைவிக்கக் காணோம். சில போது, இவ்வாறு புறக்கணிப்பதால் பெருங் கோளாறு எழு-வதும் உண்டு. இந்தக் கேடுவாராமற் தடுக்க வேண்டுமானால் நனவிலிநிலையை நனவுநிலையோடு பொருத்தமுறச்செய்து முழு வாழ்வு வாழ முயலுதல் வேண்டும்.

## VII. குழவியும் கல்வியும்.

உள்ளக்கரு:— "நம் வாழ்வின் போக்கு குழவிப் பருவத்திலேயே நிலைபேறடைகிறது." என்பதனையும் ப்ராய்ட் என்பவர் வற்புறுத்தி உள்ளார். தன்னைச் சுற்றியுள்ள நிலை எல்லாம் தன் உள்ளக்கருவிலே பதியுமாறு குழவி வளர்ந்து வருகிறது. இந்த உள்ளக்கருவோ உணர்ச்சிக் கோலம் கொண்டு விளங்குகிறது. தன் பெற்றோரின் காதல் வாழ்க்-கையை எவ்வாறு குழவி உணர்ந்து வருகிறதோ அது மனத்திற் பாவுதலால், பின்னே வளர்ந்து வாழவரும்போது, குழவியின் காதல் வாழ்க்கையும் மாறுதலின்றி அவ்வாறே அமைந்து விடுகிறது. நல்வாழ்வு வாழவரும் பெற்றோரின் குழவிகள் பின்னே காதலராகி நல்வாழ்வு வாழவரும் என்பதில் ஐயமில்லை. குழவி பிறரோடு பேசும்போது நேரே பார்த்துப் பேசுகிறதா என்பது அது இளமையில் எவ்வாறு வாழ்ந்து வந்தது என்பதனைப் பொறுத்ததாம். குழவியோ, தானே செய்யும் செயல் ஒன்றும் இன்றிக்கிடப்பதோடு, சுற்றுப்புறநிலைகள் தன்னிற் பதிய இளகிநிற்பதால், தன் வளர்ச்சி அனைத்திற்கும் அந்த நிலைமையில் பெரிதும் மற்றவர்களையே நம்பிக் கிடக்-கின்றது. பெற்றோர் காதல் வாழ்க்கையைப்பற்றிப் பேச நாணி நின்றது குழவியின் மனத்தில் வேரூன்றி விடுகிறது. அவர்கள் அதனைப் பற்றிப் பேசாததும், அக்கறையில்லாதது போலப் பேசியதும், மாற்றிப்பேசியதும் குழவியின் மனத்தில்

நன்ருகப் பதிந்துவிடுகின்றன. அந்தகைய குழவி பிறவற்றைப்-பற்றியும் அக்கரையின்றிப் பேசுவதும், குறுக்காக மாற்றிப் பேசுவதும் இயல்பேயாம். உண்மையை அறியாது நேராக எண்ணும் போக்கும் போய் ஒரு முகப்படாத பல முக எண்ணப்போக்கு வளர்கிறது.

உயர்ந்த கல்வி :— உடல் நிலையையும் வாடவிடாது வளர்த்து மனநிலையையும் வளர்க்கின்ற கல்வி முறையே சிறந்ததாம். உடல்நிலை எண்ணங்கள் நனவிலி எண்ணங்களாம். ஆதலின், உடல் நிலையை வாட விட்டால் நனவிலி நிலையில் பெரிய நெருக்கடி விளைகின்றது. இந்த நெருக்கடிகள் உண்ணும் நிலையிலும் இனத்தைப் பெருக்கிப் படைக்கும் நிலையிலுமே தீர்ந்துவரக் காண்கிருேம். படைக்கும் இயற்கைச் செயல் இனப்பெருக்கமாக மட்டும் முடியாமல், உயர்ந்த-தெனக் கூறப்பெறும் பொருள்களைப் படைப்பதாகத் தூய்மை-யாதல் வேண்டும். கலையாகக் கனிய வேண்டும். நமக்குப் பெரிதும் ஆறுதல் அளிப்பது நனவிலிப் போக்கை அடக்கி ஆண்டு பயன்படும் வகையில் திருத்தி அமைத்தலே ஆம். "குழவி வீண் எண்ணங்களை எண்ணுகின்றது. புத்தி இன்றித் தொழில் புரிகின்றது. வீணே பொருளை உடைக்கின்றது" என்று கூறும் நிலைகளில் எல்லாம் உள்ளிருந்து பொங்கும் நனவுநிலை ஆற்றலே இவ்வாறு குழவியை ஆட்டிப் படைத்தலின், அதனை மறக்காது பயன்படும் வழியில் அந்த ஆற்றலைப் பாய்ச்சுவது இன்றி அமையாததாம்.

## VIII. ஆட்லர்

ஆட்லர் :— ப்ராய்ட் என்பாரின் மாணவரில் ஆட்லர் (Addler) என்பவர் ஒருவர். அவரும் "குழவியை இயக்குவது

யாது?'' என ஆராய்ந்து உள்ளார். குழவி பிறந்தது முதல் வளர்ந்தோங்கிவரும் போராட்டத்திலே ஈடுபட்டு இருப்பதாகக் காண்கிறார். குறைவிலா நிறைவாய்ப் பெருமையாய் வாழும் நோக்கம் அதன் மனத்தின் எதிரே தோன்றிக் கொண்டே இருக்கின்றதாம். குழவிகள் தத்தம் பல நிலைகளும் ஒன்று சேர்ந்து ஒவ்வொரு தனிக் கோலமாக விளங்க வாழ்கின்றன-வாம். தனிச்சிறப்புடன் ஆளுமை (ஆளாக இருக்கும் தன்மை-Personality) யோடு திகழ்கின்றன. ஒவ்வாரு குழவியும் ஒவ்வோர் ஓவியம் எனலாம். அந்த அந்த ஓவியத்தைப் படைப்பதும் அந்த அந்தக் குழவியே என்பதனை மறத்த-லாகாது.

இளமையிற்கல்:- உலகவாழ்க்கையைக் குழவி, உள்ளது உள்ளபடி அறிந்து, அதற்கு ஏற்ற வகையில் தன் வாழ்க்கையை உருப்படுத்திக் கொள்ளுவது இல்லை. எனவே, உள்ளதற்கு வேருக உணருமாஞல் தவருன உணர்வே தோன்றும். குழவி நிலையிலே, இவ்வாறு உள்ளக்கரு உருப்பட்டு வருதலினுல், பின்னே அதனை மாற்றி அமைப்பது அருமையாம். "இளமை-யிற்கல்'' என்பது இதனுலேயாம். குழவிப் பருவத்திலேயே சீர்திருத்த வேண்டும். குழவியின் உள்ளத்தில் உறைந்-திருப்பது என்ன? 'மேலுக்கு உயரவேண்டும்' என்ற விருப்பம் ஒருபுறம் இருக்க, உயருதலின்றிப் பிறர் உதவியையே நாடி வன்மையற்றுக் கிடக்கின்ற கீழ்நிலைமையே அதன் மனத்தில் வேரூன்றி நிற்கிறதாம். உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளுத-லாக இருந்தும், இந்தத்தாழ்வு உணர்ச்சி அதனை விட்டு நீங்கு-வதில்லை. ஈதே குழவியை இயக்கி வைக்கின்றது. தாழ்வின்றி நின்றும் உயர்வு நிலையை அடைந்து வரும் குழவிகளையும் காண்கின்றோம். ஆனுல், இவ்வாறு வருந்தி உழைப்பதில் தடை வருமாயின், எண்ண உலகிற் புகுந்து தன் உயர்வைப் பற்றிக்

களுக்கண்டு களிப்பதோடு அமைதி அடைந்து விடுகின்றது. தாழ்வு உணர்ச்சி மிக்கு விளங்குமானல் அதற்கேற்ப மிக உயரவேண்டும். முடியாததனை எல்லாம் செய்யும் முயற்சி எழுகின்றது. முடியாமையால் மேலும் மேலும் தாழ்வு உணர்ச்சியே வலியுறுகிறது.

மூன்று கேள்வி :— இத்தகைய குழவிகள், தம்மைச் சுற்றில் உள்ளார் தடுத்து நிற்பதனை எல்லாம் வெறுத்து நிலைகுலைந்து உலகினையே பொருள் படுத்தாமல் தம்மைப்-பற்றியே எண்ணித் திருடராகவும், பிறராகவும் மறவாழ்வு வாழ வருகின்றன. மக்கட் கூட்டத்தைப்பற்றிய நம் உணர்ச்சியே நம் மனநிலையின் குறைவையும் நிறைவையும் அளந்து காட்டுகிறது எனலாம். "எவ்வாறு உலகத்தோடு ஒட்ட ஒழுகுகிறோம்" என்பது முதற் கேள்வி. "நம் வாழ்க்கையை எவ்வாறு பயன் படுத்துகிறோம்? உலகத்தில் என்ன பங்கு எடுத்துக்-கொள்கிறோம்?" என்பது இரண்டாம் கேள்வி. "ஆணும் பெண்ணுமாக உலகம் வழங்கி வருதலின் பிறபாலாரை நோக்க நம் நிலைமை என்ன? அவர்களிடம் எவ்வாறு நடந்து கொள்கிறோம்?" என்பது மூன்ருவது கேள்வி. இந்த மூன்று வகையாலும் ஒருங்கு எழுந்து தோன்றும் நோக்கம், வாழ்க்கைக்குப் பயன் படுவதால், உலகத்தோடு ஒட்டவாழும் முயற்சியாய் அமையுமானல் நம் செயல்கள் பயனுடையன ஆம். இல்லையேல் வீணும். இந்த உண்மையை அறிந்து குழவிகளை வளர்த்தல் வேண்டும்.

தாழ்வுணர்ச்சி :— தாழ்வு உணர்ச்சி முறுகிவளரும் இடங்கள் மூன்ரும். வன்மையின்றிக் கிடக்கும் குழவியும் குறை உறுப்போடு வருந்தும் குழவியும் இயற்கையிலேயே தாம் தாழ்ந்து ஒடுங்கிக் கிடப்பதாக எண்ணி விடுகின்றன.

இரண்டாவதாக, அன்பின்றிக் கடுமையாக நடத்தப்பெறும் குழவியும் தாழ்வுணர்ச்சி பெருகிவரவே வளர்கிறது. மூன்றாவதாக, அளவுகடந்த அன்புநிலையில் செல்வமாக வளர்க்கப் பெறும் குழவிகளும் பெற்றோரே அனைத்தையும் செய்துவரத் தாம் ஒன்றும் செய்ய அறியாமையால் 'பெற்றோரின்றித் தாம் வாழ முடியாது' என நம்பித் தன்நம்பிக்கை என்பது மருந்திற்கும் இன்றித் தம்மால் ஒன்றும் செய்ய முடியாது எனத் தாழ்வுணர்ச்சியில் மூழ்கிவிடுகின்றன. இந்த மூன்றிடங்களையும் அறிந்த மட்டிலேயே 'யாது செய்ய வேண்டும்' என்பது தெளிவாகிறது. குழவிகளைப் "பயனற்ற மக்குகள்" எனக் கூறியே பாழாக்குகின்றோம் என்பதும் வெளியாகிறது. அன்பாகக் குழவிகளைத் தட்டிக்கொடுத்து, ஊக்கம் வளரப்பாராட்டிப் புகழ்ந்து, உடன் நின்று உதவி, உயர்வு எண்ணத்தை, ஓங்க வளரவிடுவதே குழவியை வளர்ப்பார் செய்யத் தக்க தொண்டாம்; கடமையாம்.

யுங் :— யுங் (Jung) என்பவர் ப்ராய்ட் என்பாரின் மற்றொரு மாணவர். இவரும் மனநிலையினை ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டவர். சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்பப் பொருத்தம் உற்று வாழ்வதே வாழ்க்கையின் நோக்கம் என இவர் வற்புறுத்துகின்றார்.

தத்துவார்த்தம் :—இவர்களது கொள்கைகளை அப்படியே நம்பவேண்டும் என்பது இல்லை. குழந்தைகளின் நடத்தைகளை அறிய இவை உதவுகின்றன என்பதில் ஐயமில்லை. குழவிப் பருவமே மனம் உருக்கொள்ளும் காலம் என்பதும், நம் மனத்தினை இயக்கும் ஊக்கிகள் மேலெழுவாரியாகத் தோன்றுவதில்லை என்பதும் இவர்கள் கொள்கைகளால் தெரியவருகின்றன.

## IX. மாண்டிசோரி

அவதாரம் :— ப்ராய்ட் என்பார் அடிமனத்தைப்பற்றிப் பேசுகின்றார். காம எண்ணமும், இறப்பு எண்ணமுமே நம் மனத்தில் பதிந்து நம்மை இயக்குகின்றன என்கின்றார். இந்தக் கருட புராணம் பலருக்குப் பிடிப்பதில்லை. மாண்டிசோரி அம்மையார் சிறந்ததொரு கடவுட் பாடல் பாடுகின்றார். ப்ராய்ட் என்பார் குழவியின் உடலைத் தாண்டிச் சென்று, மனத்தினையும் அடிமனத்தினையும் கண்டு அம்மனநிலைகளைப் பற்றிக் கூறியதுபோல, மாண்டிசோரி அம்மையார் அம்மனநிலைகளையும் கடந்து சென்று உயிர்நிலையைக் கண்டு உயிரைப் பற்றிக் கூறுகின்றார். புறநிலைச்சூழலே, இந்த உயிர்க் கரு வளர்ந்து வரும் சிறந்த கருப்பையாக, அமைத்தற்கு எனவே முதியோர் விளங்குகின்றனராம். உள்ளும் புறமுமாய் ஒளிரும் ஆன்ம நிலையே புறப்பொருள்கள்மேல் பொங்கி எழும் காதலாம். இதுவே அன்பாக உயிக் கருவினிடத்தே முகிழ்த்தெழுந்து ஊற்றெடுத்துக் குமிழ்நீராய் வெள்ளமிடுகிறது. புருஷன் ப்ருக்ருதி சக்திமேல் கொள்ளும் காதலே ஈது எனலாம். காமம் என ப்ராய்ட் என்பார் இழித்துக் கூறியதனை அனைத்திற்கும் அடிப்படையாம் அன்பாக மாண்டிசோரி அம்மையார் விளக்கிவைக்கின்றார். இந்த உயிரானது உடலியக்கமாகவே உருப்பெற்று இவ்வுலகில் அவதாரமாகிறது.

சிதைவு :— இவ்வாறு இயற்கையாக வளரும் நிலையில் தடைகள் எழுமானால் உயிர்க்கரு ஒற்றுமை இழந்து சிதறண்டு சிதைகிறது. இதனை மறுபடியும் இயற்கையோடு பொருத்தமுறச் செய்ததும் இந்தச் சிதைவுநிலையும், கோணல் நிலையும் தீர்கின்றன. குழவியைப் புறத்தோற்றத்தோடு தொடர்பு படுத்த வேண்டும். இவ்வாறு ஒன்று படுத்துவதே இயக்கத்தின்

செயற்படுநிலையாம். இத்தகைய செயற்பாட்டில் மனத்தினை ஒருமுகப்படுத்தி முயன்று வரும்போது, குழவி தன் பிறழ்ச்சி நிலை நீங்கிச் சமநிலையை அடைகிறது. அங்ஙனமானால், குழவியின் பிறழ்ச்சிநிலை அனைத்தும் ஒரே நிலையில் நின்றும் பிறக்கின்றன என்பது தெளிவாகிறது. சமநிலையோ ஒன்று; அதன் பிறழ்ச்சி நிலைகளோ பல. குழவியின் அடங்குநிலையான ஆற்றல்கள் மேலே கூறியவாறு செயல் முறையில் அவதாரமாகி உருப்பெற்று வருதல் வேண்டும். இதற்குத் தக்கதோர் ஆக்கநிலைப் பருவமும் அமைதல் வேண்டும். அப்போது சுற்றுப்புறச் சூழலும் அதற்கு உதவி வரும். இந்த சுற்றுப்புறச் சூழல் சிலபோது சில செயலால் சிதைதலும் உண்டு. அப்போது அந்த வளர்ச்சிக்கென அமைந்த பண்டைக் கோலத்தைக் குழவியின் உயிர்நிலை அடையாதவாறு இந்தச் சிதைவுநிலை தடுத்து ஒழிக்கிறது. இவ்வாறு தடையுண்ட போதுதான் பிறழ்ச்சிகள் அனைத்தும் பிறக்கின்றனவாம்.

தடைகள் :- இத்தகைய தடைகளை எழுப்புவோர் குழவிமீது உயிராக இருக்கும் முதியவர்களே ஆம். விளையாட்டுப் பொருள்களோடு மட்டுமே குழவியை உரிமையோடு வாழ விடுகின்றனர். பலவகையாகத் தோன்றும் புறநிலை உலகின்மேல் காதல் கொண்டு வாழவரும் உயிரினை இவ்வாறு சிறைப் படுத்தி விலங்கிட்டுப் பொம்மையுலகில் வாழுமாறு நாடுகடத்தி ஓட்டி விடுகின்றனர். எங்கும் காலடி எடுத்துவைக்க முதியோர் இடம் தாராமையால், உயிரானது மனத்துக்குள் ஓடி ஒளிந்து கொள்கிறது. ஈதே பொம்மை விளையாட்டு முதலிய விளையாடல்களாம். ஆற்றல் தனக்கு இயல்பான இடத்தில் இயங்கிவர முடியாதபோது வேறோரிடத்தில் ஓடி ஒளிந்து கொள்கிறது. துன்பத்தினின்றும், கேடு நிலையினின்றும் தப்பி ஓடிப் பின்னும் அவற்றின் கைக்கு எட்டவாராது தப்ப, முகமூடி பூண்டு, உயிர்,

மறைந்து நிற்கின்றது. இவ்வாறு மறைந்து நிற்பதே நனவுநிலை அடிமனத்தின் தற்காப்புநிலை எனலாம். பல பல தடைகள் குழவிச் சிறையின் வேலியாகவும் மதிலாகவும் அமைகின்றன. குழவி முதலில் கணக்கை வெறுக்கும்; பின் படிப்பையே வெறுக்கும்; பின் பள்ளியை வெறுக்கும்; அனைவரையும் வெறுக்கும். அந்தோ பாவம்! தடைகளின் பயனாக இருட்டறையில் புகுந்தவர்கள் போலக் குழவி, குருடாய்ச் செவிடாய், இயற்கையிடையே வாடுகிறது. ஆனால், இந்தத்தடை வேலிகளைப் பிடிங்கிக் களைவது எளிது. ஆமை ஓட்டிற்குள் புகுந்தால் வெளிப்படுத்துவது அருமையாதல் போல, ஒளிவுநிலையில் மனத்திற் புகுகின்றமையைப் போக்கிக் களைவது அருமையினும் அருமையாம்.

படைப்பும் புதையலும் :- குழவியின் இயல்பு, படைத்து விளையாடித் தன் படைப்பினை அனைவர்க்கும் காட்டி அகமகிழ்வதே ஆம். தான் செய்ததனைத் தனது உடைமை ஆக்காது பொதுஉடைமை ஆக்கிக் களிக்கின்றது. தான் படைத்ததனைப் பிறர் கண்டு மகிழாதபோது இதற்கும் மகிழ்ச்சி இல்லை. ஆனால், சிலபோது குழவிகள் தமக்கு வேண்டாத பொருள்களை எல்லாம் சேர்த்துவைத்து மைடாஸைப் (Midas) போலத் தாமே கண்டு களிக்கவும் செய்கின்றன. வைக்கோற் போரில் புகுந்த நாய் தனக்கு உதவாத வைக்கோலை எருதுக்கும் உதவாதவாறு தடுப்பதுபோல நிற்கின்ற நிலையே இதுவாம். உடைமை என்ற மெய்ப்பாட்டினை முன்னர்க் கண்டோம். சுற்றுப்புறச் சூழலினை நோக்கி எழும் குழவியின் காதல் படைப்பு இயக்கமாக மலர்வது தடைப்பட்டால் குழவி பொருள்களை மட்டும் காண்கிறது. அப்பொருள்களிடையே பாயும் தன் படைப்பு நிலை ஆற்றலைக் காணமாட்டாது தயங்குகிறது. ஆதலின், தன் இயற்கைப் படைப்பு நிலையை

மறந்து, பொருள்களை மட்டும் நாய் கொண்ட தெங்கம் பழமாகக் கொண்டு காணவேண்டும் என முயல்கிறது. படைப்புக்கு எனப் பொருளைக் காதலித்த நிலைபோய்த் தன் உண்மை நிலையையும் மறந்து, பொருட்கு எனப் பொருளைக் காதலிக்கின்றநிலை எழுகிறது.

போய்யும் அதிகாரமும் :— இங்ஙனமே அதிகாரவெறியும் எழுகிறது. இயல்பாகத் தன் குழவிஉலகில் பெறலாகாத-வற்றைக் குழவி முதியோரிடம் பெற முதியோரையே பயன் படுத்திக்கொள்கிறது. பிறரையே சார்ந்து நிற்கும் குழவிகள் முதியோர் தரும் உதவியின் பயனாக இவ்வாறு மாறுகின்றன-வாம். இத்தகைய குழவிகள் பிறரை அடிமையாக்கி அனைத்-தையும் பெற விரும்புவது இயல்பேயாம். மீதூண் விரும்புதல் மனநிலையில் எழும் கேட்டால் வளர்வதேயாம். இடர்ப்பட்ட மனம், "உண்டேனும் களிக்கலாம்" எனப்போகிறது. அச்சமோ தன்னைத் தாழ்வாகக் கருதிப் பழகிவிட்டதால் செயற்கையாக எழுகின்றதாம். பொய் என்பதும் மனத்தினை மறைத்துக் காப்பாற்றும் மெய்புகு கருவியாம் (Armour). சில பொய்கள் புதுமையைப் படைத்துவரும் குழவியின் கற்பனைத் திறத்தினைக் காட்டும்; சில சோம்பேறித் தன்மையால் எழுவன; பிற அறிவாராய்ச்சியால் எழும் கற்பனைகளாம். மேலே புற-நிலையில் எழுந்த தடைகளின் காரணமாகச் சமநிலை பிறழ்ந்த போது நனவிலி நிலையில் சமநிலையுற்றுப் பொருத்தம் பெறுவ-தற்காக எழும் முயற்சிகளே இங்குக் கூறிய குறைபாடுகள் அனைத்தும் எனலாம்.

உயிர்க்கரு :— இந்தக் கோளாறுகளைக் கண்டதும் மாண்டிசோரி அம்மையாருக்கு மேல்நாட்டுப் பாட்டொன்று நினைவிற்கு வருகிறது. "நெஞ்சம் உறைந்துபோகிறது; பனிக்-

கட்டி ஆகிறது; ஒளிப்பொருள்போல மின்னிப் பொலிகிறது; அதன்மேல் விழுவன சிதறுண்டு சிதைகின்றன; என் மனம் கல்லேயாகியது; அதன் மீது ஓங்கி அறைகின்றேன்; என் கையே உடைகின்றது." குழவியும் இவ்வாறுபாடும். தடையை நீக்கி உரிமை வாழ்வு வாழவிட்டால் குழவியின் உயிர்க்கரு கடவுள் மலராக மலர்ந்து, அழகு ஒளிர மின்னி, அன்பொலி எழுப்பி, இன்பத்தேன் பிலிற்றி, உலகெங்கும் நறுமணம் வீசித் திகழும்.

"கண் நாக்கு மூக்குச் செவி ஞானக் கூட்டத்துள்
பண்ணுக்கி நின்ற பழம் பொருள் ஒன்றுண்டு
அண்ணுக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
புண்ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே"

(திருமந்திரம் 599)

---

# 14. ஊக்கப் பேறு

---

## I. ஊக்கநிலை

செயல்நிலை வட்டம் :— இயற்கைச் செயல்நிலை என்பது உள்ளேயே ஏதோ கடவுளமைப்புப்போலும் எனப் பலர் எண்ணி விடுதலின் அந்தப் பெயரை ஒழித்துச் செயனிலை-வட்டம் என இப்போது அறிஞர் பலர் பேசிவருகின்றனர்.

"செயனிலை வட்டம் (Cycle of activity), ஒரு தூண்டுதல் காரணமாக, இயங்கவேண்டும்" என்று ஒரு தேவை எழுகிறது. முடிவிலே ஒருநிலையை இந்த இயக்கத்தின் பயனாகப் பெறலாம்; அல்லது ஒழிக்கலாம். அங்ஙனமே ஒரு தூண்டுதலைப்பெறலாம்; அல்லது ஒழிக்கலாம். உடலினிடையே முதலில் சமநிலை விளங்குகிறது. அது பிறழ்ந்ததும் அப்பிறழ்ச்சியை நீக்க இயக்கம் தொடங்குகிறது. சமநிலை வந்ததும் இயக்கம் முடிவடைகின்றது. சமநிலையைச் சுற்றித் தொடங்குநிலை இயக்கமும், முடிவுநிலை இயக்கமும் இவ்வாறு வட்டமாக அமைதல் காண்க. முடிவுநிலை இயக்கத்தால் உள்ளெழுந்த நெருக்கடி தீர்கிறது. முறுகி நின்றநிலை நெகிழ்கின்றது. ஓர் ஆறுதல் பிறக்கின்றது. இந்த ஆறுதலே, முடிவு பெற்றால் எழுகிற சமநிலையைக் குறிப்பதாகும்.

பல நிலை:- இங்கும் பலநிலைகளைக் காண்கிறோம். வேண்டும் என விரும்புவது உடன் பாட்டுநிலை; வேண்டாம் என்பது எதிர் மறைநிலை. வேண்டும் என்பதும், வேண்டாம் என்பதும் அற்ற நிலையே நொதுமல்நிலை (Indifference). இதுவே அக்கரை பிறவாதநிலை. இங்குக் கூறிய நிலைகள் ஒன்று வேறொன்றாக மாறுதலும் உண்டு. மிகவிரும்பும் உணவினை வயிறுநிறைந்தபின் "உண்" என வற்புறுத்தினால் வெறுப்பேவரும். புதுமையாகக் கேட்ட பொருளைக் "காணவேண்டும்" எனப் பதைபதைத்தநிலை அதனைக் கண்டதும் மாறிவிடுகிறது. பின் அதில் அக்கரை எழுவதில்லை. உடன்பாட்டு ஊக்கநிலைத் தேவைகள் தீர்ந்ததும் நொதுமல் நோக்கமே எழும். சிறுநீர் விடுவது முதலில் ஒரு நோயாகவே எழுகிறது. அப்போது உள்ளெழும் உறுப்புக்களின் இயக்கம் சமநிலையைப் பிறழவே செய்கின்றது. சிறுநீர் கழிந்ததும் ஆறுதல் எழுகின்றது. எனவே, துன்பமாய்த் தொடங்கியது இன்பமாய் மாறுகிறது என்பதாயிற்று. இவ்வாறு

எதிர்மறை ஊக்கநிலையே பழக்கத்தால் உடன்பாட்டு ஊக்க நிலையாக மாறலாம். சனசமுதாயம் பலபுதிய ஊக்க நிலைகளையும், பலபுதிய முடிவு பேறுகளையும் தன்நாகரிக வளர்ச்சியினிடையே விளைவித்துக் காட்டிவரும். போர்வீரர் தம் கொடியைக் கண்டு ஊக்கம் பெற்றுப் போராடுகின்றனர். தாய் நாட்டு விடுதலை முதலிய புதிய முடிவுபேறுகளை மக்கள் கடைப்பிடித்து ஒழுகக் காண்கிறோம். பழக்கங்கள் ஊக்க நிலையாக அமையும். தீண்டாதவரைக்கண்டு ஓடும் வைதிகரைக் காண்க. உணர்ச்சி நிலைகளும் அவ்வாறு ஊக்க நிலையாக அமையலாம். பயிற்சியின் காரணமாக இந்தச் செயல்நிலை வட்டம் சுருங்கிக்கொண்டே வரும் என முன்னரே கண்டோம். எழுத்து எழுத்தாய்ப் படித்தவன், சொற்றொடர் சொற்றொடராய் விரைந்து படிப்பதனைக் குறித்தோம். பயிற்சியின் காரணமாகச் செயல்-நிலை வட்டம் நிலைபேறுற்று வருவது மற்றோர் உண்மை-யாம்.

சிறப்புநிலை உறுதல் :— இவற்றின் கால அளவை, வட்டத்திற்கு வட்டம் மாறிவரக் காண்கின்றோம். உணவு-வட்டம் பிறக்கும்போதே தோன்றுகிறது. ஆனால், என்றும் நின்று நிலவுகிறது. குழவி உண்ணும் முறை நம்மினும் வேறு; அளவும் வேறு; கால இடையீடும் வேறு. இவை பிறர்க்குப் பிறவாறு அமைந்து மாறக் காண்கிறோம். காதலைப் பற்றி ஆண் பெண் வேற்றுமையோடு எழுகின்ற பால்நிலை வட்டம் (Sex cycle) இயங்கும் முறைவேறு. இது பிறக்கும் போதே இயங்குவதில்லை. செயற்பாடுகளை ஆராய்ந்தால் பொதுப்பட அமைந்த செயற்பாடு சிறப்புநிலையுற்று வெவ்வேறாகப் பிரி-கின்றது என்பர் சில அறிஞர். கீழ்க்கண்ட படம் வரைந்து இதனைக் கேண்டல் யங் (Kendel Young) என்ற அறிஞர் விளக்குகிறார்.




முதலில் சுற்றுப்புறச் சூழலைக் கண்டதும் உள்ளக்கிளர்ச்சி அல்லது திடுக்கீட்டுநிலை எழுகிறது. இந்தப் பொது நிலை, (1) இனிமை அல்லது இன்பநிலை (2) இன்னாமை அல்லது துன்பநிலை என்ற இரண்டு நிலைகளாகப் பிரிகிறது. இனிய நிலையிலிருந்து அன்பும், இன்னாமையிலிருந்து அச்சமும், இனிமை இன்னாமை என்ற இரண்டிலிருந்தும் வெகுளியும் சிறப்புநிலை உறுகின்றன. அன்பென்பது தலைவன் தலைவி என்பாரிடம் தோன்றும் காதலாகவும், குழவிமேல் எழும்

வாற்சல்யம் ஆகவும், பெற்றோர்மேல் எழும் அன்பாகவும், பிறர்மேலும் பிற பொருள்கள்மேலும் எழும் இரக்கமாகவும் வேறு பிரிந்து சிறப்புநிலை அடையக்காண்கிறோம். வெகுளியும் அங்ஙனமே குறிப்பிட்ட பொருள்மேல் சீற்றம். மன எரிவு, சினம் எனப் பலவேறு வகையாகச் சிறப்புநிலை அடைகிறது. அச்சம் என்பதும் இங்ஙனமே, அலைவு, குறிப்பிட்டதோர் அச்சம், கவலை எனச் சிறப்புநிலை உறுகின்றது. இவை கலவைநிலை உற்றும் தோன்றுகின்றன.

இயற்கை ஊக்கநிலை :— ஊக்கநிலைகள் என்பன கற்றுக் கொள்ளாமலே இயற்கையாக எழுபவையாம். மூச்சு வேட்கை, சுடுநிலைக்கு ஏற்ப உடல் பொருத்தமுறும் வேட்கை, உணவு வேட்கை (பசி), நீர் வேட்கை முதலியவற்றைக் காண்க. (1) இவற்றில் சில உடற்கூறு இயலான (Physical) தேவை-களாம். இந்தத் தேவைகள் இருவகையாம். ஒன்று உள்ளெழு தூண்டலால் எழுபவை. பசி முதலியவற்றைக் காண்க. மற்றொன்று வெளி எழு தூண்டலால் எழுபவை. குளிரின்நின்றும் உடலைப் பாதுகாக்க எழும் இயக்கங்களைக் காண்க. (2) வேறுசில வேட்கைகள் அகநிலையின் வெளிப்பாடாம் துலக்-கங்களாக விளங்கி நிற்கும் ஊக்கநிலைகளாம். குழவி குழறிப் பேசுதல், கைகால் ஆட்டுதல் முதலியன அதன் மெய்ப்-பாட்டினை விளக்குவது காண்க. அவ்வாறு இயங்கினல் அன்றி முடியாதபடி ஊக்கநிலை அங்கு அமைந்து உள்ளது.

செயற்கை ஊக்கநிலை :- நாகரிகம் வளர்ந்து வரும்போது ஊக்கநிலைகள் இயற்கையாக அமைவதேயன்றிச் செயற்கை-யாகக் கற்றுக்கொள்வதன் பயனுகவும் நிலைபேறு அடை-கின்றன. இவை பலவகை வேட்கைகளின் கலவை நிலையாகவும் விளங்கக் காண்கிறோம். “காப்பி குடித்தாலன்றித் தலைநோய்

போகாது" எனக் கூறுவோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் மிக்குவருகிறது அன்றோ? (1) இவற்றிற் சில அடிப்படையான உடற்கூற்றியலைப் பற்றிய தேவைகளை எழுப்பும் ஊக்க-நிலைகளாம். காப்பி வேட்கை உணவு வேட்கையின் சிறப்பு-நிலையேயாம். இயற்கைத் தேவைகளே செயற்கைப் பழக்க வழக்கத்தால் பலவகையாக மாறியுள்ளன. காட்டுமிராண்டி உண்ணும் நிலைக்கும் நாகரிக மக்கள் உண்ணும் நிலைக்கும் ஏற்ப, இந்த ஊக்கநிலை பொருள் நாட்ட வகையாலும், செயல் முறையாலும் மாறி மாறி அமைந்து வருவதனை வரலாற்று நூலோர்வாய்க் கேட்டு அறியலாம். (2) வேறுசில வேட்கைகள், அதிகாரம் முதலிய செலுத்த விரும்பும் வேட்கைகளாய்ச் சமுதாய நாகரிகத்தைப் பற்றியனவாய் விளங்கும் ஊக்க நிலை-களாம். நாம் தோழர்களையும் தொண்டர்களையும் காதலரையும் தேடி வாழ்வது இவற்றாலேயாம். (3) புதுமை நாட்டம் புதியன கண்டு பிடித்தல், தேடித் துருவிப்பார்த்தல் முதலிய கோலங்-கொண்டு விளங்கும் ஊக்க நிலைகளும் உள்ளன. இவை அனைத்தும் நாகரிகத்திற்கு ஏற்பத் திருத்தமுற்று வருகின்றன. (4) உறுதிப் பொருளாகக் கடைப்பிடித்து ஒழுக வேண்டுவன-வற்றை எதிர்காலத்தில் இருப்பனவாகவோ, நிலைநாட்ட வேண்டுவனவாகவோ கண்டு அவற்றை அடைய வேண்டும் என்ற வேட்கை நிலையும் உண்டு. இதற்கு ஏற்ப நம் நடத்தை மாறி வருகின்றதன்றோ? வீடுபேறு அடைய விரும்புகின்ற நிலையும் உண்டு; உலகினைச் சீர்திருத்த முயலுகின்ற நிலையும் உண்டு.

## II. ஊக்கிகள்

ஊக்கி இயல்:- "குழந்தையின் நடத்தை ஏன் எழுகிறது?" என ஆராய்வதே ஊக்கி இயல் (Science of motivation or Psychical Dynamics) ஆராய்ச்சியாம். குழந்தையின்

நடத்தை எவ்வாறு இருத்தல் வேண்டுமோ அவ்வாறு இல்லையானல் அதனை ஊன்றி ஆராய்தல் வேண்டும். தக்க ஊக்கநிலைகளையும் எழுப்புதல் வேண்டும். தான் செய்யத் தக்கவற்றைத் தான் செய்யக் கூடுமானல் அவ்வாறு செய்ய விரும்பும் நிலையே ஊக்கநிலையாம். ஆதலின், “நம்மை ஊக்குவன யாவை” என அறிதல் வேண்டும். உட்பாடுகளே (Instincts) தூண்டுகின்றன எனக் கூறுவதும்உண்டு. ஈது ஏதோ ஒரு கடவுள் நிலை எனச் சிலர் கருதி வருகின்றமையால் உட்பாடு என்றசொல்லை விட்டு, உடலமைப்பினையே குறிப்பதாக “உந்துநிலை” (Drives) என்ற பெயரை இந்நாளைய அறிஞர் வழங்கி வருகின்றனர்.

உந்துநிலை :- குழவிக்குக் குழவி ஆற்றல் வகையால் வேறுபட்டு இருக்கக் காண்கிறோம். முன் நாம் கூறிய சுரப்பிகள் எல்லோரிடமும் ஒரேவகையாக இயங்குவதில்லை. இதனுலும் குழவிக்குக் குழவி வேறுபாடு எழலாம் எனலாம். பசி போன்றவை உடலமைப்பின் இயற்கை இயக்கங்களாம். இவற்றின் முறைஅமைப்பு வகையிலும் வேறுபாடு தோன்றலாம். நடத்தை முறையை உற்றுநோக்கினுல் பசித்த குழவிக்கும், பசியாத குழவிக்கும் வேற்றுமை பெரிதாகத் தோன்றும். குழவிகளின் உணர்ச்சிநிலை, பழக்கமாகி வரும் போது, ஒவ்வொரு குழவியின்நிலையும் ஒவ்வொரு சிறப்புக் கோலமாக அமைந்து கிடக்கக் காண்கிறோம். அகத்தே எழும் உந்து நிலைகளில் உணர்ச்சிக் கோலங்களே பெரும் பங்கு எடுத்து நிற்கக் காண்கிறோம்.

எதிர் பார்த்தலே மதிப்பு :- குழவி ஏன் இயங்குகிறது ? முதல் முதல் தன் பசி முதலியவற்ருல் அதன் உடல்நிலையின் இடையே ஓர் அமைதிஇன்மையும், வருத்தமும், பொருத்த-

மின்மையும், சமநிலைப் பிறழ்ச்சியும் தோன்றுகின்றன. அப்போது, இன்னது செய்வது என அறியாமையால் நோக்கமற்ற இயக்கம் ஒருமுகமற்றுப் பலமுகமாக எழுகிறதாம். இத்தகைய இயக்கம் குழவியையும் சுற்றுப் புறத்தையும் மாற்றுமாம். இதன்பயனாகச் சுற்றுப்புறச்சூழல் நல்லதாகவும் மாறலாம்; தீயதாகவும் மாறலாம். அழுங்குழவி பாலும் பெறலாம்; அடியும் பெறலாம். தன்னைத் தூண்டிய நிலைகளை இவ்வாறு எழுகின்ற பயப்பாடுகள் மாற்றி அமைப்பதனைக் குழவி உணருமானால், தன் சூழலின் பலவகை இயல்புகளையும் உள்ளவாறு மதிப்பிட அறிந்து கொள்கிறது. சிலவற்றைக் கண்டு பின்வாங்குகிறது. சிலவற்றைக் கண்டு முந்தி ஓடுகிறது. சில வெருட்டல்களாகின்றன. சில வெற்றிகளாக முடிகின்றன. இவ்வாறு இயக்கங்களை மதிப்பிடும் மதிப்பு, குழவியின் எதிர் பார்த்தல் வடிவமாகவே விளங்குகிறது. இந்த மதிப்பு குழந்தையின் மனத்திலேயன்றி மதிப்பிடப்பெறும் வெளிப் பொருளில் இல்லையாம். இத்தகைய அனுபவங்களால் குழவியின் தேவைகள் பரந்து கொண்டே வருகின்றன. பிறரை மகிழ்விக்க வேண்டிக் குழவி எவ்வளவோ செய்கின்றது. சுறுசுறுப்பாக இருக்கவேண்டியும் எவ்வளவோ பல வேலைகளைச் செய்து வருகிறது. இவ்வாறு செய்ய விரும்புவதன் காரணம், இத்தகைய போக்கினால், இன்பமான முடிவை எதிர்பார்ப்பதேயாம். இத்தகைய பழக்கத்தின் முடிந்த முடிபு தான் என்னை? முன்னர் இன்பத்தினைப் பயந்த நிலைகளை வளர்த்து, துன்பம் விளைத்தவற்றைக் கைவிட்டொழித்து வருகிறதொரு வழக்கத்தை நிலைபெறச் செய்தலே முடிந்த முடிபாம்.

சமநிலைப் பிறழ்ச்சி :— ஊக்கநிலை இயற்கையாக அகத்தே தோன்றுகின்ற இடம் எது? பொருத்தமற்றுக் கிடப்பதனை

ஒழிக்க நம்மை உந்தும் நிலையே ஊக்கநிலையின் பிறப்பிடமாம். தொடர்ந்து விளங்கும் சமநிலைப் பிறழ்ச்சியே உந்து நிலையாம். சமநிலைப் பிறழ்ச்சியினின்றும் ஆறுதல் தரக் கூடிய அமைப்புகள், கண்ணும் காதும்போல, நம்முடன் கூடப்பிறக்கவில்லை. இத்தகைய அமைப்புகள் பழக்கத்தால் அமைய வருகின்றனவேயாம். "உந்துநிலையில் இரண்டு உறுப்புகள் இருக்கின்றன" என அணிபெறப் பேசலாம். குழம்பித் தோன்றும் நெருக்கடி ஒன்று. இதுவே குழவியை இயங்கி வருமாறு தூண்டுகிறது. மற்றொன்றோ "முன்னர் ஆறுதல் தருவதாக அனுபவத்திற் கண்ட செயலை மறுமுறையும் செய்தால் ஆறுதல் உண்டாகும்" என எதிர்பார்க்கும் நிலையாம். அமைதியின்றி அலைவதே கவலைப் படுவதாம். ஆறுதலின்மையே ஊக்கி நிலையின் இன்றியமையாத உறுப்பாம். அதனைத் தனியேவைத்து நோக்குவதால் பயனில்லை. ஊக்கும் ஆற்றலாம் ஊக்கிகளை அசையாது தேங்கிக் கிடப்பனவாகக் கொள்ளுதலும் கூடாது. அவை மாறி மாறி இயங்கி வருவன என்றே கொள்ளுதல் வேண்டும். இயங்கி வருவதே குழவியின் இயல்பாம். இவ்வாறு உடற் கூற்றமைப்பின் ஆற்றல் வெளித்தோன்றுவதே குழவியின் இயல்பாம். இங்ஙனம் இயங்கவில்லையானால் அக்குழவிக்கு 'நோய் உண்டு.' என முடிவு செய்தல் வேண்டும். அல்லது அக்குழவி முன் எல்லாம் எதனைச் செய்தாலும் பிறர் தடுத்து வந்ததே பழக்கமாய் விட்டமையால், எதனையும் செய்ய அஞ்சி நிற்கின்றது எனக்கொள்ளுதல் வேண்டும்.

சுறுசுறுப்பும் நன் மதிப்பும் :—முதல்நிலைத் தேவைகளோ (Primary needs) உடற்கூற்றமைப்பால் எழுபவை. அவ்வாறன்றி பின்னே எழும் தேவைகளும் உள்ளன. இவற்றை வழிநிலைத் தேவைகள் அல்லது இரண்டாம் நிலைத்தேவைகள் (Secondary needs) எனலாம். இவற்றையே ஆசை

என்கிறோம். குழவியினிடத்தே பலவகை ஆசைகள் விளங்கு கின்றன. இவற்றையும் ஊக்கியாக அமைக்க முயலுதல் வேண்டும். (1) குழவிக்கு எப்போதும் சுறுசுறுப்பாக இருக்கவே ஆசை. அதனை வேலைசெய்யுமாறு தூண்டுவதற்கு இந்த ஆசையைப் பயன்படுத்தலாம். "வேலை என்பது தானாகவே இன்பமெனத் தோன்றும் இயக்கமேயாம்." என்ற எண்ணம் குழவியின் மனத்திற் பதியுமானால் குழவி தானாகவே வேலை செய்துவரப் பழகிவிடும். (2) பிறரை மகிழ்விக்கும் ஆசையும் குழவிக்கு உண்டு. "அது யாரிடத்தில் ஆசையாக இருந்து யாரைப் பெருமை பாராட்டுகின்றது" என அறிந்து கொள்ளுதல் வேண்டும். நாம் விரும்புவனவற்றைக் குழவி தானே செய்து வரவேண்டுமானால் அத்தகையாரை மகிழ்-விக்கும்படி அச்செயல்களைச் செய்து வருமாறு வகை செய்ய வேண்டும். அவ்வாறு செய்வது பழக்கமாகிவிட்டால் ஆளை மறந்து செயலில் ஈடுபட்டுத் தானாகவே அச்செயல்களைச் செய்து வருவது இயல்பாகிவிடும்.

வெற்றிச்சுவை :- (3) செய்ய எடுத்ததனைச்செய்து முடித்து வெற்றிபெறும் ஆசையும் குழவிக்கு உண்டு. பிறர் தன்னைப் பாராட்டுவதில் குழவிக்கு விருப்பம் இருப்பதுபோல "இந்தப் பாராட்டு வெற்றுரை அன்று, வெறும் புகழ்ச்சி அன்று. நாம் முயன்று செய்து முடித்து வெற்றி அடைந்ததால் நமக்கு எல்லா வகையாலும் உரியதே." என்று தனக்கு உரியதனையே தான் பெற்றதாக உணர்ந்து மகிழும் உணர்ச்சியும் உண்டு. ஆதலின், தான் செய்யத் தொடங்கியதனைச் செய்து முடிக்கும் இன்பத்தினைக் குழவி துய்த்துக் களிக்குமாறு வழிசெய்தல் வேண்டும். முதலாவதாக எழும் வெற்றியே அதன் கழுத்தினை முறிப்பதாக இருத்தலாகாது. முதல் தொடங்கிய வேலை செய்வதற்கு அரிதாக இருத்தல் ஆகாது. அங்கே வெற்றி-

யினைக்கண்டாலும் பின்னரும் செய்ய ஊக்கம் எழுவதில்லை. கடுமையான வேலையிற் புகுந்தால் கடுமையே அதனை வெருட்டிவிடும். எளிதிற்செய்யக்கூடிய வேலைகளை முதலிற் செய்ய விட்டால் வெற்றியின் சுவையைக் குழவி எளிதில் துய்க்கும். மேலும் அத்தகைய வேலைகளைத் தானே சரிவரச் செய்ய அது பழகி விடும். ஆனால், வெற்றி எனக் குழவி கருதாத மிக எளிய வேலைகளையும் தருதல் ஆகாது. அவ்வாறு தந்தால் தன்னை இகழ்வதாகவே குழவி கருதுகிறது.

தடை தாண்டுதல் :— (4) தடையைத் தாண்டும் ஆசை குழவிகளுக்கு இயல்பாகவே உண்டு. ஆட்லர் (Addler) என்பவர் குழவியின் தாழ்வு உணர்ச்சியினைப் பற்றிக் கூறியதனைக் கண்டோம். தாழ்வின் நின்றும் நீங்கி உயர்ந்து ஓங்கிவரவே குழவி முயல்கின்றது என்பது அவர் கொள்கை. ஆனால், குழவியின் மனநிலை மிக மிகச் சிக்கலானதாகும். ஆகையால், ஒருவகையாகத்தான் இயங்கும் என்பதற்கு இல்லை. எத்தனையோ வகைகளில் இயங்குதல் கூடும். தாண்டிக் குதிக்க முடியாத பெருந்தடைகள் எழுமானால் குழவியின் மனநிலை முறிவது உண்மையேயாம். பெற்றோரும் குழவியுமாக வாழும்போது பெற்றோர் அறிவும் அன்பும் அற்ற முறையில் நடப்பதாலேயே அத்தகைய மன முறிவுகள் எழுகின்றன என்பதும் உண்மையேயாம். உடற் கூற்றமைப்பு கெட்டு அழிவதாலும் தாழ்வு உணர்ச்சி வளரும் என்கின்றார் ஆட்லர். ஆனால், உடற்கூற்று அமைப்பிற் காணும் சின்னம்சிறு குறைபட்டால் அறிவுநிலை கெடுவதும் இல்லை; வாழ்வில் வெற்றி பெறுவது குறைவதும் இல்லை. தடைகளால் வரும் கேடுதான் என்னை? "தடை தாண்ட முடியாது" என்ற எண்ணம் எழுமாயின் தன்னால் ஒன்றும் செய்ய முடியாது என நம்பிச் செயலற்றுக் குழவி ஓய்ந்து கிடக்கும். இவ்வாறு தன்நம்-

பிக்கை இழந்தபின் ஒன்றும் செய்யலாவதில்லை. வெற்றியே தன் முடிவு நிலையாகக்கொண்டு குழவி இயங்கிவரப் பழகுதல் வேண்டும். இவ்வாறுதான் தன்நம்பிக்கை வளரக்கூடும். நாம் குழவிக்குப் பரிசிலாகத் தரும் எந்தப் பொருளின் இன்பமும் அது தானே செய்யத் தொடங்கியதனைச் செய்து முடிப்பதால் பெறும் வெற்றி இன்பத்திற்கு ஈடாகாதாம். எடுத்ததனைச் செய்து முடிக்கும் இந்த வெற்றியைப் பிறரை அடக்கி ஆள முயலும் வெற்றியாக மயங்கலாகாது. பின்னையது இயற்கை அன்றாம்; செயற்கையேயாம். முன்னையது இயற்கையானதாம். தமிழர் கடமையைச் செய்து முடிப்பதனை வாகையெனப் பாராட்டினர். இயல்பாக எழும் வெற்றியை முல்லை என்றனர்.

## III. முன்கூற முடியாமை

ஊக்கி நிலைகள் :— ஊக்கி நிலைகளின் ஊக்க ஆற்றல் இயற்கைத் தோற்ற (Physical) ஆற்றல்கள் அல்லவாம். பழக்கத்தால் எழுவனவேயன்றி உடலோடு உடன் பிறந்தன அல்லவாம். உடலின் இயல்பாக எழுபவையும் அல்லவாம். அவை மதிப்பில் எப்போதும் மாறிமாறிவரக் காண்கிறோம். "இந்த வகையாகத்தான் நடத்தை கட்டாயம் இயங்கவேண்டும்" என வரையறை செய்யும் சுற்றுப்புறச் சூழலின் வன்மையே நமது ஊக்கநிலை வன்மையுமாம். இதனை நம் அகநிலைத் தேவையை நோக்கியதாகவே விளக்க முடியும். நடந்தது ஒன்றை விளக்க முடியுமேயன்றி எதிர்காலச் செய்தியை முன்பு அறிந்து கூற முடியாது.

இட உவமை :— சுற்றுப்புறச் சூழலின் வன்மையை விளக்க இடநிலை உவமையை அறிஞர் பயன் படுத்துகின்றனர். (Psychological Topology) குழவியைப் பலவகை வன்மை நிலைகளின் ஒருப்பாட்டு வடிவமாகக் காணும் முறை ஈதேயாம்.




இந்தப் படம் ஒரு குழவியின் ஆளுமையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். "மு" என்பது "முடிவு" நிலையாம். அது குழவி பெற விரும்பும் பந்தோ பொம்மையோ ஆகலாம். "ஆ" என்பதே குழவியின் ஆளுமையாம். அங்கே "1, 2, 3," எனக் குறிக்கப் பெற்றவை குழவியின் உடல்நிலை, உணர்ச்சிநிலை, செயல்நிலை முதலிய பலவகை நிலைகளைக் குறிப்பனவாம். இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு குழவிக்கு வெவ்வேறு அளவில் அமைந்திருக்கும். "த" என்பது இடையே நிற்கும் தடையாம். அறையைக் கடந்து பந்தை எடுக்கவேண்டி இருக்கலாம். மற்றொரு குழவி அதனைப் பற்றிக்கொண்டு கிடப்பதால் அதனிடம் இருந்து அன்பாகவோ வன்பாகவோ அதனைப் பெற வேண்டி இருக்கலாம். இத்தகைய பல தடைகளே "1, 2, 3," எனக் குறிக்கப் பெற்றுள்ளன. எல்லைக்கோடு வாழ்க்கை வெளியின் எல்லையைக் குறிப்பதாம். நாமும் சுற்றுப் புறமுமாய் இயைந்து நிற்கும் ஒற்றுமையை இங்குக் காணலாம். பலவகையாக மாறுபட்டுச் சிக்கலுற்று வரும் ஊக்கவகைகளின் இடையே குழவியின் நடத்தையை அறிவதற்கு இந்த உவமை உதவும்.

முன்கூற முடியாது :— குழவி இவ்வாறுதான் நடக்கும் என எவ்வாறு முன்னுகக்கூறுவது? குழவியின் நடத்தை மாறுபடாத ஒருமைப்பாடு உடையதெனக் கொள்ளலாம். "முன்னிலையில் நடந்தது போலவே இப்போதும் நடக்கும்"

எனக் கூறுதலும் கூடும். "பிற குழவிகள் போன்றதே இந்தக் குழவியும்; ஆதலின் குழவிகளிற் பல இந்த நிலையில் இவ்வாறு நடத்தலின் இதுவும் இவ்வாறே நடக்கும்." எனக் கூறுதலும் கூடும். ஆனால், குழவிநிலையின் வேறு வேறு எல்லைகள் வேறு வேறு வன்மையுடன் இயங்கி நிற்றலின், இவை அனைத்தினையும் முற்ற முடியக்கண்டு ஆராய்வது இயலுவது ஒன்றன்று. "இவ்வாறுதான் குழவி நடக்கும்" என முன்னாகவே அறிந்து துணிந்துகூற முடியவில்லை. தொலைவில் நிகழும் கிரகணங்களை முன்னறிந்து கூறும் நாம் அருகிலிருக்கும் குழவிகளின் நடத்தையை முன்னறிந்து கூற முடியாது வருந்துகின்றோம். சில நிலைகளினிடையே குழவியைக் கண்டு அதன் நடத்தையை ஆராய்கின்றோம். ஆராய்ந்த நிலையில் எழுந்த நடத்தையைப் பின்னர் விளக்கி வைக்கின்றோம். இவ்வாறுதான் நம் ஆராய்ச்சி இங்கு நிகழ்கிறது. இது நடந்ததனை விளக்குவதே அன்றி நடக்கப்போவதனை முன்னாக அறிந்து கூறுவதன்றாம். பசிக்கென உணவு கொணர்கின்றாள் தாய். குழவி எவ்வாறு நடந்துகொள்ளும்? பசிமிக்கு இருந்தால் உண்டு மகிழ்கிறது. பழக்கத்தின் கொடுமையால் தாயை அலைக்கழிப்பதே பசியினும் வன்மையுடையதானால் உணவை உண்ணாது தாயின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்கிறது. குழவியை ஊன்றி ஆராய்ந்து குறிப்பிட்ட காலத்தில் அதனை எது இயக்கும் என நுண்ணறிவாற் கண்டு கூறுவதே நுட்பமான ஊக்கநிலை அறிவாம். இங்கு ஊக்கம் எழுகின்ற முறையில் சிறப்பு ஒன்றும் இல்லை. குழவியின் தேவையே இன்றியமையாச் சிறப்பினதாம்.

## IV. பரிசில்

இருவகைப் பயன் :- ஊக்கநிலையில் அப்போதே கைக்கு எட்டும் பயனும் உண்டு. நிலைபெற்றதாய் எழும் பயனும் உண்டு.

இவை இரண்டும் சிலபோது முரண்படக் காண்கின்றோம். பெருக்கல் வாய்பாடு ஒப்புவிப்பதால் ஒரு பயனையும் ஒப்புவித்தவுடன் குழவி காண்பதில்லை. அதன் பெரும்பயன் நிலைபேறு உடையதாம். அந்த நிலையில் அப்போதே வாயில் இனிக்கும் கற்கண்டை ஆசிரியர் பரிசிலாக வழங்குகின்றார். அப்போது உடனே எழும் பயனும் நிலைபேறாய் எழும் பயனும் வேறுதல் காண்க. இத்தகைய முயற்சி இன்றியே தக்கதொரு செயலைக் குழவியே விரும்பிச் செய்யுமாறு தூண்டிவிட முடியுமானால் ஊக்கநிலைச் சிக்கல் அனைத்தும் தீர்ந்து ஒழிந்தது எனலாம். தக்கதொரு செயலைக் குழவி செய்யுமாறு பரிசில் வழங்கித் தூண்டுதலும், தக்கனவற்றைச் செய்யாமையைத் தண்டித்துச் செய்விக்கத் தூண்டுதலும் உலகத்தில் நாம் காண்பனவேயாம். "கணக்குப் போட்டால் பழந்தருவேன்" என்பதும், "போடாவிட்டால் அடிப்பேன்" என்பதும் குழவியிடம் பெற்றோரும் ஆசிரியரும் இன்றும் பேசும் பேச்சாம். இந்தப் பரிசிலும், தண்டனையும் விரும்பிய பயனைத் தந்து குழவியை ஊக்குமோ? செயலுக்கும் அதன் பயனுக்கும் உள்ள தொடர்பினைப் பொறுத்துள்ளது இவ்வாறு ஊக்குவது. குழவியினிடம் தக்கதொரு மனநிலையை வற்புறுத்த உதவும் கருவியாகமட்டும் இவை விளங்குதல் வேண்டும்.

அகநிலைப் பரிசில் :— மனநிலைகள் உணர்ச்சிநிலைப் பழக்கத்தால் நிலைபேறு அடைவனவாம். பரிசில் முதலியவற்றால் நாம் எழுப்ப விரும்பும் மனநிலையோ குழவியினைக் களைப்பின்றித் தூண்டுகின்ற உணர்ச்சி நிலையைப் பற்றியதாம். அவ்வாறானால்மட்டுமே குழவி மேலும் மேலும் உழைக்கவரும். குழவி வெறுப்பதனைக் கற்றுக் கொள்ளத் தூண்டுதற்குச் சிலபோது பரிசில்கள் வழங்கப் பெறுகின்றன. அத்தகைய பரிசில்களின் பயன் சிறந்தது அன்றாம். அவற்றால் பயனுண்டோ என்பதே

ஐயத்திற்கு இடமாம். இந்தப் பரிசில் முதலியவற்ருல் ஒன்றனைக் கற்றுக்கொள்ளத் தக்க அக்கரையும் எழுமானுல் குழவி பெறுதற்கு அரிய பேற்றினைப் பெற்றது என்றே கூறலாம். குழவியினிடத்தே மேலும் மேலும் அறிய ஓர் அவாவும் மனப்பசியும் அறிவுத்தினவும் எடுக்குமாறு ஆசிரியர் செய்து விடவேண்டும். உற்சாகமும் ஊக்கமும் பொங்கி வழியுமாறு குழவியினிடத்தே தூண்டிவிட வேண்டும்.

முடிவுபேறு :— குழவி எதனை நாடி அடைய முயல்கின்றதோ, எதனை அடைந்ததும் அதன் 'முடிபு நாட்டச்செயல்' ஓய்வடைகின்றதோ அதுவே முடிவுபேருகும். இந்த முடிவுபேறு ஒரு செயலாகவும் இருக்கலாம்; ஒரு நிலையாகவும் இருக்கலாம். குழவியின் முன்னைய செயலுக்கு ஈடாக வேருெருவர் அக்குழவிக்குத் தருவதொன்றே பரிசிலாம். இந்தப் பரிசில் அச்செயலின் இயல்பான பயனுக விளங்குவதும் உண்டு. செயலுக்கு எவ்வகையாலும் தொடர்பற்றதாக விளங்குவதும் உண்டு. முன்னையது அகநிலைப் பரிசிலாம் (Inherent reward); பின்னையது புறநிலைப் பரிசிலாம் (External-reward). அகநிலைப் பரிசில், ஊக்கிவரும் செயலோடு தொடர்பு பெற்று விளங்குதலின், மேலும் மேலும் அந்தச் செயலைச் செய்யுமாறு தூண்டுகிறது. புறநிலைப் பரிசிலால் இங்ஙனம் நிகழாது. குறிப்பிட்ட செய்கையை வளர்க்கப் புறநிலைப் பரிசிலை வழங்குவதால் பெருஞ்சிக்கலே விளைகிறது.

தூண்டுநிலை ஆறுநிலை :— பரிசில்களைத் தூண்டுதல் நிலைப் பரிசில் அல்லது தூண்டுநிலைப் பரிசில் என்றும், ஆறுதல் நிலைப் பரிசில் அல்லது ஆறுநிலைப் பரிசில் என்றும் பாகுபாடு செய்யலாம். குழவி திரும்பத் திரும்பச் செய்து வெற்றி பெறுந்தோறும் முன் வழங்கிய நிலையிலேயோ, அதற்கும் மேல்

மேல் உயரும் நிலையிலேயோ வரும் பரிசில், அந்தச் செயலை மேலும் மேலும் திருத்தமுற்ற நிலையில் செய்து வருமாறு தூண்டுதலின், தூண்டுநிலைப் பரிசிலாம். வேலை முடிந்த நிலையில் குழவியைப் புகழ்வதும், செய்த வேலையை மதிப்பிட்டு எண்ணங்கள் (Marks) கொடுப்பதும் இத்தகையனவேயாம். முதல் முறை செய்து முடிக்கும் போது மட்டும் சில பரிசில்களை சிலர் கொடுக்கின்றனர். பின்னர் எவ்வளவு நன்றாகச் செய்யினும் இரண்டாம் முறை அத்தகைய பரிசிலைக் கொடுப்பதில்லை. இத்தகைய பரிசில், மேலும் மேலும் அத்தொழிலைச் செய்யத் தூண்டாது, செய்த வருத்தத்திற்கு ஓய்வு கொடுப்பது போலவே விளங்குகிறது. ஆதலின், ஈதே ஆறுநிலைப் பரிசிலாம். பரிசில் பெற்றவர்க்குப் பின்னர்ப் பரிசில் இல்லை எனக் கூறும் பரிசில் முறை இந்த வகையைச் சேர்ந்ததேயாம். மேலும் அத்தகைய செயலை வளர்க்காது விடுதலின், இத்தகைய பரிசில்களால் தீமையே விளையக் காண்கிறோம்.

உடன்நிகழ்வு - தவணை :- இப்பரிசில்கள் உடனே வரும் உடன் நிகழ்ச்சிப் பரிசில்கள் எனவும், பொறுத்துப் பின்னே வரும் தவணைப் பரிசில்கள் எனவும் இரண்டு வேறு வகையாகவும் பிரிகின்றன. சிறிதுகாலம் தாழ்த்துவதால் ஊக்கம் குறைவதில்லை. ஆனால், எல்லையின்றிக் காலம் தாழ்த்து வந்தால் பயனின்றிப் போகும். எப்போது தான் பரிசில் பெறக்கூடும் என்பதனை அறிந்தால் மட்டுமே தன் வேலைகளை மேலும் மேலும் ஊக்கத்துடன் செய்துவரக் குழவிக்கு விருப்பம் எழுகிறது.

தற்பாராட்டும் போதுப்பாராட்டும் :— இப்பரிசில்கள், தற்பாராட்டுப் பரிசில்களும் (Personal rewards), பொதுநிலைப் பாராட்டுப் பரிசில்களும் (Social rewards) ஆக இருவகை-

யாகவும் பிரியும். தனக்கெனப் பரிசில் பெற்று மகிழ்வது குழவியின் இயல்பேயாயினும், மக்களிடை வாழப் பழகி உலகத்தோடு ஒட்டிவாழக் கற்றுப் பொறுத்தமுற்றுத் திருத்தம் பெற்ற குழவி தன்னைச் சுற்றியுள்ளார் பாராட்டும் பாராட்டையே தலைசிறந்த பரிசிலாகக் கொண்டு அதனையே பெற முயலுவதனைக் காண்கிறோம்.

## V. தண்டனை

உடன்பாடு - எதிர்மறை :— ஊக்கத்தின்வன்மை ஒரு செயலை எழுப்பும் உடன்பாட்டு ஊக்கவன்மையாகவும், ஒரு செயலைத் தடுக்கும் எதிர்மறை ஊக்கவன்மையாகவும் விளங்கி-வரலாம். உடன்பாட்டு ஊக்கவன்மைக்குப் பரிசில் எடுத்துக் காட்டானால் எதிர்மறை ஊக்கவன்மைக்குத் தண்டனை எடுத்துக் காட்டாகும். தண்டனை என்றால் நோய் உறுத்துவதேயாம். நோவே ஆற்றல் நிறைந்த ஊக்கவன்மையாம். பலவகையான பழக்கங்களும் எழுதற்கு முன்னரேயே குழவியைப் பல முகமாக இயங்கவைப்பது யாது? குழவியின் பசி நோயே அன்றோ? பல அளவில் விளங்கும் நோவிற்கும் குழவியின் பயிற்சியில் சிறந்த இடமுண்டு எனச் சில அறிஞர் எடுத்துக் காட்டி விளக்குகின்றனர்.

தண்டனையும் வெறுப்பும் :— ஆனால், இது காரணமாக "அடி உதவுவது போல அண்ணன் தம்பி உதவார்" என னையப் புடைப்பது அறிவாராய்ச்சி அன்றாம். நோவே முடிந்த முடிவானால் குற்றுயிராக விட்டுச் சித்திரவதை செய்வதே சிறப்பெனல் வேண்டும். பெற்றோர் நோவினை நீக்குதற்கு இருக்கின்றார்களே அன்றி நோவினை ஆக்குதற்கு இல்லை. பலபல இடையூறுகள் நிகழக்கூடிய நிலைகளில் எல்லாம்

குழவியைக் காத்து வருவதே பெற்ருேரின் கடமையும், ஆசிரியரின் திறமையுமாம். முடிந்த முடிபாகக் கூறும்போது ஒரு செயலின் பயன் என்னே? அந்தச் செயலே உணர்ச்சி ததும்பும் எந்த மனநிலே கொண்டு குழவி நோக்க வருகின்றதோ அந்த மனநிலேயைப் பொறுத்ததாம் அந்தப் பயன். பாட்டு விரும்பத் தக்கதேயாம். ஆனல், அதனேக் குழவி வேண்டாதபோதெல்லாம் பிரம்படியின் தாளத்திற்கு ஏற்பப் பாடத் தூண்டினல் பாட்டு குழவியின் மனத்தே வெறுப்பாய்ப் பிரப்பம் பழமாய்ப் புளித்துப் போகுமே அன்றி இன்பமாய் விருப்பமாய் இனிப்பது என்றும் இல்லேயாம். இவ்வாறு விரும்பத்தக்க மதிப்புடையவற்றையும் வெறுக்கத்தக்க மதிப்புடையனவாக மாற்றி அமைப்பதனேக் கேடென்று கூருது நன்று என்று கூற்வார்யார்? குழவியின் விருப்பு நிலேயிலே நாம் வேண்டும் செயலின் மதிப்பானது தெள்ளிதிற் புலப்படுமாறு வழி செய்தல் வேண்டும். அவ்வாறு குழவிக்குத் தோன்றிவிடுமானல் அதனேப்பற்றிக் குழவியினிடம் சொற்பொழிவு செய்யவேண்டியதில்லே; கத்திக் கதறவேண்டுவதில்லே; வெருட்டலும் மருட்டலும் வேண்டாம்.

தண்டனேக்கு ஓர் இடம்:-அவ்வாறு ஆனல், தண்டனேக்கு இடம்தான் எங்கே? தனக்கும் பிறர்க்கும் கேடு விளேவிக்கத் தக்க நிலேயில் குழவி நிற்கும்போது, தண்டனேக்கு இடம் உண்டு. அங்குக் குழவியின் மன நிலேயைப்பற்றி ஆராய்ந்து பயனில்லே. நெருப்பிலே மற்ருெரு குழவியைத் தள்ள நிற்கும் குழவியைக் காண்கின்ருேம். குழவிக்கு ஈதொரு விளேயாட்டு ஆகலாம். குழவியின் மனநிலேயில் 'கொடுமை' என்ற உணர்வு தானகவே புலப்பட்டுத் தோற்ற வேண்டும் என அதுவரை காத்திருப்பார் யார்? அக் குழவியின் கையினின்றும் மற்ருெரு குழவியை வலித்து இழுத்துக் காத்தலே வேண்டும். கை

நோவுமே என அஞ்சப்போமோ? காத்தல் இந்தத் தண்டனையின் நோக்கமே அன்றிப் பழிக்குப் பழிவாங்குதல் அன்றாம்; நம் கொடுமை உணர்ச்சிக்குப் போக்கு வீடு தேடுதலும் அன்றாம். "சூடுண்டபூனை நெருப்பிற்கு அஞ்சும்" என்பதற்கு இணங்க மறுபடியும் அத்தகைய இடையூற்று நிலையில் அக்குழவி புகாதபடி தண்டனை அதன் நினைவில் நிலைத்து நின்று தடுத்து வரவும் தக்கதாதல் வேண்டும். தண்டனையை வரவேற்கும் நிலை ஈதேயாம்.

தண்டனையின் கேடு:-அதற்குமேலும் தண்டனை குழவியை வருத்திக் கொடுமை இழைக்குமானால் குழவியின் மனத்தே அது பொருத்தம் அற்றதாகவே கிடக்கும். கொடுமை என்றே குழவி அதனைக் கருதிவிடும். இதனால் சில கோளாறுகள் எழுகின்றன. தண்டனைக்கு அஞ்சிப் பொய்சொல்லுதல் முதலிய தந்திரங்களில் குழவி ஈடுபட்டுக் கெட்டுப் போவதற்கு வழி ஏற்படுகிறது. நம்மை ஏமாற்றுவதே குழவியின் நோக்க-மாகிவிடுகிறது. செயலின் கொடுமையைக் கண்டு நம்மையும் கொடியர் என நம்பி நம் குழவியே நம்மை வெறுக்கவரும் என்றால் தண்டனையின் கொடுமையை என் என்பது! இத்தகைய கொடுமையினிடையே அஞ்சி நடுங்கிக் குழவி வீணே பயங் கொள்ளியாகிச் சிதைகின்றது. இந்தக் கொடுமைப் பாடத்தை நன்கு கற்றுக்கொள்ளும் குழவி தானும் கொடுமைசெய்து பொறுமையேயின்றி வளர்வதும் இயல்பேயாம். இவ்வாறன்றோ தலைமுறை தலைமுறையாகத் தண்டனை வளர்ந்து வந்துள்ளது.

## VI. கீழ்ப்படிதல்.

உரிமை உலகு:— தாம் சொல்லியபடி குழவி நடக்க வேண்டும் எனப் பலரும் விரும்புகின்றனர். உரிமை வாழ்வை

விரும்பும் இந்நாளில் தம் உரிமைப்படியன்றிப் பிறர் சொற்படி நடக்கும் குழவிகள் ஏன்? ஆண்டானும் அடிமையுமாக வாழ்ந்த நாளில் அந்த உறவே எங்கும் விளங்கியது. ஆள்வோருக்கு எவரும் அடிமை. ஆடும் மாடும் செய்யும் வேலையை அடிமைகள் செய்து வந்தார்கள். ஆடுமாடுகளோ எந்திரங்கள் செய்யும் வேலையைச் செய்துவந்தன. ஆதலின், அந்நாளில் அனைவரையும் ஆண்டானது விருப்பப்படி இயங்கும் எந்திரங்களாக வளர்த்ததில் பொருள் உண்டு. அக்குழவிகளது பிற்கால வாழ்க்கைக்கு ஏற்ற பயிற்சி அது. மின்சாரம் நம் அனைவர்க்கும் அடிமையாக இருக்க அனைவரும் சரிநிகர் சமானமாக வாழ விரும்பும் உரிமை உலகில், "எவரும் தம் அறிவைப் பிறருக்கு அடிமையாக்கலாகாது" என முரசறையும் போது, "அறிவின்றிக் கீழ்ப்படிதலே வாழ்க்கையின் முடிவு" எனக்கொள்ளுவது போர் வெற்றியேயன்றிப் புத்துலக நெறி ஆகாதாம். கண்மூடிப் பழக்க மெல்லாம் மண்மூடிப் போகும் இந்நாளில் கண்மூடிக் கீழ்ப்படிதல் என்பதற்கு இடமில்லை.

இயற்கைக் கீழ்ப்படிதல் :— கீழ்ப்படிதற்கே இடம் இல்லை என்று கூறுவதற்கு இல்லை. அறிவிற்கு ஒத்தவகையில் கீழ்ப்படிதற்கு என்றும், எங்கும் இடமுண்டு. "நெருப்பில் கையை வைப்பேன்" என்று எழும் குழவி கீழ்ப்படியாமையின் பயனை நீர்க்கொப்புளமாக உடனே பெற்றுவிடும். இயற்கைக்குக் கீழ்ப்படிந்து நடந்தே அதன் உண்மைகளை உள்ளவாறு அறிந்து பின்னர் அதனை அடக்கி ஆளுதல் வேண்டும். ஆதலின், இவ்வாறு கீழ்ப்படிந்து வரக் குழவியைப் பழக்கி வருவது இன்றியமையாததேயாம். இவ்வாறு கீழ்ப்படிந்து வரக் குழவி கற்பது தன்னைத்தானே • காத்துக்கொள்ளக் கற்பதேயாம் எனக் குழவியின் அறிவிற் பதியும். ஆதலின், அங்கே எதிர்ப்பு எழுதற்கும் இடமில்லை. பிறர்க்கு இடையூறும் தீங்கும் உண்டாகும்

படி குழவியை விட்டு விடுதலும் ஆகாது. தீங்கு நேராதவாறு காத்தல் வேண்டும். உலகத்தோடு ஒட்ட ஒழுகிவரப் பழகும் போது இத்தகைய காவலும் பொருளுடையதே என்பது குழவிக்கு எளிதில் புலனாகிவிடும். ஆதலின், அங்கெல்லாம் குழவி விரும்பி அறிவுடன் கீழ்ப்படிய நாளடைவில் பழகி-விடும்.

உரிமை ஒழுங்கு :— "எதிலும் ஓர் ஒழுங்கு வேண்டும்" என்பது உண்மையே. இதனைக் குழவிதானே அறியுமாறு தூண்டுவதே நல்லதாம். குழவிகள் பள்ளியில் நடக்கும்போது முறையாக நடந்து கொள்வதே சிறந்தது. இதனை எப்படி வற்புறுத்துவது? முறை பிறழ்ந்ததும் குழவியைத் தண்டிக்க வேண்டும் என்பது இல்லை. ஓர் ஆசிரியர் புதிய முறை ஒன்றைக் கையாண்டது ஒரு நல்ல வழியாகத் தோன்றுகிறது. அந்த ஆசிரியர் தான் கூறியபடி நடக்க விரும்பாத குழவிகள் தத்தம் விருப்பப்படியே நடக்கலாம் என்றார். ஆனால், அதற்கு அறிகுறியாகத் தத்தம் கையை மேலே தூக்கிக்கொண்டு நடக்க வேண்டும் என்றார். சில குழவிகளுக்கு இது விளையாட்டாக இருந்தது. பெரும் பான்மையான குழவிகள் முறையைப் பின்பற்றுவனவேயாம். சிறு பான்மையவே முறை பிறழ்-வனவாம். அவை தடை ஒன்றும் காணாமையால் கைதூக்கி நடந்தன. ஆனால், பிறகுழவிகளினும் தாம் வேறுபட்டிருப் பதனை இந்தக் கைதூக்கி நடக்கும் முறையால் உணர்ந்து அவ்வாறு வேறுபடுவதற்குத் தாமாகவே நாணி முறை பிறழ்ச்-சியை விட்டொழித்தனவாம். கூட்டமாக மக்கள் வாழ்கின்ற ஒற்றுமை முறையை வற்புறுத்த வேண்டாம். தங்கள் நிலையைத் தாங்களே முறையாகக் காத்துவரும் உரிமையைக் குழவி-களுக்குத் தந்தால் ஒழுங்குமுறை இயற்கையாகவே பதிந்து விடுகிறது. பிற குழவிகள் குறுக்காகப் பேசும்போது தன் மனம்

எரிவதுபோலத் தான் குறுக்காகப் பேசும்போதும் பிறர் மனம் எரியும் என உணர்ந்து குழவி நல்வழிப் படுகிறது.

அறிவு ஒழுங்கு :— ஒழுங்குநிலை வேண்டும் என்பது உண்மையானால், அதில் அறிவுள்ள ஒழுங்கு நிலையும் உண்டு; அறிவற்ற ஒழுங்கு நிலையும் உண்டு. அறிவற்ற ஒழுங்குநிலை ஆவது அறிவற்ற நிலையில் கீழ்ப்படிதலாம். நாம் முறையாக வாழ அறியாமையால், அறிவற்ற ஒழுங்கு முறையை வற்புறுத்துகின்றோம். நம் நாட்டில் ஏழ்மை காரணமாக வீட்டில் குழவிகள் புழங்கத் தனி இடம் அமைப்பதற்கு இல்லை என்பது உண்மையே. ஆனால் செல்வர்களது மிகப்பரந்த வீடுகளிலும் குழவிகள் ஓடி ஆடுவதற்கென ஒரு மூலையோ முடுக்கோ இருப்பதற்கில்லை. தமக்கென ஓர் இடம் இல்லாமையால் அவை எங்கும் ஓடி விளையாடுகின்றன. நாற்காலி மீது ஏறித் தள்ளுகின்றன. வீணைமேல் இருக்க முயல்கின்றன. குழவி ஓடி ஆடும் இயல்புடையது. ஒரு கட்டையன்று. இந்த உண்மையை உணர்ந்து குழவியின் கையிற் படாதநிலையில் தம்பொருள்களை அமைக்கும் ஒழுங்கு முறையை முதியோர் கைப்பற்றுவது அருமையாகிறது. குழவி அவற்றைத் தொட வரும்போது வீடே இடிபடுவதுபோலக் கூவி இரைந்து வெருட்டுவது எளிதாகிறது. அவ்வாறு குழவியை வெருட்டு-வதில் ஓர் இன்பம் பொங்குகிறது. குழவிக்கோ மண்பொம்மையும் ஒன்றுதான்; வீணையும் ஒன்றுதான். இரண்டினையும் வீசி எறிந்து விளையாடுவதே விளையாட்டு என எண்ணிவாழ்-கிறது. அந்தநிலையில் இந்த இடிகுரலின் பொருளே அதற்கு விளங்குவதில்லை. விளையாட்டைத் தடுத்தால் விட்டு விடுமோ? குழவி எதிர்த்து நிற்க எளிதில் பழகுகிறது. இவ்வாறு வரும் தடையைப் பொருள் படுத்தாது வளர்ந்து பழகிய குழவி நெருப்பு முதலியவற்றைத் தொடப் போகும்போது தடை

எழுந்தாலும், உண்மையான பொருள் உள்ள அத்தகைய தடையினையும் பொருட்படுத்தாது தனக்கும் பிறர்க்கும் கேடு விளைவிக்கின்றது. இது “புலி, புலி” என்ற கதையை நினைப்பூட்டுகின்றது. “தானும் வாழான், பிறரையும் வாழவிடான்” என்ற கதையாகவே அறிவற்ற ஒழுங்கு முறையின் கதையும் முடிகிறது.

அழும்பு :- செயலிடையே ஒருவனைத் தடுப்பது அவனைச் சண்டைக்கு வலிப்பதேயாம். விருப்பப்படி செய்யவும் விடாது அத்தகைய தடைக்கு எதிர்ப்பதனையும் அடக்கி விட்டால் குழவி ஒன்றும் செய்யாமல் நின்று விடுகிறது. செயற்படும் உடன்பாட்டு நிலை நீங்கிச் செயலையே விட்டொழித்துத் தயங்கி நிற்கும் எதிர்மறைநிலை (Negativism) எழுகிறது. என்ன திட்டினாலும் குழவி நேரே இருந்து வாளா கிடப்பதனைப் பலரும் கண்டு இருக்கலாம். குழவிகளிடையே இத்தகைய நிலைகளை ஆராய்ந்தவர்கள் இரண்டாம் ஆண்டளவில்தான் இந்த எதிர்மறைநிலை மிக்கு விளங்குகிறது என்றும், பின்னர் ஆண்டு ஏற ஏறக் குறைந்து வருகிறதென்றும் கூறுகின்றார்கள். இந்த எதிர்மறை நிலைக்கும் குழவியின் அறிவு நிலைக்கும் ஒரு தொடர்பும் இல்லையாம். இத்தகைய குழவிகளை ‘அழும்பு’ என்று ஆசிரியர்களும் பெற்றோர்களும் வைவதுண்டு. இவ்வாறு வைதுவந்த வன்மைக்கும், ஆராய்ச்சியாளர் கண்ட எதிர்மறை நிலையின் உரத்திற்கும்கூடத் தொடர்பு இல்லையாம். உண்மையைக் கூறப்போனால் இங்கு எல்லாம் எதிர்மறை நிலையில் இருப்பார் முதியோரேயன்றி குழவி அன்றாம்.

தன்னடக்கம் :—எனவே, அடக்கி ஆள்வாருக்குக் கண்மூடிக் கீழ்ப்படியக் கற்றுக்கொடுப்பதில் பயன் இல்லை என்பதாயிற்று. மாறாத இயற்கைச் சட்டங்கள், தவறாது விளங்கும்

உலகத்திடையேதான், குழவி இருந்துவருகின்றது என்பதும், தான் வாழ்வது பிறருடைய உரிமைகளையும் பாராட்ட வேண்டிய மக்கட் கூட்டத்திடையே தான் என்பதும் அதற்குப் புலப்படத் தோன்றுமாறு கற்பிக்கவேண்டும். ஆராய்ச்சியாளர் சில புதிய உண்மைகளை வெளியிட்டு உள்ளனர். தன்னடக்கம் (Self-control) என்பது பொதுவானதொருபோக்கு அன்றும். குறிப்பிட்ட நிலைகளுக்கு ஏற்ற ஊன்றலேயாம். இவ்வாறு குறிப்பிட்ட நிலையில் எழும் எதிர் ஊன்றல்கள் பழக்கத்தால் விளைபவையே ஆம். தன்னடக்கம் உள்ளவன் என்று பாராட்டப் பெறுபவன் எதிர்மறை வடிவாம் தடைகளிடையே சிக்கி ஊக்கப்பெற்று இயங்குபவனேயாம். ஆனால்எதிர்மறைத் தடைகள் இங்குப் புறத்தே பிறரிடமிருந்து தோன்றியன அல்ல. தன்னுடைய ஒழுங்குமுறைச் சட்டங்களைத் தானே "எங்கு மீற நேருமோ" என அவனுடைய உள்ளத்திருள் எழும் அச்சநிலைகளே இங்குத் தடைகளாக எழுகின்றன.

## VII. முரண்பட்ட ஊக்கங்கள்

குழவிகள் :— "பலவேறு ஊக்கநிலைகளை முரண்பட்டு நிற்கும்போது என்ன நிகழும்?" என்பதனைப் பலவாறு அறிஞர்கள் செய்க்காட்சி (Experiment) வகையால் தம் ஆய்வுக்களத்தில் (Laboratory) ஆராய்ந்து உள்ளார்கள். கடிகாரத்தில் வில்லினை (Spring) உள்ளுக்குள் வளைவு வளைவாகச் சுற்றி இருப்பதுபோல வேலி இட்ட இடத்தினுள்ளே குழவியைவிட்டால், "அந்த வளைவுகளைச் சுற்றி எவ்வாறு வெளிவருகிறது? எவ்வாறு இயங்குகிறது?" என அறிஞர் ஆராய்ந்தனர். சிக்கலற்ற இந்த நிலையினும் தன்னிடத்தில் சமநிலைப் பிறழ்ச்சி உணர்வு எழுந்தாலன்றி எந்தக் குழவியும் வெளியே போகும் வழியைத் தேடப் புகுவது

இல்லையாம். அங்கேயே விளையாடத் தொடங்குகின்றதாம். பசி முதலிய சமநிலைப் பிறழ்ச்சி உணர்வு எழுகின்ற போது-தான் வெளியே போகும் வழியை அறிந்து புறத்தே வந்து விடுகிறதாம். இரண்டாவதாகச் சிக்கலற்ற பரிசில் நிலையில் குழவியை வைத்து அறிஞர் ஆராய்ந்தனர். "குழவி பரிசிலினைக் கண்டதும் எவ்வாறு மகிழ்கின்றது?" என்பதனைப் பரிசிலினைக் கண்டதும் எழுகின்ற குழவியின் நடத்தையின் வழியாக அறியலர்ம். "குழந்தைக்குப் பொம்மையைக் காட்டித் தவழ்ந்துவரச் செய்யலாமா?" என ஆராய்ந்த போது குழவி பொம்மையை உணர்ந்ததும் அதனை விரும்பித் தவழ்ந்து வந்ததாம். பரிசிலே இல்லாத நிலையிலும், பரிசில் உள்ள நிலையே இவ்வாறு குழவியை நன்கு இயக்கிவைக்கின்றது எனக் கண்டனர். மூன்றுவதாகச் சிக்கலற்ற தண்டனை நிலையிலும் குழவியை வைத்து ஆராய்ந்தனர். குழவி விரும்பி விளையாடும் பொம்மை அறையில், அது அஞ்சும் நாய் ஒன்று குரைத்தோடி வரும்போது, குழவி ஓடிப்போய் விடுகிறதாம். குழவி விரும்பும் நிலையை அதுகைவிட்டு ஒழிக்க வேண்டு-மானல் இத்தகைய தண்டனை இந்த நோக்கத்திற்கு உதவலாம். தண்டனை மிகக்கடுமையாக இல்லாமல் இருந்தால் குழவியைச் செயலுறுமாறு அது ஊக்குகின்றதாம். வேருெரு தூண்டுதலும் இல்லாத நிலையைவிட இந்த நிலையில் வேலை மிக்கே நடை-பெறுகின்றதாம். ஆனல், சிலபோது குழவி தண்டனையையும் விரும்பி ஏற்கலாம். அடிபட விரும்பும் குழவிகளை நாம் பார்க்கவில்லையா? அப்போது இத்தகைய தண்டனை ஒரு பயனையும் விளைவியாமற்போகும்.

முரண்வகை :- ஆராய்ச்சிவாணர் ஊக்கநிலைகளின் முரண் பாடுகளையும் வகைசெய்து உள்ளனர். ஊக்க நிலையின் ஒரே அளவுடைய இரண்டு உடன்பாட்டு வன்மைகளிடையே

(Positive valences of equal strength) குழவி இருந்து வரலாம். இதுவே முதல்வகை முரண்பாடாம். சிறிய பெண் குழவிக்கு ஒரு சிறு ஆண் குழவி பந்தினைக் காட்டித் தன்னுடன் விளையாட அழைக்கும் நிலையில், மற்றொரு சிறுக்கன் (சிறுவன்) பந்தினைக் காட்டி விளையாட அழைப்பதனை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். ஊக்கநிலையில் ஒரே அளவினவாக விளங்கும் இரண்டு எதிர்மறை வன்மைகளினிடையே குழவி இருப்பதும் உண்டு. ஈதே இரண்டாவது வகை முரண்பாடாம். குழவி தனக்கு விருப்பம் இல்லாத கணக்கினைப் போட வேண்டும்; இல்லையானால் ஆசிரியர் கையில் அடிபடவேண்டும். இவ்வாறு இரண்டு வெறுப்பு நிலைகளுக்கு இடையே குழவி தயங்குவதனை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். ஊக்க நிலையின் உடன்பாட்டு வன்மை ஒருபுறம் இழுக்க, எதிர்மறை வன்மை முன்னையதற்கு எதிர் புறமாக வலிக்க, இவற்றிற்கு இடையே குழவி இருப்பதும் உண்டு. ஈதே மூன்றாவது வகை முரண்பாடாம். இருட்டறையிலுள்ள பொம்மையை மிக விரும்பி எடுக்கவரும்போது முன்கேட்டறியாத புதிய ஒலி ஒன்று எழவே, அதனைக்கேட்டு அஞ்சுகின்ற குழவி இதற்கு எடுத்துக்காட்டாகலாம். சுற்றுப் புறச் சூழலின் பல வன்மை-களின் ஊடாட்டத்தினிடையே ஒரு வகையாக வரையறுக்கப்-பட்ட வழியாகக் குழவி இயங்குவதனை வேலி முதலிய புறத்-தடைகள் தடுத்து நிற்கலாம். அதன் மனத்தே எழும் அறக்-கொள்கை முதலிய அகத்தடைகளும் தடுத்து நிற்கலாம். இந்த நிலையே நான்காவது வகையாம் முரண்பாடாகும்.

பலவகை நடத்தை :— "இந்த முரண்பாட்டு நிலைகளில் குழவிகள் அனைத்தும் ஒரே வகையாக நடக்கும்." எனக் கூறுவதற்கு இல்லை. ஓர் ஆராய்ச்சிவாணர் மிகச் சிறந்த விளையாட்டுப் பொருள்களைக் குழவிக்குக் காட்டினர். பின்னர்

அவற்றைக் கண்ணாடி அறைக்குள் வைத்துப் பூட்டிவிட்டு, அவ்வளவு நன்றாக அக்குழவி விரும்பாத வேறு சில விளையாட்டுப் பொருள்களோடு குழவியை விட்டுவைத்தார். இவ்வாறு பல குழவிகளை ஆராய்ந்தார். குழவிகள் பலபல வகையாக நடந்து கொண்டனவாம். ஒரு சில தாமே நேரே சென்று அப்பொருள்களை எடுக்க வேண்டும் எனக் கருதி கண்ணாடி அறைக்குள்ளே புக முயன்றனவாம். வேறு சில குழவிகள் அயலில் இருந்த மக்களை அக்கண்ணாடி அறையில் உள்ளவற்றை எடுத்துக் கொடுக்குமாறு நேராக வேண்டிக் கொண்டனவாம். மற்றும்சில குறிப்பாக வேண்டிக் கொண்டனவாம். இன்னும் சில அவற்றை மறக்கவேண்டி, தம்முடைய கருத்தை வேறு செயல்களில் திருப்பினவாம். சில தம்மோடு இருந்த விளையாட்டுப் பொருள்களைக் கொண்டு, விரும்பியபடி எல்லாம் விளையாடினவாம். மீதி நின்றவை உணர்ச்சிநிலை பொங்கிவழியக் கிளர்ச்சியுற்று அழுதும் உதைத்தும் நின்றனவாம். எனவே, "குறிப்பிட்ட நிலையில் இவ்வாறு தான் குழவி நடந்து கொள்ளும்" என வரையறுத்து உறுதிகூற முடியாது என்பதாயிற்று.

சில குறிப்புகள் :—இத்தகைய ஆராய்ச்சிகளின் பயனாகக் குழவிகளை விருப்பத்தோடு வேலை செய்ய ஊக்கும் குறிப்புகள் சில வெளியாகியுள்ளன. நேரே "இதுசெய்" எனக் குழவியைக் கேட்டுக் கொண்டால் நம் எண்ணம் நிறைவேறுவது போல, "செய்யாதே" என எதிர்மறையாகக் கேட்டுக் கொண்டால் நம் எண்ணம் நிறைவேறுவதில்லை. நேரே தெளிவாகச் சிக்கலின்றி, மகிழ்ச்சியோடு ஒன்றைச் செய்யுமாறு குழவியை வேண்டிக் கொள்கிற உடன்பாட்டு வேண்டுகோளே மறைவாகவும் சிக்கலாகவும் சீற்றத்தோடும் விதிக்கும் எதிர்மறைக் கட்டளையினும் பெரும்பயனை அனைவர்க்கும் தந்துதவு-

கின்றது. ஈதோர் உண்மையாம். எடுத்தவேலை முடியாமற் போனால், குழவி வேறு வேலையை மேலும் தொடர்ந்து செய்ய வேண்டும் என முயலுவதற்கு ஊக்கமற்றுத் தயங்குகின்றது. இது இரண்டாவது உண்மையாம். வைவதினும் புகழ்ச்சியே குழவியை ஊக்கிச் சிறப்படையச் செய்கின்றது. இதுவும் மறக்கலாகாததோர் உண்மை. வேலையைச் சரிவரச் செய்து முடிந்தவுடன் குழவியைப் புகழ்ந்து தட்டிக்கொடுத்தல் வேண்டும். ஒரே வேலையை முயன்றும் செய்ய முடியாதபோது அதனை வைவதினும் இத்தகைய புகழ்ச்சியே குழவியை மேலும் மேலும் வேலைசெய்து வெற்றி காணத் தூண்டுகிறதாம். குழவி-களுக்கு வயது ஏற ஏற வைவது ஒரு பயனையும் விளைவியாமற் போகின்றதாம். குழவிகள் செய்துவரும் வேலையின் இயல்பைச் செய்துவரும்போதே அப்போதைக்கு அப்போது அவற்றிற்குத் தெரிவித்து வந்தால் அந்த வேலையை ஊக்கமாகவும் சிறப்-பாகவும் செய்து வருகின்றனவாம். இதுவும் ஓர் உண்மை.

போட்டி :— போட்டிபோடும் உணர்வாலும் வேலையை முடிக்கும் எண்ணம் தோன்றலாம். குழவிகளை இரண்டு பிரிவு-களாகப் பிரித்து ஒரு வேலையில் போட்டிபோட வைத்தால் இளங்குழவிகளின் இடையேதான் கூட்டமாகக் கூடிப் போட்டி போட்டு வெல்லவேண்டும் என்ற ஆசையால் வெற்றி எழு-கின்றதாம். வயது ஏற ஏறக் கூட்டமாகப் போட்டி போடாது தனித்தனியே போட்டி போட்டு வெற்றி பெறக் குழவிகள் முயல்கின்றனவாம். ஆண் குழவிகளை ஒரு கூட்டமாகவும், பெண் குழவிகளை மற்றொரு கூட்டமாகவும் பிரித்துப் போட்டி போட விடுவதே எல்லா வகையான போட்டியினும் தலைசிறந்த பயனைத் தருகிறதாம்.

மேல்வரிச் சட்டம் :- "குழவியின் அனுபவத்தின் பயனாக அதன் மனநிலை எவ்வாறு மாறுகின்றது?" என அறிதல்

வேண்டும். ஒவ்வொரு வேலையையும் செய்யும்போது அதனைச் செய்வதற்கு மேல் வரிச்சட்டமாகச் சில கருத்து மனத்தே அமையும். அவற்றைப் பின்பற்றியே அதனைச் செய்துவருவது இயல்பாம். சிறந்த நிலையில் ஒரு வேலையைச் செய்து முடித்த போது பின்னும் அதுபோலச் செய்ய முயல்கையில் மேல் வரிச்சட்டமாக மனத்தில் எழுவது முன்னே எழுந்ததினும் மிக மிக உயர்ந்து விளங்கக் காண்கிறோம். அவ்வாறு உயர்ந்து சிறப்பதால், முன்னையினும் நன்றாக வேலையைச் செய்ய அந்த நிலை குழவியைத் தூண்டுகிறது. குழந்தை, தான் செய்யப் போவது இவ்வாறு தான் எனத் தொடங்கு முன்னரே மதிப்பிட்டுக் கூறப் பழகிவிடுமானால், இத்தகைய கருத்துக்கள் மேல் வரிச் சட்டமாக எழுவது எளிதாகிவிடும். அவ்வாறு மதிப்பிட்டுக் கூறும் குழவியானது பின்னர்ச்செய்யும் வேலைப்பாட்டின் உண்மைத் திறத்தினை நாமும் மதிப்பிட்டு அதற்குத் தெரிவித்தல் வேண்டும். அப்படிக் கூறிவரும்போது குழவியின் வேலைத்திறம் மிக்குவரக் காண்கிறோம்.

## VIII. வெற்றியும் தோல்வியும்

ஒரேபயன் இல்லை:-பொதுவாகப் பரிசிலோ தண்டனையோ குழவிகளை ஊக்குகின்றது எனலாம். ஆனால், இது ஓர் உயிரற்ற பேச்சேயாம். பலவேறு குழவிகள் பரிசில் பெறும் நிலையினும், ஒன்றுபோல ஒன்று விளங்காமல் பலவேறுவகையாக விளங்குகின்றன. தம்வேலை அடுத்தபடியாக எவ்வாறு நிகழும் என ஒன்றற்கொன்று மாறாகப் பல பல வகையாகக் குழவிகள் கூறுகின்றன. இந்த இரண்டு உண்மைகளையும் வற்புறுத்தும் உயிருள்ள ஆராய்ச்சிப் பேச்சே சுவைததும்புவதாம்; பயன் நிறைந்ததும் ஆம். குழவி முதல் முதல் தொடங்கும் வேலை அது செய்யக் கூடிய வேலையாக இருக்கவேண்டும். இத்தகைய

வேலையினைக் குழவி செய்து முடித்துத் தன்னம்பிக்கை பெற்று வரும்போது அது செய்யத் தொடங்கும் வேலையினையும், நாம் எதிர்பார்க்கும் செய்திறனையும் உயர்த்திக் கொண்டே போகலாம். குழவியும் விரும்பிப் பின் தொடர்ந்துவரும். வெற்றியின் பயன் இவ்வாறு விளங்குகிறது.

தோல்வியின் விளைவு :— தோல்வியின் விளைவு என்ன? இங்கும் குழவிகள் பலவேறு வகையாக விளங்கக் காண்கிறோம். ஒரு வேலையைச்செய்ய முடியாதபோது, வேறு ஒரு வகையாகச் செய்யுமாறு அத்தோல்வி சில குழவிகளை ஊக்குகிறது. வேறு சில குழவிகளோ அத்தோல்வியின் பயனாக "என்றுமே செய்ய முடியாது" என எண்ணித் தன்னம்பிக்கையை இழந்து தயங்குகின்றன. ஒன்றுமே ஊக்குதற்கு இல்லாத நிலையைவிட ஏதேனும் ஊக்குதற்குத் தூண்டுகோலாக இருக்கும் நிலையிலே வேலையைச் செய்து முடிப்பது எளிதாகிறது. "தண்டனையும் வேலை செய்யத் தூண்டுகிறது." எனக் கூறியது இதனாலே-யாம்.

வெற்றி - தோல்வி :— சில வெற்றியும் தோல்வியாம். சில தோல்வியும் வெற்றியாம். தன் திறம் அனைத்தினையும், தன் இன்பம் அனைத்தினையும் இழந்து பெற்ற வெற்றியினைக் கண்டதும் குழவிக்குப் போதும் என்றுபோகிறது. அந்த வெற்றிக்குப் பின் மேலும் அத்தகைய வேலையினைச் செய்து முடிக்க அது முயல்வதே இல்லை. பழைய புகழ்கொண்டே வாழ்ந்து வருவதில் குழவி ஓர் அமைதி பெறுகிறது. வெற்றி தோல்வியாவது ஈதேயாம். இங்ஙனமே தோல்வியும் வெற்றி-யாம். வெற்றிநிலைக்கு மிக அருகே வந்தபின், வெற்றி அடை-யாது போனால், தோல்வியைக் கண்டபின்னும், "இன்னமும் சிறிது முயன்றிருந்தால் வெற்றியைக் கண்டிருக்கலாம்" என்ற

நம்பிக்கை பிறக்கின்றது. இத்தகைய உறுதி பிறத்தலின், தோல்வியும் வெற்றிபோலக் குழவிக்கு இனிக்கின்றது. மேலும் மேலும் முயன்று வெற்றியை அடைய அத்தகைய தோல்வி தூண்டுகிறது.

"அச்சமே கீழ்கள தாசாரம் எச்சம்
அவாவுண்டேல் உண்டாஞ் சிறிது"
(திருக்குறள் - 1075)

---

# 15. விளையாட்டு

---

## I. மக்டுகல்

கொள்கையும் விளையாட்டும் :- குழவிகளைப் பற்றிப் பல வேறு கொள்கைகள் வழங்கி வந்தன என முன்னரே கண்டோம். அவ்வக்காலத்தில் எழும் கொள்கைகள், அவ்வம் மக்கள் தம் குழந்தைகளின் விளையாட்டினைப் பற்றியே அடிப்படையில் வேறுபட்டு விளங்கக் காண்கிறோம். மிகவும் செழுமையாகக் கவலையின்றி வாழுங் காலத்தில் குழவிகளை நன்றாக விளையாட விடுவது இயல்பு. வறுமை வாட்டுங்காலத்தில் குழவிகளை விளையாட விடுவது அருமை. ஆதலின், விளையாட்டைப் பற்றிய கொள்கைகளை ஆராய்வது குழவிகளின் உள்ளத்தினை அறிவதற்குச் சிறந்த துணையாம். விளையாட்டில் "என்ன நிகழ்கின்றது?" என்பதனை இந்தக் கொள்கைகள் வற்புறுத்துவதில்லை; விளையாடுவோரின் மனநிலையையே வற்புறுத்துகின்றன. வேலைக்கும் விளையாட்டிற்கும் உள்ள

வேற்றுமை இந்த மனநிலையைப் பொறுத்ததேயாம். ஆதலின், குழவியுள்ளத்தை ஆராய்வார் விளையாட்டினை ஆராய்வது இன்றியமையாதது ஆயிற்று.

இயற்கை அமைப்பு:— மக்டூகல் என்ற ஆசிரியரது கொள்கையைக் கலாநிலையம் விளக்கி எழுதியுள்ளது. "நாய்க்-குட்டியும் பூனைக்குட்டியும் தம்மோடும் தாயோடும் ஆடியோடி விழுந்து புரண்டு பிடித்துக் கடித்து விளையாடுவதனைக் காண்கிறோம். இந்த விளையாட்டும் ஓர் இயற்கைச் செயலா? இயற்கைச் செயனிலை (Instinct) என்பதும், இயக்க-அமைப்பு (Motor mechanism) என்பதும் வேறு வேறு எனக்கண்டோம். ஒவ்வோர் இயற்கைச் செயனிலையிலும் சிற்சில இயக்க அமைப்புக்களே தொழிலுறுகின்றன. ஆனால், குட்டிகளும் குழந்தைகளும் விளையாடும்போது அவர்களது உடலின்கண் காணக்கிடக்கும் இயக்க அமைப்புக்கள் அனைத்தும் செயலுறுகின்றன. இவ்வாறு அவை இயங்குவ-தால் பயிற்சி பெறுகின்றன. அதனால், அந்த உயிருளியும் (உயிருள்ள பிராணி அல்லது உயிருள்ள பொருள்) செயல்-களைச் செய்வதில் திறம் பெறுகின்றது. இளமையே இயக்க அமைப்புகள் வளர்ந்து வளம் பெறுகிற காலம். இளமைப்-போதில் மட்டும் விளையாட்டு என்பது காணப்பட்டால் அதனையோர் இயற்கைச்செயல் எனக்கூறலாம். ஆனால், இளங் குட்டிகளும் இளம்பிள்ளைகளும் மட்டுமா விளையாடுகின்றன? முதியோரும் விளையாடுகின்றனர். தாய்ப்பூனையும் விளையாடு-கின்றது.

மெய்ப்பாடு:— "இயக்க அமைப்புகள் மட்டுமே அன்றி இயற்கைச் செயனிலைகள் அனைத்துமே விளையாட்டில் பயிற்சி பெறுகின்றன" என்பர் சிலர். நாய்க்குட்டிகள் ஒன்றை ஒன்று

கடித்துப் புரள்வதையும் ஒன்று வெருட்ட ஒன்று ஓடுவதையும் காண்க. கடிக்கும் போதும், வெருட்டும் போதும் வெகுளி என்ற பேச்சுக்கு இடம் தான் சிறிதேனும் உண்டோ? பல்லூன்றக் கடிக்கின்றனவா அவை? விளையாட்டாகக் கடிக்கும்போது கடிக்கப்படும் நாய் அதைத் தடுக்கின்றதா? தானே போயன்றோ கடியுண்கிறது. ஓடுகின்ற நாய்க் குட்டியினிடத்தில் அச்சம் உண்டு என்று கூறமுடியுமா? ஒளிய வேண்டும் என்ற உட்டுடிப்பேனும் உண்டா? விளையாட்டே வினையாய் முடிந்தாலும் முடியும். அப்போதுதான் மெய்ப்பாடும் உட்டுடிப்பும் காணக் கிடக்கின்றன. விளையாட்டு விளையாட்டளவிலே நின்றால் இவை ஒன்றும் தோன்றுவதில்லை.

பொருளும் நோக்கமும் :— "மற்றைய இயற்கைச் செயனிலைகளை எழுப்புவதற்குக் குறித்த சில காட்சிப் பொருள்கள் அமைந்துள்ளமை போல விளையாட்டைத் தொடங்குவிப்பது எந்தக் காட்சிப்பொருள்? விளையாட்டு நிலையில் எப்பொருளும் விளையாட்டுப் பொருளாகின்றது. கண் கால் முதலிய உடற்பொறிகளின் வழியே இயக்க அமைப்புகள் செயலுற்றுப் பயிற்சி பெறுகின்றன. அன்றியும், விளையாட்டின் நோக்கம் என்ன? விளையாட்டே விளையாட்டின் முடிவு. வேறொரு நோக்கம் உண்டாயின் விளையாட்டென்பது வினையாய் முடிகிறது.

ஆற்றல் :— "காலையிலிருந்து மாலைவரை குழந்தைகள் ஓயாமல் விளையாடுகின்றன அன்றோ? இயற்கைச் செயனிலை இயங்குவது இல்லை என்றால், இக்குழவியின் விளையாட்டில் கரை புரண்டோடும் ஆற்றற் பெருவெள்ளம் எங்கிருந்து வருகிறது? நன்றாக உண்டு இளைப்பாறும் உயிருள்ளியினிடம் நரம்புக் கிளர்ச்சி பொங்கிவழிகிறது. பொங்கிவழிவது 'இயக்க

அமைப்புகள்' வழியாக வெளிவருகிறது. விலங்குபூட்டியயானை அசைந்தசைந்து தன் நரம்புக்கிளர்ச்சிப் பெருக்கத்தை வெளியிடுகிறது. சிறைப்பட்ட விலங்குகள் கூட்டினுள்ளேயே வேறொன்றும் செய்ய முடியாமற் புரண்டு புரண்டு உருள்கின்றன. பள்ளிச் சிறுவர்கள் அடைபட்டுக் கிடந்த வகுப்பினின்றும் மாலையில் விழுந்தடித்துக் கொண்டு "ஓ" என்று கூவிக்கொண்டே ஓடி வருகின்றனர். உயிராற்றலே இவ்வாறு வெளிவருகிறது.

ஆட்டம் :— "மக்களிடையே விளையாட்டு என்பது ஆட்டமாய் முற்றுகிறது. ஆட்டம் (Games) என்பது வெறும் விளையாட்டன்று. ஆட்டத்தில் ஒரு நோக்கம் உண்டு. உதை பந்தாட்டத்தில் பந்தினைக் குறித்த ஓர் இடத்திற்குள் எறிதல் வேண்டும். குழந்தைகள் ஆடும் 'கண்ணும்பூச்சி' ஆட்டத்தில் கண்ணை மூடிக்கொள்வோர் மறைந்து நிற்கும் பிறரைப் போய்த் தொடவேண்டும். ஆதலின், அங்கும் ஒரு நோக்கம் உண்டு. சிறு குழவிகள் இவ்வித நோக்கம் ஒன்றுமின்றி விழுந்து புரண்டு "ஓ" என்று கத்திக் கைதட்டி விளையாடுவது காண்க. அதுதான் விளையாட்டு. ஆட்டத்தில் காணக்கிடக்கும் நோக்கமும் ஆட்டத்தைப் பொறுத்ததேயாம். உலகிடையே நாம் வேலை செய்யும் போதோ வேலையை ஒரு கருவியாகக் கொண்டு அவ்வேலையினும் வேறாய ஒரு நோக்கத்தை உட்கொண்டு அதனை நிறைவேற்ற முயல்கின்றோம். ஆனால், ஆட்டத்தின் நோக்கமோ ஆட்டத்தின் கடையுறுப்பாக அமைந்து கிடக்கின்றது. ஆதலின், ஆட்டம் என்பது விளையாட்டிற்கும் வேலைக்கும் இடைவழியே இருக்கின்றது. இவ்வாட்டத்தில் ஒருவர் மற்றொருவரை "இகலி" (போட்டி போட்டு - "இகலித் தோற்றார்" என்பது சிந்தாமணி) வெல்ல முந்துகின்றனர். ஆட்டமனைத்தும் உறழ்ச்சியே ஆம் (Competition "சுண்ண

உறழ்ச்சி ” என்பது - சிந்தாமணி). இவ்விகல் நிலையை என் என்பது? தன்னெடுப்பும் பெருமிதமும் என முன்னர்க் கூறியவற்றின் ஒரு வடிவமே ஈதாம். இது மட்டுமன்றிப் பல மெய்ப்பாடுகளும் பிறக்கப் பல வகையான ஆட்டங்களைப் படைக்கின்றோம். வேட்டை ஆட்டத்தில் அச்சமும் உடன் எழுகிறதன்றோ? இவ்வளவும் கூறியமையால் விளையாட்டு என்பது ஓர் இயற்கைச் செயனிலை என்பது தெளிவாயிற்று.” (கலாநிலையம்)

## II. கார்ல் க்ரூஸ்

கார்ல் க்ரூஸ் (Karl Groos) :— கார்ல் க்ரூஸ் என்பவர் இந்த விளையாட்டினைப்பற்றிப் பல ஆராய்ச்சிகள் செய்துள்ளார். பிறந்தவுடன் திறம்பட வேலை செய்துவர முடியாத உயிர்ப் பொருள் இனங்களில் மட்டுமே இந்த விளையாட்டு விளங்கி வருதலைக் கண்டார். இவ்விளையாட்டுக்களை ஊன்றி நோக்கிய-போது அவ்வவ் இனங்களைச் சேர்ந்த உயிர்ப்பொருள்கள் நன்கு வளர்ந்து முற்றிய பின்னர்த் தம் வாழ்க்கையிற் செய்ய வேண்டி வரும் தொழில்களையே இளமையில் விளையாட்டாக விளையாடி வருவது தெளிவாவதனையும் கண்டார். இயற்கைச் செயனிலைகள் வேண்டியபோது மட்டும் வளர்ந்து இயங்க-வாராது, அதற்கு முன்னரும் வளர்ந்துவரக் காண்கிறோம். அந்த இயற்கைச் செயனிலைகள் இயங்கவேண்டும் என்ற இன்றியமையாமை எழுவதற்கு முன்னரேயே அவை வறிதே இயங்கிவர இடமுண்டாம். பின்னர் அத்தகைய இன்றி-யமையாமை எழும்போது, முன்னர் வறிதே இயங்கிவந்த பழக்கத்தால், இயற்கைச் செயனிலை திறம்பட இயங்க முடி-கின்றதாம். அந்த அந்த இனத்தைச் சேர்ந்த குழவிகள் பின்னே வயது வந்தால் செய்யப்போகும் தொழிலுக்கு ஏற்ப

விளையாடி வரவேண்டும் எனப் பல பெற்றோர் விரும்புவதும் உண்டு. இயற்கைச் செயல்நிலைகள் தடைபடுமானால், அக்குழவியின் நடத்தை சீர்கேடு அடைந்து வரக் காண்கிறோம். அத்தகைய நிலையில், குழவியை ஓடியாடி விளையாடி வரவிட்டால், அதன் கோணலான மனம் நேராகிச் செம்மை பெறுகின்றதாம். வாழ்க்கைக்கு எனப் பண்ணுறுவது விளையாட்டின் நோக்கம் எனக் க்ரூஸ் முடிவு செய்கிறார்.

## III. ஸ்டான்லி ஹால்

கூர்மை :- ஸ்டான்லி ஹால் (G. Stanley Hall) என்பவர் விளையாட்டினைப் பற்றிய புதியதொரு கொள்கையை விளக்கியுள்ளார். "உள்ளது சிறத்தல்" என்பது இயற்கையில் விளங்கும் ஒரு முறையாம். ஆங்கிலத்தில் Evolution என வழங்குவர். மரம், செடி, கொடி போன்ற நிலைத்திணையும், புழு, மீன், பாம்பு, பறவை, விலங்கு, மக்கள் போன்ற இயங்குதிணையுமாம் உயிர்ப்பொருள்கள், ஓர் உயிரணுவாக இருக்கின்ற நிலையிலிருந்து படிப்படியாக வளர்ந்து வந்துள்ளனவாம். எலும்பில்லாத புழு முதலியனவாக வளர்ந்தபின், முதுகெலும்புடையனவாக வளர்ந்து, முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதன்றிப் பால் கொடுத்து வளர்க்கும் பாலிகளாகவும் (Mammals) உயர்ந்து, அவற்றிடையேயும் மக்களாய்ச் சிறந்து, உள்ளது சிறக்கும் கூர்மை (Evolution) முறைப்படி உயிர்ப்பொருள் அனைத்தும் பலகோடி ஊழிக் காலமாகத் தோன்றிப் பல்கி வீறுபெற்று விளங்குகின்றனவாம். மக்கட்கரு, தாய்வயிற்றில் வளர்ந்து வரும் பலநிலைகளை உற்று நோக்கும்போது, கீழ்நிலை உயிர்ப்பொருள்களின் பல வடிவங்களையும் காண்பதாக ஹெக்கேல் (Heckael) என்ற ஜர்மானிய அறிஞர் வற்புறுத்துகின்றார்.

இன வரலாறும் தனிவரலாறும் :- இனவரலாறு இவ்வாறு உயிர்ப்பொருளின் தனிவரலாற்றிற்குள் ஆடி நிழல் போலச் சுருங்கித் தோன்றுவதனை உணர்ந்த ஸ்டான்லி ஹால் என்பவர் மக்கள் விளையாட்டினை ஆராய்ந்தபோது ஓர் உண்மை தோன்றக் கண்டார். மக்கள் மரத்திடை தொத்தியும், வேட்டையாடியும், மாடு மேய்த்தும், ஊரில் வாழ்ந்தும் நாகரிக வளர்ச்சியின் பல படிகளிலும் ஏறி உயர்ந்து வந்தது அனைத்தும், குழவிகளின் விளையாட்டிடையே, நிழலிட்டுப் புலப்படுவதனைத் தம் அறிவுக் கண் கொண்டு தெள்ளத் தெளியக் கண்டார். "மக்களினம் செய்து பழகிய செயல்களெல்லாம் தசை இயக்கப் பழக்கமாகப் படிந்துவர விடுவதால், தலைமுறை தலைமுறையாக இவ்வாறு நிகழ்ந்து வருகிறது'' என ஸ்டான்லி ஹால் விளக்குகின்றார்.

ஒழுக்க முதிர்வு :— மரம் தொத்தும் வாழ்க்கை, வேடர் வாழ்க்கை, விலங்குகளைப் பழக்கும் வாழ்க்கை முதலியன குழந்தைகளின் விளையாட்டில் தோன்றுகின்றனவாம். ஆனால், ஒரு வேற்றுமை உண்டு. எடுத்துக்காட்டாக வேடவாழ்க்கையில் எழும் கொலை முதலிய கொடுமைகள், விளையாட்டில் எழுவதில்லை எனக் கூறலாம். உயிர் வாழ்வதற்கு என எழுந்த அப்போராட்டங்கள் இங்கு இன்று இன்பம் ஊட்டும் விளையாட்டாக மாறி விடுகின்றன. இந்த விளையாட்டு நிலையே, முன் பழக்கமாய்ப் படிந்த செயல்களின் கொடுமையை நீக்கிவிடுகின்றது; இனிய பழக்கங்கள் படிவதற்குக் காரணமாக எழும் செயல்களாகவும் அவற்றை மாற்றிவிடுகின்றது.

குடிவழியா?:- இந்தக் கொள்கையில் ஓர் இடர்ப்பாடுண்டு. வேட்டையாடுதல் முதலிய தொழில்கள் செயற்கையால் எழுவனவாம்; இயற்கைத்தொழிற் பண்புகள் அல்லவாம்.

இயற்கைப் பண்புகள் மட்டுமே குடிவழி முறையாக உடலோடு கூடப்பிறந்து வருமாம். செயற்கை இயல்புகள் அவ்வாறு வருவன அல்ல. ஆனால், மக்கட்கூட்டத்தின் நாகரிகம் பழைய செயல்களையே அமைத்துத் தலைமுறை தலைமுறையாக விளையாடிவருகிறது. அதனால் அவை நிலைபேறுற்று விளங்கு-கின்றன. அந்த நாகரிகச் சூழலிடையே பிறக்கின்ற குழவியும் அவ்விளையாடல்களை விளையாடி வரக் காண்கிறோம். மொழியும் இவ்வாறன்றோ தலைமுறை தலைமுறையாக நாகரிகத்தினிடையே இடம் பெற்று நம்மிடை வழங்கி வருகிறது?

## VI. ஐந்து கருத்துக்கள்

மகிழ்ச்சியும் ஏமாற்றமும் :— உள்ளத்தியற்கை நூல் அறிஞர்கள், மனநிலையை ஒட்டி விளையாட்டின் நுட்பத்தினை, ஆராய்ந்து உள்ளனர். ஆனால், அவர்களும் பழமையிலேயே சிக்கிக் கிடக்கின்றனர். "விளையாட்டின் தோற்றம் என்ன? வரலாறு என்ன? நோக்கம் என்ன?" இத்தகைய உண்மைநிலை ஆராய்ச்சியில் (Philosophical discussions) பலர் புகு-கின்றனர். ஐந்து வேறுவகையான கருத்துக்கள் தோன்றி-உள்ளன. "வெறும் மகிழ்ச்சி நாட்டமே விளையாட்டு" என்பது ஒருகருத்து. விளையாட்டில் வேறு பிறிதொன்றன் நாட்டம் என்பதே இல்லை. விளையாட்டே விளையாட்டில் நாம் பெறும் ஊதியமும் பயனுமாம். மனநிலை ஆராய்ச்சியாளர் (Phycho-analyst) விளையாட்டை நோக்கும் வகைவேறு. அவர்கள் கருத்தினை இரண்டாவது கொள்கையாகக் கருதலாம். உல-கிடையே தோன்றும் ஏமாற்றங்களைப் போக்கிக் கொள்வதற்கு விளையாட்டே நல்ல வழியாம். தன் சிறுமையை அறிந்த குழவி விளையாட்டில் எல்லோரினும் தான் சிறந்து விளங்குவதாக எண்ணிக் கொண்டு அந்தச் சிறுமை நோயைப் போக்கிக் கொள்கிறது.

சாயல் பிடித்தல் :— "பெரியோர்களைப் பார்த்து அவர்கள் செய்வது போலக் குழவி செய்ய வருவதே விளையாட்டாகத் தோன்றுகிறது" என்பது மூன்ருவதொரு கருத்து. வாழ்க்கைத் துறை குழவி மனத்தே தோன்றுவது விளையாட்டாக முகிழ்க்கிறது. அந்த அந்த நாகரிக நிலைக்கு ஏற்ப விளையாட்டு விளங்குவது இதனுலேயாம். தச்சன் பிள்ளை தச்சுவிளையாட்டு விளையாடுகிறது. ஒட்டுரிமை பெற்றுவாழும் நாட்டில், தேர்தல்கள் விளையாட்டாக நிகழ்கின்றன. தனிப்பட்டு நின்று தன்னில் தானே திளைக்கும் குழவி படிப்படியாகப் பிறரொடு பழகி ஒன்றுபட்டு வாழத் தொடங்கித் தன்னுயிர் போல மன்னுயிரையும் எண்ணவும் பழகிச் சமுதயா வாழ்க்கையைப் பயின்று கொள்ளும் இடமே விளையாட்டாம். இதுவே நான்காவது கொள்கை. விளையாட்டை உற்று நோக்கினுல் குழவி முதலில் தனியே விளையாடிவரக் காண்கிறேம். அடுத்த படியாகக் கூட்டுறவு தோன்றுகிறது. குழவிகள் கூடி விளையாட வருகின்றன. ஆனுல், இது முதலில் வெளிப்படையாக விளங்குவது இல்லை. பின்னர் ஆட்டங்களில் சட்டங்களைக் கண்டறிந்து ஆடுகிறநிலை எழுகிறது. அடுத்தபடியாக இந்த ஆட்டவிதிகளை மாருது விளங்கும் சட்டங்களாகக் கோவை செய்து போற்றிப் பாராட்டும் நிலை எழுகிறது. முன்னையது விதியை உணரும்நிலை; பின்னையது விதிக்கு அடிமையாகும்நிலை.

தனிவீறு :- "ஒவ்வொரு குழவியின் தனிவீறும் (Individuality) கட்டின்றி வெளிப்படும் நிலையே விளையாட்டு" என்பது ஐந்தாவது கருத்து. ஒவ்வொருகுழவியின் விளையாட்டும் ஒவ்வொருவகையாகத் தோன்றுவது இதனுலேயே ஆம். கூட்டமாக ஆடிவரும்போதும் ஒவ்வொருவர் தனிநிலையும் சிறந்து விளங்குவதனை அனைவரும் காண்கின்றனர்.

மாண்டிசோரி :— மாண்டிசோரி அம்மையார் விளையாட்டினைப் பற்றிக் கூறியதனை முன்னரே கண்டோம். தங்கள் மனத்தில் வேரூன்றிய எண்ணங்களுக்கு ஏற்ப, இந்தக் கொள்கைகளில் ஒன்றையோ பலவற்றையோ பலரும் பாராட்டிவரக் காண்கிறோம். "இதுவரையிலும் கூறிய கருத்துக்கள் ஒன்றற்கு ஒன்று மாறுபடாமல் அனைத்தும் ஒருங்கியைந்து விளையாட்டின் உண்மையான இயல்புகளை விளக்குகின்றன" எனச் சர் பேர்சி நன் (Sir Percy Nunn) முதலிய பேராசிரியர்கள் கருதுகின்றார்கள்.

## V. வேலையும் விளையாட்டும்.

வேலை விளையாட்டாதல் : — வேலை செய்து களைத்துப் போனவன் இளைப்பாறி வேடிக்கையாகப் பொழுதுபோக்கவருவது இயல்பேயாம். "வேலைக்கு முரண்பட்ட இந்தப் பொழுது போக்கு முறையே விளையாட்டு." என்பது ஒரு சில ஆசிரியர்களின் கருத்து. "வேலை" என முணுமுணுத்துச் செய்துவரும் குழவியைச் சில ஆசிரியன்மார் அத்தொழிலையே விளையாட்டாகக் கொண்டு செய்யுமாறு தூண்டி விடுகின்றனர். முன்னர் வேலைசெய்யப் போதிய ஆற்றலின்றிக் களைத்துப் போன குழவி, அத்தொழிலே விளையாட்டாக மாறியதும், இரண்டத்தனை ஊக்கத்தோடும் அதனைச் செய்யவருவது எங்ஙனம்? உயிர்ப்பொருளின் ஆற்றல் நம் உடற்கூற்று நிலையில் தலைமுறை தலைமுறையாகப் பதிந்து கிடக்கும் ஆற்றலேயாம். அது உள்ளக்கிளர்ச்சி வழியாகப் பொங்கி எழுந்து பாய்கிறது. நமது செயல்களை இவ்வாறு புடம்போட்டுத் தூயதாக்கி உயர்த்திக்கொள்வது விளையாட்டில் இயலுவதாகிறது.

ப்ராட்லி (Bradely) :— "வாழ்க்கை என்றால் ஒரு பெருங் கடமையை நிறைவேற்றலேயாம்" என்று கூறி, அப்-

பெருஞ்சுமை அத்தனையும் தம்தலைமேலேயே இருப்பதுபோல முணுமுணுப்பவர் பலர். நடக்கவும் பொழுது இல்லாமல், ஓடுகிற இத்தகைய ஓட்டத்தினிடையே, தம் வேலையில் இன்பம் காண்பார் யார்? இத்தகைய வேடிக்கைப் போக்கிற்குப் பொழுதில்லாமல் வருந்துவதாக நினைத்து வாழும் போது, "குழவிகளின் விளையாட்டனைத்தும் வீணே" என இன்னோர் கருதுவதும் இயல்பேயாம். உண்மையில் வேலைக்கும் விளையாட்டிற்கும் வேற்றுமை இல்லை. குழவி விளையாட்டினையே அனைத்திலும் பொருள் நிறைந்ததாகக் கொள்கிறது. விளையாட்டிலும் வேலையிலும் எழுகின்ற மனநிலைகளில் முரண்பாடு ஒன்றும் இல்லை. இவ்வாறு ப்ராட்லி என்ற உண்மை ஆராய்ச்சியாளர் (Philosopher) உறுதிகூறுகின்றார். மனநிலையில் இரண்டு வேறு பகுதிகளைக் காணலாம். இந்த இரண்டின் ஏற்றத் தாழ்வில் மட்டுமே வேற்றுமை உண்டு. ஒன்று தானே இயங்கும் உரிமை; மற்றொன்று வெளிக்கட்டுப்பாடு. கட்டுப்பாடு, வேலை விளையாட்டு என்ற இரண்டு இடத்திலும் இருக்கலாம். அரசர்பெருமானார் அரசியல் விருந்துக்குச் செல்வதென்றால் அது பிறவிருந்து போல விளையாட்டன்று. அரசியலைச் சேர்ந்ததொரு கடமையாகும். ஆகையால், இங்கும் கட்டுப்பாடே உண்டு. உதை பந்து (Foot Ball) ஆடும் போதும் சட்டதிட்டங்களாம் கட்டுப்பாடுகள் உள்ளன, ஆனால், பந்தாட்டத்தில் உள்ள கட்டுப்பாடு வெளிக்கட்டுப்பாடன்று; ஆடுபவர்களே விரும்பி ஒப்புக் கொள்ளும் கட்டுப்பாடாம். அரசியல் விருந்தின் கட்டுப்பாடோ, அரசர்க்கே ஆனாலும், வெளிநிலைக் கட்டுப்பாடாகவே தோன்றும்.

கூத்தரசு :— குழவிகளின் ஆற்றல் அளவுக்கு மேலும் பொங்கிவருகிறது. கட்டுப்பட்டுக் கிடக்கும்போது அணைக்குள்

அடங்கிய வெள்ளம் போல நின்ற ஆற்றல் கட்டுப்பாடு நீங்கியதும் பொங்கி வழிகிறது. பள்ளிப் பிள்ளைகள் பள்ளி விட்டதும், "ஓ" எனக் கத்திக்கொண்டே ஆரவாரம் செய்து ஓடி வரவில்லையா? "அளவுக்குமேல் பொங்கும் ஆற்றலே பிறந்ததிலிருந்து குழவியின் விளையாட்டாக விளங்குகிறது" என்பது மற்றொரு கொள்கை. "எல்லையற்ற ஆற்றல் படைத்த ஆண்டவனது பேராற்றல் அவனது திருக்கூத்தாக விளங்குகிறது" எனக் கொண்டு தமிழ்நாடு கடவுளைக் கூத்தரசாகத் தொழுது வருகிறதன்றோ? படைப்பு முதலிய முத்தொழிலும், ஐந்தொழிலும் கடவுளின் திருவிளையாடல் என்றன்றோ? இந்திய நாட்டு உண்மை ஆராய்ச்சியாளர் பலர் கூறி வந்துள்ளனர். இத்தகைய மனப்போக்குடையார் குழவியின் வாழ்க்கையைப் போற்றுவதும், கண்ணன் என்றும் முருகன் என்றும் வழுத்துவதும், பிள்ளைத் தமிழ் பாடுவதும் இயல்பாகி விட்டது எனலாம்.

ட்யூயி :— வேலை என்றும் விளையாட்டு என்றும் வேறு பிரிப்பது தக்கதன்று. விரும்பிச் செய்ய வருவது விளையாட்டு என்றும், செய்து தொலைக்க வேண்டுமே எனச் செய்ய வருவது வேலை என்றும் பொதுவாகக் கூறுவது உண்டு. பிரான்சு நாட்டு அரசர் பெருமான் ஒருவர் பூட்டு செய்வதனை வேடிக்கைக் கலையாகக் (Hobby) கொண்டு, வாழ்ந்ததனை வரலாற்று நூலார் யாவரும் அறிவர். விருந்தும் கட்டுப் பாடாகிய வேலையாய் முடிவதனையும் கண்டோம். வாழ்க்கையையும் அதன் செயற்பாட்டினையும் நோக்கும்போது விளையாட்டின் நுட்பம் விளங்கிவிடும் என்கின்றார் ட்யூயி (Dewey) என்ற பேரறிஞர். உயிர்ப் பொருளிடையே பல உறுப்புக்களும் ஒன்றை ஒன்று தூண்டி நிற்பதே எங்கும் என்றும் தோன்றும் இயல்பாம். இதன்பயனாக உயிர்ப்பொருள்

வாழும் நாளெல்லாம் தான் இயங்கிவரும் நிலையிலிருந்து மாறுவதே இல்லை. மாறுவது என்றால் சாவும் நிலையேயாம். மூச்சடங்கும்நிலை அப்போதன்றோ எழுகிறது. எனவே, செயற்பாடுதான் வாழ்க்கையின் சிறப்பியல்பாம். தொழிலைத் துறப்பது உயிர்வாழும்வரை இயலாது; ஆதலின் அவ்வாறு கூறுவதற்குப் பொருள் இல்லை எனக் கீதையும் அதற்குப் பொருள்கண்ட பின்னையாய திலகரும் வற்புறுத்திக் கூறி உள்ளனர். இச்செயற்பாடு விளையாட்டா, வேலையா என்பது இந்தச் செயற்பாட்டைப் பொறுத்ததன்றாம். பூட்டினைச் செய்வது ஒருவருக்கு வேலையாம்; மற்றொருவருக்கு விளையாட்டாம். எனவே இந்த வேற்றுமை அவரவரது மனப்பான்மையைப் பொறுத்ததாம். மனப்பான்மையோ ஒவ்வொருவரும் வாழ்க்கையிடையே பழகிய பழக்கத்தின் பயனும். உரிமையாக விளங்கும்போது நாம் விரும்பியபடி செய்வதே விளையாட்டாம்.

## VI. வேறென்பது ஏன்?

அந்தக்காலம்:— ஆகவே, வேலை எல்லாம் விளையாட்டாக மாறும் காலம் வரவேண்டும். அந்த நோக்குடனேயே குழவிகளைப் பழக்குதல் வேண்டும். சோம்பலும், மனத்தினை ஒரு நிலையில் ஒரு முகப்படுத்த முடியாது அலையவிடுதலும் குழவிகளிடத்தே இயற்கையாக எழுவன அல்ல. குழவிகளைக் கட்டுக்குள் அடக்கி வற்புறுத்தி வரும்போது அத்தகைய செயற்கை நிலையிலேயே அவை எழுவனவாம்.

வேலையின் சிறப்பியல்பு :-வேலை என மக்கள் வழங்குவது நோக்கம் உடையதொரு முயற்சியையே பொதுவாகக் குறிக்கின்றது எனலாம். ஈதே வேலையின் முதல் சிறப்பியல்பாம்.

இந்த முயற்சியை ஊக்கி எழுப்புவது ஒன்று வேண்டும். வேலை செய்வோன் முடிவு நிலையாகக் காண்பதனைத் தான் பெறுமாறு செய்வது இவ்வழியேதான் என அவனுக்கே தோன்றுகிற வகையில் முரண்பாடின்றி முடிவுவரை தொடர்ந்து முயலு-வதே வேலையின் மற்றொரு சிறப்பியல்பாம். விருப்பமின்றிச் செய்தலும், கடமையே என்று செய்தலும் வேலையின் சிறப்-பியல்பு என வற்புறுத்துவது வழக்கமாகிவிட்டது. வேலையில் வெற்றிபெருதவர்களே இவ்வாறு கூறவருகின்றனர் எனலாம். வெற்றியோடு வேலை செய்வோர் தம் வேலையில் இன்பம் கண்டு திளைப்பவரேயாம். உலகவாழ்க்கையின் நெருக்கடியில் தமக்குத் தக்க வேலையைப் பெருமையாலேயே, வேலை என்ருல் வெறுப்பு எழுகிற எண்ணம் பலரிடையேயும் பரவி உள்ளது எனலாம்.

தடையால் முணுமுணுப்பு:- ஆனல், குழவி நிலையிலேயே படிப்பினையும் வேலையாகக் கொண்டு வெறுத்து நின்று விளை-யாடவே ஓடிப்போகின்றதனை நாம் காணவில்லையா என்ற ஐயம் இங்கு எழலாம். இத்தகைய மனப்பான்மை செயற்கை-யால் எழுந்ததேயாம். மாண்டிசோரிப் பள்ளிகள் முதலிய-வற்றில் வேலையை வெறுப்பது என்பது குழவிகளிடத்தே காணேம். "பல பல தடைகள் காரணமாக, குழவி தனக்குள் தானே ஓடி ஒளிந்து கொள்ளும் வழிகளில் ஒன்றே விளையாட்-டென நாம் வழங்கிவருவது" என்பதனை மாண்டிசோரி அம்மை யார் வற்புறுத்துவதனைக் கண்டோம். இயற்கை வாழ்வு வாழும் குழவி அவ்வாறு ஓடி ஒளியாமல் வேலை அனைத்தினையும் விளை-யாட்டாகவே எண்ணி வாழ்ந்து வருகின்றதென்றும் எடுத்துக் காட்டுகின்றனர். இதன்பயனுக அந்த அம்மையார் கண்ட கல்வி முறையில் "வேலையே உண்டு; விளையாட்டே இல்லை" எனக் குற்றம் கூறுவோரும் உள்ளனர். வகுப்பில் எடுத்ததற்கு

எல்லாம் தடையும், ஒழுங்கு முறையும், உரிமை இன்பத்திற்கிடம் சிறிதுமின்றிச் செயலனைத்தினையும் தடைப்படுத்திக் குழவியின் மனத்தைத் தயங்கவிட்டுப் பேய்க்கூத்தாடி வந்தால், வேலையை வெறுக்காமல் விரும்புவார் யார்? படைப்புக் கடவுளாகக் குழவிகளைக்கண்டு களிக்கும் போதன்றோ இன்பந் தோன்றும்; வேலையே விளையாட்டாம்.

செல்வக் குழவிகள் :- செல்வமாக வளர்ந்துவந்த குழவிகள் பள்ளிக்கு வந்ததும் பெற்றோரைப்போல ஆசிரியர்கள் தம்மைத் தட்டிக்கொடுத்துக் கொஞ்சி விளையாடாமையால் பள்ளிக் கூடத்துப் படிப்பில் மனஞ்செலுத்த முடியாது கலங்கி வெறுப்பினை வளர்க்கத் தொடங்குகின்றன. பெற்றோரும் குழவியைப் பொம்மையாக்கி வளர்ப்பதனையும் விட்டுவிடல் வேண்டும்; ஆசிரியன்மாரும், தாம் பெற்றோரின் நிலையில் இருப்பதனை உணர்ந்து அன்பாகக் குழவிகளை எதிர்கொண்டு அழைத்தல் வேண்டும். குழவியின் மனத்தினைப் பண்படுத்தி உருப்படுத்துவதே கல்வியின் நோக்கமாதலின், மனநிலையைப் புறக்கணித்துப் பாடமொன்றிலேயே நாட்டமாக இருப்பது அறியாமையே ஆம்.

போட்டி :— இவ்வாறு குழவியைப் புறக்கணித்துப் பாடத்தில் நாட்டமுடையார் செய்யும் தவறு காரணமாகவும் பாடத்தைக் குழவிகள் வெறுத்து நிற்பர். குழவிகளிடையே போட்டி மனப்போக்கை வளர்த்துவிட்டால், ஊக்கம் பொங்கி வழிவது கண்டு வகுப்பில் பாடங்கற்பதிலும் அதனைப் பயன் படுத்தச் சிலர் முயல்கின்றனர். குழவியின் நிலையையும் ஆற்றலையும் அறிந்து அதற்கேற்ற அளவு இதனைப் பயன் படுத்தினல் சிறிது நன்மை காணலாம். அளவுக்கு விஞ்சினல் அமுதமும் விஷமாம். குழவியின் பாடத்தினையே இன்பமாக்கி

அதில் ஊக்கம் விளைவித்தலே சாலச் சிறந்ததாம். அவ்வாறு செய்யாமல் பிறரோடு போட்டி போடுவதிலேயே ஊக்கம் விளைவிப்பதால் சிறந்த நன்மை எழுவதற்கு இடம் இல்லை. "போட்டி, போட்டி" என்றே ஓடிக்கொண்டிருந்தால், குழவி களைத்துப் பாடத்தை வெறுக்கத் தொடங்குகிறது. இதே நோக்குடையார் குழவி கற்பதனை இன்பமாகக் கற்றுப் பயன் படுத்துவதற்கு வழிகோலாமல், மேல் வகுப்பிற்கு உரியதாகக் குழவியினை மாற்றுவதற்கே அலைகின்றனர். "கோணிமூட்டை-யிற் பஞ்சினைத் துறுத்தி அடைப்பதன்று கல்வி" என்பதனை இவர்கள் உணர்தல் வேண்டும். அளவுக்கு மேலும் கற்பிப்-பதும், படிக்க மனமில்லாதபோது கற்பிப்பதும் குழவியின் மனத்தினைக் கொன்று தொலைப்பதே ஆம்; ஆசிரியர் தம் மனத்திற்குமே நஞ்சூட்டிக் கொள்வது போலாம். இத்தகைய நிலையில் குழவி "பள்ளி" என்றாலும் நடுநடுங்கி நிற்கின்றது. "வேலை வேறு; விளையாட்டு வேறு" என்கின்ற மனப்பான்மை வளர்கிறது. தன் வாழ்க்கை முழுதும் எந்த வேலையிலும் சுவை காணாது குழவி வருந்துகிறது.

வெற்றிச்சுவை:-ஆதலின், வேலையையும் விளையாட்டினையும் வேறுபடுத்துகின்ற மனப்பான்மையைக் குழவியிடத்தே வளர்த்தலாகாது. சிறந்தவர்கள் எனப் பெயர் எடுத்தவர்கள் எல்லாம் செயற்கருஞ் செயலையும் முணுமுணுக்காது இன்ப-மாகச் செய்து முடித்தவர்களேயாம்.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ் வெவர்தீமையும் மேற்கொள்ளார் — செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்."

வேலையைச் செய்து முடிக்க விரும்புகின்றவன் அதில் வரும் இன்பத்தினைப் பற்றியே எண்ணமாக இருப்பதில்லை; வேலை-

யிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பான். ஆகவே, குழவியைப் பயிற்றும் போதும், வேலையின் அகநிலையின்பம் முதலியனவற்றை நோக்குவதனை விட்டு, வேலையின் புறநிலை-வெற்றியிலேயே திளைத்து வருமாறு குழவியைத் தூண்ட வேண்டும். தடைகளைக் கண்டு அஞ்சிப் பின்வாங்காது அவற்றை வெல்லும் பழக்கம் வளர்தல் வேண்டும். அப்போதுதான், குழவி தானாக வேலை செய்ய வருவதும் பழக்கமாகிவிடும். ஒவ்வொரு முறையும் வேலை செய்யுமாறு குழவியைத் தூண்டி வந்தால், இத்தகைய பழக்கத்திற்கு முற்றும் எதிர் மறையான நிலையே மனத்தில் பதிந்துவிடும். வேலையிலொரு வெறுப்பும், சோம்பலும் பழக்கமாய்விடும். முடிவுநிலையாய் வெற்றியை வற்புறுத்திவர வற்புறுத்திவரக் குழவி முதலில் தன் மனத்-திற்குப் பிடித்தம் இல்லாத வேலைகளையும் களைப்பின்றி மிக முயன்று உழைத்துவரத் தொடங்கிவிடுகிறது.

## VII. குழவி விளையாட்டு

ஆராய்ச்சிமுறை :— விளையாட்டினைப் பற்றிப் பல வகை-யாகவும் மேல் நாட்டினர் ஆராய்ந்து வருகின்றனர். செய்க் காட்சி நிலையங்கள் அல்லது சோதனை சாலைகள் இதற்கெனப் பல எழுந்துள்ளன. அச்சடித்த கேள்விகளைப் பலருக்கும் அனுப்பிப் பலருடைய கருத்துக்களை அறிந்து கொள்கின்றனர். குழந்தைகளைப் பற்றிய பலவகை ஆராய்ச்சியிலும் அவர்-களோடு விளையாடி இருந்து அவர்களது உள்ளத்தினைப் பற்றிய உண்மைகளை எல்லாம் ஆராய்ச்சியாளர் அறிய முயல்-கின்றார்கள். ஆகையாலே, அத்தகைய ஆராய்ச்சிகளில் எல்லாம் விளையாட்டினைப் பற்றிய உண்மைகள் வெளியாகின்றன. குழவிகளோடு தனித்தனியே பேசி அவர்கள் விரும்பும் ஆட்டங்கள் இன்ன இன்ன என அறிந்து கொள்வதும் உண்டு.

ஒரே பொழுதில் நகரங்களின் பல இடங்களிலும் பரந்து நின்று, குழந்தைகளின் விளையாட்டுப் போக்கை அறிந்து வந்து, பின் ஒன்று கூடி ஆராய்ந்து முடிவுசெய்கின்ற முறையே இந்த நாளில் பெருவழக்காக விளங்கிவரக் காண்கிறோம்.

விளையாட்டே மருந்து :— விளையாட்டினையே குழவியின் மனக்கோளாறுகளைத் தீர்ப்பதற்கு மருந்தாகப் பயன் படுத்தும் மருத்துவச் சாலைகளும் உள்ளன. கண்டதனை எல்லாம் வாரி எறிந்து, கடுஞ் சினத்தோடு, சுற்றியுள்ளார் மனம் எல்லாம் எரிய நடந்துவருகிற குழவிகள் பல இத்தகைய மருத்துவச் சாலை-களுக்குச் சென்று திரும்பும்போது இந்த நிலைமை மாறி இன்பக் குழவிகளாய் வருகின்றன. பெற்றோரும் ஆசிரியன்-மாரும் குழவியை ஒருமையுடன் வாழவிடாது பல கட்டுப்-பாடுகளை எழுப்பித் திட்டிக்கொண்டு வருவதனாலேயே குழவிகள் இவ்வாறு கெடுகின்றனவாம். அப்படிப்பட்ட குழவிகளைப் பொம்மை கொண்டு விளையாட விட்டால் தம்மைச் சுற்றியுள்ள பெரியோர்கள்மேலே நேராகத் தீர்த்துக்கொள்ள முடியாத வஞ்சத்தை எல்லாம், அந்தப் பொம்மை மீது காட்டி, அதனை நையப்புடைத்தும் தண்ணீரில் அழுத்தியும் தீர்த்துக் கொள்-கின்றனவாம். இவ்வாறு ஆடவிட்டபின், உள்ளுக்குள்ளே கொந்தளிப்பு அடைந்து கிடந்த அக்குழவிகளின் உள்ளங்கள் ஆறுதல் அடைந்து அமைதியுறுகின்றன. இவ்வாறு குழவி-களைத் திருத்துவதற்காகப் பள்ளிக்கூடங்களிலே உள்ளத்து இயற்கைநூல் அறிஞர்கள் மேல்நாட்டில் இடம் பெற்று வருகின்றார்கள். இத்தகையாரது ஆராய்ச்சிகளாலே விளை-யாட்டின் நுட்பங்களிற் பல வெளியாகின்றன.

சமநிலைப் பிறழ்ச்சி :- எவ்வாறேனும் குழவியின் உள்ளத்-திலே சமநிலையை விளைவித்தல் வேண்டும். இளமைப் பருவத்தே

இத்தகைய சமநிலையை வளர்த்துவிடுவது எளிது. குழவிகளின் விளையாட்டை ஊன்றி நோக்குவோமானால் அதன் மனப் போக்கினை எளிதில் அறிந்து கொள்ளலாம். சமநிலை பிறழ-வரும் போக்குகளை நீக்குவது எப்படி? வேறு வகையான தக்கதொரு விளையாட்டினிடையே குழவிகளின் மனத்தைச் செலுத்தி அப்பிறழ்ச்சியை நீக்கி அவற்றின் மனப்போக்கு செவ்விதாக அமையுமாறு செய்யலாம். துன்பத்திடையே புழுங்குகின்ற குழவி விளையாட்டிடையே தான் இன்பத்தைக் காண முடிவதால், இடம் கிடைக்கும் பொழுதெல்லாம் விளையாடவே ஓடிப்போகின்றது. வாழ்க்கைத் துறையில் தோன்றும் குறைபாடுகளுக்கு ஈடாக விளையாட்டுநிலை உதவி-வரவும் காண்கின்றோம். சிறுமை உண்டு, குட்டுப்பெற்று இகழப் படுகின்ற குழவி தன்பெருமையை எங்கேனும் காட்டிக்கொள்ள வேண்டும் அன்றோ? விளையாட்டிலன்றி வேறு எங்கே அது அவ்வாறு செய்து காண்பிக்க முடியும்?

கற்பனை:— குழவியின் கற்பனைத்திறம் வளர்ந்து ஓங்கிச் சிறப்பதும் விளையாட்டிலே தான். கண்ட பொருளைக் கண்டபடி எல்லாம் நம்பிக் குழவி விளையாடிவருகிறது. உலகின் புற-நிலைகளை அடக்கி ஆள முடியாது, துணையற்றுக் கிடக்கின்ற குழவி மக்களுக்கு இன்றியமையாததாகிய தற்சாதிப்பு-(Self-assertion) நிலை கெடாது வளர்ந்து வருமாறு இயற்கை அன்னை இத்தகையதொரு சிறந்த வழியை அமைத்துள்ளாள். சாரணர் இயக்கம் போன்றவை இந்த வகையில் பேருதவி செய்கின்றன. பெரியோர் வாழ்வது போலவே தாமும் வாழ்வதாகக் கருதி, மக்கள் வாழ்க்கையில் பெருமதிப்பு உடையனவாகக் கருதப் பெறும் செயற்பாடுகளில் குழவியும் பங்கெடுத்து உழைப்பதாக எண்ணி, கற்பனை உலகில் உலாவி, எதிர்கால வாழ்க்கையின் வெற்றிநிலையை எதிர்பார்த்து

வருமாறு இத்தகைய இயக்கங்கள் குழவியைப் பழக்கி-விடுகின்றன.

கவியுலகம் :— கற்பனை உலகை நினைத்ததும் கவியுலகம் நினைவிற்கு வருதல் இயல்பேயாம். கற்பனைத் திறத்தின் சிறந்த வடிவம் அன்றோ கலை எனப் பெறுவது? ஒவ்வொரு பாவும் ஒவ்வொரு வீற்றுநிலை பெற்றது; தனிநிலைச் சிறப்புடையது. இந்த வகையில் ஒவ்வொரு குழவியும் ஒவ்வொருபா எனலாம். அகத்தெழுகின்ற மனப்பாங்கும் உட்பாடும் (Impression) வெளிப்பாடாய்ப் (Expression) புலப்படுவதே கலையாம். உயிர்ப்பொருளின் ஆற்றல், மக்கள் அனைவரும் நன்கு மதிக்குமோர் உயர்நிலையிலே விளங்கிவர வேண்டும்; தீனிப்-பிழம்பாகிய வடிவமைதி என்னும் உடற்குள்ளே உயிராக அந்த ஆற்றல் அமைந்து உலாவி வருவதே கலையாம். பலவகையான கலைகளிலும் கைப்பழக்கத்தால் சிறந்து விளங்கும் செய்திறன் அனைத்தும் அழகு நிலையாக ஒளிரக் காண்கிறோம். "செய்-திறனின் இத்தகைய அழகுநிலை ஓர் விளையாட்டு நிலையே" என வில்லியம் மாரிஸ் (William Morris) என்ற பாவாணராம் அறிஞர் பெருமானார் வற்புறுத்துகின்றார். தான் அறிந்ததொரு செய்ம்முறையை அடக்கி ஆண்டு, தான் எண்ணியபடி சரிவர நிறைவேற்றிப் படைத்து வருகின்ற கலைவாணனது இன்பத்-திற்கு அளவு உண்டோ? அத்தகைய இன்பம் ஓர் ஒழுங்கு முறைப்படி வெளிப்பாடாய்த் திகழவருவதே செய்திறனாக விளங்குகின்றது. இவ்வாறு கலையினையும் விளையாட்டினையும் ஒன்று வைத்து நோக்கும்போது ஓர் உண்மையான ஊக்கம் பெருகுகிறது. இவ்வாறு அழகினைப் படைப்பது விளையாட்டே-யாமாயின், நல்ல நிலையிற் குழவிகளை வளர்த்துவந்தால், அவை அனைத்தும், கவிஞராய்ப், பாவாணராய் அழகினைப் படைத்து உலகினை இன்பமாக்கித் தாமும் இன்பமாய் வாழும் அன்றோ?

பொருத்தமுறல்:- "வாழ்க்கையில் பொருத்தம் உறுமாறு திருத்தம் பெறப் பயிலுவதே விளையாட்டு" என்பது இவ்வாறு தெளிவாகிறது. குழவிகள் தம் விளையாட்டினை வெறும்-பொழுது போக்காகக் கருதுவதே இல்லை. நாம் சிறிது அந்த விளையாட்டைத் தடுக்கும்போது அந்த உண்மை விளங்கும். தமக்கு இன்றியமையாதது என்று குழவிகள் கொண்டாடும் விளையாட்டினைப் பெரியோர் எள்ளி நகையாடுவதனைப் போலக் கேடுவிளைவிக்கும் செயல் பிறிதில்லையாம். விளையாட்டிலே தாம் எண்ணியபடி செய்து முடிப்பதனைப் பெரியோர்கள் பாராட்டிப் புகழ்ந்து ஊக்குதல் வேண்டும். பெரியோர்கள் இந்த உண்மையை உணராது தம் வேலையை மட்டும் உயர்ந்ததாகக் கருதிக் குழவிகளை விளையாடவிடாது, விளையாட்டில் வரும் இன்பத்தினையும் அவை அடையாதபடி தடை செய்து நிற்கின்றனர். குழந்தையை அலைக்கழிப்பதே அன்றி ஈது வேறு என்னை? குழவிகள் இமைக்கு ஒரு முறை தங்கள் விளையாட்டினை மாற்றிக்கொண்டே வருவதனைக் கண்டதும், வெறி கொண்டாராது மனநிலையே பெரியவர்கள் நினைவிற்கு வருகிறது. அதனால், அஞ்சி நடுங்குகின்றனர்; அதனைத் தடுப்பதற்குத் தங்களால் ஆனவரையிலும் முயல்கின்றனர். குழவி எதையேனும் ஒன்றை உன்னிப்பாய்க் கண்டு நிற்கும் போது, அதன் நனவு எல்லை மிக மிகச் சுருங்கி இருக்கின்றது என்பதனை இவர்கள் அறியாமையாலேயே இவ்வாறு தாமும் மனம் கெட்டு நிற்பதோடு குழவியின் மனத்தினையும் கெடுக்க முயல்கின்றனர்.

விளையாட்டுக் கல்வி:- "கல்வி கற்பிப்பதிலும் விளையாட்டு முறையைப் பின்பற்றவேண்டும்." என்ற கொள்கை (Playway method of education) இந்த இருபதாம் நூற்றாண்டில் பரவிவருகிறது. வரலாற்று நூல்களைப் படிக்கும் போது

குழவிகள் அலக்சாண்டராகவும் (Alexander) செலூக்கசாகவும், புருஷோத்தமனாகவும், சந்திரகுப்தனாகவும், சாணக்கியனாகவும் கோலம்பூண்டு வரலாற்றையே நாடகமாக நடத்தி வருதல் வேண்டும். தரைநூலைப் பல பல காட்சிகளாக அமைத்து அந்த அந்த நாட்டின் வழக்கங்களையும் பிறவற்றையும் விளையாட்டாக விளையாடி வரவேண்டும். பூதநூல் இயற்கைநூல், உயிர்நூல், முதலியவற்றில் வரும் செய்க்காட்சிகள் எல்லாம், குழவிகள் மிகமிக விரும்பும் விளையாடல்களாக அமையலாம். கணக்கினையும் வாழ்க்கைத் துறை விளையாடல்களாகவே (Projects) அமைத்துக் கற்றுக் கொடுத்தலும் கூடும். இலக்கியங்களையும் இவ்வாறு கூத்தாக நடிப்பது அருமையன்று. "ஆங்கில நாட்டில் பெரியோர்களும், ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களின் பொருளை அறியாது தயங்கும் போது, குழவிப் பருவத்தே அந்த நாடகத்தை நடிக்கவந்த குழவிகள் இந்த நடிப்பின் வழியாக உண்மைப் பொருள் உடலில் எல்லாம் ஊறிநிற்கும் வகையாக உணர்ந்து, மகிழ்ந்து, களித்தனர்" என இந்தவகையில் குழவிகளை ஆராய்ந்த கால்ட்வெல் குக் (Caldwell Cook) போன்ற அறிஞர்கள் கூறுகின்றார்கள். எனவே, விளையாட்டின் நுட்பத்தை அறிவதே கல்வியின் சிக்கலான பூட்டைத் திறந்துவைக்கும் திறவுகோலாம். வேலையே விளையாட்டாய், விளையாட்டே வாழ்வாகிவிட, விளையாட்டு, வேலை, வாழ்க்கை என்ற மூன்றும் இவற்றில் ஒன்றிலேயேவிளங்க, இவை மூன்றிலும், இவை ஒவ்வொன்றும் விளங்க, ஒன்றில் மூன்றாய், மூன்றில் ஒன்றாய்ப் பொதுமைஅறம் பிறங்கவரும் நாடே எல்லோரும் விரும்பும் நாடாம்.

## VIII. விளையாட்டின் வளர்ச்சி

முதல் ஏழு திங்கள்:-புனிற்றிளங்குழவிகளை நோக்கும்போது அவற்றினுடைய இயக்கம் அனைத்தும் விளையாட்டாகவே

விளங்கக் காண்போம். பிறந்த முதல் இரண்டு திங்கள்களில் தங்கு தடையின்றிக் குழவி கையையும் காலையும் வேண்டியபடி எல்லாம் உதைத்துக் கொண்டு திளைத்து விளையாடக் காண்கிறோம். மூன்றாம் திங்களில், குழவி, கையைக் கொண்டு நன்றாக விளையாடத் தொடங்குகின்றது. கையிற்படுவனவற்றை எல்லாம் உற்றறிந்து வருகிறது. கையிற் பற்றிக்கொண்டு ஆட்டியும் விளையாடுகின்றது. இந்தத் திங்களில்தான் குழவி குழறிப் பேசத் தொடங்குகிறது. நான்காந் திங்களில் பொருள்களை எட்ட முயல்கின்றது. எப்பொருளையும் அசைத்து ஆட்டிப்பார்த்து வாயில் இடுகிறது. பலவகை ஒலிகளை எழுப்பிக் கூவுவதே பெருவிளையாட்டாக அதற்குப் பெருமகிழ்ச்சி தருகின்றது. சிரிப்பதும் இப்போது நன்கு விளங்குகின்றது. வாயிலிருந்தும் எச்சிற் குமிழிகளைப் பறக்கவிட்டுக் களிக்கின்றது. ஐந்தாம் திங்களில் குரல்விளையாடல் தொடங்குகிறது. பல்லிபோல் கொட்டுவது போன்ற ஒலிகள் எழுகின்றன. கண்கொண்டு அனைத்தினையும் கண்டு மகிழும் விளையாடலும் அப்போதுதான் முற்றி நிற்கின்றது. தன் கையையே கண்டு மகிழ்கின்ற அரியதோர் இன்பக் காட்சியும் அப்போது காணலாம். ஆறாம் திங்களில் சிரித்தல் என்பது நிலைத்ததொரு விளையாட்டாகிவிடுகிறது. பொம்மைகளைக் கீழே விழவிடுவதும், விழுவதனை உற்று நோக்குவதும், அவை விழும் ஒலிகேட்டு மகிழ்வதுமாக மாறி மாறிப் பல முறையும் இயங்கித் தன்னிற்றானே குழவி களித்து அச்செயல்களில் திளைத்து நிற்கக் காண்கிறோம். ஏழாந் திங்களில் தன்னைச் சுற்றியுள்ள பொருள்கள்களை எல்லாம் குழவி கையாண்டு வருவதோடு கையை அசைத்தும் விளையாடுகிறது.

பள்ளிக்குப் போகும்முன்:- பள்ளிக்கூடத்திற்குப் போகும் முன்னரே குழவிகள் விளையாடி வருவதனையும், பள்ளிக்கூடத்-

திற்குச் சென்ற பின் குழவிகள் விளையாடி வருவதனையும் ஒப்புநோக்கி அறிஞர் ஆராய்ந்துள்ளனர். முதலில் விளையாட்டனைத்தும் தசையியக்க வடிவமாக விளங்கக் காண்கிறோம். மூன்றாவது நான்காவது ஆண்டில் கைத்திறம் விளங்கும் செயல்கள் முகிழ்க்கின்றன. தவழ்வதும் ஏறுவதும் நடப்பதுமாய்க் குழவி விளையாடி வருகின்றது. தசை இயக்கம் திறம் பெற்று வளர்ந்து வருதல் காரணமாகக் கோலியாடுதல் மிதிவண்டி (Cycle) ஓட்டுதல் முதலிய விளையாட்டுகள் நடைபெறுகின்றன. முடிவாகப் பள்ளிக்குப் போவதற்கு முன்னரே தசை இபக்கங்களில் திளைத்து நிற்கும் மனப்போக்கு திட்டமான ஆட்டங்களில் சென்று விடுகிறது. இந்நிலையில் ஆண் குழவிகளுக்கும் பெண்குழவிகளுக்கும் இடையே ஒரு வேற்றுமையும் நாம் காண்பதில்லை.

விளையாட்டு மனநிலை மாறுதல் :- தசையியக்கமாக மட்டும் இயங்கிய விளையாட்டு அடுத்த படியாகப் பொருள்களை வைத்து விளையாடும் விளையாட்டாக மாறுகிறது. தனது சுற்றுப் புறச் சூழலைக் கையாளும் திறமை குழவியினிடம் சீர்பெற்றுத் திருத்தமுற்று வளர்கிறது. சுற்றுப்புறச் சூழலிலே உள்ள பொருள்களைக் கொண்டு விளையாடுகின்ற முறையில் ஒரு மாற்றத்தைக் காண்கின்றோம். அதிலிருந்தும் குழவி பொருள்களை நோக்கி நிற்கின்ற மனநிலை மாறி வந்திருக்கிறது என நாம் அறிந்து கொள்ளலாம்.

விளையாட்டுப் படிகள்:- குழவிப் பள்ளிகளுக்கும் போகாத நிலையிலே குழவி புறப்பொருள்களைக் கொண்டு விளையாடுகின்ற நிலையினை ஒன்றற்கு ஒன்று உயர்ந்து வரும் நான்கு வேறு படிகளாக அமைத்துக் காணலாம். முதற்படியில் கட்டடமோ வேறு வகை அமைப்போ தோன்றாமல் பொருள்-

களை முழுநிலையாகக் கையாளும் முறையைக் காண்கின்றோம். இது மூன்றும் ஆண்டின் முதலில் விளங்குவதாம். இரண்டாம் ஆண்டில், பொருள்களை நேரே வரிசையாக வைத்து விளையாடுவது வழக்கமாகிறது. இவ்வாறு வைப்பதிலே பல பல வடிவங்கள் அல்லது கோலங்கள் எழுமாறு விளையாடுவதே மூன்றும் படியாம். இது மூன்றும் ஆண்டின் முடிவிலேயே பழக்கமாகி விடுகின்றது. இதற்குப் பின்னர் அகல நீள உயரமாகப் பொருள்களைப் பல வேறு அமைப்புகளாக அடுக்கிவைத்துக் கட்டிவருவதே நான்காம் படியாம். இந்தக் கட்டடப் படியிலும் ஒரு வளர்ச்சி முறையினைக் காண்கிறோம். முதலாக எழுப்பும் கட்டடங்கள், எதனையும் குறிக்காமல் பொருள்களை அடுக்கிவைக்கின்ற அளவில், நின்று விடுகின்றன. அடுத்துத் தோன்றும் அமைப்புகளில், புறப்பொருள்களோடு ஒரு சிறிது ஒற்றுமை தோன்றுவதால், அப்பொருள்களைப்போலத் தானும் ஒன்றைக்கட்டி முடிக்கவே குழவி முயல்கின்றது. செய்திறனும் பழக்கமும் போதிய அளவு முற்றிவராமையினாலேயே, ஒப்புமையில் குறைபாடு தோன்றுகின்றது. முடிவாக 7 ஆம் ஆண்டில் ஒப்புமையும் நன்கு தோன்றப் பொருள்களை அமைத்துக் குழவி கட்டிவரக் காண்கிறோம்.

பள்ளிக்கு முன் :— பள்ளிக்குப் போவதற்கு முன் குழந்தைகள் "விளையாடுவதற்கு இன்ன பொருளே வேண்டும்." எனக் குறிப்பிட்டு வற்புறுத்தாது எதனையேனும் விளையாட்டுப் பொருளாகக் கொண்டு, அதனையே ஒருமுறை வண்டி என்றும், மற்றொருமுறை அரசன் என்றும், மாறிமாறி எண்ணி விளையாடிவரக் கண்டவர்கள், தன் விருப்பப்படி பொருள்களை எண்ணத்தாலேயே மாற்றி மாற்றி நம்பிவருகின்ற நிலைமை குழவியிடத்தே சிறந்து வருகிறதாக முடிவு செய்தனர். ஆனால், குழவி தான் செய்வதற்கும் புறத்தே இருப்பதற்கும்

ஒப்புமையைக் காண்பதே இல்லையாம். ஒப்புமையைக் காணாத இடத்தில், எதனையும் எதுவாகவேனும் கொள்ளுதலில் என்ன அருமைப்பாடு? குழவிகள் இந்த நிலையில் அஞ்சல் தலைகள் (Postage stamps), கோலி, பம்பரம், வர்ணக் கடுதாசித் துண்டுகள், வர்ணக் கயிறுகள் முதலியவற்றைக் கொண்டு விளையாடுகின்றன. பெண் குழவிகளோ, அஞ்சற்றலைகள், படங்கள், வர்ணப்பட்டைகள், கிளிஞ்சல்கள், மணிகள், துணித் துண்டுகள் முதலியவற்றைக் கொண்டு விளையாடுகின்றன. மண்ணில் அடை சுடுவதும் அவற்றின் விளையாட்டே ஆம். குழவிகள் இத்தகைய விளையாடல்களை நமது சிறந்த வேலைகளிலும் உயர்ந்ததாக எண்ணிக் கண்ணும் கருத்துமாய் முயலுவதோடு அவ்விளையாடல்களை நாம் தடுக்கும் போது உயிரே போவது போலத் துடிக்கவும் காண்கின்றோம்.

வயதும் விளையாட்டுப் பொருளும் :— விளையாட்டுப் பொருள்களினிடையேயும் குழவிகளின் வயதிற்கேற்ப வேற்றுமை தோன்றக் காண்கிறோம். பள்ளிக்குப் போகும் முன் குழவிகள் விளையாடும் பொருள்களை ஆராயும்போது, அவை எளிதாகக் கையாளக்கூடிய களிமண், மணல், சுண்ணும்புக்கட்டி, கட்டைகள், பொம்மைகள் முதலியனவாகத் தோன்றக்காண்கிறோம். உருளையான பொருள்களைத் துளையிலிட்டு விளையாடவும் காண்கிறோம். இத்தகைய பொருள்களை இரண்டு மூன்றும் ஆண்டுகளிலேயே குழவிகளிடம் வழங்கி அவற்றை இவ்வாறு விளையாடிவரத் தூண்டி இருந்தால், பின்னரும் அவை அத்தகைய விளையாட்டில் ஈடுபட்டு வருகின்றன. இல்லையானால், அவை அக்குழவிகளின் மனத்தினைக் கவரும் கவர்ச்சி மெல்லத் தேய்ந்து ஒழிகிறது. ஆதலினால், வேலைப்பாடமைந்த விளையாட்டுப் பொருள்களை விடக் கட்டையையும் மணலையும் போலிருக்கும் விளையாட்டுப் பொருள்களே

சிறந்தனவாம். பள்ளிக்குப் போகும் குழவிகள் பிறரோடு விளையாடும் பொழுதைவிடப் பொருள்களை வைத்துக்கொண்டு விளையாடும் பொழுதே பெரிதாம். இத்தகைய குழவிகள் தம் பொழுதில் முக்காற் பங்கினைப் புறச்சூழலைக் கையாண்டு இயங்குவதில் செலவிடுகின்றன. மிகுதி அரைக்காற் பங்கினை எதனையேனும் பார்த்துக் கொண்டிருப்பதிலோ பகற்கனவு காண்பதிலோ செலவாக்குகின்றன.

விளையாட்டுப் பொருள் :— அவ்வக்குழவிகள் பயன் படுத்தும் விளையாட்டுப் பொருள்களை ஆராயும்போது ஆண் குழவிகளினும் பெண் குழவிகளே பொம்மைகளை மிகப் பெரிதும் விரும்புவது தெளிவாகின்றது. இந்த நிலையில் உள்ள குழவிகள் அனைவரும் விளையாட்டுப் பொருளின்றி விளையாடுவது அருமையாம். இவை விளையாட்டுப் பொருள்களை இன்றியமையாதன எனக் கொள்கின்றன. ஆனால், வயதேற ஏற விளையாட்டுப் பொருள்களின்மேற் பாந்து சென்ற ஆசை மறைகிறது. நாய் முதலிய வளர்ப்பதில் மனம் செல்கிறது. அவற்றின் மேலேயே குழவிகளின் ஆசை பாந்து ஓடுகிறது.

பள்ளி விளையாட்டு :- பள்ளிக்குச் செல்லும் முன் விளையாட்டு நிலை இங்ஙனமாகப் பள்ளியிற் படிக்கின்றபோது குழவிகள் ஆண் ஆனாலும், பெண் ஆனாலும், வீட்டுக்குள்ளே ஆடும் ஆட்டங்களை விட்டொழித்து வெளியே ஓடியாடும் விளையாட்டையே விரும்புகின்றன. இளங்குழவிப் பருவத்தே குழவிகள் முரண்பட்டுச் சண்டையிடுவது இயல்பு. அதிலும் ஆண் குழவிகளே வலி சண்டை செய்வன எனலாம். ஆனால், இந்தச் சண்டை இமைப்போதளவில் மாறி விடுகிறதாம். பள்ளிக் கூடத்தில் படிக்கும் போதெல்லாம் விளையாட்டில் ஆண்கள் அனைவரும் ஒன்றாகவும், பெண்கள் எல்லாம்

ஒன்றாகவும் கூடி விளையாடி வரக் காண்கிறோம். குழவிக்கு வயது ஏற ஏறக் கோலி, கண்ணும்பூச்சி, பொம்மையாட்டம் முதலியவற்றில் அக்கரை குறைந்து வரக்காண்கிறோம். "உலகினைப் பொருள் படுத்தாது வீணாகக் காலங்கழித்த மனப் போக்கு மாறி, உலகினைப் பொருள் படுத்திப் பொழுதினை வீணாக்காது, குழவிகள், வேலையில் இவ்வாறு ஈடுபடுகின்றன." என்று இந்த மாற்றத்தினைக் கண்டதும் கருதிவிடுதலாகாது. வயதேற ஏற விளையாட்டின் போக்குச் சிதறுண்ணாது நிலை-பெற்றுவரக் காண்கிறோம். ஆறாவது ஆண்டிலிருந்து குழவிக்கு வயதாகும் வரை அது விளையாடும் ஆட்டங்கள் அனைத்தும் சுற்றியுள்ள புறநிலையின் இருப்பிற்கேற்ப அக்குழவி பொருத்த-முற்று வளர்வதனை விளக்குகின்றன எனலாம். இவ்வாறு நாம் காணும் இந்த மாற்றங்கள் இந்நாளில் மட்டும் விளங்குவன அன்றாம். உலக வரலாற்றில் வளர்ந்தோங்கிய நாகரிகங்களை ஆராய்ந்தாலும் இங்குக் கூறிய சிறப்பியல்புகளும் வளர்ச்சி முறையுமே அங்கெல்லாம் விளங்கிவரக் காண்கிறோம்.

## IX. பலவேறு பாடுகள்

பால் வேறுபாடுகள் :— ஆணுக்கும் பெண்ணுக்கும் விளையாட்டில் வேற்றுமை உண்டு என்பதனை உலகம் அறியும் ஆனால் புனிற்றிளம் பருவத்தில் வேற்றுமை ஒன்றும் இல்லை. பின்னரே பொம்மை வைத்து விளையாடுவதில் பெண்கள் ஈடு படுவதனைக் காண்கிறோம். 8 ஆம் ஆண்டிலிருந்து 10 ஆம் ஆண்டுவரை விளையாட்டில் ஆண்கள் பெண்களைவிட உடலியக்க வகையான விளையாடல்களில் பெரிதும் ஈடுபட்டு வருவதனைக் காண்கின்றோம். பெண்கள் விளையாட்டோ அடக்கமும் அமைதியும் நிறைந்தனவாம். ஆண்கள் விளையாட்டு இதற்கு முற்றும் மாறானதாம். போட்டி போடும் ஆட்டங்களிலும்

ஆண்களே முந்துகின்றன. கூட்டமாய் ஆடும் சமுதாய ஆட்டங்களிலும் அவைகளே முந்துகின்றன.

விளையாட்டின் வளர்ச்சிமுறை :— குழவிகள் தொடக்கத்தில் தசை இயக்கவடிவமான விளையாட்டில் ஈடுபட்டிருக்கப் பின்னர் வயதேற ஏற விளையாட்டிலேயே கருத்துக்கள் பல தோன்ற விளையாடுவதனையும், அங்குக் கற்பனைத் திறமும் சிறந்து வருவதனையும் காண்கிறோம், முதலில் தன்னந்தனியே விளையாடும் குழவிகள் வயதேற ஏறக் கூட்டமாகக் கூடிக் குலவி ஆடிப்பாடி விளையாடுகின்றன. வெறும் தசையியக்கமாக மட்டும் நில்லாமல் குழவிகளின் விளையாடல்கள் இரண்டாம் ஆண்டிலேயே நாடக இயல்புகளோடும், சாயல்பிடிக்கும் நிலைகளோடும் இயைந்து விளங்கிச் சிறந்து வருகின்றனவாம். தானே விளையாடி, பொருள் கொண்டு விளையாடி, மக்களோடு விளையாட வருவதே குழவிகளது விளையாட்டின் வளர்ச்சி முறையாம். வயது சென்ற பின்னரும் சில குழவிகள் தனியே விளையாடி நிற்க நாம் காண்பது உண்டு. இதனால் மேற்கூறிய உண்மை பொய்த்துப் போவதில்லை. அத்தகைய குழவிகளுக்குப் பிறரோடு விளையாட மனமிருந்தும் தம்முடன் விளையாடக் குழவி ஒன்றும் இல்லாமையாலோ, விளையாடக்கூடாது எனப் பிறரால் தடுக்கப் பட்டதாலோ, பிறரோடு விளையாட வழியின்றி வாடுகின்றன. கற்பனையாகவே தோழர்களைப் படைத்துக்கொண்டு விளையாடி வருவதாக அந்த ஏழைக் குழவிகள் பகற்கனவு காண்கின்றன. ஆதலின், இங்கும் கூட்டமாக ஆடும் மனநிலையே உள்ளது எனல் வேண்டும்.

தோழர்கள் :— விளையாட்டுத் தோழர்களை ஆராய்ந்தால் வயது ஏற ஏற ஆண்குழவிகளுக்கு ஆண்குழவிகளும், பெண்-

குழவிகளுக்குப் பெண்குழவிகளுமே தோழமை பூண்டுவரக் காண்கிறோம். இது சமுதாயப் பழக்க வழக்கங்களுக்கு ஒத்த நிலைமைபோலும். ஒரே வகுப்பில் கற்பாரும், ஏறக்குறைய ஒரேமன வயதுடையாரும், ஒரே உடல் வயதுடையாரும் (Mental age and physical age) அண்டைப் பக்கத்தில் வாழ்வாரும், பள்ளிக்கு ஒருங்கே செல்வாரும், ஒரே வகையான சமுதாய நிலையில் வாழ்வாரும், விளையாட்டுத் தோழர்களாக விளங்குவதிலிருந்து விளையாட்டுத் தோழமையின் அடிப்படை நன்குவிளங்கும்.

விளையாட்டின் இயல்பு மாறுதல் :- விளையாட்டின் இயல்பு ஆண்களுக்கு ஏற்பவும், பெண்களுக்கு ஏற்பவும் பால் வேற்றுமையால் வேறுபட்டு வருவது வெளிப்படை. விளையாட்டுப் பொருள்களைப் பற்றியும், விளையாட்டுப் பொருளே இல்லாமையைப் பற்றியும் கூட, விளையாட்டின் இயல்புமாறும். அகப்படுவது கொண்டுதானே விளையாடவேண்டும். ஒன்றும் இல்லையானால் அந்த நிலைக்கு ஏற்பவே விளையாடவேண்டும். தோழர்கள் இருப்பதனையும் இல்லாமையையும் குறித்தும் விளையாட்டின் இயல்பு மாறும். தோழர் அற்ற குழவி பகற் கனவு காண்பதன்றி என்செய்யக்கூடும்? தோழர் அகப்படினும் அவர்கள் அறிந்த விளையாட்டினும் அவர்கள் விரும்பும் விளையாட்டை அன்றோ ஆடமுடியும்? குழவியின் உடல் வயதிற்கும் மன வயதிற்கும் ஏற்ப விளையாடல்கள் மாறி வருவதனை முன்னரே கண்டோம். காலம் அல்லது பருவத்திற் கேற்பவும், விளையாட்டின் இயல்பு மாறுதல் வேண்டும். வெயிற் காலத்து ஆடும் விளையாட்டுகள் வேறு; மழைக்காலத்தில் ஆடும் விளையாட்டுக்கள் வேறு. மழைக்காலத்தில் வெளியே சென்று ஆடுவது இயலாதன்றோ? உலக நாகரிக வளர்ச்சியில் எந்த எந்தக் காலத்தில் என்ன என்ன மாறுதல் நிகழ்-

கின்றனவோ அந்த அந்தக் காலத்திற்கேற்ப விளையாட்டும் மாறிவரும் அன்றோ? இன்று குழவிகள் புகைவண்டி விளையாட்டும், வானக்கப்பல் விளையாட்டும் விளையாடுவது போல எகிப்து நாட்டுப் பழங்கால நாகரிக மக்களின் குழவிகள் ஆடி இருக்க முடியுமா?

"ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்தம் வாச்சியம்
ஆனந்த மாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே"
(திருமந்திரம். 2725)

---

# 16. பேச்சு

---

## I. பேச்சு

பேச்சும் மொழியும் :— ஒவ்வொருவரும் பேசிவரும் போதும், எழுதிவரும் போதும் பேச்சு நிலை காட்சிப் புலனாகிறது. இந்தப் பேச்சைவிட்டு மொழி எனத்தனியே ஒன்று காட்சிப் பொருளாவது இல்லை. தமிழ்ப் பேச்சையும், தமிழ் எழுத்தையும் விட்டால் தமிழ் என வேறு எது? நாவில் உலவும் மொழியை நாமகள் எனக்கூறியது பொருந்தும். பலநிலைப் பேச்சுக்களிலேயும் பொதுவாகக் காணப்படும் இயல்புகளை ஒன்றாகவைத்துக் கருத்துப் பொருளாகக் காண்பதே மொழியாம். இஃது அறிஞரது அகநிலை வெற்றுப் பொருளாம் (Abstraction). பேச்சு என்பதே புறநிலையில் உருப்படியான

பொருளாம் (Concrete). ஆகவே பேச்சினையே ஆராய-முடியும்.

சொற்களும் எண்ணமும் :— சொற்கள் கொண்டு பேசி வருகின்றோம். சொற்களே அன்றி எண்ணம் எனவேறு ஒன்றும் இல்லை என்பர் வாட்சனும் (Watson), மாக்ஸ் முல்லரும் (Max Muller). பேச்சு ஒருகருவி. தொலைவில் இருப்பாரைக் கூப்பிட்டு அழைக்கின்றதற்குப் பேச்சு உதவுகின்றது. அன்றுடைய வாழ்க்கைத்துறை, அறி-வாராய்ச்சி, உண்மை ஆராய்ச்சி, ஒழுக்க நாட்டம், அழகு ஈடுபாடு, கடவுள் வழிபாடு எனப் பல்கிப் பெருகும் பலவகைத் துறைகளில் எழுகிற மக்கட் செயற்பாடுகள் அனைத்திலும் சொற்கள் பயன்படுகின்றன. நம்கருத்தைத் தெரிவிப்பதும் பேச்சே; பிறர் எண்ணங்களை அறிய உதவுவதும் பேச்சே; எதிர்காலத்திற்குப் பயன் படுமாறு கருத்துக்களை வெளி-யிடுவதும் பேச்சே; நம் அறிவுநிலையும், கற்பனைத்திறமும், சுருக்கமான வழியில் இயங்கி, நிறைந்த பயனை விளைவிக்கச் செய்வதும் பேச்சே; தக்க பொருத்த நிலையை இவ்வனைத்-திற்கும் எழுப்புவது பேச்சேயாம். (1) பேசுவோர், (2) கேட்-போர், (3) பேச்சு எழும் நிலை எனப் பேச்சு மூன்று நிலையாகப் பிரியும். கேட்பானைப் பேச்செழும் நிலையோடு பேசுவோன், தொடர்பு படுத்தி வருவதே பேச்சாம். பேச்சிலே இரண்டு வகையான (தோறணை) தோறணிகளைக் (Patterns) காணலாம். ஒன்று எழுத்தொலிகளின் தோறணி (Phonetic Patterns); மற்றொன்று சொற்களை எடுத்தும் படுத்தும் பேசும் இசைத் தோறணி (Intonational pattern).

•

வெளிப்பாடும் உணர்ச்சியும் :— பேச்சின் இயல்பினைப் பூலரைப் (Buhler) பின்பற்றி முக்கூறாகப் பிரித்துக்

காணலாம். ஒன்று வெளிப்பாடும் உணர்ச்சியுமாகிய (Expression and emotion) இயல்பு. சொற்கள் புறநிலைக் குறிகளாம். அகநிலையைப் புறநிலைக்குறிகள் வழியே வெளிப்படுத்தி வருகின்றோம். பேச்சு உணர்ச்சி நிரம்பியதாம். உணர்ச்சி தோன்றும்போது இயல்பாக வெளிப்படும் நிலையில் குரல்ஒலியாகவும் வெளிப்படுமாம். குழந்தை முதல் முதல் எழுப்பிய ஒலிகள் உணர்ச்சி நிலையைச் சார்ந்தனவே ஆம். பின்னர்ப் பேச்சு எழுகிறது. எவ்வாறு எழுகிறது? குழவி திடீர் என முதியோருடைய உணர்ச்சி நிறைந்த பேச்சுக்களைக் கற்றுக் கொள்கின்றது எனல் வேண்டும்; அல்லது, உணர்ச்சி-நிலை வழியாக எழுந்த ஒலியிலிருந்துமே உணர்ச்சி நிறைந்த பேச்சு முற்றி வளர்கிறது எனல் வேண்டும்.

பதிலீடும் சுட்டும் :- பேச்சின் இரண்டாம் கூறு பதிலீட்டு நிலையும், சுட்டுநிலையுமாகிய இயல்பே ஆம் (Representation and reference). "நாற்காலியை" நேரே காட்டுவதற்குப் பதிலாக "நாற்காலி" என்று சொன்னால் காட்டியது போலவே போதியதாகிறது. சொற்கள் குறிகளேயாம். குறிகள் மூன்று வகையின. கதவில் தீட்டிய எண்களைப்போல நமக்கு ஒரு பொருளைக்காட்டும் குறிகளை அறிகுறிகள் (Suggestive sign) எனலாம். ஆல்ஜீபிரா (Algebra) என வழங்கும் இயல் கணக்கில் விளங்கும் குறியீடுகள் போல வருவன மாற்றுக்குறிகளேயாம் (Substitutive signs). அ + ஆ என்று எழுதினால் அ ஆ என்பன எந்த எண்ணையேனும் குறிக்கலாம். அந்தக் குறிகள் ஒரு பொருளையும் சுட்டுவதில்லை. பதிலீடாக இருக்கின்ற நிலை ஒன்றே அங்கு உண்டு. ஆனால், சொல்லோ பொருளை நினைப்பூட்டும் கருவியாக வழங்கிவரும் இடுகுறியாம் (Expressive sign). எனவே, ஒன்றன் அறிகுறியாகவோ, ஒன்றற்குப் பதிலாகவரும்

மாற்றுக்குறியாகவோ இல்லாமல், ஒரு பொருளை இடுகுறி-யாகச் சுட்டிவருவதே சொல்லாம்.

தூண்டலும் விளக்கமும் :— பேச்சியல்பின் மூன்றும் கூறுகத் தூண்டுநிலையினையும் (Evocation and communication), தெரிவிக்கும் வழியாக விளங்கும் விளக்கு-நிலையினையும் கூறலாம். பேசும்போது கேட்போரிடையே செயலையோ எண்ணத்தையோ உணர்ச்சியினையோ எழுப்புகின்றோம். எதிருள்ளாருடைய எதிரூன்றலை எழுப்புவதோடு, நாம் பேசுகிற பேச்சு நம்காதிலும் விழுவதால், நம்மையும் துலக்கிவருகின்றது. குழவி முதல் முதல் அழும்போது அதனுடைய ஒலி உணர்ச்சியை வெளியிட்டு வருவதாகவே எழுகிறது. பின்னர், ஒலிகள் வேறு வேறாகப் பிரிந்து, வருத்-தத்தைக் குறித்தும் வரும்போது விளக்கு நிலையுடையன ஆகின்றன. இந்த அழுகையினைக் கேட்டுத் தாய் முதலியோர் இயங்குதலின், அதன் தூண்டுதல் நிலையும் புலனாகிறது. குழவியின் அழுகை, எந்த நிலையில் எழுகின்றது என்பதனைப் பிறர்க்கும் சுட்டுகின்றது; குழவிக்கும் சுட்டுகின்றது. இவ்வாறு அழுகையும் கூப்பாடுமாக நின்றனவே பின்னர்ப் பேச்சாக மாறுகின்றன.

## II. ஒலி வளர்ச்சி

மௌனமும் ஒலியும் :- "பேச்சானது பேச அறியாத ஒரு மௌன நிலையில் நின்றும் எழுகின்றது" எனக் கூறுவதற்கு இல்லை. பிறந்ததும் அழுதுகொண்டன்றோ குழவி வாழத் தொடங்குகிறது? மூச்சுவிடும்போது எழுகின்ற அழுகை ɑ என்றும் ɛ என்றும் (International phnoetic script என எல்லா மொழிகளிலும் உள்ள ஒலிகளைப் பொதுப்பட

எழுதிக்காட்டும் முறையைப் பின்பற்றி இக்குறிகளை இங்கு ஆள்கின்றோம்) ஒலிக்கும். எனவே, பிறந்த சில இமைப்பொழுதுகளுக்குள் வருத்தத்தின் அறிகுறியாய் அதன் அழுகை விளங்குகிறது. விருப்பும் வெறுப்பும் அற்ற நொதுமல் நிலையில் மட்டுமே குழவி மௌனமாய் இருக்கக் காண்போம். எனவே, அழுகையாக எழும் வருத்தநிலை ஒருபுறம்; மௌனமாய் விளங்கும் நொதுமல் நிலை ஒருபுறம்; இந்த இரண்டு உணர்ச்சி நிலைகளுக்கும் இடையே குழவி இயங்கிவருகிறது. பின்னே, பசி முதலியவற்றால் எழும் வருத்த நிலையும், பசிமாறுதல் முதலியவற்றால் எழும் ஆறுதல் நிலையும் வெவ்வேறு வகையான ஒலிகளாக விளங்க, நொதுமல் நிலை மௌனமாக விளங்கி நிற்கக் காண்கிறோம்.

முதலுயிர் :— முதலில் எழும் குழவியின் ஒலிகள் உயிர் எழுத்துக்களே ஆம். இவை "நாஒலி" என்றும், "வாய் ஒலி" என்றும், "மூக்கொலி" என்றும், "குரல்வளைஒலி" என்றும் வழங்கும். நம் உடலில் ஒலிக்கும் கருவியின் பல பகுதிகளிலும் இருக்கும் தசைகள் நன்கு சுருங்கப் பழகிய பின்னரே மெய் எழுத்துக்கள் தோன்றுகின்றன. வருத்தத்தை ஒலி வகையாகக் குழவி வெளியிடும்போது வாயைத்திறந்ததும் ɑ என்ற ஒலி எழும். வருத்த நிலையில் வாய் சதுரமாகி நிற்பதோடு அதன் கண்ணைச் சுற்றிய தசைகளும் சுருங்குதலால் "ɑ" என்பது a என மாறுகிறது. நோவு பொறுக்க முடியாத போது இதே ஒலியைக் குழவி எடுத்து ஒலிக்கும்; அப்போது சுருதி (Pitch) உயருதலின் அந்த ஒலி e என்றும் ɛ என்றும் மாறுகிறது. உரக்கக் கதறும்போது இந்த ஒலிகள் மூக்கு ஒலியாக மாறுவதும் இயல்பேயாம். இந்த உயிர் ஒலிகளைக் குழவி தொடர்ந்து ஒலிப்பதில்லை. சிரிப்பதுபோல ஒலித்து வரவே காண்கின்றோம். இவை அனைத்தும் வருத்த நிலையோடு

எழுவனவாம். ஆறுதல் நிலையில் எழுவன வருத்த ஒலிக்குப் பின் எழுவனவே ஆம். ஆறுதல் ஒலிகள் வருத்த ஒலிகளினும் மிக்கு இருப்பினும் தெளிவாக வரையறையோடு விளங்குதலும் இல்லை; மூக்கொலியாக எழுதலும் இல்லை.

வருத்த மெய்யொலி :— வருத்த ஒலியாக முதலில் எழும் மெய் எழுத்துக்கள் "u" என்பதும், "ஐ" என்பதும் ஆம். பின்னர் "l" "ந" என்பன எழுகின்றன. (1) உதட்டுநிலை, (2) நுனிநாவும் வல் அண்ணமும் இயையும் நிலை, (3) அடி நாவும் வல் அண்ணமும் இயையும்நிலை, (4) குரல்வளையில் விளங்கும் குரல் நாண்களின் (Vocal chords) நிலை என்று ஒலிக்கிற அமைப்பில் விளங்கும் நான்கு இடங்களில் எழும் தடையால் அழுகுரலின் ஒலி மாறலாம். இந்த நான்கு தடை இடங்களுக்கு ஏற்ப முறையே (1) u, (2) l, (3) g அல்லது ங, (4) h என்ற ஒலிகள் எழுகின்றன. உயிர் எழுத்தை ஒலிக்கும் போது குழவியின் ஒலிக்கருவி நெகிழ்ந்தோ, சுருங்கியோ. வருமாயின் இந்த மெய்யொலிகள் இடையே உடம்படு மெய்யாக ஒலிக்கின்றனவாம். உயிர் எழுத்து விட்டு விட்டு ஒலிக்கும் போது இடையே மெய் எழுத்து வருவது இயல்பேயாம்.

ஆறுதல் மெய் ஒலி :— ஆறுதல் ஒலிகளாக முதலில் ஒருவன g, x, q, k, r என்பனவாம். இவை அனைத்தும் அடிநா அடியணம் உறத்தோன்றுவனவே ஆம். பாலுண்டு ஆறுதல் பெற்றதும், குழவி புன்னகை புரிந்து கல கல என ஒலிக்கும் போது அந்த ஒலி ஏப்பம் முதலிய போலக் கேட்கும். வாயில் உமிழ் நீர் ஊறி நிற்பதாலும், பாலுண்ணும் போது எழுந்த பழக்கத்தாலும், பால் குடிப்பதேபோலக் குழவி தன் அடிவாயினை இயக்கி நிற்கின்றது. அந்த நிலையில் எழும் ஒலிகளே இவை ஆம். உண்ட ஆறுதலைக் குறிக்கும் ஒலிகள் பின்னே பிறவகை ஆறுதலையும் குறிக்க வருகின்றன.

வாய் முன் ஒலி :— இந்த ஒலிகள் எல்லாம் எழுந்த பின்னர், வேறுசில மெய் எழுத்தொலிகள் தோன்றுகின்றன. இவை வாயின் முன்னிடத்தே தோன்றும் ஒலிகளாகும். இவை வருத்த ஒலிகளாக எழுவது எங்ஙனம்? பசி எடுத்ததும், உண்ணும்போது நிகழும் செய்கைகள் எழுகின்றன. செயற்கை மறிவினைகளைப் பற்றி முன் நாம் கூறியபோது பசி எடுத்ததும் பசியை நீக்கவரும் செயலோடு தொடர்புடையனவற்றை எல்லாம் உணவாக எண்ணி இயங்குகின்ற நிலையைக் கண்டோம். அங்கேபோல இங்கும் பால்வாயில் வருவதற்கு முன்னரே, தாய் வருதலைத் தொலைவில் குழவி கண்டதும் நாவில் நீர் ஊறி உறிஞ்சத் தொடங்குகிறது. இந்த நிலையில் எழும் ஒலிகளே முன்வாய் ஒலிகளாம். இவை பசி நோயின் பொறுக்க முடியாத நிலைக்கு ஏற்ப உரத்து எழுதலின் மூக்-கொலிகளாகவும் மாறுகின்றன. ம், ந் என்ற ஒலிகளே இவ்வாறு பசித்து அழும்போது ஒலிக்கின்றன. முன்வாய் ஒலிகளாம் m, p, b, t, d, n என்ற மெய் எழுத்துக்கள் ஆறுதலைத் தரும் ஒலிகளாகப் பின்னே விளங்குகின்றன. இவை பாலை உறிஞ்சிக் குடிக்கும் இன்பநிலையில் எழுவனவாம். பின் வாய் ஒலிகளாக முன் நாம் கண்டவை வயிறு நிறைந்ததைக் குறித்தது போல, இந்த ஒலிகள் வேறுவகையான ஆறுதல் நிலையைக் குறிக்கின்றன எனக் கொள்ளுதல் வேண்டும். குழந்தை பலவகையான ஒலிகளையும் திருப்பித் திருப்பிக்கூறி அதனை ஒரு விளையாட்டாக அலப்பிக் கொண்டிருக்கும். இவ்வாறாக அலப்பும் பொழுது வருத்த ஒலிகளை அலப்புவதும் விளையாட்டாகவே முடிகிறது. இதனாலேயே வருத்த ஒலிகளாக நாம் விளக்கிய ம், ந், என்பனவும் ஆறுதல் ஒலியாகப் பின்னர் மாறிவிடுகின்றன.

புனிற்றிள ஒலி :— புனிற்றிளங் குழவியின் ஒலிகளை ஆராய்ந்தால் மக்கள் வழங்கும் பத்தொன்பது உயிர் எழுத்துக்

களில் ae, i, e, ʌ என்ற நான்கு உயிர் எழுத்துக்களை மட்டுமே குழவி வழங்குகின்றது எனக் கண்டோம். அவற்றில் முன்-வாய் ஒலிகள் நூற்றுக்கு 92; நடுவாய் ஒலிகள் நூற்றுக்கு 7; பின் வாய் ஒலிகள் நூற்றுக்கு 1. ஆதலின், குழவி நடுவாய் ஒலிகளையும், பின் வாய் ஒலிகளையுமே பெரிதும் கற்றுக் கொள்ளுதல் வேண்டும். ஆங்கிலேயர் வழங்கும் 23 மெய் எழுத்து ஒலிகளில் 12 யே புனிற்றிளங் குழவி அவர்கள் நாட்டிலும் ஒலிக்கின்றதாம். இங்கும் முன்வாய் ஒலிகளே மிக்குத் தோன்றுகின்றனவாம். வாயின் பல பகுதிகளைத் திறம்பட இயக்கி வருவதே இங்குக் காணும் வளர்ச்சியாம். அத்தகைய திறமை நன்கு விளங்கப் பல் முதலிய உறுப்புக்-களும் தோன்றி வருதல் வேண்டும். குழவிகள் அலப்பி மழலைபேசி விளையாடிவர விடுவோமானால் இத்தகைய திறமையை அவை எளிதில் பெற்றுவிடக் காண்போம். வயது ஏற ஏற ஒலிப்பதற்கு வேண்டிய தசைகளின் இயக்கங்களைச் சுட்டிக் காட்டிப் பழக்கவேண்டும். முதலில் உறமியும், கல-கலத்தும், முகம் நெறித்தும் எழும் ஒலிகள் பின்னே ஒவ்வோர் எழுத்தொலியாகத் தனித்தனி நின்று விளங்கி முடிவில் இரட்-டித்துத் தொடர்ந்து வருகின்றன. 71 ஆம் வாரத்திலிருந்து 87 ஆம் வாரத்திற்குள் இத்தகைய இரட்டிப்புக்களின் எண்-ணிக்கை உயர்நிலையை எட்டிவிடுகிறது. 30ஆம் திங்களில் இவை நூற்றுக்கு 89 ஆம். குழவிஒலிகளின் பொருளைச் சிறுகச் சிறுக நாம் உணர வருகின்றோம். 48 ஆம் திங்களில் குழவி ஒலிக்கிற ஒலி அனைத்திற்கும் பொருள் உண்டு. 48 ஆம் வாரத்திலிருந்து சொற்கள் எண்ணிக்கையில் மிக்கு வரு-கின்றன. 102 ஆம் வாரத்திற்குள் வெவ்வேறு சொல்நிலையாக விளங்கும் ஒலித்தொடர்களை, எண்ணினால் அவை சராசரி 32 ஆக விளங்கக் காண்போம். இவற்றில் உள்ள எழுத்தொலிகள் 133 ஆம். இவற்றிலுள்ள உயிரெழுத்து ஒலி 66 ஆம்; மெய்

எழுத்து 48 ஆம்; கூட்டு மெய் எழுத்தொலிகள் 15 ஆம்; கூட்டுயிர் எழுத்துக்களாம் சந்தி அக்கரங்கள் (diphthong) 4 ஆம். எனவே, இரண்டாம் ஆண்டில் உயிர் எழுத்துக்களே மிக்கு ஒலிக்கின்றன. சொற்களில் மெய் எழுத்துக்கள் பின்னும், கூட்டு மெய் எழுத்து ஒலிகள் கடையிலும் வருகின்றன. 5 ஆம் ஆண்டிற்குள் எழுத்தொலிகள் நூற்றுக்கு 88 வீதம் ஒலிக்கக் கூடிய திறமையைக் குழவி பெற்று விடுகிறது.

## III. சொன்மை தெரிதல்

ஒலிகேட்டுத் துலங்கல் :— குழவி பேச்சொலியை ஒலித்து வருவதனைக் கண்டோம். இனி ஒலியினைக் கேட்டுத் துலங்குவது அன்றோ இதனினும் இன்றி அமையாது நாம் அறிய வேண்டுவது? பிறந்த முதல் நாளிலேயே பேரொலி கேட்டு மணிக்கட்டை இயக்கி நிற்கும் குழவியைப் பற்றி வாட்சன் (Watson) கூறியுள்ளார். முதல் திங்களுக்குள்ளேயே குழவி மக்கட் குரலொலி கேட்டதும் தன் அழுகையை நிறுத்திக் கொள்கிறது; மகிழ்ந்து புன்னகை புரிகிறது. மக்கட்குரல் ஒலி இந்தப் புன்னகையை எழுப்புகின்றதா? பால் ஊட்டும் நிலையில் தாய் முதலியோர் கொஞ்சிக் குலாவுதலால் இந்தப் புன்னகை எழுகின்றதா? இந்த இரண்டு நிலையில் எதுதான் உண்மை என அறுதியிட்டுக் கூறுவதற்கு இப்போது இடம் இல்லை. இங்ஙனம் மக்கள் குரல்ஒலி கேட்டுத் துலங்குவது இயற்கைச் செயலின் வளர்ச்சியும் ஆகலாம்; பழக்கத்தால் அமைந்ததும் ஆகலாம்.

இசைமாற்ற உணர்வு:— குழவி பேசிவரும் ஒலிகளும், கேட்டுவரும் பேச்சும் உணர்ச்சி ததும்பும் அனுபவங்களாம்.

எடுத்தும் படுத்தும் பேசிவரும் இசைமாற்றத்தை உணரும் வழியாகவே குழவியின் பேச்சு வளர இடம் ஏற்படுகின்றது எனலாம். இனிமை அல்லது கடுமையாக உணரும் செவிப்புல இயல்பும் பேச்சிலே உண்டு; மரபுவழக்காக வழங்கிவரும் இயல்பும் உண்டு. முதல் திங்களில் குழவி ஒலிகளின் அளவினை மட்டுமே வேறுபடுத்தி உணர்கிறது. இரண்டாம் திங்களில் பேச்சில் எழும் இசைவேறுபாட்டை உணர்ந்து, இசையுள்ள ஒலிகளைக்கேட்டதும் முதலில் வாளாகிடந்தும், பின்னே உடன்பாட்டு வகையாக எதிர்ஊன்றியும் வரப் பழகி விடுகிறது. இசை இல்லாத ஓசையைக்கேட்டு எதிர்மறை-வகையாக இயங்கி நிற்கிறது. முடிவாக, நான்காம் திங்களில் உணர்ச்சி நிலையைப் பேச்சினைக்கொண்டே வேறுபடுத்தி உணர்-கிறது. பின்னர், உணர்ச்சியற்ற பேச்சினைப் பொருட்படுத்து-வது இல்லை.

குரலுணர்வின் வளர்ச்சி:— குழவியின் அழுகை, முதல் பதினைந்து நாட்களில் நூற்றுக்கு 84 ஆக விளங்கக் காண்-கிறோம். ஓராண்டு முடியவரும்போது இந்தக் கணக்கு நூற்றுக்கு 24 ஆகக் குறைந்து போகிறது. வெற்றொலியை அன்றி உணர்ச்சி நிலையையே குழவி வேறுபடுத்தி உணர்ந்து வருவதனை இந்த வளர்ச்சி நன்கு விளக்குகின்றது. முதல் திங்களில் திரை ஒன்று இடையே கிடந்தாலும், மற்றொரு குழவி அழுவது கேட்டுக் குழவி அழும். பின்னரோ திரை இடையே கிடக்குமானால் அழுகை ஒலியை மட்டும் கேட்டு அழுவது இல்லை. உணர்ச்சிநிலை முழுவதனையும் கண்டு துலங்கும் நிலை முற்றியுள்ளமையால், அழையொலிமட்டும் குழவியைத் துலக்கம் உறுமாறு செய்வதில்லை. நிலை முழு-தினையும் அறியாதவாறு திரைதடுத்து நிற்றலின் அழுகை எழுவதில்லை. இரண்டாந் திங்களில் குழவி முதல் முதலில்

முதியோரின் இன்பமான குரல் ஒலியை மட்டும் கேட்டுத் துலங்குகிறது. மூன்றாந் திங்களில் உணர்ச்சி நிலையை வேறுபடுத்தி உணர்கின்றது. நட்பான குரல் கேட்டுத் துலங்கியும், கோபக்குரல் கேட்டு வாளா நின்றும் வருகிறது. ஆறாம் திங்களில் கோபக்குரல் கேட்டாலும், நட்புக்குரல் கேட்டாலும் குழவி சில போது உணர்ச்சி தோன்றாது நொதுமல் நிலையில் கிடக்கின்றது. 10 ஆம் திங்களுக்குப் பிறகு இந்த இருவகையான குரல் ஒலியைக் கேட்டதும் உடன்பாட்டு வகையாகத் துலங்கி வருவதே மிக்குவரக் காண்கிறோம். உணர்ச்சியும், அது எழும் நிலையும் இவ்வாறு நடத்தையை மாற்றி அமைத்து வரக் காண்கிறோம். முதலில் முதியவர்களது குரல்ஒலி, குழவிக்குப் பாலூட்டும்போது கொஞ்சிக் குலவுதலாக எழுகிறது. பின்னே, இயற்கைச்-செயல்நிலை முற்றிவளர்வதால் நட்பாம் குரலும் கோபக்குரலும் வேறுபட்டுத் தோன்றுகின்றன. ஆறாம் திங்களில் குரலிடையே தோன்றும் உணர்ச்சியினும் அந்தப் பேச்சு எழும் சந்தர்ப்பமே சிறந்து குழவியின் மனத்தே பதிந்து விளங்குகிறது. பத்தாம் திங்களில் இதன் முற்றிய நிலையைக் காண்கிறோம்.

மழலையாட்டு :— இன்பநிலை ஒலிகள் இருவகையாக வளர்கின்றன. இந்த ஒலிகள் உணர்ச்சி நிலையை வெளிப்-படுத்தும் முறையில் வளருவது ஒன்று. வேறு ஒரு நோக்கமும் இன்றி அந்த ஒலிகளை ஒலிப்பதனையே விளையாட்டாகக்கொண்டு மகிழும் முறையில் வளருவது மற்றொன்று. இந்த விளை-யாட்டினை அலப்புதல் அல்லது மழலையாட்டு (Babbling) என வழங்கலாம். முன்கூறியதுபோல வருத்த ஒலியும், ஆறுதல் ஒலியுமாக எழுந்த ஒலிகளைக் குழவி நன்கு ஒலிக்கப் பழகுகிறது. இவ்வாறு பழகியபின், குழவி, இன்பம் பொங்கி வழிய நிற்கும் நிலையில், பலவகையாக இயங்கி நிற்பதுபோல,

பழகிய பலவகை ஒலிகளையும் எழுப்பி நின்று விளையாடுகிறது. இரண்டாம் திங்களில் தனித்தனி ஒலிகளையே திருப்பித் திருப்பி ஒலித்து நிற்கின்றது. பின்னர், மூன்றும் திங்களில் ஒலிக்கோவைகளைப் பன்னிப் பன்னிக் கூறி மகிழ்கிறது. முன்னர், இன்ப அனுபவமாகவும் துன்ப அனுபவமாகவும் எழுந்தவற்றோடு சில ஒலிகள் விளங்கி இருக்கும். அந்த ஒலிகளைப் பன்னிப் பன்னிக் கூறும்போது பழைய அனுபவம் குழந்தையின் மனக்கண் எதிரே நிலைபெற்று விளங்குகிறது. அவ்வாறு தம் அனுபவத்தினை இந்த ஒலிகளின் வழியே நிலைபெறச் செய்யக்கூடியதோர் ஆற்றல் தன்னிடையே விளங்குவதனைக் குழவி உணர்கிறது.

சாயலாட்டு :— குழவி பெரியோர் பேச்சைக் கேட்டுச் சாயல் பிடிப்பதுபோலப் பேசப் பழகுகிறது. பிறந்த ஆண்டில் முதல் நான்கு திங்களில் உணர்ச்சி ததும்பும் மக்கட்குரலைக் கேட்டதும் அப்படியே ஒலிப்பது இல்லை. தான் மழலை (babble) ஒலிக்கப்பழகிய ஒலிகளையே எழுப்புகிறது. பின் வரும் நான்கு திங்களில் தன் செவிப்புலனாகும் ஒலிகளின் பொருளை அந்த அந்த நிலைக்கேற்ப உணர்ந்து துலங்குகிறது. இதனால், பொருளின்றி வெறுமென ஒலித்துக்கொண்டே இருப்பது குறைந்துபோகிறது. இங்கெல்லாம் ஒலிகளின் பொருளாகத் தோன்றுவது உணர்ச்சியேயாம். இனிமை இன்னாமை என்பவையே முதலில் விளங்கும். குழவியின் ஒலியும், இந்த நிலையில், இதற்கேற்ப அதன் உணர்ச்சியை விளக்கும் அளவிலேயே அமையக்காண்கிறோம். குழவி, ஒலி எழும் நிலையை உணராமற்போனால், ஒலி ஒருபயனையும் விளைவிப்பதில்லை. திரை இடையே நின்று மறைத்தால், மற்றொரு குழவி அழுவதனைக் கேட்டாலும், குழவி அழுவதில்லை என்று கண்டோம் அன்றோ? ஓராம்ஆண்டின் கடைசி

நான்கு திங்களில், சில சொற்களைப் பேசினால் சில பயன்கள் விளைவதனைக் குழவி உணர்கின்றது. தான் ஒலிக்கப் பழகிய சொற்களை அவ்வாறு பயன் படுத்துகிறது. எடுத்தல் படுத்தல் முதலிய இசை வேற்றுமையையும் சாயல் பிடிக்கின்றது (Imitates). புதிய ஒலிக்கோவைகளையும் பேசப்பழகுகின்றது. ஒலிகளைக் கேட்டவுடன் பொருளற்ற முறையில் பன்னிப் பன்னிக் கூறத் தொடங்குகிறது.

சொல் உணர்வு:- உணர்ச்சியை மட்டுமன்றி மொழியை உணர வருகின்றநிலை ஆறும் மாதத்திற்குப் பின்னரே தோன்று-கிறது. சொல்லைப் பயன் படுத்துவதற்கு முன்னரே குழவி சொல்லின் பொருளை உணர்கின்றது. ஆதலின் இவை, இருவேறு நிலைகளாம். இந்தப்பருவத்தில் தான் குழவி நோக்கமுடைய செயல்களைத் தட்டுத் தடுமாறி அன்றி, விருப்-பப்படி முயன்று செய்யப் பழகிச் செய்து முடிக்கின்றது. பொருளைக் கண்டால் கையை நீட்டித் தடவிப் பிடித்துத் தன் ஆசையை வெளிப்படுத்திக் குழவி அதுகொண்டு விளையாட அதனை நோக்கிச் செல்கின்றது. முன்னெல்லாம் வெறுப்பும் விருப்புமாம் உணர்ச்சியை வெளிப்படுத்துவதோடு குழவி நின்றது. சொற்களைப் பிறர்சொல்லக் கேட்டுவந்ததன் பயனாக அச்சொல்லே இப்போது நோக்கமுடையதொரு செயலைத்தூண்டுகிறது. தானாகக் குழவி சிலவற்றினைச் செய்து வருவதோடு சுற்றி நிற்போரும் அவ்வாறு செய்யப் பழக்க வருகின்றனர். அவர்கள் தங்களுடைய சொற்களைக்கேட்டே குழவி இயங்குமாறு பழக்குகின்றனர். இங்கு அன்போடு குழவியைப் பாராட்டிக்கூறும் சொற்களே பயனை விளைவிக்-கின்றன. உணர்ச்சி நிலையே இங்கும் அடிப்படை என்பதனை மறுத்தலாகாது. பேச்சில், எடுத்தும் படுத்தும் கூறும் இசையின் தோறணியை வேறுபடுத்தியே குழவி நாம் கூறும் சொல்லை

முதல் முதல் உணரத் தொடங்குகிறது. "மம்மு" என்ற உடன், அச்சொல்லின் இசைத்தோறணி, உண்ணும் நிலையைக் குழவியின் மனத்தெதிரே கொண்டுவருவதோடு, அந்த நிலையின் ஒலிக்குறிப்பாகி உணர்ச்சியினையும் விளைவிக்கின்றது. எனவே, இசைத்தோறணியும், பேச்செழும் நிலையுமே குழவியை இயங்கவைக்கின்றன என ஒருவகையால் கூறலாம். இசைத் தோறணியே அன்றி, எழுத்தொலியின் தோறணியும் உண்டு. எழுத்தொலிகள் பலவகையாகக் கோவைபெற்றுப் பொலிகின்ற அமைப்புகளும் மனத்திற்படியும். இவற்றைக் குழவி எவ்வாறு உணர்கின்றது? பெரியோர்கள் குழவியின் எதிரே அநுகரண ஓசைகளைக் கூறுகிறார்கள். அங்கே இசைத்தோறணியே உண்டு. பின், அவர்கள் அநுகரண ஓசை அல்லாதவற்றையும் அநு-கரண ஓசையைப் போலவே குழவியின் எதிர் ஒலிக்கின்றனர். அங்கு எழுத்தின் ஒலியமைப்பே இன்றியமையாத சிறப்பினது என வழக்கத்தில் குழவி அறிகிறது. இந்த இரண்டும் ஒன்றாகி விடுவதால், குழவி இசைத்தோறணியே இல்லாதபோதும், வெறும் எழுத்துத் தோறணியை உணர்ந்தே இயங்குகிறது. "மம்மு" என்று தாய் கூறியதும் வாயைத்திறப்பதுமட்டும் அன்றித் தானும் அந்த நிலையில் "மம்மு" என்று உடன் சொல்லுவதால், அப்பொருளைச் சுட்டுவதாக, அச்சொல்லை, வாயைத்திறக்கும் செய்கையோடு ஒன்று படுத்தி, ஒலித்தறிந்து விளக்கும் நிலை எழுகிறது.

## VI. குழவிப் பேச்சு.

முதலாண்டைய சொற்கள் :- வடிவாலும் பொருளாலும் மாபினுக்கு ஒத்த சொல் முதல் முதல் குழவியின் வாயி-லிருந்தும் எழுந்து ஒளிர்வது 10 ஆம் திங்களிலிருந்து முதலாண்டு முடிவதற்குள்ளேயாம். அந்தச் சொற்களை

ஆராய்ந்தால் இவற்றில் p, b, m, w, f, v, t, d, n என்ற எழுத்துக்கள் மிக்குவரக் காண்கிறோம். இவற்றில் பெரும் பான்மைய ஓரலகாகவோ (One syllable) ஓரலகு இரட்டித்து வருவனவாகவோ தோன்றுகின்றன. இந்தச் சொற்கள் சுட்டும் பொருள்களும் குழவியைச் சுற்றிநின்று அதற்கு மகிழ்ச்சி தரும் தாய், தந்தை, செவிலி, குழவி, பாயல், உணவு, விளையாட்டுப் பொருள்கள் முதலியனவாம். அம்மா, அப்பா, பாப்பா முதலிய சொற்கள் எல்லாமொழி-களிலும் ஏறக்குறைய ஒரே பொருளுடையவாக இருப்பது எங்ஙனம்? முதல் முதல் எழும் சொற்கள் அனைத்தும் முன்-வாய் ஒலியால் அமைந்தன என்பதும், இவற்றில் மகரம் பெற்ற வடிவம் தாயையும், p, b, t, d என்றவற்றில் ஒன்றைப் பெற்ற வடிவம் தந்தையையும் குறிக்கும் என்பதும் வெளிப்-படை. இவற்றையே குழவியைச் சுற்றியுள்ளோர் எந்நாட்டிலும் வழங்கிவருவது ஏன்? மகரம் போன்ற மூக்கொலிகளைக் குழவி வருத்தமுற்றபோது மட்டுமே ஒலிக்கின்றது எனவும், மூக்கொலி அல்லாதவற்றை ஆறுதலுற்றபோது ஒலிக்கின்றது எனவும் முன்னரே கண்டோம். ஆதலின், அவை அதற்கேற்பத் துன்பப் பொருளையும் இன்பப் பொருளையும் சுட்டுமானால் அது இயல்பேயாம். ஆனால், மகரம் குழவி மிகமிக விரும்பி இன்ப-மெனக் கொள்ளும் தாயினைச் சுட்டுவது எங்ஙனம் பொருந்தும்? பசி எடுத்ததும் குழவி வருத்தத்தாற் புலம்பு-கிறது; "மம" என அழுகிறது. இதனைக் கேட்டதும் தாய் ஓடிவந்து பாலூட்டி ஆறுதல் அளிக்கின்றாள். தாயும் "மம" என்ற அழுகை தன்னை அழைக்கும் அறிகுறியே எனப் பொருள்பண்ணிக் கொள்ளுகின்றாள். வருத்தமும், ஆறுதலு-மாக, இந்த முழுநிலையையும், தாயோடு பிணைத்தே குழவி உணர்ந்து உணர்ச்சி பொங்கிநிற்கிறது. இவ்வாறு முழுநிலை-யாக உருப்பெற்ற மனநிலையில் "ம" என்று தொடங்குகிற

அந்த முழுநிலை முழுவதும் "ம" என்பதால் நினைப்பூட்டப் பெற்று, அந்த நிலையின் உயர்நிலையாம் தாயின் பெயராக அமைகிறது. பெற்றோர் அந்த மகர ஒலியை இந்தப்பொருளில் ஒலிப்பதும், அதனைக் குழவி அதேநிலையில் சாயல்பிடிப்பதும் இச்சொல் இப்பொருளில் நிலைபெறுவதற்கு உதவுகின்றன. இத்தகைய சொற்கள் தலைமுறை தலைமுறையாக இந்தப் பொருள்களில் வழங்கி வருவதும் இந்த நிலையை வளர்க்கக் காண்கிறோம்.

விளையாட்டுப் பொருள் :— விளையாட்டுப் பொருள்களைப் பற்றிய பெயர்களை ஆராயும்போது குழவியினைச் சுற்றி இருப்பாரின் தொடர்பால் எழும் விளைவினை நன்கு காண்கிறோம். அனுகரணச் சொற்களும், ஒலிக்குறிப்பான சொற்களும் அந்த அந்த நிலைக்கேற்ப உணர்ச்சி ததும்பி நிற்கின்றன; ஆதலின், அந்த அந்த நிலையின் பெயராக வளரும் இயல்புடையனவாம். பெரியோர்கள் அத்தகைய சொற்களைச் சொல்லிவரும்போது குழவியும் உடன் சொல்லிப் பழகுகிறது. "கிலி கிலி," என்ற விளையாட்டுப் பொருளை ஆட்டிக்கொண்டே, தாய், "இதோ கிலிகிலி" என்று குழவியிடம் காட்டுகின்றாள். அந்த எழுத்தொலி அவ்விளையாட்டுப் பொருளின் ஒலியோடு ஒத்துக் குழவியின் மனத்தே வியப்பும் இன்பமும் பொங்கும் நிலையில் நன்கு பதிகின்றது. தாய் தந்த கிலிகிலியைத் தானும் எடுத்து ஆட்டிவரக் குழவி பழகுகிறது. எனவே, உணர்ச்சியும், சாயல் பிடித்தலும், பழக்கமும் இச்சொற்களை இப்பொருளில் வழங்கிவருமாறு தூண்டி நிலைபெறச் செய்கின்றன எனலாம்.

பேச்சு ஒரு நடத்தை :— முதலிரண்டு ஆண்டுகளில் குழவியின் நடத்தை பலவற்றிலும், பேச்சு ஒரு சிறந்த இடத்தைப் பெறுகின்றது. முதலில் குழவி ஒன்றனைச்

செய்யவோ செய்யாது விடவோ வரப் பழக்கும் பெற்றோர்கள் தம்கையால் உதவியும் தடுத்தும் வருகின்றனர். நாள் ஏற ஏறச் செய்ய விரும்புவனவற்றைச் செய்யுமாறு இனிய சொற்களால் ஊக்கியும், தடுக்க விரும்புவனவற்றைச் "செய்யாதே" எனக் கடிந்து கூறித் தடுத்தும் வருகின்றனர். இவ்வாறு பல பல சொற்களை ஊக்கும் கருவியாகவும், தடுக்கும் கருவியாகவும் வழங்குவது கண்டு பழகும் குழவியும் சொல்லை இவ்வாறு கருவியாகக் கொண்டு பிறர் கருத்தைக் கவர்கிறது; பிறர் தன்னுடன் இருந்து கொஞ்சி விளையாடுமாறு செய்கிறது; வருத்தம் நீங்கி இன்புறுகிறது. சொல்லைக் கையாளும் கருவி-யாகக் கொண்டு தனக்கு வேண்டியதனைப் பிறரைக்கொண்டு செய்வித்துக் கொள்கிறது. "அம்மா" என்ற சொல் வருத்தக் குறிப்புடன் எடுத்தும் படுத்தும் சொல்லப் பெறுமானல் "வயிறு நோகிறது" என்ற பொருளைத் தரலாம். அது கேட்டுத் தாய் வந்து உதவி ஆறுதல் அளிக்கலாம். "கிலிகிலி" என்று குழவி கூறுவது அந்த நிலையில் "அம்மா கிலிகிலியை எடுத்துத் தா" என்ற பொருளை விளக்கலாம். அதனை உணர்ந்து தாய் கிலிகிலியை எடுத்துத்தரலாம். முன்னையது சொல்லின் வெளியீட்டுநிலை; பின்னையது செயலுறுத்தும் நிலை. முதலில் இத்தகைய நிலைகளில் உணர்ச்சியும் செயனிலையுமே விளங்-கினாலும், நாளடைவில் பொருளைச் சுட்டும் நிலையும் எழுந்து வளர்ந்து முற்றுகிறது. "கிலிகிலி" என்ற ஒலிக்கோவை முதலில் அப்பொருளை ஆட்டி மகிழும் நிலையில் எழுகின்ற உணர்ச்சியையும், ஆட்டும்செயலையும்உணர்த்தினாலும், பின்னே புறநிலையைச் சுட்டத்தொடங்கி அந்தப் பொருளின் பெயராக மட்டும் விளங்குவதனையும் காண்கிறோம்.

பொருள் உணர்தல் :- குழவியினிடத்தே எழுகின்ற பல ஒலிகள் நாளடைவில் உணர்ச்சியையும், ஒரு செய்தியையும்

சுட்டிக் கூறுவனவாக அமைவதோடு, கேள்வியாகவும் விளங்குகின்றன; பிறபொருளைக் குறிப்பனவாகவும் விளங்குகின்றன. குழவி பிறரைத் தன்வயப்படுத்துவதனையே நோக்கமாகக் கொண்டிருத்தலின், அவர்கள் வழங்கும் சொற்களை உற்று நோக்கி அறிந்து தானும் அவற்றை வழங்கி வருகிறது எனக் கண்டோம். "அம்ம" என்பது பசியும், பசியாறும் நிலையுமாக உணரப்பெறுகிறது. அங்கே தாயினைக் குழவி தனியே பிரித்து அறிவது இல்லை. பல பல நிலையிலும் தாய் வரும்போதெல்லாம் "அம்மா" என்ற சொல்லை மற்றவர்கள் வழங்கிவரக் காண்கிறது. அந்த நிலைகளை எல்லாம் குழவி "அம்மா" எனவே வழங்குகிறது. பின்னர் அந்த நிலைகள் அனைத்திலும் பொதுவாக அமைந்த தாயைச்சுட்டி அச்சொல் வழங்கத் தொடங்குகிறது. அந்த நிலையில் பிறர் வழங்குவது மட்டும் அன்றித் தானும் அச்சொல்லை வழங்குவதால் பிறர் வழங்கும் சொல்லின் செவிப்புலனும், நேரே தாயைக்காணும் கட்புலனும், தான் ஒலிக்க முயலும்போது எழும் இயக்கப் புலனும், தன் ஒலியின் செவிப்புலனும் ஒருங்கியைந்து இந்தப் பொருளை உடலில் ஊறச் செய்கின்றன எனலாம்.

குழவிப் பேச்சின் இயல்பு :- இவ்வாறு கற்றுவரும்போது முதலில் முன் வாயொலிகளாக அமைந்த அதன்பேச்சு இரண்டாம் ஆண்டின் முடிவிற்குள் முதியோர் பேச்சோடு ஒத்து விளங்கக் காண்கிறோம். பெரியோர் கூறும் சொற்களைக் குழவி ஒலித்து வரும்போது, குழவி, தான் அதற்குமுன் அறிந்த ஒலிகள் மட்டும் வருமாறு சொற்களை மாற்றிக்கொள்கிறது. பெரியோர்களை முழுநிலையாகவைத்து உணர்ந்து குழவி பேச வரும்போது "ராமா" என்பதனை "ஆமா" என்று ஒலிக்கக் காண்கிறோம். இங்கே ரகரத்தைத் தொகுத்தது போலத் தானறியாத ஒலிகளை அடியோடு தொக்கி நிற்கச்

செய்து பேசுதல் ஒரு மாற்றமாம். ஒலிக்க வாராதபோது ககரத்தை ஒலிக்கும். "தாதா" என்றால் "காகா" என்று ஒலிக்கும். இவ்வாறு மிகப் பழகாத தகரம் போன்ற ஒலிகளைக் ககரம்போல மிகப்பழகிய ஒலிகளாக மாற்றுவது இரண்டாவது வகைமாற்றமாகும். "பாப்பாச்சி" "அப்பாச்சி"-"புவ்வாச்சி" என எல்லாச் சொற்களையும் ஒரே முடிவுடையனவாக மாற்றுதல் மூன்றாவது வகைமாற்றமாம். "கூகூவண்டி," "கிலிகிலி," "குடுகுடு" என இரட்டைக் கிளவியாகவும் அடுக்காகவும் முதியோர் சொற்களை மாற்றுவது குழவிகள் அமைக்கும் நான்காவது வகைமாற்றமாம்.

பொதுநிலை ஒப்புமை :— குழவியின் பேச்சும், பெரியோரின் பேச்சும் முழுநிலையாகப் பார்த்தால் ஒன்று போலவே தோன்றும். அந்தமொழியை அறியாதவர்கள் நோக்கினால் வேற்றுமை காண்பது அருமை. மிகமிகக் குடிவெறி ஏறியவர்கள் குழறி மொழியும் பேச்சைக் கேட்டுள்ளோம். குடியனும் ஒவ்வொரு சொல்லையும் ஒலித்தே வருகின்றான். அவன் பேச்சுக்கும், குடியாதவன் பேச்சுக்கும் உள்ள வேற்றுமையே குழவியின் பேச்சுக்கும், பெரியவர்கள் பேச்சுக்கும் உண்டு எனலாம். குழவியின் பேச்சினை மழலைப் பேச்செனப் பாவாணர் வழங்குகின்றனர். பெரியோர்கள் பேசும் சொற்களோடு இச்சொற்கள் முழுநிலையில் ஒற்றுமைபெற்றுத் தோன்றினாலும் சொற்களின் எழுத்துக்களை ஆராய்ந்தால் வேற்றுமை காண்கிறோம். எனவே, சொல்லொலிகள் எழுப்புவது பொதுநிலை உணர்வே அன்றிச் சிறப்புநிலை உணர்வு அன்று எனலாம். பெரியோர்களுக்குச் சிலபோது மூளைக் கோளாறு எழுவதால் இந்தச் சிறப்புநிலை கெடுகிறது. அப்போது பொதுநிலை உணர்வு மட்டுமே விளங்கும். அந்த நிலையில் முதியோர் பேசும் பேச்சு மழலைப் பேச்சேயாம்.

எனவே, பொதுநிலை உணர்வே முன் எழுவது; பின்னரே குழவியிடம் சிறப்புநிலை உணர்வு எழுகின்றது என்பதாயிற்று.

## V. பொருண்மை தெரிதல்.

பொருள் எல்லை விரிதல் :- தொல்காப்பியனார் "சொன்மை தெரிதல்," "பொருண்மை தெரிதல்" என இரண்டு நிலைகளைக் கூறுகின்றார். இதுவரையும் சொன்மை தெரிதலையே ஆராய்ந்தோம். ஒலிகளின் பொருள் நிலையும் தோன்றினாலன்றிப் பேச்சென்பதற்கு இடம் ஏது? முதலில் குழவியின் ஒலியானது உணர்ச்சியின் வெவ்வேறு நிலையைச்சுட்டி வருகிறது. அதே ஒலி உணர்ச்சி தோன்றும் நிலை முழுதினையும் ஒருங்கு சுட்டி வருவதாக வளர்கின்றது. சில சில நாட்கள் ஆனபின் குழவி பெரியோர்களது சொல்லையே தான் முன் ஒலித்துவந்த இயற்கை ஒலிகட்குப் பதிலாகப் பயன்படுத்துகிறது. உணர்ச்சியோடு சுட்டிய நிலையையே இப்போது குழவி சொல்கொண்டு சுட்டுகின்றது. பூவைக்கண்டதும் குழவிக்கு இன்பம்பொங்குகிறது. "ஊ ஊ" என இயற்கை ஒலியை எழுப்பித் தன் உணர்ச்சியை வெளிப்படுத்துகிறது. பின்னர்ப் பூ எனக் கூறும்போது "பூ" வெறுங்காட்சிப் பொருளாக மட்டும் நில்லாமல், முகரக்கூடிய பொருளாகவும், மெத்தெனத் தொட்டுப்பார்த்துக் கையில் அழகாகப் பிடிக்கக்கூடிய பொருளாகவும் வளர்கிறது. பொருள்களிடையே "பூ" என்ற போதெல்லாம் பல பூக்களைக் காணும்போது, புறநிலை ஒப்புமையை முழுநிலை ஒப்புமையாகக் குழவி உணர்கிறது. அங்கு ஒரே வகையான உணர்ச்சியை எழுப்பும் ஒப்புமை உண்டு. குழவியின் நிலையில், விளையாட்டு முதலிய ஒரே வகையான செயல்களை எழுப்பும் ஒப்புமையும் உண்டு. அவ்வாறே இச்சொற்கள் பிறர் நிலையிலும் ஒரே

வகையான செயல்களை எழுப்பும் ஒப்புமையும் உண்டு. இவை அனைத்தும் குழவி அறிந்த சொல்லின் பொருள் எல்லையை அகல விரியச்செய்து வளர்க்கின்றன எனலாம்.

செயல் விளைவு :— இவை அனைத்தும் சொல் எழும் நிலையை விளக்குகின்றனவே அன்றிச் சொல்லின் இயங்கு நிலையை விளக்கவில்லை எனலாம். "பூ எங்கே"? என்றதும் குழவி வாளா இருப்பதில்லை; எடுக்க ஓடுகிறது. சுற்றிப்பார்க்-கின்றது. எனவே இவ்வாறு, பூவினைப்பற்றி எழும் சில செயல்களை அச்சொற்கள் விளைவிக்கின்றன என்பதாயிற்று. சொல் இல்லையானாலும் இத்தகைய தொடர்புபட்ட செயல்கள் தோன்றலாம். மணி ஒலியைக்கேட்டு, குழவி மணியைத் தேடவில்லையா ? ஆதலால், இதற்கும் மேலாகச் சொல்லால் விளங்குவது என்னை ? "பூ" என்ற முன்னைய நிலைக்கும், "பூ" என்ற இப்போதைய நிலைக்கும் உள்ள ஒப்புமையைக் குழவி நன்கு அறியுமாறு செய்வதே, பேச்சானது விளை-விக்கும் சிறப்புநிலையாம்.

இயற்கை ஒலியும் சொல் ஒலியும் :— குழவி சொல்லினை மக்கட் கூட்டத்திடையே வழங்கும் கருவியாகக் கொண்டு வழங்கிவருதலைக் கண்டோம். குழவி முதல் முதல் தானே அழுதும் நகைத்தும் எழுப்பும் இயற்கை ஒலிக்கும் பின்னர்ப் பேச்சுவகையாக எழுப்பும் சொல் ஒலிக்கும் உள்ள வேற்றுமை என்ன? இயற்கை ஒலி குழவிக்கே உரியது. சொல்லோ பிறரிடம் கேட்டுக் கற்றது; ஆதலின் பிறர்தந்த பொருளாகும். முன்னையது சுயார்ச்சிதம்; பின்னையது பிதுரார்ச்சிதம். இயற்கை ஒலி பல நிலைக்கும் பயன்படுவது. பொருட்டெளிவு மிகுதியும் அங்கு இல்லை; பொதுப் பொருண்மையாக உணர்ச்சியை மட்டுமே அது விளக்குவது. சொல்லொலியோ

குறிப்பிட்டதொரு நிலைக்கு மட்டும் பயன்படுவது; சிறப்புப் பொருளைச் சுட்டுவது. அது அழுவது, பசி, நோய், தடை முதலிய எத்தனையோ நிலையைச்சுட்டும். "பூ" என்ற சொல் ஒரு நிலையை மட்டுமே சுட்டும். இவ்வாறு குறிப்பிட்ட நிலையைச் சுட்டும் "பூ" என்பது பல வகை நிலைகளில் பல வகைப் பூக்களைச் சுட்டுமாறு அதன் பொருள் நிலை பரந்து விரிவது எங்ஙனம் கூடும்? குழவி முதலில் செயற்கை ஒலி-களாம் சொற்களை வழங்கும்போது அவற்றையும் தான் அறிந்த இயற்கை ஒலிகளைப்போலவே கருதுகிறது. உணர்ச்சி-நிலையில் ஒப்புமையுடைய இடங்களில் எல்லாம் இயற்கை ஒலியைப் பயன் படுத்தியது போலவே செயற்கை ஒலிகளாம் சொற்களையும் உணர்ச்சி நிலையில் ஒப்புமையுடைய இடங்களில் எல்லாம் பயன்படுத்துகிறது. சொல்லைக் கருவியாகக் கண்டதும் பயன்படக்கூடிய நிலையில் எல்லாம் பயன்படுத்துவது இயல்பே அன்றோ? தன் உணர்ச்சி நிலையைச் சொல் வெளி-யிட்டுவரும் சொல்லின் வெளியீட்டுப் பண்பைக் குழவி உணர்ந்து "அப்பா", "அப்பா" என்று கூறிக்களிக்கின்றது. தகப்பனுர் படத்தை "அப்பா" என்று சொல்லக் கற்றுக் கொண்ட குழவி பொதுவாக எந்த மனிதன் படத்தைக் கண்டாலும் "அப்பா" எனக் கூறித் தாயினை நாணித் தலை குனியச் செய்கின்றது. தந்தை "படாசு" தருவதாகக் கூறித் தனக்கு வந்த திருமண அழைப்பின் உறையை முழுதும் ஒட்டி ஒரு மூலையில் மட்டும் சிறிது துளையாகக் கிழித்து அதற்குள் காற்றை ஊதிப், பெருக்கிப் பின் ஓர் கையிடை வைத்து மற்றொரு கையால் "பட்" என அறைந்து வேடிக்கை காட்டு-கின்றார். பின்னர் ஓர் உறையைக் கண்டதும் குழவி "படாசு" என்கிறது. "படாசு" என்ற சொல்லை இயக்கும் கருவியாகக் கொள்கிறது. இங்குப் படாசு என்பதன் பொருள் "முன் செய்தவாறு "பட்" என அடியும்" என்பதேயாம்.

## VI. பொதுவும் சிறப்பும்

மரபு :- "இடுகுறி காரணப் பெயர் பொதுச் சிறப்பின" என்பது நன்னூல். பலா, மா முதலியன சிறப்பான மரவகை-களைக் குறிப்பதால் சிறப்புப் பெயர்களாம். மரம் என்பது போன்றவை பலா, மா முதலியன அனைத்திற்கும் பொதுவான பெயராதலின் பொதுப் பெயராகும். இவ்வாறு பொதுவும் சிறப்புமாகப் பிரியும் பிரிவு நம் வாழ்க்கையையும், நம் தேவையையும் பொறுத்துள்ளதாம். மரத்தை ஒன்றாக வைத்துப் பொதுவாகக் கருதுவதற்கு நம் நாகரிகத்தில் ஒரு கட்டாயம் உண்டு. நம் அரசியலில் காட்டினைக் காக்கும் துறை ஒன்று உண்டன்றோ? சில மக்களிடையே இத்தகைய தேவை இல்லாமையால் வாழை, மா முதலிய சிறப்புப் பெயர்கள் உண்டே அன்றி மரம் என்ற பொதுப் பெயர் இல்லையாம். அங்ஙனமே, குழவியினிடமும் அதன் தேவைக்கு ஏற்பச் சிறப்புச் சொல்லும் பொதுச் சொல்லுமாகச் சொற்கள் பொருள் பட்டுவரும். இதனாலே குழவி வழக்கும், பெரியோர் வழக்கும் முதலில் மாறுகின்றன. "அப்பா" என்ற சிறப்புப் பெயர் "மனிதன்" என்ற பொருளில் பொதுப் பெயராகக் குழவி வழங்கியதனை மேலே கண்டோம். இதுகண்டு பெரியோர் நகைத்தும் திருத்தியும் தம் வழக்கை வற்புறுத்தி வருகின்றனர். குழவியும் தன் வழக்கின்படி பேசினால் தான் எண்ணியதனைப் பெறமுடிவதில்லை. ஆதலினால், தன் வழக்கினை வற்புறுத்த இடம் இன்றி விட்டொழித்துப் பெரியோர் வழக்கினைப் பின்பற்றுகின்றது.

இதனாலேயே

"எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே" — என்று

பவணந்தியார் கூறவந்தார்.

இச்சா ஞான க்ரியா சக்திகள் :— குழவியின் எதிரே தோன்றுபவற்றினிடையே புறத்தோற்ற (Phenomenon) இயல்பும், உணர்ச்சியை எழுப்பும் அகநிலை இயலபும், செயற்படுத்தும் முயற்சிநிலை இயல்பும் தோன்றுகின்றன. ஞான சக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி என்ற மூன்றும் இவ்வாறு விளங்குகின்றன எனலாம். சொற்களைக் கருவியாகப் பயன்படுத்தவேண்டிய நிலையும் எழுகின்றது. பசித்த நிலையில் "பால்" எனலாம். சுற்றியுள்ளோர் புதிய புதிய சொற்களைக் கற்றுக்கொடுக்கின்றனர். இவ்வாறு சொற்களைத் தந்து, குழவி அவற்றைச் சரிவர வழங்கினால் புகழ்ந்தும், பிறழ வழங்கினால் இகழ்ந்தும் வருகின்றனர். சுற்றுப்புறச் சூழலிடையே இவ்வாறு குழவியைத் தூண்டியும் தாக்கியும் வருகிற நிலையினையும் காண்கிறோம். அத்தகைய பலவகை நிலைகளுக்கிடையே தான் குழவி பேசிப் பழகுகின்றது. தண்ணீர், தண்ணீர்க் கிண்ணம், குடிக்குந்தொழில், குடிப்போர், நீரின் தன்மை, சுவை இவை அனைத்தும் தண்ணீரைக் குடிக்கும் நிலையில் விளங்குகின்றன. "தண்ணீர்" என்ற பேச்சு அப்போது எழுகின்றது. தண்ணீரின் புறத்தோற்றமாம் உணர்வுநிலை, குளிர்ச்சி இன்பமாம் உணர்ச்சி நிலை, குடிக்கும் தொழிலாம் செயனிலை என்ற மூன்றும் முழுநிலையாகத் தண்ணீர் என்ற சொல்லின் பொருளாக முதலில் குழவியின் மனத்தே பதிந்திருக்கும். பின்னர்க் குழவி தண்ணீரைக்காட்டி, "ஈது என்ன" எனக் கேட்கும்போது, அவ்வாறு முழுநிலையாக அமைந்ததில் ஒன்றினை வேறு பிரித்தே கேட்கிறது. "தண்ணீர்" எனப் பெரியோர் விடைகூறக்கேட்டதும் அந்தப் பிரிநிலையின்பெயரே தண்ணீர் எனக் கற்றுக் கொள்ளுகிறது. தானும் அவ்வாறு அச்சொல்லை அப்பொருளில் வழங்கிப் பயனடைகிறது. குறுகிவரையறைபட்ட பொருளைக் குறிக்கும் சொல்லாற்றல் இவ்வாறு விளங்கித் தெளிவடைகிறது எனலாம். அவ்வாறே

உணர்ச்சி நிலையும், "அப்பா" என்பது தகப்பனும், பிறமனிதருமாக வேறுபடுவதுபோல, வேறுபட்டுப்பிரிநிலையாகிச்சிறப்பு நிலைபெற்று வரக் காணகிறோம். இவ்வாறு தொழில் வகையாலும் சிறப்புநிலையுற்று விளங்கிவரக் காண்கிறோம். சொல்லைக் கருவியாக வழங்கிவரும்போது கருவிநிலைவகையாலும் சிறப்பு நிலையுற்று விளங்கிவரக் காண்கிறோம். சொல் பொதுக்கருவியாக இருந்து சிறப்புக் கருவி ஆகிறது அன்றோ? "அம்மா!' என்பது முதலில் தனக்கு வேண்டியதனைத்தையும் செய்யத்தூண்டும் கருவியாக இருந்து பிறகு சிறப்புநிலையுற்று "வா" என்ற பொருளில்மட்டும் வழங்கவருகிறதன்றோ? "என்ன?" என்று கேளாத தாய் பின்னே, "ஏன்" என்கிறாள் அன்றோ? இவ்வாறு சிறப்புச் சொற்கள் வளர்கின்றன.

போதுப் பெயர் :— பொதுச்சொல் என்பது பல சிறப்புப் பொருள்கள் இடையே தோன்றும் உயர்நிலையான பொது நிலையைக் குறிப்பது என்று கூறுவதற்கும் இடம் இல்லை. ஆடை என்பது ஒரு பொதுப்பெயர். அத்தகையதோர் உயிர்நிலையான பொதுத்தன்மையை இச்சொல் சுட்டவில்லை. அடை என்றால் இலை என்பது பொருள்; அடையினால் ஆயது (இலையினால் தொடுத்தது) ஆடையாம். இலைகட்டி வாழ்ந்த காலத்தில் எழுந்த சொல்லாகும் அது. இன்று ஆடையின் பொது நிலையாம் உயர்நிலை இலையால் அமைவதேயாம் என யாரேனும் கூறுவரோ? அந்த அந்தக் காலத்தில் அந்த அந்த வழக்கத்திற்கு ஏற்ப, ஏதேனும் ஓர் இயல்பினை அவ்வம்மக்கள் இயல்பாகக் கொள்கின்றனர் எனலாம்.

ஸ்பியர்மன் :- ஸ்பியர்மன் (Spearman) என்ற ஆசிரியர் இங்குத் தோன்றும் மனநிலையை விளக்கிவைத்துள்ளார். தன் புற நிலைச் சூழலில், தன் தேவைக்கேற்பச் சிலவற்றைமட்டும் குழவி காண்கிறது. பிறவற்றினும் ஒன்றைப் பிரித்தறியும்

வேற்று நிலைக்காட்சி இவ்வாறு எழுகிறது. பலநிலைகளிலும் பொதுவில் மேல் வாரியாகத் தோன்றுவனவற்றைக் குழவி காண்கிறது. ஈதொரு தெளிவு நிலைக்காட்சி அன்று; குழப்பக் காட்சியேயாம். பின்னே மக்கட் கூட்டத்திடையே பழகும் பழக்கத்தால் பொது இயல்பை வெற்று நிலைக்காட்சியாக (abstraction)க் காணலாகிறது. கை, கால் என்ற உடன் இவற்றின் இடையே உள்ள தொடர்பினை அறிகின்றோம். "ஒன்றன் சினையாம்நிலை" என உணர்கின்றோம். தொடை, தோள் முதலியவற்றையும் அதே தொடர்புடைய தொடர்புளி-களாகவும் (Correlative) உணர்கின்றோம். ஈதே தொடர்-பினையும், தொடர்புளிகளையும் உய்த்து உணர்தலாம். மக்கட் கூட்டத்தின் இடையே பழகும் பழக்கம் மட்டும் இத்தகைய பொருள்நிலை வளர்ச்சிக்குப் போதியதன்றாம். இந்த வளர்ச்சி குழவியின் உடலியல்பின் தேவையையும் பொறுத்துள்ளது. ஒரு குறித்த பொதுக் கருத்து வளரும்போது இரண்டு கருத்துக்களோ, மூன்று கருத்துக்களோ வெவ்வேறு காலத்தே எழலாம். "அம்மா" என்ற சொல்லைக் காண்போம். பசி எழுகிறது. பல நிலைகளிடையே இந்த நோய்நிலை வேற்றுநிலைக் காட்சியாக விளங்குகிறது. ஈதல்லாத வேறு பல நிலைக்கும் "அம்மா" என்ற சொல்லைப் பயன் படுத்திய குழப்பநிலையைக் காண்கிறோம். பின்னர்; "அம்மா" என்பது இந்தக் குழப்பநிலை நீங்கித் தாயினைக் குறிக்கின்றது. மக்கட்கூட்டமும் அதனை அவ்வாறு பழக்கிவிடுகிறது. பின்னர்த் தாயின் பொதுநிலையை உணர்கிறது. முடிவாகத் "தாய்நாடு" முதலிய வழக்கு எழு-கின்றது. இத்தகைய வளர்ச்சிநிலையில் குழவியின் அறிவு நிலையைவிட உணர்ச்சிநிலையே சிறந்து நின்று இயங்கக் காண்-கிறோம்.

குழவியின் போது உணர்வு :— வேறுபட்டு நில்லாது ஒன்றாகத் தோன்றும் எதிரூன்றல்களோடு சேர்ந்து விளங்கியே

சொற்கள் முதலில் வரத் தொடங்குகின்றன. அழுகையோடு சொல்லும் உணர்ச்சியினைச் சுட்டி முதலில் வரக்காண்கின்றோம். பின்னர்ப் பொதுவான செயல்களையோ அனுபவத்தையோ சொற்கள் சுட்டுகின்றன. முடிவாக நுட்பமான வேற்றுமையைக் குறிக்கின்றன. ஆதலின், குழவி முதலில் ஒரு பொருளையோ செயலையோ அனுபவித்து வரும்போது குழவியின் பெற்றோரும் மற்றோரும் பொதுவான பெயரையே முதலில் கற்பித்தல் வேண்டும்; சிறப்புப் பெயர்களைப் பின்னரே கற்பித்தல் வேண்டும். புத்தகம், மரம், முதலியவற்றை முன்னும், திருக்குறள், வாழை முதலிய சொற்களைப் பின்னும் கற்பித்தல் வேண்டும். இல்லையானால் ஆண்களை எல்லாம் "அப்பா" என அழைக்க வருகிற குழந்தை எல்லா நூல்களையும் "திருக்குறள்" என்றும், எல்லா மரங்களையும் 'வாழை' என்றும் வழங்கப் பழகிவிடும். சொற்களின் நுட்ப வேற்றுமையை உணர்வது மொழித்திறத்தின் முட்டறுத்தவருக்கே இயலுவதொன்று. இந்த உண்மையைப் பெற்றோரும் பிறரும் அறிவதில்லை. தந்தையல்லாத வேற்றுனைத் தன் குழவி "அப்பா" என்றதும் தாய் கலங்குகிறுள். சிலபோது எரிந்து விழுகிறுள். மேலே கூறியபடி கற்பியாமையால் வந்த குழறுபடை என அறியாது இவ்வாறு உணர்ச்சி பொங்கி நிற்கும் பெற்றோரைக் கண்டதும் குழவி திகைத்துப் போகிறது. பின்னர்ப் பேசுவதும் வளராது தடைபடுகிறது.

நுட்ப வேறுபாட்டு வளர்ச்சி :— குழவி வளர வளரத் தன் சுற்றுப்புறத்தை வேண்டியவாறு கையாளுகிற திறமை வளர்ந்து வருகிறது. அதற்கேற்பச் சொற்களின் நுட்ப வேறுபாடும் வளர்ந்து வருகிறது. தொடக்கத்தே சொற்கள் குழவியின் செயற்பாட்டு நிலையில் ஒரு மூலையாக மட்டுமே அமைந்தன. குழவி பல வேறு வகையான செயற்பாடுகளை

வேறு பிரித்தறியப் பழகியபோது செயல்களைக் கொண்டே சொற்களின் பொருளை வரையறுத்து வழங்குகின்றது. ஐந்தாம் ஆண்டில், "வெட்டுவது கத்தி", "எழுதுவது பேனு" எனப் பயனைக்கொண்டே பொருளைக் குழவிகள் விளக்குகின்றன. ஏழாம் ஆண்டில் பொருள்களின் வேறு பாடுகளைக் குறித்துணர்ந்து பெயரிட்டு வருகின்றன. எட்டாம் ஆண்டில், "இரும்பும், வெள்ளியும் வெட்டுதற்குரியன" என்பது போன்ற ஒப்புமை வகையாலும், புலப்படத் தோன்றும் வேறு பல இயல்புகள் வகையாலும் பொருள்களைக் குழவிகள் பாகுபாடு செய்கின்றன. பன்னிரண்டாம் ஆண்டில் கருமை, நேர்மை, கண்ணுடித் தன்மை போன்ற பொதுத் தன்மையாம் வெற்று நிலை (abstraction) இயல்பு என நாம் வழங்குவதன் பொருளைக் குழவிகள் உணர்கின்றன. மூன்று வேறு மக்கள், அல்லது பறவைகள், அல்லது பழங்கள் என்ற இவற்றின் படத்தைக் குழவிகளிடம் கொடுத்து மூன்றிற்கும் பொதுவான பெயர் ஒன்றைக் கூறவேண்டுமானுல் குழவிகள் "மக்கள்" அல்லது "பறவை" அல்லது "பழம்" என்று கூறிவிடுகின்றன. எனினும், இதற்கு மேலாகச் சொல்லுவதில்லை. 16 வயது வரை வெற்றுநிலை இயல்புகொண்டு பொருள்களைப் பாகுபாடு செய்வது முற்ற முடிவதில்லை. "ஒழுக்கமுறை", 'அறப்பேச்சு' முதலியன பொதுத்தன்மையை வற்புறுத்துவன ஆகும். ஆதலின், கதை முதலியவற்றின் வழியாக அன்றிப் பொதுநிலை வழியாக இவற்றைப் பதினறு வயதிற்கும் முன்னுக விளக்க முற்படுவது வீணே ஆம்.

> "வைகரி செவியில் கேட்பதாய் அத்த வசனமாகி
> மெய்தரும் உதான வாயு மேவிட விளைந்த வன்னம்
> பொய்யற அடைவு உடைத்தாய்ப் புந்திகாரணமதாகி
> ஐயமில் பிராணவாயு அடைந்தெழுந் தடைவுடைத்தாம்.
> (சித்தியார் — 39)

# 17. மொழி வளர்ச்சி

---

## I. எழுநிலை மாடம்

குழவி அறிந்தசொல் எல்லை :— குழந்தையின் நாவில் முதல் முதல் சொல் எழுந்து ஒளிர்வது பத்தாம் திங்களிலாகும். 54 ம் வாரத்திற்குள் இரண்டு சொற்கள் வளர்கின்றன. 66 ஆம் வாரத்திற்குள் 7 சொற்கள் விளங்குகின்றன. 86 ஆம் வாரத்திற்குமேல் இந்தச் சொற்களின் எண்ணிக்கை மிக விரைந்து வளர்கிறது. ஆராய்ச்சிவாணர்கள் குழவிகள் அறிந்த சொல் எல்லையை வரையறுப்பதில் ஈடுபட்டு உள்ளனர். குழந்தைகள் வழங்கும் சொற்களைக் கணக்கிட்டு அகராதி தொகுப்பதில் ஓர் அருமைப்பாடு உண்டு. எதனைச் சொல் என்பது? இடைச் சொற்களையும் சேர்ப்பதா? குழவி அறிந்து கொள்ளக்கூடிய சொற்களையும் சேர்த்தல் வேண்டுமா? குழவி வழங்கிவரும் சொல்லை மட்டும் சேர்த்தல் வேண்டுமா? பேச்சினை வழக்கெனக் கொள்வதா? எழுதுவதனை மட்டும் வழக்கெனக் கொள்வதா? சொல்லினை வழங்குதற்கு முன்னர் அதன் பொருளை மட்டும் அறிந்து வருமிடத்தும் பலவேறு விளக்கநிலைகள் தோன்றுகின்றன. "முன் கேட்டது போல் இருக்கின்றது இச்சொல்" எனப்பழமை உணர்ச்சி தோன்ற நிற்கின்றன சில சொற்கள். இது முதல்நிலை. அந்தச் சொல்லை முன்னர்க் கேட்டநிலையைச் சுட்டும் ஒரு தொடர்பினையும் காட்டக் கூடியநிலையில் வேறு சில சொற்கள் விளங்குகின்றன. அஞ்சல்தலை (தபால் வில்லை) என்றதும் அதிலிருக்கும் அரசர் படம் மனத்தில் தொடர்ந்து எழுகிறது. இது இரண்டாம் நிலை விளக்கம், சொல்லினைக்கேட்டதும் கை மெய் காட்டிப்

(gestures) பொருள் விளக்குதல் மூன்றாவது விளக்கநிலையாம். ஒரு நோக்கோடு ஒரு சொல்லை ஒருவர் கூறும்போது, அது கேட்டதும் அதன்படி நடப்பது முன்னைய நிலையிலும் விளக்கமுற்ற நான்காம் நிலையாம். தாய் "வா" என்றதும் குழவி தளர் நடையிட்டுச் செல்கின்றமை காண்க. குறிப்பிட்டதொரு சொல்லை முடிவுநிலைச் சொற்றொடரில் (completed sentence) அமைத்து வழங்குவது இதனினும் சிறந்த ஐந்தாம் நிலையாம். அச்சொல்லுக்குப் பொருள் கூறுதல் ஆறும் நிலையாகச் சிறந்து விளங்கும். அனைத்திலும் சிறந்த விளக்கநிலை சொல்லுக்கு இலக்கணம் (definiton) கூறுவதே ஆம். ஈதே ஏழாம்நிலை. எனவே, சொல்லின் விளக்கநிலை இவ்வாறு ஓர் எழுநிலை மாடமாக அமைய வருகிறது.

## II. குழவி அறிந்த சொல் எல்லை.

கணக்கு :— தார்ண்டைக் (Thorndike) என்ற ஆசிரியர் ஆங்கிலத்தில் அடிக்கடி வழங்கும் 10,000 சொற்களைப் பயின்றுவரும் நிலைமைக்கு ஏற்பக் கோவை செய்துள்ளார். அந்தக் கோவையிலிருந்து 500 சொற்களை எடுத்து அந்த 500 இல் எத்தனை சொற்களைக் குழவி அறிந்து உள்ளது என ஆராய்ந்தாற் போதும். 500 க்கு வந்த கணக்கை 10,000 க்கு வந்ததாக மாற்ற வேண்டுமானால் 20 ஆல் பெருக்கவேண்டும். அந்தவகையில் தார்ண்டைக் கோவையில் சராசரி எத்தனை சொற்களைக் குழவி அறிந்திருக்கும் என மேல்வாரியாகக் கூறலாம் என அறிஞர்கள் ஆங்கிலக் குழவிகளை ஆராய்ந்து உண்மையை விளக்குகின்றனர். தமிழில் இத்தகைய ஆராய்ச்சி நிகழவில்லை. சென்னைப் பல்கலைக் கழகத்து அகராதி (அனுபந்தம் உட்பட) ஒன்றேகால் இலட்சம் சொற்கள் கொண்டது. இவற்றில் சில 500 சொற்களைப்

பொறுக்கி எடுத்து அவற்றில் குழவி எத்தனை சொற்களை அறிந்திருக்கிறது எனக் கணக்கிடலாம். 50 சொற்கள் அறிந்துள்ளது என வைத்துக்கொள்வோம். பின்னர் மொத்த சொல்லுக்கும்(125,000)நாம் பொறுக்கி எடுத்த சொல்லுக்கும் (500) உள்ள எண் வீதத்தால் (250) குழவி யறிந்ததாக நாம் கணக்கிட்ட சொல்லின் தொகையை (50)ப் பெருக்கினுல் குழவி அந்த அகராதியில் எத்தனை சொற்களை (50×25=12500) அறிந்துள்ளது என மேல்வாரியாகக் கூறலாம். அத்தகைய பெரிய அகராதியைப் பின்பற்றுவதனைவிடத் தார்ண்டைக் ஆராய்ந்து கண்டதுபோலப் பெரு வழக்கை ஒட்டி 10,000 சொற்களைத் தமிழிலும் ஆராய்ந்து கண்டு பின் கணக்கெடுப்பதே தக்கதாம்.

ஆங்கிலக் குழவி :— ஆங்கில மொழிக் குழவிகள் அந்த அந்த வயதிற்கேற்ப அறிந்திருக்கும் சொல்லைக் கணக்கிட்டு வந்துள்ளது மற்றைய குழவிகள் அறிந்த சொல் எல்லையை அறிவதற்குப் பொதுநிலை அடிப்படை ஆகலாம். அது பற்றி அவர்கள் கணக்கையும் அடுத்த பக்கம் தருகின்றோம்.

முடிவு:- பின்பக்கம் காட்டிய அட்டவணையில் பல ஆசிரியர்கள் கண்ட ஆராய்ச்சி முடிவுகளை ஒன்று சேர்த்துக் காட்டி உள்ளோம். இதிலே "மேல் எல்லை", "கீழ் எல்லை" என்றும் குறித்துள்ளோம். சில குழவிகள் சராசரிக்கு மேலும் சொற்களை அறிந்துள்ளன; சில குழவிகள் சராசரிக்கும் குறைவாக அறிந்துள்ளன என்பது நன்கு தெளிவாகிறது. எனவே, குழவிக்குக் குழவி 'அறிசொல் எல்லை' வேறுபடும் எனலாம். குறிப்பிட்ட ஒரு குழவி மிகுதியான சொற்களை அறிந்திருப்பதால் அறிவு நிலையிற் சிறந்து உள்ளதோ என்று கண்டு அறுதியிட்டுக் கூறக்கூடிய நிலைமையில் இத்தகைய

| குழவியின் | | குழவிகள் அறிந்ததாகக்கண்ட சொற்களின் சராசரி எண்ணிக்கை | | குழவிகள் அறியக்கூடிய சொற்களின் எண்ணிக்கையில் | |
|---|---|---|---|---|---|
| ஆண்டு | திங்கள் | | | கீழ்எல்லை | மேல்எல்லை |
| | 8 | 0 | ஸ்மித் Smith | — | |
| | 10 | 1 | ,, | | |
| 1 | 0 | 3 | | ... ....3.... | 24 வாடெல் Waddle |
| 1 | 3 | 19 | | | |
| 1 | 6 | 27 | | | |
| 1 | 9 | 118 | | | |
| 2 | 0 | 272 | ............... | ....115.... | ....1127 ,, |
| 2 | 6 | 446 | | | |
| 3 | 0 | 896 | ............... | ....150.... | 1807 நைஸ் Nice |
| 3 | 6 | 1222 | | | |
| 4 | 0 | 1540 | ............... | ....811.... | 2777 ,, |
| 4 | 6 | 1870 | | | |
| 5 | 0 | 2072 | ....... ........ | ....1528.... | 2948 |
| 5 | 6 | 2289 | | | |
| 6 | 0 | 2862 | ............... | ....2688.... | ....3132.... |
| 8 | 0 | 3600 | Terman டெர்மன் | | |
| 10 | 0 | 5400 | | | |
| 12 | 0 | 7200 | | | |
| 14 | 0 | 9400 | | | |

கணக்குகள் இல்லை. எனினும், பொதுவாக எல்லாக் குழவிகளையும் எடுத்துக் கணக்கிடும்போது அறிவுநிலையின் உயர்விற்கும் அறிசொல் எல்லைக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளதாகவே தோன்றுகிறது என ஆராய்ச்சி வாணர் கூறுகின்றனர்.



அறிவதும் சொல்வதும் :— குழந்தைகள் கேட்டால் பொருள் அறிந்துகொள்ளும் சொற்களின் எல்லைக்கும் அவை பயன்படுத்தும் சொற்களின் எல்லைக்கும் வேற்றுமை உண்டு. ஐந்து வயதிற்குக் கீழே மிகமிக மெல்லவே இந்த எல்லைகள் விரிந்து போகின்றன. குழந்தைப் பருவத்தும் இளமைப் பருவத்தும் விரைந்து அகலக் காண்கிறோம். அதன் பிறகு மிக மிக மெல்லவே வளர்கின்றன. பெரியவர்கள் தாங்கள் அறிந்த சொற்களில் ஆறில் ஒன்றையே பயன்படுத்தி வருகின்றார்களாம்.

## III. இலக்கண வளர்ச்சி

சொல்வகை:- "குழவி ஒவ்வொரு பருவத்திற்கும் எற்பப் பெயர்ச்சொல்லையோ பெயர்ச் சொல்லோடு பிற சொல்லையுமோ வழங்கி வருகின்றது" என்பதனையும் ஆராய்ச்சிவாணர் கண்டுள்ளனர். இரண்டாம் ஆண்டில் குழவி வழங்கும் சொற்களில் நூற்றுக்கு ஐம்பதிலிருந்து அறுபதுவரை நாம் வழங்கும் பெயர்ச் சொற்களாகவே அமைகின்றன. ஒரு சொல்லையே முழுவாக்கியமாகக் குழவி வழங்குதலின், அப்பெயர்ச் சொற்களைப் பல வேறு சொல் வகையாகக் குழவி வழங்கிவரக் காண்கிறோம். ஆகவே, குழவிவழங்கும் சொல்லைப் பெயர்ச் சொல் எனக் குறிப்பது நம் கருத்து வகையை நோக்கியே ஆம். வயது ஏறஏறப் பெயர்ச் சொற்களும் ஒலிக் குறிப்பு, இரக்கக் குறிப்பு முதலியவாக வரும் சொற்களும் குறைந்துவர, வினைச்சொற்களும் (Verbs), வினை அடைகளும் (Adverbs), பெயர் அடைகளும் (Adjcetives), குறிப்புப் பெயர்களும் (Pronouns) மிக்குவரக் காண்கிறோம். குழவிச் சொற்களை ஆராய்ந்தால் அவை தெளிவாகவும் விளங்குகின்றன; குழவி தன்னையே சுட்டும் தற்சுட்டாகவும் அமை-

இன்றன; ஆசை நிரம்பியனவாகவும் உள்ளன. இவ்வாறு குழவியின் சொற்கள் பெரும்பான்மையும் அமையக் காணலாம். வயது ஏற ஏறக் குழவியின் பேச்சு, உணர்ச்சிநிலை அற்ற முதியோரின் பேச்சுப் போலவே மாறிவிடுகின்றது; தன்னைச் சுட்டும் சொற்கள் குறைந்து வருகின்றன; குறிப்புப் பெயர்கள் மிக்கு வருகின்றன. இரண்டாம் ஆண்டில் குழவி முதல் முதல் குறிப்புப் பெயர்களை வழங்கத் தொடங்குகிறது. இந்த வழக்கு மூன்றும் ஆண்டில் மிக்கு ஓங்கி ஒன்பதாம் ஆண்டுவரை அந்த நிலையிலேயே இருந்து வருகிறது. "மேல்", "கீழ்" முதலிய தொடர்புநிலையைக் கையும், மெய்யும் கொண்டு உணர்த்திவந்த குழந்தை பின்னர்ச் சொல்லாலேயே அவற்றை உணர்த்தத் தொடங்குகிறது. குழந்தையின் பேச்சில் உணர்ச்சிநிலை குறைந்து அறிவுநிலை உயர்ந்துவரத் தொடங்குகிறது. விளக்கி-வைக்கும் பெயரடைகள் மிக்குவருகின்றன. பன்மைச் சொற்கள் குறையப் படர்க்கைச் சொற்களின் எண்ணிக்கை மேலோங்குகிறது. மக்களைச் சுட்டும் பெயர்ச் சொற்களின் நூற்று வீதம் உயர்ந்துவர, விலங்கு முதலியவற்றினைச் சுட்டும் பெயர்ச் சொற்களின் வீதம் குறைந்து கொண்டே வருகிறது. "ஆனல்", "ஆகையால்", "உம்" முதலிய இடைச் சொற்-களும், தசை இயக்கங்கள் பெருஞ் செயல்கள் முதலிய-வற்றைப் பற்றிய சொற்களும் மிக்கு வருகின்றன.

சொற்றொடர் :- சொற்களைச் சொற்றொடர்களாகச் சேர்த்து வருவதிலும் வயது ஏற ஏறக் கலவைநிலை சிக்கலாகியே வருகிறது. எதிர் ஊன்றலாக எழும் பதில்களும் வயதிற்கு ஏற்ப நீண்டு வருகின்றன. நீள்வதாவது சொற்களின் எண்ணிக்கை மிகுவதே ஆம். சொற்றொடர்களின் பொருள் எழுவாய் பயனிலையாக முற்றிநிற்பன நிறைசொற்றொடர்-களாம் (clause). எழுவாய் பயனிலையாக வாராதன குறை

| வயது. | | பதிலுள்ள சொற்களின் சராசரி எண்ணிக்கை |
|---|---|---|
| வருஷம் | மாதம் | |
| 1 | 6 | 1·2 |
| 2 | 0 | 1·8 |
| 2 | 6 | 3·1 |
| 3 | 0 | 3·4 |
| 3 | 6 | 4·3 |
| 4 | 0 | 4·4 |
| 4 | 6 | 5·6 |

சொற்றொடராம் (Phrase). எழுவாயும் பயனிலையுமாய் அமையும் சொற்றொடர்கள் முழுதும் முடியும் முற்றுச் சொற்றொடர் அல்லது முதனிலைச் சொற்றொடரும் (Principal clause), முழுதும் முடியாத எச்சச் சொற்றொடர் அல்லதுவழிநிலைச் சொற்றொடரும் (Subordinate clause) என இரண்டு வகையாம். வயது ஏற ஏற நிறை சொற்றொடர் நீண்டுவருகிறது. நிறை சொற்றொடரை நோக்க எச்சச் சொற்றொடர்களின் எண்ணிக்கையும் வளர்ந்து வருகிறது. ஆனால், இந்த வளர்ச்சியனைத்தும் குழவியின் உடல்நிலை வயதினைப் பொறுத்துள்ளதேயன்றி மனநிலை வயதினைப் பொறுத்தது அன்றாம்.

வாக்கிய வளர்ச்சி :- வாக்கியத்தின் இலக்கணம் கூறுவது அருமை. ஆதலின், அதனை வரையறைப்படுத்தி எண்ணுவதும் இயலாதாம். எனினும், வாக்கிய வளர்ச்சியின் பல படிகளை

ஒருவாறு கீழ்க்கண்டபடி தொகுத்துச் சொல்லலாம். 4 ஆம் திங்களில் இருந்து 12 ஆம் திங்கள் வரையிலும் விளங்கும் நிலையில் ஒரு சொல்லே ஒரு வாக்கியமாக அமையக் காண்கிறோம். இந்த முதற்படியை 'ஒரு சொற்படி' என வழங்கலாம். 13 இல் இருந்து 27 ஆம் திங்கள் வரையில் 'முதல் நிலை வாக்கியப்படி' விளங்குகின்றது எனலாம். முன்னே குறிபிட்டபடி பெயர்ச் சொற்கள் மிக்கும், சுட்டும் துணைவினையும் இடைச் சொற்களும் குறைந்தும் வரக்காண்கிறோம். 28 ஆம் திங்களிலிருந்து 4 ஆம் ஆண்டுவரை சிறு வாக்கியங்களே விளங்குகின்றன; ஆதலின் இதனைச் 'சிறுவாக்கியப்படி' எனவழங்கலாம். அப்பொழுது பேசும் வாக்கியங்களில் மூன்று ஐந்து சொற்களுக்குமேல் இருப்பதில்லை. நான்காம் ஆண்டிற்குப் பின் உள்ள நிலையினை 'முழு வாக்கியப்படி' எனக் கூறலாம். அங்கே ஒரு வாக்கியத்தில் 6—8 சொற்கள் வரை காணலாம். பல பொருள்கள் கலந்து வரையறையுற்றுத் தெளிவாக விளங்கக் காண்கிறோம்.

## IV. மொழி வளர்ச்சி

அளவை :— குழவியினிடையே மொழி வளர்ச்சியினை ஆராய்ந்த அறிஞர்கள் இந்த வளர்ச்சியினை உயர உயரச் செல்லும் பல வேறு நிலைகளாகப் பிரித்துக் காட்டி உள்ளார்கள். பேச்சொலிகளை ஒலிக்கும் ஆற்றலை அளக்கவும், சொல்லின் பொருளை அறிந்து குழவி, உணர்ந்து வரும் சொற்களின் எண்ணிக்கையை அளக்கவும், சொற்களை வாக்கியத்தில் அமைத்து வரும் ஒருமைப் பாட்டு உணர்வை அளக்கவும் ஆராய்ச்சிவாணர் வழிசெய்து உள்ளனர். ஒன்றுமே இன்றித் தொடங்கும் இந்த மொழி வளர்ச்சி 6 ஆம் ஆண்டிற்குள் போதுமான உயர்நிலையை அடைந்து விடுகிறது எனலாம்.

"விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என இங்குப் பாடச் சிறிது இடம் உண்டு.

பல நிலைகள் :— பல நிலைகளாகிய மொழி வளர்ச்சியினை அறிஞர்கள் பிரித்துக் கண்டதனைக் கீழ்க்கண்டபடி தொகுத்துக் கூறலாம். முன்னர் எழுத்துக்கள் ஒலிக்க வருவதனைக் காணலாம். (1) தானே ஒலிகளை எழுப்பி நிற்கும் மழலைநிலை; (2) குரல் ஒலிகளைக் கேட்டதும் அவை வரும் வழியே தலையைத் திருப்பியோ, உற்று நோக்கியோ உன்னிப்பாகக் கேட்கும் உன்னிப்புநிலை; (3) தானே பல ஒலிகளை ஒலித்து வரும்போது உயிரும் மெய்யுமாம் அலகுகளாக (Syllable) ஒலித்துவரும் அலகுநிலை; (4) தன்னோடு பேசவருவாரின் பேச்சுக்கு விடையாகத் தன் குரல் ஒலி காட்டுகின்ற விடை ஒலி நிலை; (5) பேசிய சொல்லினைக் கேட்டு அதனை அறிந்து, பின் அதனைப் பிறழாதநிலையில் தூண்டற்கெதிர் எழும் குறிப்பிட்டதொரு துலக்கமாக வெளியிடும் நிலை, அதாவது அறிந்து துலங்குநிலை; (6) குரலொலி வகையாம் குறியீடாகக் (Social symbol) கொண்டு பொருளை வெளியிடும் தனிக் குறியீட்டுநிலை; (7) தான் ஒலிக்கும் அலகுகளில் ஈற்றில் மெய் எழுத்தினைப் பயன் படுத்தும் ஈற்று மெய்ந்நிலை; (8) பெரியோர்கள் சொற்களை எந்தச் சுருதியில் (Pitch) எந்த இசைத்திரிபினோடும் (Inflection) பேசுகின்றார்களோ அந்தப்படியே பின்பற்றிப் பேசப் பழகுகிற சாயல் பிடிக்கும் நிலை; (9) மேலே கூறிய குறியீட்டு நிலையிற் போல ஒவ்வொரு குறியீடாக அன்றி 5 குறியீடுகளையேனும் ஒன்றாகச் சேர்த்து ஒரு பொருளை விளக்கப் பயன்படுத்தும் ஐங்குறியீட்டு நிலை; (ஐந்தெழுத்தால் ஒரு சொல் அமைத்தல் காண்க.) (10) அவ்வாறு 10 குறியீடுகளையேனும் தவறாது பயன்படுத்தும் ஒருபது குறியீட்டுநிலை முதலிய காண்க.

சொற்றொடர் :— (11) இனிச் சொற்கள் சேர்ந்து-வருவதனைக் காண்போம். இரு சொற்களையேனும் இரு குறி-யீடுகளையேனும் பொருளை விளக்குவான் வேண்டிச் சேர்த்து ஒரு தொடராக்கிக் கூறும் இருசொற் சேர்வைநிலை; (12) முன்னினும் திறம் பெறுவதால் வழக்கிலுள்ள 6 சொற்களை-யேனும், ஒரு தவறின்றி ஒலிக்க முடியாமற் போயினும், அக்குழவியை அறியாதவர்களும் அறிந்து கொள்ளுமாறு பொருள் விளங்கும்படி ஒலிக்கக்கூடிய அறுசொற் கோவை நிலை; (13) செய்வோனும் தொழிலுமாகவோ, செய்வோரும் தொழிலுமாகவோ வரும் சொல்லமைப்பினைப் பயன்படுத்தும் தொழில்நிலை அல்லது இயக்கநிலை; (14) பெயரும் வினையு-மாகவோ, வினையும் செயப்படு பொருளுமாகவோ வரும் அமைப்பினை அறிந்து, ஐயம் கொள்ளாதபடி, இவற்றில் ஒவ்-வொன்றற்கும் ஒன்றற்கு மேலாக எடுத்துக் காட்டுகளைக்கூறி விளக்கும் வினைச்சொல்நிலை; (15) மற்றொருவர் பெயர்க்குப் பதிலாக ஐயத்திற்கு இடமின்றி ஒரு முறைக்கு மேலாகவே குறிப்புப் பெயர்களை வழங்கக்கூடிய குறிப்புப் பெயர்நிலை; (16) "மேல்", "கீழ்" முதலியவற்றையோ, வேற்றுமை உருபு-களையோ, ஐயத்திற்கிடமின்றி ஒரு முறைக்கு மேலாகப் பயன் படுத்தும் வேற்றுமைநிலை; (17) பெயர்களுக்கு அடை கொடுத்து வழங்கும் பெயரடைநிலை; (18) அவ்வாறே வினைக்கும் அடை கொடுத்து வழங்கும் வினையடைநிலை; (19) "போயினன்" என்னாது "போய்விட்டான்" என்பதுபோல வினையோடு துணை வினையைச்சேர்த்து வழங்கும் துணைவினைநிலை; (20) ஐயத்திற்கு இடமின்றி ஒரு முறைக்குமேல் பெயர்ச் சொற்களின் முறையான பன்மை வடிவினைப் பயன் படுத்தும் பன்மைநிலை முதலியவற்றைக் காண்க.

மேலும் பல :— காலம் முதலியவற்றை வேறுபிரித்து வரும் நிலைகளைக் காண்போம். (21) நிகழ் காலம் நீங்கலாக

வேறு எந்தக் காலத்தையேனும் சுட்டும் வினைச்சொல்லை வழங்கிவரும் காலவழக்குநிலை; (22) உம்மைச்சொல், 'ஆயின்', "ஆனால்", "ஆகையால்" முதலிய இடைச் சொற்களை இரண்டு சொற்றொடர்களைத் தொடர்பு படுத்தும் வழியாக வழங்க வரும் இடைச்சொல்நிலை; (23) இறந்தகாலத்தைச் சரிவர வழங்கும் இறந்தகால வழக்குநிலை (24) இரண்டு வாக்கியங்களை ஒன்றாகச் சேர்த்துச் சேர்வைச் சொற்றொடர் அல்லது கூட்டுவாக்கியமாக (Compound) வழங்கும் கூட்டுவாக்கிய வழக்குநிலை; (25) எச்சச் சொற்றொடரும் முற்றுச் சொற்-றொடரும் சரிவர அமைந்துவரும் கலவைச் சொற்றொடரை (Complex sentence) வழங்கும் கலவை வாக்கிய வழக்கு நிலை; (26) ஐயத்திற் கிடமின்றி ஒரு முறைக்கு மேலாக எதிர் காலத்தினைச் சரிவர வழங்கும் எதிர்கால வழக்குநிலை; (27) "ஒன்றினும் ஒன்று சிறந்தது" எனப் பெயர் அடைகளுக்-கிடையே உறழ்ச்சியாகக் காண்பதனைச் சரிவர விளக்கி வழங்கும் பெயரடை உறழ்ச்சிநிலை; (28) அனைத்தினும் சிறந்தது எனப் பெயரடையிடையே வரும் உறழ்ச்சியை முற்றும்மையோடு வழங்கவரும் முற்றுறழ்ச்சி வழக்குநிலை; (29) பொது முறையின்படி பன்மை விகுதி பெறாத பன்மைச் சொற்களைச் சரிவர வழங்கவரும் முறை பிறழ் பன்மை வழக்குநிலை; (30) கூட்டுவாக்கியமாகவும், கலவை வாக்கிய மாகவும் கூட்டுக் கலவை வாக்கியத்தைச் சரிவர வழங்கும் கூட்டுக் கலவை வாக்கியநிலை; (31) வினை அடைகளின் முற்றுறழ்ச்சி நிலையைச் (உ-ம் எவரினும் சிறக்க ஓடினான்) சரிவர வழங்கும் வினையடை முற்றுறழ்ச்சிநிலை; (32) செய்து விட்டான் என்பதுபோல இறப்பில் இறப்பினைக் குறிக்கிற வினையைச் சரிவர வழங்கும் இறப்பிறப்பு வழக்குநிலை. (33) "நாளை இந்நேரம் வீடுபோய்ச் சேர்ந்திருப்பேன்" என்பதுபோல எதிர்காலத்தில் வினை முடிந்த நிலையை

விளக்கும் எதிரில் இறப்பு வினையைச் சரிவர வழங்கவரும் எதிரிலிறப்பு வழக்குநிலை முதலியவற்றைக் காண்க. இவ்வாறு 33 வளர்ச்சி நிலைகளாக அறிஞர்கள் ஆராய்ந்துள்ளார்கள். இதிலிருந்து மொழிவளர்ச்சியினை ஒருவாறு நாம் அறியலாம்.

## V. சொற்கள் காட்டும் மனம்

சந்தர்ப்பம் :— மொழி என்பது நம் சுற்றுப்புறச் சூழலோடு நாம் பொருந்த முற்று நிற்கும் முறையில் ஒரு பகுதியாகவே விளங்குகிறது. அதனால், இதனை நம் உணர்ச்சி நிலைவளர்ச்சி, தனிநிலை வளர்ச்சி, அறிவுநிலை வளர்ச்சி என்றவற்றின் அறிகுறியாகக் கொள்ளலாம். குழவிகளின் மொழியை அந்த அந்த வழக்கு எழும் நிலைமைக்கேற்ப உணர்ந்து பொருள் கொள்ள வேண்டும். சந்தர்ப்பத்தை நோக்காது "அம்மா" முதலிய சொற்களை மட்டும் ஒன்றிரண்டு எனக் கணக்கிடுவதில் பயனில்லை. ஒரே பொருளில் ஒரு சொல்லைக் குழவி தான் பிறந்ததிலிருந்து பெரியோர் நிலையை அடையும்வரை வழங்குவதில்லை. அதன் பொருள் வேறுபாட்டை அதனை வழங்கும் சந்தர்ப்பத்தை நோக்கியே உணர வேண்டும். "நான்" என்ற சொல்லை அடிக்கடி குழவி வழங்குகின்றதென்றால் "நான்" என்ற சொல்லை வழங்கும்படியான நிலைகள் ஏற்பட்டதே அவ்வாறு வழங்குதற்குக் காரணம் எனக் கொள்ளுதல் வேண்டும். சந்தர்ப்பங்களை ஆராயாமல் தன்னையே நடுவாகக் கொண்டு குழவி அந்த நிலையில் இயங்குகிறது என முடிவு செய்தல் கூடாது. அவ்வாறே "உம்" மைச் சொல்லை மிகுதியும் குழவி பயன்படுத்துகின்றதேயன்றி, "ஆகையால்", "ஆனால்" முதலிய சொற்களை முதலில் பெரிதும் பயன்படுத்தாமையால், பலவகையாகப் பொருள்களை இயைபு பெறுமாறு ஒன்றுக்காமல் பொருள்களை அடுத்தடுத்து

அடுக்கிவைப்பது போன்ற மனப்பான்மையே குழவியிடம் விளங்குகிறது என முடிவு செய்தலும் தக்கதன்று. குழவி முதலில் சொற்களைத் திருப்பிச் சொல்லும் இயல்போடு விளங்குவதாலேயே "நான்" என்பதனையும் "உம்" என்பதனையும் திருப்பித் திருப்பிப் பல முறை வழங்குகிறது என உணர்தல் வேண்டும்.

பயின்றுவரும் கருத்து:- குழவி வழங்கிவரும் கருத்துக்களை ஆராய்ந்து, அக்கருத்துக்கள் அடிக்கடி பயின்று வரும் முறையில் அவற்றைக் கோவை செய்து குழவியின் மன வளர்ச்சியினைக் காண ஆராய்ச்சியாளர் முயன்றுள்ளனர். "தாய்" என்பதே முதலில் மிக மிகப் பயின்று வருகிறது. வீட்டினையும் குடும்பத்தினையும் பற்றிய சொற்கள் அதற்கு அடுத்து வருகின்றன. பின்னர் எதிர்மறைச் சொற்களே மிகப் பயின்றுவரக் காண்கின்றோம். குழவியைச் சுற்றியுள்ளார் இப்போதிருக்கின்ற நிலையில், 'இதனைச் செய்யாதே, பேசாதே' என இரைந்து ஆரவாரம் செய்து எழுப்புகிற தடைகளின் எதிர் ஒலிகளே இந்த எதிர் மறைச் சொற்களாம். குழவியினது தேவைகளைக் குறிப்பனவாக வரும் கருத்துக்களைப் பயின்று வரும் முறையே தற்காவல் வேட்கை, உரிமை வேட்கை, பிறர் தன்னை உணரும் வேட்கை, உணவு வேட்கை, பழி ஒழி வேட்கை, வெற்றி வேட்கை எனக் கோவை செய்யலாம்.

தான் நடுவாதல் :— தன்னையே அனைத்திற்கும் நடுவாகக் கொள்ளும் மனப்பான்மை குழவியிடம் இல்லாமல் இல்லை. தான் பழகியறியாத சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்பப் பொருத்தமுற முயலும் முயற்சியையே, இந்த மனப்பான்மை சுட்டுகின்றதே அன்றி முதியோரிடத்தில் போலத் தோல்வியின் பயனாகப் புறச் சூழலை விட்டு ஓடி அகத்தே ஒளிக்கும் மனப்

பான்மையைக் காட்ட வில்லை எனலாம். 18 ஆம் திங்களி-லிருந்து 23 ஆம் திங்கள் வரை பொருள்களை எழுவாயாக்கிப் பேசும் பேச்சு நூற்றுக்கு 58 ஆம்; தன்னைக் குழவி எழுவா-யாக்கிப் பேசும் பேச்சு நூற்றுக்கு 23 ஆம். பிறரை எழுவா-யாக்கிப் பேசும் பேச்சு நூற்றுக்கு 19 ஆம். ஐந்தாம் ஆண்டிற்குள் இந்த நிலை மாறி விடுகிறது. தான் எழுவாயாக வருவது நூற்றுக்கு 36 ஆக மிகுகிறது. பிறர் எழுவாயாவதும் நூற்றுக்கு 41 ஆகிறது. பிற பொருள்கள் எழுவாயாக வருவது நூற்றுக்கு 23 ஆகக் குறைகிறது. முடிவாகத் தானே அனைத்திற்கும் நடுவாக விளங்குவது நூற்றுக்கு 19 இல் இருந்து 57 ஆக உயர்கிறது. குழவி தான் விரும்பியவற்றைப் பெற்றும் செய்தும் வரும் வளர்ச்சியையே இந்த வேற்றுமை குறிக்கின்றது எனலாம். சிறு குழவிகளின் பேச்சு இறந்த காலத்தையோ, எதிர்காலத்தையோ பற்றிக் கவலைகொள்ளாது கைமேல் இருக்கும் நிகழ் காலத்தைப் பற்றியே அக்கரை கொண்டு விளங்கக் காண்கிறோம். வேறு குழவிகளின் இடையேயே இவ்வாறு ஒரு குழவி தன்னையே நடுவாக வைத்துப் பேசும் பேச்சு எழுகின்றது. பெரியோரிடம் பேசும் போது அங்ஙனம் இல்லை. குழவிகளிடையே குழவி தன்னம்-பிக்கையோடு தம்பிரானாக விளங்கி நிற்பதனையும், பெரியோ-ரிடையே அவர்கள் உதவி நாடி நிற்பதனையும் இந்த வேற்றுமை வற்புறுத்துகின்றது எனலாம்.

கருத்து வகைகள் :— கிண்டர்கார்டன் எனும் இளங்-குழவிப் பள்ளிகளில் படித்துவரும் சிறுவர் சிறுமியரது பேச்சினை ஆராய்ந்தபோது தன்னேக்கையே வற்புறுத்தும் பேச்சுக்கள் 40·8 % ஆகவும், தன்னிகழ்ச்சியாம் பேச்சுக்கள் 0·25 % ஆகவும், குழு உணர்ச்சியாக விளங்குவன 3·7 % ஆகவும், காட்சி உணர்வினை விளக்குவன 8·3 % ஆகவும்,

புதுவகைப் பேச்சு முயற்சிகள் 6% ஆகவும், கற்பனை உலகில் நாடகமாவன 4·8% ஆகவும், கேள்விகள் 9·9% ஆகவும், அறிவுநிலை எண்ணங்களைச் சுட்டுவன 6·02% ஆகவும் விளங்கினவாம். எனவே, கிண்டர்கார்டன் குழவி தன் நோக்கத்தை வற்புறுத்தும் குழவி என்பது தெளிவாகிறது. தன்னைச் சுற்றியுள்ள உலகத்தை அறியச் சொற்களைப் புதிய முறைகளில் எல்லாம் வழங்கப் பழகிவந்தாலும் அதனிடம் அறிவுநிலை வேட்கையோ உணர்வின் திறமோ சிறிதளவே விளங்கக் காண்கிறோம்.

## VI. உணர்ச்சி

ஏவலும் உணர்ச்சிக் குறிப்பும் :— சொற்களை வழங்கும் நிலையில், சொற்களும் பொருளை விளக்கும் அறிவு நிலையும் உண்டு; பிறரைச் செயற்படுத்தும் செயனிலையும் உண்டு. ஏவல் வினை என ஒன்று இருப்பது இதனாலேயே ஆம். மகிழ்ச்சி வெறுப்பு என உணர்ச்சி நிலையின் பெயராகவே அமைந்த சொற்களே அன்றி "ஐயோ", "அந்தோ", "அச்சோ", என்பனபோல இரக்கம், மகிழ்ச்சி முதலிய உணர்ச்சிகளைக் குறிக்கும் சொற்களும் உள்ளன. இவை மட்டுமே அன்றி ஒவ்வொரு பேச்சிலும் நிலைக்குத் தக்கபடி உணர்ச்சி எழுகிறதனையும் காண்கிறோம். "கண்ணன் முருகனை அடித்தான்" எனக் கூறும்போது கண்ணன் தங்கைக்கு உவகையும், முருகன் தம்பிக்கு வருத்தமும் உண்டாம் அன்றோ? அதற்கேற்ப அச் சொற்றொடரின் இசையமைப்பு மாறிவரும். இதனைக் கண்ணன் தங்கை கூறும் முறைவேறு; முருகன் தம்பி கூறும் முறைவேறு. இவ்வாறு உணர்ச்சி நிரம்பிய சொற்கள், பேசுவோரின் உணர்ச்சியை வெளியிடுவதோடு, பிறர் நிலையை மாற்றியமைக்கவும் பயன்படுகின்றன. தாமே புறநிலையோடு

ஒத்துப் பொருத்தமுற்றுச் சமநிலை பெற்று விளங்கவும் பயன் படுகின்றன. நம் உள்ளத்தே பொங்கி வழியும் உணர்ச்சிக்குப் போக்கு வீடாகவும் சொற்கள் பயன் படுகின்றன. "வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வது" எனப் பேசுகிறார்கள் அன்றோ? வாயார வைதபின் கோபம் தணிகிற வியப்பினைக் காண்கிறோம்.

இழிவழக்கு :- "கெட்ட பேச்சுக்கள்" எனப் பழிக்கப் படுவனவற்றைக் குழவி வழங்கிவருவது இவ்வாறு உணர்ச்சியை விளைப்பதாலேயாம். பாட்டும் உணர்ச்சிநிலைப் பேச்சேயாம். கொந்தளித்து எழுந்த உணர்ச்சியை அமைதிநிலையில் நினைத்துக் கொள்ளுவது பாட்டு (Emotion recollected in tranquility) என்பர் வொர்ட்ஸ் வொர்த் (Wordsworth) என்ற ஆங்கிலப் பாவாணர். ஆதலின், உணர்ச்சி பொங்கி வழியக் கெட்ட பேச்சுக்களைப் பேசி நிற்காதபடி குழவிகளின் மனத்தினை உயர்த்திப் பாவுலகிற் புகுத்த முயலுதல் வேண்டும். சொற்களின் உயர்ந்த உணர்ச்சிநிலை விளங்க வேண்டுமானால் அது குழவியின் அனுபவத்திற்கு ஒத்தது ஆதல் வேண்டும். பொது வழக்குகளை விட இழி வழக்குகள் கேட்போர் கருத்தைக் கவர்ந்து வற்புறுத்திக் கூறுகின்றன. இத்தகைய பயனைக் கண்டதும் குழவிகளும் அவற்றை விரும்புகின்றன. குழவி இழிசொற்களைக் கற்றுக்கொண்டால் அவற்றைக் கண்டு சீறிவிழும் தோறும் இழிசொற்களே வெற்றி பெறுகின்றன. அத்தகைய உணர்ச்சிநிலையை எழுப்பவில்லையானால் எதிர்பார்த்த பாண வேடிக்கை எழாமையால் குழவிகள் அத்தகைய சொற்களை மறந்து போகும். குழவியின் மனநிலை இழிவுறாமல் உயர வேண்டுமானால் சொற்களின் பொருளை மட்டும் அன்றி அவற்றின் உணர்ச்சி நிலையையும் கற்றுக் கொடுப்பது இன்றியமையாததே ஆம். வெறுஞ் சொல்லார-

வாரத்தில் ஈடு படுதல் ஆகாது. அவ்வாறு ஈடு படுவோர் சொல்லின் பொருளை உணராது மிக அறிந்தவர்கள் போலச் சொற்களையே கொட்டியளந்து வரக்காண்போம். இது போலி அறிவுநிலையே ஆம்.

## VII. மொழிக் கோளாறு.

எண்ணத்தினை அடக்குதல் :— மக்கட் கூட்டத்திடையே வழங்கிவருவதற்கு உறுகருவியாக எங்கும் வழங்குவது பேச்சேயாம். வேறொரு நோக்கமுமின்றிப் பேசுவதும் இன்பமாகிறது. வெறுங் குரலைக் கேட்பதும் மகிழ்ச்சியாகிறது. ஆனால், பேச்சு அம்மட்டோடு நில்லாமல் எண்ணங்களை வெளியிடுவதற்கு ஏற்றதொரு வழியாகவும் அமைகிறது. நமக்குள் நாம் எண்ணுவதற்கும் பேச்சு உதவுகிறது. பேசுவதென்றால் பிறர் கேட்க உரக்க எண்ணுவதென்றே கூறலாம். ஆனால், உரக்க எண்ணாது நமக்குள்ளேயே எண்ணங்களை அடக்கிக் கொள்வது வழக்கமாகிவிட்டது. நம் எண்ணங்களையும் கருத்துக்களையும் நமக்குள் அடக்கிக் கொள்ளப் பழகும் அடக்கமே அடக்க வகைகளில் எல்லாம் சிறந்ததாம். 'பிறர் என்ன கருதுகிறார்கள்' என அறிய முயலாது பிறரையும் பேசவிடாது, தாமே பேசித் தம் எண்ணத்தையே முரசறைந்து வருவது பெருநோயாம். ஆதலின், நம் எண்ணத்தையும் பிறர் அறிந்து கொள்கிறார்களா என்பதனையே நோக்கமாகக் கொண்டு உற்றுநோக்கி, அவர்கள் தெள்ளத்தெளிய அறிந்து கொள்ளுமாறு செய்துவரப் பயின்றால் நம்மைப் பற்றியே எண்ணும் வழக்கம் மறையும்.

குறைபாட்டுக் கணக்கு :- பேச்சிற்காணும் குறைபாடுகள் குழவிப் பருவத்தும் காணப்பெறுவதனை இப்போது அறிந்து வருகிறோம். பள்ளிச் சிறுவர்கள் நூற்றுக்கு ஒருவராக

இவ்வாறு இந்தக் குறைபாட்டினுல் வருந்தக் காண்கிறோம். பெண்ணினும் ஆண்களே இந்தக் குறைக்கு ஆளாகின்றனர். பள்ளிகளில் குறைபாடுடைய ஒரு பெண்ணுக்குக் குறை-பாடுடைய ஆண்கள் ஐவராக விளங்குகின்றனர். இந்தக் குறைபாடுகளிற் சில மருத்துவர் தீர்க்கற்பாலனவாம். சில மனநிலையைப் பொறுத்தனவாம்.

உடற் குறை :- உடலுறுப்புக் கேடுகளால் எழும் பேச்சுப் பிறழ்ச்சிகள் சில. பிறப்பதற்கு முன்னரே அண்ணம் முழுதும் நிரம்பி மூடிக்கொள்வது இயல்பு. சிலபோது அவ்வாறு நிரம்பாமையால் பிளவு அண்ணத்தோடு பிறக்கும் குழவிகள் சில. அண்ணம் மூடிக்கொண்டாலும் மேல் உதடு நிரம்பாது பிரிந்து முயல் உதடு போலப் பிளவு உதடு பெற்றுப் பிறக்கும் குழவிகள் சில. ஒத்தொலிப்பதற்கும் (Resonance) போதிய இடம் வாயில் இல்லாதே இருக்கப் பிறக்கும் குழவிகள் சில. இவற்றின் பேச்சு நன்கு கேளாது. பற்கள் பிறழ்ந்து வளர்-வதாலும், மூக்கிலும் தொண்டையிலும் தசை வளர்தலாலும், (Adenoid, Tonsil) பிறவற்ருலும் பேச்சு நன்கு விளங்காமற் போகலாம். பிறர் பேசுவதனையே கேட்டு வளரும் பேச்சுநிலை செவிட்டுக் குழவியிடம் நன்கு வளருவது எங்ஙனம்? பேச்சினை ஆளும் மூளைப்பகுதி கெட்டு நின்ருலும் பேச்சுநிலை எழாமற்-போகலாம். இந்தக் குறைகளிற் பலவற்றை மருத்துவர்களே போக்குதல் கூடும். பிறநிலைகளில் தக்க கல்விமுறையால் திறம்பெற்ற ஆசிரியன்மார் பேசவைக்கும் தம் முயற்சியில் சிறிது வெற்றி காணுதல் கூடும். ஊமைப் பள்ளிகள் முதலியன இதற்குத் தக்க சான்றுகளாம்.

பிற குறை :— இவ்வாறு உடற் கூற்றமைப்பால் அன்றிச் சரியான வழக்கம் பேச்சு முறையிற் படியாததால் வரும் கேடுகள் பல. இவை முறை பிறழ்ந்த பயிற்சி முறையால்

எழுந்தவையாம். பிறழ்ச்சிகளை உணர்ந்தே திருத்தவேண்டும். பிறழ்ச்சிகளை அறிவதற்கு அறிஞர்கள் ஒரு வழி செய்துள்ளார்கள். பல பொருள்கள், பல மக்களின் செயல்கள் முதலியவற்றைக் குறிக்கும் படங்களைக் குழவிக்குக் காட்டிக் கேள்விகளைக் கேட்டுவரும்போது குறைபாடுகள் விளங்க இடம் உண்டு. எழுத்தை ஒலிக்கும் முறையிற் பிறழ்ச்சி, சொல்லை ஒலிக்கும் முறையிற் பிறழ்ச்சி, இசைக்கும் முறையிற் பிறழ்ச்சி முதலியவற்றை உற்றுநோக்கி ஆராய்ந்து அறிந்து அததற்கு வேண்டிய பயிற்சிகளின் வழியே இத்தகைய குற்றங்களை எளிதில் நீக்கலாம்.

தெற்றுவாய் :— பேச்சுக் குறைபாடுகளில் தெற்றுவாய் என்பதும் ஒன்று. சிலர் தம் பேச்சோட்டத்தினிடையே ஓரிடத்தில் முயற்சியின்றித் திருப்பித் திருப்பி ஒரே ஒலியை ஒலிக்கவோ, ஒரே ஒலியை நீட்டி நீட்டி ஒலிக்கவோ, தயங்கித் தயங்கி நிற்கவோ காண்கிறோம். நான்கைந்து வயதிற்குள் இந்தக் குறை எழுந்து தோன்றும். தெற்றுவாயர் ஆவாரில் நூற்றுக்கு 90 பேர்கள் எட்டு வயதிற்குள்ளேயே அவ்வாறு ஆகிவிடக் காண்கிறோம். அச்சமும், தன்னையே நோக்கி நிற்கின்ற நிலையுமே தெற்றுவாய்க்குக் காரணமாம். தன்னைச் சுற்றியுள்ள மக்கட் கூட்டத்தோடு பொருத்தமின்றி வாழும் நிலையையே இது நன்கு விளக்கி வைக்கின்றது. வெருட்டி மருட்டி வளர்க்கப்பட்ட குழவியின் தயக்க நிலையே தெற்றுவாய் நிலை. பல முறை குற்றஞ் சாட்டப் பெற்று வற்புறுத்தி ஒடுக்கப்பெற்றமையால் பேச்சோட்டம் வழக்கமாக ஓடாதபடி ஒவ்வோர் ஒலியினையும் ஊன்றி நோக்கிச் சரிவர ஒலிக்க வேண்டும் என்ற அச்சத்தால் குழவி தயக்கமடைகிறது. இவ்வாறு குழவிகளைப் பழக்குவதால் நேரிடும் பெருங் கேட்டிற்கு இதுவே நல்ல எடுத்துக் காட்டாகும்.

தன்னுட்டமின்மை :— ஆகவே, இந்த வழக்கத்தை மாற்ற முயலும்போது குழவி தன்னையும் தன் செயலையும் தன் பேச்சையும் மறந்து வரப் பழகுதல் வேண்டும். தெற்று-வாயர் நன்ருகப் பாடக்கூடும். அங்குப் பேச்சில் நாட்டம் இல்லாமையால் பாட்டை நன்ருகப் பாடி இசை கூட்டிவரக் காண்கின்ருேம். பிற குழவிகளோடு சேர்ந்து வாழும்போது தனியே இதன் குறைகளைக் கவனியாது விடவேண்டும். பேச்சைத் திருத்துவதற்காக விளையாட வைக்கின்ருர்கள் என அத்தகைய குழவி அறியாதபடி, ஒலி விளையாடல்களை அமைத்துத் திருத்த முயலவேண்டும். சிறிது வயதான குழவி-யானுல், அதனைச் சுற்றியுள்ளவர்கள் அதன் தெற்ருவாய் நிலையைக் கவனியாது இருக்குமாறு செய்தல் வேண்டும். தன்னையும் தன் செயலையுமே உற்று நோக்குந் தன்னுட்டநிலை ஒழியப் புறநாட்டநிலை வளருமாறு செய்தல் வேண்டும். தவற்றிற்காகத் தலையை உடைத்துக் கொள்ளாமல் நடந்து-கொண்டு, அக்குழவியின் தன்னம்பிக்கையையும் தன்னுறு-தியையும் வளர்க்கக்கூடிய எல்லா வகையான நிலைகளையும் அமைத்தல்வேண்டும். இத்தகைய குழவிகளின் அறிவுநிலையிற் குறைபாடு ஒன்றும் இருப்பதில்லை. ஆகலின், அதனைப் பற்றிக் கவலைகொள்ள வேண்டுவதில்லை.

மொழிக் கோளாற்றின் காரணம்:— மொழி வளர்ச்சிக்கு இடையூருக இருப்பவை (1) செவிக்கேடு, (2) ஒலியுறுப்புக்கேடு, (3) பேச்சு வழக்கக்கேடு, (4) அறிவு நிலைமையின்பிற்பாட்டுநிலை, (5) பேச்சைக் கேட்க வசதி இன்மை, (6) தோழர்களின் நிலை (7) இரு மொழி பேசும் வீடு என்பனவே ஆம். இவற்றில் முதல் மூன்றினையும் முன்னர்க் கண்டோம். அறிவு நிலையில் பிற்பாடான குழவிகளும் பேச்சில் முற்போக்கடைவது இல்லை. சொற்களுக்கும் எண்ணங்களுக்கும் நெருங்கிய

தொடர்புண்டு. ஆதலின், முன்னே கண்ட பேச்சின் 33 படிகளையும் பிற்பாடரான குழவிகள் ஏறிவர முடியாது. அறிவிற்கு ஏற்பவே பேச்சும் விளங்கும்.

பேச்சினைக் கேளாமை :— பேச்சினைக் கேட்டுப் பழகி அன்றோ பேச்சு எழுவது? பேச்சினையே கேளாதிருந்தால் பேச்சு எழுவது எங்ஙனம்? ஒலிப்பது நமக்கு இயற்கையானலும், நாம் பேசும் மொழி நம்மோடு பிறந்ததன்று. நம்மைச் சுற்றியுள்ளாரோடு நாம் பழகும்போது செயற்கையாக நாம் கற்றுக்கொள்வதே மொழியாம். தமிழ்த்தாயின் வயிற்றுக் குழவி ஆங்கில நாட்டில் தன் தாய் சென்றபோது பிறந்து அங்கே வளருமானல் ஆங்கிலம் அன்றோ கற்றுக் கொள்ளும்? பிரான்சில் அவேர்ஞான் காட்டில் வளர்ந்த குழவி ஒன்று 19 ஆம் நூற்றுண்டில் தனது 11 ஆவது வயதில் கண்டெடுக்கப் பட்டது; செவிடும், ஊமையுமாக இருந்ததாம். இதார்ட் என்பவர் அதற்குப் பேச்சுக் கற்றுக்கொடுக்க எவ்வளவோ முயன்றும் அக்குழவி பேச ஒன்றும் கற்றுக் கொள்ள வில்லையாம். இது மிக மிகப் பிற்பாடான குழவி என்பது தெளிவு. ஓநாயோடு வாழ்ந்த குழவிகள் இரண்டினைப் பற்றியும் சில குறிப்புகள் ஸ்கோயர் என்பார் வெளியிட்டுள்ளார். கண்டெடுத்தபோது ஒன்றன் வயது எட்டு; மற்றென்றன் வயது இரண்டு. ஒன்று இறந்ததாம். எஞ்சிநின்ற பெண் சிறிதளவே பேசக் கற்றுக் கொண்டதாம். எனவே, பேச்சினைக் கேளா நிலைமையில் வாழ்ந்தால் பேச்செழுவது அருமையே ஆம். பிற்பாடான குழவிகளுக்குப் பின்னர்ப் பேசக் கற்றுக்கொடுப்பது அருமையேயாம். இது வயது முதிர்ந்தபின் பிற மொழிகளைக் கற்பது போலும் ஓர் அருமைப் பாடேயாம். இளமையில் சிறிது கற்பிப்பது வயது சென்றபின் மிகுதியும் கற்பிப்பதற்கு ஒப்பாகும். மேற்கூறிய கதைகளை விட்டு விட்டுப்

பொதுவாக ஆராய்ந்து பார்க்கும்போது, குழவி பேசுவது காலம் தாழ்த்துப் போகுமானுல் பேசும் திறமையே அடியோடு கெடும் என்பதற்கு இடம் இல்லை எனலாம்.

நிலைக்கேற்ற பேச்சு :— சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்பப் பேச்சு முற்றியும் தடைபட்டும் வருவது இயல்பே என்பதாயிற்று. ஆதலின், உயர்ந்த நிலையில் உள்ள மக்கட் கூட்டத்திடையே வாழும் குழவி பண்பட்ட பேச்சினைப் பேசவருவதும் இயல்பேயாம். செல்வக் குழவிகளும் அங்ஙனமே பலவகை அனுபவத்திடையே வாழ்ந்து வருவதால் அவர்களது பேசுந் திறமை விரைந்து உயர்வுற்று விளங்கவருவதும் இயல்பே ஆம். தன்னினும் சிறிய குழவிகளோடேயே வாழ்ந்து வருகின்ற குழவி அவர்களைப் போலவே பேசுவதால் அதன் பேச்சு அதன் வயதிற்கேற்ப வளராமல் தடைபடுகிறது. ஒரே குழவியுள்ள குடும்பத்திலே அந்தக் குழவி கேட்டுப் பழகக் கூடிய குழந்தை வேறு ஒன்றும் இல்லாமையால் பெரியோரின் பேச்சையே கேட்டுப் பழகுகிறது. இதுகாரணமாக அதன் பேச்சுநிலை, மழலைநிலையின்றிப் பெரியோரது பேச்சு நிலையை விரைந்து அடைகிறது. இரட்டைப் பிள்ளைகளாகப் பிறந்தோர் ஒருவரிடம் ஒருவர் கற்பது எங்கே? ஆதலின், அவர்கள் பேச்சானது பிறநிலைகளில் வருவதனைவிட மிக மெல்லவே வளர்கிறது எனலாம். குழவிகள் ஆணு பெண்ணு என்பதனை நோக்கியே வளர்ச்சி நிலையைக் கூறக்கூடும் எனவும் அறிகின்றோம். பொதுவாகப் பெண் குழவிகளே மொழித்திறத்தில் ஆண் குழவிகளினும் சிறந்து விளங்குகின்றனர். இந்தச் சிறப்புநிலை, வாழ்க்கையில் முதலாண்டின் முடிவிலேயே, புலப்படத்தோன்றி விளங்குகிறது.

மக்களும் பேச்சும் :- மக்கட் கூட்டுறவிற்கும் பேச்சுக்கும் உள்ள தொடர்பு இவ்வாறு இன்றியமையா நிலையில் விளங்கக்

காண்கிறோம். ஆனால், மக்களோடு கூடும் கூட்டம் ஒன்றே பேச்சினை விளைவிக்கும் என்பதற்கு இல்லை. குரங்கு எவ்வளவு தான் நம்மொடு பழகினாலும் பேசுவதில்லை. அதற்கு வாயுண்டு; குரல் உண்டு; அது கூவுவதும் உண்டு. அக்கூப்பாடு அதன் உணர்ச்சியை உணர்த்தலாம்; பிறரைத் துணைக்கோ, பிறிதொரு நிலைக்கோ அழைக்கலாம். ஆனால், மக்களிடையே போல இந்த ஒலிகள் உணர்ச்சி நிலையை விளக்குகின்றனவே அன்றிப் பொருளை விளக்கவரும் விளக்க நிலையை என்றும் அடைவதே இல்லை.

உண்ணலும் பேச்சும் :- ஈதே இங்குள்ளதொரு புதுமை. உண்ணுதற்கு அமைந்த கருவியாம் வாயும், குரல் வளையும் எண்ணுதலை வெளியிடும் கருவியாயின. உணவு உருண்டையை (உண்டையை) விழுங்குவதற்குப் பதிலாகக் காற்றுண்டையை விழுங்கிக் கருத்தினை வெளியிடுவதே பேச்சாக மாறியுள்ளது. உயிர்ப்பு அமைப்பு உயிரின் உயர்நிலையாம் பேச்சு அமைப்பாயிற்று. வேறொன்றாக அமைந்து குரங்கு முதலிய நிலைகளில் தோன்றாது நின்றது இவ்வாறு மக்களிடையே புதிதாகத் தோன்றுகிறது. இவ்வாறு முன்னர்த் தோன்றாது பின்னர்ப் புதிதாகத் தோன்றுவதனை அறிஞர் முளைவிடுமுறை (Emergent evoluton) என்பர். சடப் பொருளிடையே உயிர்ப் பொருள் இயங்க வருவதும். பின்னர் உயிர்ப் பொருளிடையே பேச்சு எழுவது - ஏன் - இயற்கையின் வளர்ச்சியனைத்துமே இவ்வண்ணம் முளைவிடு முறையாக அமைகின்றது என்பாரும் உளர்.

இரு மொழிக் குடும்பம் :— இருமொழி பேசும் குடும்பம் பேச்சினைத் தடுக்கின்றது என்ற கொள்கையினையும் சிறிது நோக்குதல் வேண்டும். வானொலியும், ஆகாய விமானமும்,

விஞ்ஞானமும் இன்று உலகினை ஒன்றாக்கிப் பிணைத்துள்ளன. வேற்றார் போய் வாழுதலும் வழக்கமாகி வருகிறது. ஒரு நாட்டினர் மற்றொரு நாட்டினரை மணப்பதும் வழக்கமாகி வருகிறது. இந்தியாவில் வேற்று நாட்டிற்குச் செல்லாமலே ஒரு மொழி பேசுவோர் மற்றொரு மொழி பேசுவோரை மணந்து வாழ்கின்றனர். தாய் ஒரு மொழியும் தந்தை ஒரு மொழியும் பேசிவரும்போது குழவி அவர்களிடையே வாழ்கிறது. ஆளுவோர் மொழி வேறொன்றாக, அவர் கீழ்வாழ்வோர் பேசும் மொழி மற்றொன்றாக, இரு மொழியும் ஒரு நாட்டிடையே வழங்கிவரும்போது அந்த நிலையிலும் குடும்பத்தே தாயும் தந்தையும் இரு மொழியினையும் பேசிவரலாம். இந்தியர் இன்றுள்ள நிலையிலும், உலகம் இன்றுள்ள நிலையிலும் இரு-மொழிப் பயிற்சி இன்றியமையாததே எனலாம்.

பிஜின் ஆங்கிலம் :— ஹாவாய் தீவில் வாழ்வோர் தம் தாய் மொழியையும் அறிவர். ஆங்கிலேயர் கப்பலில் வந்து போவதால் அவர்களோடு ஆங்கிலமும் பேசுவர். ஆனால், அந்த ஆங்கிலம் நம் நாட்டுப் பழைய "பட்லர் இங்கிலிஷ்" போன்றதேயாம். அதனைப் பிஜின் ஆங்கிலம் (Pidgin-English) என அறிஞர் வழங்குகின்றனர். இந்த ஹாவாய் மக்கள் ஆங்கிலமும் நன்றாகப் பேசுவதில்லை; தம் தாய் மொழியையும் நன்றாகப் பேசுவதில்லை. ஆகையால், இருமொழி வழக்கானது பேச்சுத்திறனை அடியோடு கெடுக்கின்றது எனப் பலர் எடுத்துக் காட்டுகின்றனர். அவர்கள் ஆங்கிலம் நன்றாகப் பேசாமைக்குக் காரணம் அவர்கள் பேசும் "பிஜின் ஆங்கிலத்தின்" இயல்பேயாம். சரியான ஆங்கிலம் பேச அவர்கள் முயலவில்லை; முயலாத அந்த மொழி எங்ஙனம் வரும்? "பிஜின் ஆங்கிலம்" பேசவே முயல்கின்றனர்; அந்த முயற்சி வெற்றியடைந்தே உள்ளது. பிஜின் ஆங்கிலத்தையும்

தாய் மொழியோடு பேசிவரும்போது பிஜின் ஆங்கிலத்திற் போலத் தம் தாய் மொழிப் பேச்சிலும் ஒலிக்குறிப்பு, இரக்கக் குறிப்பு முதலியன மலிந்து வருகின்றன. சிறு வாக்கியங்களே நிறைய வருகின்றன. கேள்விகளும் முற்ற முடியாத அமைப்பிலேயே கிடக்கின்றன.

திருத்தம் :- இந்த ஆராய்ச்சியால் இருமொழிப் பயிற்சியின் பயனாக வரும் கேடுகளைத் தடுக்க வழி அறியலாம். குழவியின் மனத்தே குழப்பம் ஏற்படாதவாறு தடுத்தல் வேண்டும். இங்கே குழவி ஒரு மொழியிற் பேசியது ஒருவரிடம் தான் கருதியதனை விளைவிக்க மற்றொருவரிடம் கருதியதனை விளைவியாது போகக்காண்கிறது; இரண்டிடத்திலும் வெற்றியினை எதிர் பார்க்கும் குழவி திகைத்துத் தயங்குகிறது; இன்னது செய்வது என உணராது பேச்சும் தடைபட்டுநிற்கிறது; பேசவும் ஊக்கமின்றி வாடுகிறது. இத்தகைய மனக் குழப்பம் ஏற்படாதபடி தடுப்போமானல் இரு மொழிப் பயிற்சியால் கேடு ஒன்றும் விளைவதற்கு இடம் இல்லை. பிஜின் ஆங்கிலம் முதலியவற்றை வளரவிடாது, கற்கும் ஒவ்வொரு மொழியின் தூய்மையை வளர்த்தால்தான் அம்மொழியின் நுட்பங்கள் அனைத்தும் மனத்திற் படிந்து குழவியை வளர்க்கும். அவ்வாறு பழக்கிவந்தால் பிஜின் ஆங்கிலமும் வளராது; தாய் மொழியும் கெடாதாம். ஜர்மனிக்கும் பிரான்சுக்கும் இடையே உள்ள அல்சாஸ் லொரய்ன் (Alsace - Lorrain) என்ற இடத்தே வாழும் மக்கள் ஜர்மானிய மொழி, பிரஞ்சு மொழி என்ற இரு மொழியையும் தாய் மொழியாகக் கற்றுவரக் காண்கிறோம். தமிழ் நாட்டில் வாழும் தெலுங்கர்கள் குடும்பத்தில் வாழும் குழவிகள் தமிழும் தெலுங்கும் பேசிவருகின்றன. குழவிநிலையிலேயே இந்தக் குடும்பங்களில் பழகுவது போல, இரு மொழிகளையும் கேட்டுப் பழகுவது

பின்னர் அம்மொழியிற் பேசப் புகுவதற்கு மிகுந்த துணை செய்வதாகும்.

## VIII. எழுத்து

எழுத்தின் வீறு :- பேச்சினை நிலைபெறவைப்பது எழுத்தே ஆகும். எழுத்துக்களை மக்கள் அறிவதற்கு முன், மக்கள் தம் நினைவையே நம்பி இருந்தனர். எழுதாக் கிளவியாய்த் தலை-முறை தலைமுறையாய், வாய் வழியாகவும், செவி வழியாகவும் வாழ்ந்துவரும் பாடல்களைக் காணலாம். மக்கள் தம் நினைவில் அவற்றை வைத்திருக்கும் ஆற்றலாலும், அவற்றைப் பிறழாமல் பின்னோர்க்குக் கற்பிக்கும் தகுதிப் பாட்டினாலுமே அவை காலக் கடலைக் கடந்து நம்மிடம் வரலாயின. முன் எல்லாம் பேசுவதென்றால் சிலர் எதிரே பேசுவதே ஆம். ஆனால், இப்போதோ வானொலி நம் உலகிடையே பரந்து நிற்கும் எண்ணற்ற மக்களோடு பேச வைக்கின்றது. இவ்வாறு நாம் இடத்தைக் கடந்து நிற்கலாம். எனினும், காலத்தையும் கடந்து பிற்காலத்தே வாழப் போவாரோடு பேசுவது எழுத்தின் வழியாக மட்டுமே முடிவது ஒன்றாம். எனவே, மக்கள் இனத்தைக் கால வேற்றுமையும் இடவேற்றுமையும் இன்றி ஒன்றாக்கிக் காணும் காட்சி எழுத்தின் திரு முன்பே எழுகிறது எனலாம். எழுதும்போது நம்மையே விளக்கிவைப்பது போல எண்ணி எண்ணி எழுதுகிறோம். ஏதேனும் பேசிப் போவது போல அன்று நாம் எழுதுவது. பேசுவதற்கு வேண்டியதினும் எழுதுவதற்கே பெரிதும் காலம் வேண்டும். ஆதலால், கருத்தினைத் திரட்டி இன்றியமையாதவற்றை மட்டுமே எழுதமுடிகிறது. கம்பனையும், காளிதாசனையும், ஷேக்ஸ்-பியரையும், துளசிதாசரையும் படிக்கும்போது அவர்கள் உள்ளத்தை நாம் உள்ளவாறு உணருவதுபோல அவர்களுடன்

நேரே பேச வாய்ப்புக் கிடைத்திருந்தாலும் உணர்ந்திருக்க முடியாது.

எழுத்து வரலாறு :— குகைகளில் வாழ்ந்து வந்த ஆதி குகை மனிதர்களும் (Cave men) ஓவியம் வரைந்து வந்தனர் என்பது அவர்கள் விட்டுப் போயுள்ள அறிகுறிகளால் விளங்குகின்றது. இவற்றில் சிலவற்றைத் தத்தம் அறிகுறி-களாகப் பயன் படுத்தியதனாலேயே கொடிகள் முதலிய சின்னங்கள் எழுந்தன. ஓவியத்தின் வழியாகக் கருத்தை வெளியிடலாம் என அறிந்த மக்கள் அவ்வாறு ஓவியங்கள் எழுதியே தம் கருத்தை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி கொண்டார்கள். தொலைவில் இருப்பவருக்குக் கருத்தை வெளியிடுவதற்கு வேறுவழி இல்லை. நிலையாக எழுதிவைப்ப-தற்கும் இதுவே வழி என எளிதில் கண்டு கொண்டனர். இந்த முயற்சியே ஓவிய எழுத்துக்களாக முற்றிப் பரவியது. இரண்டு ஒரு கருத்துக்களை அன்றிப் பல கருத்துக்களை எழுதிவரும்போது விரைவு காரணமாக ஓவியங்கள் இரண்டொரு வரிகளாகச் சுருங்கி வருகின்றன. இவை முழுநிலை ஓவியமாக விளங்காமல் ஓவிய அறிகுறிகளாகவே அமைந்தன. சீன எழுத்துக்களைக் கண்டவர்கள் இதன் உண்மையை அறிவார்கள். எகிப்திய எழுத்துக்களும் மோஹஞ்சதாரோ எழுத்துக்களும் ஒரு சிறிது இத்தகை-யனவே ஆம். பின்னர் அந்த அறிகுறி ஓவியமும் ஒரு சொல்லாக நின்று அந்தச் சொல்லை அறிவியாது அந்தச் சொல்லின் முதல் எழுத்தினை மட்டும் அறிவிக்க வந்தது. இது மலையின் படம் “ம” என்ற எழுத்தைக் குறிப்பது போலாம். இங்கே சொல்லின் பொருளை அன்றிச் சொல்லின் எழுத்துக்களை மக்கள் பிரித்தறிய வந்தனர். இவையே ஒலி எழுத்துக்களாம். ஆனால் வட மொழியிலும், தமிழில் பல இடங்களிலும்

எழுத்துக்கள் என்பவை உயிர்மெய் எழுத்துக்களாக இருக்கக் காண்கிறோம். அலகு நிலை பெறுவனவற்றையே பெரும் பான்மையும் தனித் தனி எழுத்தாக எழுதுகின்றனர். இவற்றை அலகு எழுத்துக்கள் (Syllable writing) எனலாம். இந்த நிலைக்கும் பின்னர் ஆங்கிலம் முதலியவற்றிற் போலக் கூட்டெழுத்தாம் அலகெழுத்துக்களைப் பிரித்துத் தனித் தனி எழுத்தாக எழுதிவந்தனர். ஓவிய எழுத்துக்கள், ஓவிய அறிகுறி எழுத்துக்கள், ஒலி எழுத்துக்கள், அலகு எழுத்துக்கள், தனி எழுத்துக்கள் என்ற பலவகை நிலைகளாக எழுத்தின் வரலாறு வளர்ந்து வந்துள்ளது.

எழுதப் பழகல் :— குழவியும் எழுத்துக்களை எழுதப் பழகுவதற்குமுன் படத்தைக் கண்டு பொருளை உணர்ந்து கொள்ளப் பழக்கப் பெறுகிறது. "தனித்தனி எழுத்துக்களை முன்னே கற்பிப்பதா? சொல் சொல்லாக குழவிகளுக்குக் கற்பிப்பதா?" என்பதனைப் பற்றிப் பலதிறக் கொள்கைகள் வழங்கியது உண்டு. குழவி பேசிப் பழகும்போது சொல் சொல்லாகவே அறிந்து பேசி வருதலின், எழுதும்போதும் அவ்வாறு கற்பிப்பதே பொருத்தம் உள்ளதாம். பின்னர்க் குழவி அச்சொல்லின் பல நிலைகளாக நிற்கும் எழுத்துக்களைச் சிறப்பு வகையாகப் பிரித்து உணர்கின்றது. "வல்சி"- "சிவல்", "மடமட" - "டமடம", "வேவமே - மேவவே", "மாதவா-வாதமா" என்பன போன்ற இரண்டு இரண்டு சொற்களும் எழுத்துக்களால் ஒத்திருப்பினும் எழுத்துக்கள் நிற்கும் முறையில் மாறுபட்டே விளங்குகின்றன. இவற்றை ஒப்பிட்டே அறிதல் வேண்டும். டபயமழ; ஈரற; சகதநஙு; ஞளனண; லவ; முதலியவற்றை உற்று நோக்குங்கால் மட்டுமே வேற்றுமை புலனாகும். இங்கும் 'தாய், நாய்' முதலியவற்றிற்போல எழுத்து வேற்றுமை, பொருள் வேற்றுமையோடு ஒத்து மனத்திற்

படியுமாறு செய்வதே சிறந்த வழியாம். பேசும்போது 'கல், கள்' என்பவற்றின் வேற்றுமையை அறிவதுபோல எழுதும் போதும் அறிந்தால் அவற்றின் மயக்கம் நிலைக்குமோ? பேசும் போது பொருளின் நுட்ப வேற்றுமைகளை அறிந்தது போலக் குழவி எழுத்துக்களிலும், சொற்களிலும் உள்ள நுட்பவடிவ வேற்றுமைகளை எழுதும்போதும் அறிதல்வேண்டும். இவ்வாறு ஒப்பிட்டும், வேறு பிரித்தும் ஆராய்வது எழுதுவதற்குப் பெரிதும் பயன்படும்.

மனக் கவர்ச்சி :— குழவியை நன்றாக எழுதப் பழக்க வேண்டுமானால் எழுத்தில் வரும் கோடுகளையும் வளைவுகளையும் குழவி நன்றாக உற்றுப் பார்த்துவரப் பழக்க வேண்டும். அவை குழவியின் மனத்தினைக் கவருமாறும் செய்தல் வேண்டும். "ஒவ்வொரு நேர்க்கோடும் ஒவ்வொரு போர் வீரன். போர் வீரர்கள் நேர் நிமிர்ந்து நிற்கவேண்டும் அல்லவா" என்று குழவிகளிடம் சொல்லிவிட்டால் கோடுகள் வளையாது நேரே நிமிர்ந்து நிற்குமாறு அவை எழுதுகின்றனவாம். "கோடுகள் நத்தைப் புள்ளியாரின் இயக்கமே ஆம். அவர் கீழே இருந்து மேலே தொடர்ந்து போவார். தவளை போலக் குதிக்க மாட்டார்" என்று கதை கூறினால் கோடுகளை இடையீடின்றிக் குழவிகள் வரையத் தொடங்குகின்றனவாம். ஒவ்வோர் எழுத்தையும் ஆசிரியர் ஒவ்வொரு வீடு எனலாம். ஒவ்வொரு சொல்லையும் வீடுகள் நிறைந்த தெரு எனலாம். எழுத்துக்-களிலும் 'ல்' என்பதனைப் பாம்பெனக் காட்டலாம். இவ்வாறு குழவியின் ஆசையைக் கிளப்பி ஊக்கத்தை விளைவிக்கும் வழியே சிறந்த வழியாம்.

எழுத்துக் கூட்டல் :— அடுத்து, எழுத்துக் கூட்டுவதில் அருமைப்பாடு எழலாம். பேசக் கேட்டு எழுதும்போது இந்த

அருமைப்பாடு மிகுந்து கொண்டே வரும். "ர" "ற" என்பவற்றின் வேற்றுமை, "ல," "ள," "ழ" என்பவற்றின் வேற்றுமை, "ந" "ன" "ண" என்பவற்றின் வேற்றுமை-ஒலி வகையால் குழவிக்கு நன்கு புலனுகாமையால் இவை அனைத்தையும் மயங்கவும் கூடும். இவற்றின் வேறுபாட்டினைச் சொல்லில் வைத்துக் காட்டிப் பல முறையும் பழக்கிவிட்டால் மட்டுமே மனத்திலே பதியும். அவ்வாறு செய்யாமையாலேயே இந்த வேற்றுமைகள் மாணவர்களுக்குப் பேரிடையூருகத் தடை செய்து நிற்கின்றன.

## IX. படிக்க வாராத் தடுமாற்றம்

சரியான முறை:- சில குழவிகள் நன்ருகப் படிக்க வாராது தடுமாறுகின்றன. இந்தத் தடுமாற்றம் சிலபோது நீண்ட நாள் வரையில் நிலை நிற்கின்றது. இது பெற்ருேர்க்கும், ஆசிரியன்மாருக்கும் பெருங்கவலையை விளைவிக்கின்றது. இத்தகைய தடுமாற்றத்தின் காரணத்தை ஆராய்தல் வேண்டும். குழவியின் அறிவு நிலையிலேயே குறைவுபாடு இருக்குமானல் இந்தத் தடு-மாற்றம் நீங்குவது அருமையே ஆம். குழவியைப் படிக்கவே தூண்டாமையாலும் இத்தகைய தடுமாற்றம் எழலாம். குழவியைப் படிக்கப் பழக்கும்போது, சரியான முறையில் நாம் பழக்கி வையாமையால் இக்குறைபாடு தோன்றலாம். அந்த நிலையில் குழவிக்குப் படிப்பதில் ஒரு பேர் அவாவினை எழுப்ப நாம் வழிதேட வேண்டும். பழைய பாழான வழக்-கங்கள் எல்லாம் ஒழியப் புதிய வழியிலே குழவியின் மனம் கோணது செல்லுமாறு பழக்குதல் வேண்டும். பெற்ருேரோ, மற்ருேரோ, குழவி படித்து வரும்போது, தவறு ஒன்றையும் பொறுக்காமல் இடிபோல இடித்து நாய்போலக் குரைத்து நின்ருல் குழவி தேங்கி நின்றுவிடும். தன்னுற் படிக்கக்கூடும்

என்ற தன்னம்பிக்கையை அடியோடும் இழந்து தடுமாறியே நிற்கும். "நேரேநில்" "உன்னிப்பாய் இரு" என்று பலவாருகப் படிப்பதற்குத் தொடர்பில்லாதவற்றை எல்லாம் படிக்கும் போது வற்புறுத்தி வருவதால் தடுமாறிய மனம் மேலும் குழப்பமுற்று அல்லற் படுகிறது; குழவியின் மனம் படிப்பதில் செல்லாமல் நேரே நிற்பதிலும் பிறவற்றிலும் சென்று தடு-மாறுகிறது.

தடுமாற்றம் - காரணம்:— படிப்பதில் எழும் தடுமாற்றங்-களுக்கும் வேறு பலவற்றிற்கும் தொடர்பு காட்டுவாரும் உள்ளனர். இடக்கை வழக்கால் (Left-handedness) தடு-மாற்றம் நேரிடுகிறது என்பர் ஒரு சிலர். சரியாக ஒலிக்க முடியாமையே தடுமாற்றம் என்பர் வேறுசிலர். எழுத்துக்களை முன் பின்னுக மாற்றி ஒலிப்பதால் எழுவதே இந்தத் தடுமாற்றம் என்பர் மற்றுஞ் சிலர். கண்ணின் குறை பாட்டினுலேயே இந்தக் குறைபாடு எழுகின்றது என்பர் இன்னும் சிலர். இவ்வாறு பலவாறு கூறுவதற்கேற்பச் சிற்சில இடங்களில் இத்தகைய நிலைகள் ஏற்படுதலும் உண்டு. எனினும், பொதுவாக இவற்றையும், காரணங்கள் என மேலே கூறியவற்றோடு ஒருங்குவைத்து எண்ணுவதற்கு இல்லை. படிக்கும் திறனுக்கும், மனநிலைக்கும் இடையே ஒரு தொடர்பு விளங்குகிறது. சீர்கேடாகப் படிக்கும் குழவிகள் தம் உணர்ச்சிநிலை சுற்றுப்புறச் சூழலோடு பொருத்தமுற்று விளங்காது முரண்படச் சீர்கெட்டு நிற்கின்றனவாம்.

சில குறிப்புகள் :— இத்தகைய குற்றங்களை நீக்குவதற்-கெனப் பல வழிகளை அறிஞர் தம் ஆராய்ச்சியின் பயனுகக் கண்டு அவற்றின்படி குழவிகளைப் பழக்கிப் படிப்பதில் தேறுமாறு செய்து வருகின்றனர். மெய்யெழுத்தையோ,

உயிர் எழுத்தையோ தவருக ஒலித்து வந்தால், குழவி ஒலிக்கும் போதே இதனைக் கையால் எழுதிவரும்படி பழக்கி விடவேண்டும். அதனுல் சரியாக ஒலிக்கும் முறையைப் பிறழாதவாறு காக்கச் செவிப் புலனும் நாவின் தசை இயக்கப் புலனுமே அன்றிக் கையின் தசை இயக்கப் புலனும் உடனுதவி வருகின்றன. ஒற்றுமையுள்ள எழுத்துக்கள் என நாம் மேலே குறித்தவற்றைக் குழவி மயங்க உணர்ந்திருந்தால் அக்குழவி ஒலியை ஒலிக்கும் போதெல்லாம் ஒலி ஒலியாக எழுதவும் பழக்க வேண்டும். படிக்கும்போது விரல் கொண்டு படிப்பது-போல எழுத்துக்களைச் சுட்டி வரப் பழக்க வேண்டும். "பகை" என்பதனைப் "பலகை" எனப் படிப்பதுபோல, இல்லாத எழுத்தைச் சேர்த்துப் படிக்கின்ற பழக்கமோ, "பலகை" என்பதனைப் "பகை" எனப் படிப்பது போல, உள்ள எழுத்தை விட்டுப் படிக்கின்ற பழக்கமோ, குழவியிடம் படிந்திருந்தால், அதனை மாற்றப் பல பயிற்சிகளை அமைத்துக் கற்பித்தல் வேண்டும். "பல் - பரல்; வலம் - அவலம்;" என எழுத்துக்களைச் சேர்த்தும், "காவிரி - காவி;" "பவளம் - வளம்" என்று சொற்களில் எழுத்துக்களை நீக்கியும், எழுத்துப் பெருக்கமும் எழுத்துச் சுருக்கமாம் பயிற்சிகளின் வழியே பழக்குதல் வேண்டும். "அன்பு" என்பதனை "அம்பு" என்று படிப்பதுபோல, ஒரு சொல்லிற்குப் பதிலாக மற்ருெரு சொல்லைப் படிக்கக் கண்டால், சரியான பொருளை அறிந்து கொள்ளும் வகையில் பழக்கிவிட வேண்டும். இல்லாத சொற்களைச் சேர்த்துப் படிக்கின்ற பழக்கம் மனக்கற்பனையால் எழுவதாம். சொற்களை விரல் கொண்டு சுட்டிக் காட்டி ஊன்றிப் படிக்கப் பழக்கி விட்டால், இந்தக் குறைபாடு தீரும். இருக்கின்ற சொல்லை விட்டுவிட்டுப் படிக்கின்ற பழக்கம் மிக விரைவாகப் படிப்பதால் எழுவதாம். ஆதலின், விரல் கொண்டு சொற்களைச் சுட்டிக்கொண்டு விரைவின்றிப் படிக்கப்

பழகுவதால் அது ஒழியும். திருப்பித் திருப்பிப் படிக்கின்ற வழக்கம் கடுமையான பாடத்தினைப் படிப்பதால் எழுவதாம். ஆதலின், முதலில் எளிய பாடங்களைப் படிக்கவே குழவிகளைப் பழக்கித் தன்னம்பிக்கையை உண்டு பண்ணவேண்டும்.

## X. கண்ணின் இயக்கமும் படித்தலும்

நோக்க எல்லை :— படிக்கும்போது நம்முடைய கண் ஒவ்வோர் எழுத்தின் மேலும் நின்று நின்று இயங்குவதில்லை. ஒருவரி முழுவதனையும் ஒரே நோக்கில் நாம் உணருவதும் இல்லை. முதலில் சொல் சொல்லாக அறிந்தே நம் கண் இயங்கி வரும். பின்னே சொற்றொடர்களாக அறிந்து வரும்போது கண்ணுனது ஒரே முறையில், ஒரே நோக்கில் கவரக்கூடிய வரிப் பகுதியின் அளவு நீண்டு கொண்டே வருகிறது. முதலில் குழவி படிக்கவரும்போது சராசரி வரிக்கு 19 முறை அதன் கண் நின்று நின்று கண்டு வருகிறது. கல்லூரியில் படிக்க வரும்போது வரிக்கு 5 முறையே கண் நின்று கண்டு வருகிற-தாம். ஒவ்வொரு நிறுத்தத்தினிடையே பொழுது கழிவது முதலில் 0·66 செகண்டாகக் குழவி நிலையில் இருக்கின்றதாம். முடிவில் கல்லூரியில் 0·25 செகண்டாகக் குறைகின்றதாம்.

கண் இயக்கத் திருத்தம் :— "சரிவரப் படிக்க அறியாத-வர்களுடைய கண்கள் சரிவர இயங்கிவரவில்லை." என்று அறிஞர்கள் கண்டுள்ளார்கள் சரிவரப் படியாமையும், கண் சரிவர இயங்காமையும் இவ்வாறு தொடர்பு பெற்று விளங்-கினும் "இவற்றில் எது காரணம்? எது காரியம்?" என்பது பற்றி மாறுபட்ட கொள்கைகள் வழங்குகின்றன. கண்ணின் இயக்கத்தைத் திறம் பெற வளர்த்து விட்டபோது படிக்கின்ற திறமையும் உடனேயே வளர்கிறது. இவ்வாறு கண்ணின்

இயக்கத்தினைத் திறம்பெறத் திருத்துவதற்குச் சில முறைகளைக் கையாளுகின்றனர். தனித் தனிச் சொல்லையோ, சிறுசொற்றொடரையோ குழவியின் எதிரே எழுதிக் காட்டிக் குறித்த நேரத்திற்குள் படிக்குமாறு செய்து, சொற்றொடரின் நீளத்தை நீட்டி வருவதும் உண்டு. படிக்கும் பாடத்தில் எங்கே எங்கே கண்ணை நிறுத்த வேண்டும் என அங்கங்கே நேர்க்கோடுகளைக் கிழித்துப் படிக்கும்போது கோடுகிழித்த இடங்களில் கண்நின்று வருமாறு பழக்கவும் செய்கின்றனர். முதலில் சிறுகச் சிறுக இருக்கும் இந்த இடையீடுகளை மெல்ல அகலச் செய்து கொண்டே வருகின்றனர். கருவிகளின் உதவி கொண்டும் இவ்வாறு செய்யப் பழகுகின்றனர். ஸ்கோப் என்பவர் இந்த வழக்கத்தை வளர்க்க அசையும் படத்தினைப் பயன் படுத்த ஏற்பாடு செய்துள்ளார்.

படிக்கும் அளவு:- குழவிகள் படித்து வரும் அளவினையும் ஆராய்ந்துள்ளார்கள்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 6 | முதல் | 8 | ஆண்டு வரை | மாத | சராசரி | பக்கம் | 0 |
| 8 | ,, | 10 | ,, | ,, | ,, | ,, | 1·5 |
| 10 | ,, | 12 | ,, | ,, | ,, | ,, | 2 |
| 12 | ,, | 14 | ,, | ,, | ,, | ,, | 3 |
| 14 | ,, | 16 | ,, | ,, | ,, | ,, | 2·5 |

ஆராய்ச்சி உண்மை :— 11 ஆம் ஆண்டு முதல் 14 ஆம் ஆண்டு வரையிலும் படிக்கும் வெறி கொண்டு குழவிகள் அலைகின்றார்கள் எனப் பலர் கூறுவது உண்டு. ஆனால், மிக்குப் படித்து வருவதால் கேடொன்றும் எழுவதற்கு இடம் இல்லை என்பது இப்போது ஆராய்ச்சியால் விளங்குவதாயிற்று. படிப்பதில் உள்ள அக்கரையின் தோறணி குழவிக்குக் குழவி

மாறிவரக் காண்கிறோம். அந்த அக்கறை குழவியின் வயதிற்கும் அறிவிற்கும் ஏற்றவாறு மாறிவருகிறது. அறிவுள்ள குழவிகள் வயதிற் சிறியனவாயினும் அறிவு நிலையிற் சிறந்து வயதேறிய குழவிகள் போலவே அக்கறை காட்டி வருகின்றனவாம். வயதையும் அறிவையும் விடக் குழவிகள் படிக்கின்ற அக்கறையின் தோறணி ஆணு பெண்ணு என்ற பால் வேற்றுமையைப் பொறுத்திருக்க அறிஞர் கண்டுள்ளனர். படிப்பதில் அக்கரை பிறப்பது புத்தகப் புழுவாக மாறிவிடுவ-தால் அன்றும். விருப்பப்படி படித்துவர உரிமை பெற்ற குழவி-களையும், மேற்கண்டபடி கண்ணியக்கத்திற்காகச் சிறப்பாகப் பயிற்சி பெற்ற குழவிகளையும் ஒப்பு நோக்கியபோது தாமே விரும்பிப் படிக்கும் குழவிகளே படிப்பதில் பெருந்திறம் பெற்று விளங்கினவாம்.

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும் மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல் நூல் பொருள் உணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்" (பழம் பாட்டு)

---

# 18. பயிற்சி - கற்றுக்கொள்ளுதல்

---

## I. பயிற்சிநிலை

பயிற்சியின் பயன் :— பழக்கத்தால் செய்திறம் வளர்ந்து முற்றுவதே கற்றுக்கொள்வதன் பயனும். தொழிலைச் செய்யும்-போது பயிற்சியின் பயனுகச் செய்யும் வேகம் மிகுந்து வரும்;

தவறுகள் குறைந்து வரும். தொழிலைச் செய்யும்போது எழும் இயக்கங்கள் முதலில் இருந்ததுபோல் தொடர்பற்று இல்லாமல் மேலும் மேலும் தொடர்புற்று ஒன்றாக இயைந்து வரக் காண்போம். முதலில் வேண்டி இருந்த அளவு பெரும் முயற்சி பின்னே வேண்டியிருப்பதில்லை; முயற்சியின் வன்மை குறையும்; செய்வது திருத்தம் பெற்றும், நிறைவுற்றும் வரும். இந்தப் பலகையாலும் செய்திறம் சிறப்புறுவதனை அளந்தறியலாம்.

சாந்துணையும் கற்றல் :— கற்றுக் கொள்வது என்பது வாழ்க்கையில் இன்றியமையாது என்றும் நிகழ்ந்து கொண்டே இருப்பதாகும். ஆசிரியர் கற்றுக் கொடுத்தாலும், கொடுக்காவிட்டாலும், ஆசிரியர் கற்பிப்பதனைக் கல்லாமற் போனாலும் ஆசிரியரையும், அவர் கற்பிப்பதனையும் வெறுப்பதனையேனும் குழவி கற்றுக் கொள்ளத்தான் செய்கிறது. "என் ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு?" என்பது இவ்வாறு கற்றுக் கொள்வது உயிரோடு வாழும் வரையிலும் நிகழ்ந்து கொண்டே இருக்கும் என்கிற புதிய கருத்தைப் பழைய காலத்திலேயே கூறிவைத்ததாம். ஆகவே, ஆசிரியர் தாம் கற்பிக்கும் முறையானது, தம் பாடத்தைக் கற்பிக்காமற் போனாலும் வெறுப்பு நிலையை எழுப்பிக் குழவியின் மனத்தினுக்கு நஞ்சூட்டாதபடி காத்தல் வேண்டும். இல்லையேல் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்ட கதை போலாம்; அன்றி, உளைச் சேற்றில் அழுந்தி மாய்ந்த கதையாக முடியும்.

வளர்ச்சியா? பயிற்சியா? :- பல திறமைகளை நாம் அடைகின்றோம். இவை உடல் வளர்ச்சியின் பயனாக இயற்கையாக எழுகின்றனவா? செயற்கையாகப் பயிற்சியின் பயனாக விளைகின்றனவா? இந்த இரு கொள்கைகட்காகப் போராடும்

அறிஞர்களும் இருக்கின்றனர். இரண்டு நாளேயான குழந்தைக்குப் பேசக் கற்றுக்கொடுப்பது அறியாமை அன்றோ என்பர் ஒரு சிலர். ஐந்தாண்டானாலும் குழவியை நடத்தி வையாது தொட்டிலில் கிடத்திவைத்து "இயற்கையாகவே குழவி நடையைக் கற்றுக்கொள்ளும்" என்று பேசுவது அறியாமை அன்றோ என்பர் வேறுசிலர். இந்த மன்றாட்டத்தின் நின்றும் இயற்கை வளர்ச்சி, செயற்கைப் பயிற்சி என்ற இரண்டின் இன்றியமையாமையும் நன்கு புலனாகும். வளர்ச்சியினைப்பற்றி முன்னரே ஆராய்ந்தோம். அதன் பின் எழுவதே பயிற்சியாம். உறுப்பமைப்பு நன்கு வளர்ந்து தகுதி பெற்ற பின்னரே கற்றுக்கொடுக்கவோ, பயிற்சி அளிக்கவோ முன் வருதல் வேண்டும். குழவிகளின் செய்கைகள் பயிற்சியினாலே பண்பட்டுத் திருத்தமுற்று வருதலினால் குறிப்பிட்டதொரு செயற்கையை இயற்றும் உடலமைப்பு முற்றிய பின்னரும் கற்றுக் கொடாது இருப்பது அழகன்றாம்.

ஆசிரியக்கலை:- உலகம் தோன்றிய நாள் முதலாக ஆசிரியன்மாரது பரம்பரை தன்னுடைய அனுபவத்தில் தட்டுத் தடுமாறிக் கற்றுக்கொண்ட உண்மைகளை, வளர்ந்துவரும் குழவிகளிடையே முற்றி வரும் தகுதிக்கு ஏற்றவாறு நம்முடைய பள்ளிக்கூடங்கள் பின்பற்றி வருகின்றன. இவ்வாறு பின்பற்றி வருவதால் சராசரி நிலையிலுள்ள குழவிக்கு இந்த முறை ஒருவகையாகப் பொருத்தம் உற்றதாகவே தோன்றுகிறது. ஆனால், சராசரி என்பது வெற்றெண்ணமேயாம் (Abstraction). சராசரி குழவி (Averge child) என ஒரு குழவி வாழ்ந்ததும் இல்லை; வாழப்போவதும் இல்லை. கற்றுக் கொடுப்பதும் ஒரு சிறந்த கலையாகும். ஒவ்வொரு குழவியும் சராசரி நிலையாம் பொது நிலையை விட்டொழித்துச் சிறப்பு நிலையிலே சென்று விளங்கவே காண்கின்றாம். இந்த உண்மையை அறிந்து அதற்கு

ஏற்ப, அவ்வக் குழவியின் தகுதிக்கும் திறத்திற்கும் ஏற்பப் பொதுமுறையை மாற்றி அமைத்துக் கொண்டு கற்பிப்பதே ஆசிரியக் கலையின் அருமையான நுட்பமாகும்.

பலவகைக் கல்வி :— கற்றுக் கொள்வது என்பது ஒருவகையாக எங்கும் விளங்கவில்லை. பலவற்றைக் கற்றுக் கொள்கிறோம். ஒவ்வொன்றற்கு ஒவ்வொரு முறை சிறந்ததாம். "எதனைக் கற்றுக் கொள்ளப் போகிறோம்" என்ற முடிவுநிலையை அறிந்தாலன்றி, எவ்வாறு கற்றுக்கொள்வது என்ற வழியின் நிலையைக் கூற முடியாதாம். நாம் கற்றுக் கொள்வன தாம் யாவை? வெளிப் பொருள்களை உணரக் கற்றுக் கொள்கிறோம். புலப் பொறிகளை வெவ்வேறு நிலக்கு ஏற்றவாறு திருத்தி அமைக்கக் குழவி கற்றுக் கொள்ளுகிறது என முன்னரே கண்டோம். ஒலி வருவழியாகவும், ஒளி வருவழியாகவும் திரும்பப் பழகும் குழவி நிலையையும் முன்னரே கண்டோம். இரண்டாவதாகக் கற்றுக்கொள்வது இயங்கிவரும் திறமே ஆம். நம் சுற்றுப்புற நிலையைத் திருத்தி அமைக்க இந்தத் திறமை இன்றியமையாது வேண்டப்படும். நோவும் துன்பமும் எழும் நிலைகளை விட்டு ஒழித்து, ஆறுதல் அளிக்கும் நிலைகளைத் தேடி அமைக்க உலகிடையே தகுதியுற்று விளங்குமாறு கற்றுக் கொள்வதே மூன்றாவதாகக் கற்றுக் கொள்வதாம் நான்காவதாகப் பேசவும் எழுதவும் கற்றுக்கொள்கிறோம். ஐந்தாவதாக நம்முடைய முயற்சியின் விளைவாகச் சில பயன்களை எதிர்பார்த்தும் அப்பயன்களை அடைய முயன்றும் நம்முடைய ஊக்கு இயலைத் திறம் பெற்று விளங்குமாறு அமைக்கக் கற்றுக்கொள்கிறோம். ஆறாவதாக இயற்கை மறிவினைகள் போல செயற்கை மறிவினைகளை எழுப்பவும் கற்றுக் கொள்கிறோம். ஏழாவதாகச் சொற்களையும் செய்திகளையும் பிறவற்றையும் மனப்பாடஞ் செய்து கற்றுக்கொள்கிறோம்.

எட்டாவதாகச் சிக்கலான நிலையிலிருந்து வெளியேறிப் பிழைக்கும் முறையினைச் சரியான வழியில் செய்து வரவும் கற்றுக் கொள்கிறோம். ஒன்பதாவதாக நல்வாழ்விற்கு ஏற்ற திட்டங்களையும் அறமுறைச் சட்டங்களையும் கற்றுக்கொள்கிறோம்.

பிறர் துணை :— உணர்வுநிலைத் திறனையும் இயக்கநிலைத் திறனையும் குழவி வேறொருவர் உதவியும் இன்றித் தானாகவே கற்றுக் கொள்கிறது. ஆனால், எழுதப் படிக்கவோ, கணக்குப் போடவோ, விஞ்ஞான உலகில் நடமாடவோ பிறர் கற்றுக் கொடுத்தாலன்றிக் குழவி தானாகவே கற்றுக் கொள்ளுதல் இயலாது எனலாம். மக்கட் கூட்டத்தைப் பற்றிய கலைகளிலே குழவி தானேயும் சிறிது கற்றுக் கொள்ளுதல் கூடும். ஆனாலும், திறம் பெற்று வாழ்தல் என்றும் முடியாததாம். குழவி பிறர் இடத்திலிருந்து சிறிது கற்றுக் கொள்வதாலேயே, தானே அறிவதினும் மிக்கவற்றை மிக மிக அறிய இடம் ஏற்படுகின்றது. ஒன்றுமே கற்றுக் கொள்ளாமல் போரிலே சென்று சண்டைபோட முடியுமோ? ஆனால், அனைத்தினையும் பிறரிடத்திலிருந்தே கற்றுக்கொண்டு விடலாம் என நினைப்பதும் அறியாமையே ஆம். மனப்பாடம் செய்வதிலும், செயற்கை மறிவினைகளை எழுப்புவதிலும், மக்கட் கூட்டத்தினிடையே பொருத்தமுற்று வாழ்வதிலும், ஆளுமையை (Personality) வளர்ப்பதிலும் குழவி பிறருடைய உதவியைப் பெரிதும் வேண்டி நிற்கிறது. இந்த உதவி இல்லையானால் தவறு பல செய்து அவற்றிடையே முழுகிக் கிடந்து அலையக் காண்போம்.

## II. செயற்கை மறி

செயற்கை மறி :— இயற்கையாக ஒரு குறிப்பிட்ட செயலை எழுப்பாத தூண்டுதலொன்றினை அச்செயலைத் தூண்டுமாறு செய்து விடலாம். அங்கு எழுவதே செயற்கை

மறிவினையாம்; "செயற்கைத் துலக்கம்" அல்லது "கட்டுக்கு அடங்கிய எதிருன்றல்" என்பது பொருத்தமாம். எலியைக்-கண்டு குழவி அழுவதில்லை; பேரொலி கேட்டே அழும். பேர்ஒலி கேட்குந் தோறும் அக்குழவியின் எதிரே எலியைக் காட்டி வருவோமானால், பின்னர் எலியைக் கண்டதும் குழவி, அழத் தொடங்கும். பிறந்து ஐந்து நாளே ஆகிய குழவிகளி-னிடையேயும் இத்தகைய செயற்கை மறிவினையை எழுப்புதல் கூடும். பால் குடிக்க வருவதற்கு முன் மணி அடித்துப் பழக்கி விட்டால், அம்மணியின் ஒலியைப் பாலின் அறிகுறியாகக் கொண்டு, அழுகையை நிறுத்தி, வாயில் நீர் ஊற, மகிழ்ந்து, குழவி எதிர்பார்த்து நிற்கும் எனக் கண்டோம். குழவியின் உள்ளங்காலை நமது நகத்தால் சிறிது கீறினாலும், குழவி இயற்கையாகக் காலைப் பின்னுக்கு வாங்கிக் கொள்ளும். அவ்வாறு கீறும் பொழுதெல்லாம், மணியும் உடன் ஒலித்து வருமானால், மணியடிப்பதற்கும் காலைப் பின் வாங்குதற்கும் இயற்கையான தொடர்பு ஒன்றும் இல்லை ஆனாலும், செயற்-கைப் பழக்கத்தால் மணி ஒலி கேட்டதும் காலைக் கீறுதல் உடனேயே நிகழும் என எதிர்பார்த்துக் குழவி, காலைப் பின்னுக்கு வாங்குகிறது. இவ்வாறு செயற்கை மறிவினை-யாகவே எல்லாவற்றையும் குழவி பயின்று அறியும் எனச் சொல்வதற்கு இடம் இல்லை.

ஆராய்ச்சிக்கு இடம் :- இந்தச் செயற்கை மறிவினையைப் பற்றிய கொள்கையைச் சிறிது உற்று நோக்கினால் பொதுவாகக் கற்றுக்கொள்ளுவது எங்ஙனம் நிகழுகின்றது என்பதனை அறிதல் கூடும். முழுதும் உண்மை என்று கொள்ள இடம் இல்லையானாலும் ஆராய்ச்சிக்கு இடம் கொடுக்கும் கொள்கை இதுவே எனலாம். ஆதலினால், இந்தக் கொள்கையின் சில அடிப்படைகளை அறிந்து கொள்வது நலமே ஆம்.

பிரித்தறிதல் :- இயற்கைநிலை எதிர் ஊன்றல் போலவே செயற்கைநிலை எதிர் ஊன்றலும் தோன்றினாலும், அது இயற்கை நிலை எதிர் ஊன்றலாகவே என்றும் ஆகிவிடுவதில்லை. ஒரு நாயை, அதனது வலது கால் முன் அடியைத் தூக்குமாறு விலங்காட்டி பழக்குகின்றான். அங்கே நாம் விரும்பியதோர் எதிர் ஊன்றலை எழுப்புவது எங்ஙனம் என்பதேகேள்வி. உணவு நாட்டத்தினைப் பயன் படுத்திச் சோற்று மணி அடிக்கும் போது வலக்காலைத் தூக்கினால் உணவு தந்து ஊக்கம் கொடுத்தும் நாயாட்டி பழக்கி வைக்கின்றான். வலக்காலிற்குப் பதிலாக இடது காலைத் தூக்கினால் மின் ஓட்டத்தால் தடுத்து வருகின்றான். குழவி இவ்வாறு செய்ய வேண்டும் என நாம் விரும்புகின்ற செயல் அதன் உள்ளத்தில் சிறப்பொன்றும் இன்றிப் பல செயல்களோடு பிரித்து அறிய வாராதபடி ஒருங்கு நிற்குமானால், குழவி அதனைப் பிரித்தறியவும் முடியாது, செய்யவும் முடியாது. ஆதலினால், அந்தச் செயலைச் சிறப்புநிலையில் வேறு பிரித்தரியும் வழியைக் காட்டுதல் வேண்டும். இல்லையானால் அத்தொழிலைத் தனியே பிரித்து நாம் விரும்புமாறு செய்வது அருமையினும் அருமையாம். அந்த நிலையில் குழந்தை மீது காய்ந்து விழுவதாற் பயனில்லை.

இயைந்தோன்றுதல் :- இவ்வாறு இயற்கைத் தூண்டலும் செயற்கைத் தூண்டலும் (கட்டுக்கு அடங்கிய தூண்டல்) வேறு வேறு ஆதல் காண்க. இயற்கைத் தூண்டல் இயற்கையாகக் குழவி உணரும் நிலையில் எழுவது. செயற்கைத் தூண்டலோ இயற்கையாக அன்றிச் செயற்கையாக நாம் எழுப்புவதே ஆகும். அது பயனையும் விளைவிக்கவேண்டும். அதற்குத் தக்க-வாறு குழவி அதனை உணரக் கூடிய நிலையினையும் எழுப்புதல் வேண்டும். இரண்டாவதாக "இயற்கைத் தூண்டல் ஓர் எதிரூன்றலை எழுப்பும்போது, அத்தூண்டலோடு பழக்கமாக

உடன் தோன்றும் மற்றென்றும் பின்னர்ப் பல முறை ஒருங்கு நிகழ்ந்த வழக்கத்தின் பயனாக அதே எதிர் ஊன்றலை எழுப்பும்" என்பது செயற்கை மறிவினைக் கொள்கையினர் கண்ட மற்றோர் உண்மையாம். ஈதே செயற்கைத் தூண்டலாகும். இயற்கைத் தூண்டலும் செயற்கைத் தூண்டலும் ஒரே செய்தியாக (Event) இயைந்து விடுவதால், ஒன்று நிகழ்ந்ததும் மற்றதனை உலகம் எதிர் பார்க்கிறது. இங்கே செய்தியின் ஒரு பகுதிமட்டும் இவ்வாறு சிறந்து விளங்குவது எதனாலே? இத்தகைய செய்க்காட்சி செய்வார், செயற்கைத் தூண்டலை வற்புறுத்தித் தோற்றுவிப்பதாலேயே இத்தகைய சிறப்புநிலை எழுகிறது எனலாம்.

வற்புறுத்தல் :— செயற்கை எதிரூன்றல், வற்புறுத்தப் பெறும் போதும், உரம் பெற்று வருகிறது. எதிரூன்றல் திரும்பித் திரும்பி எழுமானால் அது வற்புறுத்தப் பெறுகிறது எனலாம். அவ்வாறு எதிரூன்றலாக எழும் செயலுக்கெனவே பரிசில் தந்து ஊக்கியும், அதற்குமறுதலையாக எழும் செயலுக்கு எனவே தண்டனை தந்து தடுத்தும் வருவதால் எதிர் ஊன்றல் உரம் பெறுகிறது. மணி ஒலி கேட்டு வலப்புறத்து முன்னங்காலைத் தூக்கியபோது நாய் உணவு பெற்றும், இடப்புறத்து முன்னங்காலைத் தூக்கியபோது மின்னோட்டத் தாக்கலால் நோவு பட்டும் வரும்போது விலங்காட்டி பழக்கத்தில் கொண்டுவர விரும்பிய எதிர் ஊன்றல் மட்டும் நிலைபேறுற்று வருவதனை முன்னரே கண்டோம். இத்தகைய பரிசிற்பேறு எதிரூன்றல் எழுகின்ற இடத்திற்கும் காலத்திற்கும் அண்மையில் நிகழ்தல் வேண்டும். எவ்வளவிற்கு எவ்வளவு அண்மையில் விளங்குகிறதோ, அவ்வளவிற்கு அவ்வளவு நாம் எதிர்பார்க்கும் பயனை விளைவிப்பதில் பரிசில் நிலை சிறந்து தோன்றும். கற்றுக்கொள்ள வேண்டிய நிலை சிக்கலின்றித்

தெளிவாக விளங்கும் இடங்களில் இந்த உண்மை நன்கு புலனாகிறது. எதிரூன்றலை இவ்வாறு வற்புறுத்துவதனை நம் மனம் போனபடி வற்புறுத்துவது என்று கூறி விடுவதற்கு இல்லை. இயற்கைத் தூண்டலே போலச் செயற்கைத் தூண்டலும் குறிப்பிட்ட தொரு செயலை எழுப்பும் என எதிர் பார்ப்பதாலன்றோ அதுவும் ஒரு தூண்டல் எனப் பெயர் பெறுகிறது. மணி ஒலி கேட்டதும், "பால் வரும்" எனப் பழக்கத்தின் பயனாக எதிர் பார்ப்பதாலன்றோ குழவி அழுகை ஓய்ந்து கிடக்கின்றது. ஆகவே, எதிரூன்றலை வற்புறுத்துவது என்றால் இந்த எதிர்பார்க்கும் நிலை ஏமாற்றம் அடைந்து பொய்யாதபடி வற்புறுத்துவதாக இருத்தல் வேண்டும். நம் மனம் போனபடி இருத்தல் ஆகாது.

புறநிலைத் தடையும் மறுதலைச் செயற்கையும் :— தடை எழுமானால் செயற்கை எதிரூன்றல் எழாது ஒழிகின்றது. மணி ஒலி கேட்டபோது பாலினைக் குழவி எதிர்பார்க்கின்ற-தன்றோ? ஆனால், அவ்வாறு எதிர் பார்த்தது போலப் பால் வாராமற் போனால் செயற்கைத் தூண்டலுக்கும், செயற்கை எதிரூன்றலுக்கும் இடையே எழுந்த தொடர்பு சிறுகச் சிறுகத் தேய்ந்து மாய்கிறது. ஆதலின், செயற்கை எதிரூன்றலை ஒழிக்க வேண்டுமானால் பழக்க மின்மையை விளைவிப்பதே சிறந்த வழியாம். மிக மிகப் பழக்கத்தில் வந்துவிட்ட பொழுதும் பழக்கம் இன்மையால் செயற்கை எதிரூன்றல் உரம் குன்றும். இந்தச் செயற்கைத் தூண்டலை விட மனத்-தினைக் கவரக்கூடிய வேறொரு தூண்டுதல் எழும்போதும் முன்னதன் உரம் குன்றிவரக் காண்கிறோம். இதனைப் "புற-நிலைத் தடை" எனலாம். "வேறொன்றில் மனம் பாய்தல்" என்றும் கூறலாம். பளபளப்பான புதியதொரு பொருளைக் காண்கின்ற குழவி மணி ஒலி கேட்டாலும் நாவில்

நீரூறுதலின்றிப் பளபளப்பில் ஈடுபட்டிருக்கக் காண்கிறோம். வேறொரு செயல் நிகழுமாயினும் செயற்கை எதிரூன்றல் தடைபடும். இதனை "மறுதலைச் செயற்கை" எனலாம். காலடியை ஊசியால் கீறிவந்தபோது ஊசியைக் கண்டதும் குழவி காலைப் பின்வாங்கிக்கொள்ளும். பின்னர் ஊசியைக் காணும் போதெல்லாம் சோற்றையும் உடன்காணப் பழக்கினால் காலைப் பின்வாங்கும் வழக்கம் ஒழிந்து போகிறது. இந்தக் கொள்கைகள், கற்றுக் கொள்வது என்ற நிலையின் உண்மை அனைத்தினையும் விளக்கி வைக்காமற் போனாலும், அதனைப் புறநிலை வகையாக ஆராய்வதற்கு இவை வழிகாட்டுகின்றன என்பதனை எவரும் மறுத்தற்கில்லை.

## III. தட்டுத்தடுமாறித் தகுதி கற்றல்

தார்ண்டைக் :— தார்ண்டைக் என்பவர் "நாம் கற்றுக் கொள்வதனைத்தும் முயன்றும் தவறியும் கற்றுக் கொல்வதே-யாம்" என்கின்றார். இந்தமுறையினைத் தட்டுத் தடுமாறித் தகுதி கற்றல் எனக் கூறலாம் (The method of trial and error). முன்னோக்கம் இன்றிக் குருட்டு வழியாகக் கற்றுக்கொள்வ-தனையே முடிந்த முடிபாக அவர் விளக்கிவைக்கின்றார். முன் புறமாகக் கம்பிகள் மட்டும் பாய்ச்சிய கதவோடு கூடிய ஒரு கூட்டில், பசி மிகுந்த பூனையைத் தார்ண்டைக் அடைத்தார். எதிரிலே கூண்டின் வெளியில் தீனியைவைத்தார். கம்பிகளின் இடைவழியாகப் பூனை அத்தீனியைக் கண்டது. கால்களையும் முகத்தையும் இயக்கியது. கம்பிகளை அசைத்தது; முகர்ந்தது; உகிரால் கீறியது; பல்லால் கடித்தது. கதவைத் திறப்பதற்குக் கூண்டின் உட்புறமாகக் குமிழ் ஒன்று வைத்திருந்தார்; அதை அழுத்தினால் கதவு திறக்கும். இவ்வாறு உள்ளே இருந்த பூனை தற்செயலாக அக்குமிழை அழுத்திவிட்டது; கதவுதிறந்து

கொண்டது. மறுமுறையும் பூனையைப் பிடித்து உள்ளே அடைத்தால், குமிழ் உள்ள இடத்திற்கு அருகில் எல்லாம் காலையும் முகத்தையும் தேய்த்து நின்றதாம். அந்தப் புறமாகத்-தான் இயங்கிச் செயல் புரியவேண்டும் என்று உணர்ந்ததே அன்றிக் குமிழை அழித்துதலை இன்னும் அறியவில்லை. குமிழைச் சுற்றி எல்லாம் இயங்கிவரும்போது, தற்செயலாகக் குமிழின் மேல் காலோ முகமோ பட்டதால் கதவுதிறந்து கொண்டது. பயிற்சியாகப் பயிற்சியாகக் குமிழியைச் சுற்றி இயங்கும் இடம் சுற்றளவில் குறைந்துகொண்டே வந்து குமிழில் முடிந்தது. இந்தநிலைக்கு வந்த பிறகு நேரே குழிழை அழுத்திக் கதவினைத்திறந்து தீனியை அடைந்தது."

இன்பம் :— இங்கு வீண்செயல்கள் குறைந்தும் வெற்றி தரும் செயல் திறம்பெற்றும் வரக் காண்கிறோம். வெற்றியைத் தரும் செயல்கள் நிலைபேறு அடைகின்றன. வீணான செயல்கள் பயன்படாமையால் நிலைபேறடையாது மறைகின்றன. ஏன்? வெற்றியை நோக்கிச் செல்வது இன்பமாகவும், தோல்வியை நோக்கிச் செல்வது துன்பமாகவும் இருத்தலினாலே ஆம். இன்பமே இன்பந்தருஞ் செயலை நீட்டித்துச் செய்யத் தூண்டு-கிறது. துன்பமோ வருத்தத்தைத் தந்து செய்யும் தொழிலில் மனம் செல்லாதவாறு தடுத்து நம்மை வெளிக்கு இழுத்துச் செல்கின்றது. இந்த வகையால் இன்ப துன்பங்கள் நமக்கு வழிகாட்டிகளாய் விளங்குகின்றன.

பயிற்சிச் சட்டம்:- ஆனால், "இன்பதுன்பங்கள் இவ்வாறு வற்புறுத்துவது ஏன்?" என்பது முற்றும் விளங்கவில்லை. நனவுநிலை என்பதனையே ஒருசிறிதும் வேண்டாது, வெற்றி பெறும் செயல்களும், வெற்றி பெறும் உணர்வுநிலையும் தாமாக ஒருங்கு இயைந்து விடுகின்றனவாம். உயிர்ப்பொருளின்

ஆற்றல் பல பல வகையான இயக்கங்களை அளவின்றி விளை-வித்துக் கொண்டே இருக்கின்றது. இவ்வாறு எல்லையற்று எழுகின்ற செயல்களில் ஒன்று தற்செயலாக வெற்றியாய் முடிவது அருமையன்றோ? இங்குப் பயிற்சிச் சட்டம் என ஒன்றை வாட்சன் (Watson) விளக்கிவைக்கின்றார். கூண்டு முதலியவற்றில் அடைபட்ட பூனை முதலியவை "வலப்புறம் போனால் தான் வெற்றிகாண முடியும்" என்று இருந்தால் அந்த நிலையில் ஓர் உயிர்ப்பொருள் அதனை அறியாமையால் வலமும் இடமும் செல்லும்; "இந்தப் பக்கம் தான் போகவேண்டும்" எனக் கட்டாயமோ, விருப்பமோ இல்லாமையால் எத்தனை முறை வலப்புறம் செல்கின்றதோ அத்தனை முறை இடப்புறம் செல்லும். ஆனால், தவறான இடப்புறம் சென்ற போதெல்லாம் வெற்றி காணாமையால் திரும்பி வந்து தொடர்ச்சியாக வலப் புறமும் செல்ல வேண்டியதாகிறது. எனவே, நேரே இடப்புறம் சென்றதும் 10 ஆனால், நேரே வலப்புறம் சென்ற பத்தும் இடப்புறத்தின் நின்றும் திரும்பிவந்து வலப்புறம் சென்றது பத்தும் ஆக மொத்தம் வலப்புறஞ் சென்றது இருபது முறை-யாம். எனவே, வெற்றிதரும் இயக்கமே பன்முறை நிகழ்வதால் தானாக மனத்திற் பதிகின்றதாம். உயிர்ப் பொருள்களைப் பொறுத்த வரையில் எல்லா வகை இயக்கங்களும் எழும். ஆதலின், "வெற்றிதரும் செயல்போலத் தோல்விதரும் செயல்-களும் எழக்கூடும்" என நம்பத்தக்க நிலையில் வழக்கினிடையே தவறான செயலை விடச் சரியான செயல் ஏற்படுநிலை (Proba-bility) இரண்டத்தனையாம். இதுவே வாட்சன் என்பார் கண்ட பயிற்சிச் சட்டமாம்.

இன்பம் தூண்டுமோ:- கடையாக எழுந்த செயலே பிறவற்-றினும் சிறப்பாக விளங்க வருகிறது. ஆதலின், அதுவே மறு-முறையும் தோன்றக்கூடிய ஏற்பாடுநிலை மிக்குவருகிறது. ஆனால்,

இவ்வாறு ஒரு செயல் அடிக்கடி எழுவானேன்? "இன்பம் காரணமாகவே" என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் "உயிர்ப் பொருள் முன்னிலையில் இயங்கியதுபோலப் பொதுவாகப் பின் நிலையிலும் இயங்கும்" எனக்கூற முடியுமே அன்றி "முன் நிலையில் செய்த அத்தனைச் செயல்களையும் பின்னிலையில் செய்து வரும்" என்று கூறுவதற்கு இல்லை. இன்பமே முடிவான செயலை வற்புறுத்தி வருகின்றது என்றால் தார்ண்டைக்கின் பூனை இச்செய்கையை முடித்ததும் உணவு பெறாது ஐந்து நிமிஷங்கள் வரை காலந்தாழ்த்து உணவு பெற்று வந்ததாம். வெற்றிக்குப் பின்னே அவ்வளவு காலம் தாழ்த்து வருகின்ற இன்பம் வெற்றிச் செயலின் பயனாவதின்றிக் காரணமாவது எங்ஙனம் கூடும்? அதுவுமன்றி உண்மை நிலையை உணரும்வரை வெற்றி தாராத வீண் செயல்களைத் திருப்பித் திருப்பிச் செய்து வரக்காண்கிறோம். அந்த நிலையில் கணக்கெடுத்தால் பன்முறை நிகழும் செயல்கள் வீணான செயல்களே அன்றி வெற்றிதரும் செயல்கள் அல்லவாம்.

பயப்பாட்டுச் சட்டம் :- இந்தச்சிக்கலை நீக்கத் தார்ண்டைக் பயனைப் பற்றியதொரு சட்டத்தினை விளக்கி வைக்கின்றார். ஓர் எதிர் ஊன்றல் ஆறுதல் தரும் நிலைமைக்கு அருகாக நம்மைக் கொண்டு செல்லுமானால், அந்த எதிர் ஊன்றலை எழுப்பும் தொடர்கள் நிலைபேறுறுகின்றன. ஆறுதல் அற்ற அலைவு நிலைக்குக் கொண்டு செல்லுமானால் அதனை எழுப்பும் தொடர்கள் தேய்ந்து ஒழிகின்றன. ஈதே அவர்கண்ட சட்டம். இந்தச் சட்டம் ஏன் உண்மையாதல் வேண்டும்? "ஒவ்வொருவரோடும் கூடப்பிறந்த இயற்கைப் போக்கு அவ்வாறு விளங்குகிறது" எனத் தார்ண்டைக் முடிக்கின்றார். மனிதன் தனக்கேற்பத் தன்னையும் மாற்றி அமைத்து வருகின்றான். அவனுடைய இயல்பனைத்திலும் ஒன்று மட்டும் தலைசிறந்தது எனத்

தோன்றுகிறது. கற்றுக்கொள்வதற்கு என்று அமைந்த ஆற்றலே அந்த ஒன்றாகும். பயனைப் பற்றித் தாம் கூறும் சட்டம் இந்த ஆற்றலையே விளங்குகிறது எனத் தார்ண்டைக் கூறுகின்றார்.

உள்ளுணர்வில்லையே :— "கற்றுக்கொள்வது" என்றால் குருட்டு வழியாகக் கற்றுக்கொள்வதே அன்றி நனவோடும் அறிவோடும் கற்றுக்கொள்வது இல்லை என்பதே இந்தக் கொள்கையின் அடிப்படையாம். உள்ளுணர்வோடு (Intution) செய்யும் செயல்களை ஆராய்ந்தால் அவற்றைச் செய்யும் காலம் அவற்றைச் செய்யும் உண்மை நிலையை உணர்ந்த உடனே குறைந்துவிடக் காண்கிறோம். திகைத்துத் தட்டுத் தடுமாறி வந்தபின் தார்ண்டைக் பூனையும் உண்மை நிலையை உணர்ந்ததும் அது செய்யும் காலமும் உடனே குறையக் காண்கிறோம். இங்குமட்டும் உள்ளுணர்வு இல்லை என்பானேன்? கூட்டிற்குள் அடைபட்ட திகைப்பினால் பூனை கூண்டினை முட்டி மோதிக் கொள்ளாமல் வேறு என்ன செய்யக் கூடும்? "மக்களை இந்த நிலைமையில் வைத்தால் அவர்களும் இவ்வாறே செய்வர்" என்கின்றார் மக்டூகல் என்ற ஆசிரியர். தான் செய்கின்ற செயலை உற்று நோக்குகிற போக்குப் பூனையிடம் உரம் பெற்று வருவதனையும் தார்ண்டைக் காண்கிறார். தனித்தனியே பொருள்களைப் பாராமல் முழு நிலையாகத் தொடர்பு படுத்திக் காண்பதனையும் அவரே வற்புறுத்துகின்றார். இவை அனைத்தும் அறிவுடைமையை விளக்கவில்லையா?

## IV. பிறர் ஆராய்ச்சி

மக்டூகலின் நாய் :- மக்டூகல் தாம் ஒரு நாயைக் கொண்டு செய்காட்சி செய்து கண்டார்; உணவு நாட்டத்தினைப் பயன்

படித்தினர். நாய் அந்த நிலையில் பல தடைகளைத் தாண்டி உணவினைப் பெறுவதனைக் கண்டார். உணவு நாட்டம் முதலிய இயற்கைச் செயனிலைகளே, இவ்வாறு, நாயினையோ, பிற உயிர்ப் பொருளையோ இயக்கக்கூடும் என்பது அவருடைய முடிவு. பசியால் வருந்தாத பூனையையோ, நாயையோ இத்தகைய தடைகளைத் தாண்டுமாறு கற்றுக்கொள்ளச் செய்வது அருமையாம். உணவைப் பெறும் இன்ப நோக்கமே அதன் நினைவாக அமைந்து, நாயினைப் பல செயலையும் செய்யத் தூண்டுகிறது. இன்ப நாட்டம் நம்முடைய நோக்கமாக அமைந்து, நம்மை இயக்குவதனை அன்றாட வாழ்க்கையில் நாம் நன்கு அறிவோம். நோக்கமாக மட்டும் அமையாது நம் செயல்களோடு இயங்கி வருவதாக இன்பத்தினைத் தார்ண்டைக் கூறியபோது, "பின் தோன்றும் இன்பம் முன்தோன்றும் செயல்களை எவ்வாறு தூண்டும்?" என ஐயப்பட வேண்டியதாயிற்று. இப்போது அந்த ஐயம் தீர்கிறது. சிக்கல் நிலையை நாய் எளிதிலேயே நன்கு உணருமாறு செய்து, பின் படிப்படியாகத் தடைகளை வளர்த்துக் கொண்டே மக்டுகல் போயினர். நாயும் படிப்படியாகக் கற்றுக்கொண்டே வந்தது. "விலங்கு மட்டும் அன்று. மக்களும் கற்றுக்கொள்வது என்றால் இப்படித்தான் கொள்ளுதல் கூடும்" என மக்டுகல் முடிவு செய்கின்றார். சிக்கல் தீர்ப்பதே நோக்கமாகத் தட்டித் தடுமாறித் தகுதி பெறுவதே கற்றுக் கொள்வதாம்.

ரூகரின் மக்கள் :— ரூகர் (Ruger) என்பார் மக்களைக் கொண்டு இந்த நிலையை ஆராய்ந்தார். மக்களும் முதலில் சிக்கல் நிலையின் நுட்பத்தை உணரவில்லையாம். தற்செயலாக வெற்றி கண்டபோது அந்த இடத்தினைச் சுற்றி ஆராயத் தொடங்கினராம். எனவே, சிக்கல் தீர்ப்பது இவ்வாறு இட ஆராய்ச்சியாக முடிந்ததாம். இவ்வாறு நிலையை உணர்ந்ததும் எடுத்த செயலை

முடிப்பதற்குச் செல்லும் காலம் திடீர் எனக் குறைந்ததாம். இயக்கங்கள் புதியனவாக அமைதிபெற்று மாறி வெற்றியைத் தந்தனவாம். இவற்றில் பல தற்செயலாக எழுந்தனவே ஆம். இவற்றை நனவோடு உணர்ந்தால் செய்துவரப் பிடிக்கும் காலம் குறைந்து வருமாம். இந்த நிலையை உணரும் வகையில்தான் நுட்பம் வளர்ந்ததாம்; சிறந்ததாம்; எண்ணங்கள் முதலியன அந்த நிலையில் எழவில்லையாம். வெறும்சிக்கலாய் இருந்தது "இன்னது செய்தால் தீரும்" என விளங்க வந்ததாம். அவ்வாறேசெய்திறனும் நுட்பமாக மாறி வந்ததாம். எனவே, இங்கு இயக்க நிலையும், உணர்வு நிலையும் ஒரு படித்தாக நுட்பமுற்று ஒருங்கு இயங்கிவர வேண்டும் என்பதாயிற்று.

கோய்லரின் குரங்கு :— கோய்லர் என்பார் முதலில் விலங்குகளைக் கொண்டும், பின்னர்க் குழவிகளைக் கொண்டும் ஆராய்ச்சி செய்தார். இவர் செய்த செய்க்காட்சியில் விலங்கு உணவினை அடையும் நேர் வழியினை மட்டும் அடைத்தார். அதனைச் சுற்றிப் பெறும் வழியைத் தடுக்காமலே விட்டு விட்டார். ஆகவே, நிலையை நன்கு அறிந்து கொள்வதற்கு வழி இருந்தது. இங்கே குருட்டாட்டம் இல்லை. இந்தப் பல நிலைகளிலும் கருவியைப் பயன் படுத்தும் நிலைமை ஏற்பட்டதால் விலங்கு கருவியைப் பயன் படுத்தியதாம். இடையே வருகிற உறுப்பாக, இந்த நிலைகளில் கருவி ஓர் அமைதி பெற்றுள்ளது. கருவி எனத் தோன்றாதவற்றையும் அந்த அந்த நிலைக்கு ஏற்பக் கருவியாகப் பயன் படுத்தும் நிலையைக் காண்கிறோம். பழத்தைக் கையால் எட்டிப் பறிக்க முடியாதபோது அருகில் இருந்த தடிகொண்டு அதனைத் தன் புறமாக விலங்கு இழுத்துக் கொண்டதாம். அருகே இருந்த தடி, பழத்தை எட்டாதபடி, சிறிதாக இருந்தால் அதுகொண்டு பெரிய தடியைத்தள்ளி இழுத்துப் பின்பெரிய தடிகொண்டு பழத்தைப்

பெற்றதாம். பழம் கீழே அன்றி மேல் எட்டாத உயரத்தில் இருந்தால், தான் இருந்த பெட்டியின் மேல் ஏறிப் பழத்தைப் பறித்ததாம். இவ்வாறு சுற்றியுள்ள பொருள்களோடு தன் நிலையை ஒருங்குவைத்துக் காணும்போது, பெட்டி தடி என்பவை இருக்கும் பெட்டியாகவும், அடிக்கும் தடியாகவும் காட்சியளியாது, பழம் பெற உதவும் கருவிகளாக அந்த நிலையோடு ஒருங்கியைந்து ஒருப்பாட்டு வடிவமாக அமைந்து விட்டன எனலாம். நிலையை உணருவதாவது, இவ்வாறு ஒருப்பாட்டு வடிவமாகக் காணுதலே ஆம். அடிக்குந்தடி எனக்கண்ட முன்னைய நிலையிற்காணாத கருவிநிலையாம் புதுத் தோறணியைப் (Pattern) பின்னைய நிலையில் விலங்கு உணர்ந்ததும் செயலை முடிப்பது எளிதாயிற்று. புதிய இயக்கம் ஒன்றனையும் விலங்கு கற்றுக் கொள்ளவில்லை. சிக்கலைத் தீர்க்கும் நிலையானது தயக்கத்தின் பின்னே திடீர் எனத் தோன்றியது. முன் உணர்ந்த ஒருப்பாட்டு வடிவக்கோலம் வேறொரு கோலமாக வேறொரு தோறணியுடன் தோன்றியதும் புதிய நடத்தை எழுந்தது. வெவ்வேறு கிடந்த இரண்டு கொம்புகளை ஒன்றிலொன்று செருகிப் பழத்தினைத் தனக்காகத் தள்ளிக் கொள்வது போன்ற நிலைகளில் இரண்டு பொருள்களை ஒன்றுபடுத்தும் புதுமையைக் காண்கிறோம். விலங்கு சிறுகோலும் பெருங்கோலுமாகக் கிடந்தவற்றைக் கண்டு, "ஒன்றைக் கொண்டு ஒன்றைப் பயன் படுத்தக் கூடும்" என உணரும்போது நிலையை வேறுபிரித்தாராய்தலைக் காணலாம். அந்த விலங்கு, சுற்றிவைத்த கயிற்றினை அவிழ்த்து நீட்டிப் பயன்படுத்தும் நிலையில், பொருத்தமுறச் செய்யும் முறையைக் காண்கிறோம். ஒரு வகையாகப் பொருத்தம் உற்றனவற்றை வேறு ஒரு வகையாக மாற்றிப் பொருத்தமுற வைப்பதும் பொருத்தம் உறுத்தலே ஆம். "இவ்வாறு இந்த மூன்று வேறு நிலைகளும் எழுவது ஒருப்பாட்டு வடிவம் புதிய (தோறு — பயிற்சிப்

பொருட்டு; பல முறை தோன்றும் கோலப் பொதுமை) 'தோறணி' யாக (Pattern) விளங்கும் போதே ஆம்'' என்பதனைக் கோய்லர் வற்புறுத்துகின்றார்.

கோய்லரும் குழவிகளும் :— கோய்லர் என்பவர் குழவிகளைக் கொண்டும் ஆராய்ச்சி செய்தார். கூரையிலிருந்து பல வேறு உயர்நிலைகளில் பொம்மையைத் தொங்க விட்டார். 9''×12''×15'' என்ற அளவுள்ள கட்டை-12''×15''×18'' என்ற அளவுள்ள பெட்டி - சிறு நாற்காலி என்ற இவற்றைக் குழவியின் முன்வைத்தார். வேண்டிய உயரத்திற்கு ஏற்றவாறு, நாற்காலிமேல் ஏறியோ, அதன் மீது கட்டையையும் வைத்து ஏறியோ, எட்ட முயன்றபோது உயரத்திற்கு ஏற்றவாறு பெட்டியை உயரமாக இருக்கும் பக்கமாக வைத்துக் குழவிகள் ஏறிப் பொம்மையைப் பெற்றனவாம்.

மற்றோர் ஆராய்ச்சி :— இவரே மற்றோர் ஆராய்ச்சியும் செய்தார். 7½ அடி × 3 அடி × 2½ அடி அளவுள்ள விளையாட்டு அறை ஒன்றை அமைத்தார். அதற்குள்ளே குழந்தையை விளையாடவிட்டு அதற்கு வெளிப்புறத்தில் அழகிய பொம்மை ஒன்றை வைத்தார். ஒரு கஜமுள்ள கம்பு, கஜக்கோல், விளக்குமாறு என்ற இவை வெளியே கிடந்தன. ஓர் அடி நீளமுள்ள தடி அறைக்குள்ளே இருந்தது. இது கொண்டு புறத்தேயுள்ள கஜக்கோலையும், இரண்டு துண்டாய் இருந்த தூண்டில் கொம்பையும் (Fishing rod) தன் புறமாகக் குழவி தள்ளிக் கொள்ளக்கூடும். இந்தநிலையில் குழவியை விளித்து வெளியே கிடக்கும் பொம்மையை எடுத்துக் கொள்ளுமாறு கூறினல், "என்ன நிகழ்ந்தது'' என ஆராய்ந்தார். 100க்கு 25 குழந்தைகள் அதனைப்பற்றிக் கவலையே கொள்ள வில்லையாம். மிகுதி நின்றவையில் 100க்கு 68 நேரே அந்தப் பொம்மையைப்

பெற முயன்றனவாம். அடிக்கோல் கொண்டு தூண்டில் கொம்புகள் இரண்டையும் இழுத்து எடுத்து இரண்டு துண்டையும் ஒன்றாகச் செருகியும் இன்னும் பலவாறாகவும் பொம்மையைத் தம் பக்கமாகத் தள்ளிக் கொண்டனவாம். 100க்கு 32 குழவிகள் இவ்வாறு நேர் வகையாக எதிர் ஊன்றல் ஒன்றும் செய்யாது இந்தப் பொம்மையைப் பற்றிப் பேசியும், பிறவகையாக இயங்கியும் குறிப்பு முறையால் எதிர் ஊன்றி நின்றனவாம்.

ஆராய்ச்சியின் முடிவு — இந்த ஆராய்ச்சியிலே ஈடுபட்ட குழவிகளின் வயது 2, 3, அல்லது 4 ஆம். இரண்டு ஆண்டு குழவிகள் அனைத்தும், மூன்று ஆண்டு குழவிகளில் நூற்றுக்கு 40 ம், நான்காண்டு குழவிகளில் நூற்றுக்கு இருபதுமாக, எதிரூன்றாமலே இருந்தனவாம். வயதிற்கும் இந்த நிலைக்கும் உள்ள பொருத்தம் 0·74 அளவுள்ள பொருத்தமே ஆம். ஆராய்ச்சி செய்வாரின் உதவியை நாடியவை இரண்டாண்டு குழவிகளில் நூற்றுக்கு ஏழும், மூன்றாண்டு குழவிகளில் நூற்றுக்கு முப்பத்து மூன்றும், நாண்காண்டு குழவிகளில் நூற்றுக்கு ஐம்பத்தொன்பதும் ஆகும். இந்த நிலைக்கும் வயதிற்கும் உள்ள பொருத்தம் 0·64 அளவுள்ள பொருத்தமே (Correlation) ஆம். தம் திறமின்மை உணர்ச்சியால் வாட, அதன் பயனாகச் சிலபோது பெரு முயற்சி செய்து வெற்றி பெற்றும், சிலபோது தோல்வி பெற்றும் வந்த குழவிகளும் இருந்தனவாம். இத்தகைய நிலைக்கும் வயதிற்கும் ஒரு தொடர்பும் இல்லையாம். இந்தக் குழவிகளில் காற்பங்கு பொம்மையைச் சுட்டிக் காட்டிக்கொண்டும், அதனைத் தொடக் கையை நீட்டியும் நின்றதாம். எல்லா வயது குழவிகளிலும் இந்த நிலைமை ஒரே அளவிற் காணப்படுவதால், வயதிற்கும் இதற்கும் பொருத்தம் இல்லை எனலாம். இழுத்தும் பறித்தும்

இயங்கிவந்த குழவிகள் இரண்டாம் ஆண்டில் 47% ஆகவும், மூன்றும் ஆண்டில் 56% ஆகவும், நான்காம் ஆண்டில் 79% ஆகவும் விளங்கினவாம். இங்கே இந்த நிலைக்கும் வயதிற்கும் உள்ள பொருத்தம் 0·44 அளவுள்ள பொருத்தமேயாம் (Correlaton). "கிட்டாத பழம் புளிக்கும்" என்ற மன-நிலையில் பொம்மையைப் புறக்கணித்தும், புறக்கணிப்பதற்குக் காரணங்களைக் கற்பித்துக் கூறியும் வரும் குழவிகள் இரண்டாண்டு குழவிகளில் ஒன்றும் இல்லையாம். மூன்றும் ஆண்டில் 12% ஆகவே இருந்தனவாம். நான்காம் ஆண்டில் 25% ஆக விளங்கினவாம்.

தோல்வியின் காரணம் :— இங்கு எழுந்த தோல்விகளை ஆராய்ந்தபோது கோயிலர் சில காரணங்களைக் கண்டார். (1) குழவி தன்னையும் தன் செயலையுமே எண்ணிச் செய்து வரும்போது, செய்து முடிக்க வேண்டிய முடிவிலே ஈடுபடாது, தான் செய்வதனைப் பார்த்துப் பிறர் நகைக்கின்றனரா என்றே நோக்கி நின்றால், வெற்றி பெறுவது எங்ஙனம் கூடும்? ஆகலின், தற்சுட்டுநிலை இவ்வாறு தோல்வியின் காரணமாக விளங்கியது. (2) தன்னம்பிக்கையற்ற குழவிகளும் வெற்றி பெறவில்லை. (3) குழவியின் பல செய்கைகளையும் பிறர் தடுத்து வந்தமை-யால், சில குழவிகள் ஊக்கமின்றித் தயங்கி நின்றன. பல வகையாக இயங்க வேண்டுமானால், "இளகுநிலை" வேண்டுமே-யன்றி "வெட்டுநிலை" வேண்டுவதில்லை (Plasticity-rigidity). தயக்கத்தால், நிலையாக மாறாது நின்றால், இளக்கநிலை எழு-வதற்கு இல்லை. பல வழியாக முயன்று வெற்றி காண்பது எங்கே? (4) அக்கரை இல்லாதவர்களும் அவ்வாறே வெற்றி காணாது தடுமாறினர். (5) குழவியின் செயலிடையே அதன் மனம் முறியும்படி அதன் முயற்சியைக் குறை கூறிப் பெரியோர் சிதைத்துவந்த நிலையிலும் தோல்வியே அத்தகைய குழவிகளின்

முடிவாயிற்று. (6)கோபமும் அச்சமும் பொங்கி வழியும்போது, புறநிலை விளங்குவதில்லை. ஆகையால், உள்ளக் கிளர்ச்சி பெற்ற குழவிகள் உண்மை நிலையை உணராது தட்டி முட்டித் தயங்கித் தோல்வியுற்றனவாம். (7) உற்று நோக்கினல் அன்றி உண்மை நிலையை உணர முடியாது; ஊன்றிப் பார்த்தற்கு ஆற்றலும் வேண்டும்; பழக்கமும் வேண்டும். இந்த இரண்டும் அற்ற குழவிகள் உண்மை நிலையை உள்ளவாறு உணர முடியாமை-யால் தோல்வியே பெற்றன. (8) உணர்வுநிலை நன்கு வளர்ந்து திருத்தம் பெறுதலும் வேண்டும். இல்லையானல், உண்மை நிலையை உணர்வது எங்ஙனம் கூடும்? இயக்கமின்றிக் கிடந்து தோல்வியையே காணுதல் கூடும்.

## V. உள்ளுணர்வு

உள்ளுணர்வு வளர்தல் :— இத்தகைய சிக்கலான நிலைகளையும் கருவிகளையும் கண்டு பழகும்போது, குழவியின் தயக்கம் மறைகிறது. இத்தகைய நிலையில் எழும் குழவியின் செயல்கள் படிப்படியாகச் சிறந்துவரக் காண்கிறோம். கீழ்ப்-படியாக அமையும் செயல் நோக்கமற்ற செயலேயாம். உயிரற்ற பொருளேபோல இவ்வாறு நோக்கமின்றி இந்தப்புறமும், அந்தப் புறமும் இயங்குவது இரண்டாம் ஆண்டிலிருந்து தொடங்குகிறது. இதற்கும் உயர்வாகச் சிறந்தபடி என அமைவது துருவிப் பார்ப்பதேயாம். இங்கே வீணன எதிரூன்றல்கள் ஒழிகின்றன. குழவி முன்னதாகக் கண்ட முடிவினையே இந்த நிலையில் எழும் செயல்கள் வெளிப்படுத்து-கின்றன எனலாம். இவ்வாறு சிக்கலைத் தீர்த்து வரும்போது உள்ளுணர்வு வளர்கிறது. அவ்வாறு உள்ளுணர்வு வளர்ந்தால் ஒரு சிக்கலைத் தீர்க்கவரும்போது, முன்னைய அனுபவம் உற்றதுணையாய் உதவுகிறது.

பழமையும் புதுமையும் :— ஒரு சிக்கலை உள்ளுணர்வுடன் காண வேண்டுமானால், பழைய அனுபவம் அடிப்படையாக விளங்குதல் வேண்டும். பழைய அனுபவத்தின் பயனாக ஒரு சில அடையாளங்களும், ஒரு சில விதிகளும், மனத்திற் பதிந்து நிறைகின்றன. சிக்கலைத் தீர்ப்பதற்கு எழவேண்டிய இயக்கங்கள் பலவற்றினையும் பழகி இருத்தல் வேண்டும். அஞ்சிய நிலையில் ஓடிப் பிழைத்தல் கூடும். ஆனால், நடத்தல் என்ற இயக்கத்தினைப் பழகி அறியாத குழவி, எவ்வாறு ஓடுதல் கூடும்? பழைய அனுபவம் நிறைந்தால்மட்டும்போதாது. "புதிய சிக்கல் பழைய சிக்கலே" என எல்லா வகையாலும் ஒன்றுபட்டு விளங்குவதில்லை. ஒரு சில ஒப்புமையே உண்டு. ஒரு சில புதுமையும் உண்டு. இதுவே உலக இயல்பு. ஆதலின், பழைய அனுபவத்திலிருந்தும் இன்றைய சிக்கலைத் தீர்ப்பதற்கு உதவுமவற்றைத் தேர்ந்தெடுத்தால் மட்டுமே, இன்று வெற்றி பெறலாம். முன்னைய அனுபவத்தின் ஒருப்பாட்டு வடிவக் கோலத்தின் உறுப்புக்கள் ஒருவகை இயைபோடும் விளங்கும். இப்போது புதிய நிலையில் அவற்றில் ஒரு சிலவே தோன்றுகின்றன. உடனே பழைய ஒற்றுமைச் சம்பந்தத்தால், பழைய கோலம் முழுதும் மனத்தில் எழும். அதற்கு ஏற்ற இயக்கமும் இயல்பாக எழும். இனி, முன் காணாத கோலமும் ஒப்பான வகையில் முன் அறிந்ததே போலத் தோன்றவும் கூடும். உவமானப் பிரமாணம் எனப் பேசவருவது இதனாலேயே ஆம். முன்பின் கேளாத பாட்டை முதல் முறையாகக் கேட்கின்றோம். பாட்டு முடியாத முன்னரே சிறிதளவு அதனைக் கேட்டதும் "இவ்வாறு தான் இந்தப் பாட்டு முடியும்." என எதிர் பார்க்கின்றோம். எனவே அப்பாட்டின் கோலம், முடிவதற்கு முன்னதாகவே நம் மனத்தே தோன்றுகிறது என்பதாயிற்று. இது ஒப்புமை வகையால் எழுந்ததேயாம். குழவி ஒரு சில வினைச் சொற்களின் நிகழ்கால வடிவத்தைத் "தள்ளு" "தள்ளு-

கின்றான்'' ''வீழ்'' ''வீழ்கின்றான்'' என அறிந்தபின், மற்றைய வினைச் சொற்களின் நிகழ்கால வடிவத்தைக் கேட்டறியாத போதும், ''வளை - வளைகின்றான்'' ''செகு - செகுக்கின்றான்'' எனத் தானே உள்ளுணர்வால் ஒப்புமையாக உணர்ந்து வழங்கி வரக் காண்கிறோம். இயக்கங்களை வேறு பிரித்து அறிவதற்குச் ''செயற்கை மறிவினை'' என்ற கருத்து உதவுவது போல இந்த ஒருப்பாட்டு வடிவக் (Configuration) கோலம் (Pattern) என்ற கருத்தும், கற்றுக்கொள்வது என்ற நிலையின் உண்மையை விளக்கப் பெரிதும் உதவும்.

சிறப்புணர்வும் பொது உணர்வும் :— ஒரு குறிப்பிட்ட பொருளைச்சிறப்பு நிலையில் உணர்வது ''காட்சிஉணர்வு'' என்ற சிறப்புணர்வாம் (Percopton). குறிப்பிட்டதொரு நாற்காலி-யைக் கண்டு உணர்வது இதற்கு எடுத்துக் காட்டாம். நாற்காலி-களின் பொதுத் தன்மையை நாற்காலி என உணர்வது போலப் பொதுத் தன்மை உணர்வினைக் ''கருத்துணர்வு'' என்ற பொதுஉணர்வு (Conception) எனலாம். இவ்வாறு பொது-நிலையை உணர்வதற்குப் பல பொருள்களிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை உணர வேண்டும்.

வயதும் உணர்வும் :— வயதிற்கேற்ப இந்தப் பொது உணர்வு மாறும். பல வடிவங்களில் பலநிறங்களோடு விளங்கும் தட்டுக்களைக் குழவியின் எதிரே வைத்து ஒரே வகையான தட்டுக்களைப் பொறுக்கி எடுக்குமாறு கேட்டுக்கொள்வது ஓர் ஆராய்ச்சி. மூன்று ஆண்டுக்கு உட்பட்ட குழவிகள் நிறத்தைப் புறக்கணித்துவிட்டு, வடிவு பற்றியே, பொறுக்கி வரக் காண்-கிறோம். மூன்றிலிருந்து ஆறு ஆண்டு வரை உள்ள குழவிகள் வடிவினைப் புறக்கணித்து நிறம்பற்றியேபொறுக்கிவருகின்றன. ஆறு ஆண்டுகட்கு மேற்பட்ட குழவிகள் மறுபடியும் வடிவு

பற்றியே பொறுக்குகின்றன. இத்தகைய மாறுதல்கள் ஒரு புறம் இருக்கப் பொதுநிலையுணர்வு வயதேற ஏறச் சிறந்து விளங்கக் காண்கிறோம். நான்கு தட்டுகளில் பொம்மையை அடுக்கிவைக்கும்போது ஒன்றில் நாயையும் குருவியையும், மற்றொன்றில் நாயையும் பசுவையும், வேறொன்றில் நாயையும் பன்றியையும், மிகுதி ஒன்றில் நாயையும் ஆட்டையும் வைத்துக் குழவிகளிடம் காட்டி "இந்த நான்கு தட்டுகளிலும் ஒன்று போல எல்லாவற்றிலும் இருப்பது எது" என்று கேட்டு ஓர் ஆராய்ச்சிவாணர் ஆராய்ந்தார். ஐந்து ஆண்டுகளுக்கு உட்பட்ட குழவிகள் பொதுநிலையை அறிந்து கூறமுடியவில்லையாம். மேலும் மேலும் நுட்பமான பொதுநிலையை அறிவதற்கு மேலும் மேலும் வயது ஏறிக் கொண்டே போதல் வேண்டும்.

அகலநிலை உயரநிலை:- இந்தப் பொது உணர்வை அகநிலைப் பொது உணர்வு (Horizontal Conceptions) எனவும், உயர நிலைப் பொது உணர்வு (Vertical Conceptions) எனவும் மேனாட்டறிஞர் சிலர் பகுத்து வரக் காண்கிறோம். உயிர்ப் பொருள்களை எல்லாம் அகலப் பரப்பிப் பல இனங்களாகப் பிரிக்கின்றோம். ஊர்வன, பறப்பன, நடப்பன என்று பலவாறு பிரிக்கின்றோம் அன்றோ? அகலநிலைப் பொது உணர்வே ஈதாம். இனி, உயிர்ப் பொருள்களை எல்லாம் அகலப் பரப்பி வைத்து, அதிலிருந்தும் இயங்குதிணை உயிர்ப் பொருள்களையும், நிலைத்-திணை உயிர்ப் பொருள்களையும் வேறுபிரித்து, இயங்குதிணை உயிர்ப் பொருள்களை உயர எடுத்துப் பரப்பி, அவற்றிலும் முதுகெலும்புகளை (Vertibrae) மேலுமோர் உயர் நிலையில் அகலப்பரப்பி, அவற்றிலிருந்தும் பாலிகளை (தாய்ப்பாலுண்பன-Mammals) அதிலும் உயர்ந்தநிலையில்பரப்பி, அவற்றிலிருந்தும் மக்களை நீக்கி, எவற்றிற்கும் மேலாம் உயர்நிலையில் வைத்துப் பொதுமை காண்பதனையும் யாவரும் அறிவர். தனித்தனி

ஒவ்வொரு படியிலும் பொதுமை காண்பது அகலநிலைப் பொது உணர்வாம். படிப்படியாக வைத்து அவற்றிடையே எழும் வேற்றுமையோடு அடிப்படையாக அமைந்த ஒற்றுமையைக் காண்பது உயர் நிலைப் பொது உணர்வாம். பாகுபாட்டுக்கொடிவழி (Classification Table) அமைப்பது இவ்வாறுதான். உயர் நிலைப் பொது உணர்வு வழியாக இனங்களும், உள்ளினங்களும், பிரிவும், உட்பிரிவுமாக வரக் காண்கிறோம். அகல நிலைப் பொது உணர்வில் பல பிரிவுகளைச் சேர்ந்த பல பொருள்களையும் ஒரேநிலையில் வைத்துக் காண முடிகிறது. "எந்தநிலையில் வைப்பது" என்பது நம்முடைய நோக்கத்தையும் சந்தர்ப்பத்தையும் பொறுத்தது. ஒரு கூட்டத்தை ஆண் பெண் எனப் பகுக்கலாம்; வயது வகையில் பகுக்கலாம்; கல்வி அறிவு வகையாகப் பகுக்கலாம். "எப்படிப் பகுக்கின்றோம்" என்பது அவ்வப்போது எழும் நோக்கத்தைப் பொறுத்தது என்பது தெளிவு. இவ்வாறு மாறிமாறி வரக்கூடிய நிலையில், அகநிலைப் பொது உணர்வு விளங்குதலால், அது தேங்கிக்கிடப்பதன்றும்; மாறிமாறி இயங்கிக்கொண்டே வருவதாம். ஆதலின், இதனை இயக்க நிலைப் பொது உணர்வு எனலாம். அது காரணமாக இதுவே மிகப் பயனுடையதொரு பொது உணர்வுமாகும். ஈதே முன் எழுந்தும் விளங்குகிறது.

செய்க் காட்சி :- இதனையும் ஆராய்ந்து அறிஞர் கண்டனர். பல வகையான முக்கோணங்களையும் பல வகையான நாற்கோணங்களையும் தனித்தனியே, "டாங்" "ஜங்", "கட்", "பட்" எனப் பெயரிட்டு முக்கோணத்தின் பொதுப் பெயர் "வீண்" என்றும், நாற்கோணத்தின் பொதுப் பெயர் "ஏல்" என்றும், கோணவடிவங்களின் பெயர் "வீல்" என்றும் பெயரிட்டு வழங்கிக் குழவிகளை இவற்றை அகல நிலையாகவும், உயரநிலையாகவும் பரப்புமாறு கேட்டுக் கொண்டால்,

அவற்றிற்கு அகலநிலைப்பொது உணர்வின்படி பரப்புவதே எளிதாகத் தோன்றுகிறது; உயர நிலைப் பொது உணர்வின்படி படிப்படியாக அமைப்பது அருமையாகிறது. கோணவடிவினைப் பொதுவாக ஓரினமாக உணர்வதினும், நாற்கோணம் முக்-கோணம் எனப் பிரித்து உணர்வதே அவற்றிற்கு எளிதாம். மொழியுணர்வு வளர்ந்துவர வளர்ந்துவரக் குழவி பொதுப் பெயர்களையும் சிறப்புப் பெயர்களையும் வழங்கி வரும்போது, பொதுநிலை யுணர்வு வளர்வது எளிதாகிறது.

குழவியின் பொது அறிவு :— குழவிக்குப் பொதுநிலை உணர்வே இல்லை எனக் கூறுவதற்கு இடம் இல்லை. ஆனால், அதன் பொது உணர்வு அனைத்தும் அகல நிலைப் பொது உணர்வே ஆம். குழவி பொருள்களிடையே அவ்வாறே வேறுபாடுகளையும் காண்கிறது. ஒற்றுமையையும் காண்கிறது. ஆனால், அது காணும் ஒற்றுமை பெரியோர்காணும் ஒற்றுமை போன்றதன்றாம். உயர்வுநிலைப் பொது உணர்வு வழியாக அறிந்து எண்ணங்களைப் பெருக்கிக்கொண்டு போவது, குழவி-யால் ஆவது ஒன்றன்று. தெள்ளத் தெளிய எழும் தருக்க-றாலுணர்வு அங்கு எழுவதற்கு இடம் இல்லை. பொதுநிலையை முற்ற முடிய அறியவேண்டுமானால், பொருள்களைத் தெள்ளத் தெளியப் படிப் படியாக உயரும் நிலைகளில் வைத்து உணர்தல் வேண்டும். அவற்றின் தொடர்பினை அறிந்து வழங்குதற்கு நீண்ட பழக்கமும் வேண்டும். "குழவி நிலையில் நம்மைப் போலவே பொது உணர்வு பெற்று அது விளங்க வேண்டும்" என வற்புறுத்துவது அறியாமையே ஆம். அவ்வாறு குருட்-டாட்டமாய் வற்புறுத்தாது, அக்குழவியின் நிலைமைக்கு ஏற்ப வேறுபாடுகளை உணருமாறு விட்டுவிடுவதே சிறந்த வழியாம். அவ்வாறு உரிமை பெற்ற குழவிகள் பின்னர்த் தெள்ளத் தெளிய அறிவாராய்ச்சி செய்யப் பழகிவிடுகின்றனவாம்.

## VI. முறைமையும் கொள்கையும்

முறையறிதல் :- உள்ளத்தின் பல வகையான செயல்கள் பொதுவான ஒரு முறையின் படியே நிகழ்ந்து வருதல் வேண்டும். குழவி தன் அனுபவத்தின் பயனாக இத்தகைய முறைகளை அமைத்துக் கொண்டு, அதன்படி நடக்குமாறு பழக்குவதே அதற்கு நாம் செய்யும் சிறந்த உதவியாம். அனுபவத்தால் எழும் பயன் ஒன்றினை "அடையாளம் அறிதல்" என வழங்கலாம். "மின்னுகிறது; உடனே இடிக்கும்" என்கிறோம். மின்னலை இடியின் அடையாளமாக அறிகின்றோம். இத்தகைய அனுபவத்தின் பயனாகப் பின்னர் நிகழப்போகும் செய்தியினை முன்னரே நிகழும் என அறிவதனையே "எதிர்பார்த்தல்" என வழங்குகிறோம். பழைய அனுபவங்களிடையே ஓரளவு ஒற்றுமை தோன்றினால் மட்டுமே, இவ்வாறு ஒரு செய்தியின் அடையாளமாகச் சிலவற்றைக் கற்றுக்கொள்வது என்பது நிகழக்கூடும். மின்னிய போதெல்லாம் இடி இடித்து வாராமற் போனால், எவ்வாறு கற்றுக்கொள்வது?

பொதுமை அறிதல் :— கொய்லாது குரங்குகள் சில தொழிலைச் செய்ததும் வட்டத் துண்டுகளைப் பெற்றனவாம். இவற்றை ஓர் எந்திரத்தில் வைத்து அழுத்த வேண்டும். நீல நிறவட்டத்தினை வைத்து அழுத்தினால் 1 கொடி முந்திரிப்பழம் கிடைக்கும்; செந்நிற வட்டத்தினை அழுத்தினால் 2 கொடி முந்திரிப்பழம் கிடைக்கும்; பித்தளை வட்டமோ ஒன்றுமே தாராது. இந்த ஏற்பாட்டினைக் குரங்குகள் உணர்ந்ததும் செந்நிற வட்டத்தினையே பெற முயன்று அதற்கேற்ற வேலையைச் செய்து முடித்துப் பழங்களைப் பெற்றுக் கொள்ளக் கற்றுக் கொண்டனவாம். இரண்டு பெட்டிகளை எடுத்து ஒன்றின்மேல் பூவேலை செய்த மூடியையும், மற்றொன்றில் பூவேலை ஒன்றும்

இல்லாத மூடியையும் அமைத்துப் பொம்மையைப் பூ மூடி-யுள்ள பெட்டியிலேயே பல முறையும் மாருது வைத்து வருவோமாஞல், குழவி எளிதில் பூ மூடியுள்ள பெட்டியையே தேடி எடுக்கப் பழகிவிடுகிறது. பல வகை வடிவங்களை மூடி-களின் மேல் எழுதியபின், வலப்புறமுள்ள பெட்டியிலேயே பொம்மையை வைத்து வருவோமாஞல், குழவி அந்தப் பெட்டியைப் பொம்மையுள்ள பெட்டியாகக் கண்டறிந்து எடுப்பது முன்னையினும் சிறிது அரிதாகிறது. ஒன்றுமில்லாத மூடியைப் பொம்மையுள்ள பெட்டியின்மேல் வைக்கும் போதெல்லாம், அந்தப் பெட்டியைத் தொலைவில் வைத்தும், புள்ளியுள்ள மூடியைப் பொம்மை இருக்கும் பெட்டியின் மேல் வைக்கும் போதெல்லாம் அந்தப் பெட்டியை அருகில் வைத்தும் பல முறை குழவிக்குக் காட்டிவந்தால், இந்த வேற்றுமையை உணர்ந்து பொம்மையைப் பெறுவது மிக அருமையாம். 6 ஆம் ஆண்டிலிருந்து 10 ஆம் ஆண்டுவரை-யுள்ள குழவிகளே இத்தகைய முறையை அறிந்து அடை-யாளங்கள் வாயிலாகப் பொம்மையின் இருப்பை உணர்ந்து எடுக்கக் கூடுமாம்.

ஒரு விளையாட்டு :— எழு கோடுகளைக்கீறி இருவர் விளையாடும் விளையாட்டு ஒன்று உண்டு. மாறி மாறி முறைக்கு ஒருவராக, அவற்றில் இரண்டு கோடுகளையோ அல்லது ஒரு கோட்டையோ, அவரவர் விருப்பப்படி கலைத்துக் கொண்டே வந்தால், கடைசியில் கலைக்க வருகின்றவர் ஒன்றே இரண்டோ நிற்பதனைப் பெற்று வெற்றி அடைந்தவர் ஆவர். இந்த ஆட்டத்தில், எதிரி கலைக்க வரும்போது மூன்றூற் பெருக்கி வருந்தொகையாகக் கோடுகள் விஞ்சுமாறு செய்யும் குழவியே வெல்லும். இந்த விதியினை வயது சென்ற குழவிகள் எளிதில் கண்டு பிடித்து விடுகின்றன. பின்னர் எழுகோடுகளுக்குப்

பதிலாக மூன்றுற்பெருக்கிவராத தொகைகளாக 8, 10, 11, 13 எனக் கோடுகள் கிழித்தும் பார்த்தால் குழவி எவ்வாறு முன்னைய விதியைப் பயன்படுத்துகிறது எனக் காணலாம்.

கொள்கை அறிதல் :— இவ்வாறு பல விதிகளைக் குழவி கண்டறிவது போலவே, பல வகையான கொள்கைகளையும் அறியுமாறும் அதனை நாம் பழக்கி விடுதல் வேண்டும். இங்கே பலவகை அனுபவங்கள் அகன்று ஆழ்ந்து ஓங்கிவருதல் வேண்டும். குழவிக்கு ஒரு மூலையையேனும் காட்டி விட்டால் மட்டுமே குழவி வெற்றிபெற முடியும். நம்மைச்சுற்றி இருக்கின்ற காற்றில் உயிரியம் (Oxygen) ஐந்தில் ஒரு பங்காம். ஒன்றுமில்லாத வெற்றிடம் (Vacuum) இயற்கையில் சிதையாது நிலைபெறுவது இயலாது; அயலுள்ள நீரோ, ஆவியோ விரைந்து அவ்விடத்தே பாய முயலும். 5 கெட்டி அங்குலம் உள்ள உருட்டுக்கண்ணுடி அளவுக்குழையில் (Graduated measuring Cylinder) சிறு மெழுகுவத்தியைஎரிய விட்டு வாயை மூடிவிடுவோமாஞல், மெழுகுவத்தி உள்ளே உயிரியம் இருக்கும் வரையிலும் எரிந்து, பின்னர் அணைந்து போகும். அந்தக்குழையை மூடியோடே கொண்டுசென்று சுண்ணும்புத் தண்ணீரின் பரப்பின்மீது கவிழ்த்து, மூடியை எடுத்து விடுவோமாஞல், உடனே சிறிது நேரத்திற்கெல்லாம் வெளியே இருந்த நீர் குழையினுள்ளே பாய்ந்து ஒரு கெட்டி அங்குல அளவு நிற்கக்காண்கிறேம். குழையில் இருந்த காற்றில் ஐந்தில் ஒரு பங்கு உயிரியம் என்பதும், அதுவே எரியும்போது எரியுண்டது என்பதும், வெற்றிடம் சிதைவுறுதிருக்க முடியாது ஆதலின், அருகில் இருந்த நீர் மேல் ஏறி அந்த வெற்றிடத்தை நிரப்பியது என்பதும் இதனுல் விளங்கும். இவ்வாறு விளங்கிய பின் சிறு கண்ணுடித் தொட்டியில், கால் அணு மூழ்கும் அளவு மட்டும் ஒரு கெட்டி அங்குலம் தண்ணீர் ஊற்றிவைத்து,

அந்தக் காசினைக் கையில் நீர் படாமல் எடுக்கவேண்டும் எனக் குழவியைக் கேட்டால், கற்றுக்கொண்ட கொள்கையைப் பயன் படுத்துகிறதா எனக் காணலாம். முன் போலவே குழையில் மெழுகு வத்தியை ஏற்றி மூடி வத்தி அவிந்ததும் நீர்மேல் கவிழ்த்தால், உடனே தொட்டியிலிருந்த நீர் அத்தனையும் குழையினுள்ளே ஏறும். காலணு, நீர் படாமல், வெட்ட-வெளியில் கிடக்கும்; அதனை எடுத்துக் குழவி கொடுக்கும். இங்கு இந்தக்; காசினை எடுப்பதன்று நோக்கம். குழவியை நினையுமாறு செய்து கொள்கைகளை அறிந்து பயன் படுத்தச் செய்வதே நோக்கமாகும்.

மாறுதலும் வளர்ச்சியே :— இவ்வாறு திறம் பெற்று வருவதனைச் சிறப்பிக்க முயலும்போது அதனைத் தூண்டி-வளர்க்கவோ, தடுத்து அழிக்கவோ வரும் மனப்போக்குகளை ஆராய்தல் வேண்டும். நாம் செய்யும் செய்கை வெற்றி பெறு-வதிலேயே நாட்டமாய் இருக்கும்போது, செய்யும் திறனை ஊன்றிப் பார்ப்பதற்குப் போதிய ஊக்கம் எழுவதில்லை. ஆதலின், அதனைப்பற்றிய கொள்கைகளை அறிவதற்கும் இடம் இருப்பதில்லை. குழவி தான் செய்கின்ற செயலை முடிப்பதற்கு ஓரே வழிதான் இருக்கின்றதென மன்றுடாது, பல வழிகளும் உள்ளன என உணர்தல் வேண்டும். பல வழிகளை எதிர் பார்க்கும் மனப்பான்மை வளர்தல் வேண்டும். அப்போது மட்டுமே நாம் விரும்பும் சிறந்த மனநிலை வளர்தல் கூடும். கொள்கையை அறிய வேண்டுமானல், பல வழிகளையும் ஒப்பு நோக்கி உண்மையை உணர்தல் வேண்டும். ஆதலின், மாறுத முறைகளைப் பற்றிய எண்ணங்களும், குழவி தனக்குத் தானே எழுப்பிக் கொள்ளும் தடைகளும் அவ்வாறு பல படியாக இயங்கி உண்மையறிதலைத் தடுக்கின்றன. தடுக்கான குழவி அஞ்சிவரும் குழவியினும் பல கொள்கையை உணர்தற்கு

இட முண்டு. இத்தகைய அச்சமுள்ள குழவிகளைத் திருத்த வேண்டுமானால், இவற்றினிடையே தன்நம்பிக்கையை வளர்த்தல் வேண்டும். தன்நம்பிக்கை என்றால் மேலே ஒன்றையும் செய்வதற்கு ஊக்கமின்றித் தன்னில் தானே ஆறுதல் பெற்றுத் தற்சுட்டுணர்வாக வரும் தன் மகிழ்ச்சி-யன்றாம். அவ்வாறு தன்னையே நோக்கி ஆறுதல் பெற்று மகிழும்போது, கொள்கையைப் பற்றிய நாட்டம் எங்ஙனம் எழுதல் கூடும்? தான் முன்னுக்கு வர மேலும் இடமுண்டு என நம்புவோனுக்கே அத்தகைய நாட்டம் எழுதல் கூடும். அறிவென்பது தேங்கிக் கிடக்கும் குளம் அன்று; ஓடிக்-கொண்டே இருக்கும் ஒரு பேராறும். ஆதலின், நேற்றறிந்தது இன்றறிவதாகாது. காலம் ஓடுவதற்கு ஏற்பத் தானும் ஓடிப் புதிய காலத்திற்கு ஏற்பப் புது முகங்காட்டி அறிவு நகைக்-கின்றது. ஆதலின், ஒருவன் தன் கல்வி நிறைந்து விட்டது என நினைப்பதே கல்லாமையாம். கல்விக்கு முற்றுப் புள்ளி இல்லை. "சாந்துணையும் கல்லாதவாறு என்?" என்று திரு-வள்ளுவர் கேட்கின்றார்.

தொடர்பு படுத்தல் :- இவ்வாறு குறிப்பிட்ட தொரு சிக்-கலைத் தன் பழைய அனுபவத்தினைக் கொண்டு குழவி தீர்த்துவர முயல்வதே சிறந்த வழியாம். இவ்வாறு தீர்த்தவுடன் தன் முறையைத் தானாகவே குழவி ஆராயுமாறு செய்தல் வேண்டும். இதனினும் சிறந்த முறையை அது தானாகவே காண முடியுமாறு அதற்கு ஊக்கம் ஏறிவரும்படி தூண்டுதல் வேண்டும். இந்த முயற்சியில் ஈடுபட்டுத் தன் அனுபவத்தில் முன் காணாத சில உண்மைகளைக் குழவி கண்டு வியந்து முன்னேறக் கூடும். பொதுவாக உலகினைப் பற்றி அறிந்த செய்திகளைக் குழவி நாளுக்குநாள் வளர்த்துக் கொண்டு போவதேயன்றி அவற்றைச் சிதறிக் கிடக்குமாறு விடாது ஒரு

தொடர்பு படுத்திக் கோவை செய்து மனத்தகத்தே பொருத்தம் உறச் செய்யவும் முடிகிறகிது.

ஒற்றுமைக் கோலம் :— அறிவும் செயலும் பிரிக்க முடியாத ஒற்றுமைப் பாட்டுடன் விளங்குகின்றன. 'அறிவாராய்ச்சி செய்வது என்றால் பொருள்களை வைத்தன்றி எண்ணங்களைக் கொண்டே ஒரு செய்க்காட்சி செய்வதேயாம்' என்கின்றார் பிராட்லி (Bradley) என்ற பேராசிரியர். எண்ணம் என்றால் ஒருவகையாகப் பொருத்தம் உறுவதேயாம். முன்னெல்லாம் இயக்க வடிவாக எழும் எதிருன்றல் பின்னர் பேச்சாக எழுகின்றது. அதற்குப் பின்னர் எண்ணமாக அடங்கி விடுகின்றது. தடை செய்வானோடு கையாரப் போராடிய காலம் போய் வாயார வைது ஆறுதல் அடையும் காலம் வருகிறது. அதனிடை வாழும்போது சிலபோது வாயார வைய முடியாமையால் உள்ளுக்குள்ளே மனமார வைதுநிற்கின்ற நிலையும் எழுகிறது. ஆனால், எண்ணங்கள் இவ்வாறு உலகத்தின் நெருக்கடியினிடையே செய்க்காட்சியாக எழாமல் பள்ளிக்கூடத்திலே வெறும் சொல்லாரவாரமாக மட்டும் ஒலிக்குமானால் மேற்கூறிய பொருத்தமுறுநிலை தோன்றாது போகின்றது. எனவே, "கற்றுக் கொள்வதென்றால் ஒரு வகையான சிக்கலைத் தீர்த்தலே ஆம்" என்பதனை வற்புறுத்தவேண்டும் என்பதாயிற்று. நம் அனுபவங்களும் அந்த நிலைக்கு உதவ வரவேண்டும். தனித் தனியே கற்றுக்கொண்டன பலவும் படிப் படியாக ஒருங்கியைந்து ஒருப்பாட்டு வடிவம் கொள்ளும் போது உள்ளுணர்வு எழுகின்றது எனலாம்.

"சித்திரமும் கைப் பழக்கம் செந்தமிழும் நாப் பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப் பழக்கம்"—

ஔவையார் — தனிப் பாடல்

# 19. படிப்பும் மறதியும்

## I. நினைவு

மனப் பாடம் :— பழங்காலக் கல்விமுறை மனப்பாடஞ் செய்வதே ஆம். இன்றேனும் பெருக்கல் வாய்ப்பாட்டினை பாராமல் ஒப்புவியாது, மேல் செல்ல முடியுமோ? பாவின் சுவை அதனைப் பாராமல் படிப்பதில் அன்றோ சிறந்து விளங்குறகிது ? பெருக்கல் வாய்பாட்டைப் பாராமற் பண்ணுவதும், பாவினைப் பாராமற் பண்ணுவதும் ஒன்றல்ல. ஒன்று முதலிற் பொருளற்றது. மற்றையது பொருள் நிரம்பியது; சொல்லவும் இனிப்பது. இவ்வாறு பல வகையாக மனப் பாடம் செய்வதனைக் கற்றுக் கொடுப்பார் இன்றிக் குழவி தானே எவ்வாறு நன்கு அறிய முடியும்?

உணர்ச்சி நினைவு:- நம் புனிற்றிளங் குழவிப் பருவத்து-நினைவுகள் பின்னர் வயதான பிறகு நினைவிற்கு வருவதில்லை. மூன்றும் ஆண்டிற்கு முன்னைய நினைவுகளை யாரும் கூற நாம் கேட்டதில்லை. குழவிக் காலத்து நினைவுகள் உணர்ச்சி ததும்பு-வனவாம். நனவிலி மன நிலையைப் பற்றிக் கூறும்போது இவற்றைப் பற்றியும் சுட்டினோம். 'பேச்சு எழுவதற்கு முந்திய இந்த அனுபவங்கள் சொல் வடிவமாகப் பதியாமல் இயக்கங்-களின் நினைவாகவே பதிந்திருக்கும்' என ரீபோ (Ribot) என்பார் கூறியதனையும் கண்டோம். இந்த உணர்ச்சி-நெருக்கடியால் மனக் கோளாறுகள் எழுவதனையும் கண்டோம் (Complex). அந்த உணர்ச்சி வகையான நெருக்கடிக்கு ஏற்ற மெய்ப்பாடு தோன்றும் வரலாறு ஒன்றினை முன் நடந்ததாகக்

கூறிவரும்போது, இந்த நெருக்கடி தீருகின்றதென நனவிலி மனநிலையை ஆராய்வார் கூறுகின்றனர். இந்த வரலாறு உண்மையில் நிகழாததும் ஆகலாம். வரலாற்றை நடந்தபடி கூற முடியாதிருந்தாலும் குழவிப் பருவத்தே நிகழ்ந்த செய்திகளின் பயப்பாடு மனத்தே பதிந்து கிடக்கலாம்.

செய்க்காட்சி :— 15 திங்கள் நிறைந்த ஆங்கிலக் குழவி ஒன்றற்கு ஸோவக்லேஸ் (Sophocles) என்ற பழங்காலக் கிரேக்கப் பாவாணர் எழுதிய ஈடிபஸ் (Oedipus) என்ற நாடகத்தில் 15 இடங்களிலிருந்து, நாள்தோறும், ஓர் ஆராய்ச்சி வாணர் படித்துக் காட்டி வந்தார். 8½ ஆண்டுகள் நிரம்பியதும் மூன்று வேறு இடங்களில் இருந்தும் புதியனவாகச் சிலவற்றைப் பொறுக்கி எடுத்து அதே குழவியைப் பாராமற் செய்து ஒப்புவிக்கப் பழக்கினர். புதிய வரிகளை மனப்பாடம் செய்ய 435 முறை உருப்போட வேண்டி இருந்தது. பழைய வரிகளை மனப்பாடம் செய்ய 317 முறை மட்டுமே உருப்போட வேண்டி இருந்தது. எனவே, நம்மையும் அறியாமல் நினைவுகள் நம் மனத்தினுள்ளே படிந்திருக்கும் என்பதாயிற்று.

வயதேற நினைவேறல்:- இவ்வாறு முதலில் பொருளற்றன-வாகத் தோன்றுவனவற்றைப் பாராமற் பண்ணுவதனைவிடக் கருத்தைக் கவருவனவற்றை நினைவில் வைத்திருப்பது எளிதாகிறது. ஓர் ஆராய்ச்சியாளர் முதலிற்சிறு குழவிகளுக்குப் படங்களைக் காட்டிவந்தார். அவையோ பேச்சுத்திறன் பெரிதும் பெறுதவை. ஒவ்வொரு படத்தின் எதிரே படத்தைப் பற்றிய சொல்லும், படத்தைப் பற்றியன அல்லாத சொற்களும் இருந்தன. படத்தினைப் பற்றியன அல்லாத சொற்களை அடித்து விடவேண்டும். அதுவே இங்கு விளையாட்டு. இதனைப் "பலவிற்-பொறுக்கு வருதேர்வு (Multiple choice)" என்பர். இந்தத்

தேர்வின் பயனாக ஆண்டு ஏற ஏற நினைவில் வைத்திருக்கும் ஆற்றல் வளர்ந்து வருகிறது என்பது வெளியாயிற்று. படங்களைக் கண்டு பல நாட்களான பின்னும் அக்குழவிகள் நினைக்கவும் அந்த அறிஞர் கண்டார். மறுநாள் நினைவில் இருந்தவை முதல் கண்டவற்றில் நூற்றுக்கு 67 ஆம்; 6 திங்களான பின்னும் நினைவில் இருந்தவை 61%; 13 திங்களான பின்னும் நினைவில் இருந்தவை 58% ஆம்.

மறதி :— எனவே, "இளங்குழவிப் பருவத்தே மகிழ்ச்சி தரும் தொடர்புகளோடு அறியப் பெற்று வந்தவை, பின்னர் அந்த நினைவுகளைத் தடுக்க முயற்சி ஒன்றும் நேராமல் இருந்தால் நீண்ட காலம் நினைவில் இருக்கும்" என்பது ஆயிற்று. பின்னே வயது ஆக நினைவு குறைந்து வரும்போது, தம் வாழ்க்கையின் பிற்பகுதியில் எழுந்த நினைவுகளே தேய்ந்து ஒழியத் தொடங்குகின்றன. அப்போது அந்தத் தேய்விற்கு ஏற்பக் குழவிப் பருவத்து நினைவுகள் அழுத்தம் திருத்தம் பெறத் தோன்றுகின்றன. மறத்தல் என்பது பழைய நினைவுகளைப் புதிய நினைவுகள் கொண்டு மூடி மறைப்பதே என்பதாயிற்று. இவ்வாறு புதிய நினைவுகளாய்ப் பழையவற்றை மூடி மறைத்தவை மறைந்தொழிந்தபோது பழைய நினைவுகளாய் 'மறைந்து போனவை' எனக் கருதியவை மறுபடியும் தோன்றுவது இயல்பே ஆம்.

மறித்துணர்வு :— நினைவின் செயற்பாடுகள் பலவாம். முன்கண்டு உணர்ந்தது ஒன்றினை மறுமுறை காணும்போது தெரிந்து கொள்வது இந்த நினைவினைப் பொறுத்ததேயாம். இதனை மறித்துணர்வு (Recogniton) எனலாம். இந்த மறித்துணர்வு எழவேண்டுமானால், முழு நிலையையும் ஒருப்பாட்டு வடிவமாக விரைந்து காணும் திறம் வேண்டும். நுட்பங்களை

எல்லாம் காணவேண்டுவதில்லை. "தம்முடைய மறித்துணர்வு தவறுதலாகாது" என்ற நோக்கத்தோடு நுட்பங்களை எல்லாம் உற்று நோக்குவதால் முழுநிலையைப் பலர் உணராமற் போகின்றனர். அத்தகையார்க்கு மறித்துணர்வு சரியாக எழுவதில்லை; தவறிப்போகவே காண்கின்றோம். "முன்கண்டதே இது" எனக்கூற வருவதற்குக் காரணம் என்ன என்று ஆராயப் புகுந்தால் மறித்துணர்வே கெட்டுப்போகும். குழவியின் மறித்துணர்வில் தவறுகள் எழினும், அதன் எதிரே அதன்மனம் உடையுமாறு நம் தலையை உடைத்துக் கொள்ள வேண்டியது இல்லை. பொதுவான நிலையில் செய்திகளை எல்லாம் கண்டறிந்து விழிப்பாக இருக்கவும் கற்றுக் கொள்ளுதல் வேண்டும். "எதனை நாம் கற்றுக்கொள்ள வேண்டும்" என முன்னரே தேர்ந்து எடுத்து முடிவு செய்துகொள்ள வேண்டும். "நாம் கற்றுக் கொள்வதற்கென இயற்கையே தற்செயலாக எதனையேனும் தேர்ந்து எடுத்துத் தாராதா?" என வாளா இருப்பதிற் பயனில்லை. தற்செயலாக எழுந்தவொன்றினை மறவாமல் இருத்தலினாலேயே குறிப்பிட்ட தொன்றனை நாம் நினைவில் வைத்து இருக்கக்கூடும் என நம்புவதற்கு இடம் இல்லை. எனினும், பொதுவானதொரு விழிப்பு நிலையை அது சுட்டுகின்றது என்பதிலே ஐயம் இல்லை. "கைமேலிருக்கும் வேலைக்கு ஒரு சிறிதும் தொடர்பு இல்லாத குறிப்புக்களை எல்லாம் குழவி முயன்று நினைவிற்குக் கொண்டுவர வேண்டும்" எனப் பெற்றோரும் ஆசிரியரும் சில இடங்களில் வற்புறுத்தி வரக் காண்கிறோம். குழவியின் நினைவாற்றலைச் சிதைப்பதற்கு இதனினும் வேறு கொடிய வழி இல்லை எனலாம். குழவியானது இந்த உலகில் வாழ்ந்து வரும்போது புறநாட்டம் இன்றிப் பகற்கனவு கண்டு வாழும் வழக்கத்திலிருந்து விடுதலை பெற்றுப் புறத்தோற்றங்களிலும் செய்திகளிலும் ஈடுபட்டு அவற்றை விழிப்பாகக் காண்பது பழக்கத்திற் படிந்து விட-

வேண்டும். அந்தப் பழக்கத்திற் புகுந்து உலாவிப் பொழுது போக்க வருமானல் குழவி தான் வேண்டும் என உற்றுப் பார்த்துக் கற்றுக் கொள்ளாத பல குறிப்புக்களும் தன்னை அறியாமல் தன் பழக்கத்தின் பயனாக மனத்திற் பதிந்து நின்று வேண்டும் போதெல்லாம் நினைவிற்கு வரும். இவ்வாறு நினைவிற்கு வருவது கண்டு குழவியும் வியந்து உள்ளங் கிளரநிற்கும்.

## II. பலவகை நினைவு

உடனடி நினைவு:- உடனடியாக உதவுவதற்காகத் தொலைபேசியின் (Telephone) எண் முதலியவற்றினைக் கற்றுக் கொள்வதுபோல, அப்போதே அறிந்து அடுத்தே பயன்படுத்திப் பயன் படுத்தியதும் நாம் மறந்து போகும் நினைவுகளை உடனடி நினைவுகள் (Immediate memory) என வழங்கலாம். வேண்டாதவற்றை உடனுக்குடன் மறந்து போதலே நம்முடைய மனத்தின் ஆற்றலைக் குறிக்கிறது எனப் பொதுவாகக் கூறலாம். இந்த உடனடி நினைவு 'ஆண்டு வயது' ஏற ஏற முதுமைநிலை அடையும் வரை வளர்ந்து கொண்டே வரக் காண்கிறோம்.

மன வயது :— இவ்வாறு நினைவில் இருப்பது குழவியின் உடல் வயதினைப் பொறுத்து நில்லாமல் மன வயதினைப் பொறுத்து இருக்கக் காண்கிறோம்.

| மன வயது ஆண்டு. (Mental age.) | எண்ணில் உள்ள எழுத்தின் எண்ணிக்கை. (No. of digits.) |
|---|---|
| 3 | 3 |
| 4 | 4 |
| 7 | 5 |
| 10 | 6 |
| 14 | 7 |
| 18 | 8 |

இந்த எண்ணிலுள்ள எழுத்துக்களை இனம் இனமாகப் பிரிக்கக் கூடுமானால், நினையும் ஆற்றல் மேலும் விரிந்து விளங்கக் காண்போம்.

சிறுகால நினைவு :— இவ்வாறு உடனுக்குடன் பயன்படுமாறன்றி ஒரு மாதத்திற்கென்றோ ஒரு வாரத்திற்கென்றோ எழும் காலவரையறைக்குள் நிலையாக நின்று பயன்படுமாறு மனப்பாடம் செய்வது மற்றொரு நிலையாம். இவ்வாறு குறிப்பிட்ட காலத்திற்கென மனப்பாடம் செய்வதும் உலக வாழ்க்கையில் இன்றியமையாது வேண்டப்படும். 'சிறு கால நினைவு' என இதனை வழங்கலாம். ஒரு நாடகத்தில் ஆடவேண்டி நேரலாம்; சொற்பொழிவு நிகழ்த்த வேண்டி வரலாம்; இவற்றிற்கெனச் சிலவற்றை மனப்பாடம் செய்யவேண்டிவரும். இவற்றினை மனப்பாடம் செய்தது மறக்கப்போகாது. நாடகமோ சொற்பொழிவோ நிகழும் ஒரு குறிப்பிட்ட காலம் வரை நினைவில் வைத்திருத்தல் வேண்டும்.

ஞாபகச் சூத்திரம் :— இத்தகைய நிலைகளில் பாட்டு அல்லது வரி அல்லது பெயர் முதலியவற்றின் முதற்குறிப்புகளை ஞாபகச் சூத்திரங்களாக அமைத்துக்கொள்வதும் உண்டு. யாப்பருங்கலக்காரிகை முதலியவற்றுள் 'முதல் குறிப்புச் சூத்திரங்கள்' வருவதனைத் தமிழர் அறிவர். தொடர்பில்லாத எண்களையோ சொற்களையோ நினைவில் வைத்திருக்க வேண்டிய போது அவற்றிடையே கற்பனையாகவேனும் ஒரு தொடர்பினைக் கட்டுக்கதையாகக் கட்டிவைத்து நினைவிற்குக் கொண்டுவர முயல்கின்றோம். "ஆந்தை," "வேடன்," "பசு," "காளி," "பொன்," "கண்," "சூலம்," "மூங்கில்," "நெருப்பு" என்று வரும் தொடர்பற்ற சொற்களை எளிதில் நினைவில் வைத்துக்கொள்வது கூடும். "ஆந்தை குழறக்கேட்ட வேடன்

ஒருவன் நல்ல சகுனம் என எண்ணிப் புறப்பட்டு வேட்டை ஆடவந்தபோது காட்டுப் பசு எதிரே வருவது கண்டு அதனைத் தொடர்ந்து ஓடிக் காளி கோயிலினுட்புகுந்து அங்கே பொன் நிறையக் குவியலாய்க் கிடப்பதனை வாரிக்கொள்ள வேண்டும் என்னும் பேராசையால் அதன்மேற் குப்புறவிழவே, அதனுள்ளே மறைந்து சூலம் ஒன்று இவன்கண்ணைக் குத்தக் கண்ணிழந்தானும்; முன்னர்ப் பசு ஓடியபோது, மூங்கில் ஒன்றோடொன்று தேய்த்துக்கொண்டதன் பயனாக எழுந்த நெருப்பு காட்டில் எங்கும் பரவிவிடக் காட்டிடையே சிக்கி மாண்டான்.'' என இவ்வாறு தொடர்புபடுத்தி எண்ணற்ற சொற்களையும் நினைவில் வைத்து இருத்தல் கூடும். இத்தகைய உதவிகள் எவ்வளவுக்கெவ்வளவு இயற்கையாக விளங்கு-கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு பயனுடையன ஆகும். மனப்பாடம் செய்யும் அவற்றிடையே கூடிய அளவு இவ்வாறு பொருள்கண்டுவருமாறு குழவிகளைப் பழக்கி விடவேண்டும். இவ்வாறு பொருள்கொள்ள முடியாமற்போனல் குருட்டுப்-பாடம் பண்ணுவது தவிர வேறு வழி இல்லை.

பொதுக் கருத்து :— நிலையான நினைவுகளாகக் கற்றுக்-கொள்ள வேண்டியனவும் பல உள. பெருக்கல் வாய்பாடு நிலையான நினைவாக அன்றோ பழக்கமாக வேண்டும்? ஒன்றி-னையே வாழ்க்கையின் பல துறைகளோடும் தொடர்புபடுத்திக் காண்பதும் இந்த நினைவிற்குப்பொருத்தமானதே ஆம். கணக்கு, வரலாறு, தரைநூல் எனப் பல பிரிவாகக் குழவிகள் கற்று வரும்போதும் இவற்றின் தொடர்பினை அறிந்து ஒன்று போலப் பிற பிரிவிலும் பொதுவான கருத்துக்களை வற்புறுத்தி வந்தால் அவை நினைவில் நன்றாக நிலைபெறும். பழக்கத்தில் அடிக்கடி வழங்கி வருபவை நினைவில் நிலைபெற்று விடு-கின்றன.

கருவிநிலை நினைவுகள் :— பெருக்கல் வாய்பாட்டினை ஓரளவு அறிந்த பின், அது பழக்கத்தில் பயன்படும் முறை குழவிக்கு விளங்குமாறு செய்துவிடவேண்டும். அவ்வாறு பழக்கிவிட்டால் வாய்பாடு மனத்தில் நிலைத்துவிடும். இந்த முறையைப் பின்பற்ருது வாய்பாடு ஒப்புவிப்பதனைத் தவிர வேறொரு பயனும் இல்லாததுபோலக் குழவிகளின் மனம் முறியும்படி வற்புறுத்திப் பெருக்கல் வாய்பாட்டை வரப்படுத்தி வைப்பது பயன் அற்ற செயலாம். வரலாற்றில் வரும் பெயர் முதலியனவும் பலமுறை பயின்று வருவதால் நினைவில் நிலை-பெறும். வாய்பாடு முதலிய எதனையும் சிக்கலும் சிக்கல் தீர்ப்-பதுமாகக் கண்டுகளிக்கும் மனப்பான்மையைக் குழவியினிடம் வளர்த்தல்வேண்டும். இத்தகைய புது எண்ணம் இப்போது கல்வி உலகில் பரவி வருவதனை முன்னரே குறித்தோம். இங்கே நினைவுகள் சிக்கல் தீர்க்கும் கருவிகளாக அமைதலின் இவற்றைக் கருவிநிலை நினைவுகள் என வழங்குதல் தகும்.

எங்நேரம்? எவ்வளவு? :- எவ்வளவு மனப்பாடம் செய்வது? எவ்வளவு நேரம் செய்வது? இத்தகைய கேள்விகளும் எழு-கின்றன. "ஒரே மூச்சில் அனைத்தையும் கற்றுக் கொள்ள முயலுவதை விடக் கற்றுக்கொள்ள வேண்டியதனைப் பல பகுதிகளாகப் பிரித்து இடையிட்டு இடையிட்டுக் கற்றுக் கொள்வதேசாலச்சிறந்தது" என ஆராய்ச்சியால்விளங்குகிறது. பொருளற்ற அசைகளைப் பாராமற் பண்ண முயன்ற போது அவை அனைத்தையும் ஒரே நாளிற் பாராமற் பண்ணவேண்டும் என்ருல் அவற்றை 68 முறை உருப்போட வேண்டி இருந்த-தாம். மூன்று நாளில் கற்றுக்கொள்வது என ஏற்பாடு செய்த போது மொத்தம் 38 முறைதான் உருப்போட வேண்டி இருந்தது. ஆனுல், எவ்வளவு காலத்தில் கற்றுக்கொள்ள வேண்டும் என்பது குழவிக்கு அகப்படும் காலத்தையும்,

கற்றுக்கொள்ள வேண்டிய பொருளின் இயல்பையும், குழவியின் ஆற்றலையும், மனப்போக்கையும், வயதையும் பொறுத்திருக்கிறது எனப் பொதுவாகக் கூறலாம்.

சிறிதாகக் கற்றல் :— குழவியின் மனம் ஒன்றில் ஊன்றி இருக்கும் காலம் மிக மிகச் சிறிதே ஆம். ஆதலின், கற்றுக்-கொள்ளும் நேரமும் சிறிது சிறிது ஆக இருப்பதே சிறந்ததாம். நீண்டு இருக்குமானால் அக்கறை குறைந்து மறைகிறது. அக்கறை இல்லையானால் கற்றுக் கொள்வது என்பது முடியாத-தாகும். கற்றுக்கொள்ள வேண்டிய பாடத்தைக் கற்றுக்-கொள்ளும் குழவியின் அக்கறைக்கும் ஆற்றலுக்கும் தக்கபடி-யாகச் சிறு சிறு பிரிவுகளாகப் பிரித்துக் கற்றுக் கொடுத்தல் வேண்டும். ஆனால், பாட்டினை முழுநிலையாகக் கொண்டு கற்றுக்-கொள்வதே சிறந்ததாம். உரை நடையை அவ்வாறு மனப்பாடம் செய்யக் கற்பிப்பது பொருத்தம் அன்றாம். பாட்டும் நீண்டு வருமானால் முழுநிலையாகப் படித்தபின் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்து மனப்பாடம் செய்வதே எளிதாம்.

ஒப்புவித்தல் :- ஒப்புவித்து வருவது கற்றுக் கொள்வதனை நினைவில் நிலைபெறுறச் செய்கிறது. யாரும் இல்லையானால், குழவி தனக்குத்தானே ஒப்புவித்துக் கொள்ளலாம். குருட்டுப்-பாடமாக மனப்பாடம் செய்யும்போது, பெருக்கல் வாய்பாடு முதலியவற்றையும் கூடக் குழவிகள் இசையாகப் பாடிக் கொண்டே மனப்பாடம் செய்தவாக் காண்கிறோம். இவ்வாறு இசையாகப் பாடும்போது தாளம் போடுவது போலக் கைகளையும் கால்களையும் இயக்குவதும் உண்டு. இவ்வாறு எல்லாம் கற்றுக்கொள்ளப்படும் பாடம் இசையாகவும், இயக்க-மாகவும் கூட வற்புறுத்தப் பெற்று நன்கு மனத்திற் பதிய இடம் உண்டு. தனக்குப் பொருள் விளங்காத பாடங்களைக்

குழவி இவ்வாறு தான் மனப்பாடம் செய்ய முயல்கின்றது. "பொருள் உணர முடியாத பருவத்திலே இவற்றை இவ்வாறு கற்றுக்கொள்வதனால் போதிய பயன் உண்டோ?" என்பது ஐயத்திற்கு இடமாகும்.

## III. மறதி

மறதி ஏன்? :— நினைவிற்குக் கொண்டுவரும் நிலையை இதுவரை ஆராய்ந்து வந்த நாம், மறப்பதனையும் ஆராய்ந்தால்தான் நினைவின் உண்மை இயல்பினை அறிதல் கூடும். நினைவின் குறைவினை அன்றோ "மறதி" எனக்கூறுகின்றோம். மறத்தல் என்பது சிலபோது இன்றியமையாததே எனக் கண்டோம். "புதிதாகக் கற்றுக்கொள்பவை முன்னதாகக் கற்றுக்கொண்டவையின் மேலே மூடிக்கொள்வதாலேயே முன்னவை மறப்பாக மாறுகின்றன" என்றும், "ஆண்டு ஆக ஆகப் பின்னே கற்றுக்கொண்டவை மறைய முன்னே மறந்தவை நினைப்பிற்கும் வரும்" என்றும் குறித்துவைத்தோம். இவ்வாறே முன்னையவற்றிற்கும் பின்னையவற்றிற்கும் தம் இருப்பிற்கென்றே போராட்டம் நிகழ்கிறது. இவ்வாறு நிகழ்வதாலேயே நாம் கற்றுக்கொள்வது எளிதில் மனத்தில் பதியாமல் அல்லலை விளைவிக்கக் காண்கிறோம். அதனாலே கற்றுக் கொண்ட உடனேயே அதனை மறப்பது சிறியது காலம் வரை விரைந்து நிகழத் தொடங்குகிறது. இதனைத் தடுப்பதற்காகவே அளவுக்குமேலும் உருப்போட வேண்டி இருக்கிறது.

மனநிலை :- "காலம் கழிவதால் மட்டும் மறப்பு எழுகிறது" என்று சொல்லுவதற்கு இடம் இல்லை. 'முதல்முதல் ஒன்றைக் கற்றுக்கொண்ட பொழுது மனநிலை எவ்வாறு இருந்தது?' என்பதனையும் ஊன்றிநோக்குதல் வேண்டும். பின்னே அதனை

நினைவிற்குத் திருப்பிக்கொண்டு வந்தபொழுதெல்லாம் மனநிலை எவ்வாறு இருந்தது என்பதனையும் உற்றுநோக்குதல் வேண்டும். இந்த மன நிலையைப் பொறுத்தே மறப்பு எழுகின்றது. நினைவின் பல நிலைகளையும், அங்கெல்லாம் மறப்பு எழுகின்ற உண்மையினையும் உடனடி நினைவு, சிறு கால நினைவு, முதலியவற்றை ஆராய்ந்தபோது கண்டோம்.

மறதியின் காரணம்:- குழவிகள் தாம் கற்றுக்கொண்டதனை மறப்பது ஏன்? அவ்வாறு மறப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. எதனையும் மனத்தில் வைத்துக்கொள்ளும் ஆற்றலே சில குழவிகளிடை வெளித் தோன்றாது மழுங்கிக் கிடக்கின்றது. சில குழவிகள் தக்க முறையில் கற்றுக் கொள்ளாத குறையால் கற்பனவற்றை எளிதில் மறக்கின்றன. சில பொருள்களைப்பற்றியோ, அப்பொருள்களைக் கற்றுக்கொண்ட முறையைப் பற்றியோ சில குழவிகளின் மனத்தினில் பொறுக்க முடியாத உள்ளக் கிளர்ச்சி பொங்கி வழியலாம். 'பூனை' என்றாலும் நடு நடுங்கி நிற்கும் குழவிகளும் இருக்கின்றன. அத்தகைய குழவிகள் பூனையைப் பற்றிய பாடல்களை மறக்காமல் இருப்பது முடியாதாம். வெருட்டியும் மருட்டியும் கற்பிப்பார் குழவியை அலைக்கழித்திருந்தால் அலைக்கழிவு மட்டும் மனத்திற் பதிந்து நிற்குமே அன்றிப் பாடம் அவ்வளவு நன்றாகப் பதிந்து இருக்க முடியாது. ஆதலின், அந்த நிலையிற் கற்றுக்கொண்ட பாடத்தினை மறப்பதே எளிதாம். சில குழவிகள் தம்மைப் பிறர் கவனித்து வர வேண்டும் என விரும்புகின்றன. மறந்தாலன்றோ ஆசிரியரும் பெற்றோரும் மற்றோரும் மறுமுறையும் மறுமுறையும் கற்பிக்க வருகின்றனர்? ஆதலால் 'அவ்வாறு நோக்கும் குழவி, "மறப்பதே மேல்" என எண்ணுவதற்கு ஏற்பப் பாடத்தை மறந்தே வருகிறது.

சொல் நினைவு :- சொற்களை மறப்பது எளிதாம். ஆனல், தசை இயக்கங்கள் வழக்கமாய் விட்டால் அந்த இயக்கங்களை மறப்பது அவ்வளவு எளிதன்று. அத்தகைய இயக்கங்கள் வழக்கமாய்ப் படிய வேண்டுமானல் அவற்றைப் பல முறை பழகி இருத்தல் வேண்டும். சொல்லைக் கற்றுக் கொள்ளும் போதோ அத்தனை முறை திருப்பித் திருப்பிச் சொல்லிப் பழகுவதில்லை. இவ்வாறு கூறுவதிலிருந்து, சொல்லானது மறவாமல் மனத்தில் இருப்பதற்காகப் பல முறையும் அதனை உருப்போட வேண்டும் எனவு முடிவு செய்தலாகாது. முன்னரே நாம் கண்டது போல, இலக்கண வடிவங்களை அறிவது நம் முயற்சியோ கல்வியோ இன்றித் தானக எழுகிறது.

பல வேகம்:- "ஒரு சிலர் மிக விரைவாகக் கற்றுக்கொள்கின்றனர். அந்த விரைவு காரணமாகவே விரைவாக மறந்தும் விடுகின்றனர்." எனச்சிலர் கருதுகின்றனர். ஆராய்ந்துபார்த்ததில் இந்தக் கொள்கை பொய்த்துப் போயிற்று. உடனடி நினைவாகவோ, சிறு கால நினைவாகவோ எழுந்தவை இவ்வாறு மறைந்தாலும், பிற நினைவுகள் விரைவாக மறையக்காணேம். விரைந்து கற்றுக்கொள்வோரே நீண்டகாலம் தாம் கற்றதை மனத்தில் வைத்திருக்கின்றனராம். ஆனல், விரைந்து கற்றுக் கொள்ளவேண்டும் என வற்புறுத்துவதும் கூடாது. குழவியின் மனநிலைக்கு ஏற்பக் கற்றுக்கொள்ளும் காலம் மாறுபட்டுவரும். ஆதலின், அதனை அந்த அந்தக் குழவியின் இயற்கை வளர்ச்சிக்கு ஏற்ப நீண்டும் குறுகியும் வர விட்டுவிடவேண்டும். இயற்கை வளர்ச்சிக்கேற்ப விட்டுவிடாமல் செயற்கையாக வற்புறுத்தி மாற்ற முயலுவது குழவி கற்றுக்கொள்வதனையே கெடுப்பதாக முடியும்.

பலவகை மறதி:-மறதிக்ளிலும் பலவகை உண்டு. அடியோடு மறந்துவிடுவது ஒன்று. அடியோடு மறந்துவிடாமற் போனலும்

வேண்டியபோது நினைவிற்குக் கொண்டுவர முடியாமற்போவது மற்றொன்று. நனவிலி மனநிலையால் இவ்வாறு நிகழ்வதனை முன்னரே கண்டோம். நினைவிற்குக் கொண்டு வருவது என்பது ஒருவகை எதிரூன்றலே ஆம். எதிரூன்றல் என்றால் இதனை எழுப்பும் தூண்டல்கள் யாவை?

மனநிலை :- (1) பொதுவான மனநிலை ஒரு தூண்டலாகும். தக்க உணர்ச்சி எழுதல் வேண்டும். பெயர் ஒன்று நினைவிற்கு வரவேண்டுமானால், அந்தப்பெயர் இயற்கையாக அமைந்துள்ள நிலை முழுவதனையும் அக்காட்சியால் கண்டு வர முயலும்போது அங்கே பெயரும் மனத்தில் எழுகின்றது. "எது நினை-விற்கு வரும்?" என்பது அவ்வப்போதுள்ள மனநிலையைப் பொறுத்ததே ஆம். நனவிலி மனநிலையை அறிவதற்கு உளநிலை வேறுபாட்டு ஆராய்ச்சியாளர் (Prycho-analysts) கையாளும் முறையைக் குறித்து வைத்துள்ளோம். தம்மிடம் வரும் மனக் கோளாறுடையோரை ஓய்வுற்று நிற்கும் நிலையில் வைத்துத் தாம் கூறும் சொற்களைக் கேட்டதும் முயற்சியின்றி மனத்தில் தாமாக எழும் சொற்களையோ எண்ணங்களையோ கூறிக்-கொண்டு வரவேண்டும் எனக் கேட்டுக் கொள்கின்றனர். இவ்வாறு கூறிக்கொண்டு வருவதிலிருந்து நனவிலி மனநிலையின் உண்மை இயல்பை அறியமுடியும் என்பது அந்த ஆராய்ச்சி-யாளர்கள் கொள்கை.

கேள்வி :— (2) நேரே எழும் கேள்வியும், ஒன்றை நினைவிற்குக் கொண்டுவரும் தூண்டலாக அமையும். கற்றுக் கொண்ட முறையோடு தெள்ளத் தெளியத் தொடர்புடையன-வாக எழும் கேள்விகள் சிலவே ஆம். அவ்வாறு தெள்ளத் தெளிய அன்றிக் குழம்பிக் கிடப்பனவும் சில எழும். கடுமை-யான கேள்விகளுக்கு விடை தருமாறு பயிற்றுவதே சிறந்த

கல்விமுறை எனக் கருதிய காலமும் உண்டு. கேள்வியாளர் வேறொன்றையும் மனத்தில் ஏற்றி மயக்கிவிட முயலாது, சிறு சிறு விடைகளை எழுப்பும் முறையில் நேரே குறிப்பிட்ட பொருளைப் பற்றிக் குழப்பத்திற்கு இடம் இன்றிக் கேட்டு-வரும் கேள்விகளையே இந்நாளைய கல்வியாளர் வற்புறுத்தி வருகின்றனர்.

எடுத்துக் கோடுத்தல் :- (3) தூக்கிக் கொடுப்பது அல்லது சொல் எடுத்துக் கொடுப்பதும் நினைவை எழுப்பும் ஒரு தூண்டலேயாம். பாராமற் படித்த குழவிக்கு அதில் வரும் ஏதேனும் ஒரு சொல்லை எடுத்துக் கொடுத்ததும் அந்தச் சொல்லிலிருந்து தொடர்ந்து ஒப்புவிக்கத் தொடங்குகிறது. சங்கிலிபோல் தொடர்ந்து இயைந்துள்ள இடத்தே இத்தகைய தூண்டல் பயன்படும்.

கருத்தேற்றம் :— (4) பிறர் தம் கருத்தினை நம் மனத்தில் ஏற்ற முயலுவதும் உண்டு. "ஒருவன் கெட்டவன்" என்ற எண்ணத்தை நம் மனத்தில் உண்டு பண்ண முயலுபவர்கள் நேரே "அவன் கெட்டவன்" எனக் கூறாது "கெட்டவனாக இருக்கலாமோ?" என்று அந்த எண்ணத்தினைக் கிளப்பிவிட முயலுவது உண்டு. இவ்வாறு எண்ணங்களைச் சுட்டாது நம் மனத்தே குறிப்பு வகையால் தொனிக்கும்படி ஏற்றி விடுவ-தனைப் பாட்டுகளிலும் காண்கிறோம். காட்சிச் சாலைக்குப்போய் வரும்போதும், பொதுவாகப் பேசிக்கொண்டிருக்கும் போதும் இவ்வாறு குழவிகள் மனத்தே பல எண்ணங்களை ஏற்றி விடலாம். இவ்வாறு கிண்டி விடுவனவற்றை 'எண்ண ஏற்றங்-கள்' அல்லது 'கருத்து ஏற்றுகள்' (Suggestions) எனலாம். ஆகையால், கருத்து ஏற்றுகளும் நினைவை எழுப்பும் தூண்டல்-களாம் என்பதாயிற்று.

சிக்கல் :— (5) சிக்கல் நிலையும் ஒரு தூண்டுதலேயாம். சிக்கல் நிலையை உணர்ந்ததும் அதுவே அதனைத் தீர்க்கும் மனநிலையை எழுப்பி விடுகிறது. நினைவெழும் எல்லையும் அந்த உணர்வின் எல்லைக்குள்ளேயே கிடந்து அந்த நிலைக்கேற்பனவற்றை நினைவூட்டி வரலாம். இவ்வாறு எல்லை குறுகி விடுவதால் குறுகிய நோக்கமும் எழலாம். முதல் முதல் அந்தச் சிக்கல் நிலையைப் பார்க்கும்போது உணர்வில் தோன்றாத ஒரு வழியே அந்தச் சிக்கலைத் தீர்க்கும் வழியாக முடியலாம். முதலில் அந்த நிலையை ஒருப்பாட்டு வடிவக் கோலமாகக் கொண்டு நோக்கியபோது சிக்கலைத் தீர்க்கும் உண்மை வழி தோன்றாமையால், பின்னர் உண்மை வழியை உணர்த்தக் கூடிய வகையில் அந்தச் சிக்கல்நிலை மாறி வேறொரு ஒருப்பாட்டு-வடிவக் கோலமாக நம் மனத்தே பதிந்தாலன்றிச் சிக்கலை நாம் தீர்ப்பதில்லையாம். கூரையிலிருந்து தொங்கும் பொம்மையை எடுக்க விரும்பிய குழவி, பெட்டியையும் நாற்காலியையும் கட்டையையும் கண்டு, பெட்டியைப் பொருள் வைக்கும் கருவியாகவும், நாற்காலியை நாம் இருக்கவரும் கருவியாகவும், கட்டையை அறுத்து மரவேலை செய்ய உதவும் மரத்துண்டாகவுமே நோக்கும் வரை, சிக்கலைத் தீர்க்கும் வழியைக் காண்பதில்லை. 'இவை அனைத்தும் ஏறி நிற்க உதவும் பல படிக்கட்டுகள்' என உணர்ந்தபோதே, குழவி அந்த நிலையின் சிக்கலைத் தீர்த்துப் பொம்மையைப் பெறுகின்றது.

நினைவைத் தூண்டுவன:- 'நினைவைத் தூண்டுவன யாவை?' எனக் கண்டோம். நினைவை எழாமல் தடுக்கும் தடைகளும் உள்ளன. இவை நம் உள்ளத்தில் கடுமையாகப் பொங்கி எழும் உணர்ச்சிகளேயாம். "காமத்தால் கண்மூடியவன்" "கோபத்தில் கண் தெரியவில்லை" என வரும் வழக்குகளைக் காண்க. நினைவைப் பற்றிய மகிழ்ச்சியாகவோ, பிறவாகவோ,

இந்த உணர்ச்சி எழுமானால் நினைவு வலியுறும். அவ்வாறன்றி நினைவு எழுகிற நிலைக்குப் புறமான உணர்ச்சிகள் நம் நினைவை நாம் நோக்காதபடி உள்ளத்தைச் சிதைத்தலினால் நினைவைத் தடுக்கும் தடைகளாக அமைகின்றன. அந்த உணர்ச்சி பொதுவாக மனத்தில் நிலைத்து விடுதலையும் காண்கின்றோம். "எங்கே தவறி விடுவோமோ?" என எத்துறையிலும் நடுங்கும் குழவிகளைக் கண்டுள்ளோம். பெற்றோரும் ஆசிரியரும் அவ்வாறு அக்குழவியின் மனத்தினை நடுங்கி நிற்குமாறு குலுக்கிவிட்டிருக்கின்றார்கள் என்பது தெளிவாகிறது. "தேர்வுக் காய்ச்சல்" - "பரிக்ஷை சுரம்" என்பதனை யார் அறியார்? இத்தகைய நிலை எழாதபடி காத்தலே உண்மைக் கல்வி முறையின் நோக்கமாதல் வேண்டும்.

## VI. சமுதாயமும் பயிற்சியும்

பயிற்சியும் முற்றுதலும் :- நினைவாற்றல் முதலிய அனைத்தினையும் நம் மக்கட் கூட்டம் வளர்த்து வருவதனையும் இங்குக் குறிப்பிடுதல் வேண்டும். பயிற்சி என்பது சுற்றுப்புறச்சூழல் காரணமாக உயிர்ப் பொருளிடையே எழும் மாறுதலாம். முற்றுதல் என்பது உயிர்ப் பொருளின் உள்ளே கிடக்கும் ஆற்றல்களின் இயக்கத்தால் அப்பொருளினிடையே எழும் மாறுதலாம். சுற்றுப்புறச்சூழல், உயிருள்ள பொருளும் உயிரற்ற பொருளுமாம். உயிருள்ள பொருள்களில் மக்கட்கூட்டமே குழவியின் நிலைமையைப் பெரிதும் மாற்றி அமைக்கின்றது. இவ்வகையால் நேரே பயிற்சி மாறும் நிலைகளை ஏழு எட்டாகப் பிரித்துக் காணலாம்.

பயிற்சிநிலை :— (1) தன் செயலைப் பார்ப்பவரோ, தன் பேச்சைக் கேட்பவரோ இருப்பின், நாணம் மிக்க குழவி வாளா கிடக்கின்றது. 'பேர் எடுக்கவேண்டும்' என முந்துகிற

குழவி முன்னையினும் சிறந்து விளங்கி உயர்கிறது. (2) தன்னோடு கூடி, எடுத்த செயலைச் செய்துவரும் தோழர்கள் அருகிருந்து ஒத்து உழைக்கும்போது குழவிக்கு ஓர் ஊக்கமும் கவலையற்ற நிலையும் பொங்கிவரக் காண்கிறோம். (3) போட்டி போட்டு வேலையைச் செய்து முடிப்பதும் மக்கட் கூட்டத்தின் தூண்டலாலே ஆம். போட்டி மக்கட் குழுவில் எழுவதாம். (4) பிறர் புகழ்வது கேட்டு வேலை செய்ய முந்துவதும், பிறர் பழிப்பது கேட்டு வேலைசெய்ய முடியாது தயங்குவதும் இயல்பே ஆம். புகழும் பழியும் மக்களின் அறிவளவே ஆம். வெளிப்படையாகவும் குறிப்பாகவும் குழவியினிடத்தே வெற்றி எண்ணத்தை ஏற்றிவரப் பிறர் முயலும்போது குழவி வெற்றி-யடைந்தும், மாறான எண்ணத்தை ஏற்றி வரும்போது, பொது-வாகத் தோற்றும் வரக் காண்கிறோம். கருத்து ஏற்று என்பது மக்கட் செயலே ஆகும். (6) "முன் ஏர் செல்வது போலப் பின் ஏர் செல்லும்" என்ற பழமொழி, மக்கட் கூட்டத்தில் முதல் நிலையில் நிற்பார் பிறர் நடத்தையினை உருப்படுத்தும் மக்களியல்பை அன்றோ வற்புறுத்துகிறது? (7) பிறர் நகைக்க நகைத்தும், பிறர் அழ அழுதும் ஒத்துணர்ச்சி பெற்று (Sympathy) விளங்குவது மக்கட் கூட்டத்தினிடை தான் சிறந்து விளங்குகிறது. இந்த ஒத்துணர்ச்சியைக் கண்ட குழவி மக்கட்-கூட்டத்தோடு ஒன்று பட்டுப் பயின்றும் கற்றும் வருவது இயல்பேயாம். (8) கூட்டமாக வாழ்வது மக்கள் இயல்பு. கூட்டமாகக் கூடி ஒரு தொழிலைச் செய்ய வரும்போது அவ்வாறு கூட்டமாக அனைவரும் கூடி ஆராய்ந்து செய்வதன் திறப்பாட்டைச் சொல்ல வேண்டுமோ?

## V. மாண்டிசோரியார் கண்ட உண்மை

மாண்டிசோரி :- மாண்டிசோரி அம்மையார் பயிற்சியினைப் பற்றிக் குறிப்பிடும் சில கருத்துக்களைக் காண்பது நல்லது.

அன்பிற் குளித்தல் :— குழவியிடையே மகன் மறைந்து நிற்கின்றான். குழவி அவ்வாறு உயிரோடு புதையுண்டு கிடக்கின்றது. இதனை விடுதலை செய்தல் வேண்டும். சுற்றுப்புறச்சூழலைமாற்றி அமைத்தே குழவி தன்னைத்தான் வெளிப்படுத்தல் வேண்டும். குழவியோ படைப்பே வடிவமாய், மலர்ச்சியே இயல்பாய் அமையும் பருவத்திடையே விளங்குகிறது. மூடிய கதவைத் திறந்தாற்போல ஆசிரியர்கள் அந்தச் சுற்றுப்புறச் சூழலின் சிறந்த பகுதியாக அமைகின்றனர். தடை நீங்க வேண்டுமானால், குழவியின் தேவைக்கு ஏற்பத் திருத்தமுற்றுக் குழவி ஒரு பொருத்தம் பெறுதல் வேண்டும். ஆசிரியர்கள் தம்மிற்றாமே அத்தகைய அற நிலைக்குச் சிறந்த தகுதிப்பாடுகளை விளைவித்துக் கொள்ள வேண்டும்; உள்ளுக்குள்ளே தம்மைத் திருத்திக் கொள்ள வேண்டும். குழவியின் தீய போக்கிலே தம் மனதினைச் செலுத்தித் தம்மைத் தாமே அழுக்காக்கிக் கொண்டு சீறி விழாமல், தம் தீய போக்கினைத் தாமே போக்கிக் கொண்டு, அன்பு வடிவாய்க் குழவி எதிரே வருதல் வேண்டும். "குழவிகள் வீட்டுலகம் புக்காலன்றிப் பிறர் வான அரசிற் புகுதல் இயலாது" என்றார் அன்றோ கிறிஸ்து பெருமானார்? கோபமும் செருக்கும் கொடுங்கோல் செலுத்திவர விடலாகாது. பெரியோரைக் கடவுளாகவே குழவி கருதுகிறது. ஆதலின், பெரியோர் தம் செருக்கினைக் களைந்து ஒழித்து அன்பினாற் தூயராய் அடக்கத்தில் உயர்ந்து அறக்கோலம் பூணுதல் வேண்டும்.

புத்துலகக் குழவிகள் :— மாண்டிசோரி அம்மையார் தம் அனுபவத்தைக் கூறுகின்றனர். குழவிகள் தம் பயிற்சியைத் திருப்பித் திருப்பிச் செய்கின்றன. 'அனைத்தும் ஒரு முறைப்பட அமைதியில் விளங்கவேண்டும்' எனக் குழவிகள் விழைகின்றன. உணர்வினையும் பல அறிவினையும் வளர்க்கும்

பொருள்களினிடையே தாம் வேண்டுவனவற்றை உரிமை-யோடும் உவகையோடும் கொண்டு சென்று பல வகையாகப் பயிற்சி பெறுகின்றன. விளையாட்டுப் பொருள்களை அவை விரும்புவதில்லையாம்; பரிசுகளை வீசி எறிந்து இகழ்ந்தனவாம். மௌன வகுப்பில் குழவிகள் மௌனமாக இருப்பது கண்டு மாண்டிசோரி அம்மையார் வியப்படைந்து திகைத்தனராம். மிட்டாயையும் அவை விரும்பவில்லை. பெருமையாகவே நடந்து கொண்டன. மாண்டிசோரியாரின் பள்ளியில் வரும் குழவி-களின் அடக்கம், ஒழுக்கம் அனைத்தும் பிறரை அஞ்சியோ, வற்புறுத்தலின் பயனாகவோ அன்றி அவற்றின் உள்ளத்தில் இருந்தும் எழுகின்ற அக் குழவி ஆன்மாவின் நிழலே ஆம். இவை புத்துலகே ஆம். புத்துலகம் குழவியுலகமே ஆம். "வான் மீன்கள் காவலாளராகத் தத்தம் இடங்களிலிருந்து ஒளியைப் பொழிந்து மகிழ்கின்றன. அவற்றை அழைத்த-போது அவை ஒவ்வொன்றும் 'இதோ இங்குள்ளோம்' எனக் கூறித் தம்மைப் படைத்தவரை நோக்கி ஒளிவிட்டு இன்பத்தில் திளைத்தன." என்றொரு புலவர் பாடுகின்றார். "இதனைக் குழவிகளைப் பற்றிய உண்மையாகவும் நாம் பாடி வரலாம்" என்கின்றார் மாண்டிசோரி அம்மையார்.

மாண்டிசோரி முறை :— ஒருநாள் தானாகவே எழுதிய குழவி "இதோ எழுதிவிட்டேன், எழுதிவிட்டேன்" எனக் களிக்கூத்தாடியதாம். பின்னர்த் தான் படிக்க வருகிறதாம். இந்த அனுபவங்களின் பயனாக மாண்டிசோரி அம்மையார் சில உண்மைகளை உணர்ந்தனராம். சுற்றுப்புறச் சூழல்கள் மகிழ்ச்-சியைத் தருவனவாக அமைதல் வேண்டும். ஆசிரியர் தாமாக ஒன்றையும் வற்புறுத்திக் கற்பிக்க முயலுதல் ஆகாது. குழவியின் அறிவு வளர்ச்சிக்குத் தடையாக நிற்றலும் கூடாது. குழவி தன்னைத் துணையாகத் தேடும்போது உதவி புரிந்து

நிற்றல் வேண்டும். புலனறிவு முதலிய வளர்வதற்கு ஏற்ற அறிவு ஆராய்ச்சிகளையே குழந்தை நிலைக்குத் தக்கனவாகத் தேடி அதன் மனத்தினைக் கவருமாறு அவற்றை அமைத்தல் வேண்டும். பயிற்சிகளை அவை விரும்பித் திரும்பித் திரும்பிச் செய்து வரவும், உரிமையோடு வேண்டியவற்றை எடுத்துப் பயிலவும் விட்டுவிட வேண்டும். தவறுகளை மட்டும் அடக்கி-யாள முயலுதல் வேண்டும். குழவிகளின் இயக்கங்களை எல்லாம் பகுத்து ஆராய்ந்து நோக்கி, அந்த இயக்கங்களின் பிரிவு ஒவ்வொன்றனையும் பயின்று வருதல் வழியாக முழுநிலை இயக்கமும் திருத்தம் உறுமாறு உதவுதல் வேண்டும். குழவி பிறரோடு கூடிப் பழகுவதில் நன்னடக்கை படிந்து வரச் செய்தல் வேண்டும். சுற்றுப்புறச் சூழலிடையே ஓர் ஒழுங்கும் முறையும் நிலவுமாறு செய்தல் வேண்டும். உடலையும் உடையையும் மிக மிகத் தூய்மையாக வைத்திருக்கப் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். புலனறிவு வளர முதலிற் பழக்கிவிட வேண்டும். படிப்பதிலிருந்தும் எழுதுவதனை வேறு பிரித்து, படிப்பதற்கு முன் எழுதவே பயிற்றுதல் வேண்டும். படிக்கப் பயிலும்போது புத்தகத்தின் நின்றும் படிப்பதே மேலாம். புற-நிலையிற் காணும் வெறும் தோற்றமாக ஒழியாது குழவி உரிமையோடு செய்து வருகின்ற செயற்பாட்டினிடையே ஒழுங்கு முறையும், கீழ்ப்படிதலும் எழுந்து ஒளிர்தல் வேண்டும். குழவிகள் கற்கும் இடத்தே தண்டனைக்கும், பரிசிலுக்கும், நெடுங்கணக்குப் பாடத்திற்கும், பொம்மை-களுக்கும், உயர்ந்த மேசைக்கும் பொதுப் பாடங்களுக்கும் இடம் இல்லையாம். குழவிகள் உண்மையான இயற்கைநிலை-இடையே மனமாறி வருவது மாண்டிசோரியாருக்குத் தெளி-வாயிற்று. துன்பமும் கலக்கமும் மனத்தளர்ச்சியும் நீங்க உயர்ந்ததொரு வாழ்க்கை நிலையில் புகுவதனை விட அற்புத-மான மன மாற்றம் யாது? "ஏழு முறை அன்று, எழுபது முறை

மன்னிக்கப் பெறுவாய்'' என்று கூறியவரின் கருத்தினை உணர்ந்து, ஆசிரியன் பள்ளிக்குப் புகுதல் வேண்டும்.

வாழக் கற்பது :- குழவிகளுக்குக் கற்றுக் கொடுப்பதனைப் பற்றியே இப்போது எங்கும் ஆராய்ச்சி. மாண்டிசோரி அம்மையார் கூறிய கருத்துக்கள் இந்த இருபதாம் நூற்றாண்டின் உள்ளத்தினைத் தெள்ளத் தெளிய விளக்குகின்றன. 'எவ்வாறு கற்றுக்கொடுப்பது?'' என்ற ஆராய்ச்சியே இப்போது உலகத்தின் மனத்தினைக் கவருகிறது. 'குறிப்பிட்ட ஒரு பாடத்தை எவ்வாறு கற்பிப்பது?' என்பதன்று இப்பொழுது எழுகின்ற கேள்வி. கல்விமுறை ஒரு புரட்சிநிலையை அடைந்துவிட்டது எனலாம். 'பிறந்ததுமுதல் உயிர் உள்ள வரையிலும் பிற நிலைச்சூழல் நம்மைத் தாக்கிவர அதற்கு ஈடு கொடுத்து வாழ்வது எங்ஙனம்?' என ஒவ்வோர் இமைப்போதும் சாகும் வரை கற்று வருகின்றோம். இந்த வகையால் நோக்குமிடத்துக் கல்விமுறை வாழ்க்கை முறையாகவே அமைகிறது. ''வாழக் கற்பது'' என்ற சொற்றொடரின் பொருள் இன்று விளங்குகிறது. இதனால் கல்வி முறையின் சிறப்பும் புலனாகும்.

பல நிலை :— உடுப்பினைத் தைப்பது என்றாலும் உடலோடு உடன் விளங்கும் படியான படிமானம் வேண்டும் என்கிறோம். அங்ஙனமே கல்விமுறையும் குழவிக்குப்படிமானமாக இருத்தல் வேண்டும்; பொருத்தம் உள்ளதாக விளங்குதல் வேண்டும். கற்றுக் கொள்ளும்போது நம் நோக்கத்தை மறக்கலாகாது. 'நனவுநிலை எங்ஙனம் விளங்குகிறது?' என்பதையும் அறிதல் வேண்டும். நினைவில் வைத்துக் கொள்வது மட்டும் கல்வியின் முடிவு ஆகாது. உலகினிடையே ஒரு தடை நம் எதிரே தோன்றினால், அது நம்மை ஊக்குகின்றது என்பதனையும் உணர வேண்டும். அப்போது முதலாவதாக நம்முடைய முடிவு ஒரு

வரையறை பெற்று எதிரே தோன்றுகிறது. இரண்டாவதாக, இந்த முடிவினை அடையவேண்டும் என்பதோர் ஊக்கம் உள்ளே எழுந்து குழவியை முன்னுக்கு உந்துகிறது. மூன்றாவதாக, அதனுடைய உள்ளத்தில் அந்நிலைக்கு உதவக்கூடியவை அனைத்தும் பண் அமைந்து (தயாராக) நிற்கின்றன. நான்காவதாகத் தடையாக எழும் இயக்கங்களை எதிர்பார்க்கும்நிலை அங்கு இல்லை. ஐந்தாவதாக, அந்தமுடிவினை அடைவதில் இயல்பாகவே எழும் அருமைப்பாடுகள் அக்குழவியை மேலும் வருந்தி உழைக்குமாறு தூண்டுகின்றன. ஆறாவதாக, அக்குழவியின் வெற்றியை அந்த முடிவுநிலையே அறுதியிட்டு விளக்குகிறது. ஏழாவதாக, அவ்வாறு அடைந்த வெற்றி ஓர் ஆறுதலை விளைவிக்கின்றது. எட்டாவதாக, வெற்றியைத் தந்த எதிர் ஊன்றல் நிலைபேறு அடைவதே ஆறுதலாம். அக்கரை வளர வேண்டுமானல் அந்த முடிவினை அடைய குழவிக்குப் போதிய ஆற்றல் இருத்தல் வேண்டும். குழவி ஓய்ந்துவிடாது மேலும் மேலும் செயற்பட்டு நிற்க ஊக்கங்கொண்டு திகழ்தல் வேண்டும். ஆதலின், எடுத்துக்கொண்ட தொழிலில் உள்ளக் கிளர்ச்சியோடு உழைத்து வருமாறு செய்யவும் வேண்டும். முடிவிலே, குழவி வெற்றியைக் காணுமாறும் வகைசெய்தல் வேண்டும். குழவி எவருடைய பாராட்டை விரும்புகிறதோ அத்தகையார் அக்குழவியின் வெற்றியைப் புகழுமாறும் செய்தல் வேண்டும்.

## VI. புத்துலகக் கல்வி

எல்லையும் நடுவும் :— நம்முடைய நனவுநிலையில் மனத்தகத்தே தோன்றுவனவற்றை ஓர் எல்லைக்கு உட்படுத்திக் காண்போமானல், நம்முடைய உன்னிப்பு நிலையாக நம் கருத்தைக் கவர்வன எல்லாம் திரண்டு ஓர் இடத்திலே நிற்க, மற்றவை அதிலிருந்தும் பல வகை நிலையில் பல வகை

தொலைவில் நிற்கக் காண்கிறோம். தொலைவிலுள்ள மரத்தைக் காணும்போது, மரம் நடுநிலையில் விளங்க, அருகில் உள்ள எழுதுகோல், நாற்காலி முதலியன எல்லைப் புறத்தே (Margin) விளங்குகின்றன. எல்லைப்புறத்தே இருக்கின்றனவும் நடு-நிலையாக மாறலாம். எழுதுவதிலே மனத்தைச் செலுத்திக் கொண்டே இருக்கின்ற ஒருவனது கருத்து எழுத்திலேயே ஊன்றி இருந்தாலும், தொலைவில் ஆடுகின்ற குழவியின் காட்சியும் அங்கு அவன் மனத்தில் ஓர் மூலையில் தோன்றும். குழவி தவறிக் கீழே விழுகின்ற நிலையில் இருக்கும்போது, முன்னர் மனத்தின் எல்லைப் புறத்தில் இருந்த குழவி அவன் மனத்தின் நடுவிடத்தினை அடைகின்றது. உடனே, எழுது-வதனை விட்டொழித்து அக்குழவியைக் காக்க, அந்த எழுத்-தாளன் ஓடுகிறான். எல்லைப்புறத் தோற்றங்களை அடியோடு மறந்து தான் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாய் இருப்-பதும் இத்தகைய நிலையில் தீதேயாகும். எடுத்துக்கொண்ட தொழிலில் உன்னிப்பே இன்றி "எல்லாம் நுழைந்தது; வால் மட்டும் நுழையவில்லை" என்ற மாணவனைப்போல எல்லைப்-புறத்தே மனத்தினை அலையவிடுவதும் விரும்பத்தக்கது அன்றாம். எடுத்த தொழிலினை விடாது அடுத்து அடுத்து முயன்று முடிக்கவும் வேண்டும்; இன்றியமையாதவை எல்லைப்-புறத்தே எழுமானால் மேற்கூறியபடி உடனே அதனை உணரக் கூடிய சுரணையும் இருத்தல் வேண்டும். எண்ணத்தை ஒருவர் மனத்தில் ஏற்றுவதனைக் கருத்து ஏற்று அல்லது எண்ணத்தை ஏற்றிவிடுவது (Suggestions) என்று கூறினோம். எல்லைப் புறத்தே தோன்றுபவை இத்தகைய கருத்து ஏற்றுகளாக நுழையலாம். நாம் ஒரு தொழிலினைச் செய்து வரும்போது எல்லைப்புற எண்ணங்கள் அதனை மாற்றுதலும் கூடும். "எல்லைப்புற எண்ண ஏற்றங்களுக்கும் (Marginal sugges-tions) நம் ஒழுக்க நிலைக்கும் உள்ள தொடர்பினைக் குழவி

விழுகின்ற நிலையில் இருந்ததனை எழுத்தாளன் எடுத்துக் காப்பாற்றிய கதை வழியாக நன்கு அறியலாம்.

முதல்நிலை உடன்நிலை :- இன்று இருக்கும் பள்ளிக்கூடங்களில் பல, நனவின் நடுவிடத்தை மட்டும் நம்பி வருகின்றன. ஆனால், குழந்தையின் மனமோ, சுற்றுப்புறநிலை முதலியவற்றை எல்லையாகக் கொள்கிறது. முதல் நிலையாகக் குழவி பாடத்தைக் கற்றுக்கொள்வதோடு (Primary learning) வேறு சிலவற்றையும் இணைபிரியா நிலையில் கற்றுக்கொள்கிறது. முதல் நிலையாகக் கற்பனவற்றோடு, உடன் கற்பனவாக மற்றும் சிலவற்றையும் கற்றுக்கொண்டு வருகிறது. இந்த உண்மையை இந்த நாளைய பள்ளிகளில் பல அறிவது காணோம். குழவி களைத்து இருப்பதனைக் காணாது, ஆசிரியர் கணக்கினை வற்புறுத்திக் கற்றுக் கொடுக்கும்போது, முதல் நிலையாக அவர் கொண்ட கணக்கைக் குழவி கற்பது சிறிதேயாம். அந்த முதல்நிலைக் கல்வியோடு கணக்கையே வெறுக்கின்ற நிலையையும் குழவி உடன்நிலைக் கல்வியாகக்(Associate learning) கற்றுக் கொள்ளுகிறது. ஆசிரியரை வெறுப்பதனையும் பள்ளியினை வெறுப்பதனையும் ஒருங்கு நிகழும் நிலையாக வைத்துக் குழவி (Concomitant learning) கற்றுக்கொள்கிறது. முதல்நிலைக் கல்வியைச் சுற்றி எழும் இத்தகைய கல்வியினை மனத்தின் டுநிலையும் எல்லைப் புறமும் ஆகக் கூறினால் உண்மை நன்கு விளங்கும்.

அக்கரை :— எனவே, எல்லைப்புறத் தூண்டுதல்களே அக்கரையை வளர்க்கும் ஊற்றுக்களாம். பள்ளிக்கூடம் என்றவுடன் பொங்கி எழும் உயரிய எண்ணம் மகிழ்ச்சி முதலியனவும், பள்ளிச் சடங்குகள் முதலியனவும், இவ்வாறு எல்லைப்புறத் தூண்டுதல்களாக இருந்து ஒழுக்க நிலையை வளர்க்கின்றன. வகுப்பின் ஒழுங்கு முறைகளை உற்றுநோக்கும்

உரிமையோடு குழவிகளை வாழவிட்டால், அவை தம் பொறுப்பினை உணர்ந்து உயர்ந்து வரக் காண்கிறோம்; சிறந்த மனநிலையும் வளர்ந்து வரக் காண்போம். கூட்டத்தில் கூடி வாழ்கின்ற வழக்கத்திற்கு ஏற்பப் பொதுவான அக்கறைகள் வளர்ந்து வரவும் காண்கிறோம். குழந்தையினிடத்தே இப்பொழுது தோன்றிவருகின்ற அக்கறைகளில் நல்லன எனத் தக்கவற்றை எழுப்பிவிடுதல் வேண்டும். இப்பொழுது குழந்தை நோக்கக் கூடிய எல்லை மேலும் பரந்து பரந்து வருமாறு செய்தலும் வேண்டும். இவ்வாறு உடன் நிகழ்வனவாக எழுவனவற்றையும், ஒருங்கு நிகழ்வனவாக எழுவனவற்றையும் முறைப்படுத்த முயலுதல் வேண்டும்.

வாழ்க்கை மாற்றம் :— அக்கறை என்பது ஒரு மனநிலையேயாம்; முழுமனத்தோடு முயலுவதே ஆம். குழவிகளும்கூட எளியனவற்றையே செய்கின்றன என்று சொல்வதற்கு இல்லை. அவ்வாறு எளியனவற்றையே செய்யத் தூண்டியபோது அவற்றின் ஊக்கம் குறைந்து விடுகிறது. முழுமனத்தோடு செய்யக்கூடிய வேலைகளைக் கொடுத்தோ, கொடுக்கும் வேலைகளில் முழு அக்கறையும் வருமாறு செய்தோ வந்தால், குழவிகள், அந்த வேலைகளில், நாம் எதிர்பார்ப்பதற்குமேலும் ஈடுபட்டுவரக் காண்போம். அதனால், திண்ணிய மனநிலையும் வளரக் காண்போம். அக்கறையும் பரவிக்கொண்டே வரும். அக்கறையோடு செய்யும் வழக்கத்தால் அக்கறைகள் ஒன்றை ஒன்று திருத்தி வளர்த்துவரும். தன் நலம் என்பது ஒழியும். பிறரோடு ஒத்து உழைத்து வாழ்கின்ற வாழ்க்கை நிலைபேறடையும். பிறர் கூறுவதனையே தான் செய்து வருவதாக வளரும் எண்ணமும் முளையிலேயே இவ்வாறு கிள்ளி எறியப் பெறும். வற்புறுத்தலும் தானுமாக நிற்கின்ற பிரிவுநிலை நீங்கித் தானும் தன் தொழிலும் ஒன்றுபட்டுத் தோன்றும். இவ்வாறு வாழ்க்கை மாறி அமைதலே கல்வியாம்.

நோக்கமும் விருப்பமும் :- மக்களது செயல்கள் எல்லாம் நோக்கமுடையன எனக் கண்டோம். ஏதேனும் ஒன்றை முன்னோக்கமாகக் கொள்கின்றோம். அந்த நோக்கத்தினை அடைவதற்குத் திட்டம் கோலுகின்றோம். அந்தத் திட்டத்-தினைச் செயல் முறையிற் கொண்டு வருகின்றோம். பின்னர் அச்செயன்முறை வெற்றி பெற்றதா இல்லையா என முடிவு கூறுகின்றோம். தான் விரும்பியதனையே குழவி செய்வதற்கும், தான் செய்வதனையே குழவி விரும்புவதற்கும் வேற்றுமை உண்டு. முன்னையது தன் மனம் போலத் திரிதலாகும்; பின்னையதோ நோக்கத்தோடு எழுகின்ற செயலாம். ஆகவே, குழவி தான் செய்வதனை முழுமனத்தோடும் செய்து வருமாறு நாம் தூண்டுதல் வேண்டும். உரிமை என்பது இவ்வாறு தன்னுடைய வளர்ச்சிக்கு ஏற்ற நோக்கங்களை முடிவு பெறு-மாறு செய்தலே ஆம். குழவி தனக்குத்தானே உதவி செய்து கொள்ளுமாறு துணைசெய்வதே ஆசிரியன் கடமையாம். 'குறைவிலா நிறைவாம் செயலே செயல்' என்றால் அச்செயல் முழுதினையுமே குழவி தானாகச் செய்திருந்தால் மட்டுமே சிறப்-புண்டு. குழவிகள் கூட்டமாகக் கூடித் தாமாகவே இத்தகைய நிறை செயல்களைச் செய்து வருவது அருமை அன்று.

பொருள் :— "களிறு" என்பதற்குப் பொருள் "யானை" என்பது போன்ற இடத்தில் பொருள் என்றால் என்ன? "இதற்கு அர்த்தம் அது" என்று சுட்டுவதேயாம். குறிப்பிட்டதொரு தூண்டுதலும் அதன் எதிர் ஊன்றலும் இவ்வாறு ஒன்றை ஒன்று சுட்டுகின்றன. ஒன்று ஒன்றன் பொருளாக அமைவது இதுவே. புளியைக் காண்பதும் நாவில் நீருறுதலும் இவ்வாறு இயைவது காண்க. இது வெளிப்படை அனுபவத்தின் பயனாக விளங்குவதேயாம். மக்கள் இனத்தின் அனுபவம் முழுவதும் கல்விமுறை வழியாக நமதாகிவிடுகின்றது; அகராதி அனைத்தும் நமதாகின்றது.

எண்ணம் :— எண்ணுவது என்ருலும் ஒன்றிலிருந்து நம் மனம் மற்ருென்றிற் புகுதலே ஆம்; ஒன்று மற்ருென்றைச் சுட்டுவதே ஆம். 'புகையைக் கண்டதும் நெருப்பு உண்டு.' என எண்ணி வருகின்ருேம். எண்ணுவது என்பது ஒரு தறுகண் செய்கையே ஆம். இன்னதென அறியாத இடத்திலே அஞ்சாது பாய்ந்து குதிப்பதுபோல உணரலாகாத இருட்டில் நம் எண்ணம் பாய்ந்து குதிக்கின்றது. அறிவாராய்ச்சியை ஒரு செய்க்காட்சி (Experiment) யாக ப்ராட்லி (Bradly) கூறியதனை முன்னரே கண்டோம். இத்தகைய தறுகண் செயலினைச் செய்ய உரம் வேண்டும் அன்ருே? ஆதலின், இந்த எண்ணநிலை தன் செயலை முற்றமுடிய நிறைவேற்றும் உரம் பெறுமாறு குழவியினை வளர்த்தல் வேண்டும். எண்ணுவது எவ்வாறு உரம் பெறுதல் கூடும்? ஆராய்ந்து எண்ணிப் பழகுவதாலே ஆம். பிறர் நமக்காக எண்ணவும் முடியாது. குழவி தனக்காகத் தானே உண்ணுவது போலத் தனக்காகத் தானே எண்ணித் திருதல் வேண்டும். அங்ஙனமாயின், கற்பிப்பது என்பதற்குப் பொருள்தான் என்னை? தவளையை இயக்க-வேண்டும் என விரும்பினுல் அதனைக் கொம்புகொண்டு குத்து-கிருேம். உடனே தவளை இயங்கிக் குதித்து ஓடுகிறது. அங்கு எழுகின்ற இயக்கம் தவளையினுடையதே ஆம். நம்முடையது அன்ரும். அதே போலக் குழவியும் நம் எண்ணத்தினைப்போன்ற எண்ணத்தினை எண்ணி வருமாறு நம் சொற்களாலே தூண்ட-லாமே அன்றி நம் எண்ணத்தை அவ்வாறே குழவியின் மனத்தினுள்ளே புகுத்த முடியாது. ஆகவே, குழவி தானுகவே எண்ணித் தீர வேண்டும் என்பதனை ஆசிரியர் மனத்தில் வைத்துக்கொண்டு, அக்குழவியின் நிலைக்கு ஏற்ப விரை-வின்றிப் படிப்படியாகக் கற்பித்துக்கொண்டு செல்லுதல் வேண்டும். ஆசிரியக் கலையின் உயர்ந்த நடை இவ்வாறு குழவியின் எண்ணத்தை நாம் விரும்பியது போலத் தூண்டி-

விட்டு விளங்குமாறு செய்வதிலேயே செவ்வி பெறுகிறது எனலாம். ஒரு குறிப்பிட்ட நிலையிலே கருத்தாய் இருக்கும் போது அந்நிலையிலிருந்து என்ன எதிர் பார்க்கக்கூடும்? அந்த நிலையைக் கொண்டு என்ன செய்வது என எதிர்பார்க்கலாம்? இவற்றைப் பற்றி உன்னிப்பாக இருப்பதே எண்ணுதல் என்ற இயக்கத்தின் சிறப்பியல்பாம்.

ட்யூயி :— ட்யூயி என்ற பேராசிரியர் (Dewey) எண்ணத்தின் பல வழிகளை வகை செய்துள்ளார். (1) குறிப்பிட்டதொரு செயலைப் பின்பற்றுமாறு நம் மனப்போக்கையோ, உட்டுடிப்பினையோ கிளரவிடுவது எண்ணத்தின் நிலையாம். (2) தடை ஒன்று எழுகிறது. 'தொடங்கிய வழியிலேயே எவ்வாறு தொடர்ந்து போவது?" என்பது விளங்கவில்லை. இது இரண்டாம் நிலையாம். (3) "இங்கு எழும் இடர்ப்பாடு யாது?" என அறிந்து வரையறுத்து உணருமாறு அந்த நிலையை மறுமுறையும் ஆராய்கின்றோம். இதுவே மூன்றும் நிலை. (4) பல வழிகள் தோன்றுகின்றன. பல கொள்கைகள் உருப்பெறுகின்றன. நடைத்தைக் கோலங்கள் பல விளங்குகின்றன. இதுவே நான்காம் நிலை. (5) ஒவ்வொரு கொள்கையிலிருந்தும் ஒவ்வொரு வழியிலிருந்தும் அதன் அதன் உட்பொருள் அனைத்தினையும் வேறு பிரித்து உணர்கின்றோம். (6) இவ்வாறு கண்ட முடிவுகள் சரியா என்று செய்து பார்க்கிறோம். (7) அவ்வாறு செய்து பார்ப்பதற்கு இணங்க ஒரு வழியை அல்லது கொள்கையினைச் சிறந்ததோர் உண்மை எனக் காண்கின்றோம். கோள்களின் கணக்கு பிறழ்ச்சிஉறுவது நோக்கி வருந்திப் பின் வருணன் அல்லது நெப்தியூன் (Neptune) என்ற கோளைக் கண்டறிந்த வானநூல் அறிஞரது (Herschel ஹெர்ஷெல்) அறிவும் பசியால் வருந்தி அழுது பாலைப்பெறும் குழவியின் அறிவும் இவ்வகையால் ஒத்திருக்கக் காண்கிறோம்.

ஈதே ஏழாவது நிலையாம். இதனை உணர்ந்து குழவியைப் பழக்குவது எளிதாம்.

எதிர்காலக்கல்வி :— நம்முடைய கல்விமுறை மாறிக் கொண்டே வருகிறது. "குழவிக்குக் கற்பிக்கின்றோம்". எனப் பேசுகின்றோமே அன்றிப் "பாடத்தினைக் கற்பிக்கின்றோம்" என்ற பேச்சு இப்போது இல்லை. முன்காலத்தில் கற்றுக் கொடுப்பவர் ஆசிரியன்மார் ஒருவரே அல்லர். குடும்ப வாழ்க்-கையில் பெற்றோரோடு பழகி வாழ்ந்து பலவற்றை முன்நாளில் குழவி அறிந்து வந்தது. தாயும் தந்தையும் காலையில் வேலைக்குப் போய் இரவில் திரும்பிவருகின்ற இந்நாளைய நாகரிக வாழ்க்-கையில் கல்விமுறை அனைத்தையும் பள்ளிக்கூடமே கற்றுக் கொடுத்தல் வேண்டும். எதிர்கால வாழ்வுக்கு ஏற்றவாறு இக்-குழவிகளைச் சீர்திருத்துதல் வேண்டும். ஆனால், 'எதிர் காலம் எப்படி இருக்கும்?' என நாமும் அறியோம். ஆதலின், எந்த நிலைக்கும் ஏற்றவாறு எண்ணி, வேண்டிய செயலைச் செய்து வருமாறு பழக்கிவிட வேண்டுமே அன்றிக் குறிப்பிட்ட சில செயல்களைச் செய்வதற்கு மட்டும் கற்பித்து, 'அவ்வளவே கல்வி.' என நிறுத்திக் கொள்வோமானால், மிக விரைந்து மாறிவரும் இந்த உலகத்தின் எதிர் காலத்தில் எழக்கூடிய புதிய நிலையில், கல்வியின் முடிவாகத் தாம் கற்றுக்கொண்ட செயல்கள் பயன் படாது போவது கண்டு, குழவிகள் ஏமாந்து போகலாம்.

கற்றுக்கோள்ளும் படிநிலைகள்:- குழவியும் இருக்கின்றது; குழவி கற்க வேண்டிய பாடமும் ஒரு புறம் இருக்கின்றது. அநுபவம் என்பதே அந்த இரண்டினையும் ஒன்று சேர்த்துவரக் காண்கிறோம். உண்மையில் நோக்குமிடத்து ஒவ்வொரு பாடமும் ஒவ்வொரு நடத்தை முறையேயாம். கொல்லன் உலைக்களத்தில் கற்றுக்கொள்வன இத்தகையனவே என்பதில்

ஐயம் இல்லை. எட்டுச் சுரைக்காயாக நம்பாடம் முடியும் போது மட்டுமே ஐயம் எழுகிறது. கற்றுக் கொள்வது என்பது இவ்வாறு அனுபவத்தைத் திருத்திக் கொள்வதே ஆம். பள்ளிக்கூடத்தில் கற்றுக்கொள்ளும் நிலையை ஐந்து படி-நிலைகளாக வகுத்துக்கூறலாம். (1) குழவி ஏதேனும் ஒன்றைச் செய்யத் தொடங்குகின்றது. பிறர், மூடு செருப்பின் (Shoe) கயிறு (Lace) முடிவது கண்டு தானும் செய்ய முயல்கிறது. இது முதற்படி. (2) அங்கு ஓர் இடப்பாடு எழுகின்றது. செருப்பு முடிவதனை ஒரே மூச்சில் செய்ய முடிவதில்லை. இது இரண்டாவது படி. (3) அடுத்தடுத்துக் குழவி முயன்று பார்க்-கின்றது. நன்கு செய்து முடிப்பதற்கு உதவும் நிலைகளை உற்றுப் பார்க்கிறது. இது மூன்றும்படி. (4) அங்கே முழு-நிலைமையையும் உணர்கிறது. அந்த நிலைமைக்குப் பயன்படக் கூடியதொரு நடத்தையின் கோலத்தை அறிவதே கற்றுக்-கொள்வதாம். அது புதிய நடத்தையாகக் குழவிக்குப் பழகி விடுகிறது. இது நான்காம் படியாம். (5) அந்தப் புதிய நடத்தைக் கோலம் இவ்வாறு பழக்கமானதும் இடர்ப்பாடு ஒழிகிறது. முன்னர் மூன்றும், நான்காம் படிகளாக அமைந்-தவையே குழவிகள் படிக்கும் பாடங்களாம். ஈதே ஐந்தாம் படியாம். இவ்வாறு, அனுபவத்தை வாழ்க்கையிலும் பயன் படு-மாறு சீர்திருத்தி அமைத்துக் கொண்டு போவதே கல்வியாம். இவ்வாறு பழகி வருவதால் உண்மையான நல்லொழுக்கம் வளர்கிறது. அதனால், குழவியின் இயல்பும் மாறி, நல்லியல்-பாகத் திருத்தம் உறுகிறது.

"இருள் சூழ் அறையில் இருந்தது நாடில்
பொருள் சூழ் விளக்கது புக்கெரிந்தாற் போல்
மருள் சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
அருள் சூழ் இறைவனும் அம்மையும் ஆமே"

(திருமந்திரம்—1517)

---

# குழவி உள்ளம்

(மூன்றும் பாகம்)

---

## 20. அறிவை அளத்தல்

---

### I. அறிவளவை

இயல்பும் அளவும்:- அறிவாராய்ச்சி முதலில் பொருளின் இயல்பை அறிவதோடு நின்றுவிடுகிறது. பின், பொருளின் பலவேறு நிலைகளையும் அளந்து அறிந்து முடிவுகட்ட முயலுகின்றது. முயற்சியில் வெற்றியை அடைந்தபோதே அமைதி அடைகின்றது. மேலே உயர வீசி எறிந்த கல்லைத் தரைக்காக இழுக்கின்ற சக்தி தரைக்குள்ளேயே விளங்குகிறது என்று அறிகின்ற அறிவு இந்த இயல்பாராய்ச்சியோடு நிற்பதில்லை. "தரை, கல் என்ற இரண்டின் பொருண்மைக்கு ஏற்ப அந்தச் சக்தி உயர்ந்து கொண்டும் அந்த இரண்டின் தொலைவிற்கேற்பக் குறைந்து கொண்டும் குறிப்பிட்டதோர் அளவில் இயங்குகின்றது." என அளந்து, "அந்தக்கல் பொதுவாக விநாடிக்கு விநாடி 32 அடி வீதமாக விசை ஏறிக்கொண்டே வந்து மேலிருந்து தரையின்மீது விழும்." எனக் கணக்கிட்டுக் கூறும்பொழுதே அறிவாராய்ச்சியின் உயர்நிலை விளங்குகிறது. ஈதே அளவாராய்ச்சி. இவ்வாறு புள்ளிபோடத் தக்க வழியில் கணக்கியலும் வளர்ந்து கொண்டு வந்தால் மட்டுமே இயல்பாராய்ச்சி அளவாராய்ச்சியாக முற்றிப் பழுக்கும்.

தேர்வுகள் :— அங்ஙனமே, மனத்தினை ஆராய வந்த-வர்களும் மக்களின் சிறப்பியல்பாகக் கருதப்பெறும் அறிவின் இயல்பினை ஆராய்வதோடு அமைதிபெறுமல் அதனை அளந்து அறியவும் அவாவினர். தார்ண்டைக் (Thorndike) என்பவர், "உலகில் இருப்பன யாவும் ஓர் அளவிற்கு உட்பட்டே இருந்து வருகின்றன. ஓர் அளவிற்கு உட்பட்டு இருத்தலின் இவற்றில் எதனையும் அளவிடக்கூடும்." என்று கூறுகின்றார். இந்தக் கூற்றினுள் ஒளிரும் மனப்பான்மையே 'மனத்தினையும் நாம் அளந்தறியக்கூடும்.' என்கிற நம்பிக்கையை வளர்த்து வெற்றி-பெறுமாறு செய்கிறது. பழைய காலந்தொட்டு மக்கள் ஒரு-வகையாக அறிவை அளந்தே வருகிறார்கள். "இவனினும் அவன் அறிவுள்ளவன்" என்று பேசும் பேச்சுப் பழம்-பேச்சேயாம். தேர்வுகள் (Examinations) எல்லாம் இவ்வாறு அளப்பதற்கே எழுந்தனவாகும். "வானத்தினும் பெரியது எது? மலையினும் பெரியது எது? ஞாலத்தினும் பெரியது எது?" என்று எழுந்த கேள்விகளும் அதற்குச் சேக்கிழார் திருவள்ளுவர் உதவிகொண்டு கூறிய விடைகளும், "காலையில் நான்கு காலோடும், நண்பகலில் இரண்டு காலோடும், மாலையில் மூன்று காலோடும் நடக்கும் உயிர்ப்பொருள் யாது?" என்று சீயாங்கனை (Sphinx) கேட்ட கேள்வியும் அதற்கு ஈடிபஸ் (Oebipus) கூறிய விடையும், "அரசன் அறவோன்," "அரசி கற்பினுக்கரசி;" "அரசனது தாய் குழந்தை பெற்றவள்," என்ற உண்மைகளை மறுத்து உரையாடிய ஆளவந்தாரது விடைகளும் இவ்வாறு அறிவை அளப்பனவே ஆம்.

பிற அளவைகள்: — ஆனால், இவை அனைத்தும் ஒருவனை நோக்க மற்றவனுடைய அறிவு உயர்ந்தோ, தாழ்ந்தோ இருப்-பதனை விளக்குவனவே அன்றி, நிறுத்தும், நீட்டியும், முகந்தும், எண்ணியும் பிறபொருள்களை அளந்து வழங்குவது போல,

ஒருவனுடைய அறிவைத் தனியாக 'இன்ன அளவினது.' என்று அளந்து கூற இவை உதவுவதில்லை. ஆகையால், வேறு வகையாக அறிவை அளக்க அறிஞர் முயன்றனர். மன-நிலைக்கும் உடல் தோற்றத்திற்கும் பொருத்தம் காண எண்ணிச் சிலர் 'மூளையே அறிவிற்கு இருப்பிடம்; ஆதலின், தலையை அளந்தால் அறிவினை அளந்ததாகும்' என நம்பி அளந்து திரிந்தனர். 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் மனத்தே கடுத்தது காட்டும் முகம்' என்பார்கள்; ஆதலின், முகத்-தோற்றத்தை வேறுபடுத்தும் எலும்பமைப்பைச் சிலரும், தசையமைப்பைச் சிலரும் அளப்பது வழியாக அறிவை அளந்தறிய முற்பட்டனர். கார்ல் பியர்சன் (Karl Pearson) என்பார் 1906 ஆம் ஆண்டில் இத்தகைய முயற்சிகளை எல்லாம் ஆராய்ந்து, "உடல் அமைப்பிற்கும் அறிவுநிலைக்கும் இயைபு காண்பதே இயலாது." எனக் காட்டினர்.

பிற முயற்சி :— அதன் பின்னர், "உடலின் ஆற்றலை விளக்கும் செயல்கள் மனத்தினை முற்கொண்டே எழுவன; ஆதலின், அச்செயல்களை அளப்பதன் வழியாக மனத்தினை அளக்கக்கூடும்." என ஆராய்ந்த மக்கள் பலர். களைப்புநிலை, எதிர்ஊன்றற்கு எழும் காலம் முதலியவற்றை அளந்து வந்தனர். இத்தகைய முயற்சிகளும் அறிவை அளப்பதற்குப் பயன்படாது போயின. எனவே, முதலில் வெற்றுடலை அளந்தனர்; பின்னர் மனத்தோடு இயங்கும் செயற்பாட்டை அளந்தனர் எனலாம். இவை பயன்படாது போகவே முடிவாக மனத்தினை நேரே அளக்க வந்தனர். உள்ளத்தின் ஆற்றலை அளக்கும் ஓர் அறிகுறியாக மனச்செயலை அளக்க முயன்றது போய், மனச் செயலை மனத்தினை அளக்கும் நேர்வழி எனக் கொண்டு நேரே அளக்கும் முயற்சி தொடங்-கியது.

## II. அளவுகோல்

பர்ட் - பினே :— சிரில் பர்ட் (Cyril Burt) என்பவர் ஆங்கில நாட்டு உள்ளத்தியற்கை நூல் அறிஞரில் தலை சிறந்தவர். அறிவாராய்ச்சியை வெளியாக்கும் கேள்விகள் சிக்கலாகச் சிக்கலாக அவற்றிற்கு விடையளிக்கத் தக்க அறிவாராய்ச்சி-நிலை மிக்கு வருவதை இந்த ஆராய்ச்சி வாணர் கண்டார். 'அறிவு நிலையை இவ்வாறு அறிவாராய்ச்சியின் விளக்கம் கொண்டே அளக்க வேண்டும்.' என்பது இவர்கண்ட முடிபு. இவ்வாறு இவர் ஆராய்ச்சி செய்யும் பொழுது பிரான்சு நாட்டில் பினே (Binet) என்பவரும் இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபட்-டிருந்தார். பிரான்சில், அறிவு விளக்கம் குறைந்த குழவிகளை ஆராய்ச்சி செய்யவந்த இந்தப் பெரியார் அத்தகைய பிற்பாடான குழவிகளுக்கும், மற்றைய பொதுநிலைக் குழவிகளுக்கும் உள்ள வேறுபாட்டை முறைப் படுத்திக் காணமுயன்றார்; ஓர் அளவு கோலைக் கண்டுபிடித்தார். அதன் பின்னரே, 'அறிவளவை' என்பதும், 'அறிவை அளந்து காண்பது' என்பதும் உலகெங்கும் வழங்கத் தொடங்கின.

கணக்கு :- பல குழவிகளை அளந்து "இந்த இந்த வயதில் இவ்வளவு இவ்வளவு உயரம் இருத்தல் வேண்டும்; இவ்வளவு இவ்வளவு எடை இருத்தல் வேண்டும்." என்று கூறுகிறோம். இது சராசரி நிலையைப் பொறுத்தது. பின்னர், ஒவ்வொரு குழவியும் இந்தச் சராசரி நிலைக்கு உயர்ந்ததோ தாழ்ந்தோ இருப்பது கொண்டு அவற்றை அளப்பது எளிதாகிறது. அவ்வாறே அறிவு நிலையையும் அளந்து அறிதல் வேண்டும். கணக்கு நூலோர் இத்தகைய புள்ளி விவரங்கள் ஒரு சராசரிப் பொது நிலையைச் சுற்றிக் குறிப்பிட்டதொரு முறையைப் பின்-பற்றி அமைதலையும் (Theory of normal distribution),

வயது எடை என்ற இவை போன்று ஒன்றோடொன்று தொடர்புண்டு கிடப்பவற்றின் இயல்பினை விளக்கும் முறையினையும் (Theory of correlation) ஆராய்ந்துள்ளனர்.

அளவுகோல் :— படிப்படியாகச் சிக்கலாகிக் கொண்டு வரும் ஆய்வுகளை முதலில் பினே அமைத்துக் கொண்டார். "மூன்றாண்டு குழவிகள் இவற்றில் எத்தனை கேள்விகளுக்கு விடை அளிக்கும்"? என அறியப் பல ஆயிரம் குழவிகளை ஆராய்ந்தார். அந்த மூன்றாண்டு குழவிகளில் நூற்றுக்கு எழுபது குழவிகள் எந்தக் கேள்விகளுக்கு எல்லாம் விடை அளித்தனவோ அந்தக் கேள்விகளை 'மூன்றாண்டு குழவியை அளந்து அறிந்து சுட்டும் கேள்விகள்' எனக் குறித்துக்கொண்டார். இவ்வாறே ஒவ்வோர் ஆண்டிற்குமாக அந்த அந்த ஆண்டிற்கு ஏற்ற பொது அறிவுநிலையை உணர்த்தும் ஆய்வுகளை ஆராய்ந்து குறித்துக் கொண்டார். ஈதே அவர்கண்ட அளவுகோல்.

மனவயது :— இந்த அளவுகோல் கொண்டு தம் மேற்பார்வையில் இருந்த பிறப்பாடான குழவிகளை ஆராய்ந்தார். அவர்கள் தம் வயதிற்கு ஏற்ற அறிவுநிலை அற்றுக் கிடந்தது வெளியாயிற்று. வயது எட்டாக இருக்கும்; ஆனால் ஐந்தாம் ஆண்டு குழவிகள் விடையளிக்கும் கேள்விகட்கு மட்டுமே இவை விடையளிக்கும். ஆதலின், அறிவுநிலை ஐந்தாம் ஆண்டிற்கு உள்ளது போலவே விளங்கியது எனலாம். ஆகவே, அறிவாய்வுகளால் (Intelligence tests) நாம் உணரும் வயதினை மனவயது (Mental age) அல்லது மன ஆண்டு என்றும், குழவி வளர்ந்த வயதினை உடல்வயது (Physical age) அல்லது உடல் ஆண்டு என்றும் வழங்கினர். இவற்றின் ஒற்றுமை வேற்றுமையால், அறிவு நிலையைப் பல குழவியிடமும் ஒத்திட்டுப் பார்க்க இடம் உண்டாயிற்று.

அறிவு நிலை ஈவு :- ஒரு குழவியின் மன ஆண்டு 5; உடல் ஆண்டு 8; ஆதலின் அதன் அறிவுநிலை 5/8 ஆம். முழு எண்ணாய் வருவதற்காக இதனை நூறால் பெருக்கி வழங்குவதே இப்போது பெருவழக்காய்விட்டது. ஈவு ஏறக்குறைய 62 ஆம். இந்த ஈவே அறிவு நிலை ஈவு (Intelligenec quotient) என வழங்கிவருகிறது. அறிவுநிலை 100 என இருப்பதே பொது-நிலையாம். 68 என இருப்பது தாழ் நிலையாம். இது அந்தக் குழவியின் அறிவுநிலையின் தாழ்வினைக் குறிக்கின்றது. அறிவு-நிலை ஈவு100க்கு மேலாக 110 என்று இருப்பது அறிவின் உயர் நிலையைச் சுட்டுவதாம். உடல் ஆண்டு 5, மன ஆண்டு 8 என நிற்பின் $\frac{8}{5}\times100=160$ என வருதல் காண்க. இது அறிவு நிலையின் உயர்வினையே சுட்டுகிறது எனலாம். இந்த அறிவுநிலை ஈவினை ஒப்பிட்டுப் பார்ப்பதே பலருடைய அறிவு நிலையையும் ஒப்பிட்டுப் பார்ப்பதாக முடிகிறது.

## III. பினே

ஆராய்ச்சி :— பினே தம்மைச் சுற்றியிருந்த நிலையைக் கொண்டு ஆராய்ந்தார். அங்கங்கே இருக்கும் சுற்றுப்புற-நிலைக்கு ஏற்பக் குழவிகளை ஆராய்ந்து 'எந்த எந்த ஆய்வு எந்த எந்த ஆண்டு நிலைக்கேற்றது' என முடிவு கூறுதல் வேண்டும். பினே என்பாரது அளவையைச் சுருக்கித் தருவது மேலும் அவ்வகையால் ஆராய்ச்சி செய்வாருக்கு உதவலாம். ஒவ்வோர் ஆண்டிலும் அவர் நாட்டில் அவர் நாளில் குழவி பொது-நிலையாக அறிந்திருந்ததாக அவர் கண்டதனைக் கீழே குறிக்-கின்றோம்.

மூன்றும் ஆண்டு :— 1. குழவி கண், வாய், மூக்கு இவற்றைக் காட்டுதல். 2. நாம் கூறும் சிறு சொற்றொடரைத்

திருப்பிச் சொல்லுதல். 3. பத்தில் குறைந்த எவையேனும் இரண்டு எண்களை நாம் கூறியபின் திருப்பிச் சொல்லுதல். 4. படத்தில் கண்ட பொருள்களை "இன்ன" எனக் கூறுதல். 5. தன் குடிப்பெயரை அறிதல்.

நான்காம் ஆண்டு :— 1. தான் ஆணு, பெண்ணு என அறிதல். 2. பழக்கமான பெயர்களை அறிதல். 3. பத்தில் குறைந்த எண்களைத் திருப்பிச் சொல்லுதல். 4. இரண்டு கோடுகளில் பெரியது யாது என அறிதல்.

ஐந்தாம் ஆண்டு :— 1. எடையில் வேறுபட்ட இரு பெட்டிகளை ஒப்பிட்டுப் பார்த்தல். 2. ஒரு சதுர வடிவத்தைப் பார்த்து எழுதுதல். 3. நீள சதுரம் (Oblong) ஒன்றை மூலைக்கு மூலை குறுக்காக வெட்டி இரண்டு முக்கோணங்களாக்கிப் பிரித்துக் குழவிகையில் கொடுத்து, நீள் சதுரமான அட்டையையும் அதனெதிரே காட்டினால், அந்த அட்டை இருப்பது போலவே இரண்டு முக்கோணத் துண்டுகளையும் ஒன்றாக அமைத்தல். 4. நான்கு நாணயங்களை எண்ணுதல். 5. பத்து அலகுள்ள (Syllable) சொற்றொடரைச் சொன்னால் திருப்பிச் சொல்லுதல்.

ஆறாம் ஆண்டு :— 1. வலம் இடம் அறிதல். 2. பதினாறு அலகுள்ள சொற்றொடரைத் திருப்பிச் சொல்லுதல். 3. இணை இணையாய் மூன்று இணையாக அமைந்த முகங்களில் ஒவ்வோர் இணையிலும் அழகிய முகம் யாது எனக் கூறுதல். 4. பழகிய பொருள்களின் இலக்கணம் கூறுதல். 5. வாயால் நாம் கூறும் மூன்று வேலைகளை முழுதும் கேட்டுப்போய்ச் செய்தல். 6. தன் வயதினை அறிதல். 7. காலைக்கும் நண்பகலுக்கும் வேற்றுமை அறிதல்.

ஏழாம் ஆண்டு :- 1. முடிவு பெறாத குறைவாக இருக்கும் படங்களில் (வாய், கண், மூக்கு முதலிய இல்லாத முகம் முதலியன) என்ன குறைகிறது எனக் கூறுதல். 2. ஒவ்வொரு கையிலும், இரண்டு கையிலும் விரல்கள் இத்தனை என எண்ணாமலே கூறுதல். 3. எழுதிய வடிவத்தைப் பார்த்து எழுதுதல். 4. வைர வடிவத்தைப் (Diamond) பார்த்து எழுதுதல். 5. பத்திற்குக் குறைந்த எண்களைக் கூறக் கேட்டுப் பின்னர்த் திருப்பிச் சொல்லுதல். 6. படங்களை விவரமாகக் கூறுதல். 7. பதின்மூன்று நாணயங்களை எண்ணுதல் 8. வழக்கத்திலுள்ள நான்கு நாணயங்களின் பெயரை அறிதல்.

எட்டாம் ஆண்டு :- 1. ஒரு பாடத்தைப் படித்து அதில் இரண்டு விஷயங்களை நினைவில் வைத்திருத்தல். 2. ஒன்பது நாணயங்களை எண்ணுதல். 3. நாலு நிறங்களின் பெயரை அறிதல். 4. இருபதில் இருந்து பூச்சியம் (Zero - 0) வரை தலைகீழாகச் சொல்லிக்கொண்டு போதல். 5. சொல்லுவது கேட்டு எழுதுதல். 6. இரண்டு பொருள்களை ஒப்பிட்டு வேற்றுமை காணுதல்.

ஒன்பதாம் ஆண்டு :- 1. வருஷம், மாதம், தேதி, கிழமை அறிதல். 2. கிழமைகளின் பெயரை முறையே சொல்லுதல். 3. நாணயங்கொண்டு சில்லரை கொடுத்தல். 4. 'இதற்குப் பயன்படும்' என்ற வகையாலோ பிறவகையாலோ பொருள்களுக்கு இலக்கணம் கூறுதல். 5. ஒரு பாடத்தைப் படித்து அதிலுள்ள ஆறு விஷயங்களை நினைவில் வைத்திருத்தல். 6. எடை வகையாக ஐந்து பெட்டிகளை முறைப்படுத்துதல்.

பத்தாம் ஆண்டு :— 1. ஆண்டில் உள்ள திங்களின் பெயரை எல்லாம் சொல்லுதல். 2. ஒன்பதுவகை நாணயங்-

களின் பெயர்களை அறிதல். 3. ஒரு வாக்கியத்திலோ, இரண்டு வாக்கியத்திலோ, இரண்டு கருத்துக்களை விளக்கும் ஒரு வாக்கியத்திலோ மூன்று சொற்களை அமைத்துக் கூறுதல். 4. தெளிவான எளிய கேள்விகளை உணர்தல். 5. சில அரிய கேள்விகளையும் உணர்தல்.

பதினோராம் ஆண்டு :— 1. உளறு படைகளை (Absurd Statement) உணர்ந்து எடுத்துக்காட்டல். 2. மூன்று சொற்களை ஒரே கருத்தினை விளக்கும் வாக்கியம் ஒன்றில் அமைத்துக் கூறுதல். 3. மூன்று நிமிஷத்தில் அறுபது சொற்களைக்கூறுதல். 4. வெற்றுநிலைச் சொற்களின்(Abstract words) இலக்கணம் கூறுதல். 5. வாக்கியத்திலுள்ள சொற்களைத் தலை தடுமாறிச் சொல்லினால், முறையாக அவற்றைத் தொடர்புபடுத்திச் சரியான வாக்கியமாகக்கூறுதல்.

பன்னிரண்டாம் ஆண்டு :- 1. பத்திற்குக் குறைந்த ஏழு எண்களை நாம் சொன்னபின் சொல்லுதல். 2. எடுத்துக் கொடுத்த சொல்லோடு எதுகை அல்லது இயைபு (Rhyme) பெற்றுவரும் மூன்று சொற்களைக் கூறுதல். 3. இருபத்தாறு அலகு நிலைகள் (Syllables) பெற்ற சொற்றொடரைத் திருப்பிச்சொல்லுதல். 4. படங்களின் பொருளை விளக்குதல்.

பதிமூன்றும் ஆண்டு :- 1. காகிதத்தை நான்காக மடித்து, அதில் அதில் ஒரு முறை மடித்துத் தோன்றும் பக்கமாக, மேலே மடித்த புறத்தின் ஓரமாய் முக்கோணம் வரைந்து காட்டிக் கத்திரிக்கோல் கொண்டு அந்த முக்கோணத்தைக் கத்தரித்து விட்டபின், "இப்போது இந்தக் காகிதத்தை விரித்தால் உள்ளே எவ்வாறு இருக்கும் என எழுதிக் காட்டு" எனக்கூறிக் காகிதத்தைக் கொடுத்தால் எழுதிக் காட்டுதல். 2.

முக்கோணங்களை மனத்திலேயே திருப்பிவைத்து அமைத்துப் பார்த்துப் பின்னர் எழுதிக் காட்டுதல். 3. வறுமை - துன்பம் முதலியன போல இணை இணையாக வந்து தன்மையைக் குறிக்கும் வெற்றுநிலைச் சொற்களின் வேற்றுமையை அறிதல்.

பிறநாட்டிற்கு :— இவை அனைத்தும் 'பினே' என்பார் தம்முடைய பிரான்சு நாட்டிலே கண்ட குழவிகளின் நடத்தையை ஆராய்ந்து குறித்தனவாகும். "இதில் கீழ்நிலை ஆண்டிற்கு எனக் குறிக்கப்பட்டவற்றை மேனிலை ஆண்டில் உள்ள நம் குழவிகள் உணரவில்லை." எனச் சைதாப்பேட்டை ஆசிரியக் கல்லூரியினர் ஆராய்ந்தபோது கண்டனராம். அந்த அந்த நாட்டுக் குழவிகள், தத்தம் சுற்றுப்புற நிலைமைக்கு ஏற்பப் 'பினே' கண்ட முறைக்கு மாறாகப் பிறவாறும் நடந்து வரும். ஆதலின், "அங்கங்கே பல்லாயிரக் கணக்கான குழவிகளை ஆராய்ந்து அந்த அந்த வயதில் எந்த எந்த வகையாக அறிவுநிலை விளங்குகிறது." என முடிவு செய்தல் வேண்டும். அத்தகைய முடிந்தமுடிபாகிய ஆராய்ச்சி ஒன்றும் தமிழ்நாட்டில் இதுவரையிலும் நடவாமை மிக மிக வருந்தத்தக்கதாம்.

அறிவுநிலை :— அறிவுநிலை ஒரு கலவை நிலையே என்பது பினே என்பார் கருத்து. அங்கே (1) நோக்கம் உடைமையும் உண்டு. நிலைக்கு ஏற்பத் (2) திருந்திவரும் ஆற்றலும் விளங்குகிறது. தன் செய்கையைத் தானே ஆராயும் (3) தன்னாராய்ச்சி நிலையும் சிறக்கின்றது. இவை மூன்றும் ஒருங்கியைந்த கலவைநிலையே அறிவு நிலையாம். இயற்கை அமைப்புகளை ஏற்றவாறு பழக்கிக் கொள்வதே அறிவு என்று கூறுகின்றார், மக்டூகல் என்ற ஆசிரியர். மேலே கூறிய அறிவாய்வுகளில் ஈடுபடும்போது குழவி தான் எடுத்த வேலையில் வெற்றி வரும் வரை விடா முயற்சியோடு உழைத்தல் வேண்டும். இந்த விடா-

முயற்சியோ "நான் செய்து முடிப்பேன்." என்று முந்தும் தன்னெடுப்பு என்னும் இயற்கைச் செயனிலையையும், அதற்கு ஏற்ப எழும் பெருமிதம் என்ற மெய்ப்பாட்டினையும் பொறுத்துள்ளது எனலாம். குழவி தனது கொள்கை, இடத்திற்குப் பொருந்தாதபோது, வேறு பொருத்தமானது ஒன்றைத் தேடவேண்டும். ஈதே தன்னொடுக்கம் என்ற இயற்கைச் செயல்நிலையில் காணக் கிடப்பதாம். புதுமை கண்டு ஆராய்ச்சி செய்ய முற்பட வேண்டுமானால், விடுப்பம் என்ற இயற்கைச் செயனிலை தக்க அளவில் விளங்குதல் வேண்டும். இவ்வாறு இயற்கையாக இவை அனைத்தும் அமைதலால், தலை முறை தலை முறையாக ஒரு குடியில் அறிவாளிகள் பிறப்பதும் வியப்பன்று. நினைவு, உணர்வு, தன்னொடுக்கம், தன் எடுப்பு, விருப்பம் என்ற இயற்கை அமைப்புகள் பயிற்சி பெற்றால் மட்டுமே அறிவு வளரும் என்பது தெளிவாகிறது. கல்வியாளருடைய பிள்ளை இந்த இயற்கை அமைப்புகளைப் பெற்றாலும், சேர்வாரோடு சேர்ந்து செயற்கை மணத்தால் வேறு வகையில் வாழக்கையை நடத்தித் தான் பெற்ற இயற்கை அமைப்புகளைப் பயன் படுத்தாது துரு ஏற விட்டு அழிக்கும்போது அந்த அறிவாளன் பிள்ளையும் அறிவிலியாக அழிகின்றான்.

## IV. பொதுநிலை

போது :— இந்த ஆய்வுகள் பொதுநிலை அளவைகளாக விளங்கினால் அன்றி எல்லாக் குழவிகளையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குப் பயன்படா. இந்த ஆய்வுகளில் ஒருவர் காணும் மதிப்பினை மற்றோர் இடத்தில் நிகழும் ஆய்வின் மதிப்போடு ஒப்பிட்டு நோக்குமாறு, வயதோடோ, கல்லூரி வகுப்புக்களின் நிலையோடோ இயைபுபடுத்தி அறிஞர் வழங்கி வருகின்றனர்.

ஆகவே, இந்த ஆய்வுகள் ஒரே வகையான வயதுடையோர் அனைவர்க்கும் பொதுநிலையாக விளங்குவதனால் இவற்றைப் 'பொதுநிலை ஆய்வுகள்' எனலாம். இரண்டாவதாக, இவற்றின் வடிவமும் அமைப்பும் மாறாத நிலைமையில் அமைக்கப் பெற்று இருப்பதாலும் இவற்றைப் பொதுநிலை ஆய்வுகள் என வழங்கலாம். மூன்றாவதாக, "இந்த ஆய்வுகளை எவ்வாறாகப் பயன் படுத்துவது? வரும் விடைகளை எவ்வாறு மதிப்பிடுவது?" என்ற இவற்றையும் ஆசிரியன்மார் அனைவர்க்கும், குழவிகள் அனைவர்க்கும் பொதுவான நிலையில் அமைத்துள்ளமை-யாலும் இவற்றைப் பொதுநிலை அளவை எனலாம்.

மதிப்பு ஒற்றுமை :— பல்கலைக் கழகங்களில் உயர்நிலைத் தேர்வுகளில் விடைத்தாள்களை ஒருவருக்கு இருவர் மதிப்பிடக் காண்கிறோம். இவ்வாறு மதிப்பிடுவதனை ஒப்பிட்டு நோக்கும் போது, ஒருவர் நூற்றுக்கு நூறு கொடுக்கும் இடத்தே மற்றொருவர் அறுபது கொடுக்கக் காண்கிறோம். இத்தகைய நிலைகளைக்கண்டு மாணவர்கள் "மனைவி ஊடிநின்ற காலத்தில் இந்த ஆசிரியர் இவ்வாறு குறைவாகமதிப்பிடவந்தார்போலும்!" என எள்ளி நகையாடுவது உண்டு. அவ்வாறு அன்றி, எல்லோரும் ஒரே வகையாக மதிப்பிடக்கூடிய வகையில் இந்த அறிவாய்வுகளை நடத்துமாறு ஆராய்ச்சிவாணர் வகைசெய்து உள்ளனர்.

புது ஆய்வுகள் :— இந்த ஆய்வுகளிற் பல "இங்குக் கூறியது உண்மையானால் அதன் எதிர் காக்கைப் புள்ளியை இடுக; தவறானால் அதன் எதிர் சுழி இடுக" என்று கூறி விடை கேட்பனவாம். இவற்றைச் (i) "சரி - தப்பு ஆய்வுகள்" (True False Test) என வழங்கலாம். இவற்றையே வினாவாக அமைத்து "ஆம்," "இல்லை," "தெரியாது," என்ற விடை-

களில் ஒன்றை எழுதுமாறு கூறும் ஆய்வுகள் சில. (ii) "ஆம்-இல்லை - ஆய்வுகள்" (Yes or No test) என இவற்றை வழங்கலாம். "காக்கை வெள்ளை" "வானம் நீலம்" என்பன போன்றவை முதல்வகையைச் சேர்ந்தன. "காக்கை வெள்ளையா"? "வானம் நீலமா"? என்பன போன்றவை இரண்டாம் வகையைச் சேர்ந்தவை. ஒரு பொருளைப்பற்றிய பல வாக்கியங்களைத் தந்து, அவற்றில் பொருத்தமானதை மட்டும் அடியாது விட்டு, மற்றவற்றை அடித்துவிடுமாறு அமைக்கப்-பெறும் ஆய்வுகள், (iii) "போறுக்கு ஆய்வுகள்" (Multiple choice test) எனப் பெயர் பெறும். "அவுரங்கசீபு அக்பரது பிள்ளை - அவுரங்கசீபு பாண்டிய அரசர் - அவுரங்சீபு மொகலாய குடும்பத்தினர்" இவ்வாறு வருவன இதற்கு எடுத்துக் காட்டாம். 'சென்னை இந்தியாவில் உள்ளது; லண்டன் இங்கிலாந்து; பெர்லின் ஜெர்மனி; டோக்யோ ஜப்பான்' என்று இவ்வாறு இணை இணையாக இயைபு பெறுவனவற்றில், நகரங்கள்போல் ஒரு புறத்து உள்ளனவற்றை ஒரு கோவை-யாகவும், நாடுகளைப்போல மறுபுறத்துள்ளவற்றை வேறொரு கோவையாகவும் அமைத்து,

| | |
|---|---|
| சென்னை — ஜப்பான் | பெர்லின் — இந்தியா |
| லண்டன் — ஜர்மனி | டோக்யோ — இங்கிலாந்து |

என்பதில்போல அந்த அந்த நகரத்திற்கு ஏற்ற நாடு நேர் நேராக வரிசையாக வாராதபடி முறைபிறழ்ந்து கலவை நிரல் நிறையாகவர நிறுத்திக் குழவிகளிடம் கொடுத்து, அந்த அந்த நகரத்திற்கு ஏற்ற நாட்டினைக் குறித்துச் 'சென்னை—இந்தியா' என்பதுபோல இணைத்து அமைக்குமாறு கேட்டுக்கொள்வதே (iv) "இணைக்கும் ஆய்வாம்" (Matching Test). "வானம் நீல நிறம்," "பால் வெள்ளை நிறம்" என்ற சொற்றொடர்களில் "நீலம்," "வெள்ளை" என்ற சொற்றொடர்களை எடுத்துவிட்டு எடுத்த இடத்தில் தக்க சொற்களை இட்டு நிரப்புமாறு "வானம்—

நிறம்; பால்—நிறம்'' என்பதில் போலக் கூறுவது மற்றொரு வகை ஆய்வு. இவ்வாறு சொற்றொடரில் ஒரு சொல்லை விட்டுவிட்டால் அதனைப் பொருத்தமாக நிரப்புமாறு எழும் ஆய்வுகளை (v) "நிரப்பு ஆய்வுகள்'' (Completion tests) என வழங்கலாம். "பூனை, நாய், ஆடு, மான், கிளி'' என்பன-வற்றில் விலங்குகள்போல் இனம் உள்ளவற்றையும், அவற்றிடையே விலங்கல்லாத பறவையாகிய கிளி போல இனம் அல்லாதவற்றையும் ஒருங்கு சேர்த்துக் கொடுத்து, இன-மல்லாதவற்றை அடித்து விடுமாறு கூறும் ஆய்வுகள் "இன ஆய்வுகளாம்'' (Classification Test). எந்தப் பாடத்திலும் படித்தவை அனைத்தையும் இத்தகைய பலவகை ஆய்வுகளினால் ஆராய்தல் கூடும். இவற்றை மதிப்பிடுவதில் வேற்றுமை எழுவதற்கே இடம் இல்லை. குழவிகள் எழுதிய எழுத்துக்களின் மேல் பாய்ச்சிய மின்சார - காந்த சக்தியாலேயே இந்த ஆய்வுகளை மதிப்பிடும் எந்திரமும் அமைந்துள்ளது என்றால் இந்த மதிப்பீடு ஆய்வாளரின் அகநிலையைப் பொறுத்ததாகாமல் விடைகளின் புறநிலை உண்மையையே பொறுத்திருக்கின்றது என்பது தெளிவாகின்றதன்றோ? இவற்றைப் பொதுநிலை ஆய்வுகள் எனக் கூறுவதில் என்ன தடை உண்டு?

முரண்பாடாமை :- இந்த ஆய்வுகள் இவ்வாறு பொதுநிலை ஆய்வுகளாக வேண்டுமானால், இரண்டு சிறப்பியல்புகள் இவற்றிடையே தோன்றுதல் வேண்டும். முரண்படாமை, (Reliability) தகுதியாற்றல் (Validity) என்பனவே இந்தச் சிறப்பியல்புகள். ஒரு முறை வகுப்பில் கணக்குத் தேர்வு ஒன்று நடத்திய ஆசிரியர் வகுப்பில் மூவரே தேறியது கண்டு, மூன்று நான்கு நாள் பொறுத்து நடத்திய தேர்வில் வேறொரு மூவர் தேரக் காண்கின்ற காட்சியை எந்தப்பள்ளிக்கூடத்திலும் இன்று காணலாம். முன்னுக்குப் பின் முரண்பட்டன்றோ, இந்த ஆய்வுகளின் முடிவுகள் தோன்றுகின்றன. நேற்று அறிவாளி,

இன்று முட்டாளாகும் வியத்தகு கதை அன்றோ இவ்வாறு விளங்குகிறது? இத்தகைய ஆய்வுகளை எவ்வாறு நம்புவது? பினே கண்ட ஆய்வுகள் அத்தகைய முரண்பாடு ஒன்றும் இல்லாத முடிவினைச் சுட்டிவருவதனை ஆராய்ச்சிவாணர் ஒரு முகமாகப் புகழ்கின்றனர். இந்த ஆய்வுகளை ஒரே கூட்டத்தினரிடையில் இடையிட்டு இடையிட்டுப் பலமுறை பயன்படுத்தி இந்த முரண்படா இயல்பினை ஆராய்ந்து அறிஞர்கள் துணிந்துள்ளார்கள். இந்த ஆய்வுகளை முழுதும் பயன்படுத்தி, ஆய்வும் மறித்து ஆய்வும் ஆக நடத்தியும் கண்டனர். 'பாதி ஆய்வுமுறை' யைக் கையாண்டு, ஆய்வில் வரும் ஒற்றைப்படை எண்ணுள்ள கேள்விகளை ஒரு முறையும், இரட்டைப் படை எண்ணுள்ள கேள்விகளை மற்றொரு முறையும், ஒரு கூட்டத்தினரிடையே இடையிட்டுக் கொடுத்து ஆராய்ந்தார்கள். எல்லா இடங்களிலும் முரண்பாடின்மை விளங்குவதனை அறிஞர்கள் கண்டு தெளிந்தார்கள். இன்று ஆராய்ந்த குழவியினைச் சில திங்கள் கழிந்தபின் சென்று ஆராய்ந்தால், அதன் அறிவு இதற்குள் வளர்ந்திருக்கலாம்; இருப்பினும் ஒரு குழவிக்கும் மற்றொரு குழவிக்கும் இடையே இருந்த வரிசை முறை பின்னும் தோன்றும் அன்றோ? முதலாக வந்த குழவி பல முறையும் முதலாக வரலாம். இத்தகைய முரண்பாடின்மை நூற்றுக்கு நூறாக விளங்குதற்கு இடம் இல்லை. மறிவினை போன்றவற்றில் மட்டுமே முதலில் நிகழ்ந்தது போலப் பின்னும் பின்னும் நிகழும் நிலைமையாகிற முரண்பாடின்மை நூற்றுக்கு நூறாக விளங்கும். ஆகையால், "நம் ஆய்வுகளில் இந்த முரண்பாடின்மை நூற்றுக்கு 75 ஆக விளங்கினால் போதும்" என நாம் அமைதி அடையவேண்டி இருக்கிறது. இதனால் ஒருவரோ, பலரோ, பல காலத்தில் நடத்தும் ஆய்வுகளையும் ஒன்று போலக் கொண்டு பொதுநிலையாகக் காண இடம் ஏற்படுகிறது.

தகுதியாற்றல் :— இரண்டாவதாக இருக்க வேண்டிய சிறப்பியல்பு "தகுதி ஆற்றல்" என்பதாம். 'எதனை ஆராய்வதற்கு' என ஓர் ஆய்வு எழுகிறதோ அதனை ஆராயும் தகுதியும், ஆற்றலும் வாய்ந்ததாக அந்த ஆய்வு விளங்க வேண்டும். கணக்கறிவை ஆராய எழுந்த ஆய்வுகள் குழந்தைகளுக்கு விளங்காத நடையில் எழுதப் பெற்றிருந்தால், குழவிகள் அனைவரும் அந்த ஆய்வில் தோல்வியடையலாம். ஆனால், அந்த முடிவு குழவிகளின் கணக்கறிவை அளந்த முடிபாகாது; மொழி நடை உணர்வை அளந்த முடிவே ஆகும். எனவே, கணக்கறிவை ஆயத் தகுதி ஆற்றல் பெற்றதாக அந்த ஆய்வு விளங்கவில்லை என்பதாயிற்று. குழவிகளின் வயது ஏற ஏற, சில ஆய்வுகளைப் பலமுறை பயன்படுத்திய போதும் குழவிகளுக்கிடையே ஒரே வகையான வரிசை முறையையே அவ்வாய்வுகள் சுட்டிவருமானால், வளர்ச்சி முறையின் படியே ஆய்வின் தகுதியாற்றல் வலியுறுத்தப் பெறுகிறது எனலாம். விரல் கொண்டு தட்டும் திறம் வயதிற்கேற்ப வளர்ந்து வருவது ஒன்றும். குழவிகளிடையே இந்த ஆய்வு ஒரே வகையான முறையினைச் சுட்டிவருகின்றது எனலாம். என்றாலும், 'நாம் விரும்பும் தகுதி ஆற்றல் பெற்றது இந்த ஆய்வு' எனச் சொல்வதற்கு இல்லை. அறிவுநிலைபோலத் தசை இயக்கநிலையும் வயதிற்கு ஏற்ப வளர்ந்து வந்தாலும், அறிவுநிலைக்கும் தசையியக்க நிலைக்கும் நேரானதொரு தொடர்பும் இல்லை. ஆதலின், இங்கே விரல் தட்டும் திறனை ஆராயும் ஆய்விற்கு அறிவுநிலையை அளக்கும் ஆற்றல் இல்லை எனலாம்.

தொடர்பு ஒற்றுமை :— நாம் அளந்துவரும் இரண்டு வேறு நிலைகளிடையேயும் நேரே ஒரு தொடர்பும் விளங்காது போனாலும், வரையறுத்துக் கூறத் தக்க அளவில் அவை இரண்டும் ஒரே வகையாகத் தொடர்ந்து வருதல் கூடும்.

பொதுவான அறிவுநிலை ஆய்வில் சிறந்து விளங்கும் குழவிகள் சிறப்பான சில தொழில்களில் சிறந்து விளங்கக் காண்கின்றோம். இத்தகைய தொடர்பு விளங்கினாலும், மேலே காட்டிய தசை இயக்கநிலைபோல அறிவுநிலையோடு ஒரு தொடர்பும் இல்லாத இடங்களில், இத்தகைய கணக்கொற்றுமை இருப்பது மட்டும் கண்டு மயங்குதல் ஆகாது. ஆனால், 'அறிவுநிலையோடு தொடர்பு உண்டா இல்லையா?'' என அறுதியிட்டுக் கூறக்கூடியநிலை எல்லா இடங்களிலும் தெளிவாக விளங்குகிறது எனக் கூறுவதற்கு இல்லை. இப்போது இருக்கிற நிலையில் "சராசரியான பொது நிலையிலிருந்து மிகமிக வேறுபடும் குழவிகளை ஐயத்திற்கு இடமின்றி வேறு பிரித்து அறிய மட்டுமே இந்த ஆய்வுகள் பயன்படுகின்றன." எனலாம். 'சராசரி நிலையில் விளங்கும் குழவிகளை அறுதியிட்டு முதல் இரண்டு மூன்று என முறைப்படுத்தக் கூடிய நிலைமைக்கு இந்த ஆய்வுகள் வரவில்லை.' என்பதனை ஒப்புக் கொள்ளுதல் வேண்டும்.

## V. புதுமுறை ஆய்வுகள்

கட்டுரை ஆய்வு :— அறிவுநிலையை ஆராயும் ஆய்வுகளே அன்றிப் பொதுவாகப் படிப்புநிலையை ஆராயும் ஆய்வுகளும் வந்துள்ளன. இவற்றிற்கும் அடிகோலியவர் பினே என்பவரே ஆம். மேலே பலவகையான ஆய்வு முறைகளைக் குறிப்பிட்டு அவை பல பாடங்களையும் ஆராய்வதற்குப் பயன் படும் என்று கண்டோம். அவற்றைப் 'புது முறை ஆய்வுகள்,' எனவும் 'புது முறைத் தேர்வுகள்' என்றும் பலர் வழங்குகின்றனர். பினே என்பவர் ஓதும் முறையை ஆய்வது, கணக்கறிவை ஆய்வது, கட்டுரை வன்மையை ஆய்வது என மூன்று வகையாகப் பொதுப் படிப்பினை ஆராயத் தொடங்கினர். கட்டுரை

வன்மையை ஆராய்வது இன்னமும் எளிதாகத் தோன்றவில்லை. 100க்கு ஒன்று, நான்கு, பதின்மூன்று, இருபத்தேழு, முப்பத்தினுறு, நாற்பத்தைந்து என்றெல்லாம் இம்மி விடாது கணக்குப் பார்த்து மதிப்பிடுவது இயலாதது ஒன்றும். கட்டுரைகளை அவ்வாறு 100 இனமாகப் பிரிக்க முடியுமானுலும் அவ்வளவு வேற்றுமையையும் நம்மனம் உணர்வது அருமையே ஆம். 6, 8 இனங்களாகக் கட்டுரைகளை ஆராய்ந்து மதிப்பிடுவது எளிதாகலாம். ஆகையால், அவ்வாறு செய்வதே சிறந்த முறையாம்.

ஓதும்முறை ஆய்வு :— ஓதும் முறையை (Reading) ஆராய்வது அருமை அன்று. இங்கு மூன்று வேறு ஆற்றல்கள் விளங்குகின்றன. ஒன்று அச்சில் காணும் அடையாளங்களை ஒலிகளாக உணர்வது. மற்ருென்று ஓதியதன் பொருளை உணர்வது. மூன்ருவது பிறருக்குப் பொருள் தெளிவாகப் புலனுகுமாறு உரக்கப் படிப்பதாம். பலார்ட் (Ballard) என்பவர், "158 தனிச் சொற்களை ஆங்கிலத்தில் அச்சிட்டுக் கொடுத்துள்ளதனைக் குழவிகள் படித்து வரும்போது, ஒரு நிமிஷத்திற்குள் சரியாக ஒலித்துவரும் சொற்களின் எண்ணிக்கையைக் குறித்துக்கொண்டே வருவோமானுல் இந்த எண்ணிக்கை வயதுக்கு ஏற்ப மிக்குவரும்." எனக் காட்டியுள்ளார். குழவிகளிடத்தே உள்ளுக்குள் படிப்பதற்கும் உரக்கப் பட்டிருப்பதற்கும் வேற்றுமை இல்லை; ஆதலின், இவ்வாறு உரக்கப் படிககும்போது ஆய்வதும் படிப்பாற்றலையே ஆய்ந்து விளக்குகின்றது எனலாம். இதனுல் படிப்பதனைத் தனிப்பாடமாக வைத்துக் கற்பிக்கவேண்டும் என்ற உண்மை வெளியாயிற்று. இண்டாவதாகப் பொருள் உணரும் ஆற்றலை அளந்தறியப் பலார்ட் என்பாரே ஒரு கதையினை ஒரு பாடமாக எழுதியுள்ளார். அதனை மூன்று நிமிஷத்திற்குள் குழவி படித்து

முடித்ததும் மூடிவைத்து விடவேண்டும். அதே பாடத்தில் ஊகத்தால் மட்டும் நிரப்ப முடியாத சில சொற்களை நீக்கிக் கோடிட்டு அச்சடித்த தாளைக் குழவியின் கையில் கொடுத்தல் வேண்டும். குழவி, கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்து நிரப்புதல் வேண்டும். சரியாக நிரப்பிவரும் சொற்களின் எண்ணிக்கை வயதிற்குத் தக்கபடி ஏறிக்கொண்டே வருகின்றதாம். மூன்றாவதாகப் பிறருக்குப் பொருள் விளங்கப் படிப்பதனை ஆராய்தல் வேண்டும். ஆனால், இவ்வாறு அளந்தறிய இதுவரையும் அறிஞர்கள் ஒரு வழியையும் கண்டார்கள் இல்லை.

கணக்காய்வு :— கணக்கறிவையும் இவ்வாறு பொதுநிலையில் ஆராய ஆய்வுகள் எழுந்துள்ளன. பலார்ட் என்பார் கண்ட ஆய்வுகள் இந்த வகையில் சிறந்து விளங்குகின்றன. இந்த ஆய்வுகளின் பயனாகச் சில உண்மைகளைப் பலார்ட் விளக்குவது குழவிகளுக்குக் கணக்கினைக் கற்றுக் கொடுக்க வருவோர்க்குப் பெரிதும் பயன் படும். பெருக்கல் வாய்பாடு போலக் கூட்டல் வாய்பாட்டினையும் கற்பித்தால் மட்டுமே விரல்விட்டு எண்ணும் வழக்கம் ஒழிந்துபோக விரைந்து கணக்குப் போடுவது இயலுவதாகும். கழித்தல் முறையில் கடன் வாங்கிக் கழிக்கும் முறையை விடக் கழித்தலைக் கூட்டலாகப்போடும் முறையே சிறந்ததாம். பெருக்கல் வாய்பாட்டினை ஒன்றிரண்டு என முறையாக உருப் போடுவதால் திடீர் என ஒரு பெருக்கல் போடும்போது, ஒன்றிலிருந்து ஒப்புவித்துக் கொண்டு வரவேண்டி இருப்பதால், இந்த முறையை விட்டொழித்துப் பெருக்கல் கணக்கைப் போட்டு வரும்போதே இந்த வாய்பாடு மனத்திற் பதிந்து வருமாறு செய்தல் சிறந்ததாம். 'உலக நடையைக் குழவிகள் அறிய வேண்டும்.' என்ற புதிய கொள்கையின்படி கணக்குகள்

அனைத்தும் வாங்கல் விற்றல் முதலியனவாக வருகின்றனவே அன்றி வெற்று எண்களின் (Abstract numbers) கணக்கே பள்ளிகளில் வழங்காமையைக் கண்ட பலார்ட் அத்தகைய பொதுநிலை அறிவும் வளரவேண்டி அந்தக் கணக்குகளையும் குழவி போட்டுப் பழகுதலின் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றார். கீழ்நிலைப் பாடங்களைக் குழவிகள் மறந்து போகாதபடி அவ்வப்போது அவற்றிற்குத் திருப்பித் திருப்பிக் கொடுத்துப் பழக்குதல் வேண்டுமாம். பாடபுத்தகம் இருக்க அதிலுள்ளவற்றையே கற்பலகையில் எழுதி வீண்காலம் போக்குதலையும் அவர் வெறுக்கின்றார். தனித்தனியே குழவிகள் தத்தம் வேகத்திற்கு ஏற்பக் கணக்குப் போட்டுச் செல்லுதல் வேண்டுமாம். குழவிகளே பிற குழவிகளின் கணக்குகளைச் சரிபார்த்து வரப் பழகுதல் வேண்டுமாம். மனக்கணக்கிலும் குழவிகள் பழகுதல் இன்றியமையாததாம்.

பாடம் — கல்வி :— தனித்தனிப் பாடமாக ஆராயும் ஆய்வினைப் பாட ஆய்வு (Subject test) என வழங்கலாம். அனைத்துப் பாடங்களையும் ஒன்றாகச் சேர்த்துக் 'கற்றது எவ்வளவு'? என ஆய்வதனைக் கல்வி ஆய்வு (Achievement Test) என வழங்கலாம். இந்த ஆய்வுகள் அனைத்தும் மேலே கண்ட "சரிதப்பு ஆய்வு" முதலியனவாகவே விளங்குகின்றன. 'பொது நிலைக்கு' எனக்கூறிய இயல்புகள் இவற்றின் இடையேயும் பெரும்பான்மையும் விளங்கக் காண்போம். ஆனால், ஒரு வேற்றுமை மட்டும் உண்டு. அந்த ஆய்வுகள் வயதிற்கு ஏற்ப அமையாமல் வகுப்பிற்கு ஏற்ப அமைந்து இருக்கக் காண்போம்.

முன்னறிவு அய்வு :— இவையே அன்றி இசையாற்றல் முதலிய தனித்தனித் திறமைகளை ஆராயும் ஆய்வுகளும்

(Special abilities test) உள்ளன. இவற்றில் சில 'குழவி எவ்வாறு வளரக்கூடும்?' என முன்னரே நமக்குக் காட்டுவனவாம். பின்னே எந்தத் துறையில் குழவி சிறந்து விளங்கக் கூடும் என இவை காட்டுகின்றனவாம். இவ்வாறு பின்னைய வளர்ச்சியினைப் பற்றி முன்னரே அறிவு கொளுத்துதலின் இவற்றை முன்னறிவு ஆய்வுகள் (Prognastic tests) எனலாம். இந்த முன்னறிவாய்வுகள் குழவியின் தகுதிப்பாட்டினை ஆராய்ந்து எந்தத் துறையில் அக்குழவி முன்னுக்கு வருவதற்கு இடம் இல்லை என உணர்த்துகின்றன. சந்த உணர்வும் இன்றிச் செவிடாய்க் கிடக்கும் குழவி இசையில் சிறந்து விளங்குவது எங்ஙனம்? ஆதலின், இசைப் பயிற்சிக்கு முன்னரே 'சந்த உணர்வு உண்டா? இல்லையா? என ஆராய்ந்தறியும் ஆய்வுகள் புற்றீசல் போலக் கிளம்பியுள்ளன.

பயன் :— கல்வி ஆய்வு பாட ஆய்வு முதலியவை ஆய்வுகள் எனக்கண்டோம். 'அந்த அந்த ஆய்வுகளில் குழவி ஏன் சிறந்து விளங்கவில்லை?' என்ற உண்மையையும் அவை விளக்குகின்றன. 'ஒரு பாடத்தில் குழவிகள் கண்ட அருமைப்பாடுகள் யாவை?' என்பது இந்த ஆய்வுகளால் நன்கு விளங்கும். நோயின் காரணத்தை அறிந்த மருத்துவன் நோயை எளிதில் தீர்ப்பது போலக் 'குழவியின் குறை யாது?' என உணர்ந்த ஆசிரியன் அந்தக் குறைப்பாட்டினை எளிதில் நீக்கமுடியும் அன்றோ? ஆகவே, இந்த ஆய்வுகள் குறைப்பாட்டின் காரணம் காணும் ஆய்வுகளாகவும் தோன்றுகின்றன. இவ்வாறு "ஆம்" "உண்மை" என ஒரு சொல்லில் விடைகூறிப் பழகினால் குழவி தன் கருத்தினைக் கோவை செய்து கட்டுரையாக எழுதி விளக்கும் ஆற்றலை வளர்ப்பது எங்ஙனம் கூடும்? ஒரு பொருளைப் பற்றிய பல குறிப்புக்களையும் தேடிப் பொறுக்கி எடுத்துக் கோவை செய்து எழுதிவரும் வழக்கத்தினையும்

பழக்கத்திற்குக் கொண்டு வந்தால், இத்தகைய கேடு ஒன்றும் தோன்றுவதற்கு இல்லை.

## IV. படியாதவர்க்கு ஓர் ஆய்வு

படியாதவர்:- பினே கண்ட ஆய்வுகள் படிக்கத் தெரிந்தவர்களுக்கே ஆம். எழுதப் படிக்க அறியாதவர்களையும், செவிடாய் ஊமையாய் உள்ளவர்களையும் ஆராய்வது எங்ஙனம்? அவரவர்களுடைய செயல்களைக் கொண்டு தான் அவரவர்களுடைய அறிவு நிலையை ஆராய்தல் வேண்டும். "அறிவுச் செயல் ஆய்வுகள்" (Perfomance test) என்று இத்தகைய ஆய்வினை வழங்கலாம். பல வடிவமான மரத்துண்டுகளை ஒரு மரத்துண்டினின்றும் வெட்டி எடுத்து இத்தகையோரின் எதிரே வைத்து வெட்டிய அத்துண்டுகளை மறுபடியும் அந்த மரத்துண்டில் எவ்வாறு பதியவைக்கின்றார்கள் என்பதனைப் பார்த்துக் கொண்டே இருந்தால் பொருத்தமுணரும் அறிவு எவ்வாறு அவர்களிடையே வளர்ந்து உள்ளது என அறியலாம். "ஒவ்வொரு துண்டினையும் பொருத்திவைக்க எத்துணை நேரம் ஆகிறது? எத்துணை முறை தட்டித் தவறி வருகின்றனர்?"— இவற்றை எல்லாம் குறித்துவைத்து ஒப்பிட்டுப் பார்த்தால் வயதிற்கு ஏற்ப இவை மாறி வருவதனையும் காண்போம். இந்தப் பொதுநிலை அளவுகோல் கொண்டு எல்லாக் குழவிகளின் அறிவு நிலையையும் அளத்தல் கூடும்.

## VII. கூட்டத்திற்கு ஓர் ஆய்வு

கூட்டம் :— இவ்வாறு தனித்தனியாக ஒவ்வொருவர் அறிவையும் அளந்து பார்ப்பது என்றால் முடியுமா? சென்ற உலகப் போரின்போது படையாளர்களை அமெரிக்கத் துரைத்-

தனம் திரட்டியபோது சிறு படைத்தலைவர்களாக விளங்கக் கூடிய அறிவாற்றல் படைத்த தலைவர்களைத் தேர்ந்து எடுப்பதற்காக அறிவுநிலை ஆயவினையே பயன் படுத்தினார்கள். ஆனால், தக்கபடி அதனை மாற்றிக் கொண்டார்கள். அச்சடித்த சில தாள்களை எல்லோரிடமும் கொடுத்தனர். ஓர் ஏட்டில் வட்டம், முக்கோணம், நாற்கோணம் என்ற வடிவுகள் இருந்தன. இவற்றை ஒன்றாகச் சேர்த்து வைக்கவோ பிரித்து வைக்கவோ, வேறு வடிவாக மாற்றவோ வாயால் ஒரு முறை கூறினால் அதன்படி செய்தல் வேண்டும். ஆதலின், சொல்வதனைக் கருத்தாய்க் கேட்டிருத்தல் வேண்டும். மற்றோர் ஏட்டிலே உலக அறிவைப் பற்றிய பல கணக்குகளை அச்சடித்திருப்பார்கள். மூன்றாம் ஏட்டில் உலகத்துப் பொருள்களைப் பற்றிச் சில கேள்விகள் இருக்கும். "மின்னோட்டத்திற்குச் செப்புக்கம்பிகளைப் பயன் படுத்துவது ஏன்? மின்னோட்டம் நன்றாக ஓடும் என்றா? செப்பின் விலை குறைவு என்றா? செப்பு நம் ஊரில் அகப்படும் என்றா? இந்த மூன்று கருத்துக்களில் எந்தக் கருத்துச் சிறந்தது?" என இவ்வாறு ஒவ்வொரு செய்திகட்கும் மூன்று மூன்று காரணங்களைக் காட்டி அவற்றில் 'சிறந்தது இது' என எழுதச் சொல்வார்கள். சொற்றொடர்களிலுள்ள சொற்களைத் தலைதடுமாற மாற்றி அமைத்து மற்றோர் ஏட்டில் அச்சடித்திருப்பார்கள். "வானம் இருக்கும் பச்சை காலையில் ஆக நிறம்" — "பால் பசுவின் வெள்ளை இருக்கும் ஆக" — என்று இருக்கும் தொடர்களிலுள்ள சொற்களைப் பொருள் படுமாறு, "காலையில் வானம் பச்சை நிறமாக இருக்கும்" — "பசுவின் பால் வெள்ளையாக இருக்கும்," என்பனபோல மாற்றித் தொடர்ச்சியாக எழுத வேண்டும். எழுதியபின் 'அவை உண்மையா? பொய்யா?' என்பதனையும் குறித்தல் வேண்டும். "காலை வானம் பச்சை நிறமாக இருத்தல் பொய்" என்றும் எடுத்துக்காட்ட

வேண்டும். பிறிதோர் ஏட்டில் சில ஓவியங்கள் வரையப் பட்டிருக்கும். சிலவற்றில் கால் முதலிய உறுப்புக்கள் குறைந்தும் மிகுந்தும் கிடக்கும். மூன்று கண்ணிருந்தால் ஒரு கண்ணை அழித்து விடவேண்டும்; கையில் நான்கு விரல்கள் மட்டுமே இருந்தால் ஐந்தாம் விரலை எழுதவேண்டும். இவ்வாறு குறையை நிரப்பியும் மிகுதியை அழித்தும் அந்த ஓவியங்களைச் சீர்திருத்தவேண்டும். இந்த விடைகளை எல்லாம் நன்றாய் அறிந்த பின் முன்சொன்னபடியே, அவ்வவர்களுடைய அறிவை அளந்து கொண்டனர். போரில் வெற்றியைக் காண்பதற்கு முன்னர், அமெரிக்க நாட்டினர் இந்த ஆய்வு முறையில் வெற்றியைக் கண்டனர்.

## VIII. அளவையின் குறைபாடு

முழுப்பயன் இல்லை :— ஒருவனுடைய அறிவுநிலையைப் பொதுவாக அறிய இந்த அளவைகள் பயன்படுமே அன்றி, ஒருவனுடைய அறிவின் சிறப்பியல்பை அறிய இவை ஒரு சிறிதும் உதவுவதில்லை. அறிவினை இந்த அறிவளவைகள் கொண்டு நீட்டியோ, முகந்தோ, எண்ணியோ, நிறுத்தோ அறிய முடியாது. இந்த அளவையின் பயனாக அறிவில் குறைந்தவன் என ஒதுக்கப்பட்டவன் அந்தக் குறை அறிவிற்கு ஏற்றது ஒரு வேலை அகப்பட்டால், அதிலே தலை சிறந்தவனாய் எல்லோராலும் ஏத்தெடுக்கப் பெறும் பெருஞ் செல்வனாய் உலகில் வாழ்தல் கூடும். அறிவாளி என இந்த அளவைகள் வழியாகப் புகழப் பெற்றவன் தன் அறிவுநிலைக்கு ஏற்ற வேலை அகப்படாமையால் அவ்வாறு புகழ் பெறுமலும் போகலாம்.

பழக்கம் வேண்டும் :— அன்றியும், மேலே நாம் காட்டிய-படி இந்த அளவைகளிற் பழகித் தேர்ந்தவர்களே இவற்றைக்

கையாள வேண்டும். குழவிகளிடம் சென்று தக்க கேள்வி கேட்டு விடை பெறுவதென்றால் அது ஓர் அரிய செயலே ஆகும். அவற்றின் மனத்தில் அச்சமும் நாணமும் எழாதபடி பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். நம்முடைய கேள்விகளைக் குழவிகள் அறிந்து கொள்கின்றனவா என்றும் ஆராய்தல் வேண்டும். குழந்தைகள் வேறு நினைவாக இருந்தார்களானால் அந்த நினைவிற்கு ஏற்ற விடையை அளித்து விடுவர். அன்றியும், அவற்றின் மனம் களைத்துப்போனாலும், மனம் குழம்பிப்-போகும். ஆதலின், மிக நீண்ட நேரம்வரை கேள்விகளைக் கேட்டு குழவிக்குத் தலைநோய் வரும்படி செய்தலும் கூடாது. ஆதலின், இடம் பொருள் மனநிலை முதலியவற்றை ஆராய்ந்து கேள்வி கேட்கப் பழகியவர்கள் இந்த அளவைகளைக் கையாண்டால் மட்டுமே சிறிதளவேனும் பயன் கிடைக்கும்.

"அறிவுக்கு அழிவில்லை ஆக்கமும் இல்லை.
அறிவுக்கு அறிவல்லது ஆதாரம் இல்லை.
அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு
அறைகின்றன மறை ஈறுகள் தாமே"

(திருமந்திரம் — 2358)

---

# 21. அறிவை அறிதல்

---

## I. குடிவழியும் - சூழலும்

க. அறிவுநிலை ஈவு மாறுமோ :- அறிவுவளர்ச்சி நரம்பமைப்பின் வளர்ச்சியோடு நெருங்கிய தொடர்புடையதாகும். அறிவு-வளர்ச்சியை நோக்கும்போது அவ்வளர்ச்சி குழவிநிலையில்

மிக விரைந்து நிகழ்ந்துவரக் காண்கிறோம். ஆனால், எல்லாக்குழவிகளும் ஒரே வேகத்தில் அறிவுநிலை வளரப்பெற்று விளங்குவது இல்லை. குழவிநிலை முடிந்தபின்னும் அறிவுநிலை வளர்ந்து கொண்டுதான் செல்கிறது. அறிவுநிலை ஈவு குழவியின் அறிவு விளக்கத்தை அளந்துகாட்டுகிறது. மாறாது விளங்கும் சுற்றுப்புறச் சூழலிடையே வாழ்ந்து வருகிற பொதுநிலைக் குழவியின் அறிவுநிலை ஈவு ஏறவும் குறையவும் செய்யாது ஒரே நிலையாக விளங்கக் காண்கிறோம். இயற்கையான அறிவாற்றலைத் தூண்டி வளர்ப்பன நம் சுற்றுப்புற நிலைகளே ஆம். இவை வளம் குன்றிக் கிடக்குமானால் அறிவுநிலை மிகக்குறைந்து கிடக்கும். அத்தகைய இடங்களில் சுற்றுப்புறச் சூழலைவளம்பெறச் செய்து குழவி அதன் முழுப்பயனையும் துய்த்து வருமாறு தூண்டினால், முன்னர்க் குறைந்து நின்ற அறிவுநிலை ஈவுபெரும்பான்மையும், மிகமிக உயர ஓங்கிவரக் காண்போம். இத்தகைய மாறுதல்கள் ஒரு சில நாள்களில் எழுவதில்லை. பல ஆண்டுகள் இத்தகைய வளம்பெற்ற சூழலிடையே குழவி மனதார வாழ்ந்து வந்தால் தான், இத்தகைய மாறுதலைக் காணுதல் கூடும். இவ்வாறு சீர்திருத்தக்கூடிய குழவி சிறுகுழவியே அன்றி, வயதான குழவி அன்றாம். சூழலின் வளப்பம், அறிவுநிலையைச் சிறப்புறச் செய்வது குழவிப் பருவத்தின் தொடக்கத்திலேயே ஆம். குழவிகள் எழுதும் ஓவியங்கள் முழுநிலையாக விளங்குவதிலிருந்து அவற்றின் அறிவுநிலையைத் தவறின்றி அறிதலும் கூடும்.

கருநிலை :— அறிவுநிலை விளக்கமுறாமல் பிற்பாடாக நிற்கும் குழவிகளிற் பல, பிறப்பிலேயே அவ்வாறு விளங்கக் காண்கிறோம். ஒரே கருவாய்ப் பிறக்கும் இரட்டைக்குழவிகள் (Identical Twins), இருகருவாய் பிறக்கும் இரட்டைக்

குழவிகள் என இரட்டைக் குழவிகளில் இருவகை உண்டு. இவற்றில் பின்னையவற்றினும் முன்னையவே பிறப்பு ஒற்றுமை உடையனவாம். ஆனாலும், இவற்றின் அறிவு நிலையைப் பின்னர் ஆராய்ந்து வந்தபோது அது ஒன்று போலவே இரண்டிடத்தும் விளங்கக் கண்டனராம். இதனால், சுற்றுப்புறச் சூழலே கருவினும் சிறந்தது என வழக்காட வருவாரும் உள்ளனர். பல வேறு குடும்பங்களிற் பிறந்த குழந்தைகளை வளர்ப்புப் பிள்ளைகளாக ஒருங்குவைத்து வளர்த்தும் ஆராய்ந்தனர். அப்போது சுற்றுப்புறச்சூழல் ஆறுவது வயதிற்குப் பின் அறிவு நிலையை எந்த வகையாலும் மாற்றுவது இல்லை என்பது வெளியாயிற்று. இங்கே எழும் வேற்றுமைகளுக்குக் கருநிலையே காரணம் என்பதாயிற்று. எனவே, குடிவழியாக வரும் ஆற்றலே அறிவின் வளர்ச்சிக்கு ஓர் எல்லை வகுக்கின்றது எனலாம். ஆனால், உள்ளுக்குள்ளே விளங்கும் இந்த ஆற்றல்கள் தக்கபடி வளம்பெற்று வருவதற்குக் குழவியின் செழுமையான வாழ்க்கை அனுபவங்கள் சிறந்த துணை ஆகலாம்.

மாற்ற அளவு :— சுற்றுப்புறச்சூழல் எவ்வளவுதான் சிறப்புநிலையுற்று உதவினாலும், அறிவுநிலை ஈவைப் பத்துக்கு மேல் ஏற்றமுடியாதாம். அறிவுநிலை ஈவு இவ்வாறு மாறாது விளங்குகிறது எனக் கூறியதனாலேயே குழவிப் பருவத்தின் தொடக்கத்தே விளங்கும் அறிவுநிலைகொண்டு, பின்னெல்லாம் அக்குழவி அங்ஙனமேயே விளங்கும் எனக் கூறமுற்படுதல் இயலாது. குழவிப்பருவத்தில் சுற்றுப்புறச்சூழல் அறிவுநிலை ஈவைக் குறைத்து வருவதுபோல அதனை மிகுதிப் படுத்துவது அருமையாம்.

உடலும் அறிவும் :- உடல்நிலை முழுதும் வன்மை குன்றி இருப்பதனாலும் அறிவு விளக்கம் தோன்ற இடமில்லாமற்

போகலாம். ஆனால், இவ்வாறு எங்கும் நிகழ்வதில்லை. தொழிற் கல்வி நிலையங்களிற் காட்டுவதுபோலக் கற்றது அனைத்தையும் செய்து காட்டுவதே கல்வி என்று கொள்கிற இடத்திலே-தான் இவ்வாறு நிகழ்கிறது. பிற இடங்களில் ஊமமற்ற குழவியும் அறிவிற்சிறந்து விளங்கக் காண்கிறோம். இவ்வாறு உடல்நிலைக்கேடு பொதுநிலைக்கேடாக இல்லாமல், குருடு முதலிய சிறப்புநிலைக் குறைபாடு காரணமாக அறிவுநிலை விளக்கமுறாது என எண்ணியவர்களும் உண்டு. ஆனால், இப்போது அத்தகைய குழவிகளும் அறிவு விளக்கம் பெறுமாறு ஊமைப் பள்ளிகளும், குருடர் பள்ளிகளும் எங்கும் எழுந்து விளங்குகின்றன. அறிவுநிலையிற் குறைபாடாய் விளங்கும் குழவிகளில் நூற்றுக்குப் பத்துவரை பிறக்கும்-போது உண்டாகிய கேடுகளாலேயே, குறைபாடுற்று வருந்தித் திகைக்கக் காண்கிறோம். அத்தகைய குழவிகளின் உடற்கூறு இயல்பும், தசை இயக்க ஆற்றலும் வளர்ச்சியுற்றால் அவற்றின் அறிவுநிலையும் வளர்ந்து வருமாம். அத்தகைய குழவிகளிற் பல வயதான பின்னரே அறிவாற்றலிற் சிறந்து விளங்கி வாழத் தொடங்குகின்றனவாம். சுற்றுப்புறச் சூழலைப்பற்றி நாம் முன்னர்க் கூறியதிலிருந்தே தக்க ஊட்டம் இல்லாமை-யாலும் அறிவுநிலை கெடும் என அறியலாம்.

## II. பிற்பாடான குழவிகள்.

கடவுட்புரட்சி :- அறிவுநிலையிற் பிற்பாடான குழவிகளைக் கற்பிக்க 19 ஆம் நூற்றாண்டிலிருந்து பெருமுயற்சிகள் நடந்து வருகின்றன. மாண்டிசோரி அம்மையார், பினே முதலியோர் இதற்கென வாழவந்தவர்கள். "லனார்க் ஹில் பள்ளி" (Lanark Hill School) முதலியன இந்தப் பிற்பாடருக்கென எழுந்தவை. இவர்களது கல்விமுறையால் எழுந்த நன்மைகளைக்

கடவுட்புரட்சி என்றே கூறவேண்டும். அத்தகைய குழவிகளை எள்ளி நகையாடாது அவற்றிற்கும் நன்கு கற்றுக்கொள்ளக் கூடியதோர் ஆற்றல் உண்டு என நம்புமாறு செய்தல் வேண்டும். தன்நம்பிக்கையே குறைபாடு அனைத்தினையும் போக்கும் இயற்கை மருந்தாம். பிற்பாடல்லாத பிற குழவிகளோடு ஒருங்குவைத்துப் பிற்பாடான குழந்தைகளைக் கற்பித்தால் அவற்றிற்குத் தன்நம்பிக்கை எழ இடமில்லை. இத்தகைய குழவிகள் ஒவ்வொன்றினையும் நன்கு ஆராய்ந்து குறைபாட்டின் இயல்பினைத் தெள்ளத்தெளிய அறிதல்வேண்டும். இக்குழவிகள் ஒவ்வொன்றன் இயற்கையான செயற்பாடுநிலையையும் கல்விகற்கும் முறையில் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். "அதனைச் செய்யாதே இதனைச் செய்யாதே" எனத்தடுத்து நில்லாமல் விரும்பியபடியே செய்து வருமாறு இக்குழவிகளை விட்டுவிடவேண்டும். அப்போது தான், தன்நம்பிக்கை வளரும். பயிற்சியின் பயனைக் குழவி அப்போதைக்கு அப்போது தன் அன்றாடையவாழ்க்கையில் அறிந்து துய்க்குமாறு செய்து விட்டால் பயிற்சிபெறுவதில் பெரியதோர் ஊக்கம் பிறக்கிறது. குழவி மிக விரைந்து முன்னணிக்கு வருகிறது.

சிறப்பு வகுப்பு :- இத்தகைய பிற்பாடான குழவிகளுக்கு என அமைக்கப் பெறும் தனி வகுப்பில் முற்பாடான குழவிகளோடு போட்டி போடுவதற்காக ஆசிரியன்மார் விரைந்து விரைந்து பல பலவற்றைக் கற்பிக்க முயன்று நெருக்கி வந்தனர். பொதுவான வகுப்புக்களை விட இத்தகைய சிறப்பு வகுப்புகள் இவ்வாறு கடுமையும் கொடுமையும் கூத்தாடும் இடமாய் விளங்கின. ஆனால், இப்போதோ நிலைமை அனைத்தும் மாறிவிட்டது. குழந்தையின் கருத்தைக் கவர்ந்து கொள்ளக் கூடிய பயிற்சியைப் பெறும் வகுப்பாகவே சிறப்பு வகுப்புக்கள்

விளங்குகின்றன. இத்தகைய சிறப்பு வகுப்புக்களுக்கு இவை போகும்போது தம்மைத் தீண்டாதவர்கள் போலக் கருதிக் கொண்டு இக்குழவிகள் மக்கள் வாழ்க்கையின் உயர்வினை அடியோடு மறந்து போதலும்கூடும். அவ்வாறு நேராமல் காத்தலும் வேண்டும். அத்தகைய தற்பழிப்பு எண்ணம் எழாதவாறு பார்த்தல் வேண்டும். இந்தச் சிறப்பு வகுப்புக்களின் புதுமை ஒன்றும் தோன்றாதவாறு, அவற்றை அமைத்து நடத்தல் வேண்டும். வ்ழக்கமான வகுப்பு என்றே அவற்றின் மனத்தில் பதியவேண்டும். தம் குறைக்கு என எழுந்தவையாகத் தோன்றுதலாகாது. இத்தகைய குழவிகள் மிக இளமைப் பருவத்திலேயே ஏதேனும் ஒரு துறையில் பழகி வேலை கற்றுக்கொள்ள முயல்கின்றன. மிக உயர்ந்த நிலையை வேண்டி நில்லாமல், 'அகப்பட்டது போதும்' என அமைதி அடையும் ஒரு மனநிலையை இத்தகைய குழவிகளிடையே ஆசிரியன்மார் வளர்த்து வரவேண்டும்.

கல்வி முறை :— பிற்பாடான குழவிகள் குற்றவாளிகளாதலும் உண்டு. அவ்வாறு குற்றவாளிகளாக மாறுவதற்கு அறிவின் குறைவே சிறந்தகாரணம் எனக்கூறுவதற்கு இல்லை. ஒரு சில இடத்தில் அறிவின் குறைபாடு துணைக்காரணமாக வருகிறது என்பதிலும் ஐயம் இல்லை. குற்றவாளிகளாக மாறும் பிற்பாடான குழவிகளின் அறிவுநிலையை விடக் குற்றவாளிகள் ஆகாது நிற்கும் பிற்பாடான குழவிகளின் அறிவுநிலை தாழ்ந்ததேயாம். அறிவு நிலையிற் பிற்பாடான குழவிகள் பின்னர்க் குற்றவாளிகளாக மாறுவது ஏன்? அவற்றைப் பெற்றோரும் ஆசிரியன்மாரும் பழக்கிவந்த முறையும் நிலையும் சரியல்லவாம். அந்தத்தகுதியற்ற பழக்கத்தாலேயே அவை அவ்வாறு கெடுகின்றன எனல் வேண்டும். ஆசிரியன்மாரின் பொறுப்பு என்னே என்னே!

## III. முற்பாடான குழவி

உயிர்ப்பிழம்பு :- முன்னெல்லாம் பிற்பாடன குழவிகளைப் பற்றியே ஆராய்வது பெருவழக்காக இருந்தது. இப்போதோ அதற்கு முற்றிலும் மாறாகக் கருவிலே திருவுடையன எனத் தக்க முற்பாடான குழவிகளையே அறிஞர் ஆராய்கின்றனர். பலவேறு திறமைகள், பலவேறு அளவில், பலவேறு வகையாக அமைந்து கிடக்கும் பலவேறு கோலங்களாக அறிவு நிலையைக் காணக்கூடும். இவ்வாறு காணும்போதும் குழவியைப் பெற்றோரின் தொழில், கல்வி, குழவியின் உடலுரம், நோயற்ற நிலைமை, பள்ளியில் நிகழும் அதன் கலை வளர்ச்சி, அதன் விளையாடல்கள், சிறப்புகள், உரிமையுணர்வு, தன்னம்பிக்கை முதலிய தனிநிலைப் பண்புகள் என்ற இவை அனைத்தும் ஒருப்பட்டு இயைந்ததோர் உயிர்ப்பிழம்பாக, அந்த உயர்நிலைக் குழவி தோன்றக் காண்போம்.

அறிவும் சிறப்பும் :— உலக வாழ்க்கையில் சிறந்து விளங்குவோர் யார்? ஒருபுறத்தே நிறையப் பேசுவோர் உண்மையில் உலகத்தினை ஆளக் காண்கிறோம். மற்றொரு புறத்தே பிறருக்குப் பொருந்தத் துலக்கமுற்று வருவோர் புகழ்பெற்றோங்கக் காண்கிறோம். ஒரு துறையில் எழும் குறையை வேறொரு துறையில் நிரப்பிக் கொள்வோரும் சீரும் சிறப்புமாக வாழக் காண்கிறோம். முயற்சியுடையோர் இகழ்ச்சி அடையாமல் முன்னணியில் விளங்கவும் காண்கிறோம். ஆதலின், வாழ்க்கையில் வெற்றி பெறுவோர் அறிவாளரே என்று துணிந்து கூறுதல் இயலாது. முற்பாடான குழவிகளைப் பின் தொடர்ந்து உலக வாழ்க்கையில் எவ்வாறு விளங்குகின்றன எனவும் அறிஞர்கள் ஆராய்ந்துள்ளார்கள். உலக வாழ்க்கையில் இன்றியமையாது வேண்டப்படும் இயல்புகளில்

ஒரு சிலவே அறிவுநிலை ஆய்வுகளால் வெளியாகின்றனவாம். ஆதலின், அறிவுநிலை ஆய்வுகொண்டு எதிர் கால வெற்றியைத் துணிந்து கூற முடியாது.

கல்வி முறை :— முற்பாடான குழவிகளுக்கு எவ்வாறு கற்பிப்பது? இவற்றைப் பொது வகுப்பிலேயே இருக்க வைத்தால் பிற குழவிகளினும் முன்னேறி நிற்கும் நிலையில், பிற குழவிகளுக்குக் கற்பிக்கும் பாடத்தில் இவை அக்கறை-யற்று மனம் இங்கும் அங்கும் அலையக் கெடுகின்றன. எனினும், பொது வகுப்பிலேயே இருக்கவைத்து இத்தகைய குழவியின் வேகத்திற்குத்தக முன்னேறிவரச் செய்தல் வேண்டும் என்பார் சிலர். பொது வகுப்பில் கற்றுவரும் போதே இத்தகைய குழவிகளுக்கு மிகுதிப் படியான பாடங்களைத் தருதல் வேண்டும். அந்தப் பாடங்கள் தாமே முன்னேற்பாடாகத் திட்டம் செய்து பயின்று வரத்தக்க வாழ்க்கைத் துறைப் பாடங்களாக அமைந்து விட்டால், அத்தகைய குழவிகள் படிப்பதில் ஊக்கம் இழவாது மேலும் மேலும் கற்பதில் நாட்டம் உடையோராய்ச் சிறந்து விளங்குவர்.

## IV. அறிவு நிலையாது

அறிவு என்றால் என்ன ? :— அறிவுநிலை ஆய்வுகள் என மேலே நாம் கூறிவந்தவை அறிவை அளக்கின்றன எனப் பேசி வந்தோம். இங்கு அறிவு என்பதின் பொருள்தான் என்ன ? அறிவு என்பது ஒரு தனிப்பொருள் என்றனர் சிலர். ஆனால், எவரும் அதனை இலக்கணம் கூறி விளக்கவில்லை. மனத்தின் பல வகையான ஆற்றல்களையே அறிவு என வழங்குகின்றோம் என்பர் வேறுசிலர். இந்த ஆற்றல்கள் ஒன்றற்கு ஒன்று தொடர்பு இன்றி விளங்குகின்றன எனக் கூறுவதற்கு இல்லை.

அங்ஙனமாயின் பல ஆற்றல்கள் எனக் கூறுவது எங்ஙனம்? பல ஆற்றல்களின் சராசரி நிலையே அறிவாம் எனக் கூறுவாரும் உள்ளனர். ஆனால், இவ்வாறு மன ஆற்றல்களின் சராசரி நிலையை எவரிடத்தேனும் கண்டு அளந்தவர் ஒருவராகிலும் உண்டோ?

காசோ? சீட்டோ?;— தர்ஸ்டன் (Thurstone) என்பவர் அறிவுநிலை ஆய்வுகளைக் கணக்குவழியே ஆராய்ந்து 'அறிவுநிலை எனப் பொதுவாக ஒரு நிலையும் இல்லை' என்கிறார். "ஒரு துறையில் திறம் பெற்றவர் பிற துறைகளிலும் திறம் பெறக்காணோம்" என எடுத்துக் காட்டுகின்றார். ஸ்பியர்மன் (Spearman) என்ற ஆசிரியரோ "பொது நிலையாகவே அறிவு என ஒன்று உண்டு" எனக் கணக்கு வழியே ஆராய்ந்து முடிவு கட்டுகின்றார். அதனாலே, ஒருவகையில் சிறந்துள்ளவன் பெரும்பான்மையும் வேறு பிற வகையிலும் சிறந்து விளங்குவதனை எடுத்துக் காட்டுகின்றார். 'அறிவு என்ற பொதுநிலையே அன்றி வேறு பல சிறப்பு நிலைகளும் உள்ளன' எனக் கணக்கிட்டு ஆராய்ந்து கூறுகின்றார். இதற்கு ஓர் உவமைகூறலாம். போர்க்காலங்களில் சிலபோது வேலையாட்களுக்குப் பணத்தைக் கொடுப்பதற்குப் பதிலாக 'அரிசிக்கு எனச்சீட்டு, பருப்புக்கு எனச்சீட்டு' என இவ்வாறு கூலியனைத்தையும் சீட்டாகவே கொடுப்பதும் உண்டு. மிகுதியும் பணம் பெறுபவர்களோ இத்தகைய சீட்டுகளோடு எஞ்சியதனைப் பணமாகவே கையில் பெற்று விரும்பியபடி ஏதேனும் வாங்கிக்கொள்ள உதவுமாறு பெற்று வருவார்கள். தர்ஸ்டன் கொள்கைப்படி நம் அறிவின்நிலை முழுதும் சீட்டாகப் பெறுபவர் நிலைமை ஆம். 'தனித் தனிச் சீட்டுகளோ உள்ளன; நாம் விரும்பியபடி எதனையும் வாங்கக் கூடிய பொதுநிலையில் உள்ள காசு நம்கையில் ஒன்றும் இல்லை' எனலாம். அதாவது, 'தனித்தனித் திறமைகளே

உள்ளன; விரும்பியபடி வெற்றி பெறப் பொதுநிலை அறிவு என ஒன்றும் இல்லை' என்பதாம். ஸ்பியர்மன் கொள்கைப் படியோ 'அரிசிச் சீட்டுகள் போன்ற இசைப்பாடற்றிறமை கைத்திறமை முதலிய சிறப்புநிலைத் திறமைகள் விளங்கு-வதோடு, விரும்பியபடி பல வகையிலும் பயன் படுத்தக்கூடிய காசுகள் போலப் பொதுநிலையான அறிவும் உண்டு' என்பதா-யிற்று. இந்த இருவர் கொள்கையினையும் இந்த உவமை வழியாகப் பலார்ட் இவ்வாறு விளக்கிவைக்கின்றார்.

இரண்டும் ஒன்றே :- உலகினை ஆராய்ந்தவர்கள் ஸ்பியர்மன் கூறுவதே பொருத்தமுடையது எனக் கூறுவர். தர்ஸ்டன் என்பாரைப் பின்பற்றுவார் இல்லை எனக் கூறுதற்கும் இல்லை. இவ்வாறு இக்கொள்கைகளில் மாறுபாடு தோன்றினாலும் பயன்நிலை வகையால் நோக்குமிடத்து இரண்டும் ஒன்றாகவே முடியக் காண்கிறோம். பொது அறிவு நிலை ஒன்று இருப்பதாகக் கொள்ளினும் அது தனியே விளங்குவதில்லை. பலவகைத் திறமைகளிடையேதான் அது விளங்குகிறது. எனவே, இருவர் கொள்கைப்படியும் திறமைகளின் வளர்ச்சியே அறிவு வளர்ச்சி என்பது தெளிவாகிறது. பொது அறிவுநிலை என்பது மனத்தின் முழுத்திறனையும் கூறுவது அன்று. எல்லா அறிவு-நிலை ஆய்வுகளிலும் பொதுவாகக் காணப்படுவதோர் உறுப்பே அறிவுநிலை எனலாம்.

சிறப்பும் பொதுவும் :— சிறப்புநிலைத் திறமைகளாக ஸ்பியர்மன் சிலவற்றைக் கண்டார். இடவுணர்வினை ஆய்கின்ற-போது கம்மியத் திறமை (Mechanical factor) புலனாயது. கணக்காய்வுகளிடையே தோன்றும் கணக்குத் திறமையும் (Arithmetical factor) கண்டார். "தர்க்கத் திறமை" அல்லது அறிவாராய்ச்சித் திறமையும் கண்டார். இவை, வேறு எந்த ஆராய்ச்சியிலும், கைத்தொழிலிலும், கல்வியிலும் பெரும்-

பயனைத் தந்துவரும் என்பதில் ஐயமில்லை. இவற்றோடும் இசையை நுகரும் திறமையும் சிறப்பு நிலை உறுப்பாக உள்ளத்தின் தொழிற்பண்பிடையே விளங்கக் கண்டார். இவ்வாறு உள்ளத்தின் சிறப்பு உறுப்பாக விளங்கும் மனநிலை யாது? புறப்பொருள்களைப் பற்றி முடிவு செய்வது இதுவே. பொதுத் தன்மையை விளக்கும் வெற்றெண்ணங்களைப் (Abstrct ideas) பற்றி முடிவு செய்ய இடங்கொடுப்பதும் இதுவே ஆம். ஒழுக்க நிலைக் கருத்துக்களைப்பற்றி முடிவு செய்ய உதவுவதும் இதுவே ஆம். அக்கறை, இன்பம் முதலிய-வற்றினைப்பற்றி முடிவுசெய்ய இடம் கொடுப்பதும் இந்த மனநிலையே ஆம். இந்தச் சிறப்புறுப்புக்கள் கூடப்பிறப்பனவா? பழக்கத்தால் எழுவனவா? 'கூடப்பிறந்தவை என்று கூறுவ-தினும் பழைய அநுபவத்தின் பயனாகப் பழக்கமாய் விட்டன என்று கூறவே இடம் உண்டு' என்பது ஸ்பியர்மன் முடிவு. பொதுநிலை உறுப்பாம் அறிவு நிலையோ அத்தகையதன்று. அது இயற்கையாக விளங்குகின்றது. மேலே கூறிய இயல்புகள் அங்ஙனம் இல்லை. பொதுநிலையோ நம் கூடப் பிறந்ததே எனக் கூறிவிடலாம்.

## V. ஸ்பியர்மென் கண்ட சட்டங்கள்

தெளிவும் வேகமும் :— அறிவு நிலை என்பதனையே உள்-ளத்தின் பொது உறுப்பு எனக் கண்டோம். உறுப்பு என்ற சொல்லை உவமையாகவே வழங்கிவருகிறோம் என்பதனை நாம் மறத்தலாகாது. இந்தப் பொதுநிலை உறுப்பினிடையே சில இன்றியமையாத இயல்புகள் நிலைத்துள்ளன. அவற்றைப் பல இயற்கைச் சட்டங்களாக வகுத்து ஸ்பியர்மன் விளக்கு-கின்றார். நாம் ஒன்றனை அறியும்போது அதனைப்பற்றிய அறிவு முதலில் குழம்பிக்கிடந்து பிறகு படிப்படியாகத் தெளிவு

மிக்கு ஒளிரக் காண்கிறோம். ஆகவே, நன்கு அறிவதற்குப் பொழுதும் பிடிக்கின்றது என்பதாயிற்று. ஆனால், முதலில் மெல்ல விளங்கத் தொடங்கியது, பின்னர் விரைந்து விளங்கிக்-கொண்டே தெளிவுமிக்கு ஓடுகிறது. எனவே நாம் ஒன்றனை அறியும்போது அவ்வறிவு தெளிவுநிலையிலும் வேகத்திலும் மிக்குவரக் காண்கிறோம் என்பதாயிற்று. தெளிவுநிலையும் வேகநிலையும் ஒன்று ஒன்றாய் மாறக் கூடியவையாம். எனவே, "விரைவாக எண்ண முடியாதவர்களும் தெளிவாக எண்ண முடியும்" என்பது உளறலேயாம். தெளிவுநிலை உள்ள இடத்தில் மட்டுமே வேகநிலை உண்டு. வேகநிலை உள்ள இடத்தில் மட்டுமே தெளிவுநிலை உண்டு. இங்குக் கூறியவை அனைத்தும் அறிவு நிலையின் பொதுநிலை உறுப்பைப் பற்றியே ஆம்.

மாறா அளவு :— குறிப்பிட்ட சமயத்திற்குள் ஒரு மனம் செய்து வருவது அனைத்தையும் முழுநிலையாகக் கொண்டு கண்டால், அந்த முழுநிலையானது, இயல்பு வகையால் மாறினாலும், அளவு வகையால் எப்போதும் மாறாது இருக்கும் எனவும் ஆராய்ந்து அவர் கண்டனர். பலவற்றை அறியும் அகலநிலை ஒன்று; ஒன்றினையே ஊன்றி அறியும் ஆழநிலை வேறு. ஒரே அளவினதாகவரும் உள்ளத் தொழிற்பாட்டின் முழு-நிலையை அளக்கும் இரு வேறு அளவைகளே இந்த அகல-நிலையும், ஆழநிலையும் எனலாம். ஒன்று அந்த முழுநிலையின் அகலத்தினை அளப்பது; மற்றொன்று அதன் ஆழத்தை அளப்பது. "முழுநிலை ஒரே அளவினது" என்றதால் "அதன் அகலம் மிகமிக, ஆழம் குறையும்" என்பதாம்; "ஆழம் மிகமிக, அகலம் குறையும்" என்பதாம். மனத்தே பல எண்ணங்கள் எழுகின்றன. அவை அனைத்தும் நனவுநிலையில் தோன்றுவ-தில்லை என முன்னரே கண்டோம். மனத்தே நனவு நிலையாகத் தோன்றுதற்காகவே எண்ணங்கள் போராடுகின்றன. அவற்றில்

சிலவே மேலெழுகின்றன. இந்தப் போராட்டம் "நனவுநிலையில் எந்த அளவில் தோன்றுவது?" என்பதனைப் பற்றியே ஆம். "நனவிடையே நன்றாகத் தோன்றுவதா? இல்லையா?" என்பதே இங்குப் போராட்டம். இங்குக் கூறியவை அனைத்தும் உள்ளத்தின் பொதுநிலை உறுப்பாம் அறிவுநிலையைப் பொறுத்தனவே ஆம்.

எந்திரமும் ஆற்றலும் :— ஒரு மனத்தில் ஓர் அறிவுநிலைச் செய்தி நிகழுமாயின் மறுமுறையும் அத்தகைய செய்தி நிகழத் தக்கதாகிய ஒரு போக்கினை அந்நிகழ்ச்சி அந்த மனத்திடையே விளைவித்து விடுகின்றது. ஈது ஒரு இயற்கைச் சட்டம். இங்கு இரு வேறு நிலைகளை வேறுபிரித்து அறிய வேண்டும். அறிவுநிலைச் செய்திகள் நிகழ்வதாலேயே மறுபடியும் அவை நிகழக்கூடியதொரு போக்கினை அச்செயல்கள் உண்டு பண்ணுகின்றன என்பது ஒருநிலை. ஆனால், இந்த அறிவுநிலைச் செய்திகள் ஒன்றோடொன்று சேர்ந்து நிகழ்தலாலேயே அவ்வாறு ஒருங்கு நிகழக்கூடியது ஒரு போக்கினை எழுப்பிவிடுகின்றன என்பது வேறொரு நிலையாம். ஒன்று தேய்ந்தவழியிற் போவதாம். மற்றொன்று உடன் நிகழ்ச்சியாம். 'உள்ளத் தொழிற் பாட்டின் முழுநிலை' என்றும் ஒரேயளவாக விளங்கி வருவதால் ஒரே அளவான ஆற்றலே விளங்கிவருகிறது எனலாம். நரம்பமைப்புகள் ஒன்றாக இயைவதால் இந்த ஆற்றல் தங்குதடையின்றி முன்போன வழியே போகின்றது எனலாம். ஆற்று நீர் முன்போன வழியே அன்றோ ஓடுகிறது? பொதுநிலை உறுப்பாம் அறிவுநிலை இந்த ஆற்றலையே அளக்கின்றது எனக் கொள்ளலாம். அவ்வாறானால் நினைவில் வைத்துக் கொள்வது இதனினும் வேறு என்றாகும். அந்த நினைவு இந்த ஆற்றல் இயங்கிவர இடம் கொடுக்கும் எந்திரமாகிய நரம்பமைப்பு முதலியவற்றைப் பொறுத்தது என்று கூறலாம். இவ்வாறு 'ஸ்பியர்மன்' கருதுகின்றார்.

மெல்ல மாறுதல் :— அறிவுநிலைச் செயற்பாடுகள் தத்தம் காரணங்களாகத் தோன்றுவனவற்றை விட மெல்லவே இயங்கத் தொடங்கிப் பின்னர் முடியும்போது மெல்லவே முடிகின்றன. இது மற்றையதோர் இயற்கைச் சட்டம், இதனாலேயே ஒரு வேலையிலிருந்து மற்றொரு வேலையிற் புகுவது அருமையாகிறது. மாறுநோக்கமுடன் எடுத்த வேலையைச் செய்வது என்பது வேறு; எடுத்த வேலையை-விட்டு வேறு வேலையிற் புகுவது மெல்ல நிகழ்கிறது என்பது வேறு. மாறுநோக்கத்திற்கு ஏற்பவே, ஒரு வேலையை விட்டு மற்றொரு வேலையை அதே நோக்கத்துடன் செய்வதும் அன்றோ அருமையாகிறது ? இங்குக் கூறுவது முன் கூறிய நினைவே என்று மயங்குதலும் ஆகாது. ஒன்று செய்ததனைத் திரும்பவும் செய்யும் போக்கு என்று இதனைக் கருதுதலும் ஆகாது.

தன்வயமின்மை :— உள்ளத்தின் பொதுநிலை உறுப்பாம் அறிவுநிலையினும் வேறாக ஈதொரு பொதுநிலை உறுப்பினைக் காண்கின்றோம். முன்னையதற்கும் இதற்கும் என்ன வேற்றுமை? இவை இரு வேறு நிலைகள் அல்ல. பொதுநிலையின் ஆற்றலைப் பொதுநிலை அறிவு அளக்கின்றது. அந்தப் பொது நிலையின் தன்வயமின்மையை (Inertia) இங்குக் கூறிய பொதுநிலை அளக்கின்றது. வண்டி ஓடினால் ஓடிக்கொண்டு இருக்கவே முயல்கிறது எனலாம்; நின்றால் நிற்கவே முயல்-கின்றது எனலாம். அதனாலன்றோ புகைவண்டியை நிறுத்-தினாலும் சிறிது தொலைவு சென்று நிற்கின்றது ? நிற்பதனைப் புறப்படச் செய்தாலும் எளிதில் புறப்படாத நிலையை அது கம்பிகள்மேல் உராய்ந்து போவதால் உணரலாம். இந்த உண்மையை விளக்கவே புகைவண்டியினிடம் தன்வயமின்மை உண்டு எனக் கூறுகின்றோம். அங்ஙனமே மனம் ஒருவகையாக

இயங்கி நின்ருல் அவ்வகையாகவே இயங்கிக் கொண்டிருக்-கிறது; இயங்காது நின்ருல் இயங்காமலே நின்றுவிடுகிறது. வாளா இருக்கும் நிலையைவிட்டு இயங்குவது அருமையாகிறது. அதாவது ஒரு புதிய வேலையைத் தொடங்குவது மெல்லவே நிகழ்கிறது என்பதாம். மனம் இயங்கி நிற்கும் நிலைமையை விடுவதும் அருமையே; அதாவது, எடுத்த வேலையை விட்-டொழிப்பதும் திடீர் என நிகழமால் மெல்லவே நிகழ்கிறது என்பதாம். இவை அனைத்தும் மன ஆற்றலை அரிதாக ஒரு வேலையிலிருந்து வேருெரு வேலைக்குச் செலுத்துவதாக முடிவது காண்க. ஒரு நரம்பமைப்பிலிருந்து மற்ருெரு நரம்பமைப்பினிடையே செலுத்துவதாக இதனைக் காணலாம். இந்த நிலைவேறு. நரம்பமைப்புகள் பழக்கத்தின் பயனைத் தம்-மிடத்தே முத்திரை அடித்தாற்போலக் கொண்டு விளங்குகிற நிலைவேறு. பழக்கம்வேறு; தன்வயமின்மைவேறு. இவை இரண்டினையும் ஒன்று எனக்கொண்டு மயங்குதல் ஆகாது.

களைப்பு :- மற்ருேர் இயற்கைச் சட்டமும் இங்கு விளங்கு-கிறது. "அறிவுநிலைச் செய்தி ஒன்று நிகழுமாயின் மறுபடியும் அது நிகழுவதனைத் தடுக்கும் ஒருவகைப் போக்கினை அந்த நிகழ்ச்சியே விளைவிக்கின்றது" எனக்காண்கிருேம். நிகழ்ச்-சியை விளைவிக்கும் போக்கு எழுகிறது என முன் கண்டோம். இப்போது நிகழ்ச்சியைத் தடுக்கும் போக்கு எழுகிறது எனக்-காண்கிருேம். இவை இரண்டும் மாறுபட்டிருப்பது வெளிப்-படை. இந்தத் தடைப்போக்கினையே 'களைப்பு' என வழங்கு-கிருேம். இந்தக் களைப்பு இருவகையாக எழலாம். ஒன்று புற-நிலைக் களைப்பு. இதனை எந்த வகையாலும் உடனே நீக்கிவிட முடியாது. களைப்பாறுதல் ஒன்றே இதனை நீக்க வழி. மன வெறுப்பாக எழும் அகநிலைக் களைப்பே மற்ருெரு வகையாம். உள்ளக்கிளர்ச்சி பொங்கி எழுவதாலும் முயற்சியினுலும்

இதனை நீக்கலாம். அகநிலைக் களைப்பு எல்லாத் தொழிற்கும் பொதுவானது அன்றும். ஆதலால், அத்தகைய களைப்பு ஒரு வேலையில் எழுந்தால் பிற வேலைகளிலும் எழும் எனபதற்கு இல்லை. படித்துக் களைத்தவன் சீட்டாட வரலாம். ஆதலின், சீட்டாடலில் களைப்பில்லை என்பதாயிற்று. தனிப்பட்ட மக்களின் சிறப்பியல்பினை உணர்த்துவதாக இந்த அகநிலைக் களைப்பு அமையலாம். புறநிலைக்களைப்போ வெறும் வெறுப்பன்று; செய்யும் திறத்தினையே இழத்தலாம். வேலையை மாற்றினும் இந்தக் களைப்புச் சிலபோது தொடர்ந்து தோன்றுகிறது; சிலபோது தொடர்ந்து விளங்குவதில்லை. ஆதலின், பொதுநிலை ஆற்றல் பாய்வது குறைவதாலேயே இந்தக் களைப்பு எழுகின்றது என்று கூறுவதற்கும் இல்லை. எவ்வாறே எழுகின்ற நஞ்சுகள் குருதியில் ஓடிப்பாய்வதாலேயே இந்தக் களைப்பு எழுகிறது. ஆனல், அவ்வாறு நஞ்சு பாய்வது உடல் முழுதும் ஒரே நிலையில் பாய்வதில்லை. ஒரு சில நரம்பமைப்புகளிற் பாய்ந்தும், ஒரு சில நரம்பமைப்புக்களிற் பாயாமலும் போகின்றது. ஆகையால், ஒரு சில வேலைகளைச் செய்யக் களைப்பும், வேறு சிலவற்றைச் செய்யக் களைப்பின்மையும் ஒரே பொழுதில் தோன்றி விளங்கக் காண்கிறேம்.

திறமை அலை :— வேறோர் உண்மையும் புலனுகிறது. செய்யுந்திறமை உயர்ந்தும் தாழ்ந்தும் அலைபோல மாறி மாறிவரக் காண்கின்றோம். பொதுநிலை அறிவும் தன்வயமின்மையும் போல இதுவும் மனத்தின் பொதுநிலை உறுப்பாகவே விளங்குகிறது. ஆற்றலைச் செலவு செய்து வரும்போது அதனைத் திரும்பவும் நிரப்பிக் கொள்ளவேண்டும் அன்றோ? இல்லையானல் முழுதும் செலவாகி ஒழியும். இந்த ‘அலை நிலை’ மேலே கூறிய களைப்பு என்பதனேடு தொடர்புடையது எனலாம். குருதியோட்டம் விரிந்தும் சுருங்கியும் துடிப்பதுபோல, ஆற்றலும்

விரிந்தும் சுருங்கியும் துடிக்கின்றது எனலாம். ஆகவே தொழில் செய்வது, ஆற்றல் விரிந்து நிற்கின்ற நிலையிலேயே நிகழவேண்டும்; சுருங்கிக் குவியும்போது நிகழ்தலாகாது என்பதாயிற்று.

தன்னடக்கம் :- "அறிவு நிலையின் ஆழத்தை முயற்சியால் அடக்கியாளலாம்" என்பது மற்றோர் இயற்கைச் சட்டம். மனத்தின் பொதுநிலை உறப்பாகக்கண்ட அறிவுநிலையோ முயற்சியின் வன்மை மென்மைக்கு ஏற்ப மாறிவரக் காணேம். பொதுநிலைத் திறமை எனப் பலர் கூறிவருகின்ற ஆழ்ந்தறியும் நிலை (Profundity), விரைந்துணரும் நிலை (Quickness), பொது அறிவு (Common sense), எதிலும் புதுப்போக்குடமை (Originality) என்பவை முன்னர்ப் பொதுநிலை உறப்புக்கள் என நாம் கண்டவற்றினுள்ளே அடங்காது எஞ்சி நிற்பனவாம். அவ்வாறு எஞ்சி நிற்பனவற்றில் ஒன்று முன்னர்த் தன்வயமின்மை எனக் கூறியதன் எதிர்மறை நிலையாம். கார்னட் (Garnet) என்பவர் இதனை "C" என்ற எழுத்தால் வழங்குவர். இதனைச் 'சமர்த்து' என்றும் கூறுவர். அவ்வாறு கூறுவதினும் தன்வயமின்மையின் எதிர்மறைநிலை எனக் கூறினல் அதன் இயல்பு நன்கு விளங்கும் எனலாம். எஞ்சிநிற்பவை அனைத்தினையும் "W" என்ற எழுத்தால் வழங்குவது உண்டு. நோக்கமுடைய வகையில் முரண்பாடிலாத நிலையே ஈதெனலாம். இதனைத் தன்னடக்கம் எனவும்அறிஞர் வழங்குவர்.

## IV. அறிவின் அடிப்படை

இயற்கை ஆற்றல் :- மற்றொரு சட்டம் இயற்கை ஆற்றற் சட்டமாகும். மேலே கூறிய நான்கு சட்டங்களின் இயக்கம்

ஒவ்வொன்றும் முன்னரே இயற்கையாகக் கூடப் பிறந்தமைந்து ஆளுக்கு ஆள் வேறுபடும் சக்திகளை அடிப்படையாகக் கொண்டு இயங்குகின்றது. இந்தப் பொதுநிலை உறுப்பு முதலில் பிறந்தவுடன் விரைந்து வளர்ந்து, பின்னர் மெல்ல வளர்ந்து பதினாறும் ஆண்டிற்குள் முற்றிய நிலைமையை அடைந்து, மேலே வளர்வதின்றிப் பின்னெல்லாம் அதே நிலையில் நின்று விளங்கக் காண்கிறோம். அனைவருக்கும் நிகழும் இந்த வளர்ச்சிப் போக்குகளைக் கண்டால் ஒருவர் வளர்ச்சி மற்றவர் வளர்ச்சிக்கு ஒரு போகாகவே (Parallel) விளங்கக் காண்கிறோம். புகைவண்டி ஓடும் தண்டவாளங்கள் இரண்டும் ஒரே அளவான இடைவெளியோடு ஒரு போகாகப் போவது போல ஒருவர் மனவளர்ச்சிபோலவே மற்றவர் மனவளர்ச்சியும் போகின்றதாம். பதினோராம் ஆண்டில் ஒருவருடைய அறிவுநிலை பிறரது அறிவு நிலையினும் சிறந்து விளங்கிவரக் காண்கிறோம். பல ஆண்டுகளின் பின்னும் அதே விகிதநிலை விளங்குகிறது. இதனாலேயே, அறிவுநிலை ஈவு ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு நிலையில் ஏறக்குறைய மாறாமல் இருக்கின்றது.

வளர்ச்சி :- சிறப்புறுப்பாக விளங்குவனவற்றை ஆராயும் போது அங்கே (1) அறிபுலன் இயக்கப்புலன் என்ற இவற்றின் அமைப்பு, (2) மனத்தில் நிறுத்திவைத்துக் கொள்கின்ற நிலைமை, (3) களைப்பு என்ற மூன்றின் திறப்பாடாகவே அந்தச் சிறப்புறுப்புக்கள் விளங்கக் காண்கிறோம். அறிபுல அமைப்போ அறிவுநிலை முற்றுவதற்கு முன்னரே வளர்ந்து முற்றுகிறது. இயக்கப் புல அமைப்போ அறிவுநிலை முற்றியதற்குப் பின்னர்த்தான் முற்றி வருகிறது. மனத்தில் அமைத்துக்கொள்ளும் நினைவுத் திறனும் அறிவுநிலை முற்றியதற்குப் பின்னர் முற்றி வருகின்றதேனும் முதுமை வரவா

இது தேய்ந்து கொண்டே வரவும் காண்கிறோம். களைப்பானது வயதிற்கு ஏற்ப மாறிவரும் நிலைமையை ஆராய்ச்சியாளர் இன்னமும் முடிவுகட்டவில்லை. பலவகையான செய்திகளை அறிவதாலும் இந்தச் சிறப்பு உறுப்புக்களாம் நிலைகள் விளக்கமுறுதல் கூடும். அத்தகைய செய்திகளை வாழ்க்கை முழுதும் அறிந்து வரலாம். ஆதலின், வாழ்க்கை முழுதும் அச்சிறப்பு நிலைகள் விளங்கிவர இடம் உண்டு. அவ்வவற்றைப் பற்றிய பழக்கங்கள் எழுவதும் மறைவதும் எத்தனையோ காரணங்களால் வாழ்க்கை முழுதும் தொடர்ந்து நிகழக்கூடும்.

திருத்தலாமோ :— மக்கட் கூட்டத்திடையே ஒவ்வோர் இனத்திற்கும் இடையே இப்பொது அறிவுநிலை வேறுபட்டிருப்பது உண்மையே. ஆனால், சிறிதளவே வேறுபாடு உண்டு என்பதனை மறத்தலாகாது. ஓர் இனத்தாரிடையே ஆளுக்கு ஆள் நாம் காணும் வேற்றுமையை நோக்க, ஓரினத்திற்கும் மற்றோர் இனத்திற்குமாக நாம் காணும் இன வேற்றுமை மிக மிகச் சிறிதேயாம். ஆதலின், உலகமக்களை அறிவுடைய இனம் அறிவிலாத இனம் என வேறு பிரிப்பதற்கு இல்லை. எனினும், இந்த அறிவுநிலை குடிவழி இயல்பாம் என்பதனை மறப்பதற்கில்லை. சுற்றுப்புறச் சூழலின் பயப்பாட்டையும் குடிவழியின் பயப்பாட்டையும் ஒப்புநோக்கும்போது அறிவுநிலை, குடிவழி முறையேதான் சிறந்து விளங்குகின்றது என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. கல்வியினால் இதனை மாற்றி அமைக்கமுடியாது என்பதும் தெளிவாயிற்று. அறிவுநிலைக்கும், ஆண் பெண் என்ற பால் வேற்றுமைக்கும் ஒரு தொடர்பும் இல்லையாம். பெண்ணைப் பேதை என்பது அறிவுநிலை வகையால் அன்று என்பது தெளிவாகிறது. பொது நிலையாம் அறிவுநிலை இவ்வாறாக, சிறப்பு நிலைகளோ, குடிவழி முறையில் ஒரு சிறிது அளவு மட்டுமே திறம் பெற்று

விளங்கக் காண்கிறோம். அவற்றைப் பழக்கத்தாலும் கல்வி முறையாலுமே திருத்தித் திறம்பெற வளர்த்தல்கூடும். அங்கே இயற்கை வளர்ச்சியை நம்பிப் பயனில்லை.

## VII. ஸ்பியர்மன் கண்ட உள்ளத்தியற்கை.

அனுபவம் :— நம்முடைய அனுபவம் புலன் வழியாக எழும்போது என்ன நிகழ்கிறது? ஒரு வான்மீனைக் காண்கிறேன். முதலில் அப்பொருள் இருக்கின்றது. இரண்டாவதாக வான அலைகள் இருக்கின்றன; இவற்றின்வழியே ஒளிவருகிறது. மூன்றாவதாக அந்த ஒளி என் கண்ணிற் பாய்ந்ததும் ஒரு சில வேதிமாற்றங்கள் (Chemical changes) எழுகின்றன. நான்காவதாக கண்ணிலிருந்து நரம்போட்டங்கள் ஓடுகின்றன. ஐந்தாவதாக மூளையின் புல அமைப்பில் சில வேதிமுறைகள் நிகழ்கின்றன. ஆறாவதாக இந்தச் சடநிலையிலிருந்து மனநிலைக்கு அப்புலன் நுழைகிறது. ஈதோர் அறியப்படாத எல்லை. ஏழாவதாக வான்மீன் என்ற உணர்வு எனக்கு எழுகிறது. இவ்வாறு பொருளுக்கும் நனவுக்கும் இடையே மூன்று வகையான மாற்றங்கள் எழக்காண்கிறோம். கண்ணில் எழும் மாறுதல், நரம்போட்டம், மூளையில் எழும் மாறுதல் என்பவை ஒவ்வொன்றும் தத்தம் முன்னிலைகட்கு முற்றும் மாறுபட்ட இயல்புகளை விளக்குகின்றன எனலாம். இவ்வாறு மும்முறை தடைபட்டே பொருள் நம்மை அடைகிறது; மூன்று வேறு அவதாரம் எடுத்து நம்மை அடைகிறது.

அனுபவ உணர்வு :— இங்கே நாம் அனுபவித்து வரும் அனுபவம் ஒன்றே ஆராய்ச்சிக்கு உரியதாகும்; உதவுவதும் ஆகும். பிறவற்றினைப் பற்றித் தொடர்புபடுத்திக் கூறுவது

எல்லாம் வெறும் ஊகமே ஆம். நாம் வாழ்ந்து துய்த்துணரும் ஒவ்வோர் அனுபவத்திலும் என்ன காண்கிறோம்? அதன் இயல்புகளையும் அதனை அனுபவிப்பானையும் நன்கு அந்த அனுபவத்தில் தெரிந்து கொண்டிருக்கிறோம். இப்படி இரண்டினையும் தெரிந்துள்ள நிலையை ஒவ்வோர் அனுபவமும் உடனே எழுப்பி விடுகிறது எனலாம். ஒரு பொருளைக் கண்டதும் "நான் இதனை . இவ்வாறு காண்கிறேன்" என்ற உணர்வும் உடன் எழுகின்றதன்றோ? ஈதே ஸ்பியர்மன் கூறும் அனுபவ உணர்வுக் கொள்கையாம். (Apprehensibility of experience)

இயைபுத் தோற்றம் :— "வானம்," "வான்மீன்," என்ற இரண்டு பொருள் தோன்றும்போது "வான்மீன் இருக்க வானம் இடமாம்" என இவற்றின் இயைபும் மனத்தே எழுகிறது. கருமையும் செம்மையும் தோன்றினால் இவை இரண்டும் நிறம் என்ற இயைபும் தோன்றுகிறது. மனத்திடையே இரண்டு பொருள்களோ, இயல்புகளோ ஏதோ ஒரு வகையால் தோன்றும்போது அவற்றிடையே உள்ளதோர் இயைபையும் அறிந்துகொள்கிற நிலையை அந்தத் தோற்றமே உடனுக்குடன் எழுப்பிவிடுகிறது. இந்தக் கொள்கையை ஸ்பியர்மன் இயைபுத் தோற்றக் கொள்கை (Eduction of relations) என்பர்.

விளக்கம் :— முதலில் அனுபவம் எழுந்த போதும், அனுபவிப்பானும் அனுபவமும் இந்த இரண்டின் இயைபும் என்ற மூன்றும் விளங்கியேகிடந்தன. ஆனால், அவை அப்போது ஒற்றித்து நின்றன. ஆனால், இயைபை வருவிக்கும் இரண்டாவது நிலையிலோ அவை வெவ்வேறாக விளங்கின. ஆகவே ஒவ்வொரு, வாக்கியமும் எழுவாயும் பயனிலையும்

அவ்விரண்டிற்கும் இடையே விளங்கும் இயைபுமாக (Copula) விளங்குதல் வேண்டும். அனுபவம் உணர்வு இவை வேறு; இந்த உணர்வு நிலையிலிருந்து நாம் வருவித்துணர்வது (Eduction) வேறு. இல்லாதது ஒன்றினை நாம் படைத்துவிட முடியாது. இயைபுகளை அறிவதே இங்குப் படைப்பாம். எனவே, இயைபுணர்ச்சியே அறிவு உணர்ச்சியின் முதல் நிலையாகும்.

இயைபுளித் தோற்றம் :— இவ்வாறு இயைபுற்றவற்றை வருவிப்பதனைப்பற்றிய கொள்கையே ஸ்பியர்மன் கூறும் மூன்றாவது கொள்கையாம். (Eduction of Correlation). இதனை இயைபுளித் தோற்றக் கொள்கை என வழங்கலாம். ஒரு பொருளையோ இயல்பையோ ஓர் இயைபோடு மனம் காணவரும்போது, அதனோடு இயைபுடைய பொருளையோ இயைபையோ அறிகின்ற அறிவினை அந்த மனக்காட்சி உடனே எழுப்பிவிடுகின்றது. மனிதன் என்ற பொருளும் மனத்தே எழுகின்றது; அங்கே முதலும் சினையுமாம் இயைபும் அதனோடு தொடர்ந்து எழுகிறது. உடனே அவ்வாறு இயைபுபெற்ற கால், கை முதலிய உறுப்புக்களை அறியும் அறிவினைப் 'பொருளறிவும் இயைபறிவுமாய் எழுந்த அறிவு' எழுப்பிவிடுகிறது.

படவிளக்கம் :— அனுபவ உணர்வினை இந்தப் படத்தால் ஸ்பியர்மன் விளக்குகின்றார். கருமையான பகுதி அனுபவமாம்.



அனுபவ உணர்வு

அ – அனுபவம்

நா-உ – 'நான் உணர்கிறேன்'

"நான் உணர்கிறேன்" என்பது வெண்மையானபகுதி. இயைபுத் தோற்றத்தினைக் கீழேகண்ட படத்தால் அவர்விளக்குகின்றார்.




இயைபுத் தோற்றம்

நிறைகோடுள்ள நீள் சதுரங்களிரண்டும் இரண்டு பொருள்கள் அல்லது இரண்டு இயைபுகள்; "நீலவானம்" - "வான்மீன்" என்பனபோல ஆம். புள்ளியால் அமைந்த வட்டம் வருவிக்கப்பெறும் இயைபாம். "வான் மீனுக்கு வானம் இடமாம்" என்ற இயைபு தோன்றுதல் காண்க. அந்த வட்டத்திற்கும் நீள் சதுரங்களுக்கும் இடையே புள்ளிகளாலாகிய கோடுகள் வருவிக்கப்பெறும் வழியைக் குறிப்பனவாம்.




இயைபுளித் தோற்றக் கொள்கை

இயைபுளித் தோற்றக்கொள்கையைக் மேலேகண்ட படத்தால் விளக்குகிறார் ஸ்பியர்மன். (1) முதற்சினை இயைபு அல்லது எதிர்மறை இயைபு. (2) "மனிதன்" போன்ற பொருளோ அல்லது "கருமை" போன்ற பண்போ. (3) மனத்திற் பதிந்த-போது எழும் கால் கை முதலிய உறுப்போ அல்லது கருமைக்கு எதிர்மறையாம் வெண்மையோ. நீள் சதுரவட்டம் மனிதன் போன்ற பொருளையோ, கருமைபோன்ற பண்பையோ சுட்டுவ-தாம். வட்டம் "முதற்சினை இயைபு" அல்லது "எதிர்மறை இயைபு" என்பதுபோன்ற ஏதேனும் ஓர் இயைபு மனத்தில் தோன்றுவதனைக் குறிப்பது. இரண்டனைச் சேர்க்கும் நேர்க்-கோடு இவை இரண்டும் தொடர்ந்து ஒருங்கே மனத்தில் பதிகின்றன என்பதனைச் சுட்டுகின்றது. புள்ளியாக அமைந்த நீள் சதுரம் இவ்வாறு மனத்திற் பதிந்தபோது தோன்றும் கால் கை முதலிய உறுப்பினையோ, கருமைக்கு எதிர்மறையாம் வெண்மையினையோ குறிக்கின்றது எனலாம். புள்ளிவடிவான கோடோ வருவிக்கும் முறையினைச் சுட்டுகின்றது எனலாம். பின்னே நம் மனத்தே எழுகின்ற பலசிக்கலான எண்ணம் முதலியனவற்றைக் கீழ்க்கண்ட படம் விளக்குகிறது.



பல சிக்கலான எண்ணங்கள்

அனைத்தும் இவ்வளவே :— மனத்தின் செயற்பாடுகள் அனைத்தையும் இந்த மூன்றிலே அடக்கி ஸ்பியர்மன் விரிவாக விளக்கியுள்ளார். உள்ளத்தியற்கை நூலுண்மை அனைத்தும் இந்த மூன்று உண்மைகளினுள்ளேயே விளங்குவதனைப் பல படப் பாரித்துப் பேசி உள்ளார். இவ்வாறு இவர் மூன்று கொள்கைகளாக ஆராய்வது அறிவுநிலை ஆய்வுகளைப் பகுத்து ஆராய்ந்ததன் பயனே ஆம். அறிவுநிலை ஆய்வுகள் இந்த மூன்று கொள்கைகளையே விளக்குவது வெளிப்படை. ஆய்வுகள் அறிவை அளப்பது உண்மையானால் அறிவு வளர்ச்சி இந்த மூன்று கொள்கையின் படியே விளங்கும் என்பதிலும் என்ன தடை?

"குமர குருபர குணதர,

.....................................................

.....................................................

.....................................................

அரவு புனைதரு புனிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர ஒளிதிகழ்
அறிவை அறிவது பொருள் என அருளிய பெருமாளே"

(திருப்புகழ் - 528)

---

# 22. ஆளுமை (Personality)

---

## I. ஆராய்ச்சி

ஆளுமை :— மக்களில் ஆணையும் பெண்ணையும் "ஆள்" என்றும் ஆளு என்றும் சுட்டுவது இந்த நாளைய வழக்கமாய் விட்டது. ஒவ்வோர் ஆளும் ஒவ்வொரு வகையாகச் சிறப்பு இயல்புகொண்டு விளங்கக் காண்கிறோம். நடத்தை, வழக்கம், மனப்போக்கு, எண்ணங்கள், நோக்கங்கள், கருத்துக்கள், நம்பிக்கைகள், மனப்பான்மைகள், இவையனைத்தும் சேர்ந்து கலந்துநிற்கும் மனப்பாங்கு - இவை எல்லாம் மனத்தே பொருந்தி அமைத்துக் கொள்ளும் கோலம் மனிதனுக்கு மனிதன் மாறுபட்டிருக்கும். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தன்மை உண்டு என்கின்றோம். இந்தத் தன்மை கல்போல மாறாமல் நிற்கும் என்பது இல்லை. இதனிடையே ஒரு மாறாநிலை அடிப்படையாக விளங்க அனுபவத்தின் வழியே சிறிது மாறிவருதலும் உண்டு. தன்மை என்பதனை "இயல்பு" என்ற பொருளில் உயிரில்லாப் பொருள், உயிர்ப்பொருள் என்ற இரண்டைப் பற்றியும் வழங்கி வருதலின் இங்கு நாம் குறிக்கும் தன்மையை உணர்த்த வேறு ஒரு சொல்வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு மனிதனிடத்திலும் பொதுப்படையாகத் தோன்றும் சிறப்புத்தன்மையை அவ்வவனது சிறப்பியல்பாம் ஆளுமை என வழங்கலாம். ஒரு மகனோ, மகளோ, ஆளாக விளங்கும் தன்மையே ஆளுமையாம் (Personality).

செய்க்காட்சி :— ஆளுமையை ஆராயப் பல முறைகளை அறிஞர்கள் கையாண்டு வருகின்றார்கள். செய்க்காட்சி முறையால் (Experiment) ஊக்க நிலைகளின் வன்மை-

மென்மைகளைப், பயிற்சிக்குப் பிடிக்கும் கால அளவுகொண்டு, அளந்து அறிய முயல்கின்றனர். முன்னரே ஆராய்வதற்குக் குறிப்பிட்ட வேலைகளை இயற்கைப்போக்கில் மக்கள் எவ்வாறு செய்து வருகின்றனர் என்பதனை இன்னோர் ஆராய்கின்றனர். சிக்கலான சமுதாயப் பண்பாட்டு வகைகளில் மக்கள் நடந்து வருகின்ற முறைகளையும் ஆராய்கின்றனர். பள்ளிக்கூடமும் இங்ஙனம் செய்க்காட்சி அறையாகலாம். ஆனால், இங்கே, இருப்பதனைக் கண்டுவரலாமே அன்றிச் சிக்கலான நிலைகளை ஏற்படுத்தி ஆராய முடியாது.

புள்ளி விவரம் :— புள்ளி விவரம் கொண்டு ஆராய்ச்சி செய்வாரும் (Statisticians) உள்ளனர். பலவகைச் செய்திகளைப் பற்றிய புள்ளி விவரங்களைக் கொண்டு சராசரி நிலையையும், பொதுநிலையிலிருந்து சிறப்புநிலை மாறிவருகின்ற அளவையும், பலவகையான செய்திகளிடையே விளங்கும் தொடர்பினையும், ஒற்றுமையையும், இவ்வாறு ஆராய்ந்து கண்ட முறைக்கு ஏற்பவே 'செய்திகள் நிகழும் என்று எவ்வளவு தொலைவு துணிந்து கூறக்கூடும்?' என விளங்கும் ஏற்புநிலையையும் (Probability) ஆராய்ந்து முடிவு கட்டுகின்றனர். ஆனால், இன்றியமையாச் சிறப்பினவாம் செய்திகளைப் பற்றிய புள்ளி விவரங்கள் கிடைப்பதில்லை. புறநிலைச் செய்திகளை மட்டுமே இவ்வாறு ஆராயக்கூடும். ஆதலின், அக நிலையையும் பண்பாட்டு நிலையையும் இத்தகைய ஆராய்ச்சியில் மறக்க வேண்டியதாகிறது. தெள்ளத் தெளிவான முடிவு காணுதலும் அருமையேயாம்.

வரலாறும் கேள்வியும் :— தனிமக்களது வரலாற்றை அறிந்து ஆராயும் முறையும் உண்டு. தனி மக்களைப் பற்றிய முழுநிலை அறிவும் இவ்வாறு நமக்கு விளங்குவதற்கு இங்கு இடம் உண்டு. ஆனால், இந்த வரலாறுகளை அவரவர்கள் அவரவர்

விருப்பப்படி எழுதிவருகின்றனர்; உணர்வுப் பிறழ்ச்சிகளும் எழுகின்றன; செய்திகளுக்குப் பிறழ்ச்சியாகப் பொருள் கொள்வதும் உண்டு. ஆதலின், உண்மை காண்பது அருமையே ஆம். கேள்வி முறையைப் பயன்படுத்தித் தனி மக்களை ஆராய்வாரும் உள்ளனர். ஒவ்வொருவரையும் கண்டு பேசி, அவர்கள் நிலையை அறிவதும் உண்டு. தக்கவர்கள் செய்தாலன்றி இந்த ஆராய்ச்சிமுறை பயன்தருவதில்லை. இத்தகைய ஆராய்ச்சியாளருக்கு ஒத்துணர்ச்சியும் (Sympathy) உள்ளுணர்வும் (Intuition) நிறைய விளங்குதல் வேண்டும்.

ப்ராய்ட் முதலானோர் :— ப்ராய்ட் என்பவர் நனவிலி மனத்தைப் பற்றிக் கூறியுள்ளதனை முன்னரே குறித்து வைத்தோம். ஆட்லர் என்பவர் குழவிகள் தம்முடைய சிறுமையை உணர்ந்து பெருமை பெற முயல்வதே வாழ்க்கையின் நோக்கமாக அமைந்துள்ளது எனக் கூறுவதனையும் கண்டோம். அறிவு உணர்ச்சி, உணர்வு, மனப்போக்கு முதலியவற்றின் கூட்டற் கணக்கே ஆளுமை என ஆங்கில உளநூற்புலவர்கள் கூறினர். ஒவ்வொரு மன நிலையையும் ஒருப்பாட்டு வடிவமைப்புக் கோலமாக (Geshalt) ஆராய்கின்ற சர்மானிய முறையினையும் கண்டோம். மனமும் சுற்றுப்புறச்சூழலும் ஒன்றாய் இயைந்து நிற்பதனை இடநிலை உவமைகொண்டு விளக்குவதனையும் (Field psychology and topology) கண்டோம்.

## II. ஆளுமை

உடற்சாறும் மீப்பண்பும்:- உயிர்ப்பொருளின் வாழ்க்கையோ பொது நிலையான சில தேவைகளும், சில மனச்செயல்களுமாக விளங்குகின்றது. எனினும், வேற்றுமையும் இல்லாமல்

இல்லை. இந்த வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டே ஆளுமை என்பது வளர்கின்றது எனலாம். ஹிப்போகிராடஸ் (Hippocrates) என்ற கிரேக்க அறிஞர், நமது உடலுள்ளே சில நீர்ப்பொருள்கள் மிக்கிருப்பது காரணமாக மனநிலையும் மாறும் என இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கூறியுள்ளார். இந்தக்கொள்கை நம்நாட்டு அகத்தியர், தேரையர் முதலியோர் கருத்துக்கும் ஒத்திருக்கக் காண்கின்றோம். ஒவ்வொருவருக்கும் பல பல் பண்புகள் இருப்பினும் அவற்றில் ஒரு சிலவே மேல் ஓங்கித் தோன்றும். முன் கோபக்காரன், வேடிக்கைக்காரன் என்றெல்லாம் உலக வழக்கில் பேசுவதனைக் காதாரக் கேட்கின்றோம். இங்கே சினமும் நகையும் மிக்குத் தோன்றுவதால் அவற்றையே மீப்புண்புகள் (Tempera-ment) என்பர். இழிவழக்கில் (1) சுடுமூஞ்சி (Choleric temperament), (2) அழுமூஞ்சி (Meloncholic tempera-ment), (3) தூங்குமூஞ்சி (Phlegmatic), (4) சிரிச்சமூஞ்சி (Sanguine) என்று நான்காகப் பகுத்து மக்கள் வழங்கு-கின்றனர். ஆளுமை என்பதனை முகராசி என்றும் பேசி வருகின்றனர் "கோழை, மிக்கு இருந்தால், நாணமும், மத்திய ஞாபகமும் விளையும்" எனத் தேரையர் கூறுகின்றார். "போதவே கோபமுள்ளே பொருமினல் நாடிபித்தம்" என்றும்; "ப்லீகம் (Spleen) மலத்தை இறுக்கி மந்திக்கும்" என்றும் அகத்தியர் கூறுவர். 'இரத்தத்துவர் உடையவர்கள் எதிலும் ஊக்கம் உடையவராய் நம்பிக்கையோடு மகிழ்ந்துதிரிவர்' என்பது பொது மக்களுடைய கொள்கை. இங்குக் கூறிய சித்தர் கொள்கையினை ஹிப்போகிராடஸ் என்பாரும் விளக்கியுள்ளார். பாவ்லாவ் (Povlov) என்பவர் ஆளுமையை வல்லாளுமை என்றும், மெல்லாளுமை என்றும் பிரிக்கின்றார். மெல்லாளுமை என்பது தடைபெற்று விளங்கும் தூங்குமூஞ்சி நிலையாம். சுடுமூஞ்சி, அழுமூஞ்சி, சிரிச்சமூஞ்சி என நாம் வழங்கியதற்கு

ஏற்பச் சுடுநிலை ஆளுமை, அழுநிலை ஆளுமை, நகைநிலை ஆளுமை என்ற மூன்றாய் வல்லாளுமை விளங்கும் எனவும் கூறியுள்ளார்.

யுங் (Jung) :— யுங் என்ற ஆசிரியர் உயிராற்றல் அகமுகமாகவும், புறமுகமாகவும் பாய்கின்றது என விளக்குகின்றார். இது காரணமாக ஆளுமையும் அகமுக ஆளுமை (Introverted personality), புறமுக ஆளுமை (Extroverted personality) என இரண்டாகப் பிரியுமாம். இவை ஒவ்வொன்றும் அறிவுநிலை, உணர்ச்சிநிலை, புலன்நிலை (Sensation) உள்ளுணர்வுநிலை (Intuition) என நந்நான்காக விரியும் என்பர். அகமுகப் போக்கும் புறமுகப் போக்கும் தனித்தனியே நில்லாது கலந்து இருமுகப் போக்காகவும் விளங்குதலின் பலவாறும்.

1. { அறிவுநிலை அகமுக ஆளுமை
அறிவுநிலை புறமுக ஆளுமை
அறிவுநிலை இருமுக ஆளுமை

2. { உணர்ச்சிநிலை அகமுக ஆளுமை
உணர்ச்சிநிலை புறமுக ஆளுமை
உணர்ச்சிநிலை இருமுக ஆளுமை

3. { புலன்நிலை அகமுக ஆளுமை
புலன்நிலை புறமுக ஆளுமை
புலன்நிலை இருமுக ஆளுமை

4. { உள்ளுணர்வு அகமுக ஆளுமை
உள்ளுணர்வு புறமுக ஆளுமை
உள்ளுணர்வு இருமுக ஆளுமை

அறிவுநிலை, உணர்ச்சிநிலை, புலன்நிலை, உள்ளுணர்வுநிலை என்பனவும், ஒன்றும், இரண்டும், மூன்றும் நான்குமாகக் கலந்திருத்தலும் கூடும் என்றால் ஆளுமை மேலும் பல-வகையாக விரியும். இங்ஙனமே அன்றி, அறிவாரய்ச்சிநிலை ஆளுமை என்றும், பொருளியல்நிலை ஆளுமை என்றும், சுவை உணர்வுநிலை ஆளுமை என்றும், குழுநிலை ஆளுமை என்றும், அரசியல்நிலை ஆளுமை என்றும், சமயநிலை ஆளுமை என்றும் பலவாறு பிரித்துக்கூறும் அறிஞர்களும் உள்ளனர். இவ்வாறு எல்லோரும் பேசிவந்தாலும் இவற்றைப் பற்றி முடிவான கொள்கை இன்னமும் உருப்படவில்லை என்றே கூறவேண்டும். எந்த வகையால் ஆளுமையை வேறுபடுத்தி அறிவது என்பது இன்னமும் விளக்கியபாடில்லை.

ஆளுமைப் படம் :— ஆளுமை என்பது ஓர் ஆளின் சிறப்பியல்பு எனக் கண்டோம். அதனைத் தனிப்பெயரிட்டு அழைப்பது மட்டும் போதாது. அவனது உடலமைப்பு, மனநிலை, ஒழுக்கம், வழக்கம், எண்ணங்கள், மனப்போக்கு, (Tendency) மீப்பண்பு, இயல்பு, பண்பு, மனப்பான்மை, மனப்பாங்கு, நாப்பழக்கம், மனப்பழக்கம், கைப்பழக்கம் முதலிய அனைத்தும் ஒருங்கு திரண்டு, "எந்த எந்த அளவில் அமைந்து எந்த எந்த வகையில் இயைபு பெற்று விளங்கு-கின்றன" என்பதனை ஒருப்பாட்டு வடிவமாகக் கொண்டு காணுதல் வேண்டும். ஒன்றும் இல்லாத நிலையைச் சுழி (Zero) ஆகக் குறித்து, அதற்கு வலத்தில் 1, 2, 3 எனக் கூடுதல் எண்களை (Positive) அமைத்தும், அந்த எண்களுக்கு ஏற்ப இடப்பக்கத்தில், 1, 2, 3 எனக் கழிவு எண்களை (Negative) அமைத்தும், இந்த எண்களுக்கு ஏற்ப, அழை, விடா-முயற்சி, சமுதாய உணர்ச்சி, நகை, இயக்கத்தின் விரைவு, கைத்திறன் முதலிய நிலைகள் கூடுதலாகவோ குறைவாகவோ

இருப்பதனை எண்களுக்கு, நேர் நேர், ஒவ்வொரு நிலையையும் ஒவ்வொரு வரிசையில் புள்ளியாகக் குறித்துப் பின் இப்-புள்ளிகள் அனைத்தினையும் கோடிட்டு இயைத்தால் ஆளுமையின் ஒருப்பாட்டு வடிவத்தினை நேராகக் காண்பது போலப் படக் குறிப்பில் (Graph) காணலாம். கீழே உள்ளதனைக் காண்க.




"ஓராண்டு குழவியின்" (சராசரி) ஆளுமை வடிவம்

இதுவரை மனநிலையைப்பற்றி நாம் அறிந்தவற்றை யெல்லாம் இவ்வாறு ஒவ்வொருவருக்கு ஏற்பப் புள்ளிஇட்டு ஒவ்வொருவர் ஆளுமையையும் ஒவ்வொரு படக் குறிப்பாக வரைந்து காணலாம்.

## III. ஆளுமை வளர்ச்சி

குழவியே அடிப்படை :— வாழ்க்கை முழுதும் கற்று வருகின்றோம் என முன்னரே கண்டோம். நம் உலகமும் முற்றி வருகிறது. இவற்றிற்கு ஏற்ப நம் ஆளுமையும் வளர்ந்து

வரும் என்பதில் என்ன தடை? எனினும், அதன் வளர்ச்சியை ஆராய்வதற்குக் குழவிப் பருவமே சிறந்தது என அறிஞர் அனைவரும் கருதுகின்றனர். ஆளுமையின் கடைகாலும் அடிப்படையும் அப்போதே நிலைபேறு அடைந்து விடுகின்றன-வாம். குழவிநிலையில் மிக்கு விளங்கும் உணர்ச்சிப் போக்குகளே குழவியின் ஆளுமையை வெளிப்படுத்தி நிற்கின்றனவாம். இந்த உணர்ச்சி வகையுான எதிரூன்றல்கள் செயற்கை மறிவினையாகி வருமாறு நாம் விரும்பியபடி பழக்கத்திற் கொணர்ந்து விடலாம் என்பதனை முன்னரே கண்டோம். அது மட்டுமே அன்றி உடல் முற்றிவருவதாலும், உணர்ச்சி-நிலை மாறி வருகின்றது என்பதனையும் நாம் மறத்தலாகாது. குழவிகள் பிறந்த நாள் முதலே ஆளுமையில் வேறுபட்டுத் தோன்றுகின்றன எனலாம். ஆளுமையின் சில நிலைகள் முரண்படாதிருக்கக் கண்டு வருகின்றோம்; வேறு சில முரண்-பட்டும் வருகின்றன.

ஆளுமை அமைப்பு :— ஆளுமையில் உடல் அமைப்-பிற்கும், உடல் உரத்திற்கும் தக்கதோர் இடமுண்டு. உடலழ-கால் பிறர் மனத்தைக் கவரும் இயல்பினைப் பற்றிப் பரக்கப் பேச வேண்டாம். நோயற்ற வாழ்விற்கு ஏற்ப ஆளுமையும் மாறும். கீழ்மை உணர்வு எழுவது நோயாலும், உடற்-குறையாலுமே எனக் கண்டோம். தூம்பிலாச் சுரப்பிகள் (Endocrine glands or ductless glands) காரணமாகப் பலவகை மனநிலையும், உடல்நிலையும் மாறுவதனை அறிஞர்கள் கண்டு வைத்துள்ளார்கள். சுரணையும் ஆளுமையை உருப்-படுத்துகிறது. தொட்டாற்சிணுங்கிகளாய், கண்டால் சிணுங்கி-களாய் வாழ்கின்ற குழவிகள் அறிவுநிலை பெற்று வளர்ந்தாலும், தங்கள் உணர்ச்சிநிலை சமநிலையில் விளங்காமையால், "அவற்றினைப் பிறர் எங்ஙனம் வளர்த்து வருகின்றார்கள்"

என்பதனைப் பொறுத்தே அவற்றின் துன்பமும் இன்பமும் தோன்றிவர அவை வாழ்ந்து வருகின்றன. ஆளுமை-வேற்றுமையை நன்கு விளக்க முடியாதபோது, குழவியைச் சீர்திருத்த வழியறியாது, "குழவி விளங்கப் போவதே இல்லை" என முணு முணுப்பது உலகில் இயல்பாகிவிட்டது.

ஆளுமைப் படிநிலைகள் :— ஆளுமை வளர்வதனைப் பல-நிலைப் படிகளாக வைத்துக் காணலாம். (i) முதற்படி நிலையை தனிநிலைப்படி அல்லது துணையற்ற (Helples) நிலைப்படி என வழங்கலாம். இங்கே குழவி தன்னந் தனியே தானாகத் தனக்கு உதவும் தன்மையும் இன்றிக் கிடக்கின்றது. இங்கே விளங்கும் ஆளுமைக்கோலம் குழவியின் பழக்க வழக்கங்களின் பயனாக எழுந்ததோர் அமைப்பே ஆம். தன்னுடைய சுற்றுப்புறச் சூழலை அடக்கி ஆளுவதற்கு அத்தகையதோர் அமைப்புப் பயன்படுவதாலும், அவ்வாறு இயங்குவது அக்குழவிக்கு ஒருவகையால் இயல்பாக இருத்தலினாலும், அத்தகையதோர் அமைப்பு வளர்ந்து நிலைபேறுறுகிறது எனலாம். (ii) அடுத்த-படியில் குழவி தன்னைத் தனி உயிர்ப்பொருளாக எண்ணித் தனக்குத்தானே உதவக்கூடிய நிலையை அடைகிறது. குறை இல்லாத நிறை நிலையில் எந்தக் குழவியும் வளர்ந்து வருவ-தில்லை. அதனால் பிறரைச் சார்ந்து வாழ்ந்த நிலையிலிருந்து, தன் தனி வீறு (Individuality) தோன்ற வாழவரும்போது, பல வகையான சுற்றுப்புறச் சூழலின் நிலைக்கு ஏற்பத் தடையும் பிறழ்ச்சியும் எழுகின்றன. (iii) மூன்றாவதாக மனப்போக்குகள் (Tendencies) வளரும் படிநிலையைக் குழவி அடைகின்றது. குழவி ஒருவகையான தடையைக் குறிப்பிட்டதொரு வகை-யான செயலால் கடந்து சென்றபின், மறுமுறையும் அது-போன்றதொரு தடை எழுமாயின், அத்தகைய செயலாலேயே கடக்க முயலுதல் இயல்பே அன்றோ? இவ்வகையாலேயே

உடற்போக்கும் மனப்போக்கும் தோன்றி நிலைபெறு அடை- கின்றன. ஏதேனும் ஒருதடை எழுந்தபோது குழவி நோக்கம் ஒன்றும் இன்றித் தன் ஆற்றல்களைப் பலவகை இயக்கத்திலும் செலுத்தி நிற்கின்றது. "உதைத்துக் கொள்கின்றதனைப்பார்" என்று சுற்றியுள்ளார் சுட்டிக் காட்டுமாறு நிற்கின்றது எனலாம். பேசத்தெரியுமானால் பேச்சையும் கொட்டிவிடுகிறது. இவ்வாறு முதல் நிலையில் உள்ளக்கிளர்ச்சி பொங்க நின்ற குழவிகள் பின் எங்ஙனம் மாறுகின்றன என்பதே இங்குள்ள புதுமை. அவைகள் ஒரே வகையில் இயங்காது முன்னரே நம்மால் அறிந்து கூறமுடியாதபடி பல பல வகையாக நடந்து கொள்கின்றன. இதனாலேயே பல வகையான ஆளுமைகள் உருப்பெறுகின்றன எனலாம்.

## IV. தள்ளத்தக்க மனப்பான்மை

குறிக்கோள் :— இந்த மனப்போக்குகளைக் குழவி பேச்சு முறையில் வெளியிட முடியுமானால், பேச்சில் அது கூறத்- தக்கதே அதன் வாழ்க்கைக் கொள்கையாக விளங்கக் காண்போம். அப்பேச்சு உணர்ச்சிநிலை ததும்ப நிற்கும். வழக்கங்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்து மனப்பான்மை (Attitude) என வழங்குகின்றோம். ஒரு குழவி தன் உள்ளத்தினை வெளியிட்டுவரப் பழகி இருக்குமானால், அதன் மனப்பான்மையை எளிதில் அறியலாம். ஆனால், உணர்ச்சியை வெளியிடாது மறைக்க வேண்டும் என நம்முடைய நாகரிகம் நம்மை வற்புறுத்தி வருகின்றது. ஆகையால், விளையாட்டி- னிடையேயோ, குழவி எழுதிவரும் ஓவியத்தின் வழியாகவோ, நடிக்கும் நாடகத்தின் வழியாகவோ, கதை கூறும் வழி- யாகவோ, அதன் மனப்பான்மையை அறிதல் வேண்டும். குழவியின் மனப்போக்குகளில் ஒருசில நீக்கத்தக்கவை;

ஒருசில வளர்க்கத்தக்கவை; ஒருசில மிக்கு வளராதபடி நடுநிலையிலேயே அமைந்து வருமாறு காக்கத் தக்கவை.

ஒளிவும் பழியும் :- நீக்கத்தக்க மனப்போக்கினைச் சிறிது ஆராய்வது தக்கதேயாம். பிற குழவிகளோடு ஓடியாடி விளையாடாமல், ஓடி ஒளிந்து கொள்வதும், முகத்தைத் திருப்பிக் கொள்வதும் விரும்பத்தக்க மனப்பான்மை அன்றும். இந்த நிலையோடு வெறுப்பு நிலையும் உடன் சேரின், மனக்கோளாறு விளைவதற்கு வித்திட்டதாகவே முடியும். குழவிகள் பிறரோடு கூடிக்குலாவி அக்கூட்டுறவிலேயே திளைத்து வருமாறு நாம் உதவுதல் வேண்டும். இரண்டாவதாகப் பிறரைக் குழவிகள் பழிக்கும் மனப் போக்கினையும் நீக்க முயலுதல் வேண்டும். "குழவியை வளர்ப்போர் காரணமாகவே முதலில் இது முளைவிடத் தொடங்குகிறது." என்பதனை நாம் மறத்தலாகாது. குழவிகளைச் சீர்திருத்துவதற்காக அவற்றின் குற்றங்களைக் கண்டு பிடிக்கவேண்டும் என அத்தகையார் தொடங்குவது பழக்கமாகிக் குழவிகள் மனத்திலும் படிந்து விடுகிறது. இவ்வாறு குற்றங்கள் காண்பதைவிடக் குழவிகளின் முன்னேற்றத்தைச் சுட்டிக்காட்டி அவற்றினுடைய வெற்றி நிலையை எல்லாம் புகழ்ந்து வந்தால் தோல்விநிலைகளும் குற்றம் குறைகளும் தாமே மறைந்து ஒழியும்.

நம்பாமையும் வெறுப்பும் :— மூன்றாவதாக அகமுக மனப் போக்கினையும் தலைகாட்ட விடுதல் ஆகாது. நம்பிக்கையற்ற மனப்போக்கினையும் அறவே களைதல் வேண்டும். உலகில், வஞ்சகர்கள் கையினின்றும் குழவி உய்ய வேண்டுமானால், இத்தகையாரை நம்பாத மனப்போக்கு இன்றியமையாது வேண்டப் படுவதன்றோ என்ற ஐயம் எழலாம். ஆனால் இத்தகையார் மிகமிகச் சிலரே. ஆதலின், இவர் பொருட்டு

அனைவரையும் நம்பாது வாழ்வது வாழ்க்கையின் வேரிலேயே வெந்நீர் ஊற்றுவது போலாம். மக்களுக்கு மக்கள் வேறு-படுகின்றனர் என்ற உண்மை குழவியின் மனத்திற் பதியுமாறு உதவுவோமானால் கேடு ஒன்றும் விளையாமல் காக்கலாம். வெறுக்கும் மனப் போக்கினையும் நீக்குதல் வேண்டும். உள்ளத்தில் ஒரு சீர்கேடு உண்டு என்பதனையே வெறுப்புநிலை சுட்டுகிறது என நாம் உணர்தல் வேண்டும். உடனே சீர்குலைந்த நிலை மாறிப் பொருத்தம் உறுநிலை எழும்படியாகத் திருத்தி விட்டால், பின்னர் அந்த வெறுப்புநிலை பெருங்கேடாக முற்றி வளர்வதற்கு இடம் இல்லாது போய்விடும். கொடுமை மனப்-போக்கு நிலையான மனப்பான்மையாக வளருமானால் மனம் கோணும். ஆதலின் அதனைத் தோன்றும் போதே நீக்கிக் களைதல் வேண்டும்.

நோய் :— நோயினையும் மறக்க வேண்டும். நோயினைப் பற்றியே நினைந்து நினைந்து வருந்துவதும் ஒழியவேண்டும். இவ்வாறு பழகும்போது சில இடத்தில் மனத்தில் வைத்துக்-கொள்ளவேண்டியவற்றையும் குழவி மறந்து விடுகிறது. நம்மனத்தினை உருப்படுத்துவதில் நோய்க்கும் பெரும் பங்கு உண்டு! ஆதலின், அந்த உணர்வினை அடியோடு மறத்தலும் கூடாது. குழவி தீர்க்கவேண்டிய சிக்கல்களைக் குழவி மறவாது நோக்கிவரக் குழவியைப் பயிற்ற வேண்டும். சிக்கல் இருப்ப-தனையே மறந்தால் அதனைத் தீர்ப்பது எங்கே? மன அலைவினை உண்டாக்கியவற்றை மறந்து வரவும் குழவிக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

## V. கொள்ளத்தக்க மனப்பான்மை

வளர்க்கத் தக்கவை :— முயற்சி :- வளர்க்கத்தக்க மனப் போக்குகள் யாவை? சிதறுற்றுச் சிதையாது ஒருமைப்பாடுற்ற

நோக்கம் உடைமையாக ஓங்கும் மனப்போக்கினை நாம் குழவி-யினிடம் வளர்த்தல் வேண்டும். ஏதேனும் செய்துகொண்டு இருக்கவே குழவியைப் பழக்கிவிட வேண்டும். சமநிலையான மனப்போக்கும் வளர வகை செய்தல் வேண்டும். உள்ளக் கிளர்ச்சியை அடியோடு அடக்கிவிடவேண்டும் என்பதில்லை. "தன் நம்பிக்கையின் பயனாகக் குழவி அமைதியோடு வாழக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும்." என்பதே இங்கு நாம் வற்புறுத்தத் தக்கதாம். வீண் பெருமை பேசிக்கொள்வதிலும் பயனில்லை. காரிய வீரனாக விளங்கக் குழவி பழகுதல் வேண்டும். சமநிலையிடையே மனத்தினில் எழும் ஓர் அமைதி-யின் பயனாகவே இவை அனைத்தும் விளைதல் கூடும். விடா முயற்சியே வடிவாக விளங்கும் மனப்போக்கும் நம் வாழ்விற்கு இன்றியமையாததாம். எடுத்த வேலையைத் தொடர்ந்து செய்து முடிக்கும் மனப்பான்மை மேலும் மேலும் வளர்தல் வேண்டும். தான் செய்து வருவதனைக் குழவி விரும்புமாறும் அதனைப் பழக்குதல் வேண்டும். எடுத்த வேலையை முடிப்பது என்ற பழக்கம் படிந்து விடுமானால் அதனினும் சிறந்தது வேறொன்றும் இல்லை எனலாம்.

கூட்டுறவு:— பல வகையான சமுதாய நிலையங்கள், நாடு முதலியவற்றில் ஈடுபட்டுப் பக்தியாகவும் உண்மையாகவும் நடக்கின்ற மனப்போக்கும் வளர்தல்வேண்டும். இதுவோ சிறு-பொழுதில் குழவிகள் ஒன்றற்கு ஒன்று உண்மையாக நடந்து வருவதிலிருந்தே பழகவேண்டும். இரு குழவிகளை விளையாட விட்டுக் கூட்டுறவை வளர்த்துச் சிறுகச் சிறுக இந்த நிலையின் எல்லையை அகலச் செய்துகொண்டே போகவேண்டும். விட்டுக் கொடுத்துப் பழகுகின்ற மனப்பான்மையும் நன்கு வேரூன்றி வருதல் வேண்டும். பிறரை அறிந்து கொள்கிற மனப் போக்கும், பிறரோடு நலந்தீங்கில் ஒத்துணரும் மனப்போக்கும்

மக்கள் வாழக்கைக்கு இன்றியமையாதனவாம். "மரியாதை" என்பதன் பெயரால், பொருளற்ற வீண் சடங்குபோன்ற நடத்தையைக் கற்பிப்பதால் ஒரு பயனும் இல்லை. ஆளுக்கு ஆள் வேறுபட்டிருப்பதனைக் குழவி உணர்தல் வேண்டும். "எல்லோரும் ஒருபடித்தாகவே விளங்கவேண்டும் என்ற கட்டாயம் ஒன்றும் இல்லை" என்பதனையும் குழவி உணர்தல் வேண்டும். "அவ்வாறு ஆளுக்கு ஆள் வேறுபட்டு விளங்க அவ்வவருக்கு உரிமை உண்டு" என்பதனையும், "வேறுபடுவது ஒரு சிலபோது கடமையும் ஆம்" என்பதனையும் குழவி அறிதல் வேண்டும். ஆதலின், "அவரவர்கள் சிறப்பியல்பை அறிந்து கொள்ள வேண்டுவது தன்கடமை" என அதன் மனத்திற்பட்டு விட்டால் அவ்வாறு அறிதல் எளிதில் கைகூடும். மனமன்றோ வேண்டுவது? அவ்வாறு அறிந்து கொண்டதன் பயனாக அவர்கள் இன்பத்தில் இன்பங்கொண்டும், துன்பத்திற்கு இரங்கியும் இயற்கையாகவே ஒத்துணர்ச்சியோடு (Sympathy) வாழக் குழவிப் பழகிவிடுகிறது; பிறாது மனப்பான்மையை உணர்ந்து பாராட்டுவதும் எளிதாகிவிடுகிறது.

புறநிலை :— புறநிலை மனப்போக்கும் நம் வாழ்க்கையின் அடிப்படையாம். தன்னைச் சுற்றியே அனைத்தும் இயங்கி வருவதாகக் கருதும் குழவியைப் படிப்படியாக இந்த அகநிலையிலிருந்தும் புறநிலைக்கு அழைத்துச் செல்லுதல் வேண்டும். எல்லா வழிகளும் அங்குத்தான் போய்முடிகிறன. இந்த உண்மையை வற்புறுத்தக் கூடியபடி புறநிலைப் போக்கைச் செயலின் முடிபாகக் குழவி கொள்ளுமாறு செய்து விடுதல் வேண்டும் அவ்வாறு வகைசெய்து விட்டால் வேறு வகையான சிறப்புநிலைப் பழக்கம் ஒன்றும் இதற்கென வேண்டுவதில்லை. "குழவி செய்வதனைத் தடுத்து இந்த மனப்போக்கை எழுப்பி விடலாம்" என்று மனப்பால் குடிப்பதில்

பயனில்லை. குழவி வழியே சென்றுதான் அதனை நம் வழிக்குத் திருப்பிக் கொண்டுவருதல் கூடும்.

## VI. வரையறுக்கத் தக்கவை

தண்டனையும் நோயும் :- வேறுசில மனப்போக்குகள் ஓர் எல்லைக்குள் அடக்கிவைக்கத் தக்கவையாம். அந்த எல்லையை அவை கடக்குமானால் உள்ளத்தின் சமநிலை அடியோடு பிறழும். கொடிய விலங்குகள் முதலியவற்றைக் கண்டதும் அச்சம் எழுவது தற்காவல் நிலையே ஆம். தண்டனையிலும் அச்சம் எழ இடம் உண்டு. ஆனால் இதனைத் தற்காவல் நிலை எனச் சொல்லுவதற்கு இல்லை. நல்லவற்றைக் குழவி செய்யு-மாறு தூண்ட இவ்வாறு தண்டனை வழியே எதிர்மறை முகமாக அச்சம் ஊட்டுவதினும் உடன்பாட்டு முகமாக அச்செயலைப் பாராட்டுவதன் வகையாகவோ, வேறுவகையாகவோ மனத்திற் பதியும்படி திருத்த முயலுவதே சிறந்தவழியாம். நோயைப் பெருக்கிக் காட்டுகின்ற மனப்போக்கு நோயைத் தீர்த்துக் கொள்ளும்வழியாம். ஆனால், வேலைக்கு அஞ்சி நோயைப் பெருக்கிக் காட்டுவதும் உண்டு. படிக்க விரும்பாத குழவி தலைநோகிறது என்று பாசாங்கு செய்வதனையும் காண்-கின்றோம். ஆதலின் இந்த மனப்போக்கினை வளர்ப்பதும் தக்கது அன்றாம். வேலை செய்யும் நிலைக்கும், நோயாக உள்ள நிலைக்கும் இவ்வாறு வேறுபாடு தோன்றுவதனைத் தோன்றாமல் செய்தே இத்தகைய தவறான மனப்போக்கைக் களைந்து ஒழித்தல் வேண்டும்.

கனவு :— பகற்கனவு காணும் மனப்போக்கே கலையின் உயர்வாகச் சிறக்கக்கூடும். எனினும், மனத்தில் நெருக்கடி எழுந்தோறும் வெளியுலகில் வெற்றி பெற்று மன ஆறுதல்

பெற முயலாது, பகற்கனவிலேயே வெற்றியைக் கண்டு இன்புறத் தொடங்கும் குழவிகளையும் காண்கிறோம். அவை புற உலக வாழ்வினையே மறத்தலும் கூடும் என்பதனை நாம் மறத்தலாகாது. அங்ஙனமே, தன்னுடைய கீழ்மையை உணரும் போக்கு இல்லையானால் தன்னைத்தானே திருத்திக்கொண்டு மேலும் மேலும் குழவி உயர்ந்துவர ஊக்கம் எழுதற்கே இடம் இல்லையாகும். எனினும், இதுவும் ஓர் எல்லையைத் தாண்டிச் செல்லுதலாகாது. செல்லுமானால், எப்பொழுதும் தான் உயர முடியாது என்ற நம்பிக்கை வளர்ந்தோங்கிக் குழவியை அழித்துவிடும். ஆதலின், அத்தகைய குழவி தோற்றுத் தோற்று மனம் குன்றாதபடி வெற்றியை அடுத்தடுத்துக் கண்டு ஊக்கம் பெறுமாறு வெற்றிப் பழக்கத்தையே பெற்றுவர நாம் வழிசெய்தல் வேண்டும்.

சாக்கு :— காரணங்களைக் கற்பித்துக் கொள்வதும், ஒவ்வொன்றற்கும் அறிவு விளக்கம் கூறுவதுமான மனப்போக்கு அறிவு வளர்ச்சிக்கு மிகமிக இன்றியமையாததே ஆம். ஆனால், நம்முடைய மனத்தே எழுகின்ற போராட்டத்தைத் தணிக்கவேண்டி, மன ஆறுதலான காரணத்தையோ, அறிவு விளக்கத்தையோ நமக்கு நாமே பொய்யாகக் கற்பித்துக் கூறிக் கொண்டு, நம்மையும் பிறரையும் மயக்குவதும் உண்டு. இதனை இழி வழக்கில், "சாக்குப் போக்குச் சொல்லுதல்" என்று கூறுவதனைக் கேட்டுள்ளோம். அகத்துள்ள போராட்டத்தின் உண்மை நிலையை நமக்கே மறைத்துக் கொண்டு நம்மையும் ஏமாற்றிக் கொள்வதே இத்தகைய மனப்போக்கின் முடிவு; ஆதலின், இதனை வளர விடுவதால் வாழ்க்கை சிறக்கும் என்று கூறுவதற்குச் சிறிதும் இடம் இல்லை. சொற் போராட்டத்தில் வெல்லும் வெற்றி நம் திறமையைக் காட்டுமே அன்றிப்

போராடுகிற கொள்கையின் உண்மையினைக் காட்டுவது என்றும் இல்லையாம்.

"உறுப்பொத்தல் மக்கள் ஒப்பு அன்றால்; வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு."
(திருக்குறள்—993)

---

# 23. சமுதாயம்

---

## I. சுற்றுப் புறச்சூழல்

சுற்றுப்புறம்:- குழவி சுற்றப்புறச் சூழலால் மாறிவருவதனைப் பல முறையும் ஆங்காங்கே குறிப்பிட்டோம். சுற்றுப் புறச்சூழலுள் மக்கட்கூட்டமே சிறந்து விளங்குகிறது. நம் நடை, உடை, பாவனை சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபடக் காண்கின்றோம் அன்றோ? ஆதலின், சமுதாயத்திற்கு இணங்கக் குழவி திருந்தி வருவதனையும் அறிந்தாலன்றி நாம் குழவி உள்ளத்தினை அறிந்தவர்கள் ஆதல் இல்லை. சமுதாயக் கட்டுப் பாடுகள் என்று சில இருக்கின்றன அன்றோ? இவற்றை ஆராயும்போது குழவியைட வளர்க்கும் வகையும் சிறிது விளங்கிவரும்.

அகத்திருந்து புறத்து வருதல் :— புறத்தவர் இருப்பதனால் அன்றோ நம் உள்ளம் புறத்தே செயலாக விளங்குவதனை ஆராய்கின்றோம்? நம்முடைய நோக்கங்களே நம்முடைய செயற்பாட்டின் முடிவுநிலையாக விளங்குகின்றன; தூண்டு

நிலையாகவும் துலங்குகின்றன. அந்த நிலையில் அந்தச் செயற்பாடுகள் அகநிலையாகவும் எதிர்காலத்தில் நிகழப் போவதனை எதிர்பார்த்து இயங்குவனவாய் அமைகின்றன. இத்தகைய அமைப்பில் அகநிலைச் செயற்பாடும் புறநிலைச் செயற்பாடும் ஒன்றோடொன்று ஊடாடிவரக் காண்கிறோம். இந்த அமைப்பில் பல பல நிலைகளைக் காணலாம்; அவை கீழே அகநிலையிலிருந்து எழுந்து புறநிலையில் உயர்ந்து தோன்றி வெளிப்படுவதனையும் காணலாம். புலப்படத் தோன்றுவது இன்றி மறை முகமாய் உள்ளுக்குள்ளேயே அகநிலையாக விளங்குகின்ற நிலை ஒன்று. உணர்ச்சி எண்ணம், மெய்ப்பாடு, அகக்காட்சி முதலியன இந்த அகநிலையைப் பற்றியனவே ஆம். இவை வெளியாருக்குப் புலனாவதில்லை. சொல்நிலை அல்லது குறிப்புநிலை இதற்கு மேலாகத் தோன்றுவதாம். சொற்களும் அகக்காட்சிகளும் இங்கே தோன்றுகின்றன. இவற்றைப் பிறருக்கு விளக்கக்கூடும்; ஆதலின் மனம் முன்னினும் சிறிது வெளிக்கு வந்துள்ளது எனலாம். செய்யுட்கிழமை என இலக்கண அறிஞர் வழங்குவது இந்த நிலைக்கும் பொருத்தமானதாம். இதற்கு மேலுள்ளது மனப்போக்கு நிலையாம். ஒன்றை விரும்பியோ, வெறுத்தோ நிற்கும் நிலை இதுவே ஆம். இதனை ஒருவன் பிறருக்குத் தெரிவிப்பினும் தெரிவிக்கலாம்; பிறர் குறிப்பாக அறியினும் அறியலாம். முடிவாக மேலே வெளிப்படையாக இருப்பது புறச்செயல் நிலையாம். புறத்தே வெளிப்பட்டுத் தோன்றும் செயலாக முடிவதே இந்த நிலையாம். முதலாவது நிலையாகிய அகநிலையில் தூண்டுதலுக்கு ஏற்பத் துலங்குதலாக எழுகின்ற செயல் ஒருமுகப்படாது பல முகப்பட்டு உள்ளே விளங்குகின்றது எனலாம். இரண்டாம் நிலையாகிய சொல்நிலையில் முன், அவ்வாறு பல முகப்பட்டு அலைந்தது ஒரு சில முகமாகக் குறைந்து வரக் காண்கிறோம். மூன்றாவது நிலையாகிய மனப்போக்கு நிலையில் விருப்பு வெறுப்பு என்ற

இரண்டு முகமே தோன்றுகிறது. நான்காம் நிலையாகிய புறச்-செயல் நிலையில் செய்தலோ செய்யாமையோ என்ற ஒரு முகம் மட்டுமே விளங்குகிறது.

தனியாளும் சமுதாயமும் :- இங்கே இந்தப் பல நிலைகளும் ஒருங்கு இயைந்து வரும்போது தனிப்பட்ட ஆள் ஒரு நிலையைப்பற்றி முடிவுகட்டுவதற்கும் அதே நிலையைப்பற்றி அன்றைய சமுதாயமும், நாகரிகப் பண்பாடும் முடிவு செய்வ-தற்கும் இடையே முரண்பாடுதோன்ற இடமுண்டு. இந்த முரண்பாட்டால் மனத்தே ஒரு நெருக்கடி தோன்றுகிறது. ஆனால், பிறந்தது முதல் மக்கள் ஒருவரோடு ஒருவர் கூடி வாழ்ந்து வருவதனால் சமுதாயத்திற்கும், தனிமக்களுக்கும் உள்ள ஒற்றுமை வளர்ந்து கொண்டுவரவே காண்கின்றோம். மற்றொருவன்போல் தான் எண்ணவும், வேறொருவன்போல் தான் செய்யவும் தனிமக்கள் பழகிவிடுவது மக்கட்கூட்டத்தின் இயல்பே எனலாம். முதலில் நனவிலி நிலையாகவே இத்தகைய பழக்கம் பதிந்து விடுகிறது. இரண்டு திங்களான குழவியும் மற்றொருவர் புன்னகை புரியக்கண்டதும் தானும் புன்னகை புரிவதனைக் காண்கிறோம். இதனையே பிறர் செய்வதனை மேற்கொண்டு ஒழுகுதல் (Empathy) அல்லது ஒட்ட ஒழுகல் என்பர். இது முதலில் மறிவினையே போலத் தோன்றி விளங்கக் காண்கிறோம்.

சமன்பாடு :- மக்கட் கூட்டமும், பண்பாடும் (Culture), ஆளுமையும் (Personality) ஒன்றுபட்டு விளங்குவதனை ஒரு சமன்பாடாக (Equation) அறிஞர்கள் விளக்கி-வைத்துள்ளார்கள். உயிர்ப்பொருளை "உ" எனவும், பண்-பாட்டைப் "ப" எனவும், சமுதாயத்தைச் "ச" எனவும், ஆளுமையை "ஆ" எனவும் கொண்டு இவற்றில் ஒவ்-

வொன்றன் முழு நிலைமையையும் திரட்டிப் பேசுவதாக அமைத்துக்கொண்டால் இவற்றிடையே திகழும் ஒற்றுமையை

உ } ச } ப } = ஆ

என்ற சமன்பாடாக விளக்கலாம் என்கின்றார் ஓர் ஆசிரியர் (Kemball Young).

## II. சமுதாயம்

முதனிலை - வழிநிலைச் சமுதாயம் :- சமுதாயம் என்பது-தான் என்ன? குறிப்பிட்டதொரு நாட்டுக்குள் வாழ்ந்து தங்களை ஒருங்கு வாழத் தூண்டும் பொதுவான வழக்கங்கள், எண்ணங்கள், மன நிலைகள் முதலியன உடையராய் ஒன்றாகி, வேறுவகையான வழக்கம், ஒழுக்கம், மனநிலைமை முதலியன உடைமையால் வேறுபட்ட மக்கட் கூட்டத்தின் நின்றும் பிரிந்து விளங்கும் ஒரு மக்கட் கூட்டத்தின் பரந்தநிலையே சமுதாயமாகும். இங்கு ஒற்றுமையும் உண்டு; பிறவற்றின் நின்றும் வேற்றுமையும் உண்டு. இந்த வேற்றுமையே ஒற்றுமையின் எல்லை எனலாம். இந்தச் சமுதாயத்தை முதல் நிலைச் சமுதாயம் எனவும், இரண்டாம்நிலைச் சமுதாயம் அல்லது வழிநிலைச் சமுதாயம் எனவும் வேறு பிரிக்கலாம். நேருக்கு நேரே கூடி ஒத்துழைத்து நனவிலி நிலையிலும் இயற்கையாகவே ஒன்றுபட்டு, ஒரே வகையான பண்-பாட்டுடனும் சுற்றத் தொடர்புடனும் வாழுகின்ற கூட்டமே முதல்நிலைச் சமுதாயமாகும். குடும்பம், விளையாட்டுத் தோழர்-குழு, ஊர் முதலியன இத்தகைய சமுதாயங்களாகும். இவையே ஆளுமை வளரும் பள்ளிக்கூடங்கள் எனலாம். மக்கட் கூட்டத்தின் தூண்டல் இங்கே நேருக்கு நேராக விளங்கிவரக் காண்கின்றோம். சாதி முதலியன இப்போது

கட்டுவிட்டுக் கொண்டு வருகின்றன. இரண்டாம் நிலைச் சமுதாயமோ நாமாகவே விரும்பி வாழவரும் குழுவாகும். இது செயற்கையால் எழுவது ஒன்றும். உலகத்தில் உள்ள விஞ்ஞானிகளின் கழகம் முதலியன இதற்கு எடுத்துக் காட்டாம். தேசம், கட்சி, பள்ளிக்கூடம், பலவகைக் கழகங்கள் முதலியனவும் இரண்டாம் நிலைச் சமுதாயங்களேயாம். இங்கே காணப்படும் ஒற்றுமை நேர் முகமான ஒற்றுமை அன்றும். இந்த இடங்களில் எல்லாம் சட்டதிட்ட அமைப்புகள் விளங்கிவரக் காண்கிறும்.

இல்லறம் துறவறம் :— இந்தச் சமுதாய வாழ்க்கையில் தனியாள் தொடர்புற்று விளங்கும் நிலையின் இயல்பு, பரப்பு, ஆழம், எல்லை என்ற இவற்றைக் கொண்டே அத்தனி ஆளின் சமுதாய ஈடுபாட்டை அளந்தறிதல் வேண்டும். இந்த ஈடுபாடு அந்தந்தக் குழவிற்கு ஏற்பவும் அவரவர்களின் வயதிற்கு ஏற்பவும் மாறி வரக் காண்கின்றும். பலபல வகை-யான சமுதாயங்களில் ஒவ்வொருவரும் சிறுகச் சிறுக ஈடுபட்டு வருவதால், ஆளுமை ஒருமைப்பாடு பெற்று விளங்குவது அருமையாம். இந்துக்களும், இஸ்லாமியரும் மாறுபட்டு நிற்கும் நிலையில் இந்தியர் என்ற ஒருமைப்பாடு சிதறுவது இயல்பன்றே? சமுதாய வாழ்க்கையில் நம் இனம் என்றும் பிற இனம் என்றும், அக இனம் என்றும் புற இனம் என்றும், நமர் என்றும் பிறர் என்றும் பாகுபடுத்திக்கொண்டு நமரை விரும்பியும், பிறரைப் புறக்கணித்தும் வருவதே இந்த நாளைய உலகின் இயல்பாகிவிட்டது. இவ்வாறு வாழ்வது ஒருவகை ஒழுக்கமுறை என்றும், இந்த வேறுபாட்டினையும் தாண்டி, "யாதும் ஊரே யாவரும் கேளிர்" எனக் கிறிஸ்து-வினையும் வேறு பல பெரியோர்களையும் போல வாழ்வது மற்றையதோர் ஒழுக்கம் என்றும் பெர்க்சாங் என்ற பிரஞ்சுப்

பேராசிரியர் விளக்குகின்றார். முதல் ஒழுக்க வகையினை இல்லறம் என்றும், பின்னையதனைத் துறவறம் என்றும் திருவள்ளுவனார் கூறுகின்றார் எனலாம். தொடர்பு உடையார் மேற்காதலாம் அன்பே முதல் நிலையின் அடிப்படை. "இன்னார்" எனத் தொடர்பு வேண்டாது, எல்லார் மாட்டும் எவ்வுயிர் மாட்டும் செல்கின்ற அருளே பின்னையதன் அடிப்படையாம்.

பண்பாடு :— பண்பாட்டாவது யாது? பல காலமாகக் கருத்துக்கள் தொடர்ந்து வளர்ந்து சிறந்து விளங்கிவரும் நிலையினையே பண்பாடு (Culture) எனச் சுட்டுகின்றோம். இந்தப் பண்பாடு மக்கள் வாழும் இனத்தின் நிலைக்கேற்பப் பல பல கோலம் பெற்று நிற்கக் காண்கின்றோம். உணவு, வீடு, மனைவி மக்கள், காப்பு, சமுதாய அமைதி முதலிய அடிப்படையான தேவைகளை ஒட்டியும் பண்பாட்டின் கோலம் மாறும். மதம், கலை, பொழுது போக்கு, முதலியவற்றின் வழியாகத் தத்தம் அகநிலையை மக்கள் வெளிப்படுத்த விரும்பும் போது, இரண்டாம் நிலைத்தேவைகள் எழும் எனக்கண்டோம். அத்தகைய தேவைகளை ஒட்டியும் பண்பாட்டின் கோலம் மாறும். அங்கங்கே எண்ணுகின்ற கருத்து முறையும், செய்கின்ற செயல் முறையும் ஒரேவகையாக அமைந்து வரத் தொடங்குவதாலும், அங்கங்குப் பண்பாடுகள் வேறுபட்டுத் தோன்றுகின்றன. இத்தகைய சிறப்பியல்புகள் அனைத்தும் ஒரு சமுதாயத்திலிருந்து மற்றொரு சமுதாயத்திற்குக் காலவகையாலும், இடவகையாலும், நனவு நிலையிலோ நனவிலி நிலையிலோ பரவி வரக் காண்கின்றோம். இதனாலே பண்பாட்டினிடையே ஒரு தொடர்ச்சி எழுந்து விளங்குகிறது.

ஊடாட்டம் :- ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒவ்வொரு சிறப்பியல்பு உண்டு. உயிர்ப்பொருளின் அமைப்பும்,

முதனிலைச் சமுதாயத்தின் அமைப்பும், இரண்டாம் நிலை அல்லது வழிநிலைச் சமுதாயத்தின் அமைப்பும் ஒன்றோடு ஒன்று ஊடாடி ஒருங்கு இயைந்து வருவதனைக் கீழேகண்ட ஓவியங்கொண்டு விளக்கலாம்.




அம்புமுனை உள்ள வழியாகவே ஒவ்வொன்றன் பயன்பாடும் பிறவற்றினிடையே எவ்வாறு விளங்கவரும் என்பதனை இந்தக் குறிப்பினைக்கொண்டு நன்கு அறியலாம்.

சமுதாய ஈடுபாடு :— சமுதாயத்தில் ஈடுபடுவது என்பது நாம் என்ன வகையாக நடந்து கொள்கின்றோம் என்பதனையும், நாம் அதனால் என்ன நிலையை அடைகின்றோம் என்பதனையும் பொறுத்தே உள்ளதாம். இந்த உலக வாழ்க்கையாம் நாடகத்தில் நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கோலம் பூண்டு நடந்து வருகின்றோம்; ஒவ்வொரு நிலைமையை அடைகின்றோம்.

இவ்வாறு நாம் பூணும் கோலமாவது யாது? பிறர் நம்மிடத்தி-லிருந்து எதிர் பார்ப்பதற்கு ஏற்ப நாம் நமக்கென அமைத்துக் கொண்ட நம் நடத்தையின் சிறப்பியல்பினையே நாம் பூணும் கோலம் எனலாம். அப்போதைக்கு அப்போது எழுகின்ற நிலையினை அந்த அந்த இனத்தினர் பொதுவாக எவ்வாறு உணர்ந்து வருகின்றனரோ அவ்வாறே அந்த அந்த இனத்தில் வாழும் நாமும் உணர்ந்து வருகின்றோம். "சமுதாயத்தின் இயல்பிற்குப் பொருத்தமானதாகும்." என எதிர்பார்த்து இங்ஙனம் வாழ்வதே சமுதாயத்தின் திண்ணிய நிலைக்கு அடிப்-படையாகும். ஒருவன் பல கூட்டத்திடையே வாழ்ந்து வருவ-தால் ஒரு கூட்டத்திடையே உயர்ந்த நிலையையும், மற்றொரு கூட்டத்திடையே தாழ்ந்த நிலையையும் அவன் பெற்று வருவது புதுமை அன்றும்.

## III. சைகை

சைகை:- சமுதாய ஒற்றுமையை வளர்ப்பதற்குச் சிறந்த-தொரு கருவியாக மொழியே அமைந்துள்ளது. மக்கள் விலங்குபோலக் குறுக்காகக் கிடவாமல் நெடுக்காக எழுந்து நின்றபோது உயர்ந்த நிலையினை அடைந்து விட்டனர் எனலாம். எதிர் எதிர் நின்று அணைத்துக் குலாவி வாழ இங்கே இடம் ஏற்பட்டது. கண்ணாற் பார்க்கும் எல்லையும் வானம் வரை சுற்றும் முற்றும் பரவி வளர்ந்தது. பரந்த நோக்கமும் ஏற்-பட்டது எனலாம். வாயும், குரல்வளையும் உணவிற்கு என அமைந்த நிலை மாறிப் பேச்சுக்கு என்றே சிறந்து விளங்கத் தொடங்கின. கைகளும் நடப்பதற்கெனக் கட்டுப்பட்டு நிற்காமல் கருவிகளைக் கையாண்டு எந்திரங்களை வளர்க்க முற்பட்டெழுந்தன. முதலில் கைமெய் காட்டியே கருத்தினைத் தெரிவிப்பது மக்களிடையே வழக்கமாக நிலவியது. இந்தச்

சைகை முழுதும் முற்றுப் பெருததொரு செயலாகியது. 'சைகை' காட்டத் தொடங்கிய உடனேயே பிறர் அதன் பொருளை உணர்ந்து கொள்வதால் அதனை முற்ற முடியக்காட்ட வேண்டிய கட்டாயம் என்றும் எழுவதில்லையாம். சைகைகள் என்பவை முன் நாம் கூறிய சொல்நிலையில் எழும் செயல்களாம். இதனைக் குறிப்புநிலை எனவும் குறித்தோம்; அடையாளநிலை எனவும் கூறலாம். குரலிலிருந்து எழும் ஒலியையும் ஒரு சைகையாகக் கொள்ளலாம். சர் வில்லியம் பாகட் (Sir William Paget) என்பவர் நாவினுல் செய்கின்ற சைகையே, குரல்வளையின் ஒலியோடு சேர்ந்து, பேச்சாக மாறி விட்டது எனக்கூறுகின்ருர்.

சைகை வளர்ச்சி:— இவ்வாறு இந்தச் சைகைகள் அழையாகவும், பிறவாகவும் குழந்தையினிடத்தே எழும்போது, பசிமுதலிய அடிப்படையான தேவைகளைக் குறித்து வருகின்ற அந்தநிலையை உணர்ந்து அத்தேவைகளைத் தீர்த்து வைக்கச் சமுதாயம் அன்ருே முந்துகிறது? இந்த வகையாக நமக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பு நாம் பிறந்தது முதல் என்றும் நிலைபெற்று நிலவுகிறது. உயிர்ப்பொருள் தான் முழுதுமே இயங்கிச் சைகை காட்டி நிற்கும்நிலை முதலில் தொடங்குகிறது. உடலின் உறுப்பில் ஒன்றையோ, அல்லது அதன் சிறுபகுதியையோ, இயக்கிக் கைமெய் காட்டி வருகின்ற நிலை ஏறக்குறைய வளர்ச்சியின் முடிவுநிலையாம். அந்த முதல் நிலையிலிருந்து, இந்த முடிவுநிலைவரை படிப்படியாக வளர்ச்சி நிகழ்வதனைக் காணலாம். மொழி வளர்ச்சியினையும் சமுதாயத்தின் ஒருமைப்பாட்டு வடிவத்தினிடையே வைத்து ஆராய்தல் வேண்டும். குழவி பிறர் பேச்சினைக் கேட்கும்போது தன்னுடைய ஒலியையும் சமுதாயத் தூண்டலாம் பிற ஒலிகளோடு ஒருங்குவைத்து இயைபு படுத்தி விடுகிறது. சமுதாய

நிலையை இவ்வாறு உணரும்போது சில ஒலித்தொடர்கள் அதன் மனத்திலே சமுதாயப் பழக்க வழக்கத்திற்கு ஏற்ப நிலைபெற்றுவிடுகின்றன.

## IV. "நான்" என்ற எண்ணம்

பிறரை எதிர்பார்த்தல் :- நான் என்ற எண்ணமே, பிறரோடு வாழ்ந்து வரும்போதுதான் உருப்பெற்று வருகின்றதாம். பிறர் நம்மிடம் நடந்து கொள்வதுபோல நாமும் அவர்களிடம் நடந்து கொள்ளப் பழகிவிடுகின்றோம். பெரியோர் குழவியின் கையைக் குலுக்கி எதிர் கொண்டழைப்பதனைக் கண்ட மேனாட்டுக் குழவி தானும் அப்பெரியோர்களைக் கைகுலுக்கி எதிர் கொண்டழைக்கின்றது. கைகுவித்து வணங்குகின்ற பெரியோர்களைக் காணும் இந்திய நாட்டுக் குழவி அங்ஙனமே பெரியோர்களைக் காணும்போது, செய்து வரவேற்கின்றது. இவ்வாறு சமுதாயநிலைக்கு ஏற்பக் குழவி கற்றுக்கொள்வன-வற்றிற்கு எல்லையே இல்லை எனலாம். பிறருடைய செயற்-பாட்டை நமதாக்கிக் கொள்கின்ற இந்த நிலை "அகத்தெழு புறக்காட்சி"(Interojection) எனப் பெறும். இவ்வாற, பிறர் எவ்வாறு செய்வர் என எதிர்பார்த்து அந்தப்படியே தானும் நடந்து வருகிறது. சில காலத்திற்குள் இவ்வாறு எதிர் பார்ப்ப-தில் குழவி வல்லதாகிறது. இவ்வாறு எதிர் பார்ப்பதால் நடத்தை முரண்பாடின்றி வழக்கமாகி விடுகிறது. இவ்வாறு எதிர்பார்க்க முடிந்தபோது பிறர் எவ்வாறு நடப்பர் என முன்னாகவே கூறுவதும் இயலுகிறது. எதிர்பார்க்கும் நிலையும், முன்னாக அறிந்து கூறும் நிலையும் ஒழுக்க முறையினை நிலை-பேறுறச் செய்வனவாம்.

தன்னைப் பிறனாய்க் காணல் :— ஆனால் "நான்" என்ற எண்ணம் வளரவேண்டுமானால் குழவி தன்னையே காட்சிப்

பொருளாகக் காணுதல் வேண்டும். கண்ணாடியில் தன் உடலைக் காண்பது போலத் தன் மனத்திற்குள்ளே தன்னையும் பிறரைப்போலக் காணுதல் வேண்டும். பிறருடைய புறநிலை ஒழுக்கத்தினை, அகத்தெழு புறநிலைக்காட்சி வழியே தனது ஒழுக்க நிலையாகக் கண்டது போலத் தனது செயலையும் காணவருதல் வேண்டும். பிறர்போல நடந்து தன் நடத்தையைப் புறநிலையாக அகத்தே கண்டபோது என்ன நிகழ்கிறது? பிறர் நடத்தையைக் கண்டு தான் துலங்கி வந்தது போலத் தன் நடத்தையையும் புறநிலையாகக் கண்டு துலங்கி வர முடிகிறது. இதன் பயனாகத் தன்னைக் காட்சிப் பொருளாகக் காணும் அனுபவம் மிகுந்து வருகிறது எனலாம். விளையாடி வரும் பொழுது தன்னிடம் பிறர் பேசியது போலக் குழவி தனக்குத் தானே பேசி விளையாடி வருகின்றது. அவ்வாறு விளையாட்டுக் குழவியினிடத்தே தானான தன்மையும், பிறரான தன்மையும் ஒருங்கு நிகழ்கின்றன. வெளிப்படையாகப் புறநிலையில் அன்றித் தம் கற்பனை உலகில், கற்பனைக் குழவிகளோடு, இவ்வாறு தானான தன்மையிலும், பிறரான தன்மையிலும் விளையாடி வரும்போது கற்பனையான பேச்சுகளிடையே தன்னையே காண்பானாகவும், காட்சிப் பொருளாகவும் உணரு-கின்றதொரு புதுமை தோன்றுகிறது. பன்றியாட்டம், உப்பு விற்கும் ஆட்டம் முதலிய பல பல ஆட்டங்களிலே அந்த அந்த ஆட்டத்திற்கும், பண்பாட்டிற்கும் தக்கபடி பல பல கோலங்களையும் பூண்டு குழவி விளையாடி வருகிறது. இங்கு எழும் பேச்சுக்கள் எல்லாம் மொழி வளர்ச்சியைப் பொறுத்-தனவேயாம். இவ்வாறு பல பல கோலங்கள் பூண்டு விளையாடி அகத்தெழு புறக்காட்சியில் திளைக்கின்ற குழவி தன் பல வகைக் கோலங்களுக்கு ஏற்ற நடத்தைகளை எல்லாம் ஒருங்கு இயைய வைத்தும் காண்கிறது. "தன்னினும் பிறிது" என்ற எண்ணம் உயர்ந்து பொதுநிலை வளர்ந்து வருவதால் "பொது

நிலையில் திகழ்வதொரு பிறிது பொருள்" என்ற எண்ணமும் தெள்ளத் தெளிய விளங்குகிறது. "பிறிது" என்று எண்ணு-வதும் பேசுவதும் பழக்கமாய் விடுகின்றன.

புதுமையும் பழமையும் :— இவ்வாறு இரு வேறுநிலையில் நின்று குழவி விளையாடுவது எட்டாம் ஆண்டிற்குள் முதிர்ந்த நிலையை அடைகிறது எனலாம். இவ்வாறு விளையாடும் போது குழவி, தான் இங்ஙனம் நடக்கவேண்டும் என்று அறிந்து கொள்வதோடு நின்று விடாமல், அந்த ஆட்டத்தில் பிறர் எங்ஙனம் நடந்து கொள்ள வேண்டும் என்பதனையும் உணரவேண்டும்; உணரவும் கூடும். நாடக மேடையில் கூத்-தாடுபவன், தான் பூண்ட கோலத்திற்கு ஏற்ப நடிக்கின்ற மனப்பான்மை கொண்டு விளங்குவதோடு, அதனைச் "சரிவர நடித்து வருகின்றேனா" என ஆராய்கிற தன் இயற்கை மனப் பான்மையையும் விடாது கொண்டு திகழ்கின்றான் அன்றோ? அங்ஙனமே குழவியும் தனக்கே இயல்பான தானான தன் நிலைமையையும், அவ்வப்போது கோலங்கொண்டு விளையாடு-கின்ற பிறநிலைமையையும் உணர்ந்து வருகிறது. ஆழ்வார்கள் தாமான தம் நிலையிலும், பிராட்டியான பிறிதுநிலையிலும் பாடு-கின்றார்கள் என வைணவப் பெரியோர் கூறுவது இந்த நிலையை விளக்க உதவலாம். பல வகையான கோலங்களிடையேயும் குழவி தன் இயற்கை நிலையைப் பிரித்து உணரத்தொடங்கும் போது "தான்" என்ற எண்ணம் முற்றுகிறது எனலாம். அந்த எண்ணம் முரண்படாது தொடர்ந்து ஒளிர்வதும் புலனா-கின்றது. குழவிகள் இந்த நிலையை அடையப் பல நாள்கள் செல்லும். குழவி கொள்ளும் பல வகையான கோலங்கள்தாம் யாவை? பிறர் நடத்தையை எதிர்பார்த்துக் குழவி நடக்கும் நடத்தையே ஆம். ஆதலின், அத்தகைய நடத்யை முன்னாக அறிந்து கூறலாம். இது பழைய நிலையாம். ஆனால் தானான

தன்மை, "நான்" எனப்பழுத்து வருவது மிக மிக மெல்லவே ஆம். ஆதலின் "நான்" என்று நின்ற நிலையின் செயலை முன்னாக அறிந்து கூறுவதற்கு இல்லை. இது புதிய நிலையாம். நடத்தையில் புதுமையும் பழமையும் இவ்வாறு கலந்து வருகின்றன. பழமையை ஒட்டி நடக்கும் கோலங்களும், புதுமையாகத் தோன்றும் தானான தன்மையும் ஒருங்கிணைந்து குழவியினிடத்தே இவ்வாறு வளரக் காண்கிறோம்.

பிறரேன நடத்தல் :— குழவியின் நடத்தையைக் கண்டு பிறர் துலங்கிவருவதனைக் குழவி பார்த்து அதுபோலவே தானும் துலங்கி நிற்கப் பழகுகிறது. பிறர் புகழ்வதனைப் புகழ்ந்தும் பிறர் பழிப்பதனைப் பழித்தும் வரும்போது, பிறர் பழிப்பதனைத்தான் செய்யும் நிலையில் எல்லாம் கண்டு தன்னைத் தானேயும் பழித்துக் கொள்ளுகிறது. பிறர் புகழ்வதனைத் தான் செயயும்போது கண்டு தன்னைத்தானே புகழ்ந்து கொள்கிறது. மனச்சாட்சி வளரும் வகை இதுதான். வயது ஏற ஏறச் சமுதாயம் குழவிக்கு என ஏற்படுத்தும் குறிக்-கோள்களைத் தன்னுடையதாகவே குழவி கருதி வாழத்-தொடங்குகிறது. சமுதாயத்தின் குறிக்கோள் மனச்சான்றாக முற்றுகிறது.

## V. பேச்சும் சமுதாயமும்

சொல்லும் சமுதாயமும் :— குழவி பேசத் தொடங்கும் போது, செயல்களைக்கண்டு வருகிறதேயன்றி எண்ணங்களைக் காண்பதில்லை. அந்த இளவயதில் எண்ணம் எழுவது எங்கே? முதலாண்டின் முடிவில் குழவியினிடம் எழும் எதிர் ஊன்றல்-களிற் சில குறிப்புநிலையாக மாறுகின்றன. சில வெளிப்படைச் செயலாக மாறுகின்றன. அப்போதும் அக்குழவி அந்த எதிர்-

ஊன்றல்களின் பொருள்களை அறிவதில்லை. தன்னை நோக்கிப் பிறர் செய்துவரும் செயல்களைக் காண்கின்ற குழவியி-னிடத்தில் எழுகின்ற எதிரூன்றல்களாகவே அதன் ஒலிகள் அனைத்தும் விளங்குகின்றன. எனவே, சொல்களும் செயல்-களாகவே முதலில் எழுகின்றன என்பதாயிற்று. காலப் பரப்-பிடையேயும் குழவி இயங்கிவருகிறது. இதனைக் குறிக்கவே சொற்கள் எழுகின்றன. குழவியினிடத்தும், பிறரிடத்தும் எழும் இயக்கங்களை அடக்கி ஆளும் திறமை பெற்றுச் சொற்கள் விளங்குவதனைக் குழவி உணர்ந்து கொள்கிறது. சொற்கள் பிறர் செவியில் விழும்போது, அவ்வாறு அவற்றைக் கேட்போரிடத்தே, "என்ன செயல்கள் நிகழும்" என்பதனையும் குழவி எதிர்பார்த்து நிற்கின்றது; தன்னிடத்தே என்ன செயல்கள் நிகழும் என்பதனையும் எதிர்பார்த்து நிற்கின்றது. பசி எடுத்த குழவி அழுதபோது தாய் அணைத்து எடுத்துப் பாலூட்டியதும், அந்த அன்பிடையே குழவி பசியாறி நின்றதும் அக்குழவியின் செயலைப் பின் எல்லாம் உருப்-படுத்திவரக் காண்கின்றோம். இவை அனைத்தும் சமுதாயச் செயனிலையே எனலாம். இங்கு எழும் இயக்கங்கள் வேறொரு-வரை நோக்கி எழுவனவே ஆம்.

பேச்சின் உண்மைநிலை :- "பேச்சின் உண்மை நிலையைக் காணுதல் வேண்டும். "ஆ" என்பவர் ஏதோ ஒன்றினைக் காட்டி அதனைக் கொண்டு வருமாறு "ஈ" என்பவரை வேண்டிக் கொள்கின்றார். அவர் காட்டியது ஒருபூவாம். இந்த நிலையை உட்கொள்ளாது, "ஆ" வின் இயக்கத்தினை மட்டும் "ஈ" என்பவர் கண்டிருந்தால், அதற்குத் தக ஒருவாறு துலங்கிநிற்பர். அத்தகைய துலக்கநிலை அந்த இயக்கத்திற்கு ஏற்ற எதிரூன்றலாகுமே அன்றிப் பூவினுக்கு ஏற்ற எதிரூன்றலும் ஆகாது; கையாற் காட்டியதற்கு ஏற்ற

எதிரூன்றலும் ஆகாது. ஆனால், அக்காட்சியை "ஈ" என்பவர் வெறுநிலை இயக்கமாக உட்கொள்ளவில்லை; "ஆ" என்பவர் ஒன்றனைச் சுட்டிக் காட்டுகின்றார் என்பதனை அந்த நிலையில் தம்பழக்கத்தின் பயனாக உணர்ந்து கொள்கின்றார். அந்த இயக்கத்தினைத் தனிநிலையாகக் காணாமல் வேறொன்றனைச் சுட்டும் அறிகுறியாகவே உணர்கின்றார். அதனாலே "ஈ" யின் செய்கை "ஆ" வின் இயக்கத்தை நோக்கி எழுவதொன்றா-காது, "ஆ" என்பவர் காட்டிய பொருளை நோக்கி எழுவ-தொன்றாகிறது. "ஆ" வின் இயக்கத்தை மட்டும் தனிநிலை இயக்கமாகக் கண்டிருந்தால் அந்த இயக்கத்தைக் கண்டதன் பயனாக "ஈ" யிடத்தே சில இயக்கங்கள் ஒன்றைப் பார்ப்பதும், பிடிப்பதுமாக வடிவுபெற்று எழுந்து விளங்குவது இயற்கை-யாம். ஆனால் "ஆ" என்பாரின் இயக்கமோ "ஈ" என்பாரின் பார்வையை "ஆ" என்பார் காட்டிய பொருளாம் பூவினிடம் செலுத்துகின்றது. "ஆ" என்பாரின் இயக்கத்திற்கு ஏற்ற எதிரூன்றலாக இருப்பதனைவிட்டு அப்பொருளே தூண்டலாக அமைய, அப்பொருளை நோக்கி அதனைப் பார்த்தல், அதனைப் பறித்தல் முதலான எதிரூன்றல்களாக "ஈ" யின் துலக்கம் விளங்கிவரலாம். அவ்வாறும் விளங்கவில்லை. "ஆ" என்-பாருக்கும் அவர் காட்டிய பூவினுக்கும் உள்ள தொடர்பிற்கு ஏற்றவாறு மாறிவரும் வகையில் இவருடைய எதிரூன்றல் எழுகின்றது. "ஆ" என்பாரின் இயக்கத்தினையும் ஒலிகளையும் "ஈ" என்பார் உணர்ந்து நின்ற நிலையின் சிறப்பியல்பினை நாம் நோக்குதல்வேண்டும். "ஆ" என்பார் நிலையிலிருந்து அப்பூவினை நோக்கி எதிரூன்றுவதே இங்குள்ள சிறப்பியல்பாம். தன் நிலையிலிருந்து அப்பூவினை நோக்காமல் "ஆ" என்பார் அனு-பவத்தில் அது தொடர்புண்டு கிடப்பதற்கேற்ப அதனை "ஈ" என்பார் உணருகின்றார். அங்ஙனமே "ஆ" என்பாரும் தன்னோடு நேருக்கு நேரான தொடர்புடையதாக அந்தப்

பூவினைக் கருதி அதனைக்கொண்டு வருமாறு "ஈ" என்பாரை வேண்டிக் கொண்டாரல்லர். "ஈ" என்பார் அதனைப் பறித்துக் கையில் எடுத்துவரக்கூடியது ஒன்றுகவே அப்பூவினைக்கருதி அவ்வாறு வேண்டிக்கொண்டார். "ஈ" என்பாரின் அனுபவத்தில் அந்தப் பூவானது எந்த முறையிலே ஒருங்கு இயைந்து தொடர்புண்டு கிடக்குமோ அந்த முறையிலேயே அதனைக்கண்டார். ஈதே வெளியீடு, பொருண்மை, குறிப்புநிலை என்றவற்றின் கருத்தும் உண்மைநிலையும் ஆம். நடத்தைகள் எழும் இருவேறு நிலைகளில் ஒன்று பொதுவாகிவிடக் காண்கிறோம். பொருள் உணர்தல் என்றால் இருவரும் சேர்ந்து ஒன்றனையே எதிர்பார்ப்பதாம். ஒன்றை ஒன்று சுட்டிநிற்கும் நிலையில், சுட்டிநிற்பதற்கு ஏற்ப இயங்கிவரும் போது, இரண்டினையும் உட்கொண்டு நிற்கின்ற 'பொது வேலையில் ஈடுபடுவது' என்று கூறுகின்றநிலை தோன்றுகிறது." ட்யூயி (Dewey) என்பார் பேச்சின் உண்மைநிலையை இவ்வாறு விளக்குகின்றார்.

## VI. பொருளறிதல்

சொல்லும் பொருளும் :— முதலில் குழவி 'பால்' என உணரும்போது, இனிமை வெண்மை, உணவாந்தன்மை முதலியவற்றை அதன் இயல்பாகக் கொள்வது போலப் 'பால்' என்ற பெயருடைமையையும் அதன் இயல்பாக உணருகின்றது. சொற்களும் காட்சிப் பொருள்களும் இவ்வாறு முதலில் முழுநிலையாக ஒருப்பாட்டு வடிவம் பெற்று விளங்குகின்றன. பின்னே செயற்கை மறிவினையில் நிகழ்வது போலப் பிரிகின்றன. மணியும் உணவும் ஒருங்கு இயைந்து விளங்கியநிலையில் பழக்கத்தின் பயனாக மணிமட்டும் உணவினை எதிர்பார்க்கும் நிலையை எழுப்பும்போது, மணி என்றும் உணவென்றும் குறிப்பதும் குறிக்கப் படுவதுமாக வேறுபடு-

கின்றன அன்றோ? ஈதன்றோ செயற்கை மறிவினையில் நாம் காண்பது? மணி ஒரு குறியாகிறது. குறி என்பது மற்றொன்றுக்குப் பதிலாகச் சுருக்க நிலையில் வருவதாம். "தலைக்கு ஒரு பேச்சா" என்றபோது தலைஎன்பது தலைமை-யுடைய ஆளையன்றோ சுட்டுகிறது? இவ்வாறு உறுப்பு, உறுப்-பியைச் சுட்டவருவது போலாம் இதுவும். அறிகுறிகள் தூண்டுநிலையாகவும், துலக்க நிலையாகவும் விளங்குகின்றன. குழவியின் உணர்வுநிலை செயல்நிலை என்ற இரண்டின் முழுநிலையே அதன்மனநிலையாம். அதில் ஒருபகுதியாகவே சொற்கள் விளங்குகின்றன. ஒரு குறிப்பிட்ட காட்சிப்-பொருள் (உணவு) குறிப்பது தான்யாது? நம்மிடத்தே தோன்றும் (உண்ணுதல்) எதிருன்றல்களையே அக்காட்சிப் பொருள் சுட்டுகின்றது. இந்த எதிருன்றலோ செயலும் (உண்பதும்) உணர்ச்சி நிலையுமே (திருப்தியும்) ஆம். நம்முடைய எதிருன்றல் சுற்றுப்புறச் சூழலிடையே ஒரு பகுதியையே (இலையில் உணவு) எப்பொழுதும் நோக்கி எழுகின்றது. அந்த அளவில் அது புறநிலைச்சுட்டுடையது எனலாம். ஆனால், ஒவ்வோர் எதிருன்றலோடும் அதற்கு ஏற்றது ஒரு மனநிலையும் எழுகிறது. ஈதே நடத்தையின் அகநிலையாம். எனவே, சொற்கள் இருவேறு சுட்டு நிலையுடையன என்பதாயிற்று. புறநிலைச்சுட்டாய் அமைவது ஒன்று; காலப் பரப்பிடை-யேயும், இடப்பரப்பிடையேயும் ஒருபொருளை அதன் இயல்-புகளோடும், பண்புகளோடும் அமைப்பதே புறநிலையைச் சுட்டுவதாம். ஒரு பொருளினைப் பற்றிய கருத்துக்களும் உணர்ச்சிகளும் அப்பொருளினைச் சுற்றிவர, அப்பொருண்-மையைக் குறிப்பதே அகநிலைக் குறிப்பாம் (Connotation).

பொருள் அறிதிறம் :— எண்ணங்கள் உள்ளுக்கு உள்ளே கூத்தாடி நிலவும் எல்லை ஒன்று தோன்றுகிறது. இதனை

அவற்றின் அகநிலை அரங்கம் என வழங்கலாம். குழவி பிறரோடு பேசி வந்தது போலத் தன்னோடுதானே பேசி வருகிறது. எண்ணம் இவ்வாறு இந்த அகநிலை அரங்கத்தில் கூத்தாட வருகிறது. ஈதே எண்ணங்களின் சமுதாய இயல்பாம். குழவி பிறரோடு கலந்து வாழும்போது "தான்" என்ற எண்ணம் அதன்மனத்தினிடையே வேரூன்றி வரக்கண்டோம். "சமுதாயம் இவ்வாறு செயலுறும்" என எதிர் பார்த்து அதற்கு ஏற்ப மனத்திற்கு உள்ளாகவே முன்னேற்பாடு செய்யும் முறையைத்தான் எண்ணம் என்பது குறித்து வருகிறது. பொருள் அறியும்திறம் எவ்வாறு வளர்கிறது? பல பொதுநிலைக்கோலம் பெற்று நடந்து வரும் நிலையில் பொருளறியும் திறனும் ஒத்துவளர்கிறது எனலாம். வேறுபாடுகளும், ஒப்புமைகளும் தோன்றிவளரும்போது வழக்கிற்குப் பயன்படும் வகையில் பொருள்களை ஆண்டுவருவதற்குச் சொல் உதவுகிறது. இவ்வாறு ஆண்டு வருகையில் அந்த அந்தச் சமுதாயத்தின் பண்பாட்டிற்கு ஏற்றதாக அமைந்த சொல்லே மிகமிக உதவுகிறது.

உயிரும் உயிரல்லதும்:— சூடுண்ட குழவி அழாது இருப்பது உண்டோ? அதற்கு ஆறுதல் அளிக்கின்ற பெற்றோரை, அதன் அருகே அந்த அழைகொண்டு வாராமல் இருப்பதும் உண்டோ? இங்கும் சமுதாய இயல்பு விளங்குதல் காண்க. உயிர்ப் பொருளையும், உயிரல் பொருளையும் பிரித்துணர்வது எங்ஙனம்? பிறரது நிலையைத் தனதாகக்கொண்டு குழவி உணர வந்தது போல உயிரல் பொருள்களின் நிலையையும் தனதாகக் கொண்டு குழவி உணரத் தொடங்குகின்றது. மக்களோடு ஊடாடும்போது அவர்கள் செயற்பாடு காலத்திற்குக் காலம் மாறிவரக் காண்கின்ற குழவி உயிரல்பொருள்கள் அவ்வாறு மாறிவாராது ஒரே நிலைமையில்

எதிருன்றிவரக் காண்கின்றது. இவ்வாறு மாருது நிற்கும் நிலைமையை எதிர்பார்த்தே அதற்குத் தக உயிரல் பொருள்களிடையே குழவியின் நடத்தை நிகழ்ந்துவரக் காண்கின்ருேம்.

தருக்கமும் கற்பனையும் :— மொழி இரண்டு வடிவில் நிலவுகிறது. அதற்கு ஏற்ப எண்ணமும் இருவேறு வடிவில் நிகழ்கிறது. ஒன்று புறநிலை எண்ணம். மற்ருென்று அகநிலை எண்ணம். ஈதே கற்பனை எண்ணமாம். கற்பனையில் தோன்றும் இயைபுகள் தருக்க முறையாக இயைபுபெற்றன அல்ல; நம் விருப்பத்திற்கு ஏற்ப இயைபுபெற்று விளங்குவனவாம். இங்கே உணர்ச்சியும் மெய்ப்பாடும் அறிவு நிலையை அடக்கி ஆளுகின்றன. இந்த எண்ணங்கள் கட்டுக்கு அடங்காது முழு உரிமைபெற்று உலவுகின்றன. முதலில் குழவி ஒரு சொல்லைக் கூறியதும், அதன் தாய் அப்பொருளைத் தந்து உதவுவதுகண்டு சொல்லில் ஒரு மந்திரசக்தி இருப்பதுபோலக் குழவி உணருகிறது. ஒரு பொருள் தன் எதிரே இல்லாத போதும் அதனைப்பற்றிப் பேசி வருவதில் ஓரின்பம் தோன்றுகிறது. குழவி இவ்வாறு தனக்கும் வேருன பொருள்களின் இருப்பினை உணரத் தொடங்குகிறது. இவ்வாறு குழவி புறநிலை எண்ணங்களையும் கற்பனை எண்ணங்களையும் வேறுபிரித்து உணர்கிறது.

இரண்டிற்கும் இடம் :— குழவியின் பேச்சானது புறநிலையைச் சுட்டிவரச் சுட்டிவரக் குழவியினிடத்தே "தான்" என்ற எண்ணமும் உடன் வளர்ந்து வருகிறது. குழவி பிறாது கோலங்களைக் கண்டு நடக்கத் தொடங்கினுல் அன்றி, வளம் பெற்றதொரு பேச்சுத் திறமையைப் பெற்றுச் சிறப்பதில்லை. இரண்டு வகையான எண்ணங்களுக்கும் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் சிறந்த இடமுண்டு. வெறியாளரது மனநிலை - பொது

மக்களது பகற்கனவு — கலைவாணரது கற்பனை — அரசியல் பொருளியல் திட்டம் — பொது அறிவு — சமுதாய சாத்திரங்கள் — இயற்கைநூலில் காணவரும் தருக்க முறை எண்ணங்கள் — இவ்வாறு கற்பனை எண்ணமும் தருக்க எண்ணமும் ஒன்று மற்றொன்றில் படிப்படியாகச் சென்று முடியக் காண்கிறோம். இரண்டுவகை எண்ணங்களும் இயற்கையே ஆம். கற்பனையையும் புறமுகமாக நோக்கிவரத் தூண்டிக் கலை, உண்மை ஆராய்ச்சி, புதுமைக்காட்சி முதலியனவாகப் பயன்படுமாறு செய்தல் வேண்டும். ஐன்ஸ்டைன் கண்ட கொள்கை முதலில் கற்பனையாகத் தோன்றியது அன்றோ? ஆதலின், கற்பனை வெறும் பகற்கனவாக முடியாது பலரும் துய்த்து மகிழும் பண்பாடகப் பழுத்து இனித்தல் வேண்டும். "எண்ணங்களில் போல மொழியின் சிறப்புநிலையும் இவ்வாறு தனிநிலையாக மனத்தகத்தே ஒழியாது புறநிலைக்கும் உதவுவதாக நிற்கும் சமுதாய நிலையே ஆம்." என்பதும் இங்ஙனம் தெளிவாகிறது.

## VII. சொல்லும் ஆளுமையும்

பன்னிலை ஆளுமை :- குழவி பலவேறு கோலங்கொண்டு விளையாடி வருவதனைக் கண்டோம். ஒரு சில கோலங்கள் பெரிதும்ஒத்திருக்கவும், வேறு சில முழுதும் ஒவ்வாதிருக்கவும் காண்கிறோம். ஆசிரியனாக நடப்பதும், தந்தையாய் நடப்பதும் ஒத்திருக்கலாம். ஆசிரியனாக நடப்பதும், கணவனாய் நடப்பதும் வேறுபட்டுத்தானே தோன்றும். இவை அனைத்தும் ஏதோ ஒரு நோக்கத்தைச் சுற்றி ஒருங்கியைந்து நிற்கும். இல்லையேல் "நான்" என்ற எண்ணத்தினைச் சுற்றி ஒருங்கியைந்து நிற்கும். அவ்வாறு ஒருங்கு இயைய வாராமல் போனால் குழவி இரு வேறு நிலையில் இயங்கி வரவும்

காண்போம். இவ்வாறு இயங்கி வருவதால் கேடொன்றும் இல்லை. பள்ளியில் ஒருவகையாகவும், வீட்டில் வேறு வகையாகவும் நடந்து வருகிற குழவியை மனக் கோளாற்றால் கெட்ட குழவி எனக் கூறத் துணிவார் யார்? ஆனால், இந்த நிலை பெரிய மனக் கோளாற்றினைச் சுட்டவருவதும் உண்டு.

போச்சாம் :— போச்சாம் (Miss Beauchamp) என்ற அம்மையார் நான்கு வேறு ஆளுமைகளோடு (Personality) விளங்கினாராம். குர்ரியாம் (Mrs Curriam) என்ற அம்மையார் நனவுநிலையில் ஓர் திறமையும் இன்றிக் கிடந்து நனவிலி நிலையில் பலரும் பாராட்டும் கதைகளைத் தம்மையும் அறியாமல் எழுதி வந்தனராம். இவ்வாறு வெவ்வேறு நிலைகள் எழுவது அந்த அந்த நிலையில் தோன்றும் நினைவு நிலையையும் மறப்பு நிலையையும் பொறுத்ததாம். குர்ரியாம் அம்மையார் கதை எழுதும்போது பொதுவாக உலகில் இயங்கிவந்த நிலையை அடியோடு மறந்தனர்; உலகில் இயங்கும்போது கதை எழுதும் நிலையை முழுதும் மறந்தனர். நனவிலியாய் இருந்தது நனவாகியும், கனவாக இருந்தது நனவிலியாகவும் இங்கு மாறக்காண்கிறோம். ஆதலின், வேற்றுநிலை ஆளுமைகள் நனவு நிலையையும், நனவிலி நிலையையும் பொறுத்தன என்று கூறுதல் வேண்டும். நம்முடைய சமுதாய வாழ்க்கையே இவ்வாறு ஆளுமையில் எழூம் பிளவினை எழாதவாறு தடுத்துக் காத்து ஒற்றுமையை வளர்க்கின்றது எனலாம். வெறுப்பு நிலையும், விருப்புநிலையும் மிக மிக முரண்பட்ட நிலைகளேயாம். ஆனால், இவை நமமை நோக்கிய விருப்பு நிலையாகவும், பிறரை நோக்கிய வெறுப்பு நிலையாகவும் பிரிந்து நின்றால் அவை முரண்படாது சமுதாய வாழ்க்கையின் காரணமாக ஒற்றுமை பெற்று விளங்குகின்றன அன்றோ?

சமுதாயமும் பேச்சும் :— சொற்களே குழவியின் நிலைகளையும் கோலங்களையும் வரையறுத்து விளக்குகின்றன. ஒழுக்கத்தின் எல்லையினையும் சொற்களே சுட்டுகின்றன. சமுதாயத்தின் பழக்க வழக்கங்களை அறியவும் உதவுவது பேச்சேயாம். இவ்வளவும் கூறியமையால் சமுதாய வாழ்க்கையினைக் கட்டி அமைத்தும், பாதுகாத்தும், பலரும் அதனோடு பொருத்தமுற்றுத் திருத்தமுறுமாறு செய்தும் வருவது பேச்சே என்பது தெளிவாம். பகை எழுகின்ற இடத்தும் போராட்டம் எழாது வெறும் பேச்சாட்டமாக ஒழிவது இந்த மொழி ஒன்று இருப்பதாலேயாம். சீற்றம் பொங்கி எழும்போது மற்றவன் தலையை உடைக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. "அவன் தலை உடைய" என்று வைவதாலோ, "தலையை உடைப்பேன்" என்று உறுமுவதாலோ அந்தச் சீற்றம் தணிகிறதன்றோ? ஆதலின், சமுதாய வாழ்க்கைக்கு மொழியால் எழும் நன்மைகளை அளவிடப் போமோ?

> "நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
> குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்"
>
> (திருக்குறள் — 959)

---

# 24. குடும்பம்

---

## I. குழவியின் சமுதாய உணர்ச்சி

ஒத்துழைப்பு:- பிறரோடு கூடி வாழ்வதே மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பாகும். நம்முடைய உணவினை விளைப்பார் ஒருபுறம்; நம்முடைய உடையை நெய்வார் ஒருபுறம்.

இவ்வாறு பலருதவி கொண்டே வாழ்ந்து வருகின்றோம். உலகிற் பிறந்த குழவி தாய் உதவியின்றி வாழ முடியுமோ? கூட்டுறவால் விளங்குவதே நம் வாழ்வாகும். நம் இன்பமும் ஒத்துழைப்பில் பழுக்கும் பழமேயாம். ஆகவே, இவ்வாறு கூட்டுறவாக வாழ்ந்து வரும்போது பிறரோடு தக்கவழியில் பொருத்தமுற்றுத் திருத்தமுற வேண்டுமன்றோ?

சமுதாயப் படிநிலைகள் :— சமுதாய உணர்ச்சி இன்றி வாழ்வது அருமையினும் அருமையாம். ஆதலின், குழவியினிடத்தில் இந்தச் சமுதாய உணர்ச்சி வளர்கின்ற வகையினையும் நாம் ஆராய்தல் வேண்டும். இந்த உணர்ச்சியினையும் பல படிநிலைகளாக வைத்து நோக்கலாம். குழவி உலகிலே பிறருதவியைப் பெறவேண்டுமானால், அதனிடத்தே சிறிதளவேனும் இந்தச் சமுதாய உணர்ச்சி விளங்குதல் வேண்டும். இந்த அடிப்படையான உணர்ச்சியினைக் (i) கீழ்நிலைப்படி எனலாம். பிற குழவிகளை வருத்தாது அவற்றின் பொருள் உரிமையைப் பாராட்டிப் பெரும் போராட்டத்திற்கு இடமின்றி வாழ்ந்து வருமாறு சமுதாயத்தோடு பொருத்தம் உற்றுத்திருந்திநிற்கும் நிலையே சமுதாய உணர்ச்சி நிலையின் கீழ்நிலையாம். (ii) சமுதாயத்திற்கு எவ்வகையாலும் முரண்படாது அடங்கி ஒடுங்கி வாளா கிடப்பதே இதற்கு அடுத்து உயர்ந்து நிற்பதொரு படியாம். ஈதே சமுதாய உணர்ச்சியோடு எழுகின்ற நடத்தையின் உயர்நிலையாம் எனக் கருதுபவரும் உள்ளனர். ஆனால், இந்த எதிர்மறைநிலை ஒரு சடநிலையேயாம். இங்கு ஆக்கப்பாடான செயல் ஒன்றும் விளங்கி வருவதற்கு இடமில்லை. (iii) ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுத்துக் கூட்டுறவாய்த் திருந்திப் பொருத்தமுற்று அமைவதே இதனினும் உயர்ந்த படிநிலையாம். கூட்டுறவையும், கூட்டு வேலைகளையும், பல துறையிலும் கூட்டாய் இயங்கிவரும்

நிலையினையும் பாராட்டாதவர்கள் இல்லை. கூட்டுறவு என்றால் கூட்டாய் இருக்கும் இருவரோ, பலரோ ஒத்துவாழ வேண்டும். ஒருவன் மட்டும் கூட்டுறவைப் பின்பற்றுதபோது மற்றொருவன் கூட்டுறவு உணர்ச்சியோடு வாழ்ந்து என்ன பயன்? எனவே, தனியாள்களுக்குக் கூட்டுறவினை எடுத்தோதிப் பயனில்லை. உலக வாழ்க்கை அனைத்தும் கூட்டுறவாய் நிகழுமாறு நம்முடைய சமுதாயம் மாறி அமைந்தால் மட்டுமே கூட்டுறவு பழக்கமாய்ப் பதிந்துவரும். இத்தகைய சமுதாய உணர்ச்சியால் மிகப் பொருத்தமுற்று நிற்கும் நிலைக்கு ஓர் உயர்ந்த எல்லையும் உண்டு. (iv) பிறரை முழுதும்உணர்ந்து அவ்வுணர்ச்சிக்கும் உணர்வுக்கும் தக ஒழுகும்போது மட்டுமே அந்த உயர்வெல்லையை அடைதல்கூடும். இவ்வாறு உணர்ந்து ஒழுகுவதனை வளர்ப்போரே பரந்த நோக்கம் உடையார் ஆவர். குறுகிய நோக்கம் உடையாரோ இதனை வளரவிடாமல், தடுக்கவும் செய்கின்றனர்.

ஒட்ட ஒழுகல் :— இத்தகைய சமுதாயப் பொருத்தம் வளர்ந்துவர வேண்டுமானால், என்றும் ஒன்றுபோல் இருந்து வரும் புறநிலை உலகின் முரண்படா நிலைமையை, மக்களிடையேயும் குழவி எதிர்பார்த்தலாகாது. இதனை அது உணர்தல் வேண்டும். மக்கள் ஒரு வகையாக அன்றிப் பல வகையாக நடந்துகொள்வர் எனக் குழவி உணர்ந்தால் ஏமாற்றம் அடையாது பலவகையான நடத்தையையும் எதிர்பார்த்து அதற்கேற்ப இயங்கப் பழகிவிடும். சமுதாயச் செயல்கள் அனைத்தும் ஒருவகையால் நோக்குமிடத்துப் பரிமாற்றச் செயல்களேயாம். இதனை மனநிலைப் பண்ட மாற்றம் எனலாம். சமுதாயநிலை ஒவ்வொன்றும் ஒருவகையான செய்க்காட்சியே (Experiment) ஆம். அகக்கண் பெற்றவர்கள் பிறரது நோக்க நிலையை அறிந்து அவர்களுடைய எதிருன்றல்களையும் ஆராய்வார்கள்;

அவ்வாறன்றித் தம்மைப் பற்றியும் தம்முடைய செயலைப் பற்றியும் ஆராய்ந்து கொண்டிருக்க மாட்டார்கள். பிறருடைய மெய்ப்பாட்டு நிலையை அறிய முடியுமானால், அவர்களுடைய ஒழுகலாற்றை எளிதே அறிந்து கொள்ளலாம். ஆனால், "மெய்ப்பாட்டை வெளியே காட்டாது அடக்கி மறைத்துக்-கொள்ள வேண்டும்." என்ற நோக்கத்தோடேயே நம்முடைய நாகரிகம் நம்மைப் பழக்கி வருவதால் மெய்ப்பாட்டை அறிவது எளிதன்று.

சமுதாய உணர்ச்சியை அறிதல் :— எனினும், அறிஞர் குழவிகளின் சமுதாய உணர்ச்சியைக் கண்டறியப் பலவாறு முயன்று வருகின்றனர். "நீ விரும்பும் சமர்த்தான குழவி யார்? நீ அங்ஙனம் உள்ளாயா ? நீ அக்குழவிபோல இருக்க விரும்புகின்றாயா ?" என்பன போன்ற கேள்விகளைக் கேட்டுக் குழவி போற்றிப் பாராட்டும் இயல்பினை அறியலாம். அதன் வழியே குழவியின் சமுதாய உணர்ச்சியை உள்ளவாறு உணரலாம். நாடகம் படம் முதலியவற்றைக் காட்டியோ, கதை சொல்லியோ, படம் வரையச் செய்தோ குழவியின் மன-நிலையை அறிதலும் உண்டு.

ஒரு செய்க்காட்சி :— அறிஞர் இங்குச் செய்க்காட்சி ஒன்றினைச் செய்துபார்த்தனர். அன்னோர் ஒரு சில குழவிகளை ஒழுங்கு முறை, அடக்கு முறை என்ற இவற்றினிடையே பழக்கி வளர்த்தனர். வேறு சில குழவிகளை, முழுப் பொறுப்-பையும் ஏற்று உரிமையோடு இயங்கி வருமாறு விட்டுப் பழக்கி வளர்த்தனர். இவ்வாறு செய்து பார்த்ததில் உரிமை வாழ்க்கை வாழ்ந்த குழவிகளே சமுதாய உணர்ச்சி பெற்றுச் சிறந்து விளங்குவதனை அறிஞர் உணர்ந்தனர்.

நட்பமைப்புகள் :- குழவிகளின் இயற்கையான நடத்தை-யினையும் அறிஞர் ஆராய்ந்தனர். சில குழவிகள் தனிமரம்

போலத் தனித்தனியே நின்று விளையாடுகின்றனவாம். வேறு சில இரண்டிரண்டாக இணைந்து விளையாடுகின்றனவாம். ஒரு குழவிக்கு ஒரு குழவி நண்பாக, அவற்றில் ஒன்றற்கு மூன்றாவது குழவி நண்பாக, அந்த மூன்றும் ஒருங்கு சேர்ந்து விளையாட வருவதனையும் காணலாம். இவ்வாறு சங்கிலித் தொடராய்ப் பல குழவிகள் ஒன்று சேர்ந்து விளையாட வருகின்றன. இரு குழவிகளுக்குப் பொதுவாக ஒரு குழவியே அறிமுகமாகி இருக்க, இவை மூன்றும் முக்கோணம் போல நின்று விளையாடுகின்றன. ஈது ஓர் அமைப்பு. நட்சத்திர மண்டலம்போல விளையாடுகின்ற அமைப்பையும் காணலாம். எல்லாக் குழவிகளும் ஒரு குழவியையே விரும்புவதால் அக்குழவி நட்சத்திர மண்டலத்தின் நடுவாக நிற்க மற்றவை மண்டல வட்டமாக அமைவது காண்க.

சிக்கல் :— இவ்வாறெல்லாம் அறிஞர்கள் பலவாறு பல நாளாக ஆராய்ந்து வந்தாலும் ஒரு முடிவிற்கு வாராமல் முரண்படுகின்றார்கள். ஈது ஒன்றே இந்த ஆராய்ச்சியின் சிக்கலை நன்கு விளக்குகிறது எனலாம்.

உணர்ச்சியின் வளர்ச்சி:— புதிதாகப் பிறந்த குழவியினிடத்தே சமுதாய உணர்ச்சியைக் காண்கின்றோம் என்று கூறுகின்றவர்கள் அனைவரும் கற்பனை உலகில் வாழ்கின்றவரே ஆம். இரண்டாம் திங்களில் குழவி தன்னைப் பார்ப்பவரைக் கண்டு புன்னகை புரிகிறது. பெரியோர்களை இவ்வாறு கண்டு அறிந்த பின்னரே தன்னைப் போன்ற குழவிகளைக் கண்டு புன்னகை புரிகிறது. குழவிகளோடு குழவிகள் விளையாடி வரும்போது சில குழவிகள் பிற குழவிகளின் இருப்பினைக் காணாது குருட்டாட்டம் ஆடிவரக் காண்கிறோம். தம் தொட்டில்கள் ஒட்டிக்கொண்டு கிடவாமல் சற்று அகல

நின்றாலும் அழுது புலம்பிய இராம இலக்குமணர் கதை போலப் பிற குழவிகளை இன்றியமையாது வேண்டிநிற்கும் குழவிகளும் உள்ளன. வேறு பிற குழவிகளோ பிற குழவி-களின் இருப்பினை உணர்ந்தாலும் அவற்றை வேண்டி நில்லாமல், தனித்து இயங்கி வருகின்றன. விளையாட்டுச் செய்யறை ஒன்று அமைத்து, இரண்டிரண்டு குழவிகளாக அதனுள்ளே விட்டுப் பொம்மையும் தந்து விளையாடவிட்டால், ஆறும் திங்களிலிருந்து எட்டாம் திங்கள் வரையிலும் குழவி தன் அருகிலிருக்கும் குழவியிடத்தில் அக்கரை கொள்வதே இல்லையாம். ஒன்பதாம் திங்களிலிருந்து பதின்மூன்றாம் திங்கள் வரையிலும் குழவிகள் விளையாட்டுப் பொருள்களில் மட்டும் அக்கரை கொண்டு அலைகின்றன. அது காரணமாகச் சண்டையும் இடுகின்றன. பதினான்காம் திங்களிலிருந்து 18 ஆம் திங்கள்வரை அருகே இருக்கும் குழவியினிடம் அன்புகாட்டித் தோழமை கொள்கின்றன. 25 ஆம் திங்-களுக்குள் உண்மையான கூட்டுறவு அரும்புவிட்டு மலர்கிறது.

## II. குடும்பம்.

குடும்ப வாழ்க்கை :— குடும்பமே நம்முடைய சமு-தாயத்தில் அடிப்படையான முதல்நிலைக் குழு எனலாம். சமுதாயப் பண்பாடு கருவிலே பதிந்து குடிவழியாகத் தொடர்ந்து வருவதில்லை. ஆனால், அப்பண்பாடு குடும்பத்தின் பழக்க வழக்கமாக அமைந்து பெற்றோரின் நடத்தை வழியாகத் தலைமுறை தலைமுறையாய்த் தொடர்ந்து வருகிறது. ஒவ்வொரு குடும்பமும் அந்த அந்தப் பண்பாட்டிற்கேற்பச் சில சிறப்பியல்புகளைப் பெற்று விளங்குகிறது. உரிமையோடு குடும்பச் செலவிலும் பொறுப்பேற்று வேலை செய்து பொருள் ஈட்டும் தாய் இந்நாளைய நாகரிகத்தில் விளங்கும் ஒரு

புதுமையாம். தந்தைக்கு மட்டும் அஞ்சிய குழவி இன்று இத்தகைய தாய்க்கும் அஞ்சுகிறது. குழவிகள் பிற குழவிகளோடு விளையாடுவதும்கூட அந்த அந்த நாகரிகத்தைப் பொறுத்ததே எனலாம். பார்ப்பனக் குழவி தீண்டதார் குழவியோடு விளையாடலாகாது என்ற கட்டுப்பாடு ஜாதி நாகரிகத்தால் எழுந்ததன்றோ? பண்பாட்டிற்குத் தொடர்பில்லாத சில பழக்க வழக்கங்கள் பெற்றோர் வழியே படிவதும் உண்டு. பிறநிலையில் தன்னை வைத்துக்கண்டு தன்னைப்போல் பிறரை எண்ணவும் குழவி குடும்பத்தில் தான் கற்றுக்கொள்ளுகிறது. குழவி தன் குடும்பத்தில் வாழ்வாரோடு எல்லா வகையாலும் தொடர்பு பெற்று வாழ்ந்தாலும் வாழும்; ஒரு தொடர்பும் இன்றியே வாழ்ந்தாலும் வாழும். இவ்வாறன்றி ஒரு சில வகையில் தொடர்புபெற்றும், ஒரு சில வகையில் தொடர்பு பெறாதும் வாழ்வதென்பது குழவிநிலையில் இல்லையாம். ஆதலின், முதலில் குழவி குடும்பத்தில் உள்ளாரோடு மட்டும் புழங்கி வருகிறது. பின்னே குடும்பத்திற்கு அப்பாற்பட்டவரிடத்திலேயும் புழங்கத் தொடங்கித் தன்னைப்போல அவர்களையும் எண்ணி வாழ வருகின்றது. அப்பொழுது குடும்பத்தோடேயே ஒன்றாகி விளங்கிய நிலைமை நாளடைவில் தேய்ந்து கொண்டுவரத் தொடங்குகிறது. குழவிகாணும் சமுதாயத்தின் எல்லை அகன்று கொண்டே வருகிறது.

முதனிலை உடனிலை வழக்கங்கள் :- “பிறந்ததும் தான் பட்டினியால் சாவாதபடி தன்னைக் காப்பது சமுதாயத்தின் செயலேயாம்” எனக் குழவி உணர்கின்றது. சமுதாயத்தைச் சேர்ந்த தாயன்றோ பால் கொடுத்து இன்பமாகப் பாராட்டியும், உறங்குதல் வெளிக்குப் போதல் முதலிய பல வழக்கங்களை முறைப்படுத்தியும் உதவுகின்றாள். அடிப்படையான இந்த ஊக்க நிலைகள் சமுதாயச் செயலோடு இவ்வாறு ஒன்று பட்டு

வருவதே குடும்பப் பழக்கத்தின் முதல் நிலையாம். இத்தகைய பழக்கங்கள் ஒரே படித்தாக முரண்பாடின்றி வலியுறுத்தப் பெறுவதால் எதிர்காலத் தேவைகளை முன்னதாகவே அறியவும், அவற்றை அடக்கி ஆளவும் ஒருவழி இவ்வாறு ஏற்படுகிறது. அடிப்படையான இத்தகைய சமுதாய வழக்கங்களோடு உடன் நிலைச் சமுதாய வழக்கங்களும் எழுகின்றன. குழவிக்குப் பால் ஊட்ட வருகின்ற தாய் அதனைத் தட்டிக் கொடுத்துக் கொஞ்சி விளையாடுகின்றாள். அவ்வாறு கொஞ்சி விளையாடுவதில் ஈடுபட்ட குழவி, முன்போலப் பசி எடுத்த போது மட்டும் அழாமல் தன்னைத் தாய் தூக்கிக்கொண்டு கொஞ்ச வேண்டும் என விரும்பும்போது எல்லாம் அழத் தொடங்குகிறது. பசித்தபோது பாலை விரும்புவது அடிப்படையான சமுதாய வழக்கம். மனம்போன போதெல்லாம் கொஞ்சுவதனை விரும்புவது உடன்நிலைச் சமுதாய வழக்கம்.

## III. பெற்றோரும் குழவியும்

இன்பமும் துன்பமும் :— குழவிக்கும் பெற்றோருக்கும் உள்ள தொடர்பு முழுதும் இன்பமானது என்றோ, முழுதும் துன்பமானது என்றோ கூறுவதற்கு இல்லை. இந்த இரு வேறு நிலைகளும் அங்கு உண்டு. பாலுண்பது இனிதே ஆயினும் விரும்பியபோதெல்லாம் உண்ணாது, உடலின் இயற்கைக்கு ஏற்ப இரண்டு மணிக்கு ஒருமுறையும் உண்ணாது, சமுதாய வழக்கத்திற்கு ஏற்ப நான்கு மணிக்கு ஒரு முறை பால் குடிக்கக் கற்றுக்கொள்வது முதலில் துன்பமேயாம். நல்லது எனச் சமுதாயத்திற் புகழப்படுவது துன்பமே யாயினும் குழவி அதனையே செய்யப் பழகிவிடுகிறது. தீயது எனச் சமுதாயத்தில் இகழப்படுவது இன்பமேயாயினும் அதனை விட்டொழிக்கவும் பழகிவிடுகிறது. தன் செயல்களை இவ்வாறு

தடுத்து இகழப் பெறுவன என்றும், எடுத்துப் புகழப்பெறுவன என்றும் இரண்டு வகையாகக் காண்கிறது. ஆனால், மெய்ப்பாடு பொங்கு மிடத்தில் இவ்வாறு குழவிக்கும் சமுதாயத்திற்கும் முரண்பாடு தோன்றினாலும் குழவியின் மனத்தில் நெருக்கடி ஒன்றும் விளைவதில்லை.

சிறகு முளைத்தல் :- குடும்ப நிலையிலிருந்து உலகநிலையில் வாழுமாறு குழவிசெல்லுவதற்கு ஏற்ப நாமும் திருந்தி நடந்து கொள்ளுதல் வேண்டும். சிறகு முளைத்த பறவை பறக்கத்தான செய்யும். அப்போதும் அதனை முட்டைபோல அடைகாப்பது தக்கது அன்றாம். அங்ஙனமே, குழவி வளர்ந்து வரும்போது அதன் வளர்ச்சிக்கு ஏற்ப இயங்கவிடாமல் தடைகளை எழுப்புவதும் தக்கது அன்றாம். குழவி தன்னம்பிக்கையோடு வாழுமாறு அதனைப் பழக்க வேண்டும். எதற்கும் பெற்றோரையே குழவி நம்பி இருத்தலாகாது. தாயின் முன்தானையில் முடிபோட்ட பொருளாய்க் குழவி கெடுவதனை நாம் தடுத்தல்வேண்டும். பெற்றோர் தம் குழவிகளின் பின்னேயே தொடர்ந்து வருதலும் கூடாது. அத்தகைய பெற்றோர், தம் குழவி வேறு ஒருவரைப் பாராட்டுவதனையும் பொறுப்பது இல்லை. பெற்றோர் தம் குழவியையே வெறுத்து ஒதுக்கும் நிலையும் உண்டு. குழவி பிறந்ததால் வந்த கேட்டினை எல்லாம் குழவியின் தலைமேல் சுமத்துவோரும் உண்டு. இத்தகைய நடத்தையைப் பெற்றோர் விட்டொழித்தல் வேண்டும்.

தன் நம்பிக்கை :— தற்காவலுக்கும் தன் வளர்ச்சிக்கும் பிறரை நம்பி இருக்கும் நிலை குழவியினிடத்தில் சிறிது சிறிதாகக் குறைந்து வருதல் வேண்டும். ஓராம் ஆண்டில் பாதுகாவல் என்று தோன்றுவது ஐந்தாம் ஆண்டிலும் பாதுகாவலாகத் தோன்றாது. முதலாம் ஆண்டில் குழந்தையை

இடுப்பில் தூக்கி செல்லுவதுபோல ஐந்தாம் ஆண்டில் தூக்கிச் செல்வது அறியாமையேயாம். பண்பாட்டின் அமைப்பிற்கு ஒத்த வழியில் தன்னுடைய தேவைகளை அறிந்து அவற்றைத் தானே தீர்த்துக்கொள்ளுமாறு குழவியை விட்டு விடுதல் வேண்டும். எதற்கும் பிறரையே நம்பி நில்லாமல் தன்னுரிமை பெற்றுத் தன் குறிப்பினைத் தானே உணர்ந்து வாழுமாறு பெற்றோர் குழவியைத் தூண்டுதல் வேண்டும். அவ்வாறு குழவிகள் வளர்வதற்கு இடங்கொடாது இடை இடையே பெரியோர்கள் நுழைவது தக்க தன்றாம்.

சமுதாயநிலை :- சமுதாயத்தில் குடும்பம் அடைந்திருக்கும் நிலைக்கு ஏற்பக் குழவிகள் தம்மைத்தாமே காத்துக்கொள்ளும் பொறுப்புடையனவாக ஆகின்றன. செல்வர் வீட்டில் எந்த வேலைக்கும் ஓர் ஆள் உண்டு. உடம்பு கழுவ ஆள், உடம்பு துடைக்க ஆள், ஊட்ட ஆள், உறங்குவிக்க ஆள் என்று பல ஆள்கள் உள்ளார்கள். ஏழைகள் வீட்டிலோ குழவிகள் தமக்கு வேண்டியவற்றை எல்லாம் தாமே செய்து வருகின்றன. நாட்டுப்புறக் குழவி குடும்ப வேலையிலும், தோட்ட-வேலையிலும், பயிர் வேலையிலும் பெற்றோர்க்கு உதவி வருகின்றது. நகரத்துக் குழவிகளோ ஏட்டுச் சுரைக்காய்க்குமேல் வேறு ஒன்றும் அறியாது, தண்ணீரில் குளிக்கவும் அஞ்சி, மோர் குடிக்கவும் நடுங்கி, நெல்லு காய்க்கும் மரத்தைப் பற்றிக் கனாக்கண்டு கதறுகின்றன. குடும்பத்திற்கு அப்பாலும் சென்று பள்ளியிலும் பிற இடங்களிலும் தோழர்களோடு தொடர்பு பெற்று வாழ வரும்போது, வீட்டில் அறியாத பல பொறுப்புக்களைக் குழவி இன்பமாய் ஏற்றுக்கொண்டு, பொறுப்புக்கு ஏற்பச் செவ்வனே ஒழுகுகிறது. சமுதாயப் பண்பாட்டிற்குத் தகாத வழியில் ஒழுகுவது தவறு என்ற எண்ணத்தைப் பெற்றோரும் மற்றோரும் அக்குழவியின்

மனத்தில் ஏற்றி விடுகின்றார்கள். அதனால், குழவி சமுதாய நிலைக்கு ஏற்பப் பொறுப்பு ஏற்று வாழப் பழகிவிடுகின்றது.

முப்பாலும் கல்வியும் :— உலகத்திலே உள்ள மக்கள் அனைவரிடத்தேயும் மூன்று வேறு நிலைகள் உறுதிபெற்றுத் தோன்றுகின்றன. இவற்றை அறம் பொருள் இன்பம் எனத் தமிழர் கூறுவர். இந்நாளைய உலகில் பொருளியல் நிலை, காதல் நிலை, அரசியல் நிலை என்ற இவை விளங்காத மக்கட் கூட்டமே இல்லை எனலாம். பொருளியலும் அரசியலும் தமிழர் கண்ட பொருளில் அடங்கும். இன்பமே காதல் நிலையின் அடிப்படையும் முடிவு ஆம். அறவாழ்வு, மதவாழ்வு என்ற பெயரால், உலகினை ஆள்கின்றதன்றோ? இந்த உறுதிப் பொருள்களைக் கடைப்பிடித்து ஒழுகும் பண்பாட்டைத் தலைமுறை தலைமுறையாக வளர்த்து வருவதற்கு ஓர் அமைப்பும் உண்டு. இதனையே கல்வி என வழங்குகின்றோம். சமயம், கலை, பொழுதுபோக்கு என்பனவும் இதனைச் சார்ந்தவையே ஆம்.

உரிமைக் குழவி :— பெற்றோரிடத்தே தோன்றுகின்றதொரு நோக்கம் குழவியின் நோக்கமாகவும் அமைகிறது; அமையவே குழவி அதனையே நோக்கி முயலுமாறு அந்த நோக்கமே தூண்டுகிறது. அந்த நோக்கமும் குழவியின் வளர்ச்சிக்கேற்ப மாறிமுற்றி அமைவதாக இருத்தல் வேண்டும். வாழ்க்கையின் பெரும்பான்மையான செயற்பாடுகள் தன்னை நோக்கியே இயங்கிவருமாறு அவற்றைத் தூண்டி இயக்கக் கூடியதொரு நோக்கமே வேண்டப்படுவதாம். குழவியின் ஆற்றலுக்கு ஏற்றதாகவும் அது இருத்தல் வேண்டும். சுமக்க முடியாததனை அதன் தலைமேல் சுமத்துவதாலும் பயனில்லை. குழவி எளிதில் நிறைவேற்றக்கூடிய நோக்கமாய் இருந்தாலும் அதன் ஊக்கம் குன்றும். குழவியின் மனநிலைகெடாது இருக்க வேண்டுமானல் அது ஒரு தொழிலில் ஈடுபடுதல் வேண்டும்.

அதனைச் செய்யக்கூடியதொரு திட்டத்தை வகுக்கக்கூடிய-தோர் ஆற்றலும் அதனிடையே விளங்குதல் வேண்டும். தான் கருதிய முடிவினை அடைதற்கு ஏற்ற வழியைத் தானே தேர்ந்து எடுக்கக் கூடியதோர் உரிமையும் குழவிக்கு வேண்டும். அந்த நோக்கத்தை நிறைவேற்றியபொழுது தோன்றுகின்ற இன்-பத்திலே அக்குழவி ஈடுபடவேண்டும். அவ்வாறன்றி அதற்குப் புறமான பரிசிலிலோ பிறர் தன்னைப் பாராட்டும் பாராட்டிலோ குழவி ஈடுபடுமாறு பழக்குதல் பெருந்தீங்கே ஆம்.

பெற்றோரின் பிறழ்ச்சி :— இக்கால நாகரிகம் தனி மக்-களின் சிறப்பினையே பாராட்டுகின்றது. ஆதலின், வாழ்க்கைத் துறையில் தாம் விரும்பிய உயர்நிலையினைப் பெறாத பெற்றோர் அவ்வுயர்நிலையைத் தம்முடைய குழவிகளேனும் பெற-வேண்டும் என்று பேராசை கொண்டு குழவிகளை வற்புறுத்தி நெருக்கி வருவதும் உண்டு. ஆனால், பரம்பரையாக ஒரு தொழிலைச் செய்துவரும் குடும்பங்களில் பெற்றோரின் தொழிலே குழவிகளின் தொழிலாகவும் அமைகின்றது. முன்னெல்லாம் குடும்பங்களில் வாழ்ந்தோர், தாம் விரும்பிய-தனையே வற்புறுத்தி ஆளும் பெற்றோரும் அவர்கள் கீறிய கீற்றுக்குள்ளேயே அடிமைகளாய் அடங்கிநிற்கும் குழவி-களும் ஆக இவ்வாறு பொருத்தமுற்று விளங்கினர். ஆனால், இன்றோ குழவியும் பெற்றோரும் குழவியின் தேவைக்கு என ஒன்றுபட்டு நின்று வளர்ந்துவர வளர்ந்துவர, குழவியும் குடும்பத் தொழில்களனைத்திலும் பங்கெடுத்துக் கொண்டு, குடும்பப் பொறுப்புக்களையும் ஏற்றுத் தோழர்களாக வாழும் நிலைமையே விளங்குகிறது. ஆனால், குழவி கேட்கும் கேள்விகள் அனைத்தும் பயனற்றன என ஒதுக்கித் தள்ளும் வழக்கம் இன்னும் ஒழிந்தபாடில்லை. குழவி பெரியோரின் தொழிலுக்கு இடையூறாக வருகிறது எனக் கருதும் மனப்பான்மையும்

மாறவில்லை. இவை அடியோடு ஒழிதல் வேண்டும். நாடகத்தில் நடிக்க வருவோர் பல பல கோலங்கொண்டு, நடிக்கும்போதும் தம்மை மறவாது இருத்தலே போலப் பெற்றோரும் குடும்பக்கூத்திலே குழவியோடு குழவியாய் நடித்து வருதலும் வேண்டும். அவ்வாறு நடித்து வரும்போது பெற்றோர் என்ற தம் தன்மையையும் மறவாது, குழவிக்கு வேண்டிய துணையும் புரிதல் வேண்டும். இவ்வாறு இந்த உயர்நிலையை அடைய முடியாத பெற்றோர் தம் குழவியைப் பல வகையாலும் பாராட்டி "ஈடும் எடுப்பும் இல்லை" எனப் புகழ வருகின்றனர். குழவியும் இதனை நம்பித் "தலைக்கிறுக்கு" ஏறித் திரிகிறது. பல குழவிகளில் ஒன்றனை மட்டுமே "ஓர வஞ்சனை" யாகப் பாராட்டும் மனப்பான்மையும் சிலபோது பெற்றோர் மனத்தில் எழுகின்றது. பெற்றோர் அத்தகைய செல்வக் குழவியினிடத்தே தம்முடைய நிழலையே காண்கின்றனர். அக்குழவியும் அதனை அறிந்து தான் விரும்பியதனை எல்லாம் பெற்றுக் களிக்கின்றது. பெற்றோரில் தாய் ஒரு குழவியையும் தந்தை ஒரு குழவியையும் செல்வமாக வளர்த்து வருவதும் உண்டு. இதுகண்டு பிற குழவிகள் மனம் எரிந்து நிற்பதில் வியப்பொன்றும் இல்லை. முளைக்கும்போதே இவ்வாறு வேரில் நஞ்சூட்டி வளர்ப்பது நல்லதன்றாம்.

செல்வம் கோஞ்சுதல் :— குடும்பத்தில் வாழும் பல குழவிகளும் தம்பெற்றோர் கருத்தையும் கண்ணையும் கவர்ந்து செல்வக் குழவிகளாய் வாழவே முயலுகின்றன. இவ்வாறு போட்டி போடும் குழவிகள் தங்களுக்குள்ளே ஒன்றற்கு ஒன்று உதவி, அன்பு பூண்டு ஒழுகிவருமேயானால், இத்தகைய போட்டியால் நன்மையேவிளையும். எனினும், இந்நாளைய உலகின் கேடு அனைத்தும் போட்டியினாலேயே விளைந்துள்ளது. ஆதலின், புத்துலக அமைப்பில் கூட்டுறவை நிலைநாட்ட முயல்வோர்

இத்தகைய போட்டியாம் முள்ளுச்செடியை, இளமையிலேயே கிள்ளி எறிய வேண்டும் என வற்புத்துவது இயல்பேயாம். வேறொரு குழவியை, பெற்றோர், செல்வமாக வளர்க்கும்போது பிறகுழவிகள் பொறுமை அடைகின்றன. புதியதொரு குழவி பிறந்ததும் தாயின் நாட்டம் அனைத்தினையும் அது கவர்வது கண்டு முந்திய குழவி வயிறு எரிந்து போகிறது. செல்வக் குழவியோடு போட்டிபோடும்போது தன் கீழ்மையை எண்ணி எண்ணி மற்றைய குழவி வாடி அக்கீழ்மை நிலையை நீக்கிக் கொள்வதும் உண்டு. இவ்வாறு பொறுமைப் பட்டுப் போட்டி போடும் குழவிகளோடு மறைமுகமாக முரண்பட்டு, மறை-முகமாகவே பெற்றோரிடமிருந்து வேண்டியதனை எல்லாம் பெற்று வாழ அச்செல்வக் குழவிகளும் பழகி விடுகின்றன. ஆனால், பெற்றோர் நடுநிலை பூண்டு வருவார்களானால், தம்பியோ, தங்கையோ பிறக்குந்தோறும் மூத்த குழவி பொறுமைப்பட வேண்டி இராது. குழவியின் உலகினைக் குடும்பத்தின் அளவாகவே குறுக்கி விடாமல் படிப்படியாக வயதிற்கு ஏற்பப் பரந்து அகன்று வருமாறு செய்து, வெளி உலகினும் அம் மூத்த குழவிகள் ஈடுபடுமாறு பழக்கிவிடுதல் வேண்டும். அவ்வாறு பழக்கி விட்டால் பொறுமை எண்ணங்கள் வருவ-தற்கே இடமில்லாமற் போகும். குழவிகள் ஒன்று கூடிக் குடும்பவேலையில் பங்கெடுத்து உதவுமாறு அவற்றின் தலைமேல் பொறுப்பேற்றிப் பழக்கி விடவும் வேண்டும். அப்போது கூட்டுறவு நிலை வேரூன்றி வளரும்; பொறுமை முதலிய பொல்லாத பாழுங்கொடிகள் படர்ந்து குடும்ப வாழ்க்கையைப் பாழாக்காதபடி காத்து வரும்.

## IV. ஆனகுழவியும் ஆகாதகுழவியும்

இருவேறுநிலை :— பள்ளிக்குப் போகும் முன், குழவி-களிடம் இருவேறு நிலைகள் காணக்கிடக்கின்றன. பிறரைக்

கண்டபோது பின்வாங்கிப் பதுங்குவதும், முன்னுக்கோடி விளையாடுவதுமான நிலை ஒன்று. பிறரை அடக்கியும், பிறருக்கு அடங்கியும் நிற்கும் நிலை மற்றொன்று. பிறரோடு கூடிப் பழகப் பழகக் கோணலான நடத்தைகள் தேய்ந்து ஒழிகின்றன. பிறரொடுகூடிப் பழகுவதும் வளர்ந்துகொண்டே வருகிறது. எனினும், சில குழவிகள் எல்லோர் மனத்தினையும் கவர்ந்து வருகின்றன. சில இவ்வாறு எல்லோர்க்கும் ஆன குழவிகளாக அல்லாமல் ஆகாத குழவிகளாகக் கிடக்கின்றன. பிறரைத் தாக்கியும் ஓடியும், பிறர் தாக்கினால் கோழையாய் வாளா கிடந்தும், தனியே விளையாடியும், தாய் மடிமீதே இருந்தும், எதனையும் செய்யவும் பெறவும் மறுத்தும், புறக்கணித்தும் வருவனவே ஆகாத குழவிகளாம். கூட்டுறவு, மாறுது உதவுதல், பிறருடைய உரிமையையும் பொருளையும் பாராட்டும் பெருந்தன்மை, பிறர் புகழை நாடுவது, பேசுவது முதலிய பண்பு படைத்தனவையே ஆன குழவிகளாம்.

வேறு இருவகை :— குழவிகளோடு கூட்டுறவு பெறுவதிலும் பிறரை அடக்கி ஆள்வதிலும் பேச்சே பெருந்துணையாகிறது. பிறரொடு பேசிப் பழகி அவர்க்கு ஏற்ப நடப்பது அருமையாதலின் எளிதே தன்னந் தனியாக இருக்க முயலும் குழவிகளும் உள்ளன. அடக்கி ஆள முயலும் தன்மையில் இருவேறு நிலை உண்டு. தன்னோக்கத்தினையே தடையின்றித் தொடர்ந்து முயலுவது ஒன்று. பிறர் நடத்தையைத் தனக்கு ஏற்ப ஆளுவது மற்றொன்று. தன்னம்பிக்கை அற்ற குழவி அடங்கி ஒடுங்கிவர, தன் நம்பிக்கையாற் சிறந்த குழவி பிறரை ஆண்டுவரக் காண்கிறோம். தன் திறமின்மை காரணமாகக் குழவி தன்னையும் தன் செயலையுமே நோக்கிக் கொண்டு நின்று, பிறரெதிரே செயலற்றுக் கிடக்கின்றது. இத்தகைய குழவிகள் அடங்கி நடக்கப் பழகுவதும் இயல்பேயாம். தாம்

செய்வனவற்றிடையே தோல்வி காணும் போதெல்லாம் பிறர் மேல் பாய்ந்து விழுவதும் உண்டு. தன் நிலை நிலைபேறாக இருக்கும் என நம்பிக்கை இல்லாதபோது, பிறரை அடக்கி ஆண்டு அந்தக் கவலையை மறைக்க முயலும் குழவியும் உண்டு. குழவி இவ்வாறு பிறரை ஆள ஆரவாரம் செய்தால், பிற குழவிகளும் அந்த வழியே சென்று அவ்வாறு ஆகிவிடு- கின்றன. தம் நிலையில் நம்பிக்கை பெற்று அமைதி அடைந்த குழவிகளைக் கண்டால் பிற குழவிகளும் அமைதியுற்று விளங்குகின்றன. இயற்கையும், இனத்தால் எழும் செயற்- கையும் இவ்வாறு இணைந்து விளங்குகின்றன.

## V. குடும்பத்திற்கு வெளியே

புது நடத்தை :— குடும்பத்திற்கு அப்பால் உள்ளாரோடு குழவி பழகி வரும்போது தோன்றும் சில சிறப்பு இயல்புகளை ஆராய்தல் வேண்டும். குழவி தன்னோடு ஒத்த வயது உடை- யாருடன் பழகுவது இப்போது இயலுவதாகிறது. வேறு பாலாரை — ஆண் பெண்ணையும் பெண் ஆணையும் — முதல் முதல் அறியவும் இடம் உண்டாகலாம். இங்கு எழும் தொடர்பு குடும்பத்திற்போலப் பெற்றோரின் கண்காணிப்பின் கீழ் எழுவதன்றாம். ஆதலால், குடும்பநிலைக்கும் புறநிலைக்கும் உள்ள வேற்றுமையைக் குழவி உணர்ந்துகொண்டு அதன்படி நடந்து வருகிறது. தான் கண்டுவரும் ஒவ்வொரு குழவிக்கும் ஏற்ப ஒவ்வொரு வகையாக நடந்து வரவேண்டி இருத்தலின், பல வகையான புதிய ஒழுக்க முறைகள் குழவியின் பழக்- கத்திற் படிகின்றன. தாயோடு உணர்ச்சி வகையாலும் ஒன்று பட்டு, அவளுடைய முன்தானையில் முடிபட்டுக் கிடந்தாற்- போல வாழ்ந்த குழவி, புறத்தே உள்ள குழவிகளோடு பழக வரும்போது, அந்த முடியுண்ட நிலைமையினின்றும்

இயற்கையாகவே விடுபடுகின்றது. ஆனால், குடும்பவழக்கங்கள் அடியோடு மறைதல் இல்லை. முதலில் குடும்பத்திற் பழகியது-போல அன்றோ புறத்தும் குழவி பழகவரும்?

•

குறுக்கும் நெடுக்கும் :— விளையாட்டில் குழவி பலரோடு பழகி வருகிறது. குடும்பத்தில் விளங்குகின்ற அமைப்பினை நெடுக்கமைப்பு (Vertical). எனலாம். மேல் நின்று அடக்கி ஆள்வாராம் பெற்றோரும், அடங்கி இயங்குவாராம் குழவி-களுமாக அன்றோ குடும்பம் உள்ளது? ஆனால், விளையாட்டின் சமுதாய அமைப்போ குறுக்கமைப்பாம் (Horzntal). மேல் கீழ் என்பதன்றி அனைவரும் "சரிநிகர் சமானமாகப்" பரந்து நிற்பதே விளையாட்டு நிலையாம். இங்கும் திறமை காட்டித் தலைமை பூணும் நிலை எழலாம். ஆனால், வீட்டிற்போல இந்த நிலை இயற்கையாகவோ கட்டாயமாகவோ எழுவதில்லை. ஒரு குழவிக்கு மற்றைய குழவி விட்டுக் கொடுத்து விளையாடி-வருவதாலேயே, தலைமை பூணும் நிலை எழுவதாம். விளையாட்டின் சமுதாய நிலையை முன்னரே குறித்துள்ளோம்.

குழவிபாராட்டும் பண்பு :- பிறர்தம்மை எவ்வாறு கருது-கிறார்கள் என்பதே நாட்டமாய்க் குழவிகள் நடந்து வரு-கின்றன. குழவிகள், குழவிகளிடத்தே பாராட்டும் குணங்-களையும் இங்குக் குறித்து வைக்கலாம். விலங்கு முதலிய-வற்றை அன்பாக நடத்துதல், பிறர்க்கு உதவுதல், பகட்டிற்கு அன்றிப் பிறர் கண்ணிற்படாமலே நன்மை செய்தல், சுறு-சுறுப்பாய் இயங்கிவருதல், கதைகளை நினைவில் வைத்து இருத்தல், விடாத உழைப்பு, நட்பு, நோவினைப் பொறுத்துக் கொள்ளுதல், மறைவை வெளியிடாமை, உண்மைத் தலைமை பூணுதல், நம்பிக்கை உண்மை, ஏமாற்றம் இன்மை, சிறு குழவிகளைப் பேணுதல், தோற்றாலும் முணுமுணுக்காமை,

விடுகதைகளை விடுத்தல், சிக்கம் (Maze) தீர்த்தல் முதலியவற்றில் திறமை, விளையாட்டில் உயர்வு, பள்ளியில் சிறப்பு என்பனவே குழவிகள் குழவிகளிடத்தே பாராட்டும் பண்புகளாம்.

குழவி வெறுக்கும் பண்பு :— வெறுக்கத் தக்கனவாகக் குழவிகள் இழித்துரைக்கும் குற்றங்களும் உள்ளன. நொந்ததும் அழுதல், ஏமாந்தவனை ஏய்த்தல், எளிதிற் களைத்துப் போதல், விரைந்து வெகுளுதல், அயலானுக்கு அஞ்சுதல் அயலார்களது நாய்களை இழிவாய் நடத்தி அலைக்கழித்தல், சண்டையிடுதல், திடுக்கிடச் செய்தல், தன் நலமுடைமை, பிறரை அலைக்கழித்தல், ஏமாற்றுதல், இழிவாகப் பேசுதல், பொருளை வீணே உடைத்தல், இருள்கண்டு வெருளல் என்பன போன்றவற்றைப் பிற குழவிகளிடத்தே காணும்போது, மிக இழிவான பண்புகளாகக் குழவிகள் கருதுகின்றன.

ஆண் பெண் :— இத்தகைய எண்ணங்கள் காரணமாகப் பெண் குழவிகளை ஆண் குழவிகள் வயது ஏற ஏற உயர்வாகக் கருதுவது குறைந்து கொண்டே வருகிறது. பள்ளியிற் சிறத்தல், நொந்ததும் அழுதல், நோவினைத் தாளாமை, இருள்கண்டு வெருளல், அயலார்க்கு அஞ்சுதல், சிறு குழவிகளைப் பாராட்டுதல், விலங்குகளைப் பேணுதல், எளிதில் அலைக்கழியாமை, பொருளைச் சிதையாது பாதுகாத்தல், எளிதில் களைப்புறுதல், மெல்ல இயங்குதல், உண்மை பேசுதல், நல்லதே செய்தல் முதலியவை பெண் குழவிகளின் குணமென ஆண் குழவிகளும் பெண் குழவிகளும் பாராட்டுகின்றன. ஆண் குழவிகள் இங்குக் கூறியவற்றிற்கு மாறான இயல்பு வாய்ந்தனவாம்.

கூட்டாளி :- கூட்டாளிக் குழுவாகக் குழவிகள் சேர்ந்து வாழவும் காண்கிறோம். ஒரே வகையான விருப்பநிலையும்

அக்கரையும் உள்ள குழவிகள் நேருக்கு நேராகக் கூடி விளையாடி வருகின்றன. இத்தகைய குழுவில் சட்டதிட்டம் ஒன்றும் இல்லை. விளையாட்டின்போது ஒன்றுகூடும் கூட்டத்திலும்கூட ஒற்றுமையும் கருத்து ஒருமையும் உண்டு. பேச்சுக் கூட்டாளிகளாக இக்குழவிகள் தட்டுத் தடையின்றிப் பேசி வருகின்றன. பால்வேற்றுமை, பொருளியல் வேற்றுமை, சமய வேற்றுமை என்ற இவற்றிற்கு இடம் இன்றி இவை அமையக் காண்கிறோம். வேலையாளின் பிள்ளையும், முதலாளியின் பிள்ளையும் இவ்வாறு ஒன்றாகக் கூடி ஆடலாம். குழவியின் மனநிலை சமுதாயக் கட்டுப்பாட்டினின்றும் விடுதலை பெற்று உரிமைக் காற்றினை நுகர்வதற்கு இவ்வ பெரிதும் உதவுகின்றன. "தான்" என்ற நிலை பல வகையிலும் நெருக்குண்டு கிடப்பது இங்கே விளையாட்டில் நன்றாக மலர்ந்து விரிகின்றது. இவ்வாறு பழகிய குழவிகள் சமுதாயச் சீர்திருத்தத்தில் பின்னே ஈடுபடுவது எளிதாம். பெரியோர்கள் குழவிகளிடம் உள்ளுரத் தொடர்பு பெற்றுப் பேசிவர முடியாதாகையால் இத்தகைய குழுவில் குழவிகளே இருந்து வரக் காண்கிறோம்.

தோழமை :—தோழமைநிலை இதன் நின்றும் பழுப்பதே ஆம். நண்பராக இருவர் வாழ வருவதனை எங்கும் காண்கிறோம். பிறரொடு மனமொத்துப் பேசியும் நடந்தும் வர நமது மனம் விழைகிறது. இந்த இயற்கையின் பயனாகவே தோழமையும் தோன்றிப் பரவுகிறது. பள்ளியின் நின்றும் ஒருங்கே வீடு திரும்பும்போதும், விளையாட்டில் ஒருங்கே ஆடிவரும்போதும் தோழமை முளைவிடத் தொடங்குகிறது. எல்லாவயதுகளிலும் இந்தத் தோழமை விளங்கக் காணலாம். ஆணொடு பெண் தோழமை கொள்ளும் நிலைமையைச் சமுதாயம் ஒப்புவதில்லை. தோழன்மார், தோழிமார் என்ற தனி வழக்கு இதனை வற்புறுத்துவது காண்க.

போக்கிலி :— போக்கிலிகள் கூட்டமாகக் கூடுவது நாகரிகம் மிக்க, நெருக்கடி மிக்க மேனாட்டில் பெருவழக்காகி உள்ளது. ஆனால், ஆண்கள் மட்டும் இவ்வாறு கூடுகின்றனவே அன்றிப் பெண்கள் கூடுவதில்லை. பொது மக்கள் நிலையோடு போராடுவது இத்தகைய போக்கிலிக் குழவிகளின் இயல்பு. இவற்றின் பகற்கனவு இவ்வாறு முற்றுகிறது. இங்கே தலைமை பூண்பதன் இன்றியமையாமையும் நன்கு விளங்குகிறது.

"நில நலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தம்
குலநலத்தால் ஆகுவர் சான்றோர் — கலநலத்தைத்
தீவளிசென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினம் சேரக் கெடும்" (நாலடியார்-179)

---

# 25. உலகாய் மலர்தல்

---

## I. போக்கிலிக் குழவிகள்

போக்கிலி :— போக்கிலிகளை மேலே குறிப்பிட்டோம். அவற்றினைப் பற்றியும் அறிஞர் ஆராய்ந்தவற்றை இங்குச் சுருங்கக் கூறுவது பயனுடையதாகும். நோயினை அறிவதே நோயைத் தீர்க்கும் முதல் வழியாம். போக்கிலிகளின் வரலாற்றை அறிந்தால், குழவிகள் போக்கிலிகள் ஆகாதபடி காக்கலாம். குழவிப் பருத்திலேயே குற்றவாளிகள் என இகழப்படுவாரைத் தண்டிப்பதற்கு எனத் தனிச் சட்டம் உண்டு. (The Reformatory Schools Act - Act VIII of 1897 - Sec. 399 of the Criminal Procedure Code)

குழவிகளைச் சிறைக்கனுப்பாது திருத்தச் சமுதாயம் முயல்கின்றது. இந்தச் சட்டத்திற்கு உட்பட்டவையே போக்கிலிக் குழவிகள் என்பதன்றி வேறுவகையாக அவற்றிற்கு இலக்கணம் கூற அச்சட்டம் இடம் தரவில்லை. ஆனால், அவ்வாறு கூறுவதால் நாம் பெறும் விளக்கம் ஒன்றும் இல்லை. வீட்டிற்கு அடங்காது திரிந்து குற்றம் செய்துவரும் குழவிகளே போக்கிலிக் குழவிகள் எனலாம். இவை செய்யும் செயலை ஆராய்ந்து பயனில்லை. இவற்றின் மனநிலையையே ஆராய்தல் வேண்டும். புறநிலைச் செயல் மனக்கோளாற்றினைக் காட்டும் ஓர் அறிகுறியேயாம். குழவி வாழும் சமுதாயப் பண்பாட்டு நிலையும், அதன் ஆளுமை அமைப்பும் பொருத்தமுறாது முரண்பட்டுக் கிடப்பதாலேயே இத்தகைய மனக்கோளாறு எழுகின்றதாம்.

நகரம் :— இவ்வாறு மனக்கோளாறு எழுகின்ற இடத்திலேதான் இத்தகைய குழவிகளை மிகுதியும் காணலாம். நகரமே அத்தகைய இடமாம். பெருஞ்சிக்கலுற்று ஆளுமை தோன்றுவதற்கு இடமில்லாத வாழ்க்கையே நகர வாழ்க்கையாம். அங்கு உயிர் வாழ்க்கையினும் எந்திர வாழ்க்கையே நடை பெறுகிறது எனலாம். இயற்கையான வேடிக்கை விளையாடல்களுக்கு அங்கு இடம் இல்லை. அன்பு பரவுதற்கு இடமில்லை. ஆதலின், அன்பு கெட்டுத் தேய்ந்து ஒழியவே அங்கு இடமுண்டு. மக்கட் கூட்டமோ பெரிது. ஆனால், ஒருவரை ஒருவர் அறிவதோ அரிது. வெள்ளித்திடையே தண்ணீர்க்கு அலையும் கதையே இதுவாம். அன்பின் மலர்ச்சியாம் குடும்பமும் சிதறுண்டு சிதைகின்றது. ஆதலின், நகரத்திலேயே போக்கிலிக் குழவிகள் மிகுதியாகத் தோன்றுகின்றன. வெளிநாடுகளிலிருந்தும் ஊர்ப் புறத்திலிருந்தும் பிழைக்க வழிதேடி நகரத்தில் பலர் வாழ வருகின்றனர். அவர்கள் பழைய வாழ்க்-

கையின் அமைதிக்கும், புதிய வாழ்க்கையின் நெருக்கடிக்கும் பெரிதும் முரண்பாடு தோன்றக் காண்கின்றனர். அத்தகையாரது குடும்பங்கள் இத்தகைய முரண்பாட்டினைத் தீர்க்க வழியறியாது அல்லற் படுகின்றன. கட்டுக் குலைந்த குடும்பத்தில் அல்லற் பாட்டின் இடையே குழவிகள் போக்கிலிகளாக மாறிவிடுவது இயல்பேயாம்.

ஏழ்மை :— போக்கிலிகளை ஏழ்மை பல்கச் செய்கின்றது எனக்கூறுவோரும் உளர். ஆனால், அது மறைமுகமாக அன்றி நேர்முகமாக அவ்வாறு செய்வதில்லை. துன்பத்தினையும், ஆறுதலற்ற நிலையையும் ஏழ்மை நிலையே வளர்க்கின்றது. இவற்றின் காரணமாகக் குடும்பம் சிதைகிறது. இவ்வாறு குடும்பங்களைச் சிதைப்பது வழியாகவே, ஏழ்மை, மறைமுகமாகப் போக்கிலிகளையும் இத்தகைய சிதறுண்ட குடும்பங்களிடையே வளர்க்கிறது எனலாம். பொருள் ஏழ்மையோடு அறிவு ஏழ்மையும் உண்டு. அறிவுநிலை குறைந்து விளங்கும்போது குழவிகள் போக்கிலிகளாக வளர்கின்றன எனக்கூறுவோரும் உளர். ஆனால், அறிவுநிலை குறைந்த குழவிகள் அனைத்தும் போக்கிலிகளாக வளர்வதில்லை. பள்ளிக்கூடத்தில் தேங்கித் தவித்து அறிவிற் பிற்பாடான குழவிகள் பிழைப்பதற்கேற்ற கைத்தொழில் முதலியவற்றைக் கற்றுக்கொள்ள இடமின்றி அலையும்போது அவை போக்கிலிகளாகலாம். அக் குழவிகள் பின்னர்ச் சீர்திருந்தாதபடி தடுப்பது அவற்றின் அறிவின் பிற்பாடான நிலையேயாம்.

ஆளுமைச் சிதைவு :— ஓய்வுகாலத்தினைத் தக்கவழியிற் செலவிட ஏற்பாடில்லாத போது குழவி குற்றவாளிகளின் கூட்டத்திடையேதான் சிக்கிக் கெட இடமுண்டு என்பதனை ஒப்புக்கொள்ளுதல் வேண்டும். குழவிகளின் காதிலும்,

கண்ணிலும் தகாதன எல்லாம் படுமாறு செய்து, வானொலியும் பேசும் படமும் இளமன நினைக் குலைக்கின்றன என நோவாரும் உண்டு. ஆனால், அவற்றின்பயனாக எல்லாக் குழவிகளும் கெட்டு விட்டனவா? பெரும் பான்மையினவேனும் கெட்டனவா? ஆளுமை சிதைந்த இடத்திலன்றிப் போக்கிலித்தனமை எழுவதில்லை. நம் நாகரிக வாழ்க்கை எவ்வாறேனும் பேய்ப்போட்டியிட்டு எல்லா வகையாலும் பணம் தேடுவதே நோக்கமாக அலைந்து வரும் போது, இத்தகைய மனநிலை குழவிகளையும் கெடுத்துப் போக்கிலிகளாகச் சிதைப்பதில் என்ன வியப்பு?

ஆளுமை :— அவ்வாறானால், "போக்கிலிகளின் ஆளுமை எவ்வாறு அமைந்துள்ளது?" எனக் காணுதல் வேண்டும். போக்கிலிக் குழவிகளின் புறநிலைச் செயல்களுக்கும், அவை வாழ்ந்து வந்த நிலைக்கும், அவற்றின் மனநிலைக்கும் ஒற்றுமை உண்டு எனப் பொதுவாகக்கூறிவிடலாம். அறிவின் கேட்டிற்கும் போக்கிலி நிலைக்கும் தொடர்பு உண்டேனும், "இத்தகைய தொடர்புதான்" என வரையறுத்துக்கூற இயலாது. "தான்" என்ற எண்ணமும் மேம்பாட்டு மனநிலையும் வளர, அறிவுநிலை சிறந்து விளங்கவேண்டும். இத்தகைய குழவிகள் பின்னர்ச் சீர்திருத்தம் பெறுவது தம் நிலையையும் தம்மையும் உணர்ந்ததாலன்றோ? கீழான அறிவுநிலை அவ்வாறு உணர்வதனைத் தடுக்கின்றது. இதனாலேயே இத்தகைய குழவிகளைச் சீர்திருத்துவது அருமையினும் அருமையாம். இக்குழவிகளிடையே சமுதாய உணர்ச்சியும், மெய்ப்பாடுகளும், மனநிலைகளும் சமநிலையில் விளங்காது அமைதியின்றிக் கொந்தளித்து வரவும் காண்கின்றோம். சமுதாய உணர்ச்சி மழுங்கித் தேயவும் காண்கின்றோம். ஒரே குடும்பத்தில் ஒன்றாக ஒத்து வாழ்கின்ற குழவிகளில் சில மனமுடைந்து போக்கிலிகளாகப் போகச் சில நல்ல நிலைமையில் வாழ்ந்து வரக் காண்கிறோம்.

இவ்வாறு, ஒரே புறநிலை ஒரு குழவியின் மனநிலையை ஒரு வகையாகத் தூண்டுகிறது. வேறொரு குழவியை வேறொரு வகையாகத் தூண்டுகிறது. ஆதலின், புறநிலையை மட்டும் ஆராய்ந்து பயனில்லை. உண்மை அறியவேண்டும் பொழுது மன வாழ்க்கையின் முழுவரலாற்றினையும் நாம் அறிதல் வேண்டும்.

போக்கிலி பழுப்பது:— "இந்தச் சமுதாய காரணங்களும், உணர்ச்சிவகையான காரணங்களும் எவ்வாறு இயங்கிவருகின்றன" என நாம் உணர்தல் வேண்டும். வேலைநிலையாமையால் (Uncertainty ot employment) "நாளைக்கு எவ்வாறு வாழ்வது" என அஞ்சி நடுங்கும் குழவியும், மனஞ் சிதைந்து வாடுகிறது. எல்லோராலும் எள்ளி இகழப் பட்டுத் தன் சிறுமையை உறுதியாக நம்பி இன்னது செய்வதென அறியாத குழவியும் மனஞ்சிதைந்து போக்கற்று நிற்கின்றது. இத்தகைய நிலையில், சில குழவிகள் தம் வஞ்சத்தினைத் தீர்க்கப் போக்கிலிகளாகப் போவதும் உண்டு. போக்கிலி நிலை யொன்றே போக்குவாயாகலாம். பொறுக்க முடியாதபடி மனத்திடையே எழுந்த பெரும் போராட்டத்தைத் தீர்க்க வேறு வழியின்றிக் கெட்ட நடத்தையில் இறங்கி அதனை மறக்க முயலுவதும் உண்டு. தன் நாணத்தாலும், குற்ற எண்ணத்தாலும் தன்னைத் தானே தண்டித்துக் கொள்ள வேண்டிப் பலரறியக் குற்றம் செய்யும் மனப்பான்மையும் சில குழவிகளிடம் உண்டு. தாய்-தந்தையர் தம்மை அன்பாக நடத்தாமையால், சில பெண்கள் அன்பு நிலையைத் தேடிக் கெட்டு அலைவதும் உண்டு.

தொண்டர்கள் :— போக்கிலி நிலையைத் தீர்க்க வழி உண்டோ? இந்த நிலையைத் தீர்ப்பது என்றால் சமுதாயத்தோடு செயற்கையாக முரண்பட்டு நிற்கும் குழவியை முரண்பாடு

தீர்த்துப் பழைய சமநிலையிற் பொருத்தம் உற்று வாழவைப்பதேயாம். குழவியினிடத்தே "தான்" என்ற எண்ணம் தூய நிலையில் வளர்ந்து வரவேண்டும். அதன் புறச்செயலாக வெளிப்படுவது அனைத்தும் சமுதாயம் ஒத்துப் புகழும்படி விளங்குதல் வேண்டும். இங்ஙனம் நிகழ உதவுவதே நம்கடமையாம். ஆனால், குற்றவாளிக் குழவிகளை வைத்திருக்கும் இடத்தில் (Borstal school) இன்னும் சிறைச்சாலைக் காற்றே வீசுகின்றது. இவற்றினைத் திருத்தக் கட்டும் பூட்டும் பயன்படுதல் இல்லை. இவற்றினைக் காத்து வளர்த்துத் திருத்த உண்மைத் தொண்டர்கள் வேண்டும். எல்லையற்ற பொறுமையும், ஆழ்ந்த அன்பும், பரபரப்பு அற்றதோர் அமைதி நிலையும் வாய்க்கப் பெற்ற தொண்டர்கள் வேண்டும். இக்குழவிவாழ்க்கை வியத்தகு நிலையில் ஒவ்வொரு நாளும் திருந்திவரும் அற்புதத்தில் உறுதியான கடைப்பிடியும், மக்கள் இயல்பே விளங்கும் கடவுள் நிலையில் நம்பிக்கையும் கொண்ட தொண்டர்கள் வேண்டும்.

திருத்தவழி :— இரண்டாவதாகச் செய்ய வேண்டுவது தம்மிடத்திலும் பிறரிடத்திலும் நம்பிக்கை பெற்று வாழுமாறு இத்தகைய குழவிகளைப் பழக்கிவிட வேண்டுவதேயாம். மூன்றுவதாகத் தம்முடைய நடத்தையினையும், அந்த நடத்தையைத் தூண்டும் ஊக்கநிலையையும் பற்றி உள்ளுணர்வு பெறுமாறும் செய்தல் வேண்டும். அப்போது தன்னடக்கம் பொலிந்துவரும். இத்தகைய குழவிகளுக்குத் தக்க வேலைத் துறைகள், இவற்றின் மனத்திற்கு ஆறுதல் அளிக்கும் வகையில், அமைதல் வேண்டும். அப்போது, அத்துறையில் தம்முடைய கடமையை உணர்ந்து, தம் குடும்பத்திற்குத் தலைவர்களாகவும், சமுதாயத் தொண்டர்களாகவும் இனிதே வாழ வரலாம். மேற்கூறிய தொண்டர்கள் கிடைப்பின் இவை

அனைத்தையும் செய்து முடித்து, நரகவாழ்வு வாழும் இக்குழவிகளைத் துறக்க வாழ்வு வாழ வைத்துத் தூய்மைபடுத்துவது அருமையன்றாம். நம்முடைய நாகரிகத்தில் கூட்டுறவை வற்புறுத்தாது தனிநின்று போட்டி போட்டுப் பணப்பேயாக அலையும் வாழ்க்கையைப் புகழ்ந்து வருதலும் ஒழிதல் வேண்டும். அத்தகைய போட்டி வாழ்க்கையை வெறுக்கும் மனப்பான்மையை வளர்த்துக் கூட்டுறவிலும், அன்பிலும், அமைதியிலும் குழவியின் நம்பிக்கை பெருகி வருமாறு செய்தல் வேண்டும். இல்லையானால் தோற்றதன் பயனாகக் குற்றவாளிகள் எனக் குழவிகளைச் சிறையில் அடைப்பதும், அதே நிலையில் வெற்றிபெற்ற மக்களைத் தலைவர் என வாழ்த்துவதும் நம் வெறியாட்ட நிலையை உணர்த்துமே அன்றி நம் நாகரிகத்தின் பெருமையைச் சுட்டாவாம்.

## II. போராட்டம்

தற்சாதிப்பு :— விடாப்பிடிகளான போக்கிலிகளை நினைத்ததும் குழவிகளின் தற்சாதிப்பு நிலையும் நம் நினைவிற்கு வருகிறது. தம் தொழிலை எவரேனும் தடுப்பதனைக் கண்டதும் குழவிகளின் சீற்றம் பொங்கி எழுகிறது ; அன்னோரைத் தாக்கலாகச் சீற்றம் முற்றுகிறது. இது, குழவி பிறருடன் புழங்கும்போது, எழும் சமுதாய நிலையாம். பாராட்டலும் கூட்டுறவும் ஒரு நிலையின் இருவேறு எதிர்மறை முனைகளாம். இந்தப் போராட்டம் நேரே வெளிப்படையாகத் தோன்றாத போது வேறு பிற வழியாக வெளிப்படும். கட்டுக்கு அடங்காது தாக்கும் போராட்டம் பெரிய குழவிகளிடம் தோன்றுவது சிறு குழவிகள் மேல் பாய்ந்து வரக் காண்கிறோம். சண்டித்தனமாகவும், பேரழையாகவும், பெருந்தொல்லையாகவும், அப்போராட்டம் பல வடிவு எடுத்துவரலாம். வீணே

எல்லோரையும் அலைக்கழிப்பதாகவும், பொறுமையே ஆகவும் அது பேய்க் கூத்தாடுவதும் உண்டு. அது வைதும், ஏளனம் செய்தும், சூளுரைத்தும், இரைந்தும், ஆரவாரித்தும் மாறி மாறி நடையாடலாம். "தடை செய்வார் நரகத்தில் ஈடு-படுவதாக" என்றெல்லாம் பகற்கனவு கண்டும் இத்தகைய குழவிகள் மகிழலாம். இந்தப் பகைமை வேறுவழியில் திருப்பினுல் பலரையும் அடக்கி ஆளும் தலைவராகவும் இவை மாறி வளர்ந்தோங்கலாம்.

இரு முகம் :— இத்தகைய குழவிகளின் மனநிலையை நோக்கும்போது இவை தாமாகவே பல கோலங்கொண்டு விளையாடிய பழக்கத்திற்கு ஏற்பத் தம்மில் ஒரு பகுதி மற்றொரு பகுதியை வெறுத்துப் போராடுவதாக இவற்றின் உள்ளத்தில் ஒரு தோற்றம் எழுவதும் இயல்பே ஆம். போராடும் பகுதியின் எதிரே, அடங்கி நிற்கும் பகுதியும் தோன்றுமன்றோ? பெற்றோரோ, மற்றோரோ தம்மைத் தாக்-கியபோது, தம் மனத்திற் பதிந்த அம்முதியோரின் நிலையை உணர்ந்த குழவிகள் பிறரைத் தாக்கும்போது அதே நிலையில் தாம் இருந்து விளங்குகின்றன; அவ்வாறு விளங்குவதனை அகக்காட்சியிற் காண்கின்றன. அதே நிலையில் முதியோரை முன்னம் தாம் அகத்தே எதிர்த்து நின்றதும் மனத்திற் பதிந்துள்ளது. ஆகவே, தம்மால் தாக்கப் பெற்றோரும் எதிர்த்து நிற்கவேண்டும் எனத் தாக்கும் குழவிகளும் எதிர்பார்க்கின்றன. அவ்வாறு எதிர்பார்த்தது போல் ஒருவர் எதிர்க்காமல் அன்புகாட்டினுல் இப்புதிய நிலையை அறிய-மாட்டாது குழவிகள் தயங்குகின்றன. புத்தர் கொள்கை-யினையும், கிருஸ்துவின் கொள்கையினையும் உணர்வது முதியோருக்கும் அருமையாகின்றது. போராட்டமே இயற்கை எனத்தோன்றுகிறது. நல்லகாலமாக நம்முடைய நாகரிகத்தில் இந்தப் போராட்ட மனப்பான்மையை நம் நாட்டினரல்லாதார்

மேல் பாய விடுகின்றோம். மேனாட்டாரின் தாய் நாட்டுக்-கொள்கை ஈதேயாம். இவ்வாறு போராட்டத்திற்கு வழி ஏற்படுகின்றதாம். ஆனால், இதனினும் சிறந்தவழி இத்தகைய போராட்ட மனப்பான்மையே எழாதபடி செய்வதன்றோ? இதனை உலகம் ஆராய்ந்து பார்த்தல் வேண்டும்.

ஆளுதலும் அடங்குதலும் :— மேற்கூறிய போராட்ட மனப்பான்மைக்கு அடக்கியாளும் மனப்பான்மை என்றும் ஒரு பெயர் இட்டு வழங்கலாம். ஆட்சிநிலை அல்லது ஆட்சி மனப்பான்மை இதனினும் வேறாம். போராடித் தாக்காது குழவி தன் உடல் வளத்தாலும், பிறரைத் தன்வயமாக்கும் ஆற்றலாலும் ஆட்சி நிலையை அடையலாம். பிற குழவிகள் விரும்பிப் பின்பற்றும்போது தலைமை நிலை ஏற்படுகிறது. தலைமுறை தலைமுறையாக வரும் தலைமையைக் கிழமை என வழங்கலாம். கிழமையாகத் தொடங்குவது, பிற இயல்புகளும் அங்கு விளங்குதல் காரணமாகத் தலைமையாகவும் மாறலாம். ஆட்சி நிலைக்கேற்ப அடங்குநிலையும் உண்டு. இந்த உண்மையை விலங்கிடையேயும் காணலாம். மனநிலையை ஆராயும்போது ஒவ்வொருவர் இடையேயும் ஆட்சிநிலையும் அடங்குநிலையும் எதிர் எதிர் ஒருங்கே தோன்றும். ஆகவே, ஆளுவோர் "பிறர் எவ்வாறு அடங்குவர்" என்பதனையும், அடங்குவார் "பிறர் எவ்வாறு ஆளுவர்" என்பதனையும் உணர்ந்தே நிற்-கின்றனர். அவ்வாறு எதிர்பார்ப்பதற்கு ஏற்ப அவர்களது புற ஒழுக்கமும் நிகழ்கின்றது. இத்தகைய எதிர்பார்ப்புநிலை மனத்தில் தோன்றுவதில்லையானால், எதிர்பாராத நிலையில் எவ்வாறு நன்கு நடந்துகொள்ள முடியும்? ஆதலின், அங்குத் தலைவர் தலைவாராய்ச் சிறவாது இழிநிலை அடைகின்றனர்.

தலைமை :— இந்தத் தலைமை உடல் நிலைமையையும், சமுதாய நிலையையும், சமுதாயப் பண்பாட்டமைப்பையும் பொறுத்து வெவ்வேறு வகையாக விளங்கிவரக் காண்கிறோம்.

வயது, அறிவு நிலை, உடலுரம், ஆற்றல் விளக்கம் என்ற இவை காரணமாக ஆளுக்கு ஆள் வேற்றுமை உண்டு. ஆற்றல்சான்றவர் அனைவரும் தலைவராதல் இல்லை. சில சில விளையாட்டுகளில் உடலுரமே தலைமையை வாங்கிக் கொடுக்கக் காண்கின்றோம். அறிவு நிலையிற் சிறந்தோரும் தம் ஆற்றலினைச் சமுதாயத்திற்கு ஒத்தவகையில் தம் நிலையை உயர்த்துவதற்குப்பயன் படுத்தப் பழக வேண்டும்; அத்தகையார் அவ்வாறு பழகாமையால் தலைமை நிலைமையை அடைவதற்கு ஒரு வழியும் காணாது ஒளி மழுங்கி ஒழிகின்றனர். சமுதாய நிலைமையும் தலைமையை உருப்படுத்துகின்றது. காலமும் இடமுமாக இயைந்த அமைப்பிற்கு ஏற்ப அது உருப்படும். நம் குடும்பத்தில் பெற்றோர் அரசு நடாத்துகின்றமை குழவியின் மனத்திற் பதிகின்றது. தற்சாதிப்பினைக் குடும்ப வாழ்க்கை வற்புறுத்துகின்றது. ஒரு குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாகத் தலைவர்கள் தோன்றி வந்தால் அந்தக் குடும்பத்தின் போக்கு பின் வரும் குழவிகளையும் தலைமைபூண்டு நிற்குமாறு இயற்கையாகவே ஊக்கும் அன்றோ? கீழ்நிலை அடைந்த குடும்பத்தில் பிறந்த குழவியும் தன் கீழ்மையை வெறுத்து மேல்நிலை அடைய முயன்று தலைமை பூண வரலாம். ஆகவே, அனைத்து நிலைமையையும் அறிந்தாலன்றி ஒரு முடிவு கூறுவதற்கு இல்லை. அன்றியும், பண்பாட்டு நிலைமைக்கு ஏற்ப ஒவ்வொரு நாட்டிலும் சமுதாய அமைப்பானது பல பிரிவுகளாகப் பலவகை மதிப்போடு விளங்குவதும் தலைமை வகையை உருப்படுத்துகின்றது எனலாம். சைனாவில் கல்வியாளரே தலைமை பூண்டு விளங்கி வந்தனர். இந்தியாவிலே பார்ப்பனரும், அரசரும் மாறி மாறித் தலைமை பூண்டதும் வரலாற்று உண்மையே ஆம்.

போட்டியா கூட்டுறவா? :- இந்நாளைய நாகரிகம், தனிமக்கள் போட்டி போட்டு எவ்வாறேனும் உயர்ந்து வருவ-

தனையே பாராட்டி வருகிறது. பள்ளிக்கூடத்திலும் இந்தப் போட்டி நிலையே குடிகொண்டுள்ளது. இந்த நிலை மாற வேண்டும் என்பதே அறிஞருடைய வேணவா. ஐந்து ஆண்டிலிருந்து பத்து ஆண்டு வயது உள்ள குழவிகளை இரு-பிரிவாகப் பிரித்து, ஒரு பிரிவினைப் பழைய்படி அடக்கி ஆளும் முறைவழியே பயிற்றியும், மற்றொரு பிரிவினை உரிமையும் பொறுப்பும் பெற்று விளங்கும் குடி அரசு வழிமுறையே பயிற்றியும் சில அறிஞர் ஆராய்ந்தனர். குடி அரசுக் கல்வி முறையின் பயனாகக் குழவிகளிடையே மனத்திட்பம் ஒழுக்க முறை முதலியன சிறந்து விளங்கினவாம்; கூட்டுறவும் தோழமையும் நிறைந்து ஒளிர்ந்தனவாம்; பகையும் போராட்டமும் ஒரு சிறிதும் இடம்பெற இல்லையாம். அடக்கி ஆளும் கல்விமுறையிலோ தாக்கலும் போராட்டமுமே எண்-மடங்கு மிக்கு விளங்கினவாம்; ஒரு பாவமும் அறியார்-மேலும் இந்தப் போராட்டம் பாய்ந்ததாம். போராட்டம் இல்லையானால் உலகில் ஒரு சுவையும் தோன்ற இடமின்றி இந்த முறையிற் பழகிய குழவிகள் இடர் உறுகின்றனவாம்.

எதிர்த்து நிற்றல் :— ஒரு வகையாக நோக்கும்போது, எதிர்த்து நிற்கும் நடத்தையானது பிறரோடு குலாவி நில்லாது பின்னுக்கு வாங்கும் நடத்தையே ஆம். பிறர் வேண்டுகோளை நிறைவேற்ற மறுக்கின்ற குழவிகளை எங்கும் காண்கின்றோம். இவை செயலாலும் மறுக்கலாம்; பேச்சாலும் மறுக்கலாம்; வாளா நின்றும் மறுக்கலாம். பிறரொடு ஒத்துழைப்பதில் தமக்கு விருப்பம் இல்லை என்பதனை வேறு வகையாகவும் குழவிகள் காட்டிவருகின்றன. இவ்வாறெல்லாம் விளங்கும் நடத்தையே எதிர்த்து நிற்கும் நடத்தையாம் (Negativism). உள்ளக்கிளர்ச்சி பொங்கிவரும்போது சிறி விழுவதும் ஒரு-வகை எதிர்ப்பேயாம். அழுதுவிடுவதும் ஒரு வகை எதிர்ப்பே-

யாம். இங்குச் சண்டித்தனமும் விளங்கக் காண்போம்; அழும்புநிலையும் இங்குத் தோன்றும். வயதிற்கும் அனுபவத்திற்கும் ஏற்ப இந்த நிலையின் இயல்பும் மாறும்; அளவும் மாறும்; பொருண்மையும் மாறும்.

வளர்ச்சி :— 19 ஆம் திங்களிலிருந்து 49 ஆம் திங்கள் வரை வயதுள்ள குழவிகளை ஆராய்ந்த ஆராய்ச்சியாளர் இந்த நிலையினைப் பற்றிய சில முடிவுகளைக் கண்டுள்ளனர். பெரியோரை எதிர்ப்பதினும், குழவிகளை எதிர்த்து வருவதனையே குழவிகளிடை காண்கின்றோம். குழவியின் மூன்றுவது பிறந்த நாள் கொண்டாட்டத்திற்குப் பின் இரண்டு திங்களுக்குள் இந்த எதிர்ப்பு உயர்நிலை அடைகிறது. முதிய குழவிகளோ செயலாலன்றிப் பேச்சாலேயே எதிர்த்து நிற்கின்றன. எதிர்ப்பின் உயர்நிலை எழுவதற்கு நான்கு திங்களுக்கு முன்னர்த்தான் அடக்க நிலையின் உயர்நிலை எழுந்தோங்கி விளங்குகிறதாம். வீட்டிற்கு உள்ளேயே விளையாடுவது—வெளியே விளையாடுவது; விளையாட்டு—வேலை; குழவிகள் மிக்கு இருத்தல்—குறைந்திருத்தல்; இத்தகைய எதிர்மறை நிலைகளாலே எதிர்ப்பு நிலையில் ஒரு வேற்றுமையும் எழக்காணோம். அறிவு நிலைக்கும் இந்த எதிர்ப்பு நிலைக்கும் யாதொரு தொடர்பினையும் அறிஞர் கண்டார் இல்லை. உடல் வயதிற்கும் இதற்கும் கூட ஒரு தொடர்பும் தோன்றவில்லை.

பொதுநிலை அன்று :- எதிர்ப்பு என்றால் எல்லாச் செயல்களையும் எதிர்ப்பது என அது பொதுநிலையில் விளங்குவது இல்லை. குறிப்பிட்ட செயல்களைப் பற்றிய சிறப்பு நிலையாகவே அது தோன்றுகிறதாம். பல வகையான சமுதாய நிலைகளில் குழவி ஈடுபட்டு வரும்போது இத்தகைய எதிர்ப்பு எழுவதும் இயல்பேயாம். தன்னுடைய தேவைகளுக்கும் சமுதாயத்-

தேவைகளுக்கும் இடையே பொருத்தம் உற்றதொரு சமநிலை விளங்கிவர வேண்டுமானால், இந்த எதிர்ப்புக்கும் சிறந்தநிலை உண்டென்பது தெளிவாம். இதனை நிலையான இயல்பு எனக் கொள்ளுதல் கூடாது. குழவி வளர்ந்து வரும்போது அந்த வளர்ச்சிக்கு ஏற்ப இடையே சிறிதுபோது தோன்றுவது என்றே இதனைக் கொள்ளுதல் வேண்டும். வளர்ந்து முற்றிப் பொருத்தம் உற்றுத் திருத்தம் பெற்ற பின், எதிர்ப்பு நிலையானது பழகிப் படிவதற்கே இடம் ஏற்படாது போகும். அப்போது அது தானாகவே மழுங்கித் தேய்ந்து ஒழிகின்றதாம்.

## III. கீழ்நிலை உணர்வு

ஆட்லர் :— ஆட்லர் (Addler) என்பவர் குழவி நிலையில் காணும் கீழ்மை உணர்வே நடத்தை அனைத்தினையும் உருப்படுத்துகின்றது என்று கூறும் கொள்கையை முன்னரே கண்டோம். குழவி எதிர்காலத்தில் உயர்வு பெறவே பிறந்தது-முதல் முயல்கிறது என்பதும் அவர் கொள்கையே ஆம். ஆனால், குழவி பிறந்த உடனேயே இந்தக் கீழ்மையுணர்வு பெற்று விளங்குகிறது என்று கூறுவதற்கு இடமில்லை. சமுதாயத்தின் இடையே எழும் அனுபவத்தின் பயனாகவே இந்தக் கீழ்மை வளர்தல் கூடும். குழவியின் வாழ்க்கையைச் சமுதாயப் பண்பாட்டிற்கு ஏற்பச்செயற்கையாகப் பேற்றோரும் மற்றோரும் எவ்வாறு உருப்படுத்தி வருகின்றனர் என்பதனைப் பொறுத்ததாகும் இக்கீழ்மை உணர்வு அடையும் கோலம்.

பிறப்பு வகை :— கீழ்மை உணர்வின் பிறப்பிடங்கள் மூன்றாம். உடலமைப்பின் குறைபாடு ஒன்று. அறிவு-நிலைக் குறைபாடு இரண்டு. சமுதாயத்துடன் உணர்ச்சி-நிலைப் பொருத்தம் உறுவதில் எழும் குறைபாடு மூன்று.

இங்கெல்லாம் நான்கு வகையாகக் கீழ்மை உணர்வு வளரத் தொடங்குகின்றதாம். (1) குழவியின் ஆற்றல்நிலைக்கும் குழவியினிடம் பெற்றோர் எதிர்பார்க்கும் ஆற்றல் நிலைக்கும் உள்ள வேறுபாட்டால், தான் எதிர் பார்ப்பதுபோல நடக்க முடியாமை கண்டு, குழவி தன்னைத்தானே கீழாகக் கருதி விடலாம். (2) தன்னைப்பற்றித் தவறாகக் கருதித் தன்னை உயர்வாகக் கற்பனை செய்து கொண்டு வாழும் குழவி பின்னே பிற குழவிகளோடு போட்டி போட்டு வாழும்போது, தான் எண்ணியபடி உயர்வாக விளங்காமை கண்டு ஏமாந்து போய்க் கீழ்நிலை உணர்வு பெற்று வளரலாம். (3) வழியில்லாத வழியிலும் ஏமாற்றி எவ்வாறேனும் உயரவேண்டும் எனப் பெரிதும் முயன்று வரும்போது, அவ்வாறு ஏமாற்ற முடியாத நிலையில் குழவி தன் கீழ்மையை உணராது என் செய்யக்கூடும்? (4) பெற்றோர் எப்போதும் ஒரு குழவியை ஆற்றல் மிக்காரோடேயே ஒப்புமை காட்டிக் குறைகூறி வந்தால், குழவியும் அதனை நம்பித் தன்னைக் கீழாகவே எண்ணி விடுகிறது. இந்த உணர்வு இவ்வாறு சமுதாயத்தின் வழியே எழுகின்றது என்பது வெளிப்படை.

மாற்றுப் படிகள் :— இந்தக் கீழ்மை உணர்வினை நீக்குவதும், சமுதாயப் பண்பாட்டு நிலையைப் பொறுத்திருக்கவே காண்கின்றோம். கீழ்மை உணர்வின் நின்றும் நீங்கப் பல வழிகள் அமைந்துள்ளன. அவை பல பலப் படிநிலைகளாக சிறிது சிறிதாக உயர்ந்து நிற்கவும் காண்கின்றோம். அடிப்படையாகக் கீழ்மை நிலையை எதிர்ப்பின்றி ஒப்புக் கொள்ளும் மனப்பான்மையையே முதற்படியாம். கீழ்நிலை உணர்வால் செயலற்று நில்லாது உயர்நிலைக்கு வழியாகக்கொண்டு அதனைத் தூய்மையாக்கிச் சிறப்பித்துக் கொள்வதே அடுத்து மேல் விளங்கும் இரண்டாம்படி நிலையாம். கீழ்நிலை உணர்வை

மறப்பதற்காக அதற்கு மாறுன செயல்களைக் கீழ்நிலைக்கு ஈடாகச் செய்து வருவது மூன்றும்படி நிலையாம். இவ்வாறு ஈடு செய்யும் நிலை அளவுக்கு விஞ்சித் திகழுவதே மிக உயர்ந்த படிநிலையாம்.

முரண்பாடு :— புறநிலையோடு குழவி பொருத்தம் உருத நிலையில், தனக்கும் சமுதாயத்திற்கும் இடையே உள்ள முரண்பாட்டினை உணராமல் இருக்க முடியுமோ? இந்த முரண்பாடு குழவியின் உள்ளத்தே ஒரு நெருக்கடியை விளைவிக்கின்றது. இந்த நெருக்கடியைப் போக்கிக் கொள்ளச் சில குழவிகள் பகற்கனவு கண்டு களிக்கும் என முன்னரே கண்டோம். இத்தகைய நிலை குடும்பத்திலேயே தொடங்கும். தன்னைப்பெற்றோர் வாயாரப் பாராட்டாமை கண்டு தன்னைக் குடும்பத்தின் உரிமைப் பிள்ளையாகக் கருதாது, காசுக்கு வாங்கி வளர்க்கும் வளர்ப்புப் பிள்ளையே தான் எனக் கனாக் கண்டு மனம் மெலியும் குழவியின் வகை பலப் பலவாம். குழவியின் கீழ்நிலையே இந்த நிலைமையை விளைவிக்கலாம்.

மருந்து :— குழவிகளை நாடகமாட விட்டால் இந்த மனப் பான்மைகள் வெளியாகிவரும் என்றும் கண்டோம். குழவிகள் பொம்மை கொண்டு விளையாடும் விளையாட்டும் அவற்றின் பகற்கனவினை விளக்கிவைக்கும் என்பதும் நாம் முன்னர்க் குறிப்பிட்டதேயாம். அடிக்கடி அவை வரைந்து வரும் ஓவியங்களும் அவற்றின் மனநிலையை விளக்கும் என்பதும் புதிய கருத்தன்று. குழவி பல வேறு கோலங்கொண்டு புற உலகிலும் பகற்கனு உலகிலும் பிறரோடு சமுதாயத் தொடர்பு உறுவதே அல்லாமல், அத்தொடர்பினை நாள் தோறும் மிகுதிப் படுத்திக் கொண்டு வருவதும் இங்கு உண்மையாகிறது. புற-நிலை உலகத் தருக்க முறைக்கும், அகநிலை உலகக் கற்பனை

முறைக்கும் உள்ள ஒற்றுமையையும் முன்னரே கண்டோம். எனவே, பகற்கனவால் ஒரு கேடும் இல்லை எனலாம். ஆனால், குழவி புற உலகினையே அடியோடு புறக்கணிக்கும் போது, கேடனைத்தும் விளைகின்றது. ஆதலின், அத்தகைய குழவிகளின் கற்பனைகளை வெளிப்படையான செயலாகவோ பிறர்க்குப் புலனாகித் தோன்றும் வேறு வெளிப்பாட்டு வடிவாகவோ அக்குழவிகள் வெளியிட்டு வருமாறு நாம் உதவுதல் வேண்டும். நாடகத்திலும் பொம்மை விளையாட்டிலும் ஓவியத்திலும் அகநிலைக் கற்பனை வெளியாவதால், அக்குழவிகளின் அகநிலை நெருக்கடி தீருவதனையும் முன்னரே கண்டுள்ளோம்.

## IV. குழவியும் பள்ளியும்

பள்ளி :— குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்குப் போன பின்னர், ஒரு புதிய உலகிற் புகுந்துள்ளதாகவே சில காலம் வரை அவை கருதுகின்றன. அங்கே அவைகள் பொருத்தம் பெற்றுத் திருத்தமுற்று வருவதனையும் சிறிது ஆராய்தல் வேண்டும். பள்ளிக்கூடம் முதல்நிலைச் சமுதாய அமைப்பாம். இப்போது பல வேறு வழிநிலைச் சமுதாய அமைப்புகள் ஆட்சிபெற்று விளங்கினாலும், சமுதாயத்தின் பண்பாட்டினை ஒரு தலைமுறையாரிடத்திலிருந்து மற்றொரு தலைமுறையாரிடத்தில் ஒப்படைத்து வளர்த்து வரும் தொண்டு பள்ளிக்கூடத்தின் சிறப்புநிலைத் தொண்டாக இன்றும் விளங்கி வருகிறது. அது மட்டும் அன்றி, குழவிகளின் சமுதாய ஈடுபாட்டு நிலையையும் ஒழுக்க நிலையையும் வளர்த்து வருகிற பெரும் பொறுப்பினை அதுவே இன்றும் தாங்கிநின்று நிலவுகிறது. பள்ளிக்கூடத்தில் கற்பிக்கப்படும் கல்வியின் நோக்கங்கள் என எல்லோரும் ஒப்புக்கொள்பவை யாவை?

ஒன்று அறிவை வளர்த்தல்; இரண்டு கைத்திறனும் செய்முறையும் திருத்தம் பெறப்பழக்குதல்; மூன்று நோயற்ற வாழ்வினை நிலைநாட்டுதல்; நான்கு உலகத்தோடு ஒட்டி வாழ்ந்து அறநிலையில் உயருமாறு செய்தல்; இந்த நான்கினையே அனைவரும் பள்ளியின் சிறந்த நோக்கங்கள் எனப் புகழ்கின்றனர்.

முக்கோணம் :— பள்ளிக்கூடத்தில் எழுகின்ற சமுதாய வாழ்க்கையினைக் குழவியும் பெற்றோரும் ஆசிரியரும் மும்முனையாக நிற்க அமையும் முக்கோணமாகக் காணலாம்.




குழவியே இந்த மேனிலைக் கோணமாகவும், மற்றைய இருவரும் அடிநிலைக் கோணங்களாகவும் அமைகின்றனர். குழவிக்கும் ஆசிரியர்க்கும் உள்ள தொடர்பும் குழவிக்கும் பெற்றோர்க்கும் உள்ள தொடர்பும் நேர் தொடர்புகளாம். இந்த நேரான தொடர்பு வழியாகப் பெற்றோர்க்கும் ஆசிரியர்க்கும் தொடர்பு எழுகிறது. குழவியும் ஆசிரியருமாம் தொடர்பே

பள்ளியில் நாள்தோறும் நிகழும் பெருநிகழ்ச்சியாம். பெற்றோருடன் தொடர்புண்ட குழவியே இதுபோது ஆசிரியரோடு தொடர்பு பெறுகிறது. ஆதலின், பள்ளிக்குக் குழவி வருதற்கு முன்னரே, குடும்பத்திலும் விளையாட்டிலும் ஏற்பட்ட பழக்கத்தால், வாழ்க்கையின் பலவகைத் துறையில் உருப்பெற்றுத் தனக்கென அமைந்த சிறப்பியல்பாம் ஆளுமையோடும் பள்ளிக்குள் நுழைகின்றது என்பதனை நாம் மறத்தலாகாது. முன்னெல்லாம் பலரும் இவ்வாறு ஓட்டிக் கெடுத்த எந்திரமே தங்கள் கைக்கு எட்டுகிறது எனப். பல ஆசிரியர்கள் முணுமுணுக்கின்றார்கள்.

ஆற்றலும் வேகமும் :— குழவியின் இயற்கையான மனஅமைப்பு, உடலமைப்பு, சமுதாயப் பண்பாடு முதலியவற்றிற்கு ஏற்பக் குழவி கற்றுக்கொண்டு வருகிறது. குழவி கற்றுக்கொள்ளும் நிலையை ஓர் ஆற்றலாகவும், அந்த ஆற்றல் எழுந்து விளங்கும் வேகமாகவும் பேசுதலும் கூடும். ஆளுக்கு ஆள் இந்த ஆற்றலும், வேகமும் மாறிவரக் காண்கிறோம். நாட்டுக்கு நாடு மாறிவரும். நாட்டுப் புறத்திற்கும் நகர்ப் புறத்திற்கும் இந்த வகையால் வேற்றுமை உண்டு. இந்த வேற்றுமை அங்கங்குள்ள சமுதாயத்தின் அனுபவ வளப்பத்தையும், பண்பாட்டின் உயர்வையும் பொறுத்துள்ளது எனலாம். கற்றுக்கொள்வதென்பது சமுதாயத்தில் சிறந்து விளங்கும் ஓர் ஊடாட்டமேயாம் (Interaction). சமுதாயச் செயல் இடையேயே, ஆராய்ச்சி முதலான பலவகையான கல்வி முறைகளும் முளை விடுகின்றன. ஆராய்ச்சி அனைத்தும் தன்-ஆராய்ச்சியேயாம். தன்னுள் தானே தன்னை ஆராய்கின்ற இந்த ஆராய்ச்சியில் "தான்" என்பது வளர்வது சமுதாய ஊடாட்டத்தினிடையே என முன்னரே விளக்கியுள்ளோம். இங்கே, உலகப்பொருள்களைப் பற்றியும் மக்களைப் பற்றியும்

குழவி முன்னாகவே எண்ணி எதிர்பார்த்து நிற்குமாறு அது பேசும் பேச்சே உதவுகின்றது.

ஆசிரியக் கலை :— இவ்வகையால் எல்லாம் தன் நடத்தை சிறப்புற்று வரும் நிலையிலேயே குழவி பள்ளிக்கூடத்திற்குள் நுழைகிறது. குழவி விரும்பத் தக்கதொரு நோக்கத்தோடு அதன் ஊக்கநிலை இணைந்து வருதல் வேண்டும். இவை அனைத்தும் செயல்நிலை வட்டமாக அமைந்து கிடக்கும் என முன் கண்டோம். ஆதலின், கற்றுக் கொள்ளும் செயலிலும் இந்த அமைப்பினைக் காணலாம். வீட்டிலே சில நோக்கங்களை உயர்வாகக் கருதி வாழ்ந்த குழவி பள்ளிக்கு வரும்போது அந்த நோக்கங்களை ஆசிரியன்மார் பாந்து வளர்ந்து வரச் செய்கின்றனர். இந்த நோக்கங்களையே கல்விமுறையில் நிலை நாட்ட வேண்டும் எனச் சமுதாயமும் விரும்புகிறது. அந்தச் சமுதாயத்தின் பண்பாடு, மேல் வரிச் சட்டங்களாகச் சிலவற்றைக் கொண்டு திகழும். அத்தகைய நோக்கங்களோடு குழவி பள்ளிக்கு வருமுன் போற்றிய நோக்கங்களும் இணைந்து ஒன்றாகி விடுமாறு செய்தல் வேண்டும். அவ்வாறு குழவி போற்றும் நோக்கத்தினை அது அடைய முயலும்போது, அந்த நோக்கம் அதன் ஆற்றலுக்கு ஏற்றதாக இருத்தல் வேண்டும். அந்த நோக்கத்தினை அடைய ஒரு திட்டமும் வேண்டும். அதனை அடையும் வழியினைத் தானே தேர்ந்து எடுக்கும் உரிமையையும் குழவி பெற்றாலன்றி அதன் ஆளுமை முழுநிலையை அடைவதில்லையாம். இயற்கையாகவே இங்கு ஓர் ஒழுக்கநிலை நிலைபெற்று வளரக் காண்கிறோம். குழவி தான் கற்று வருகின்ற நிலையில் எழுந்து விளங்கும் செயற்பாட்டினிடையே தன் ஆற்றலின் எல்லையை அறிந்து கொள்கிறது. தான் வேலைசெய்து வருகின்ற பொருள்களை அடக்கி ஆள்கிறது. தன் திட்டத்தை நெகிழ விடாது பின் பற்றி

வருகிறது. இவ்வாறு அறிந்தும் ஆண்டும், பின் பற்றியும், வரும்போது எல்லாம் புறநிலையை அடக்கி ஆளும் திறனும், தன்னைப்பற்றியதொரு நல்லொழுக்க முறையும், குழவியி-னிடம் வேரூன்றி வளர்கின்றன.

தோல்வி :— கல்விமுறைத் தேர்தலில் தேராதபோது குழவி இப்படித்தான் நிற்கும் என உறுதி கூறுவதற்கு இல்லை. தன் ஆற்றல் முழுவதனையும் அறியாத குழவி மேலும் முயன்று வெற்றி பெறலாம். தன் குறைபாட்டினை உணர்ந்து வேறு எல்லையில் முயன்று வெற்றி பெறலாம். ஆனல், தோல்வி குழவியைப் பற்றியதொரு கீழ்மை உணர்வினையும் நிலைஇழ-வினையும் குழவியின் உள்ளத்தே விளைத்து விடவும் கூடும். அப்போது, குழவி தனக்குள் தானே சென்று ஒளித்துப் பகற்-கனவு கண்டு களிக்கும்; கெட்ட நடத்தையில் ஈடுபட்டுப் போக்கிலியும் ஆகும். பிற்பாடான குழவிகள் எனப் பள்ளியில் இகழப் பெறுவன இவ்வாறு சமுதாயத்திற்கே பெருங்கேடாக முடிவதனை மனத்தில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும். இதனை நீக்குவதற்குச் சிறந்த வழி யாது? வெற்றிக்கென வரையறுக்கும் உயர்எல்லையைக் குழவியே எட்டி அடையத் தக்க வகையில் தாழ்த்தி விடுவதே சிறந்த வழியாம். வெற்றியின் சுவையைக் குழவி நுகர்ந்தபின் மெல்ல மெல்ல வெற்றியின் உயர்வெல்லையை உயர்த்திக்கொண்டே போகலாம். இதனல் சிறந்த நன்மைகள் விளைந்துள்ளன எனக் கண்கூடாகத் தம் ஆராய்ச்சியின் பயனகப் பல அறிஞர்கள் கண்டுள்ளார்கள்.

போட்டி :—தேர்தல் முதலியன போட்டி முறையேயாம். கல்வி கற்பிப்பதில் போட்டி முறையைக் கையாளுவதால் மெல்லக் கற்கும் குழவிகள் ஊக்கம் இழந்து மனந்தன்றிச் செயலற்று நிற்கின்றன. அல்லது "எப்படியேனும் ஒழியட்டும். என்செய்வது?" என வாளாகிடக்கின்றன. விரைந்து கற்கும்

குழவிகள் தமக்கு உரியதல்லாத பெருமையைப் பெறுகின்றன. உலகிலே மனப்பாடம் செய்வதிலேயே பெருமை சிக்கிக் கிடக்கின்றது என்று யார்தான் சொல்லத் துணிவர்? எப்படியேனும் வகுப்பில் தம் நிலையைக் காத்து வருதல் வேண்டும் என்று முயன்றும் வெற்றிபெருவிடில் இழிபிறப்பாய்விடும் என்று நம்பப்புகுந்து பின், பிற குழவிகளைப் பற்றிய கவலை என்பதே எள்ளளவும் இன்றி வாழும் போராட்டமே காண்கிறோம். ஒத்துழையாமையே இத்தகைய பள்ளிக்கூடத்தில் வளரக்கூடும்.

வாழ்க்கைத்துறைப் பாட முறை :- இம்முறைக்கு மாருக வாழ்க்கைத் துறைப் பாடமுறை (Project Method) இன்று வழங்கிவருகிறது. முன்னேற்பாடாகத் திட்டம் போட்டுக் குழவிகளே கூட்டுறவாக ஆசிரியர் கண்காணிப்பில் பயின்றுவரும் வாழ்க்கைத்துறைப் பாடங்களில் குழவிகள் செய்யவோ ஆராயவோ முயலப்போவதனை முன்னுகவே அவை அனைத்தும் ஒன்று சேர்ந்து வரையறை படுத்திக்கொண்டு உறுதியுடன் உழைக்க முந்துகின்றன. செய்யப்போவதற்கு ஏற்ற திட்டங்களை வரையறுப்பதிலும் அவை அனைத்தும் ஒத்துழைக்கின்றன. அதனை முடிப்பதற்கென எழும் பொறுப்பிலும் அவைஅனைத்தும் பங்கு எடுத்துக்கொள்கின்றன. தோல்வியோ வெற்றியோ அவை அனைத்திற்குமே என்பதில் அக்குழவிகளிடையே ஐயம் ஒன்றும் எழுவதில்லை.

கூட்டுறவு :— இந்த ஆராய்ச்சியிலிருந்தும் கூட்டுறவை வளர்க்கும் கல்விமுறையே சிறந்தது என்பது குன்றின் மேலிட்ட விளக்காம். குழவிகளிடையே தக்கதொரு நோக்கத்தைத் தூண்டி எழுப்புதல் வேண்டும். அதற்கு ஏற்றதொரு வழியையும் குழவி காணுமாறு செய்தல் வேண்டும். அதனைப் பின்னும் முயல வேண்டியதோர் ஊக்க நிலையையும்

கிளர்ந்து ஓங்கச் செய்தல் வேண்டும். இந்த நிலைகளில் எல்லாம் மாணவர்களிடையேயும், ஆசிரியர் மாணவர் இடையேயும் உள்ளக் கிளர்ச்சியைப் பற்றிய நெருக்கடி ஒன்றும் நேராதவாறு காத்தல் வேண்டும். இவற்றிற்கெல்லாம் தக்க பழக்க வழக்கங்களை எழுப்பி வகை செய்து விடுவதே ஆசிரியக்-கலையின் அருந்திறனாகும். இத்தகைய அமைதிநிலை ஏற்படாத-போது குழவிகளிடையே கொந்தளிப்பே காண்கின்றோம். எதிர்ப்பும் கலகமுமே மனநிலை அளவிலோ வெளிச் செயலிலுமோ தோன்றி விடுகின்றன. அக்கறை சிறிதுமே இன்றிக் கல்வியைப் பற்றியே கவலை கொள்ளாத நிலையும் குழவியின் மனத்தே எழும். தன்முயற்சி என்பது சிறிதும் இல்லாமற்போகும். உள்ளூற அன்றி புறத்தோற்றத்தளவில் மட்டும் ஒழுங்குமுறைக்கு ஒப்ப ஒழுகி அடங்கி நிற்கின்ற போலிநிலையும் விளையும். பகற்கனவு கண்டு கற்பனை உலகிற் புகுவதும் நிகழும். இவை அனைத்தினையும் ஆராய்ந்து தக்க வழியில் ஊக்கத்தினை விளைவித்து மனநிலையைச் சமநிலையிற் கொண்டுவந்து சமுதாயத்தோடு பொருத்தமுற்று வாழுமாறு குழவியைத் திருத்துவதே சிறந்த ஆசிரியரின் திறமையாம். இந்த முயற்சியில் குடும்பமும் பள்ளிக்கூடமும் ஒத்து உழைத்தாலன்றி வெற்றி காண்பது எளிதன்று. பழங்-காலத்தில் அறிவை அகலப் படுத்திக்கொண்டு போவதனை வற்புறுத்தியது போல் அல்லாமல் எதிர்காலத்தில் உலகத்தோடு ஒட்டி ஒழுகி உணர்ச்சி நிலையைச் சமநிலையில் வைத்திருக்கும் பழக்கத்தை வற்புறுத்துவதே புத்துலக அமைப்பிற்கு இன்றியமையாததாம்.

கல்வித் திட்டச் சீர்திருத்தம் :— கல்வித் திட்டத்தின் அமைப்பினுக்குள்ளேயே இருந்து குறைபாடுடைய குழவிகளைத் தனித் தனியே ஆராய்ந்துவர உள்ளத்தியற்கை நூலறிஞர்கள்

மேனாட்டுப் பள்ளிக்கூடங்களில் இடம் பெற்று மனதிற்கேற்ற மருத்துவம் செய்து வருகின்றனர். நம் நாட்டில் இத்தகைய நிலை என்று எழுமோ? உலகப்போரும், சீர்கேடும் வாராமற் பள்ளியிலேயே தடுத்து விடக்கூடும் என்பதனை உலகம் நம்பவரும் காலம் என்றோ? இவ்வாறு மனமருத்துவ முறையைப் பின் பற்றாமல், புதிய உலக வாழ்க்கைக்கும் குழவிக்கும் ஏற்றவாறு கல்வி முறையைச் சீர்திருத்தி நிலைநாட்ட முயல்கின்ற ஆசிரியர்களும் உள்ளார்கள். இவர்கள் பழைய கல்வித் திட்டங்களையும் கல்வி முறையையும் பழிக்கின்றார்கள். எந்திரங்கள் கற்களை ஒரே அளவில் அறுத்துப் போடுவதுபோல அனைவரையும் ஒரே முறையில் பயிற்றிவரும் நிலையினையும், அங்கு உள்ள வகுப்பு முறையினையும், சடங்கு முறைகளையும், போட்டியினையும், தேர்தல்களையும், ஏட்டுச்சுரைக்காய் முறைகளையும் குற்றங்கூறிக்களைய அன்னோர் முயல்கின்றனர். ஆனால், எல்லாக் கேடுகளும் கல்வி முறையாலும் கல்வி திட்டத்தாலுமே எழுந்தன எனக் கூறி விடுவதற்கு இல்லை. குற்றங் குறைகள் பல இருப்பினும், இவற்றினைத் தாண்டியும் குழவிகள் பல துறைகளிலும் சிறந்து விளங்கி வருகின்றன. பள்ளிக்கூடத்துப் படிப்பே அன்றி வேறு பல வகையான சமுதாயக் கூட்டுறவுகளும் உள்ளன. குடும்பமும் சமுதாயமுமாம் அடிப்படையின்மீது குழவியொடு குழவியும், குழவியோடு ஆசிரியரும் ஊடாடி வருகிற நிலையைப் பற்றியனவே அனைத்துக் கேடுகளும் என உணர்ந்து, அதற்கு ஏற்ற சீர்திருத்தங்களை நாடுதல் வேண்டும். ஆதலின், வேறு பல அறிஞர்கள் மனமருத்துவ முறையினையும் புதிய கல்வி முறையினையும் ஒருங்கு பின்பற்றிவருவதே சிறந்த சீர்திருத்த முறை எனக் கருதுகின்றார்கள். உலகத்துறைகள் அத்தனையிலும் போட்டியை வளர்க்கும் உலகம் கூட்டுறவின் நன்மையை என்றுதான் உணருமோ?

## V. ஆசிரியரும் குழவியும்

ஆசிரியர் நோக்கு :— ஆசிரியர்க்கும் குழவிக்கும் உள்ள தொடர்பினை ஆராயும்போது ஆசிரியர் முதலில் தாயிருந்த இடத்துப் புகுகின்றார் என்பதனை மறந்தலாகாது. இந்நாளில் மேனாட்டில் கீழ்நிலைப்பள்ளிகளில் பெண்களே ஆசிரியர்களாக அமர்ந்து வருகின்றார்கள். அவர்களுடைய முன்னைய காதல்வாழ்வின் சிதைவே பின்னர்ப் பள்ளியில் அவர்களது நடத்தைக் கோலமாக விளைகிறது. குழவியை ஆசிரியர் அதுகாரணமாக விரும்பவும் வரலாம். தாம்பெறாத காதலரைச் சில குழவிகள் நினைப்பூட்டுவதால் அவை வெறுப்பினையும் விளைவிக்கலாம். காதல்நிலை வெறுப்பும் வயிற்றெரிச்சலும் ஆகிக் குழவிகள் தவறும்போதெல்லாம் போக்குவீடு பெற்றுப் பொங்கிவழியும். அடக்கமும் ஒழுக்கமுமே வேண்டப்படும் என அத்தகைய ஆசிரியர்கள் வற்புறுத்துவதும் இதனாலேயாம். தாம் உலகிலே உயர்நிலை அடையாது பிறருக்கு அடங்கிநிற்பது மனத்தில் உறுத்துவதால், இத்தகைய ஆசிரியர்கள் குழவிகளை அளவிற்குமேலும் அடக்கி ஆளுவதில் வெறிகொண்டு அலைவதும் இயல்பே ஆம்.

குழவி நோக்கு :— ஆசிரியர்கள் குழவிகளைக் காணும் நோக்கினையும், குழவிகள் ஆசிரியர்களை நோக்கும் நோக்கினையும் பலபல கதைகளாக உலகம் கூறிவருகின்றது. சில ஆசிரியர்கள் சமநிலையில் விளங்கி வருகின்றார்கள். சிலர் ஜெர்மானியப் படையாளர் போலச் சட்ட திட்டங்களில் மட்டும் நம்பிக்கை கொண்டு நடக்கின்றனர். சிலர் குழவிகள் விரும்பும் வீரராய் விளையாட்டிலும் கைத்தொழிலிலும் உடல் திறத்திலும் சிறந்து விளங்குகின்றனர். தம் சமநிலைப் பிறழ்ச்சியை மறைப்பதற்காகக் குழவிகளுக்கு எந்தவகையாலும் துன்பமோ மன-

எரிவோ உண்டாகாதபடி நகை முகம்கொண்டு உதவிவரும் சருக்கரைப் புலவர்களாகச் சில ஆசிரியர்கள் இனிக்கின்றார்கள். குழவிகளின் அன்பை விலைக்கு வாங்கும் ஆசிரியரும் உள்ளனர். குழவிகள் ஆசிரியர்களை நோக்கும் நோக்கினை ஆராய்ந்தவர்கள், "பிறருக்கு உதவும் தன்மை, தெளிவு, குழவிகளிடத்திலிருந்து எதிர் பார்க்கும் நிலையில் முரண்பாடின்மை, நண்புடைமை, இணக்கமுடைமை, நடுவுநிலைமை முதலிய குணங்கள் படைத்த ஆசிரியர்களே குழவிகளின் அறிவுநிலையையும் வளர்த்து, உணர்ச்சி நிலையையும் ஒருமுகப்படுத்தி, ஒழுங்கு நிலையையும் திருத்தி அமைப்பதில் வெற்றி காண்கின்றார்கள்" என்று கூறுகின்றார்கள்.

ஆசிரியரும் மருத்துவரும் :— கற்றுக் கொள்ளா திருத்தலையும், வஞ்சனையையும், கீழ்ப்படியாமையையும், ஆண்பெண் சிக்கலையும் ஆசிரியர்கள் பொதுவாகப் பெருங்கேடு எனக் கருதுகின்றார்கள். உள்ளத்தியற்கை நூல் ஆராய்ச்சியாளரோ குழவி தன்னுக்குள் தானே பகற்கனவு காணுதல் முதலிய ஆளுமைக் கோளாறுகளையே பெருங்கேடாகக் கருதி, ஆசிரியர்கள் கருதியவற்றைப் பெரிதும் பொருட்படுத்துவதில்லை. ஆசிரியர்கள் பெற்றோர் நிலையில் இருப்பதாலும், தனிக் குழவிகளை மன மருத்துவ நிலையில் ஆராயக் கல்வித்திட்டம் இடம் கொடாமையாலும் இந்த மாறுபாடு காண்கின்றோம்.

ஆசிரியர் நிலை :— கல்வித் திட்டமா, குழவியா கல்வி முறையின் உயிர்நிலை? ஈதே கேள்வி. இதற்குத் தக்க விடையைச் சமுதாயமே அளித்தல் வேண்டும். அதன் பின்னரே ஆசிரியர்கள் உயர்ந்தநிலையில் விளங்குதல் கூடும். ஆசிரியர்களுடைய சமுதாய நிலைக்கு ஏற்பவே அவர்கள் வழியாக ஏற்படும் பயனும் அமையும். ஆசிரியர்கள் வாழ்க்கையின் பல துறைகளிலும் கீழ்நிலையிலே நின்று ஊதியம்

பெறுவோராக இழிந்துள்ளனர். வேறுவகையாக வாழமுயன்று தோற்றோரும் ஆசிரியராக அமர்ந்து விடுகின்றனர். இவர்களுடைய வாழ்க்கை பிறரோடு கூடிவாழ்வதாகவும் தோன்றவில்லை. வாழ்க்கைத்துறையை மறந்த "ட" ஆனு ஆசிரியராக இன்னோர் மாறி விடுவதிலும் வியப்பில்லை. பள்ளிக்கூடத்தினை நடத்துவோர் விருப்பப்படி எல்லாம் செய்து வருவது ஆசிரியர் கடமையாய் விட்டது. மதப்பள்ளிக் கூடங்களோ அந்த மதத்தினரையே ஆசிரியர்களாக விரும்பி வரவேற்று வேலைதந்து உதவிகின்றன. ஹிட்லர் வாழ்ந்த காலத்து அவன் விரும்பியதனையே ஆசிரியன்மார் கற்பிக்க வேண்டியதாயிற்று. இத்தகைய இழிநிலையில் ஆசிரியர்கள் இருந்தால் சமுதாயம் அவர்களை எவ்வாறு உயர்வாகக் கருத முடியும்? குழவிகள் எவ்வாறு உயர்வாகக் கருத முடியும்? இளமையில் வழிகாட்டுவார் வழியே இவ்வாறானல் கல்வி எங்ஙனம் சிறக்கும்? உலகின் சீர்கேடு எல்லாம் இந்த இழிவு நிலையால் எழுந்தனவே எனலாம். அறிஞனே அரசனாக வருதல் வேண்டும் என்று எண்ணிய ப்ளேடோவின் கனவு மெய்யாவது எந்நாள்? வசிஷ்டரும், கணக்காயனாரும், மாங்குடி மருதனாரும், முத்தமிழாசான் சாத்தனாரும், பேராசிரியரும் போன்ற பெருமை படைத்தோர் ஆசிரியர்களாக வந்தாலன்றோ கல்வி முறையும் சீர் பெறும்; குழவிகளும் உயர்நிலை அடையும்; உலகிலும் அமைதி நிலவும். ஆசிரியர்களுக்கும் அறிஞர்களுக்கும் முதல் சிறப்பளித்த இந்த நாட்டில் ஆசிரியர்கள் பிறர் அனைவர்க்கும் அடங்கி ஒடுங்கிச் செல்லாத காசுக்கும் செருப்பு எழுந் தேய ஓடி அலைதல் மிக மிக வருந்தத்தக்கதாம்.

## VI. புது உலகம்

சாரணர் :- வயது ஏற ஏறச் சமுதாயத் தொடர்ப்பாடுகள் குறைந்து கொண்டே வருகின்றன. குழவியோ கண்டவர்-

களோடு எல்லாம் விளையாடுகின்றது. முதியோரோ ஒருவர் இருவரோடு மட்டுமே தொடர்பு கொண்டு வாழ்ந்து வருகின்றனர். ஆகவே, பரந்த நோக்கம் குறைந்து கொண்டே வருகிறது எனலாம். இளைஞர் கழகங்களும், சாரணர் படை வீடுகளும் (Scout camps), விளையாட்டுக் குழுக்களும் இத்தகைய குறுகிய நோக்கம் பரவாமல் செழுமையும் கொழுமையுமான அனுபவத்திடையே குழவிகளைத் திளைக்கச் செய்கின்றன. சாரணர் படைவீட்டினுல் எழும் பயன்கள் பல. குழவிகளே அவற்றின் நன்மையைத் தெள்ளத் தெளிய எடுத்துக் கூறுகின்றன. நீந்தும் பழக்கம், படகோட்டுதல், படைவீடு நடத்தும் திறமை, பிறரோடு பழகிப் புழங்கும் திறம், நோயற்ற வாழ்வு, உடலுரம், எதனையும் செய்யப் பண்ணுற்று நிற்றல் (Readines), நிற்பதிலும் இருப்பதிலும் ஒரு நேர்மைநிலை, தன்னலம் இன்மை, பிறர்க்கு உதவ விரைதல், தன்னம்பிக்கை, தன்னுறுதி, தானே ஒன்றைச் செய்யவும் அறியவும் முயலும் ஊக்கம், புதுமை நோக்கம், முந்துநிலை, வீரம், நடுங்காநிலை, வெருண்டு மருளாமை, வீணான நாணம் எழாமை, வீட்டிற்கு வெளியோ உள்ளோ உள்ள இயற்கையில் ஈடுபாடு, இசையில் விருப்பம், தோழமை, நண்பராதல், பலரொடும் கூடியிருக்கும் நிலை முதலிய பண்புகள் படைவீட்டு வாழ்க்கையால் விளையும் சிறந்த பயன்கள் எனக் குழவிகளே பேசி வருகின்றன. தன்னம்பிக்கை, மரியாதையாக நடத்தல், பெற்றோர் பேச்சைக் கேட்டு நடக்க ஒரு விருப்பம், இசையுணர்ச்சி, பிறர் நன்மையைக் கருதுதல், பிறரொடு எளிதே கூடிக்குலாவிப் பழகுதல், பொருள்களைப் பாதுகாத்தல், தன்னலமின்மை, இடத்திற்கு ஏற்ற அறிவு, முந்துநிலை, தன்னுடலைத் தூய்மையாகவும் நேர்மையாகவும் வைத்துக் கொள்ளும்நிலை, இடுக்கண் வருங்கால் நகுதல், தலைமை பூணுதல், பிறருணர்ச்சியை நுட்பமாக அறிந்து பேணுதல், ஆரவாரஞ் செய்து அடக்கி ஆள முயலாது

குழவிகளோடு ஒத்துழைத்தல் முதலிய புண்புகள் படை-வீட்டு வாழ்க்கையால் விளைவதாகப் பெற்றோரும் புகழ்-கின்றனர். குழவி மணம் வழக்கற்றுப் போகச் சட்டமும் வந்துள்ளமையால் பெண் (Sarada Act) குழவிகளும் இத்தகைய சாரணர் இயக்கங்களில் ஈடுபடுகின்றனர்,

பேசும் படமும் வானொலியும் :— அசையும் படங்களும், பேசும் படங்களும் குழவிக்குப் பெருவிருந்தாம். உள்ளக் கிளர்ச்சி பொங்கி வழியும் படங்கள் தீமையை விளைக்கலாம். நல்லவழியில் இவற்றைப் பயன்படுத்தினல் கல்வி முறை வெறுஞ் சொல்லாரவாரமாக ஒழியாமல் கண் கூடாகக் காண்பதாக மாறும். குழவியின் உலகம் மிக விரைந்து விரிவதனைக் காணலாம். இவற்றின் பயனை அளந்து அறிதல் இயலாது. வானொலியும் உலக மக்களோடு எல்லாம் குழவிகளை ஒன்றுக்குகிறது. இவற்றின் முழுப்பயனையும் குழவிகள் துயத்துணருமாறு செய்வதற்குப் பள்ளிக்கூடத்தில் கூட்டுறவு வாழ்க்கை வேரூன்றி வளர்தல் வேண்டும். அப்போது உலகம் முழுதும் அன்பாலும் அறிவாலும் இன்பத்தாலும் ஒன்றுகித் தோன்றும். அதுவே அறிஞர் கண்ட குழவி உலகாம்.

"அளித்தான் உலகெங்கும் தானன உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே.

திருமந்திரம் — 123.

———

# 26. குழவி உலகு - அதன்வடிவம்

## I. குழவி எண்ணம்

பியாழே:— சுவிட்சர்லாண்ட் (Swizerland) என்ற நாட்டில் பியாழே (Piaget) என்பவர் குழவிகளைப் பற்றி ஆராய்ந்து தாம் கண்ட முடிவுகளை ஒரு சில நூல்களில் வெளியிட்டுள்ளார். (i) குழவிகள் கேட்கும் கேள்விகளைப் பற்றி ஒரு நூலும், (ii) அவற்றின் மொழியைப் பற்றி மற்றொரு நூலும், (iii) உலகினைப் பற்றி அவற்றின் கருத்தினை விளக்கும் ஒரு நூலும், (iv) காரண நிலையைப்பற்றி குழவிகள் கொள்ளும் கருத்தினை விளக்கும் ஒரு நூலும், (v) அவற்றின் அறநிலைத் தீர்ப்பை ஆராயும் ஒரு நூலும் ஆக ஐந்து நூல்கள் எழுதிக் குழவி உலகை நமக்கு ஒரு வகையாக விளக்குகின்றார்.

காரணம் அறியும் படிநிலைகள்:—முதலிலே ஓர் இருப்பினைக் காண்கின்றோம். அதற்கு ஒரு காரணத்தைக் கற்பிக்கின்றோம். இதற்குப் பின்னர்த்தான், கூறிய காரணத்தைச் சரிபார்க்கும் மனப்பான்மை வளர்கிறது எனலாம். காரணம் கற்பிக்க முந்தும் மனப்பான்மைக்கும், அது உண்மையா எனச் சரிபார்க்கும் மனப்பான்மைக்கும் இடையே தம்முடைய உள்ளக் குறிப்பினையே காரணமாகக்கூறும் மனப்பான்மையைக் குழவிகளிடையே காண்கிறோம். "ஏன் நடக்க வேண்டும்?" "நடக்க வேண்டும் என ஆசையாக இருக்கிறது?" என்பது போன்ற பேச்சுக்கள் எழுகின்றன. இரண்டு வாக்கியங்களுக்கும் இடையே வெளிப்படையான தொடர்பை ஏழாவது வயது வரை குழவிகள் விளக்குவதே இல்லை. காரணப்

பொருட்டாக வரும் "செய்தால்", "ஏனெனில்" முதலியவை போன்ற சொற்கள் மூன்றும் வயதில் நூற்றுக்கு ஒன்றாக இருந்து 7ஆம் வயதில் 100-க்கு 6 ஆக மிகுகின்றன.

அடுத்து நிலையும் தன் நடுமையும்:- இந்த நிலையில் குழவிகள் தம் வாக்கியங்களைப்போலக் கருத்துக்களையும் ஒன்றோடொன்று இயைபுபடுத்தாமல் அடுக்கிக்கொண்டே வருகின்றன எனலாம். ஈதே அடுக்குநிலை அல்லது அடுத்த நிலையாம். (Juxta-position) குழவிகள் இந்த நிலையில் தம்மையே அனைத்துக்கும் நடுவாக எண்ணி வருகின்றன எனலாம். ஈதே தன்நடுமையாம் (Ego Centrism). இதனாலே, அவை தம்முடைய உள்ளக்குறிப்பையே காரணமாகக் கூறவருகின்றன. "நான் நடப்பதால் சூரியன் இயங்குகிறான்" என்பன போன்றவை குழவிகளின் பேச்சாம். தானே நடுவாக அனைத்தையும் இயக்கி வருவதாக எண்ணும்போது புற உலகம் எதிர்த்து நிற்கின்றதென்றோ, ஆதலின் அதனை அடக்கி ஆளவேண்டும் என்றோ, எவ்வாறு எண்ணம் எழுதல் கூடும்? எண்ணி ஆராய்வதென்பது, பிற பொருள்களின் நிலையில் தன்னைவைத்துப் பார்ப்பதால் எழுவதாம். அத்தகைய ஆராய்ச்சிக்கு இடமில்லாதபடி புறப்பொருளின் இருப்பையே காணாத போது தன் எண்ணத்தைத் தான் அடக்கி ஆளுதலும் இல்லையாம்.

கனவும் குழவி எண்ணமும் :— நாம் காணும் கனவை எண்ணிப்பார்த்தால் இத்தகைய குழவியின் மனநிலை நன்கு புலனாகும். கனவும் ஓர் எண்ணமே. அங்கே, அதன் போக்கை ஒருவரும் அடக்கி ஆளுவதில்லை. நம்முடைய விருப்பநிலையாம் உணர்ச்சியே கனவிடை ஓர் ஒற்றுமையை நிலை நாட்டுகிறது. அதேபோலக் குழவியினது எண்ணத்தின் போக்கினையும்

அதன் நனவுநிலை மனம் அடக்கி ஆளுவதில்லை; நனவிலி மனமே அடக்கி ஆளுகிறது. அவ்வெண்ணப் போக்கின் நோக்கந்தான் யாது எனக் குழவியும் அறியாது. இவ்வாறு நோக்கமற்றது போலத் தோன்றும் இயல்பினையே எண்ணத்தின் தற்போக்கு (Autism) என வழங்கலாம்.

பிறரை அறியத் தன்னை அறிதல் :- தானாகத் தனி நிற்கும்-போது தன்னை அறிவாரில்லை. புறத்தை அறிந்தாலன்றோ அகத்தை அறிதற்கு இடம் ஏற்படும்? வேறு மனத்தோடு முட்டி உராயும் போதே "தான்" என்ற எண்ணம் முளை-விடுகிறது; பேச்சும் சிறக்கின்றது. சமுதாய அறிவின் வழியே-தான் குழவியின் தன்னறிவு விளங்குகிறது; அதன் எண்ணத்தின் போக்கும் விளங்குகிறது; அந்த எண்ணங்களின் தொடர்ச்சியும் புலனாகிறது. இந்தச் சமுதாய உணர்ச்சி வளர்ந்து வரும்பொழுது "தானே நடுவாம் நிலை" தேய்ந்து ஒழிகிறது. அகம் புறம் என்ற வேற்றுமை பெருகுகிறது; கற்பனையும் தருக்க முறையும் வேறுபடுகின்றன; கொண்ட எண்ணம் உண்மையா என்று சரிபார்க்கும் மனப்பான்மையும் பழுக்கின்றது.

சிறப்புநிலை :- நின்றுவிட்ட வண்டியைக் காட்டி "வண்டி ஏன் போகவில்லை?" என்று 7 வயதிற்கு உட்பட்ட குழவியைக் கேட்டால், "நின்று விட்டது" என்று பதில் கூறும். "ஏன் நின்று விட்டது?" என்றால் "போகவில்லை" என்று திருப்பிக் கூறும். ஆதலின், குழவிக்குத் தருக்க முறை காரணத்-தொடர்பு ஒரு சிறிதும் விளங்கவில்லை என்பது தெளிவாகிறது. குழவி இயற்கைக்குந் தன்னைப்போல நோக்கம் (Finalism) உண்டென எண்ணுகிறது. மேலும், தானே நடுவாம் நிலையும் சரிபார்க்கும் மனப்பான்மையைக் குழவியிடம் எழாதபடி தடுக்-

கின்றது. குழவி தனித்தனிப் பொருளாக உலகிலுள்ளவற்றை அறிந்து வருகிறது. அது குறிப்பிட்டவற்றைக் குறிப்பிட்ட-போது உணர்ந்து வருகிறது. அவற்றிடையே விளங்கும் பொதுத் தன்மையையோ, பொதுச் சட்டத்தையோ, அது அறிவது இல்லை. குழவியின் அறிவு சிறப்புநிலை அறிவே அன்றிப் பொதுநிலை அறிவு அன்ரும். பொதுநிலை உணர்வு இல்லையானுல் அனுமானம் ஏது? காரண காரியத் தொடர்பு பற்றிய தருக்கமுறை ஏது? குழவி தன் எண்ணத்தினை உணருவதே இல்லை. நம் எண்ணத்தை நாம் உணருவது அந்த எண்ணம் பிறருக்கு வெளிப்படும் நிலையிலேயே ஆம். அவ்வாறு வெளிப்படுவதோ சமுதாய நிலையைப் பொருத்ததாம்.

## II. சில புள்ளிகள்

"ஆகையால்," "பின்":— இதற்கு ஏற்பக் குழவியின் பேச்சில், "ஆகையால்," "பின்" என்ற சொற்கள் ஞாபக ஏதுவையோ, காரக ஏதுவையோ விளக்கிவைக்க வருவது காணேம். இந்தச் சொற்கள் வரும் இடத்தே பொதுவாக உய்த்துணர்வு உண்டு எனலாம். அந்த உய்த்துணர்வு குழவி-யிடம் எழுதற்கு இடம் இல்லை. ஆதலின், "ஆகையால்" "பின்" என்ற சொற்களே, குழவியின் பேச்சில் அவற்றின் உண்மைப் பொருளில் பயின்றுவரக் காணேம். ஆனுல், தன்னைச் சுற்றிலும் உள்ள பெரியோர்கள் இத்தகைய சொற்களைப் பன்முறையும் பயன் படுத்துவதால், குழவியும் சொல்லியதனைச் சொல்லும் கிளிப்பிள்ளைபோல அச்சொற்-களைப் பயன் படுத்துகின்றது. குழவியின் உள்ளம் "அதுவும் இதுவும்," "தொலைதலும்" "பெறுதலும்" என்பன போன்ற "அடுத்து நிலையை" உணருமே அன்றிக் காரண காரியம் முதலிய இயைபு நிலைகளை உணருவதில்லை. அதற்கேற்ப,

"ஆகையால்" "பின்" என்ற சொற்களும் குழவியின் பேச்சில் உம்மைப் பொருளைச் சுட்டவே காண்கிறோம். "கண்ணன் பொம்மையைத் தொலைத்தான்; ஆகையால் புதுபொம்மை பெற்றான்" என்று குழவி பேசுவதன் பொருள் "கண்ணன் பொம்மையைத் தொலைத்துப் பொம்மையைப் பெற்றான்" என்பதேயாம். "பின்" "இனி" 'அப்புறம்' என்பனவும் தருக்க முறை முடிபினையும் சுட்டுவதில்லை; காலத்தினையும் சுட்டுவதில்லை. அதனால் அன்றோ, "அப்புறம்" "விழுப்புரம்" என்ற நகைப்பேச்சு எழுந்தது. அவை பேச்சில் ஓர் இடம் என்பதனைச் சுட்டுகின்றன; "பொழுது நன்றாய் இருக்கிறது. பின்னே போவோம்" என்பதுபோல விருப்பம் முதலிய உள்ளக் குறிப்பினைச் சுட்டுகின்றன; "பின்னே என்ன என்றால்" என்பது போன்ற இடங்களில் பொருள் தெளிவின்றிக் கிடப்பதனைப் 'பின்' என்ற சொல் சுட்டுகின்றது. அவை சிறப்பு நிலையிலன்றிப் பொதுநிலையில் வருவதும் இல்லை.

"இருப்பினும்" "ஆனால்" :— "இருப்பினும்" போன்ற சொற்கள் பொதுவிதியும் புறநடையுமாம் கருத்தை வெளியிடுவனவாகும். புறனடை நிலையையே காரணமாகக் குழவிகள் கொள்வதால், "ஆனால்" எனக் கூறவேண்டிய இடங்களில் "இருப்பினும்" என்று பேசி வருகின்றனவாம். "ஆனால்" என்பது புறனடையை உணர்த்தலே இன்றிப் புறனடைகளுக்கு இடையே 'அடுத்துநிலை' விள்ங்குவதனையே "ஆனால்" என்ற சொல் சுட்டுகின்றது; இயைபுநிலை விளங்குவதனைச் சுட்டுவதில்லை. அடுத்து நிலையை விளக்கச் சிறப்புநிலை அறிவுபோதும்; இயைபு நிலையை விளக்க இயைபைச் சுட்டும் பொதுநிலை அறிவு வேண்டும்.

செயல்முறை தருக்கம் :— குழவி தன் எண்ணங்களை அறியாது என்றோம். குறிப்பிட்டதனைப் பற்றிக் குறிப்பிட்ட-

போது ஆராய்வதன்றிப் பொதுவாக எண்ணி அது ஆராய்வதில்லை. ஆதலின், அதனிடம் தருக்கநியதியும் இல்லை. கூட்டில் அடைபட்ட பூனைமுதலியன, செயல் முறையாலேயே தட்டித் தடுமாறிக் கதவைத்திறந்து வெளிவருகின்றன. இதுவே செயல்நிலைத்தருக்கம்எனலாம். குழவியின் தருக்கம் அனைத்தும் இத்தகைய செயல்நிலைத் தருக்கமேயாம். செய்து பார்த்து அறிவதன்றி எண்ணிப்பார்த்து அறியும் எண்ணநிலைத் தருக்கம் அன்றாம். உய்த்துணர்வு எழவேண்டுமானால் மாறு உடன் நிகழ்ச்சி (வியாத்தி) உணர்வு வேண்டும். மாறு உடனிகழ்ச்சி உணர்வு எழவேண்டுமானால் ஒருங்கியைதலும், எங்கும் விளங்குதலும் வேண்டும். அடுத்து நிலை மட்டும் விளங்கிப்பயன் இல்லை. குழவிகளிடம் தன்னுணர்வும் இல்லை; பொதுமை அறிவும் இல்லை; உய்த்துணர்வும் இல்லை.

குழவி எழுதும் படம் :— குழவிகள் எழுதும் படங்களைக் கண்டாலும் இந்த உள்ளப் பாங்கு நன்கு விளங்கும். மிதி வண்டியைக் குழவி எழுதுகிறது. அதில் ஒவ்வோருறுப்பும் விளங்கக் காண்கிறோம். மிதிசக்கரம், மணை, சங்கிலி முதலியன எல்லாம் உள்ளன. ஆனால், இவை அனைத்தும் மிதிவண்டியில் தோன்றும் இயைபின்றி, ஒருங்கு குவித்து வைத்தாற்போலப் படத்தில் கிடக்கின்றன. அடுத்துநிலையே இங்குத் தோன்றுகின்றது. இதுவே, உறுப்புக்கள் நன்கு தோன்றுகிற உறுப்புமிகுநிலையாம். உறுப்புகள் வேறுபட்டுச்சிறந்து தோன்றாதபடி உறுப்பினையுடைய முழுப்பொருளாம் உறுப்பி நன்கு தோன்றுகின்ற நிலையும் உண்டு. இதனை உறுப்பி மிகுநிலை எனவழங்கலாம். உறுப்பிநிலையில் தோன்றுகிற ஒற்றுமை அடிப்படையான ஒற்றுமையன்று; கட்டுநிலை ஒற்றுமையேயாம் (Syncretism). இயைபற்ற பொருள்களையும் கட்டாகக் கட்டிவிடலாம்; குப்பையாகக் குவித்து விடலாம். இந்த ஒற்றுமை,

செயற்கையே அன்றி, இயற்கையன்றாம். நிழலின் ஒருமை-போல மயங்கித் தெளிவின்றித் தோன்றும் ஒற்றுமையே கட்டு-நிலை ஒற்றுமையாம். உறுப்புக்கள் தெளிவாகாமையாலேயே உறுப்பிமிகுநிலை தோன்றுகிறது. குறிப்புக்களைத் தெளிவாகக் காணாமையாலேயே அவற்றிடையே விளங்கும் தொடர்பு தோன்றுவது இல்லை; அடுத்துநிலை மட்டும் தோன்றுகிறது. இயற்கை நியதியோ சட்டமோ, தருக்க நியதியோ சட்டமோ குழவி அறியாது. எதுவும் எதனோடும் தொடர்ந்து இருப்ப-தாகக் குழவி உணருவது வியப்பன்று. உறுப்பு மிகுநிலையும், உறுப்பி மிகுநிலையும் ஒன்றற்கொன்று முரண்பட்டனபோலத் தோன்றினாலும் குழவியின் உள்ளத்தியல்பை நோக்க ஒன்றற்-கொன்று பொருத்தமானவையாகவே முடிதல் காண்க.

இரண்டு பருவம் :- குழவிகளிடம் காரண காரிய இயைபு தெற்றென விளங்கத் தொடங்கும் பருவம் இரண்டாம்; ஒன்று 7 - 8 வயதிலாம்; அப்போது 'தானே நடுவாய் நிற்கும் தன்மை-யானது, குறைந்துவரச் சரிபார்க்கும் ஆசை வளர்கிறது. இரண்டாவது 11 - 12 வயதிலாம். அப்போது, சமுதாய உணர்ச்சி வளர்ந்து வரப் பொருளமைதிக்கு வேறாக எண்ணத்தின் உருவ அமைதி விளங்கத் தொடர்கிறது.

முறைமைநிலை :— ஒருகூட்டத்தில் உறுப்பினர் ஆகும் நிலையை அறிதல் ஒன்று; அவர்களிடையே விளங்கும் முறையினை அறிவது மற்றொன்று. குழவிகளிடையே உறுப்பு உணர்வு உண்டேயன்றி முறையுணர்வு இல்லை எனலாம். "இந்திய மக்கள், நீக்ரோ (Negro) மக்களினும் சிவப்பு; இந்தியர் வெள்ளைக்காரரை விடக் கறுப்பு; மிகக் கறுப்பு யார்?" என்று இளங்குழவியைக் கேட்டால் ஒவ்வொரு வாக்கியத்-திற்கும் பதில் அளிக்குமே அன்றி இரண்டையும் ஒன்று

சேர்த்து ஒத்துப் பார்த்து விடைகூறக் குழவியால் முடிய-வில்லை. தானே நடுவாம் தன்மையின் பயனாகத் தன்முடிவையே தனிநிலைக் கொள்கையாகக் கொள்கிறது. முறைமை நிலை என்பதே குழவிக்கு விளங்குவதில்லை. "நாம் மூவர் உடன் பிறந்தவர் உள்ளோம்" என்பதற்கும், "நான் இருவர் உடன் பிறந்தாரை உடையேன்" என்பதற்கும் வேற்றுமையைக் குழவி உணருவதில்லை. முதலில் குழவி தன்னை உடன் பிறந்தானாகவே கணக்கிடுவதில்லை. உடன் பிறந்தார் அனைவரும் ஒருவருக்கு ஒருவர் உடன்பிறந்தார் என்பதனையும் உணருவது இல்லை. இரண்டாவது வகையான குழவி தானும் உடன்-பிறந்தான் என உணர்கின்றது. ஆனால், அது குழவில் உறுப்பாய் விளங்குவதற்கும் உறுப்பிடையே விளங்கும் முறைமைக்கும் வேற்றுமையே உணருவதில்லை. மூன்றாவது வகையான குழவிகள் "நான்" எனப்பேசும் உடன் பிறந்தான் நிலையிலும், உடன் பிறந்தார் எனப் பொதுவாகப் பேசும் குழுவின் நிலையைவேறு என உணர்கின்றன. நாலாம் வகைக் குழவிகளோ தனித் தனி ஒவ்வோர் உடன் பிறந்தானுக்கும் உடன் பிறந்தார் எத்தனை எனக்கண்டு "நான்கு" எனக் கூறுகின்றன. இங்கே உறுப்பும் உறவுப் வேறு பிரிகின்றன. உடன் பிறந்தான்மார், உடன் பிறந்தாள்மார் என்பவற்றின் இலக்கணத்தைக் கூறக் கேட்டால், 4 - 5 வயது குழவிகளில் 19% விடைகூறுமாம். 6 - 7 வயது குழவிகளில் 24% விடை-கூறுமாம். 8 - 9 வயது குழவிகளில் 59% விடைகூறுமாம். இவ்வாறு முறைமை நிலை உணர்வு மெல்ல வளர்ந்து வருதல் காண்க. உடன் பிறந்தார் என்பது முதலில் ஒரு முறைமை நிலையாகவே தோன்றவில்லை; பையன் எல்லார்க்கும் பையன் எனத் தோன்றுதல் போலத் தனி நிலையாகவே தோன்றுகிறது. பின்னர், முறை என்பது சிறிது கருத்தில் எழுகிறது. ஆனால், அங்கும் பொதுமை நிலையை உணராத சிறப்பு நிலையில்

தனித்தனியே ஒவ்வொருவரையும் குழவி முறைப்பேர் கொண்டு சுட்டுகிறது.

முறைமை நிலை வளர்ச்சி :- வலம் இடம் என்ற கருத்துக்களையும் முறைமைநிலையாக உணராமல் தனிநிலை உண்மையாகவே உணர்கிறது. தனக்கு வலமாவது பிறர்க்கு இடமாகலாம் என்பது முதலில் விளங்குவதே இல்லை. முதலில் தன்நிலையில் இருந்தும், பின்னர்ப் பிறர்நிலையிலிருந்தும் முடிவாகப் பொருள்களின் நிலையிலிருந்தும். குழவிபேசுகிறது. தன்நிலையில் இருந்து பேசுவது தானே நடுவாம் தன்மையை விளக்குகிறது. பிறர்நிலையிலிருந்து பேசுவது சமுதாயத்தில் ஈடுபடும் தன்மையு விளக்குகின்றது. பொருள்களின் நிலையிலிருந்து பேசுவது புறமுகநோக்கத்தை (Objectivity) விளக்குகிறது. தன்னடுமை - புறமுக நோக்கு - என்று குழவியின் உள்ளநிலை வளர்ந்து வரக்காண்கிறோம்.

கிளபாரதே :- கிளபாரதே (Claparede) என்ற ஆசிரியர் நனவுநிலை உணர்வுச் சட்டம் என்பதொன்றை விளக்குகின்றார். நனவிலியாக ஓர் எண்ணம் நடமாடும்போது அதனை நனவுநிலையாக உணருவதே அருமை என்பதே இந்தச் சட்டம். இதன் காரணமாகவே குழவி தானாக இயங்கும் தன்எண்ணத்தை அறிய முடியாது கிடக்கிறது. தானே வழக்கமாகச் செய்து வருவது தடைபட்டுப் புதியதொரு திருத்தம் எழ வேண்டிய நிலையிலேயே சிக்கலுற்ற பொருள்களின் தொடர்பு விளங்குகிறது என்பதே அவர் கூறும் உண்மை. "நனவிலி எண்ணம் அனைத்தும் முன்னைய இயக்கங்களின் நினைவே" என்பது ரீபோ (Ribot) என்பாரது கொள்கை எனக் கண்டோம்.

நனவிலித் தருக்கம் :— அங்கும் ஒரு தருக்கம் உண்டு. எந்த உயிர்ப்பொருளும் முன் நிகழ்ந்ததனை முன் நிகழ்ந்தபடியே

பின்னர்ச் செய்வதில்லை. விருப்பம் என்பது அதனை மாற்றி அமைக்கலாம். சுருக்க முறையைப் பற்றி உயிர்ப்பொருள் அதனை மாற்றி அமைக்கலாம். "ஒருங்கு நிகழ்வன உள்ளத்தே ஒன்றாக இயைபுபெறும்" என்ற கொள்கைப்படியும் செயல் முறைகள் பலவாறு இயைபுபெற்று வர மாற்றி அமைக்கலாம்.

இந்த விருப்பமும் சுருக்கமும் இவ்வாறு இயங்கும் நியதியை உள்ளத்தின் நியதி எனலாம். தருக்க நியதியோ எண்ணத்தைப் பற்றிய எண்ணமாகும். ஒருவனுக்கு ஒருவன் உடன் பிறந்தான் ஆகும்போது, பின்னையோனுக்கு முன்னவனும் உடன்பிறந்தான் ஆகின்றான். இவ்வாறு தலை கீழாகத் திருப்பிக்காட்டி நிலை நாட்டுவதே தருக்க எண்ணத்தின் இயல்பாம். முறைமைநிலை உண்மை விளங்க வரும்போது தருக்க எண்ணமும் துளிர்க்கத் தொடங்குகிறது.

பெயரே உள்பொருள் :— பெயரையே உண்மை எனக் கொள்ளும் கொள்கையும் குழவியிடம் விளங்கக் காண்கிறோம். குடும்பம் நாடு என்பவை 7 - 9 வயதுவரை வெறுஞ் சொல்லேயாகக் கிடக்கின்றன. முதலில் வேலையாட்கள் உட்பட உடன்வாழ்வார் அனைவரையும் முறைமை நோக்காது குடும்பத்தினர் எனக் குழவி கொள்கிறது. அங்கு வீட்டில் வாழ்வதே குடும்பத்தின் சிறப்பியல்பாகத் தோன்றுகிறது. அடுத்தபடியாகக் குழவி, முறையைப் பயன்படுத்துகிறது. ஆனால், நேரே பார்ப்பவரை மட்டுமே குடும்பத்தினராகக் கொள்ளுகிறது. மூன்றாம் படியாக முறையைப் பொதுவாக்கி, நெருங்கின உறவினரை எல்லாம் வீட்டில் வாழாவிடினும், நேரே காணாவிடினும் குடும்பத்தினர் எனக் கருதுகிறது. குழவி முதலில் பொருள்களைப் பற்றிப் பேசும்போது, "பேனா எழுதுவது - நாற்காலி உட்காருவது" எனப் பயன் பற்றியே

விளக்கி இலக்கணம் கூறுகின்றது. இது காரணம் கற்பிப்பதற்கு முன் உள்ள நிலை எனலாம். பொதுமைத் தன்மைக்கும் பொருளுக்கும் இடையேயுள்ள வேற்றுமையை அங்கே அறிய முடிவதில்லை. 7 - 8ம் வயதில் தான் "தாயானவள் குழவியை-யுடைய பெண்" என்பது போன்று இனமும் அதில் பிரிவுமாக இலக்கணம் கூறும் முறை அரும்பு விடுகிறது. சொல்லை நனவிலி நிலையாகவே கேட்டுணர்வதால் சொல்லுக்கும் பொதுத் தன்மைக்கும் தாம் கொள்ளும் பொருளைக் குழவிகள் தாமே நனவுநிலையில் உணருவதில்லை. அதனாலேயே மயக்கம் எல்லாம் எழுகின்றன.

குழவியின் மனம் :— குழவிகள் அறியும் கருத்துக்கள் தொடர்பின்றித் தனித்தனியே அடுத்து நிலையாகக் குவிந்து கிடக்கின்றன. நம் மனத்திலே அவற்றைப் படிப்படியாக மேன்-மேற் போகும் பல உயர்நிலை அடுக்குகளாக வகை செய்து அடுக்கித் தொடர்பு படுத்தி வைக்கும் பழக்கம் குழவிகளிடம் எழுவதே இல்லை. குழவியின் மனத்தே தோன்றும் ஒருமைப்-பாடு அகநிலை ஒருமைப்பாடேயாம்; கட்டு நிலை ஒற்றுமையே-யாம். குழவியின் கருத்தில் ஒரு சமநிலை இல்லை. அதனது கருத்துக்களின் குவியல் எவ்வாறேனும் சரிந்து விழும்; எந்த வடிவேனும் கொள்ளும். அவற்றில் ஒன்றினின்று ஒன்றினை வேறு பிரிக்கக் குழவியால் முடியாது. இவ்வாறு அனைத்தையும் மயங்கக் கொள்வதனாலேயே பல வகை மயக்கங்கள் தோன்று-கின்றன. முதியோராம் நமக்கோ உலகம் ஒன்றுபட்டுப் பல பல நிலைகளாக அமைந்து விளங்குகிறது. அனுபவம் என்பதன் வழியே இது இயங்கிச் சமநிலை பெற்றொளிர்கிறது. குழவியி-னிடம் அனுபவம் அவ்வாறு சமநிலையை விளைவிப்பதில்லை; அத்தகைய கட்டாயம் நம்மிடத்திற்போல அங்கு எழுவதில்லை. ஆதலின், குழவியினிடம் உள்ளத்தே ஒன்றுபடாத பல

கொள்கைகள் முரண்பாடு தோன்றுவியாமலே உலவுகின்றன. விளையாட்டு உலகம் — காட்சியுலகம் — கேள்வி உலகம் — எனப்பல உலகங்கள் தொடர்பின்றித் தனித்தனி உலகங்களாய் அங்கே நிலவுகின்றன.

முரண்பாடும் சமநிலையும் :— முரண்பாட்டினை நம் மனம் விரும்பாததேன்? ஒவ்வொர் உணர்ச்சியிலும் இரு முனைகள் உள்ளன என முன்னரே கண்டோம். முரணின்மையே இங்கு விளங்கும் சமநிலையாம். சமநிலையின்மையே இயல்பாய் இரு முனையாக விளங்கும் அந்த ஓட்டத்திடையே ஒரு சில உணர்ச்சிகள் நீர் மட்டத்தின் மேலே எழுந்து விளங்குகின்றன. அவையே பொதுத் தன்மையும் முறைநிலைத் தொடர்புமாம். சமநிலை எங்குண்டு? எழுந்த செயலைத் தலைகீழாக மனக்கண்ணால் செய்து காணும் இடத்திலேயே சமநிலை விளங்குகிறது எனலாம். அங்கன்றோ தருக்க நியதியும் விளங்குகிறது?

சாயலும் தனதாக்கலும் :— புறப்பொருளைச் சாயல் பிடிப்பது என்பதும் முன்னர் நாம் கண்டதொன்றே. இவ்வாறு சாயல் பிடித்தலாவது செயலாலும், பின்னர் அகக்காட்சியாலும் பொருத்தமுற எதிர்நிற்கும் செயல்களை மறித்தும் செய்து காட்டலாம். மனமானது புறநிலையைத் தனதாக்கிக் கொள்ளுதல் (Assimilation) என்பது ஒன்று உண்டு. புற உலகவழியே தன்னைத்தான் மறித்தும் படைத்துக் கொள்வதே ஈது எனலாம்; முன்னைய அனுபவத்திற்கு ஏற்ப எண்ணத்தோடு ஒன்றுகுதலாம். நோக்கமற்ற கனவுபோன்ற எண்ணங்களில் உருக்குலைந்து நிற்கின்ற நிலையையே காண்கின்றோம். அங்குக் கட்டுநிலை ஒற்றுமையே விளங்குகிறது. சுருக்க நிலையும் தோன்றும். சாயல் பிடிக்கும் இயல்பு குழவியைத் கனவுலகில்

கொண்டு புகுத்துகிறது. புறநிலையைத் தனதாக்கிக் கொள்ளும் தன்மையோ, குழவியை விளையாட்டு உலகிற் புகுத்துகின்றது. தருக்க நியதிக்கு இன்றியமையாது வேண்டப்படும் தலைகீழ் காட்சி இரண்டிடத்தும் எழுவதில்லை. இவை இரண்டும் தனித்தனியே வெவ்வேறு நிலையாக விளங்கும். இவை இரண்டும் ஒன்றாய் நிகழும்போதே தலைகீழாய் நிகழக்காணும் தருக்க நியதிக் காட்சி எழுகின்றது. சாயல் பிடிக்கும் தன்மையும், தனதாக்கிக் கொள்ளுந் தன்மையும் முரண்படும்பொழுதே தருக்க முரண்பாடு எழுகிறது. தானே நடுவாம் தன்மைக்கு ஏற்பத் தன்னிலையிலே இல்லாது பிறர் நிலையில் புகும்போதே புறநிலையைத் தனதாக்கிக் கொள்ளும் இயல்பு உருக்குலையாது விளங்குகிறது; புறமுக நோக்கமும் வளர்கிறது. சாயல் பிடிப்பது என்பதும் புறநிலையோடு ஒன்றுவதேயாம். சமுதாய வாழ்க்கையில் ஒன்றற்கொன்று தொடர்பு பெற்று விளங்குவது அங்குத்தான் புலப்படத் தோன்றுகிறது. அந்நிலையில்தான் சாயல் பிடிக்கும் தன்மையும், தனதாக்கிக் கொள்ளும் தன்மையும் முரண்படாது ஒழிகின்றன.

தோடர்பேழாக் காட்சி :— தனித்தனியே பொருளைக் காண்பதே குழவி நிலையில் உண்டு. குழவியோடு ஓர் ஆசிரியர் பேசிய பேச்சு பின்வருகிறது.

ஆசிரியர் — கட்டை பளுவா ?

குழவி — இல்லை.

ஆ — தண்ணீரில் போட்டால் தண்ணீர் மேல் எழுமா ?

கு — ஆம்; பளுவாதலின்.

ஆ — கூழாங்கல்லா, கட்டையா பளு ?

கு — கூழாங்கல்.

ஆ — எது தண்ணீரை மிக எழச்செய்யும்?

கு — கட்டை.

ஆ — ஏன்?

கு — பெரிதாதலின்.

ஆ — பின் கூழாங்கல் நீரை எழுப்புவது ஏன்?

கு — பளுவாதலின்.

ஆ — கை நிறையக் கூழாங்கல்லைத் தண்ணீரில் இடுகிறேன். என்ன ஆகும்?

கு — நீர் வழியும்.

ஆ — ஏன்?

கு — பளுவாதலின்.

குழவியின் மனத்தே "எடை" என்ற கருத்தும், "கன-அளவு" என்ற கருத்தும் ஊடாடுவதனை இந்தப் பேச்சில் காணலாம். இரண்டினையும் வேறுபிரித்து அறிய முடியாமல் குழவி திகைக்கின்றது. முரண்பாடு ஒன்றும் குழவிக்குத் தோன்றவே இல்லை. "கட்டை நீரைத் தள்ளும் பெரிதாதலின். கூழாங்கல் நீரை உயர்த்தும் பளுவாதலின்." என்று கூறும்-போது, கூழாங்கல் சிறப்புநிலை; அதனிடத்தில் பளு, நிறம் முதலிய ஏதேனும் ஒரு சிறப்புநிலையைக் குழவி உய்த்து உணர்கிறது. இவ்வாறு சிறப்புப் பொருளிலிருந்து சிறப்புப் பொருளைப் பற்றிப் பேசிவருகின்றதே அன்றிப் பொதுத் தன்மையைப் பற்றிப் பேச இடம் எழாமையால் பொதுத் தன்மையைப் பற்றிய முரண்பாடு அங்கு அதன் மனத்தில் தோன்றவில்லை. "இது கல்; பளுவாதலின் நீரை எழுப்பும்; இதுவும் அவ்வாறு செய்யும்." "இந்தக் கட்டை நீரை உயர்த்தும்; பெரிதாதலின். இதுவும் பெரிதாகலின் நீரை உயர்த்தும்" எனச் சிறப்பு நிலையிலிருந்து பொதுநிலைக்குப்

போவதில்லை. இவ்வாறு போகாமையாலே திருப்பிக் காணும் தருக்க நியதிக் காட்சி எழுவதில்லை. ஒப்புமை ஆராய்ச்சியும் அங்கு இல்லை. பொதுத் தன்மையைக் காணாத இடத்து ஒப்புமை ஆராய்ச்சி எழ இடம் ஏது?

## III. வளர்ச்சி நிலை

எண்ணத்தின் வளர்ச்சி :— எண்ணத்தின் வளர்ச்சியை உற்று நோக்கும்போது முதலில் சிறப்பு நிலையிலிருந்து அதே-வகையான சிறப்பு நிலையைப்பற்றி எண்ணுவதே முதல் நிலையாம். திருப்பிச் செய்து காணும் காட்சியாம் எண்ணங்கள் இரண்டாவது நிலையாக எழுகின்றன. ஆனால், இங்கே நேரே காணும் உணர்வுகளே எண்ணங்களாக எழுகின்றன. கற்பனை செய்து "எவ்வாறு நிகழும்" என மனக்கண்ணால் கண்டு எண்ணித் துணிதல் இன்னும் எழவில்லை. ஆதலின், கொள்கைகளை உருப்படுத்துவதற்கு இடம் இல்லை. காட்சிப் பொருள்களையும், காட்சிஅல் பொருள்களையும் வைத்துக் காண்பது மனக் கண்ணாலேயே முடிவதாம். அப்போது மட்டுமே தலைகீழாகச்செய்து காண்பது கூடும். மண்ணிலிருந்து குடம் தோன்றும் காட்சியைக் குடத்திலிருந்து மண் வரை-யிலும் திருப்பிப் பார்க்கும்போது ஒன்றும் விடாமல் அனைத்துத் தொடர்புகளும் தோன்றுகின்றன. அங்குத்தான் ஒவ்வொரு முறைநிலைக்கும் உள்ள தொடர்பு தெளிவாகிறது. தருக்க நியதி வெளிப்படுவதே மூன்றும் நிலையாம்.

சமுதாய எண்ண மலர்ச்சி :— குழவிக்கு 7 - 8 வயது வரை தானே நடுவாந்தன்மை துலங்குவதால் தன் நம்பிக்கையே மிக்குத் தோன்றுகிறது. அப்போது ஐயம் என்பது சிறிதும் இல்லை. அங்கு எல்லாம் விளையாட்டே; எல்லாம் கற்பனை

உலகே. வேலை என்பது ஏது? ஆதலின், சரியா என ஒத்துச் சரிபார்ப்பது ஏன்? பிறர் கருத்தை அறியவும் பிறர்க்கு நம் கருத்தை அறிவிக்கவும் அவா எழும்போதே சமுதாய அனுபவம் பிறக்கின்றது. பிறரோடு கூடிக்குலாவி, அளவளாவிப் பேசி வரும்போது, எழுகின்ற கருத்துக்களை எல்லாம் ஒற்றுமைப்படுத்திக் காண வேண்டிய கட்டாயம் எழுகிறது. அங்குத்தான் எண்ணம் சமுதாய எண்ணமாக முற்றுகிறது. முதலில் நோக்கமே இன்றித் தானே இயங்கி அரும்பிய தற்போக்கான (Autistic thought) எண்ணம், இவ்வாறு சமுதாய எண்ணமாகப் பழுப்பதற்கு முன்னர்த் தானே நடுவாந்தன்மை பெற்ற தன்னடிமை எண்ணமாக மலர்கிறது எனக்கண்டோம்.

குழவி உள்ளக்கலை வளர்ச்சி:- எண்ணமெல்லாம் பொது என்றும், எல்லாவற்றையும் தாம் அறிவதாகவும் குழவிகள் கருதுகின்றன. ஏதோ பிறரோடு பேசுவாதலேயே பிறரைத் தாம் அறிந்து கொண்டதாகவும் முடிவு செய்கின்றன. குழவியின் எண்ணங்கள் எல்லாம் சொல்முறையாக நிகழ்வனவே எனக் கண்டோம். குழவி முதலில் எங்கும் ஒரே நிலையாக உள்ள ஒற்றுமையையே காண்கிறது. வேற்றுமை உணர்வு எழுந்தாலன்றோ எண்ணுதற்கு இடம் உண்டு? பிறரோடு பேசிப் பழகி வேற்றுமை நிலையை உணர்ந்து அவற்றை ஒற்றுமைப் படுத்த முயலும்போதே தருக்கநியதி வளர்கிறது. உணருவது என்றால் செயல் நிலையிலிருந்து சொல் நிலைக்கு வருதல் வேண்டும். அகக்காட்சியில் படைத்துக் கண்டு, புறநிலையோடு உள்ள பொருத்தத்தை உணர்தல் வேண்டும். அறிவானது ஆற்றொழுக்குப்போல் தொடர்ந்து ஓடாமல் அலைபோல் மாறி மாறி எழுந்தும், இழிந்தும் போகின்றது. 7 - 8 வயதில் ஓர் எழுச்சி ஓங்குகிறது.

11 - 12 வயதில் ஒரு மாற்றம் எழுகிறது. செயல் நிலையில் முன் எழுந்த மாற்றம் சொல் நிலையிலும் பின்னர்ப் பாய்கிறது. வேற்றுமை நிலையை உணர்ந்து ஒற்றுமைப்படுத்த முடியாமையால் "அடுத்துநிலை" என்று கூறிய இயல்பு குழவியினிடத்தே விளங்குகிறது. அகநிலை மிக்குத் தோன்றுவதால், புறமுக நோக்கம் குழவியினிடம் சிறப்பதற்கு இடம் இல்லை. குழவி உன்னிப்பாகப் பார்க்கும் எல்லை மிக மிகக் குறுகித்தோன்றுவதால், முறைமைநிலைத் தொடர்பைக் கையாள மாட்டாமை எழுகின்றது. குழவி தன் நிலையிலிருந்து சமுதாய நிலையிற்பாய்ந்து புறநிலையிற் புகுவதே குழவி உள்ளத்தின் வளர்ச்சியின் வரலாறும்.

சிறப்புநிலையும் முரண்பாடும் :— பொருள்களை உணரும்போது அவற்றிடையே தொடர்பினைக் காண்பது அகத்தே எழுவதாம். புறத்தொடர்பினை உணர்ந்தே, இத்தகைய காட்சி அகத்து எழவேண்டும் என்ற நியதி இல்லை. ஆகையாலேயே, குழவியின் காட்சி கட்டுநிலை ஒற்றுமைக் காட்சியாக எழுகிறது. அதனாலேயே, அகநிலையும் புறநிலையும் மாறுபடுகின்றன. காரண விளக்கம் உள்ளதனை விவரிப்பதேயாம்; புறநிலை நோக்கம் மிகும்போது எழுவதே ஆம். குழவியின் இயல்பு, உள்ளதாகத் தான் கருதுவதனை விவரிப்பதே அன்றிக் காரண விளக்கம் கூறுவதன்றாம். குழவியின் எதிர் இரு பொருளோ, பல பொருளோ ஒருங்கு தோன்றுமானால் அவை அனைத்தினையும் ஒன்று எனவே அது கொள்கிறது. அந்த நிலையில் காரணம் கேட்போமானால் ஒன்றை மற்றொன்றின் காரணமாகக் கூறுவது இயல்பேயாம். பொது நிலையிலிருந்து சிறப்பு நிலையை உய்த்துணர்தலும் உண்டு (Deduction). சிறப்பு நிலைகளிலிருந்து பொதுநிலையை உய்த்துணர்வதும் உண்டு (Induction). இவை இரண்டும் பெரியோர் தருக்க

முறையாம். குழவியினிடத்தோ சிறப்பு நிலையிலிருந்து சிறப்பு-நிலையை உய்த்துணரும் தருக்கமுறையே (Transduction) உண்டு. "அந்தச் செம்படகு மிதக்கும் - அது சிவப்பாதலின்" என்றே கூறிவருகிறது. இதனாலேயே, குழவி முரண்பாட்டினை உணர்வதில்லை. பொதுத்தன்மையைக் கூறவரும்போது அன்றோ முரண்பாடு தோன்றும்? ஒன்றை விட்டு-மற்றொன்றைக் காணும்போது முன்னதை மறந்து விடுவதும் உண்டு. இந்த மறதி காரணமாக எழும் முரண்பாடும் உண்டு.

திருப்பிக் கூறுதல் :— "எங்கெங்கே புகை உண்டு அங்கங்கே நெருப்புண்டு" என்று உடன் பாட்டு வகையாகக் கண்டால் மட்டும் போதாது. அதனைத் திருப்பிச் சொல்லியும் பார்க்கவேண்டும். "எங்கெங்கே நெருப்புண்டு அங்கங்கே புகையுண்டு" என்று கூறும்போதே குற்றம் தோன்றும். அவ்வாறு குற்றம் தோன்றினால் மட்டுமே "நெருப்பைக் கண்டதும் புகை எழும்"என எதிர்பார்க்கும் நிலைமை ஒழியும். உடன்பாட்டு நிலைமையில் வைத்துப் பார்ப்பதிலும் எதிர்மறை நிலையில் வைத்துக் காணுதலே சிறந்ததாம். "யாண்டு யாண்டு நெருப்பில்லை, ஆண்டாண்டுப் புகை இல்லை" என்ற வகையிற் காணவேண்டும்; "யாண்டு யாண்டுப் புகையில்லை ஆண்டாண்டு நெருப்பில்லை" எனத் திருப்பிக் கூறுவது தவறாகும் என உணர்தல் வேண்டும். இவ்வாறு எதிர்மறை வகையாகவும், திருப்பிக்காணுதல் வகையாகவும் ஆராயும்போதே தருக்க முறை வளரும்; தொடர்பும் விளங்கும். இத்தகைய விரிவான வழியைப் பின்பற்றப் புறநிலை நோக்கம் வளர்தல் வேண்டும். ஒவ்வொரு கூற்றினையும் புறநிலையை நோக்கியன்றோ, உண்மையா தவறா எனக் காணுதல் வேண்டும்? ஆனால், குழவிக்கோ புறநிலை நோக்கம் இல்லை. ஆதலின், அது குறுக்கு வழியாகவே முடிவிற்கு வருகிறது. அதனாலேயே, முரண்-

பாடுகள் எழுகின்றன. "சிறு படகு இலேசாதலின் மிதக்கின்றது; பெரும்படகு பளுவாதலின் மிதக்கின்றது," என்று ஒரு குழவி பேசுகிறது. சிறு படகாம் சிறப்புநிலையில் இருந்து குழவி இலேசு என்ற அதன் சிறப்புநிலைமை உய்த்துணர்கின்றது. "சிறுபடகு மிதப்பது இலேசாயிருப்பதால்" என்று உணர்ந்ததனைப் பெரும் படகைக் காணும்போது மறந்து "பெரும்படகு பளுவாதலின் மிதக்கிறது" என்று கூறுகிறது. இவ்வாறு மறதி காரணமாக முரண்பாடு எழுகின்றது. 7 - 8 வயதிலிருந்து, 11 - 12 வயதிற் புகும்போது, இந்த முரண்பாடு முதலிற் செயல் முறையில் தோன்றியது சொல்முறையிலும் தோன்றுகிறது.

முந்நிலை வளர்ச்சி :— அறிவுநிலை வளர்ச்சியில் மூன்று நிலைகளைக் காண்கிறோம். முதற்படி கேள்விப்படியாம். இரண்டாவதுபடி கொள்கைப்படியாம். மூன்றாவதுபடி ஆட்சிப்படியாம். முதலில் சிக்கலை உணர்ந்ததும் கேள்வி எழுகின்றது. அதனை விளக்க ஒருகொள்கை உருப்பெறுகின்றது. பின், அந்த உண்மைக்கு ஏற்பப் புறப்பொருளை அடக்கி ஆளுகின்றோம். கேள்வியே, விருப்பத்தினை வெளியிடுகிறது. அங்கு ஒரு பாழ்தோன்றுகிறது. கொள்கையாவது கற்பனை கொண்டு அதனைநிரப்புவதேயாம். கொள்கையைச் சரிபார்க்கும் போதே (Verification) அறிவு என்பது தோன்றுகிறது. அடக்கி ஆளுதல் என்பது மனவகைச் செய்க்காட்சியால் செய்து காணும்போது எழுகிறது. குழவிகளின் இயல்பும் வயதிற்கேற்ப இந்த மூன்று வகையாகப் பிரிகிறது. 7 - 8 வயதிற்கு முந்திய நிலை ஒன்று; 7 - 8 வயதின் நிலை இரண்டு; 7 - 8 வயதிற்குப் பிந்திய நிலைமூன்று. 12 வயதிற்குப் பின் முதியோரது தருக்கமுறை வேரூன்றி விடுகிறது. மனநிலைச் செய்க்காட்சி புறநிலைச் செய்திகளைப் பின்-

பற்றுவதாம். தருக்கநிலைச் செய்க்காட்சியோ புறநிலைக்கு ஒத்திருப்பதோடு அங்கே ஓர் உண்மை தன்னிற்றானே உண்மையாகவும் விளங்கப்பெறுவதாம். "செங்குடம் கரியது" என்பதன் குற்றநற்றத்தைப் புறத்தை நோக்காதே அதனைக்-கொண்டே ஆராய்ந்து குற்றம் எனலாம். இத்தகைய செய்க்-காட்சியே தருக்கநிலைச் செய்க்காட்சியாம். தனக்குத்தானே உண்மையாய் இருக்கும் நிலையாவது யாது? முரண்படாது ஒன்று பட்டு நிற்கும் நிலையே உண்மை நிலையாம். பலவகையான செயல்களிடையேயும் உள்ளீடாகத் தோன்றுவனவற்றின் தொடர்பினை அறிந்தாலன்றோ இத்தகைய தருக்க முறைச் செய்க்காட்சி எழுதல் கூடும்? குழவி பொதுத் தன்மையை உணராமையால் மனவகைக் செய்க்காட்சி முறையைக் கையாளுகிறதே அன்றித் தருக்க முறைச் செய்க்காட்சியைக் கையாளுவதில்லை. தன்னியக்கமும் (Self movement) பயனுள்ள செயற்பாடும் உயிர்ப்பொருளின் இயல்புகளாம். இவற்றின் காரணமாக ஒற்றுமை கண்டே இயங்குதல் வேண்டும். குழவி கட்டுநிலை ஒற்றுமைக் காட்சி மட்டுமே பெற்று இயங்கிச் செயற்பட்டு வருகிறது. ஆதலின், அங்கு முறைமை நிலைத் தருக்கம் வளரக்காணோம்.

நால்நிலை வளர்ச்சி:— தானே நடுவாந்தன்மையில் பெருஞ் சட்டமாக விளங்குவது விளையாட்டேயாம். தானே இயங்கும் நிலையில் குழவியைச் செயற்படுத்துவது இயற்கையாக எழும் இன்ப நாட்டமேயாம். கட்டையையும் பொம்மையாகக்-காணும் குழவி உள்பொருளைத் தன் மனத்திற்கு ஏற்ப உருக்-குலைத்து இன்பம்பெறுகிறது. குழவியின் மனம் அகமுனையும் புறமுனையும் பெற்று விளங்குகிறது. இரண்டும் வேறுபட்டும் கிடக்கின்றன. புற உலகினை உள்ளவாறு அறியாமையால் புறமுனை குழம்பிக்கிடக்கின்றது; இன்பநாட்டம் அகமுனையை

ஒற்றுமைப்படுத்தி வைத்துள்ளது. புறமுனையில் ஒற்றமை பிறரை நோக்கி இயங்கும்போதே எழுதல் கூடும். குழவியின் உள்ளத்தின் வளர்ச்சியை வயதிற்கு ஏற்ப நான்கு பிரிவாகப் பாகுபாடு செய்யலாம்.

| நிலையின் எண் | வயது | குறிப்பு |
|---|---|---|
| முதல் நிலை — | 2–3 வயது வரை | விருப்பமே உள்ளது. |
| இரண்டாம் நிலை | 2–3 வயது முதல் 7–8 வயது வரை | காட்சி யுலகும் விளையாட்டு உலகுமே உள்ளன. |
| மூன்றும் நிலை — | 7–8 வயது முதல் 11–12 வயதுவரை | கருத்துக்களைப் படிப்படியாக உயரும் உயர்நிலைப் படை-களாக அமைக்கும் நிலைமை எழுகிறது. |
| நான்காம் நிலை — | 12 வயதிற்குப்பின் | எண்ணம் உருக்கொள்கிறது. |

## IV. எண்வகைப் பேச்சு

மடக்குப் பேச்சு :— குழவிகள் பேசும் மொழியின் வழியே அவற்றின் மனத்தினை உணர்தல் முடியும். முதலில் பன்னிப் பன்னி ஒரு சொல்லையோ, அலகுநிலை எழுத்தையோ திருப்பித் திருப்பி ஒலித்துக் களிக்கின்றது; மழலையாட்டில் பின்னே எஞ்சி இருப்பது இவ்வளவேயாம். இவ்வாறு பேசு-வதில் எழும் மகிழ்ச்சியே அன்றி வேறு ஒரு பயனும் இங்கு இல்லை. இயக்க நிலையாக எண்ணம் முதலில் விளங்கும் என்றோம். தன்னைச் சுற்றியுள்ளாரது இயக்கங்களையும் எண்ணங்களையும் தன் ஆளுமையின் நிலையிலிருந்தும் சமுதாயத்தின் நிலையிலிருந்தும் குழவி நோக்குகின்றது. "தான்" "பிறர்" என்ற வேறுபாடு தெள்ளத் தெளியாமையால் இரண்டையும் மயங்கக் கொள்கின்றது. தான் எண்ணியபடி

குழவி பேச முயல்கின்றது. தான் என்றும், பிறர் என்றும் வேற்றுமை எழாதபோதும் பிறர் பேசுவதனைக் கேட்கு-மிடத்துத் தன் பேச்செனவே கொண்டு அதுபோலப் பேசத் தொடங்குகிறது. தனக்கு மேல்வரிச் சட்டமாகத் தன்னிடத்தே தோன்றுவதனோடு இவ்வாறு ஒன்றுக்க முயலும் முயற்சி-யினையே சாயல் பிடித்தல் என வழங்குகின்றோம். பன்னிப் பன்னிப் பேசும் பேச்சினை மடக்குப் பேச்சு எனலாம்.

தற்பேச்சு :— இரண்டாவதாகத் தோன்றுவது குழவி தானாகப் பேசிக்கொள்ளும் தற்பேச்சு ஆம். சொற்கள் சிறப்புப் பொருண்மை கொண்டு விளங்குவதால் வேறொரு தொழிலை நோக்காது அச்சொற்களை ஒலிப்பதனையே விளையாட்டுத் தொழிலாகக் கொண்டு உலவுகிறது. குழவி தானே இயங்கி வரும்போது தானே பேசவும் விதுவிதுப்புற்று நிற்கின்றது. சாயல் பிடித்தாலன்றிப் பேசக் கற்றுக்கொள்ளுவது எங்ஙனம் கூடும்? "தான்," "பிறர்" என்றறியாத குழவி எதனைத் தான் சாயல் பிடிப்பதாக உணர்தல் கூடும். பிறரோடு போலத் தன்னோடும் பேசிக்கொள்கிறதாதலின் இதில் ஒரு புதுமை இல்லை. பிறருக்குக் கட்டளையிட்டுப் பேசிவரும் குழவி தனக்கும் கட்டளையிட்டுக் கொள்கிறது. புறத்தே காணும் நிலையைத் தனக்கேற்பச் செயலால் மாற்றமுடியாத குழவி சொற்களால் செய்யக்கூடும் என நம்பிச் சொற்களை ஒலித்து வரவும் காண்கிறது. பகற்கனவோடு ஒத்ததாகும் இங்குப் பேசும் பேச்சு. இந்தப் பேச்சு மாந்திரிகப் பேச்சே எனலாம். அவ்வாறன்றோ குழவி கருதுகிறது? கட்டையை இராசா என்றால் இராசாவாகவே குழவிக்குத் தோன்றுகிறது. ஆனால், இவ்வாறு ஓர் ஆறுதலைச் சொற்களின் வழியே பெற்றாலும், செயலுலகை மறந்து, பகற்கனவுலகில், சொல்லாகிய மந்திரக்-கோல் கொண்டு, குழவி மாயாவியாக வாழுமானால் பேரிடர்ப்-

பாடே எழும். அப்போது ஆறுதல் அனைத்தும் மாய ஆறுதலாய் ஒழியும். சொல் அனைத்தும் கட்டளை வடிவமாகிறது. குழவி இவ்வாறு தனக்குள் தானே பேசிக் கொள்ளுமானல் பிறரொடு பேசுவதற்கு என்றெழுந்த சொற்களின் சமுதாய இயல்பு அடியோடு மறைந்தொழிகிறது. சமுதாயநிலையை வளர்க்க வந்த கருவியாம் சொல், தானே முடிவாகித் தான் எதற்கென எழுந்ததோ அதனையே அழிக்கின்றது. ஒன்றவந்த பேய் ஊர்ப்பேயினையும் ஓட்டிய கதையாய் முடியும்.

குழுநிலைத் தற்பேச்சு :— மூன்ருவதாக நாம் தோன்றக் காண்பது குழுநிலைத் தற்பேச்சேயாம் (Collective monologue). இருவரோ பலரோ இருக்கும்போது குழவி பேசத் தொடங்குகிறது; பிறரது இருப்பு ஒரு தூண்டல் அளவிலேயே அமைந்து விடுகிறது; பிறரது நோக்கத்தைப்பற்றிக் கருதுவதே இல்லை. பிறர் கூறுவதைக் கேட்டு மாறுசெய்ய வேண்டும் என முயலுவதும் இல்லை. தன்னைப்பற்றியே குழவி பேசிக் கொண்டு போகிறது.

ஒட்டுப் பேச்சு :— இதன் பின்னரே சமுதாயப் பேச்சு எழுகின்றது. நான்காவதாகத் தோன்றுவது பிறரை ஒட்டிப் பேசும் ஒட்டுப் பேச்சாம். இப்போதுதான் குழவி, தான் கூறுவதனைப் பிறர் கேட்க வேண்டும் என முயல்கிறது. அவர்கள் நிலையையும் அறிகிறது. அவர்களை மாற்றவும் முயல்கிறது. தன்னைப் பற்றியே பேசுகின்ற நிலை ஒழிகிறது. ஆனல், காரணம் கூற முயலுவதில்லை. செய்திகளை மட்டுமே தெரிவிக்கின்றது. வாதம் எழுமானல் தான் கூறியதனை நிலைநாட்டத் தொடங்குகிறது. ஒட்டுப்பேச்சு முதலில் நூற்றுக்குப் பதின் மூன்ருகச் சிறிதளவே தோன்றுகிறது. இது அறிவு நிலையின் வெளியீடன்றோ? அதனல், சிறிதளவே தோன்றுவது

இயல்பேயாம். முரண்பட்ட கூற்றுக்கள் முட்டும்போதே வாதம் தோன்றுகிறது.

ஆய்வுப் பேச்சு :- ஐந்தாவதாக எழுவதனை ஆய்வுப்பேச்சு எனலாம். பிறரது நடத்தையினைப் பற்றியோ, செயலைப் பற்றியோ கண்டனமாகப் பேசுவதும் ஏளனமாகப் பேசுவதும் இயல்பன்று. இவ்வாறு குற்ற நற்றம் காண்பதும் உண்மையை அறிவதற்காக அன்று;' அறிவுநிலைக் கருவியாம் பேச்சு இவ்வாறு அறிவுநிலைக்குப் புறமான கருவியாகிறது. இதனை அறிவுநிலைப் பேச்சு என்பதினும் உணர்ச்சிநிலைப் பேச்சு என்பதே பொருத்தமாம். இந்தப் புறநிலைக் கண்டனங்களை உற்று நோக்கினல் மதிப்புவகைத் தீர்ப்புகள் அங்கே விளங்கக் காண்போம்.

வியங்கோட் பேச்சு :— ஆறுவதாக எழும் பேச்சு வியங்கோட் பேச்சாம். கட்டளையும், வேண்டுகோளும், அச்சுறுத்தலும் இங்கு மிக்குத் தோன்றுகின்றன. மக்கள் ஊடாடிவரும்நிலை இவ்வாறு தெள்ளத் தெளிய விளங்குகிறது. பிறர் எண்ணங்களிற் பங்குகொண்டு களிக்கும் நிலை இன்னும் எழவில்லை. விளையாடவே குழவி விரும்புகிறது. இந்த எழும் சில வேண்டுகோள்கள் உண்மையில் கட்டளைகளேயாம். "பொம்மையை வாங்கித்தர மாட்டே" என்பது போன்ற சில கேள்விகள் வேண்டுகோள்களேயாம்.

கேள்வியும் விடையும்:- ஏழாவதாகவும் எட்டாவதாகவும் எழுவன கேள்வியும் விடையும் ஆம். இங்கு விடைகள் என்பன கேள்விக்கு எழும் விடைகளே அன்றிப் பேச்சு முறையில் எழும் விளக்கங்கள் அல்லவாம். இந்த விடைகள் குழவி தானே பேசிக்கொள்ளும் பேச்செனச் சொல்வதற்கே இடமின்றிச்

சமுதாயப் பேச்சின் உயர்நிலையாக விளங்குதல் காண்க. மறுத்தலும் உடன்படலும் விடையேயாம். முதலில் எழும் கேள்விகளை ஆராய்ந்ததில் அவை பாதிக்குமேல் செயல்களைப் பற்றியும், விருப்பங்களைப் பற்றியும் எழும் கேள்விகள் என அறிஞர் கண்டனர். மனநிலைச் செயல்வகையே பெரும் பான்மையாகக் கிடப்பது குழவி தானே நடுவாந்தன்மை கொண்டு விளங்குவதாலே ஆம்.

தெளிவிலாப் பேச்சு :- தானே நடுவாந்தன்மையோடேயே குழவி முதலில் எண்ணியும் செயல் செய்தும் வருகிறது. அது பிறரது அறிவுநிலை வாழ்க்கையிற் பங்கெடுப்பது சிறிதே ஆம். தன் கருத்தை மறைவாக வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தால் இவ்வாறு பிறரோடு பேசிப் பழகுவதில்லை எனக் கூறமுடியாது. குழவிகளிடம் மறைவு என்பது ஏது? பிறர் நிலையில் வைத்துப் பேசும் இயல்பு 'தன் நடுமை' விளங்கும் இடத்தே எழுவது எங்ஙனம் கூடும்? பொருண்மை-யின் நுட்ப வேறுபாட்டைக் குழவி உற்று நோக்குவதே இல்லை. எந்த நிலையிலிருந்து பொருள்களைப் பற்றிப் பேசு-கிறோம் என்பதனையும் குழவி கருதுவது இல்லை. நோக்கவேறு-பாடு அறியாதார் பிறரொடுகூடிக் குலாவுவது எங்ஙனம்? தான் சொல்லுவதனைத் திருப்பியும் திருப்பியும் சொல்லி வற்புறுத்த மட்டுமே குழவி அறியும். தான் கூறுவதனை நிலைநாட்ட முயலுவதில்லை. அதன் பேச்சில், தெளிவோ விளக்கமோ சிறிதும் இல்லை. குறிப்புப் பெயர்களும் (Pronouns) சுட்டுப் பெயர்களுமே இந்த நிலையில் மிக்கு வருகின்றன. எவற்றையும் ஒன்றாகக் கொள்ளும் அந்த மனநிலைக்கேற்ப இச்சொற்கள் எவற்றையும் குறிக்கலாம் அன்றோ?

தெளிவின்மையின் காரணம் :— இவ்வாறு விளக்குவ-தற்குக் காரணம் என்னை? 7 - 8 வயதிற்கு முன்னர்த்தானும்,

குழவியும் சமுதாயமும் வேறெனக் குழவி அறியாமையின் தெளிவுநிலை நன்கு தோன்றுவதில்லை. சமுதாயப் பேச்சின் முற்றிய நிலைமை இங்கு எவ்வாறு தோன்றும்? குழவியின் அடிப்படையான செயற்பாடாம் விளையாட்டினிடையேதான் பேச்சு எழுகிறது. இதற்கு ஏற்பவே பேச்சும் விளங்குகிறது. முதலிற் பேசும்போது சைகைகளும், இயக்கங்களும், சொற்-களும் கருத்தை வெளியிடப் பயன்படுகின்றன. ஆதலின், சொற்களை மட்டும் கண்டால் பொருள் விளங்காதன்றோ? 6½ வயதுவரை குழவியினிடம் இரண்டு வகையான பேச்சு நடை உண்டு. ஒன்று சைகையும், சாயல் பிடித்தலும் இயக்கமு-மாகக் கருத்தை வெளியிடுவது. இவை பேச்சொடும் வரலாம்; பேச்சினை அடியோடு ஒட்டி விடலாம். மற்றொரு நடை முழுதும் சொற்களாக விளங்கும் பேச்சு நடையாம். குழவி தானே நடுவாந்தன்மையில் விளங்குவதால் அதன் அறிவுநிலையும் அதற்கேற்பவே விளங்கும். கட்டளை, செயலைப் பற்றிய பேச்சு, விளையாட்டில் வரும் பேச்சு முதலியவை சமுதாயப் புழக்கத்திடை எழுவன. ஆதலின், இவை அனைத்தும் சமுதாயப் பேச்செனத் தக்கவையாக ஒளிர்-கின்றன.

இருவகை எண்ணம் :- எண்ணங்களும் இரண்டு வகை-யாம். "இதனை நோக்கியே எண்ணிக்கொண்டு போகிறோம்" என விளங்கும் போக்குடைய எண்ணங்கள் ஒரு வகையாம். தட்டுத் தடுமாறித் தகுதிகற்கும்போது போல, முடிவுநிலையை உணரவாராத, போக்கிலா எண்ணங்கள் இரண்டாம் வகை-யாம். முதலாவதுவகை எண்ணம் அறிவாராய்ச்சியாய்ப் பழுப்பதாம். இரண்டாவது நனவடிநிலையில் அமிழ்ந்து கிடப்பதாம். கனவும் கற்பனையும் இந்த இனத்தைச் சேர்ந்-தனவே ஆம். இவை அடையாளங்கள் முதலியவற்றால்

குறிப்பாகப் பொருளைச் சுட்டுவனவாம். "இருட்டு, குகை முதலியன கருப்பையைக் குறிக்கும். வாய் முதலியன பிறப்பினைக் குறிக்கும்" என நனவிலிமன ஆராய்ச்சியாளர் அடையாளங்களை நோக்கிப் பொருள் கூறுதல் காண்க. இவ்வாறு உவமை வழியாகவும், வேறு குறிப்புக்கள் வழியாகவும் பொருளைச் சுட்டி இயங்குவதே போக்கிலா எண்ணத்தின் இயல்பாம். போக்குடைய எண்ணங்கள் அநுபவத்தினையும், தருக்க முறையினையும் பின்பற்றுவன்வாம். தானே இயங்கும் எண்ணமோ அடையாளக் கொள்கையையும் (Symbolism) உடனுக்கு உடன் ஆறுதல் அளிக்கும் விருப்பநிலையையும் பின் பற்றுவதாம். போக்குடைய எண்ணம் சமுதாய அறிவாகப் பொதுநிலை அடைந்து முற்றுகிறது. போக்கிலா எண்ணமோ ஆளுக்கு ஆள் வேறுபட்டுச் சிறப்புநிலையுற்று விளங்குகிறது. அறிவு படிப்படியாகச் சமுதாய நிலையை அடைகிறது; மொழி வழியாகச் சொல்லுக்கும் எண்ணத்திற்கும் இடையே எழும் தொடர்பு காரணமாகப் பொதுமையான கருத்துக்களை வளர்த்துக்கொண்டேவருகிறது. தானே இயங்கும் எண்ணமோ அவ்வாறு வளர இடம்பெறாது உயிர்ப்பொருளின் இயக்கத்தோடும் கற்பனைக் காட்சியோடும் கட்டுண்டு பொதுநிலையில் அன்றித் தனிநிலையிலேயே நின்றுவிடுகிறது.

| எண்ணத்தின் வகை | வெளியிடப் படாதது | வெளியிடுவது. |
|---|---|---|
| போக்கிலா எண்ணம் | தானே இயங்கும் எண்ணம் | புரான எண்ணம். |
| ............................ | ............................ | ............................ |
| போக்குடை எண்ணம் | தானே நடுவாம் எண்ணம் | வெளியிடும் அறிவு. |

இந்தப் பட்டி மேலும் இவற்றை விளக்குதல் காண்க.

தன்நடுமையும் வெளியீடும் :— ஏதேனும் ஒரு சிக்கலை எண்ணுகிறோம். அது தெளிவாய் விட்டதுபோலத் தோன்றுகிறது. ஆனால், அதனை வெளியிட முயலும்போது அருமைப்பாடுகள் எழுகின்றன. நமது நிலையே இவ்வாறானால் பல காலம் வரையிலும் நம் எண்ணங்களை நமக்குள் நாமே அடக்கிய பழக்கத்தால் பிறர் நோக்கத்தை உணரும் பழக்கம் நம்முள் எழுவது போலத் தன்னுள் எழ இடம் இன்றித் தன் எண்ணங்களைப் பிறருக்கு வெளியிடும் பழக்கமுமின்றி வளரும் குழவி தன் எண்ணங்களை வெளியிட முயலும்போது படும் இடர்ப்பாடுகளைச் சொல்லவும் வேண்டுமோ? போக்கிலா எண்ணத்தின் ஓட்டத்திலிருந்து போக்குடை எண்ணத்தின் ஓட்டத்தில் புகுவது எளிதன்று. அங்ஙனமே தானே நடுவாந் தன்மையில் விளங்கும் எண்ண ஓட்டத்திலிருந்து, வெளியிடும் அறிவு ஓட்டத்தில் புகுவதும் எளிதன்றாம். தானே நடுவாந்தன்மையில் எழும் தருக்க முறைவேறு; வெளியிடும் அறிவுநிலையில் எழும் தருக்கமுறை வேறு. முன்னைய தருக்கம் உள்ளுணர்வின் வகையான கட்டுநிலை ஒற்றுமை பெற்று விளங்குவதாம். பின்னையதோ உய்த்துணர்வின் வகையான இயைபுநிலை ஒற்றுமை பெற்று விளங்குவதாம். முன்னையது சான்று காட்டி நிலைநாட்டவேண்டும் என்பதே உணராத நிலையாம். பின்னையது அவ்வாறு நிலைநாட்ட வேண்டும் என்ற உணர்ச்சி எழுவதோடு நிரூபித்துக் காட்டவேண்டும் என்ற நிலையையும் வற்புறுத்திவருவதாம். முன்னையது அடையாளக்கொள்கைப்படி ஒப்புமைக் கோலத்தைத் தனக்குள் தானே படைத்துக்கொண்டு முன்னர் நிகழ்ந்த அறிவாராய்ச்சியின் நினைவோடு மட்டும் நிற்பதாம். பின்னையது "அடையாளக் கொள்கைப்படி எழும் ஒப்புமைக் கோலத்தை வெளியிட முடியாது" என முன்னரும் ஒழித்து, "பயனில்லை" எனப் பின்னரும் தள்ளிக் களைகிறது. முன்னையது அகமுக நோக்க-

மாம் விருப்பத்திற்கு ஏற்ப மதிப்பிடும் தீர்வைகளாய் முடியு-மாம்; பின்னையது விருப்பிற்கு ஏற்ற மதிப்புத் தீர்வைகளை அறவே ஒழித்து அனைவர்க்கும் ஒத்தாற்போலப் புறமுக-நோக்கமாய் எழும் பொதுநிலைத் தீர்வைகளாய் முடியுமாம். 4-7 வயதிற்கு உட்பட்ட குழவிகள் கூடிப் பேசும் நிலையை இங்ஙனம் வகை செய்யலாம்.

| முதலாவது வகை | இரண்டாவது வகை |
| --- | --- |
| 1. அ என்பவன் கூறுவது. | அ கூறுவது. |
| ........................................ | ........................................ |
| 2. ஆ என்பவன் முன்னதற்கு ஏற்பக் கூறுவது. | ஆ முன்னதற்கு ஏற்பக் கூறுவது |
| ........................................ | ........................................ |
| 3. அ என்பவன் பின்னதற்கு ஏற்பக் கூறுவது. | இ என்பவன் முன்னதற்கோ பின்னதற்கோ ஏற்பக்கூறுவது |

பேச்சுநிலை வளர்ச்சி :- குழவிகளின் பேச்சுநிலை வளர்ச்-சியைக் கீழ்க்கண்ட படக் குறிப்பினைக் கொண்டு, (அடுத்த பக்கத்தில் காண்க) பியாழே விளக்குகின்றார். இங்கே அக்கறையும் செயலும் ஊடாடுகின்றன. சூழ்ந்தெண்ணுவது என்றால் உள்ளுக்குள்ளேயே ஒரு சொற்போர் நிகழ்த்திப் பிறர் கூற்றுக்குத்தான் என்ன கூறுவது என நினைத்துப் பார்த்து முடிவு செய்தலே அன்றோ?

## V. 6-7 வயது குழவி

விளக்கநிலை ஆற்றல் :— 6-7 வயதுள்ள குழவிகள் ஒன்று கூறுவதனை ஒன்று தெரிந்து கொள்வதனையும், சொல்-

## பேச்சுநிலை வளர்ச்சி (பியாழே)

| | | | | |
|---|---|---|---|---|
| தற்பேச்சு முதல் நிலை | கூடிக்குலாவிப் பேசுதல் | | | |
| | II ம் பிரிவில் முதல்நிலை முதல் வகை. → | II ம் பிரிவில் முதல்நிலை இரண்டாம் வகை → | III ம் நிலை முதல் வகை வெற்றுநிலை எண்ணத்- → திலும் பங்கு எடுத்தல். | முதல்வகை எல்லாம் ஒற்றுமை. |
| | கேட்போன் பேசுவோனது எண்ணத்தோடும் தொடர்புண்டிருத்தல். ← | செயலிலோ வெற்று நிலை (Abstract thought) அல்லாத எண்ணத்திலோ உடனுழைத்தல். | | |
| | ↓ ↑ | ↓ ↑ | ↓ ↑ | |
| குழுநிலைத் தற்பேச்சு | II ம் பிரிவில் இரண்டாம்நிலை முதல்வகை → | II ம் பிரிவில் இரண்டாம்நிலை இரண்டாம் வகை | III ம் நிலை இரண்டாம் வகை → | இரண்டாம் வகை |
| | போராட்டம் முரண்பட்டசெயல்கள் முட்டிக்கொள்ளுதல். ← | தொடக்கநிலை வாதம் ஊக்கிநிலைக்கு உட்படாத கூற்றுக்கள் முட்டிக் கொள்ளுதல் → | உண்மையான வாதம். ஊக்கிநிலையுற்ற கூற்றுகள் முட்டிக் கொள்ளுதல் | எல்லாம் வேற்றுமை |

வகையாக விளக்கம் கூறுவதனையும் ஆராய்ந்தால் சில உண்மைகள் தோன்றுகின்றன. இங்கு நான்குவகை ஆற்றல்கள் அரும்பு விடுவதனைக் காணலாம். குழவிகளில் ஒன்று கூறு-வதனை ஒன்று அறிந்து கொள்ளும் ஆற்றலே முதல்வகை ஆற்றலாம். சொன்னதனைத் திருப்பிச் சொல்ல வரும்போது, சொன்னதனை அறிந்து கொள்ளும் ஆற்றல் இரண்டாவதாம். சொன்னதனை விளக்க வரும்போது, முன் சொன்னதனை அறிந்து கொள்ளும் ஆற்றல் மூன்றாவதாம். விளங்கக் கூறும் ஆற்றல் நான்காவதாம். மறித்துக் கூறுவோன் அறிந்து-கொண்டவற்றின் எண்ணிக்கையை விளக்குவோன் அறிந்து-கொண்டவற்றின் எண்ணிக்கையால் வகுத்தபோது வரும் ஈவே முதல் வகை ஆற்றலை அளந்தறிவதாம். மறித்துக் கூறுவோன் அறிந்து கொண்டவற்றின் எண்ணிக்கையை விளக்குவோன் வெளியிட்டவற்றின் எண்ணிக்கையால் வகுத்தபோது வரும் ஈவே இரண்டாம் வகை ஆற்றலை அளந்தறிவதாம். விளக்குவோன் அறிந்து கொண்டவற்றின் எண்ணிக்கையை அறிய வேண்டியவற்றின் எண்ணிக்கையால் வகுக்கும்போது வரும் ஈவே மூன்றாவது வகை ஆற்றலை அளந்தறிவதாம். மறித்துக் கூறுவோனிடம் கூறியவற்றின் எண்ணிக்கையை விளக்குவோன் அறிந்தவற்றின் எண்ணிக்-கையால் வகுக்கும்போது வரும் ஈவே நான்காம் வகை ஆற்றலை அளந்தறிவதாம்.

ஆற்றலின் வேறுபாடு :- கதையாகக் கூறும் முறையிலும், விளக்கம் கூறும் முறையிலும் இவ்வாறு இந்த நான்கு வகை ஆற்றலையும் அளந்தறிந்த குறிப்பினைக் கீழே தருகின்றோம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 ஆவது | ஆற்றல் | கதையில் | 0·58; | விளக்கத்தில் | 0·68. |
| 2 ம் | ,, | ,, | 0·64; | ,, | 0·79. |
| 3 ம் | ,, | ,, | 0·82; | ,, | 0·93. |
| 4 ம் | ,, | ,, | 0·95; | ,, | 0·76. |

இங்குக் குழவிகள் ஒன்றை ஒன்று அறிந்துகொள்ளும் ஆற்றல் கீழ் நிலையில் இருக்கவும், விளக்கும் ஆற்றல் கதையில் மட்டும் மேல் நிலையில் இருக்கவும் காண்கின்றோம். இதன் காரணம் என்ன?

•

வேறுபாடு ஏன்? :— தன் காதாற்கேட்பனவற்றில் குழவி தனக்கு வேண்டியவற்றை மட்டும் எடுத்துக்கொண்டு தன்னுடைய கருத்தை உருப்படுத்திக் கொள்கிறது. பிறரது நோக்க நிலையை நாடாது தன் நோக்க நிலையையே நாடுவதால் இது குழவிக்கு எளிதாகிறது. குழவிகள் ஒருவரோடு ஒருவர் பேசும்போது செய்திகளை விளக்கி வருகின்றனவே அன்றிக்காரண இயைபோ, தருக்க இயைபோ விளங்குமாறு பேசுவது இல்லை. 7-8 ஆண்டுவரை தாமாக ஒன்றையும் விளக்கப்புகுவதும் இல்லை. ஒன்றை நிரூபித்து நிலைநாட்டத் தொடங்குவதும் இல்லை. தானே நடுவாம்தன்மை அன்றோ அந்தப் பருவத்தில் உயர்ந்து ஓங்கி விளங்குகிறது? ஆதலின், அங்கு விளக்கம் கூற வரும் போது தனக்குத்தானே பேசுவதுபோலக் குழவி பேசுகின்றதே அன்றிப் பிறர்க்கு விளக்க வேண்டும் என்ற கருத்தோடு பேசுவதாகத் தோன்றவில்லை. எண்ணமனைத்தும் எல்லோர்க்கும் உரியதாம் பொது உடமை என்றே குழவி கருதுகிறது; தன் எண்ணத்தைப் பிறர் அறிவர் என்றே கருதுகிறது. ஆதலினாலேயே, அது விளக்கம் கூற முயலுவதில்லை. பொருள்களைப் பெயரிட்டு வழங்காது குறிப்புப்பெயர் கொண்டும் சுட்டுப்பெயர் கொண்டும் குழவி பேசவருவதும் இதனாலேயாம். விளக்கம் கூறவரும் போதும் அவ்விளக்கத்தில் காரணநிலையோ, முறையோ ஒன்றும் தோன்றுவதில்லை. அடுத்து நிலையே (Juxtaposition) அங்குத் தோன்றுகிறது. இயைபு உண்டு என்று விளக்கும் "ஆகையால்" முதலிய சொற்கள் அப்பருவத்துப் பேச்சில் இடம் பெறுவதில்லை.

குழவியின் பேச்சு :— முதியோர் தம்கருத்தினைப் பிறர் தெளிவாக உணர வேண்டும் என்ற நோக்கத்தோடு, தம்மைத் தவறாகப் பிறர் முயலாதவாறு, பேச முயன்று, தருக்க முறையைப் பின்பற்றுகின்றனர். குழவியோ தன் எண்ணம் பிறர் அறிந்ததே எனக் கருதுவதால் அவ்வாறு முறைப்படுத்த முயலுவதே இல்லை. குழவி பேசும் போதும் "அப்புறம் அப்புறம்" என்று பேசி வரும். அது குழவி கொண்ட முறையே அன்றி அது கூறும் பொருளிடையே இயற்கையாகத் தோன்றும் முறையன்றாம். எனவே, அகநோக்கமன்றிப் புறநோக்கம் அங்கு இல்லை. 6-7 வயது வரை பேச்சில் ஓர் ஒழுங்கும் தோன்றுவதில்லை. 7-8 வயதில் ஓர் ஒழுங்கு முறை அரும்பு விடுகிறது. பிறர் கருத்தோடு தம் கருத்து முட்டுவதால் வாதம் பிறக்கின்ற நிலையிலேதான் ஒழுங்கு முறையும் தலைகாட்டத் தொடங்குகிறது. குழவி தனக்குள் தானே உணருகின்றதே அன்றி உணர்ந்ததனை வெளியிட விரும்புவதாகக் காணோம். எதுப்பொருளைக்காட்டும் ஆனுருபு சேர்ந்து வரும் சொல், இலக்கண முறைப்படி காரணத்தைக் காட்டுதல் வேண்டும். சிறு குழவிகளின் பேச்சிலோ அது பயனையே சுட்டிவரக் காண்கிறோம். குழவி கூறும் ஆனுருபு உம்மையின் பொருளையே குழவியின் பேச்சில் குறிக்கிறது. குழவி பேசும் பேச்சில் வரும் கருத்துக்களினிடையே காரணகாரியம்முதலியதொடர்பு இல்லை என்றும், அவை அடுத்து நிலையாகவே நிற்கின்றன என்றும் கண்டதற்கு ஏற்ப, அவை வழங்கும் ஆனுருபும் காரணகாரிய இயைபை விளக்காது, அடுத்து நிலையை மட்டும் விளக்குகின்றதாம்.

தம்முட்பேசுதல் :— குழவிகள் ஒன்றை ஒன்று அறிந்து கொள்வதுதான் எப்படி? பிறர் பேச்சைக் கேட்கின்ற குழவி தானே நடுவாம் தன்மை காரணமாக எல்லாவற்றையும்

அறிந்து கொண்டதாக நினைக்கின்றது. பொதுவானநிலை ஒன்று இருக்குமானால் பழைய நிலைக்கேற்ப இப்போது கூறக் கேட்பதனை அறிந்து கொள்ளுகிறது. இல்லையானால் பேச்சு எல்லாம் காற்றாய்ப் பறக்கின்றது. குழவியோ பிறர் கூறுவ- தனை விடாமல் ஒவ்வொரு சொல்லாக உற்றுக்கேட்டு வருவது இல்லை. பேச்சு முழுதினையுமே ஒன்றாகக்கேட்டு முழுநிலையாக மனத்தில் வாங்கிக் கொள்ளுகிறது. இதனைச் சொல் வகைக் கட்டு நிலை ஒற்றுமை (Verbal Syncretism) எனவழங்குவர். குழவி எண்ணும் எண்ணம் அகநோக்கம் நீங்கிப் புறப்போக்கு நிலையை அடைய வேண்டுமானால் அவ்வெண்ணத்தினைக் குழவி வெளியிடவேண்டும். தன்கற்பனையையே நம்பி வாழ்தலை விட்டு, உண்மைக்கு அடிமையாகி வாழ முற்படுதல் வேண்டும். இத்தகைய நிலை 7-8 ஆம் ஆண்டிலே சமுதாயப் புழக்கம் மிகுதிப்பாட்டினால் தொடங்குகிறது.

## VI. 9 - 10 வயது குழவி

சொல்வகைக் கட்டுநிலை :— 6 - 7 வயதுள்ள குழவிகள் அறிந்துகொள்ளும் முறையினைக் கண்டோம். 9-10 வயதுள்ள குழவிகள் நாம் கூறுவதை அறிந்துகொள்ளும் முறையினை இனிக் காண்போம். முதலில் சொல்வகைக் கட்டுநிலை ஒற்றுமை விளங்குகிறது. ஒருப்பாட்டு வடிவத்தினின்றும் பலவகை ஒருப்பாட்டு வடிவங்கள் வேறு பிரிந்து எழுவன என்று கூறிய கருத்தினை இங்கு நினைப்பூட்டிக் கொள்ளலாம்.

அறிவுவகைக் கட்டுநிலை :— அறிவுவகைக் கட்டுநிலை ஒற்றுமையும் இங்கு உண்டு (Syncretism of reasoning). பழமொழிகளைக் கொடுத்து ஒரே பொருளுள்ளவற்றை எல்லாம் தொகுத்துக் கூறுமாறு கேட்டால் குழவி பொரு-

ளறியாது சொல்லொற்றுமையை மட்டும் பயன்படுத்தும் உண்மை புலனாகும். குழவி அனைத்தையும் அறிந்தது போலக் கருதிவிடுகிறது.

"பேச்சுப் பேச்சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக் கீச் சென்னும் கிளி".

என்ற பழமொழியைக் கூறினால், "சிலர் உணர்ச்சி ததும்பு-கின்றனர். ஆனால், ஒன்றும் செய்வது இல்லை" என்பதே பொருள் எனக் குழவி கூறுகின்றது. மேல்வாரியாக எதனை-யேனும் பற்றிக்கொண்டு அதனையே முழுப்பொருள் என முடிவு கூறுகின்றது. புறநிலை ஒற்றுமை இங்கு இல்லை. குழவி கருதும் அகநிலை ஒற்றுமையே உண்டு. இது குழவி தானே கற்பித்துக்கொண்ட ஒற்றுமையாம்.

நிலை நாட்டல் :- மூன்றாவதாக இந்தப் பருவத்துக் குழவி-களிடம் எவ்வகையாலும் தான் கூறுவதனை நிலைநாட்ட வேண்டும் என்னும் வேட்கை உண்டு என அறிகிறோம். "ஒவ்வொரு பொருளும் பிற பொருள்கள் ஒவ்வொன்றோடும் இயைந்துள்ளது; ஆதலின், ஒன்றும் தற்செயலாக நிகழ்வது இல்லை." என்பதே குழவியின் கொள்கை. குழவியைக் காரணம் கேட்போமானால் இதனாலேயே எதனையேனும் கற்பித்துக் கூறுகின்றது. பிறர் கூறுவதனை அறிந்துகொள்ளும் நிலை குழவியினிடம் குழம்பிக் கலங்கிக் கிடக்கின்றது. இங்குக் காணக்கிடக்கும் ஒற்றுமை கட்டுநிலை ஒற்றுமையேயாம். தானே நடுவாந்தன்மை காரணமாகவே இங்குக் கூறிய கொள்கை-களில் ஐயமின்றி அவற்றை நம்பிக் குழவி வாழ்கிறது.

அறிந்துகொள்ளும் கட்டுநிலை ஒற்றுமை :— நான்காவதாக இந்தப் பருவத்தில் அறிந்துகொள்ளும் நிலையினும் ஓர் கட்டுநிலை ஒற்றுமை முழுநிலைக் காட்சியின் வழியே எழுகின்றது. பாகு-

பாடுகள் எழினும் இந்த முழுநிலையை ஒட்டியே எழும். ஒரு சில உள்ளுணர்வின் பயனுகப் பேச்சிலே வரும் புதிய சொற்களையும் அறியும் பேறு பெறுகிறது. பேச்சினை முழுநிலையாக உணர்வதால் முன் அறியாத சொல்லும் அந்தக் குறிப்பினிடையே நன்கு விளங்கிவிடுகிறது. ஒன்றுபோல் ஒன்று இருக்கும் சொற்களையே குழவி தேடுகிறது. வேறு வேருகக்காணுது அனைத்தையும் ஒன்ருகக் காணும்போது பாகுபாடின்மை தோன்றுவதாலேயே இங்குக் கட்டுநிலை ஒற்றுமை விளங்குகிறது. ஒன்றற்கொன்றுள்ள இயைபு தோன்றினுல் அன்ருே பாகுபாடு தோன்றும்? கனவில் எழும் ஒற்றுமையோடு இந்தக் கட்டுநிலை ஒற்றுமையை ஒப்பிடலாம். கனவில் எழும் ஒற்றுமை இருவகையால் எழுகின்றது. ஒன்று சுருக்கவழியின் பயனும். தூங்குகின்றவர் காலில் கொசுகு வலை சிக்குகிறது. தன்னை ஒருவர் கட்டுவதாகக் கனுக் காண்கிருர். காலைக்கட்டுவது போன்ற உணர்ச்சியில் தன்னையே கட்டப் பகைவர் வரும் கதை எல்லாம் சுருங்கித் தோன்றுதல் காண்க. மற்ருென்று ஒன்றன் குணத்தினை மற்ருென்றற்கு ஏற்றவதாம். பகைவர் கட்டும் நிலையைக் கொசுகு வலையின் சிக்கலில் ஏற்றுவதனையும் காண்க. அனைத்தையும் ஒன்ருகக் காணும் குழவியின் உள்ளத்தில் இவ்வாறு சுருக்கவகையும், மாற்றுவகையும் இயங்கிப் பலவகைக் கட்டுநிலை ஒற்றுமையை எழுப்புவது இயல்பேயாம்.

## VII. கேள்வி

கேள்வி வயது:- இனிக் குழவிகள் கேட்கும் கேள்விகளை ஒரு சிறிது நோக்குவோம். மூன்ரும் வயதிலும் கேள்விகளின் எண்ணிக்கை மிகுகிறது; ஏழாம் வயதிலும் கேள்வியின் எண்ணிக்கை மிகுகிறது. மூன்ரும் வயதில் எழும் கேள்விகள்

இடம் பெயர் முதலியனவற்றைப் பற்றியவாம். ஏழாம் வயதில் எழும் கேள்விகள் காரணம், காலம் முதலியவற்றைப் பற்றியனவாம் "ஏன்", "ஏன்" என்றே கேள்விகள் எழுகின்றன. இவற்றைக் கீழ்க்கண்டபடி பாகுபாடு செய்யலாம்.

கேள்வி வகை.

| 'ஏன்' எத்தகையது | கேள்வியின் வடிவம் | கேள்வியின் பொருண்மை |
|---|---|---|
| காரணம் கூறும் "ஏன்" | காரணம்<br>பயன் | இயற்கை<br>தோற்றம்<br>பொருள் |
| ஊக்க நிலை கூறும் "ஏன்" (Motive) | உள்ளக்குறிப்பு | மனச்செயல் |
| நிலைநாட்டும் "ஏன்" | நிலைநாட்டுதல்<br>தருக்க நிலைஅறிவு | { சட்டம்<br>வழக்கம்<br>{ இனவகை<br>சட்டங்களின் இயைபு |

கேள்வியின் இயல்பு:— ஓர் ஆராய்ச்சியில் ஆறு வயதிற்கு உட்பட்ட குழவி எழுப்பிய 103 கேள்விகளில் 26 கேள்விகளே உயிரற்ற பொருள்களைப் பற்றிக் காரணம் கேட்கும் கேள்விகளாகக் கிடந்தனவாம். குழவி எல்லாவற்றையும் உயிருள்ளனவாக் கருதுவதாலேயே உயிரற்ற பொருள்களைப் பற்றிய கேள்வி மிக மிகக் குறைவாக எழக் காண்கிறோம். உயிருள்ள பொருள்களிடையே உள்ளக் குறிப்பின்படியன்றித் தற்செயலாக எழுதல் என்ற எண்ணமே குழவியின் உள்ளத்திலே தோன்றுவதில்லை. முடிவுநிலையைப் பற்றிய நோக்கமே உண்டு. எல்லாம் ஒன்றாக இயைபு பெற்று இருக்குமானால் எல்லாக் கேள்விகளும் ஒரே தன்மையனவாம் அன்றோ? சாதல் அல்லது இறத்தல் என்பது இங்கு விளங்குவதில்லை.

கடவுள் என்ற கருத்தும் நன்கு விளங்குவதில்லை. இறப்பு என்பதே தற்செயலாக எழுவனவற்றில் தலைசிறந்த செய்தி-யாம். அத்தகையனவற்றை விளக்க அன்றோ கடவுள் என்ற கருத்தும் பெரிதும் பயன்படுகிறது? ஆதலின், இறப்பு, கடவுள் என்பனவற்றைப் பற்றிய கேள்விகள் எழும்போதே தற்செயல், காரணகாரிய இயைபு முதலிய கருத்துக்கள் எழுவதற்கு இடம் உண்டு எனலாம்.

காரணநிலை :—

காரணம் என்ற கருத்து எழுதற்கு முந்திய நிலை ——> உண்மைக்-காரணம் கூறும் நிலை.

↑

ஊக்க நிலையைக் காரணமாகக் கூறும் நிலை ——> முடிவு நிலையைக் காரணமாகக் கூறு நிலை.

↓

மன நிலையைக் காரணமாகக் கூறும் நிலை ——> வழக்க முறையை நிலைநாட்டும் நிலை ——> தருக்க முறைப்படி நிலைநாட்டும் நிலை

மேலே காட்டிய படக்குறிப்பின்படி பலநிலைகளின் ஒற்றுமையும் விளங்குவது காண்க.

கேள்விகளின் பாகுபாடு :— 'ஏன்' என்ற வடிவில் இல்லாத கேள்விகளும் எழுகின்றன. கேள்விகளைப் பாகுபாடு செய்தால் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

(1) காரணம் பற்றிய கேள்விகள் :- "படகு மிதப்பதைச் சொல்" என வருதல் காண்க. இத்தகைய கேள்விகள் "செய்" என்ற வாய்ப்பாட்டு வினை வடிவாகவும் எழுகின்றனவாம். அனைத்துப் பொருள்களும் இயற்கையாக விளக்குதலின்றிச் செயற்கையாய்க் காரியப்பாடாக விளங்குகின்றன என்றும்,

இயங்கு நிலையாக விளங்குகின்றன என்றும், உயிருள்ளனவாக விளங்குகின்றன என்றும் குழவிகள் நம்புகின்றன என்பது இந்தக் கேள்விகளால் தெளிவாகின்றது.

(2) உள்பொருளைப் பற்றியும் வரலாற்றினைப் பற்றியும் எழும் கேள்விகள்:—இவை செய்திகளைப் பற்றிய கேள்விகளே ஆம்.

(3) மக்களது செயலைப் பற்றியும் சடங்குகளைப் பற்றியும் எழும் கேள்விகள்.

(4) இனம் இனமாகப் பிரித்துக் காட்டும் இனவகையைப் பற்றிய கேள்விகள்:— கணக்கிடும் கேள்விகள், பெயரைப் பற்றிய கேள்விகள் முதலியன காண்க. எந்த இனத்திற் சேர்ந்தது? எத்தனை? என்ன பெயர்? முதலியன காண்க.

இவற்றின் பயிற்சிநிலை:- இந்தப் பாகுபாட்டில் அடங்கிய-கேள்விகள் அடிக்கடி பயின்றுவரும் நிலையை ஆராய்ந்தால் காரணம் கூறும் கேள்விகள் மிக்கும், மக்கள் செயலைப் பற்றிய கேள்விகள் அவற்றிற்கடுத்து மிக்கும், இனவகையைப் பற்றிய கேள்விகள் இவற்றிற்கு அடுத்து மிக்கும் வரக் காண்கின்றோம். நாள் ஏற ஏற, "ஏன்" என்ற வடிவில் எழும் கேள்விகள் குறைகின்றன. உள்பொருள், வரலாறு முதலியனவற்றைப் பற்றிய கேள்விகள் முதலில் மிக மிகச் சிறிய அளவில் இருந்தவை பின்னர் மிக்கு வருகின்றன. முடிவில் உண்மைக் காரணத்தைப்பற்றிய கேள்விகள் எழுகின்றன. அகநோக்கம் நீங்கிப் புறநிலை நோக்கம் வளர்வதனை இந்த வளர்ச்சி விளக்-குதல் காண்க. முதலில் "ஏன்" என்ற வடிவமே எல்லா வகையான கேள்விகளின் பொது வடிவமாக வழங்குகிறது.

வேறுபாட்டுணர்வு மிக்குவர மிக்குவர இத்தகைய வடிவில் எழும் கேள்விகளின் எண்ணிக்கை குறைகிறது. இந்த உண்மையும் புறநிலைநோக்க வளர்ச்சியை வற்புறுத்துதல் காண்க.

•

கேள்வியும் விளக்கமே :— கேள்வி எழுவதே அறிவு வளர்ச்சியினைச் சுட்டுகின்றது எனலாம். சிக்கலை உணர்ந்தும் விடுவிக்க முடியாத போதன்றோ கேள்வி பிறக்கின்றது? ஆராய்ச்சி எழவேண்டுமானால் தன் நாட்டந்தான் யாது என உணரவேண்டும் அன்றோ? தனக்குத்தானே கேள்வி கேட்டால் அன்றோ விளக்கம் பிறக்கும்? மனச்செயற்பாடும் புதிதாக மிக்கு எழுந்து விளங்குகிறது; குறிப்பிட்டதொரு போக்-குடையதாகிறது; தற்போக்கு என்பது நீங்கி முற்போக்-குடைய தாகிறது. திருத்தமுற்றுப் புறநிலையோடு பொருத்த-முறும் வழி ஈதே ஆம். இவ்வாறு முட்டுப்பாடு தோன்றிக் கேள்வி எழும்போதன்றோ நனவிலி நிலைபோய் அனைத்தும் நனவுநிலை உணர்வாக விளங்குகின்றன?

முட்டப் பிறக்கும் ஒளி:— மூன்று வயதுவரை குழவி தான் விரும்பும் விருப்பிற்கும் உள்பொருளுக்கும் உள்ள வேற்றுமையை உணருவதில்லை. தற்காலத்தைப் பற்றிய நம்பிக்கைக்கு மாறாக, எதிர் காலத்தைப் பற்றிய நம்பிக்கை-களே பொய்யாகத் தோன்றுகின்றன. அறிவாராய்ச்சி என்றால் ஒன்றனைச் செயற்கையாக மனத்துள்ளே கட்டிப் பார்ப்பதே-யாம்; நேரே ஐம்புலனுக்குத் தோன்றுவதினும் வேறானதோர் உலகினை உள்ளத்தே அமைத்துக் காண்பதேயாம். மொழியும் ஆராய்ச்சிக்கு ஏற்ற நிலையை அடைகிறது. குழவியைச் சுற்றியுள்ள முதியவர்களுடைய குறிப்பு குழவியின் விருப்-போடு மாறுபடும்போதே இருமனமும் முட்டுகின்றன எனலாம்.

அப்போதுதான், குழவி தான் விரும்புவது ஒன்று; புற உல-கினில் உள்ளது அந்த விருப்பினும் வேறு என்று உணர்கிறது; அந்த உணர்வும் வற்புறுத்தப்படுகிறது. உள்பொருளின் இத்தகைய எதிர்ப்பு காரணமாக எதிர்ப்பின் நின்றும் உய்யப் பொய்பேசிக் குழவி மகிழ்கிறது.

"எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்து
உய்த்துணர்வில் லெனி னில்லாகும் - உய்த்துணர்ந்தும்
சொல்வன்மையின் றெனி னென்னாகு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து."-குமரகுருபரசுவாமிகள்

---

# 27. குழவி உலகு-அதன் பொருண்மை

(உள்ளுறை)

---

## I. மும்மயக்கு

வடிவும் பொருண்மையும் :- மொழிவழியாகக் குழவியது எண்ணத்தின் வடிவினைக் கண்டோம். இனி அந்த எண்ணத்-தின் பொருண்மையினைக் (Contents) காணுதல் வேண்டும். உலகினைப்பற்றிக் குழவியின் எண்ணம் என்ன? காரணம் என்றால் குழவி என்ன என்று கருதுகிறது? இத்தகைய ஆராய்ச்சியால் குழவியின் எண்ணத்தின் பொருண்மையை ஒரு சிறிது அறியலாம்.

உட்பொருள் கொள்கை :— உலகினை அறிவதென்றால், அதனைக் காண்கின்ற தன்னினும் வேறான அறியப்படு

பொருளாக உலகினைக் காணவேண்டும். காண்பதும் காணப்படுவதுமாம் இத்தகைய வேற்றுமை குழவியின் மனத்தே எழுதல் கூடுமோ? இந்த வேற்றுமை புறமுக நோக்கத்தின் பயனாக எழுவதாகும். "நம் அன்றுடைய எண்ணங்களிலும் மயக்க உணர்வுகளிலும் 'நான்' என்பது உட்புகுந்து அவை அத்தனையையும் நமது சிறப்பியல்பாக்கி விடுகிறது." என்ற உண்மை விளங்குதல்வேண்டும். பின்னர் அந்தச் சிறப்பியல்பாகிய "நான்" என்ற நோக்கப்பாட்டின் பயனை நீக்க முயலுதல் வேண்டும். தன் நிலையிலிருந்து நோக்கும் நோக்கம் போய்ப் பொதுநிலையிலிருந்து நோக்கும் நோக்கமே புறமுக நோக்கமாம். உள்பொருட் கொள்கையும் குழவியினிடம் உண்டு. "தான்" என்பது புறநிலையினும் வேறு என்ற எண்ணமே தோன்றாது தன் நோக்கத்தினையும், தன் எண்ணங்களையும் புறநிலை உண்மையோடு ஒருங்குவைத்து வேற்றுமை பாராட்டாது கொள்வதே உள்பொருள் கொள்கையாம் (Realism). "தன்னோக்கமாவது சிறப்புநிலை நோக்கமாய்த் தனக்கு மட்டும் இருப்பதாகிய முறைமைநிலை உண்மையே" எனக்கொள்ளாது, "சிறப்புநிலை பொதுநிலை என்ற வேற்றுமையையே அறியாது அதனைத் தனித்து இயங்கும் தனிநிலை உண்மை நோக்கமாகக் கொள்வதே தன்னோக்கம்" - இது உட்பொருட் கொள்கையாம். தனக்கு வலமுள்ள பொருள் என்றும் யார்க்கும் வலமுள்ள பொருளே என்று குழவி கருதுவதனை முன்னரே கண்டோம். அகநிலையைப் புறத்தேவைத்துக் காண்கின்ற இயல்பினையும் குழவியினிடம் காண்கின்றோம். தன் செயல் புறநிலைச்செயலே என அது கொள்வதும் உண்டு. சூரியனைச் சூரியன் என்ற பெயரிட்டு அழைப்பது அதன் செயலேயாம். ஆனால், குழவி அப்பெயர் தன் வாயிலும் மனத்திலும் உள்ளது எனக் கொள்ளாமல், சூரியனிலேயே உள்ளது எனக் கொள்கிறது; தனக்கோ எண்ணத்திற்கோ

உரிய இயல்பினை இவ்வாறு பிற வகையிலும் புறப்பொருளின் இயல்பாகக் கொள்கின்றது. பொருள்களைக் காணும்போது எழக்கூடிய உள்ளக் குறிப்பினைப் புறப்பொருளுக்கு ஏற்றுவதும், தான் விருப்புடன் காணும் பொருளைத் தன்னை விரும்பும் பொருளாகக் கொள்வதும் இயல்பே ஆம்.

எண்ணம் :— எண்ணம் என்பதனைப் பற்றிக் குழவிகள் கருதுவது என்ன? மனத்திற்கும் உடலுக்கும் வேற்றுமையறியாத பொருள் ஒன்று உண்டென்றால் அது குழவியேயாம். உணர்ச்சியையும் வேட்கையையுமே குழவி அறியும். தானென்ற எண்ணம் அங்குத் தெளிவாக விளங்குவதில்லை. தான் எண்ணுகிறது என்ற உணர்வும் அதற்கு எழுவதில்லை. "கால்கொண்டு நடக்கின்றாய்; எண்ணும்போது எதுகொண்டு எண்ணுகின்றாய்?" என்று குழவிகளைக் கேட்டு அவற்றின் கருத்தை அறியலாம். எண்ணத்தைப் பற்றிய கருத்து வளர்ந்து வருவதில் மூன்று வேறு நிலைகளைக் காணலாம். முதல் நிலையில் "எண்ணம் வாயில் இருந்து வருகிறது." எனக் குழவி கருதுகிறது. சிலபோது காதிலிருந்து வருகின்றது என்றும் கூறுகிறது. பழைய ஒலியின் நினைவு காதில் கேட்பதுபோல் தோன்றுவதால் இவ்வாறு கருதுகிறது. எனவே, முன்நிலையில் எண்ணம் என்பது சொல்லோடு ஒன்றாகி விளங்குகிறது. சொல்லோ, பொருளொடு ஒட்டிக்கொண்டு கிடக்கின்றதாகக் குழவி கருதுகிறது எனக் கண்டோம். இரண்டாம் நிலையில் "எண்ணம் தலையிலே எழுகிறது" எனக்குழவி கூறுகிறது. முதலிரண்டு நிலைகளிலும் எண்ணத்தை மூச்சு அல்லது குரல் எனக் கருதுவதும் உண்டு. காற்று, புகை, மூச்சு, குரல் என்பனவை ஒன்று ஒன்றாக மாறும் என்றும் கருதுகிறது. மூன்றாம் நிலையில் பொருளும் எண்ணமும் வேறு என்ற கருத்து உறுதியாகிறது. எண்ணம் காற்றினும் வேறாம்

என்றும், அது சடப்பொருள் அன்று என்றும் குழவி உணர்கிறது. பொருளினும் அதன் பெயர்வேறு சொல்வேறு என்றும் அது கூறுகிறது. கனவும் தலையில் எழுகிறது என்றும், ஆனால் தலையைத் திறந்தால் அது தோன்றாது என்றும் அது கூறுகிறது. இந்த மூன்றாம்நிலை பதினோராவது வயதில் எழுவதாம். முதல் இரண்டு நிலையிலும் இருவகை மயக்கங்கள் எழுகின்றன. எண்ணமும் உடலும் ஒன்று என மயங்கும் முதல்வகை மயக்கத்தின் காரணமாகக் குழவி எண்ணமும் குரலும் ஒன்றென மயங்குகிறது. அடையாளத்தையும், அடையாளத்தாற் சுட்டப் படுவதனையும் மயங்கும் இரண்டாம் வகை மயக்கத்தின் காரணமாக எண்ணத்தினையும் எண்ணப்படு பொருளையும் அது ஒன்றென மயங்குகிறது.

சொல் :— இவ்வாறே சொல்லையும் பொருளையும், குழவி, முதல் நிலையில் (7 - 8 வயது) வேறுபடுத்தாது ஒன்றென்றே கொள்கிறது. இரண்டாம் நிலையில் (7 - 11 வயது வரை) இந்த மயக்கத்தினை உணர்ந்தும் அதனால் அதனைத் தீர்க்க முடிவதில்லை. மூன்றாம் நிலையில் (10-11 வயதில்) உண்மையை அது உணர்கின்றது. பெயரையே உள்பொருள் என்று கருதுகிற கொள்கையும் (Nominal realism) குழவியின் கொள்கையே ஆம். முதல் நிலையில் (5-6வயது) "பெயரானது பொருளிலிருந்து எழுகிறது. பொருளைப் பார்த்ததும் பெயரை அறிகிறோம்." எனக் குழவி கருதுகிறது. இரண்டாம் நிலையில் (7-8 வயது) பொருளைப் படைத்த கடவுள் கற்பித்ததே பெயர் என்று எண்ணுகிறது. மூன்றாம் நிலையில் (9-10 வயது) "பெயரானது குறிப்பிட்ட ஒருவர் ஏற்படுத்தியதன்று; படைப்புடன் தொடர்புடையது அன்று; மரபாக வழங்கி-வருகின்றது." என்று கருதுகிறது. 10 ஆண்டுவரை பெயரை மாற்ற முடியாது எனக் கருதும் குழவி பின்னர் அதனை

மாற்றலாம் என எண்ணுகிறது. அவ்வாறு முடிவாக எண்ணுவதற்கு முன்னர்ப் "பெயரை இடையே மாற்றலாம்; ஆனால், மாற்றிப் பயனில்லை" என்று கருதுகிறது. 10 ஆண்டுவரை "எந்தப் பெயரும் பொருளின் எண்ணத்தினைத் தன்னுள்ளே கொண்டு விளங்குகிறது" எனக் குழவி நம்புகிறது. 10 - 11 ஆம் வயதில் பெயர்க்கும், கருத்திற்கும் ஒரு பொருத்தமுண்டு எனக் கருதுகிறது. 11 ம் ஆண்டிற்குப் பின் இத்தகைய நம்பிக்கைகள் மறையப் "பெயர் ஓர் அறிகுறியே" என்ற கருத்து வலிவடைகிறது.

மயக்க நீக்கம் :— எனவே, அறிகுறியும் பொருளும் ஒன்றென்ற மயக்கம் நீங்குவது 7 - 8 வயதிலாம். அகமும் புறமும் ஒன்றென்ற மயக்கம் நீங்குவது 9 - 10 வயதிலாம். பொருளும் எண்ணமும் ஒன்றென்ற மயக்கம் நீங்குவது 11-வது வயதிற்குப் பின்னும்.

கனவு :— கனவு என்பதனையும் சொல்லும் பெயரும் போலவே குழவி கருதுகின்றது. அகம் புறம் என வேறுபாடு காணமாட்டாது அகத்தெழு கனவினையும் புறநிலைப் பொருளாகவே அது கொள்கிறது. கனவின் பிறப்பு எங்ஙனம் நிகழ்கிறது? கனவிருக்கும் இடம் எது? கனவுகாணும் இந்திரியம் யாது? கனவு காண்பது ஏன்? இத்தகைய கேள்விகளுக்குக் குழவி தரும் விடை "யாது" என ஆராய்தலும் தக்கதேயாம். முதல் நிலையில் குழவி கனவினையும் உள்பொருள் எனவே கொள்கிறது. கனவுகண்டு திடுக்கிட்ட குழவியை ஓயவைப்பது மிக மிக அருமையாம். கனவிற் கண்ட இடத்திலேயே கனவு இருப்பதாகக் குழவி கருதுகிறது. இருப்பும் தோற்றமும் இவ்வாறு மயங்குகின்றன. சிலபோது கனவு காணும் அறையிலேயே கனவு விளங்குகின்றது என்றும் கருதுவது உண்டு.

கனவு இருளால் ஆகியது என்றும், ஒளியால் ஆகியது என்றும் நம்புகிறது. கனவு பிறப்பதனைப் பற்றியும் இவ்வாறே கருதுவதும் உண்டு. கனவு காண்கின்ற மக்களே கனவினை உண்டுபண்ணுகின்றனர் எனக் கருதுவதும் உண்டு. "கனவு காண்பது ஏன்?" என்றால் "தண்டனை" என்று சில குழவிகள் கூறுகின்றன. தோற்றம் தம்மைத் துரத்தி வருவதாக நினைக்கின்றன. கனவோ உணர்ச்சி மிக்கு விளங்குகிறது. தற்செயலாக நிகழ்வது என்க் குழவி ஒன்றனை நம்புவதற்கில்லை. கனவு கண்மயக்கே என உணர்ந்தும் கனவில் வரும் மக்களின் பகுதியே கனவெனக் குழவிகள் கருதுகின்றன. இது பெயரைப் பொருளின் உறுப்பெனக் கருதுவது போன்ற நம்பிக்கையாம். இரண்டாம் நிலையில் குழவி "கனவு உள்ளுக்குள் எழுகிறது" என்றும், "ஆனால் உடலுக்கும் தனக்கும் புறமே உள்ளது" என்றும் நம்புகிறது. "கனவின் பிறப்பிடம் உள்ளும் புறமும் ஆம்" எனக் கருதுகிறது; மூன்றும் நிலையில் குழவி அக இந்திரியத்தினையும் புற இந்திரியத்தினையும் வேறு பிரித்து உணர்கின்றது; எண்ணத்தினையும் வேறு பிரித்து உணர்கின்றது; எண்ணத்தினையும் கனவினையும் ஒன்று எனக் கருதுகிறது; "என் கண்ணெதிர் இருப்பது போலக் கனவு தோன்றுகிறது; ஆனால், என் தலையில் இருக்கிறது" என்று பேசுகிறது. முன்கண்டது போல இங்கும் அடையாளமும் அடையாளத்தாற் சுட்டப்பட்ட பொருளும் ஒன்றென்ற மயக்கமும், அகத்தினையும் புறத்தினையும் ஒன்றென்ற மயக்கமும், எண்ணமும் பொருளும் ஒன்றென்ற மயக்கமும் விளங்கக் காண்கின்றோம்.

## II. மாந்திரிகம்

அகம்புற் வேற்றுமை :— தனக்கும் உலகிற்கும் இடையே எல்லை ஒன்று விளங்குவதாகக் குழவிக்குத் தோன்றுவது

இல்லை. வசியநிலையால் (Participation) தானும் உலகமுமாம் இரண்டும் ஒன்றுபட்டிருக்கும் தன்மை மிகுந்துகொண்டே வருகிறது. தனக்குத் தோன்றுவது அனைத்தினையும் உண்மை எனக் கொள்ளும் குழவியின் கொள்கைக்கு ஏற்ப அதன் அடிப்படையான எண்ணத்தினை நாம் நாடுதல்வேண்டும். குழவி தன் எண்ணங்களை உணரவரும்போதும் அவை எவ்வாறு எழுகின்றன என உணருவதில்லை. அந்த எண்ணங்கள் அகத்தனவே ஆயினும் தனக்குள்ளே அன்றிப் புறத்தே இருப்பனவாக வைத்துக் காண்கிறது. இந்தக் கருத்தின் வளர்ச்சி நான்கு நிலைகளாக அமையக் காண்கிறோம். எண்ணம் பொருள் என வேறுபடுத்தாது அனைத்தினையும் பொருள் எனக் காணும் நிலையே முதல்நிலையாம். எண்ணம் பொருளினும் வேறு என உணர்ந்தும் அது பொருளிலே இருப்பதாகக் காணும் நிலையே இரண்டாம் நிலையாம். எண்ணங்களைப் பொருள் எனவே கருதி உடலினும் வெளிக்காற்றினும் இருப்பதாகக் கொள்ளும் நிலையே மூன்றாவது நிலையாம். எண்ணம் நம்முன்னேயே இருப்பதாகக் கொள்ளும் நிலையே நான்காவது நிலையாம்.

புறநிலை உணர்வு :— தன் நோக்கநிலை அகநிலையே அன்றிப் புறநிலையன்று என அறியாதபோது குழவி தானே உலகிற்கு நடுவாகி நிற்பதாகக் காண்கிறது. தன்னையும் புறவுலகினையும் வேறு பிரியாமையால் தன் செயல்களில் போல எல்லாச் செய்திகளிடையேயும் நோக்கமுண்டு (Finalism) என்றும், தன்னைப்போலப் பொருளனைத்திற்கும் உயிருண்டு (Animism) என்றும், பொருள்களிடையே வசியநிலை (Participation) உண்டு என்றும் கருதிவிடுகிறது. இவ்வாறு எண்ணிவரும்போது எண்ணியபடி நடவாததால் ஏமாற்றம் அடையுமிடத்திலும், முரண்பாடுகள் எழுமிடத்திலுமே தன்னையும் உலகையும் வேறு பிரிக்க அறிகிறது. தன் எண்ணம்

அகநிலையே அன்று; புறநிலையே என உணர்கின்றது. அதற்கு முன்னர்ப் புனிற்றிளம் பருவத்தில் குழவியின் நனவுநிலையில் உள்ளன அனைத்தும் புறநிலையாகத் தோன்றுகின்றன. அப்போது "தான்" என்ற தனியுணர்வு இல்லை எனலாம். இந்த உண்மையை நிலைநாட்ட மூன்றுவகைச் சான்றுகள் உள்ளன. (1) அந்தப்பருவத்தே அகநிலையாக எழும் எண்ணங்களையும், புறநிலைத் தாக்கலால் எழும் உணர்ச்சிகளையும் குழவி வேறுபடுத்துவதில்லை. (2) சாயல் பிடிப்பதும் தான் பிறர் என்ற வேற்றுமை எழாமையை வற்புறுத்துகின்றது எனலாம். தன் குரல் கேட்டுக் குழவி மழலையாட்டினைத் தொடங்குவது போலப்பிறர் குரலைக் கேட்டதும் மழலையாட்டினைத் தொடங்குகிறது. தன் செயலையும் எண்ணத்தையும் புறநிலையினும் வேறாகக் கொள்ளாமையால், இருவகை மழலையாட்டிற்கும் வேற்றுமை நமக்குத் தோன்றுவது போலக் குழவிக்குத் தோன்றுவது இல்லை. (3) குழவி தன் உறுப்புக்களின் உணர்ச்சியை வரையறை படுத்தி "இங்குத்தான் உறுப்பு எழுகிறது;" "இங்குத்தான் முடிகிறது" எனக் கூற முடிவதில்லை. அதனால், தனக்கு நோவெடுத்தால் அனைவருக்கும் நோவெடுப்பதாகக் கருதுகின்றது.

நான் :- தம் தந்தை எல்லாம் அறிந்தவர் எனக் குழவிகள் நம்புவதனை முன்னரே கண்டோம். அவ்வாறு கருதும்வரை தனக்கென ஒரு செயலும் தனக்கென ஓர் எண்ணமும் தனியே எழுவதாகக் குழவி கருதுவதே இல்லை. தன் தந்தை தன் எண்ணங்களை எல்லாம் அறிவார் என்றும் அது நம்புகிறது. இந்த நம்பிக்கை படிப்படியாகக் குறைந்து வரும்போதுதான் "தான்" என்ற உணர்ச்சியும், அகநிலை புறநிலை வேறுபாடும் அரும்புகின்றன. குழவி அப்போது தன்னைப் படர்க்கையிற் பேசத் தொடங்குகிறது. அங்குத் தன்னை வேறு பொருளாகவே

கருதுகிறது எனலாம். காண்பானும், காணப்படுபொருளும் வேருகப் பிரியும் வகை ஈதேயாம். ஆனல், "நான்" என வழங்கும் தன்மை இட வழக்கு இன்னும் எழவில்லை.

வசியம் :— வசியம் என்று மேலே கூறிவந்ததுதான் என்னே? இரு பொருள்கள் அல்லது தோற்றங்களிடையே விளங்குவதாக முதல் முதல் எழுகின்ற எண்ணமானது அங்கு உள்ளதாகக் கருதுகின்ற தொடர்பே வசியமாம். ஒட்டுநிலேயோ (அணேநிலே) காரணநிலேயோ இல்லாதபோதும், ஒன்றை-யொன்று இயக்கிவைக்கும் தொடர்பே இது எனக் குழவி கருதுகின்றது. மாந்திரிகம் என்பது இந்த வசியநிலே வழியாகப் புறநிலேயை மாற்றக்கூடும் என நம்பி முயலும் முயற்சியேயாம். வசியநிலேயைப் பயன் படுத்துவதே மாந்திரிகம் என்பதாயிற்று. பொருள்கள் எல்லாம் உயிருள்ளன எனக்-கொள்ளும் கொள்கையினும் இவை இரண்டும் வேரும். சூரியன் தானே இயங்குகிருன் என்பது உயிர்ப்பொருட் கொள்கையாம் (Animism). சூரியனேடு அணே (ஒட்டு) நிலேயோ (Contact) காரணநிலேயோ பெருத நாம் அதனே இயக்கும் ஆற்றல் பெற்று விளங்குவது உண்டானல் அது வசியநிலே என்றே கூறுதல் வேண்டும். அந்த வசியநிலேயைப் பயன் படுத்துவதன் பயனுக நாம் நடக்கச் சூரியன் இயங்குகின்ருன் என்பது மாந்திரிகக் கொள்கையே அன்றி உயிர்ப் பொருட்-கொள்கை அன்ரும்.

மாந்திரிகவகை :- மாந்திரிகம் பொருண்மை வகையாலும் வடிவ அமைப்பு வகையாலும் வேறுபடும். பொருண்மை வகையாம் மாந்திரிகம் அச்சம், கழிவிரக்கம், வேட்கை, இயற்கை நியதியின் உணர்ச்சி என்ற நான்கினேப்பற்றியும் எழும் முறையால் நான்கு வகையாம். காரண இயைபு

பற்றியும் மாந்திரிகம் நான்கு வகையாம். செயலுக்கும் பொருளுக்கும் உள்ள வசிய நிலையால் எழும் மாந்திரிகம் முதலாவதாம். ஒன்று இரண்டு என எண்ணிக் கொண்டே நடப்பதால், ஏதோ நிகழும் என நம்புவார் பலர். செயற்கை-மறியிற் போலச் செயலானது முதலெழுந்த நிலையில் இருந்து பிரிந்து வெற்றடையாளமாகிது எனலாம். எண்ணங்களுக்கும் பொருளுக்கும் இடையே உள்ள வசியநிலையால் எழும் மாந்திரிகம் இரண்டாவது வகையாம். எண்ணத்தாலேயே பிறரைக் கெடுக்கவோ, வாழ்விக்கவோ முடியும் என நம்புவோர் பலர். பார்வையாலும் அங்ஙனம் செய்யக்கூடும் என்ற கருத்தையன்றோ, "கண்ணேறு" அல்லது "திருஷ்டி தோஷம்" எனப் பொதுமக்கள் வழங்கி வருகின்றனர்? இந்த இரண்டுவகை மாந்திரிகத்தின் பயனும் செயலால் எழக் காண்கிறோம். இருபொருள்களுக்கும் இடையே உள்ள வசிய-நிலையால் எழும் மாந்திரிகம் மூன்றாவது வகையாம். ஒன்று கொண்டு மற்றொன்றை மாற்ற முயலுதல் காண்க. காலடி பட்ட மண் கொண்டு காலுடையாரைக் கெடுக்க முடியும் என நம்புவதும் காண்க. பொருளில் இருந்தும் பொருளிருக்கும் இடத்திலிருந்தும் இந்த மாந்திரிகச் சக்தி எழும் என நம்புவது உண்டு. "ஆன வீடு, ஆகாத வீடு" எனப் பேசிக்-கொள்வது காண்க. நோக்கமுடைமையில் தோன்றும் வசிய-நிலையால் எழுகிற மாந்திரிகம் நான்காவது வகையாம். "பொருள்கள் அனைத்தும் உயிருள்ளனவே ஆதலின் நோக்க முடையனவே ஆம்" எனக் கருதி ஒரு பொருளின் நோக்கம் மற்றொன்றை மாற்றமுடியும் எனக் கருதுதல் இதனாலேயே ஆம். "மழை வா வெயில் போ" என்று குழவிகள் பாடுவது தம் நோக்கமுடைமை காரணமாக மழையின் நோக்கத்தையும் தம் வழியே திருப்ப முடியும் என நம்புவதாலேயாம். தானே நாடுவாந்தன்மை இங்கு நன்கு விளங்குகிறது. பெற்றோரது

முற்றறிவில் நம்பிய குழவி பெற்றோர் சொற்படி தாம் நடப்பது போல உலகமும் நடக்கும் என நம்புகிறது. இயற்கைச் சட்டங்களின் வழியேயன்றிப் பெற்றோர்க்குக் கீழ்ப்படிந்து நடப்பதுபோன்ற ஒழுக்கமுறைச் சட்டங்களைப் பின்பற்றியே உலகம் இயங்குகிறது என்பது குழவியின் கருத்து.

மாந்திரிக வளர்ச்சி - ப்ரேஜர் :— மாந்திரிகத்தில் நம்பிக்கை எழுவது தான் எவ்வாறு? ஒப்புமை காரணமாகவும், உடன் நிகழ்ச்சி காரணமாகவும் நம் எண்ணங்கள் பல ஒருங்கு இயைய வருகின்றன. இவ்வாறு ஒன்றுவனவற்றைப் புறநிலை காரணமாக நம்பிப் பயன்படுத்த முயலுவதே மாந்திரிகம் என ப்ரேஜர் (Frazer) என்ற ஆசிரியர் கருதுகின்றார். மழை பெய்வது போலத் தண்ணீரை வாரி இறைத்தால் மழைவரும் என நம்புவது ஒப்புமையைக் காரணமாகக் கருதுதலாம். காலடி மண்ணும் காலுடையாரும் ஒருபோது ஒன்று சேர்ந்து நின்றதால் காலடி மண்ணை எரிக்கும் வகையால் காலுடையாரை எரியவைக்கலாம் என நம்புவது உடன் நிகழ்ந்தவற்றில் ஒன்றை மற்றொன்றன் காரணமாகக் கொள்ளுவதாம். ஆனால், பிரேஜரது கொள்கை மாந்திரிகத்தின் வெளி வடிவினை இவ்வாறு விளக்குகிறதே அன்றி, நம்பிக்கையின் வன்மையை விளக்குவதே இல்லை.

ப்ராய்ட் :— குழவி தன்னைத்தான் காதலிப்பதே இந்த வன்மைக்குக் காரணம் எனப் "ப்ராய்ட்" (Freud) என்பார் விளக்குகின்றார். தன் எண்ணத்தின் ஆற்றலைக் குழவி நம்புவது ஏன்? தான்வேறு, உலகம் வேறு என உணராத குழவி தன்னை ஆட்டிப்படைக்கும் புறநிலைக் காற்றினைப்போலத் தன்னுடைய மூச்சினையும், தன் எண்ணங்களையும் அகம் புறம் என வேறுபடுத்தாது ஒரே வகையாகக்கொண்டு, அகம் புறம் அனைத்தும்

ஆற்றலுடையன என நம்புகிறது. தனக்கு அகத்தோ, புறத்தோ தோன்றுவன அனைத்தினையும் உள்பொருள் எனவே குழவி கொள்வதனை (Realism) மறவாதிருந்தால் குழவி தன்னைத்தான் காதலிக்கிறது எனப் பேசத் தட்டில்லை. உலகம் தானாய், தான் உலகமாய் நிற்கின்ற குழவியின் நிலையை உணர்ந்தால் வசியமும் மாந்திரிகமும் நன்கு விளங்கிவிடும். "என் உடலின் செயல் உலகின் செயலே; என் இன்பமும் துன்பமும் என் அகநோக்கிற்கு ஏற்பத் தோன்றுவன அல்ல. அனைவர்க்கும் பொதுவாம் தனிநிலை உண்மைகளாய்ப் புறத்தே விளங்குவனவாம்" என்று கருதும் குழவி இவ்வாறன்றி வேறு-வகையாக உலகம் விளங்குகிறது எனக் கருத இடமே இல்லை. தான் இயங்கும்போது தன் காலின் செயலைத் தான் என்ற உணர்வோடு காணாது வேறாகக்கண்டு களிக்கும் குழவி, தான் படைத்த வான்மீனைக் கண்டுகளிக்கும் கடவுளே போலத் தோன்றல் காண்க. தன்னெதிரே புறப்பொருள்களிடையே தொட்டிலில் கட்டித்தொங்கும் பலநிறம் கொண்ட பட்டுக் குச்சு முதலியவற்றின் புறநிலை அசைவினைக் கண்டாலும் இப்புறச்செயல்களையும் தன் செயலைக்கண்டு களித்ததேபோலக் கண்டு குழவி களிக்கின்றது: 'தனது' 'பிறிதொன்றனது' என்ற வேற்றுமையே இல்லை என்பதாயிற்று. புறநிலைச் செயலையும் தன் அகநிலை இன்பத்தினையும் ஒன்றுபட்டுக் கிடப்பனவாகக் குழவி நம்புகிறது.

குழவியின் நிலை:-குழவியின்நிலையை ஊன்றிநோக்கினாலும் மாந்திரிகத்தின் பிறப்புமுறை வெளியாகும். குழவிபெற்றோரது செயலையும் தன்னையும் தொடர்ச்சியாய்க் கிடப்பனவாகக் கருது-கின்றதேயன்றி வேறு எனக் கருதுவது இல்லை. பசி எடுக்கும் வேளையறிந்து தாய் பால் ஊட்டுகின்றாள். தான் கூறியபடி-எல்லாம் பெற்றோர் நடந்து தனக்கு மகிழ்ச்சி ஊட்டக் குழவி

காண்கிறது. உலகம் தான் சொல்லியபடி நடக்கின்றது என்ற நம்பிக்கை வளர்கிறது. இவ்வாறு சுற்றுப்புறச்சூழல் தனக்கேற்ப இயங்குவது வசியநிலையை வற்புறுத்துவதாகவே குழவிக்குத் தோன்றுகிறது. மனமும் புறமும் வேறெனக்குழவி கருதாமையால் ஒவ்வொரு பொருளுக்கும் மனமென ஒன்றுண்டு என நம்புகிறது. ஆகையால், மனிதனது கட்டளையைக் கேட்டுப் பொருளனைத்தும் கீழ்ப்படியும் என அது கருதுவது இயல்பேயாம். புறப்பொருள்களை உயிருள்ளனவாகக் கருதுதலால் புறப்பொருளும் தன்நோக்கப்படி நடக்கும் என நம்பித் தான் நடக்க மேகம் இயங்குகிறது எனக் குழவி கருதுகிறது. எல்லோரும் குழவியின் எளியநிலைக்கு இரங்கி ஆறுதல் அளித்து வருதலின் கட்டளை இடும் இயல்பு குழவியினிடம் உறுதிபெறுகிறது. இதுதானே மாந்திரிகம்?

## III. சில கொள்கைகள்

உள்பொருட்கொள்கை:- குழவியின் அகத்தோ, புறத்தோ தோன்றுவன அனைத்தும் உள்பொருளே எனக் குழவி நம்புவதால் "தான்" என்பதற்கும், உலகிற்கும் வசியநிலை உண்டு என அது கருதலாம். தன்னிடத்து எழுகிற செயலைப் புறப்பொருளின் செயலாக அது கருதுகிறது. செயல்களனைத்தும் பொருள்களிடையே மூழ்கி ஆற்றல்படைத்து விளங்குவதாகத் தோன்றுகின்றன. பொருளோடு எண்ணங்கள் பற்றிக்கொண்டு கிடப்பனவாகவும் தோன்றுகின்றன. எனவே, பொருளும் எண்ணமும் வசியநிலை பெற்றன எனக் கருதுவதில் வியப்பில்லை. அடையாளங்களாம் அறிகுறிகளும் அடையாளத்தால் சுட்டப்பெறும் பொருளோடு ஒட்டிக்கொண்டு கிடக்கின்றன; ஆதலின், அவையும் வசியநிலை பெற்றன என்றும் குழவிகள் நம்புகின்றன. மழைவரத் தண்ணீரை இறைக்கும்

போது, இந்த மாந்திரிகச் செய்கை உண்மையான புறநிலைச் செயல்போன்று எழுந்து, சடங்கு நிலையை அடைந்து வெறும்-அடையாளமாகச் சுருங்கி நிற்பதால் பல முறையும் திருப்பித் திருப்பிச் செய்யப்படுகிறது. செய்தியோடு சடங்கு வகைச் செயலாம் அடையாளம் தொடர்புண்டு கிடப்பதால் அது காரணமாகிறது எனக் குழவி நம்புகிறது. இவ்வாறு அடை-யாளங்கள் பொருளின் பகுதியாக விளங்கிப் பின் வேறு பிரிகின்றன. மாந்திரிகச் செயல் ஓர் அடையாளமே. ஆனால், எண்ணங்களும் பொருளோடு ஒன்றுபட்டுப் பின் வேறாகப்-பிரியும் அடையாளங்களே ஆதல் வேண்டும். எனவே, மாந்திரிகம் என்பது அடையாள வகையான எண்ணங்கள் தோன்றுவதற்கு முன் எழுவதாம். தோற்றத்தை எல்லாம் உள்பொருள் எனும் கொள்கைக்கு ஏற்பக் குழவி தருக்க நியதிக்கும், பலவகையான காரணத் தொடர்பாட்டிற்கும் வேற்றுமை காண்பது இல்லை; ஆதலின், காரணத்தைப் பற்றிப் பேசுவதற்கும் இடம் எழாத முந்துநிலையே குழவியினிடம் விளங்கக் காண்கிறோம். அதனாலேயே, அனைத்தையும் ஒன்றெனக் காணும் கட்டுநிலை ஒற்றுமையும் விளங்கக் காண்-கிறோம். ஆகவே, மாந்திரிகம் இங்கு முடிவு நிலையாக விளங்-கவும் காண்கிறோம். நிழலை விளைவித்துவிட்டால் இரவினை விளைவிக்கலாம் எனக் குழவி நம்புவது இதனாலேயாம். பூனை கண்மூடினால் பூலோகம் இருளும் கதை இதுவே ஆம். எனவே, எவ்வகைத் தோற்றமும் உள்பொருளே என்ற கொள்கைப்படி மேலே கூறிய மாந்திரிகத்தை வளர்க்கும் மூன்று வகை மயக்கங்கள் எழுகின்றமையைக் காண்கிறோம்.

நனவுக் கொள்கை :- அனைத்துப் பொருளையும் உயிருடைய-தாகக் குழவி கருதுகின்றது எனக் கண்டோம். ஆனால், அனைத்துப் பொருளும் நனவுடையது எனக் குழவி உணர்-

கின்றதோ? அனைத்துப் பொருளும் நனவுடையன என்பது "நனவுக் கொள்கை" யாம். இதன் வளர்ச்சியினைக் காணல் வேண்டும். முதல் நிலையில் குழவி எப்பொருளும் நனவுடையது என்றும், அப்பொருள் செய்யும் முயற்றிநிலைக்கேற்ப நனவுநிலை உண்டென்றும் கருதுகிறது. இரண்டாம் நிலையில் (6 - 7 இல் இருந்து 8 - 9 வயது வரை) இயங்குவனவே நனவுடையன என நம்புகிறது. மூன்றும் நிலையில் (8 - 9 வயதிலிருந்து 11 - 12 வயது வரை) பிறர் இயக்க இயங்காது தானுக இயங்குவனவே நனவுடையன என அது முடிவு செய்கிறது. நான்காம் நிலையில் (12 வயதிற்குப் பின்னர்) உயிருள்ள பொருள்கள் மட்டுமே நனவு உடையனவாதல் கூடும் என உண்மையை அது உணர்கின்றது. பொருள்களுக்கு நனவு உண்டு எனும் கொள்கை ஒழுங்கு பெற்று விளங்கும் நம்பிக்கையன்று; இது குழவி கூறும் விளக்கங்களைப் பொருத்தமுறச் செய்யும் ஓர் அமைப்பு நிலையேயாம். குழவி இதனை வெளிப்படையாகக் கூறுவதில்லை. "மனத்திற் குறிப்பாக இப்படி நம்புகிறது" என்று மட்டுமே நாம் கூறலாம். "பொருள்களனைத்தும் நனவுடையன; உயிருடையன" என எழும் கொள்கையைச் சிதைப்பன மூன்றும்: கருத்தை முறைப்படுத்தும் ஒழுங்கு மனப்பான்மை ஒன்று; நனவுநிலை உணர்வு இரண்டு; சொற்கள் மூன்றும்.

உயிர்க்கோள்கை; இயக்கக்கோள்கை :— குழவி பல பொருள்களைப் பற்றிக் கொள்ளும் கொள்கையை ஆராய்ந்தால் இந்த உண்மை விளங்கும். உயிர் என்றால் குழவி "என்ன?" என்று கருதுகிறது. 6 - 7 வயது வரையுள்ள முதல் நிலையில் அனைத்தும் உயிருடையன எனக் குழவி கருதுவதோடு பயன்-வகையாக இலக்கணம் கூறும் இயல்பிற்கு ஏற்ப, உயிர் என்ற கருத்தும் இயக்கம் என்ற கருத்தும் ஒன்றெனவே குழவி

கொள்கின்றது. இரண்டாம் நிலையில், "உயிர் இயங்குவது ஏன்?" என்ற கேள்வி பிறக்கத் தானே இயங்குவனவும், பிறிதால் இயக்கப் பெறுவனவும் வேறு பிரிகின்றன. மூன்றும் நிலையில் தாமாக இயங்குவனவே உயிருடையன என்ற கொள்கை வலியுறுகிறது. நான்காம் நிலையில் "அவற்றுள்ளும், தாவரங்களும்பிராணிகளுமே உயிருடையன" என உண்மையைக் குழவி உணர்கிறது. இந்தப் பல-நிலைகளை உணர்வதால் குழவியை வளர்க்குமுறை நன்கு விளங்குகிறது. அந்த அந்த நிலைக்கு ஏற்பக் கற்பியாமற்-போனால், குழவிகள் தாம் கற்பனவற்றை அந்த அந்த நிலையில் விளங்கும் தம் நம்பிக்கைக்கு ஏற்பத் திருத்தி விடுகின்றன.

செயற்கைக் கோள்கை :- வேறு சில பொருளைப் பற்றிய கருத்துக்களையும் காண்க. "அனைத்துப் பொருளும் இயற்கை-யாக விளங்காது செயற்கையாக எழும் காரியப்பாடுகளே" என்ற செயற்கைக் கொள்கையினைக் (Artificialism) குழவியின் நம்பிக்கை விளக்கக் காண்கிறோம். "சூரியன் சந்திரன் முதலிய வானச்சுடர்கள் மனிதர் முயற்சியால் எழுவன" என்றே முதல் நிலையில் குழவிகள் கருதுகின்றன; "எண்ணெயில் தோய்த்து எரியவிட்டு அன்னோர் வீசிய பந்துக்கள்" என்று குழவிகள் கருதுகின்றன. 'கடவுளே இங்ஙனம் செய்கின்றார்' என எண்ணுவதும் உண்டு. இரண்டாம் நிலையில் "பொருள்கள் பாதி இயற்கையும், பாதி செயற்கையுமாம்" என்று குழவிகள் கருதுகின்றன. "சூரியன் மேகத்தின் இறுக்கம்" எனப் பேசுங்குழவிகள், அம்-மேகத்தைச் செயற்கையாகப் "புகை கூண்டிலிருந்து எழும் புகை" எனக் கூறுகின்றனவாம். மூன்றும் நிலையில் "மக்களது செயல் அன்று, இவற்றின் காரணம்" என உணர்ந்ததும் ஏதேனும் ஓர் இயற்கைக் காரணத்தைக் கண்டுபிடித்துக்

குழவிகள் கூறுகின்றனவாம்; அல்லது ஒன்றும் கூருது விடுகின்றனவாம்.

## IV. குழவியின் எண்ணங்கள்

வானம் :— முதலில் பொழுதுநிலை நூலுக்கும் (Meleorology) வானநூலுக்கும் குழவி வேற்றுமை உணர்வதில்லை. முதல் நிலையில் (2 முதல் 6 வயது வரை,) குழவி "வானம் மலையின் உச்சியில் உள்ள கூரையாம்" என்கிறது. இரண்டாம் நிலையில் 'வானம் மேகமே' என்றும், 'மேகம் புகையே' என்றும் அது கருதுகிறது. மூன்ரும் நிலையில் "வானம் தானுக வருவதொன்று" என அது நம்புகிறது.

இரவு :— இரவு என்பதனைப் பற்றியும் முதல் நிலையில், "மக்கள் தூங்குவதால் செயற்கையாக எழுவது" எனக் குழவி நம்புகிறது. இரண்டாம் நிலையில் "இரவு கருமேகம் என்ற வகையில் இயற்கை" எனக் கொள்ளினும் "மனிதனது இயக்கத்தால் எழுவது என்ற வகையில் செயற்கையாம்" என்றும் அது கொள்கிறது. மூன்ரும் நிலையில் குழவி "பகலைத் தடுப்பதே இரவு" எனக் கருதுகிறது. நான்காம் நிலையில் "சூரியன் மறைந்த பொழுதினையே இரவென்கிறோம்" என உண்மையை அது உணர்கிறது.

மேகம் :— அங்ஙனமே, மேகத்தை முதல் நிலையில் (5-6 வயதுவரை,) "கடவுளோ மனிதனே செய்ததொரு கெட்டிப் பொருள்" என்று குழவி நம்பகிறது. இரண்டாம் நிலையில் (6 - 9 வயதுவரை) "வீட்டுமேல் எழும் புகையே மேகம்" என்கிறது. மூன்ரும் நிலையில் "இறுகிய காற்றே மேகம்" என்று அது நம்புகிறதேயன்றி ஆசிரியர் இதற்கு மாருகக் கற்பிப்பனவற்றை நம்புவதில்லை.

மின்னும் இடியும் :— இடியையும் மின்னலையும் முதல் நிலையில், "மலையிலோ வானத்திலோ சம்மட்டி கொண்டு அடித்தெழுப்பப் பெறுவன" என்று குழவி நம்புகிறது. இரண்டாம் நிலையில் "மேகம் முட்டுதலால் எழுவன" என்று அது கூறுகிறது; "சூரியனால் எழுவன" என்றும் கூறுவது உண்டு; "இவ்வாறு இயற்கையாயினும் மேகம் புகையாம் செயற்கை" என்றும் நம்புகிறது. மூன்றும் நிலையில் "இவை இயற்கை" என்று அது பேசுகிறது; "மின் சாரத்தின் திரு-விளையாடல்" என்றும் குழவி கருதுகின்றது.

மழை :— மழையைப் பற்றிக் குழவிகள் கருதுவதனை ஆராயும்போது, முதல் நிலையில் "கடவுள் துப்புவதே மழை" என்று குழவி கருதுகிறது என நன்கு விளங்குகிறது. இரண்டாம் நிலையில் "மறைமுகமான செயற்கை" என்று நம்பும் குழவிக் கொள்கைகள் வெளியாகின்றன. "வீட்டின் புகையே மேகம்" என்றும், மழையும் மேகமும் காரியகாரணத் தொடர்புடையன" என்றும் குழவிகள் நம்புகின்றனவாம்.

ஆலங்கட்டி :- ஆலங்கட்டியை முதல் நிலையில் "உயரத்தே மக்கள் செய்யும் பொருள்" எனக் குழவி நம்புகிறது. இரண்டாம் நிலையில் "பறவையின் தூவிகள் காற்றில் பறப்பது போலக் காற்றில் எழும் தூவிகளே ஆலங்கட்டிகள்" என்று கூறுகிறது. மூன்றும் நிலையில் "ஆலங்கட்டி இறுகிய நீரே" என்று குழவி கருதுகிறது.

நீர் நிலைகள் :— ஆறு ஏரி கடல் முதலியவற்றை முதல் நிலையில் "மக்களோ கடவுளோ தோண்டியனவே இவை" என்று குழவிகள் நம்புகின்றன. இது சகரர் கடலைத்தோண்டிய கொள்கையை நினைப்பூட்டுகிறது. இரண்டாம் நிலையில்,

"நிலம் மட்டும் தோண்டப் பெற்றது" என்றும் "கிணற்றைத் தோண்டிய போது எழுவது போல நீர் இயற்கையாகவே எழுகிறது" என்றும் நம்புகின்றன. மூன்றும் நிலையில் "இவை அனைத்தும் இயற்கையே" என்று குழவிகள் நம்புகின்றன.

கட்டைமரம் :- கட்டையையும் மரத்தினையும் ஒன்றெனக் கருதும் குழவிகள் முதல் நிலையில், "கட்டை என்பது உடைந்த தட்டு முட்டுக்களிலிருந்து சிதறியதே" என்றும், "மனிதன் நட்ட கொம்பே மரமாக, அதிலிருந்து வருவதே கட்டை" என்றும் கருதுகின்றன. இரண்டாம் நிலையில், "கட்டை மரத்திலிருந்தும் மரம்விதையிலிருந்தும் வருமேனும் மனிதன் நட்டதே மரமாம்; ஆதலின் மரம் மனித முயற்சியின்றி இயற்கையாக எழாது" என்று குழவி நம்புகிறது. மூன்றும் நிலையில் "மரம் இயற்கையாக வளர்வது" என்று குழவிகள் நம்புகின்றனவாம்.

இரும்பு முதலியன:- இரும்பு, துணி, காகிதம் முதலியனவற்றைக் குழவி முதல் நிலையில் "தாமாகக் கிடப்பன" என்று கருதுகிறது. "ஒன்றிலொன்று எழுகின்றன அல்லது தாமே ஒன்று சேர்ந்து உண்டாகின்றன" எனவும் நம்புகிறது. அது எந்திரத்தை ஒரு மந்திரப்பெட்டி எனக் கொள்கிறது. இரண்டாம் நிலையில் "துண்டுகள் ஒன்றுக ஒட்டிக்கொள் கின்றன" என அது நம்புகிறது. முதல்நிலையில் குழவி, "பாறையும், மலையும் கல்லால் ஆனவை" என்றும் "மனிதன் இயற்றியவை" என்றும் கருதுகிறது. இரண்டாம் நிலையில், "கல்லும் மலையும் தண்ணீரும் மண்ணும் அணுவால் ஆகியவை" என்றும், "இவற்றில் சில, தாமே விளைந்தனவும் ஆம்" என்றும், குழவி நம்புகிறது.

## V. செயற்கையின் தோற்றமும் மறைவும்

கோள்கைகளின் ஒருமை :- குழவி, அனைத்தினையும் தன் போன்றோர் செய்த செயற்கைப் பொருளாகக் கருதும் செயற்கைக் கொள்கையைச் (Artificialism) சிறிது உற்று நோக்குதல் வேண்டும். குழவியின் எண்ணம் கனவிற்கும் தருக்கமுறை எண்ணத்திற்கும் இடைநின்று விளங்கும் இயல்புடையது எனலாம். குழவியின் எண்ணம் கற்பனை நிரம்பியதும், செயல் வடிவினதுமாம் என முன்னரே கண்டோம். ஒருவன் பொருட்டுச் செய்யப் பெற்றதனை ஒருவனால் செய்விக்கப் பெற்றது எனப் பேசுவது இயல்பாதலின், தன் பொருட்டுச் செய்யப்பட்டவற்றைத் தன் பெற்றோரால் செய்யப்பட்டனவாகக் குழவி கருதுகின்றது. உயிர்ப் பொருள்கள் நோக்கமுடையன; ஆதலின், உயிர்க்கொள்கையே (Animism) நோக்கக் கொள்கையும் (Finalism) ஆம். "பொருள்கள் நோக்கமுடையன" என்ற கருத்திலிருந்து "பொருள்கள் நனவுமுடையன" என்ற கருத்தும் மெல்ல எழுவது இயல்பன்றோ? "ஒவ்வொரு பொருளும் இருப்பதற்குத் தனித்தனி நோக்கமுண்டு" என்றும், "ஒவ்வொன்றும் அந்தநோக்கத்திற்கு ஏற்பச் சிறப்புவகையில் இயங்கித் தொண்டு செய்கின்றது" என்றும் குழவி கருதுகிறது. ஆதலின், உலகமே கட்டளையும், கட்டளை இடுவாருமாகக் குழவியின் கண்ணுக்குப் புலனாகிறது. மேலே கூறியவாறு உயிர்க் கொள்கையும் செயற்கைக் கொள்கையும் ஒன்றற்கு ஒன்று உதவுகின்றன. நோக்கக் கொள்கையும் செயற்கைக் கொள்கையையே வற்புறுத்தலும் காண்க.

கேள்விகள் :— குழவி கேட்கும் கேள்விகளும் இங்குக் கூறியதனை வற்புறுத்தும். "ஏன்?" எனக் குழவி கேட்கும்

போது, புறநிலை இயற்கைத் தோற்றத்தினையும் அகநிலைக் குறிப்பாம் மனநிலையினையும் அது வேறு பிரிப்பது இல்லை. "ஏன் சிரிக்கிறாய்?" என்பதுபோல, "ஏன் எந்திரம் ஓடுகிறது?" என்றே கேட்கிறது. "எப்படி?" என்ற கேள்வி அங்கு எழுவதே இல்லை. "எதன்பொருட்டு?" என்பதே குழவி கேட்கும் கேள்வியாம். இதனையே "ஏன்?" என்ற சொல் கொண்டும் அது கேட்கக் காண்கிறோம்.

பிறத்தல்:- செயற்கை என்ற கருத்தும், 'குழவி பிறத்தல்' என்ற கருத்தும் எவ்வாறு குழவியின் உள்ளத்தே கிடக்கின்றன? முதல் நிலையில், "பிறப்பதற்கு முன்னரே குழவி இருந்தது" என்று குழவிகள் நம்புகின்றன. ஆனால், "அவை எங்கே இருந்தன?" என்பதே அவைகள் கேட்கும் கேள்வி. வேறு சில குழவிகள், பெற்றோரே "குழவிகளைப் பொம்மை போல ஆக்கிவிடுகின்றனர்" எனக் கருதிக் "குழவிகள் எங்ஙனம் செய்யப் பெறுகின்றன?" என வினவுகின்றன. உயிர்ப் பொருளைச் செயற்கையாகச் செய்து அமைப்பது இந்த நிலையில் முரண்பாடாகத் தோன்றுவதில்லை. உயிர்க்கொள்கையும் செயற்கைக் கொள்கையும் அவ்வாறு ஒன்றாக இயைந்து விடுகின்றன. வரலாற்று வேட்கை முதலில் தன்பிறப்பினை அறியும் அவாவாய்ப் பூத்து, இனத்தின் பிறப்பினை அறியும் அவாவாய்க் காய்த்துப் பிறபொருள்களின் பிறப்பினை அறியும் அவாவாகப் பழுத்து முற்றுகிறது.

செயற்கைநிலை :— 'தானாக எழும் செயற்கை' என்ற கருத்து குழவியின் மனத்தே வளரும் போக்கினைக் காண்பதும் குழவியின் உள்ளத்தை விளக்கிவைப்பதாம். முதல் நிலையில் தோன்றுவது காரணநிலை அன்று; இடநிலையே தோன்றுகிறது. இங்கு எழும் செயற்கைநிலை குழம்பித்

தோன்றம் செயற்கைநிலையாம்; தானும் குழவியும் வேறு-பிரியா நிலையாம். ஒவ்வொரு செயலும் இயற்கைத்தோற்றமாக விளங்குவதோடு அகநிலைக் குறிப்போடு கூடிய மனச் செயலாகவும் விளங்குகிறது. செயல்கள் எல்லாம் நோக்கம் உடையனவாகவும், மனிதர்க்கு அடங்கி நடப்பனவாகவும் தோன்றுகின்றன எனலாம். 'மாந்திரிகநிலைச் செயற்கையே' இங்கு எழுகிறது. இரண்டாம் நிலையில், புராணவகைச் செயற்கை (Mythological) நிலவுகிறது. இது புராணக்கதை போன்ற நிலையாம். செயற்கையும் பிறப்பும் இங்கு ஒப்புமைகொண்டு விளங்குகின்றன. மூன்றும் நிலையில் (7-8 இல் இருந்து 9-10 வயதுவரை) திறம்பெறு செயற்கைநிலை விளங்குகிறது. எந்திரக் கொள்கையும் எழுகிறது. உயிர்க்கொள்கையும் செயற்கைக் கொள்கையும் இங்கு முரண்படுகின்றன. ஒழுக்கச் சட்டத்-திற்குப் பதிலாக இயற்கை நியதி என்ற கருத்து எழுகிறது. நான்காம் நிலையில் (9 - 10 வயதில்) அடிப்படையான செயற்கை நிலை விளங்குகிறது. நோக்கமுடைமை, பிறப்பு, இயற்கை ஆற்றல் என்ற கருத்துக்கள் தனித் தனி வேறு பிரிகின்றன.

தனிக்காரணம் சமுதாயகாரணம்:- உயிர்க்கொள்கையின்-படியும், மாந்திரிகக் கொள்கையின் படியும், ஏதேனும் ஓர் உள்ளக் குறிப்புப் போன்ற தனிக்காரணம் எழலாம். செயற்-கைக் கொள்கையின் படி சமுதாய காரணமே சிறந்தெழக் காண்கின்றோம். சமுதாய காரணங்கள் இருவகையாம். பெற்றோர்க்கும் குழவிக்கும் இடையே குழவி பெற்றோரையே எதற்கும் நம்பி நிற்பதால் எழும் தொடர்பு ஒரு வகையாம்; பெற்றோரிடம் குழவிக்கு இருக்கும் பக்தி இரண்டாவது வகையாம். பொருண்மை வகையால் அவர்களே முதல் என நம்புவதால், அவர்களே அனைத்தினையும் செய்தனர் எனக் குழவி நம்புவதும் இயல்பேயாம். பிறப்பினைப் பற்றி எண்ணும்

போது புராணவகைச் (Mythological) செயற்கைக் கொள்கை வளர்கிறது. பெற்றோரை, எல்லாம் செய்யவல்லவர்களாகவும் குழவி கருதுகின்றது. பெற்றோர் எங்கும் நீக்கமற நிறைந்து நிற்பதாக நம்புவதனாலேயே, குழவிகள் தாம் தவறு செய்யப் புகும்போது தம்மைப் பெற்றோர் பார்த்துக் கொண்டிருப்பதாக நம்பி நடுங்குகின்றன. இவ்வாறு பெற்றோரைக் கடவுளாகக் கொள்வதால் அவர்களிடம் பக்தியும் எழுகின்றது. ஆதலினாலேயே, அந்தப் பருவத்தில் பெற்றோரினும் வேறாகக் கடவுளைப் பற்றிப் பேசுவதனால் பயன் ஒன்றும் விளைவதில்லை. அங்கே கடவுளின் தெய்வநிலைக்கு எல்லை உண்டு. கடவுளையே தந்தையாகக் குழவி கொள்கிறது.

உடல் காரணம் :— குழவி தன்னைத்தான் காதலிக்கிறது என்றும் கண்டோம். தன் உடல் வகையால் தானே காரணம் என்ற உணர்ச்சியும் குழவியினிடம் உண்டு; தன் கைவகையால் தான் பல செயல்களுக்குக் காரணம் என்ற உணர்ச்சியும் உண்டு. 'காற்று மூச்சே' எனக் குழவி கூறுவதனைக் கண்டோம் அன்றோ? எண்ணமும் செயல் வடிவமாகக் குழவியிடத்தே எழுதலின் எண்ணமும் தசை இயக்கமாக விளங்குவது வியப்பன்று. குழவி தான் பேசும் மொழியில், 'செய்தல்' 'உருப்படுத்தல்' என்ற வினைகளைப் பயன் படுத்தும் போதும் செயற்கைக் கொள்கை கொழுமையாய் வளர அன்றோ எருவிடுகின்றது?

செயற்கையின் மறைவு :— இந்த நிலை மாறுவது எங்ஙனம்? குழவியின் அழுகை முதலியன அது எண்ணிய முடிபினை விளைவியாதபோது, "அனைத்தையும் தான் செய்ய முடியும்" என்ற வடிவமாக எழுந்த எண்ணம் குலைகிறது. 'தானே நடுவாந்தன்மை' வலிகுன்றி ஒழிகிறது. தனி நிலைக்

காரணங்களை நம்பும் மனப்பான்மையும் மாறுகிறது. அகநிலை நோக்கம் இவ்வாறு பயனற்றுப்போகும் போது, புறநிலை நோக்கம் விரிந்து எழுகிறது. இதன் காரணமாக வசியநிலை எண்ணமும் தானே மறைகிறது.

உயர்நிலை எண்ணம் :- தானுகவே குழவி அனுபவத்தாற் பெறும் உயர்நிலை எண்ணங்களும், இந்த முடிவிற்கு உதவுகின்றன. பொருளொடு ஒன்றும் ஒற்றுமை வழியே உண்மையான காரணநிலையை உணருவது முதலாவது உயர்நிலை எண்ணமாம். இறுக்கம் நெகிழ்வு; குவிவு விரிவு ; (ஸ்ருஷ்டி ஸம்ஹாரம்) என்ற இவற்றின் வழியே காரணநிலை அடையும் வடிவம் இரண்டாவது கருத்தாம். அணுவே அனைத்திற்கும் அடிப்படையாகிய முதற்காரணம் என்ற அணுவாதத்தின் வழியே பௌதிகப் (Physical) பொருள்களிடையே ஒற்றுமையைக் காண்பது மூன்றுவதாம். மேகமும் மழையும் போல நிற்கும் காரணகாரிய ஒற்றுமைப்பாட்டினை அறிவது நான்காவதாம். ஆனால், காரணம் இறந்தகாலநிலை எனத் தோன்றுதலின், இறந்தகாலத்தின் உண்மையை இங்கு உணர்வதும் காண்க. "தொலைவுநிலை நிகழ்ச்சிகளும் உண்டு." என்பதும் விளங்குகிறது. பிறப்பு என்ற கொள்கையிலிருந்து இந்த ஒற்றுமைக் கொள்கை எழுகின்றது எனலாம்.

## VI. காரண நிலைகள்

காரண ஆராய்ச்சி :- இயற்கைக் காரணத்தினைப் பற்றிக் குழவி கொள்ளும் கருத்தினை ஆராய்வதும் விரும்பத்தக்கதாம். பெட்டியின் மூடியில் கயிறு ஒன்று கட்டி அதில் காலணுவை வைத்து மேலும் கீழும் வரச் சுற்றினுல் காசு விழாமையையும், பந்தினைத் துளைத்துக் கன்னத்தில் வைத்தழுத்திப்பின் விட்டால்

அது உருண்டையாகத் திரளுவதனையும், மேலே கூறிய மூடியில் காசு வையாமல் பக்க வாட்டத்தில் சுற்றினால் மூடி மேல் எழுவதனையும், கைமேல் ஊதுவதனையும், கையை அழுத்திக் காற்றெழுப்புவதனையும் குழவிக்குக் காட்டிக் காரணம் கேட்டுப் பியாழே (Piaget) ஆராய்ந்தார்.

கை அழுத்தக் காற்றெழுதல்:- கையினை அழுத்திக் காற்று எழுப்பியபோது "காற்று எங்கிருந்து வருகிறது?" என்ற கேள்விக்குக் குழவிகள் தரும் விடை வயதிற்கு ஏற்ப மாறி-வருவது காரணக் கொள்கையின் வளர்ச்சியினை விளக்கக் காண்கிறோம். "அறை மூடியிருந்தாலும், கையை அழுத்தும்-போது உள்ளிருக்கும் காற்று அறைக்கு வெளியுள்ள காற்றை உள்வாங்குகிறது" என முதலாவது நிலையில் (6 வயது) குழவி கூறுகிறது. ஒப்புமையே ஒற்றுமை என மயங்குகிறது என்பதாயிற்று. இரண்டாவது நிலையில் (7 வயது), "கையை அழுத்துவதே காற்றினை எழுப்புகிறது" என்று நம்பி "உடம்பினுள் இருந்த தோலின் வழியே காற்று வெளி-வருகிறது" எனக் குழவி கூறுகிறது. இயங்காக்காற்று உடலுள் இருப்பதாக அது நம்புகிறது. மூன்றும் நிலையில் (8 வயது) "கையைக் காற்று எழுப்புகிறது" எனக் குழவி கருதுகிறது. "கையின் இயக்கமே காற்றை விளைவிக்கின்றது" என அது நம்புகிறது. நான்காம் நிலையில் (9 வயது) "அறையிலேயே காற்றுண்டு" என்றும், "கை அதனை வாங்கி அனுப்புகிறது" என்றும் அது முடிவு செய்கிறது.

துளைப்பந்து திரளுதல் :— குத்திய பந்து திரளுவதனைக் கண்ட குழவி, முதல் நிலையில் (5 வயது) "பந்திலிருந்தும், வெளிப் புறத்திலிருந்தும், மூடிக்கிடக்கும் பலகணிவழி-யாகவும், காற்று வருவதால் பந்து திரள்கிறது" எனக் கூறு-

கிறது. இரண்டாம் நிலையில் (6 வயது) "பந்து இயற்கையாகவே காற்று நிரம்பியது" என்றும், "அதனை அழுத்தியதும் காற்று வெளியே போய்ப் பின்னர் அழுத்தம் நீங்கியதும் வந்து உள்ளே புகுவதால் பந்து திரளுகிறது" என அது கருதுகிறது. மூன்றும் நிலையில் "அறையிலிருந்தே காற்று வருகிறது" எனக் கருதினாலும், "காற்றில்லாத அறையில் பந்தினை அழுத்தினாலும் காற்று வந்தே தீரும்" என அது நம்புகிறது. நான்காம் நிலையில் (9 வயது) உண்மையாண கொள்கை விளங்குகிறது.

சுற்றலால் காற்று எழல் :- "பெட்டியைச் சுற்றும்போது காற்று எழுவதேன்?" என்பதனை விளக்கவரும் குழவி, முதல் நிலையில் (5½ வயது) "பெட்டியே காற்றினை விளைவிக்க அந்தக் காற்றும் புறக்காற்றினை விளைவிக்கிறது" எனக் கூறு-கிறது. இரண்டாம் நிலையில் (7 வயது,) "காற்றில்லாத அறையில் பெட்டியே காற்றை விளைவிக்கின்றது." என அது நம்புகிறது. மூன்றும் நிலையில் (9 வயது,) "காற்றை அப்புறப்-படுத்துவதேயன்றி உண்டாக்குவது அன்று" எனக் குழவி கருதுகிறது.

பந்தின் இயக்கம்:- "பந்து இயங்குது ஏன்?" என்பதனை விளக்குவதில், ஐந்து நிலைகள் தோன்றுகின்றன. முதல் நிலையில், இந்தக் கேள்வியை உணர்ந்து கொள்ள மாட்டாமல் "எறிந்ததால் இயங்குகிறது" எனக் குழவி கூறுகிறது. இரண்டாவது நிலையில் (7 வயது,) "பந்தே காற்றினை விளை-விக்கப் பின்னர்ப் புறத்திலிருந்து வரும் காற்றும் உதவுதலால், பந்து இயங்குகிறது" என அது நம்புகிறது. மூன்றும் நிலையில், (9 வயது,) "பந்து காற்றினை விளைவிக்க அது பந்தினை உந்துகிறது" எனக்கருதுகிறது. நான்காம் நிலையில் (10 வயது)

"பந்து காற்றைத் தள்ளக் காற்றுப் பின்னுக அடித்துப் பந்தினை உந்துகிறது" என அது நம்புகிறது. ஐந்தாவது நிலையில், "பந்தினைத் தள்ளுவதே அதனை உந்துவதற்குப் போதும்" என்றும், "காற்றானது பந்து ஓடுவதனைத் தடுக்கின்றது" என்றும் குழவி கூறுகிறது.

சுற்றும் பொருளில் காசு வீழாமை:- "மூடியைச் சுற்றும்போது காசு ஏன் விழுவதில்லை?" என்று கேட்டால், முதல் நிலையில் (6 வயது) "மூடிக்குப் பக்கங்கள் சுவர்போல இருத்தலின் காசு விழுவதில்லை" எனக் குழவி விடைகூறுகிறது. இரண்டாம் நிலையில், "மூடிமிக விரைவாகச் சுற்றுவதால் காசு விழப் பொழுதில்லை" என அது கருதுகிறது. மூன்றும் நிலையில், "சுற்றும்போது எழும் காற்று மூடிக்குள்ளே புகுந்து காசினை விழாதபடி தடுக்கின்றது" என அது விளக்குகிறது. நான்காம் நிலையில், "சுற்றும்போது, சுழலும் மூடி, காற்றை மோதித் தள்ளுகிறது." என்றும், "இது ஒரு காற்றோட்டத்தினை எழுப்பிவிட அது காசினை விழ ஒட்டாமல் தடுக்கின்றது" என்றும் குழவி நம்புகிறது.

சுற்றுவதால் பொருள்மேல் எழல் -: "மூடியைச் சுற்றினுல் மேல் எழுவதேன்?" என்பதனை விளக்கவரும் குழவி, முதல் நிலையில் (6 வயது,) "மூடி விரைவாகச் சுழலுவதால் மேல் எழுகிறது" என்று கருதுகிறது. இது நிகழ்ச்சியை இருந்தபடி கூறுவதே அன்றி விளக்கம் கூறுவதன்றும். இரண்டாம் நிலையில் (8 வயது) குழவி "சுழலும் மூடி, காற்றினை எழுப்புவதனுல், அது மேல் எழுப்புகிறது" எனக்கூறுகிறது. மூன்றும் நிலையிலே (8½ வயது,) "மூடி காற்றைத் தள்ளி எழுப்பும் காற்றின் ஓட்டத்தால், அது மேலே எழுகிறது" என அது நம்புகிறது.

## VII. இயக்கம்

காற்று :— "காற்றின் ஆக்கத்தைப்பற்றிக் குழவி யாது கருதுகிறது?" என அறியக் "காற்று எங்கிருந்து வருகிறது? இன்று காற்றதிகம்; நேற்று இல்லை; ஏன்? காற்று எப்படி எழுகிறது? ஏன் இயங்குகிறது?" என இவ்வாறு கேட்டுக் குழவிகள் தரும் விடையைப் பியாழே (Piaget) ஆராய்ந்தார். முதல் நிலையில் குழவி (5 வயது) "கடவுளோ மனிதனோ மூச்சு விடுவதாலோ எந்திரத்தின் உதவியோ உண்டாக்குவதே காற்று" என நம்புகிறது. இரண்டாம் நிலையில் (8 வயது) அது "காற்றால் இயங்கும் பொருள்கள் என நாம் கருதுபவற்றின் இயக்கத்தினாலேயே காற்று எழுகிறது" எனக்கூறுகிறது. மூன்றாம் நிலையில் (10½ வயது) "காற்று உண்டாவதனைப் பற்றிப் பேசுவதனை விட்டொழித்துக் காற்றானது தானாகவே காற்று மண்டலத்திலிருந்து எழுகிறது" என அது விளக்க வருகிறது. "இயக்கமே மூர்த்தப் பொருளாய்த் தோன்று-வதனைக் காற்றென்கிறோம்" என்றும் "அது நிலையாக நிற்பது இல்லை" என்றும் குழவிகள் கருதுகின்றன.

மூச்சு :— மூச்சின் பிறப்பினை விளக்கிவைக்கவரும் குழவிகள் முதல் நிலையில், "உள்ளும் புறமுமாம் காற்றால் மூச்சு எழுகிறது" என விளக்குகின்றன. இரண்டாம் நிலையில் "காற்று நம்மைச் சுற்றிலும் உள்ளது" என்றும், "அறையில் காற்று இல்லாமற் போனாலும் மூச்சு விடுவதால் காற்றினைச் சிறிதளவு உண்டு பண்ணலாம்" என்றும் அவை கருதுகின்றன. மூச்சிற்கும் எண்ணம் முதலியவற்றிற்கும் உள்ள ஒப்புமையை உணரும் குழவிகள், இவையனைத்தினையும் ஒன்றெனக் கூறவும் காண்கிறோம். வயிற்றுக் காற்றே மூச்சு எனவும் கூறுகின்றன. உயிர்ப்பினையும் ஆன்மாவினையும்

ஒன்றெனக் குழவி மயங்குவதனைக் கூறவேண்டா. உயிர் என்றால் ஆன்மா என்பது பொருள் அன்றோ? காற்றால் பிள்ளைப் பேறெழுதலும் உண்டு எனக் குழவி நம்புவது உண்டு. காற்றின் புதல்வர் பலர் அன்றோ?

மேகம்:— "மேகம் வான்மீன் முதலிய இயங்குவதன் காரணம் என்னை?" என வினவினால் முதல் நிலையில் (5-வயது) குழவி "நாம் நடப்பதால் மேகம் நடக்கின்றது." என விடை-கூறுகிறது. இது மாந்திரிகக் கொள்கையேயாம். இரண்டாம் நிலையில் (6-வயது) அது "கடவுளோ மனிதனோ இவற்றை அசைப்பதால் இவை இயங்குகின்றன" எனக் கருதுகிறது. இங்குச் செயற்கைக் கொள்கையும் உயிர்க் கொள்கையும் விளங்குதல் காண்க. மூன்றாம் நிலையில் (7-வயது) "மேகங்கள் தாமே இயங்குகின்றன" என்றும், "இவற்றின் இயக்கம் ஒழுக்க முறையை அல்லது தரும நெறியைப் பின்பற்று-கின்றது" என்றும் குழவி நம்புகிறது. இரவு, மழை முதலிய செயற்கைப் பொருள்களோடு மேகம் சேர்வதால் அவை வான் மீன் முதலியவற்றை இயக்குகின்றன என்றும் குழவி கருதுகிறது. நான்காம் நிலையில் (8-வயது) "காற்று மேகத்தை உந்துகின்றது" என்றும் "ஆனால், காற்றோ மேகத்திலிருந்தே வருகிறது" என்றும் அது கூறுகிறது. "வான்மீன் முதலியன காற்றுத் திருப்பத்தால் போகின்றன" என்றும் "ஆனால் அவை உயிருள்ளன" என்றும் "ஆதலின் நம்மைப் பின்பற்றுகின்றன" என்றும் குழவி நம்புகிறது. ஐந்தாம் நிலையில் "காற்று மேகம் முதலியவற்றை உந்துகிறது" எனக் குழவி கூறினாலும் "காற்று மேகத்திலிருந்து எழுவதே" என அது முன்போலக் கூறுவது இல்லை.

அலை இயக்கம்:— நீரோட்டம், எடைவகை இயக்கம் என்பவற்றை விளக்கிவைக்க அகநிலைக் காரணத்தையும் புற-

நிலைக் காரணத்தினையும் குழவிகள் கூறுகின்றன. அகநிலைக் காரணம் உயிரே ஆம். புறநிலைக் காரணம் இயற்கை நியதியும் ஒழுக்கமுறை அல்லது தருமமுமாம். ஏரியின் அலைகள் எழுவதற்குக் காரணம் கூறவரும் குழவி, முதல் நிலையில் (4-5-வயது), "நீரின் உயிரும் கப்பல் முதலியவயற்றின் இயக்கமுமே அலையை எழுப்புகின்றன" எனக் கூறுகின்றது. இரண்டாம் நிலையில் (5-8 வயது), "புறப்பொருளின் இயக்கத்தால் புறப்பொருளின் செயல் எழுகிறது" எனக் கருதிக் கல் முதலியவற்றைக் காரணமாகக் குழவி கூறுகின்றது. இங்குப் பலவகையான கருத்துக்கள் விளங்கக் காண்கிறோம். சில குழவிகள் "அகநிலைக் காரணம் எழுவதற்கு இவை அனைத்தும் சந்தர்ப்பங்கள்" என விளக்குகின்றன. "நீர் மிகுதியாய் இருப்பதாலும் நீரோட்டத்தாலும் அலை எழுகின்றன" என வேறு சில குழவிகள் கருதுகின்றன. மற்றுஞ் சில காற்று திரும்புவதால் அலை எழும் என நம்புகின்றன. இன்னும் சில, "காற்றே அலைகளை எழுப்புகின்றது" எனக் கூறுகின்றன.

நீரோட்டம் :- நீரோட்டத்தை விளக்க வரும் குழவிகள் முதல் நிலையில், "மனிதரால் நீரோட்டம் வெளிப்படுகிறது" எனக் கூறுகின்றன. இரண்டாம் நிலையில் "கல்லே நீரின் இயக்கத்தை வெளிப்படுத்துகிறது" என்பதொரு கொள்கையும் "தான் எழுப்பும் அலைகளாய் நீர் ஓடுகிறது" என்ற கொள்கையும் வழங்கக் காண்கிறோம். மூன்றும் நிலையில், "வாட்டம் (Gradiant) முதலியன காரணம்" என்று குழவி கருதுகிறது. நான்காம் நிலையில், "நீர் கனமாதலின் கீழே ஓடுகிறது" என்று குழவிகள் நம்புகின்றன.

சூரியன் தொங்குதல் :- "சூரியன் முதலியன அந்தரத்தில் தொங்குவது எப்படி?" என்பதனை விளக்கவரும் குழவிகள்,

முதல் நிலையில், "அவை உச்சியில் ஒட்டிக்கிடக்கின்றன" என்றேனும், "கடவுள் அவற்றைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறார்" என்றேனும் நம்புகின்றன. இரண்டாம் நிலையில், இவை "வானமே அடிப்படையாக இவை அதனுள்ளே அமைந்துகிடக்கின்றன" எனக் கருதுகின்றன. நான்காம் நிலையில், "மெல்லியன ஆதலின் இவை தொங்குகின்றன" எனக் குழவிகள் விளக்குகின்றன.

## VIII. ஆற்றல்

குழவிகூறும் ஆற்றல் :— ஆற்றல் என்பதுதான் யாது? அகம் புறம் என மக்கள் மனத்தே இருமுனை நிலைகள் உண்டு. நாம் கட்டளையிடுவதாலே பொருள்கள் இயங்குகின்றன எனக் கருதும்போது, கட்டளையிடல் அகமுனையாம்; இயங்குதல் புறமுனையாம். ஆற்றல் என்பது நமக்குத் தோன்றுவது போலக் குறுகிய பொருண்மை உடையது அன்றும்; குழவிகளுக்கு அது பரந்த பொருண்மை பெற்றதாகவே தோன்றுகிறது. பல வகை ஆற்றல்களும் பொருளற்று ஒழிந்து கொண்டே போக, எஞ்சிநிற்பதனையே "இயற்கை ஆற்றல்" என்ற நம் கருத்து விளக்குகின்றது. குழவியோ முதலில் ஆற்றல்களை உயிருள்ளன என்றும், நோக்கம் உடையன என்றும், கடமையைச் செயற்பாலன என்றும், வடிவுடைப் பொருள் என்றும் விளக்குகிறது. அந்தத் தற்செயல், (அத்ருஷ்டம்) கட்டாயம் என்பனவே இல்லை. அங்குக் கட்டாயநிலை என்றால் தடையைத் தாண்டுதலேயாம். இயற்கை உயிர் உடையதாகவும் நோக்கமுடையதாகவும் விளங்குகிறது. பொருள்களின் மனம் காற்றேபோல மாறி மாறி வந்தாலும், தற்செயல் என்ற கருத்திற்கே அங்கு இடம் இல்லை. குழவியின் மனத்தில் நியதி என்ற கருத்து உண்டு. ஆனால்,

அந்த நியதி தருமத்தின் நியதியே அன்றி இயற்கையின் நியதி அன்ரும். "ஒவ்வொரு பொருளும் இயல்பாகவே தன்னிற்ருனே ஆற்றல் பெற்று விளங்குகிறது" என்பதே குழவியின் நம்பிக்கை. "ஓரிடத்திலிருந்து மற்ருேர் பொருளில் ஆற்றல் பாய்கிறதி" என்ற பேச்சும் உண்டு. இதனுல், "ஒரு பொருளின் ஆற்றல் மற்ெருரு பொருளில் இருந்த ஆற்றலைத் தூண்டிக் கிளப்புவதற்கு இடமுண்டேயன்றி மாற்றுவது என்பதற்கு இடமில்லை" என்பதே குழவியின் நம்பிக்கை என்பது நன்கு விளங்குகிறது.

அணைநிலை அணையாநிலை :— ஒரு சில நிலையில் இவ்வாறு தூண்டிக் கிளப்புவதற்கு இரு பொருளும் ஒன்றை ஒன்று ஒட்டிக்கிடக்கும் அணைநிலை வேண்டுவதில்லை. "நாம் நடக்கச் சூரியன் இயங்குகின்ருன்" என்று கூறும்போது அணை நிலை எது? மூச்சுவிடச் சூரியனும் இயங்குகின்ருன் என்பது போன்ற சில இடங்களில் அணைநிலை (Contact) உண்டு. காற்று எங்கும் நிறைந்தது அன்ருே? அணைநிலை உண்டு எனில் அங்குள்ள காரணம் இயற்கைப் புறநிலைக் காரணமாம்; அணைநிலை இல்லை எனில் அங்குள்ள காரணம் அகநிலை அல்லது மனநிலைக் காரணமேயாம். ஆனுல், அகம் புறம் என்ற வரையறை முதலில் இல்லை எனக் கண்டோம் அன்ருே? "அனைத்தும், அனைத்தின் மேலும் தாக்கி அனைத்திடத்தும் நீக்கமற நிறைந்து பரந்து இருக்கின்றன" என்றன்ருே குழவி கருதுகிறது. ஆதலின், குழவி பேசும் காரண ஆராய்ச்சி நோக்க ஆராய்ச்சியோ, ஊக்கநிலை ஆராய்ச்சியோ ஆகுமே அன்றித் தருக்க ஆராய்ச்சி அன்ரும்.

ஆற்றலின் பலவகையான பொருள் :- ஆற்றல்தான் யாது? "அனைத்தும் உயிர் உள்ளது" எனக் கருதும்போது உயிர்ப்-

பொருள் என்ற கருத்தும், ஆற்றல் என்ற கருத்தும், தலை-மயங்கிக் கிடப்பதனைச் சொல்லவும் வேண்டுமோ? உயிர்ப்-பொருளைப்பற்றி முன்னர்க் கூறியனயாவும் ஆற்றலின் இயல்-பாகவும் அமைகின்றன. "நீர் ஆற்றலுடையது; இயங்கு-தலின்" எனக் கூறும் குழவி உயிர்ப் பொருளைப்போல ஆற்றலையும் ஓர் இயக்கமாகக் காண்கிறதன்றோ? ஆற்றலை ஓட்டம் அல்லது காற்றாகக் குழவிகள் கருதுகின்றன. அவை "ஆற்றலுள்ள பொருளில் எழுவதே காற்று" எனக்கூறு-கின்றன அன்றோ? இது முதல் வகையான கருத்தாம். இரண்டாம் வகையான கருத்தின்படி, பொருள்களிடை விளங்குவதே ஆற்றலாம். மூன்றாவது வகையான கருத்துப்படி, சிறப்பாகப் பயனுள்ளதாய் விளங்கும் செயற்பாடே ஆற்றலாம். நான்காம் வகையான கருத்தின்படி "சந்திரன் குழவியைத் தூக்கிச் செல்லுதலின் ஆற்றலுடையது" என்று நம்புவதற்கு இணங்க வேறொன்றனைத் தூக்கிச் செல்வதே ஆற்றலுடைமையாம். ஐந்தாம் வகையான கருத்தின்படி, உடையாது அழியாது தம்மைக்காத்துக் கொள்வதே ஆற்றலுடைமையாம். ஆறாம் வகையான கருத்துப்படி அளவும் எடையுமே ஆற்றலாம்.

ஆற்றல் எழும் முறை :—ஆற்றல் என்ற கருத்து எங்குத் தோன்றுகிறது? பிரான் (Biran) என்பார் "நம் இடத்தில் ஆற்றலை உணர்ந்த பின்னரே புறப் பொருள்களிடையே ஆற்றலுண்மையை உய்த்துணர்கின்றோம்" எனக் கூறியுள்ளார். சுற்றுப்புறச்சூழல் நம்மைத் தாக்குகிறது. இத்தாக்கலின் பயனாகத் தாக்கலே புலன்களாய்த் தோன்ற இப்புலன்களை, ஒன்றாகிவரும் தசை இயக்க வடிவமாக அறிந்து, உணர்வு முதலியனவாக மனத்தில் உட்கொண்டு வருகிறோம். இவ்வாறு புறத்தாக்கலும் அகநிலை இயக்கமுமாக எண்ணம் விளைகிறது.

முன்னிகழ்ந்ததனை எண்ணுவதென்றால் என்னை? முன்னைய நிகழ்ச்சியை மனவகையால் செய்து காண்பதேயாம். "அகம்-புறம் என்ற வரையறை முதலில் இல்லாமையால் புறப்-பொருளை நனவு நிலையில் வேறுபிரித்துக் காண்பதில்லை; தசை இயக்கக் கோலங்கள் புறப்பொருளைத் தமதாக்கிக் கொள்-கின்றன" எனக் கண்டோம். சுற்றுப்புறச்சூழலும் உயிர்ப் பொருளும் தொடர்ந்து ஒருங்கு இயைந்து விளங்குவதனைத் தனதாக்கிக் கொள்ளும் தன்மை (Assimilation) நன்கு தெளிவுபடுத்துகிறது. எனவே, புறப்பொருளைத் தசை-இயக்கக் கோலமாகவே உணர்கின்றோம். தசையியக்கமோ தடை எதிர்ப்பினை உணர்த்துகின்றது. தடையோ நோக்க-முடையதாயும் உயிர்ப்பொருளின் ஆற்றலாக்வுமே விளங்கு-கிறது. எனவே, ஆற்றல் அகமுகமாக எழுந்து புறப்பொருளைப் பற்றியதாக மாறுகிறது என்ற கொள்கை உறுதிப்படுகிறது எனலாம்.

இந்த முறையின் நனவு :— நனவிலியாக நிகழும் இந்தப் போக்கினை நனவுநிலையிலிருந்து நோக்கும்போது இந்த முறை தலைகீழாகவே மாறும். "தான்" என்பது உலகினைத் தன-தாக்கிக் கொள்கிறது. "எனது" என்ற உணர்ச்சிக்கு முன்னரே, "யான்" என்ற உணர்ச்சி ஆற்றலின் இருப்பிட-மாகத் தோன்றுகிறது. படிப்படியாகத் தான் இதிலிருந்தும் "நான்" என்பது தனியாகிப் பிரிந்து வருகிறது. புறப்-பொருளிள்களிலிருந்தும் ஆற்றல் தனிப்பட்டெழுந்து புலனுகி-வர, "நான்" என்பதனைக் காட்சிப் பொருளிலிருந்தும் செதுக்கி எடுத்து நாம் உருப்படுத்துகிறோம் என்பதனை மறத்தல் ஆகாது. இவ்வாறு உருப்படுத்துவது நனவிலி முயற்சியே என்பதனையும் மறத்தலாகாது. நம் தசையியக்கக் கோலத்தின் வழியாகவே, புறப்பொருள்களை உணர்கின்றோம்.

ஆனல், அவற்றை "நான்" என்று என்றும் உணர்வதில்லை. முயற்சி புறத்தும் நோக்கும்; அகத்தும் நோக்கும். புறத்தே செல்லும் முயற்சியின் புறநோக்க இயல்பே ஆற்றலை விளக்கு-கிறது; இல்லையேல் ஆற்றல் விளக்கமாவது இல்லையாம்.

## IX. முன்னறிவும் விளக்கமும்

இவை என்ன?:-இயற்கைச் சட்டத்தினை அறிந்தால், "ஒரு பொருள் குறிப்பிட்ட நிலையில் எங்ஙனம் செயற்படும்?" என முன்னறிந்து கூறலாம். ஈதே முன்னறிவாம் (Prediction). "ஒரு பொருள் குறிப்பிட்ட நிலையில் செயற்படுவது எங்ஙனம்?" என விளக்கி வைக்கலாம். ஈதே விளக்கம் கூறல் அல்லது விளக்கம் (Explanation) எனலாம். "குழவியினிடம் இவை இரண்டும் எவ்வாறு எழுகின்றன?" என அறிதலும் வேண்டும்.

படகு மிதத்தல் :— "படகு மிதப்பதேன்?" என்ற கேள்வியைக் கேட்டால், குழவி முதல் நிலையில் "படகு எந்நாளும் நீரில் மிதத்தல் வேண்டுமாதலின் மிதக்கின்றது" என்று கூறுகிறது. இது கடமையையும் ஒழுக்கநிலைச் சட்டத்-தினையும் விளக்குகின்றதே அன்றிக் காரண விளக்கம் அன்றும். இரண்டாம் நிலையில் எடையை மிதப்பதற்குக் காரணமாகக் கூறுகிறது. "பளுவுள்ளவையே தம்மைத்தாம் நிலையாக வைத்திருக்க முடியுமாதலின் மிதக்கின்றன" என்றும் "இலே-சானவை இலேசாய் இருத்தலின் மிதக்கின்றன" என்றும் அது கருதுகிறது. இது நிகழ்ந்ததனை விளக்குவதே அன்றி முன்னறிந்து கூறுவதன்றும். சட்டமும் விளக்கமும் ஒன்றை ஒன்றுபற்றிக்கொண்டு நிற்பதுகாண்க. இயற்கைச்சட்டத்தினை உணர்ந்தால் மட்டுமே செய்தியின் விளக்கம் கூறுதல் கூடும்.

செய்தி விளங்கினல் மட்டுமே இயற்கைச் சட்டஉணர்வு எழும். இயற்கைச் சட்டஉணர்வோ காரணநிலையின் உண்மையுணர்வுக்கு முன்னரே எழுகிறது. நாம் முன்னறிந்த சட்ட எல்லையைச் சிதைக்கும்போது புதிய சட்டங்கள் எழுகின்றன. மூன்ரும் நிலையில் ''படகு தன்னியக்கத்தாலோ பிறவற்றின் நின்றும் பெற்ற இயக்கத்தாலோ மிதக்கின்றது'' என்றும், ''மொத்த நீரின் எடையில் படகு இலேசானதாதலின் இங்கு மிதக்கின்றது'' என்றும் குழவி, கூறுகிறது. இயக்க வகையாகக் காரணத்தை இவ்வாறு விளக்கிவைத்தல் காண்க. நான்காம் நிலையில், குழவி, ''நீர் கனத்ததாதலின் படகு மிதக்கின்றது'' எனக் கூறுகின்றது. இங்கு நிலைத்திணை வகையாகக் காரணத்தை விளக்கிவைத்தல் காண்க. தனிநிலைக் கனம் என்ற கருத்தும், முறைமைநிலை எடை என்ற கருத்தும் குழவியின் மனத்தில் இன்னமும் வேறுபிரிப்வில்லை. இந்த வேறுபாடு எழுந்ததும் மிதவைநிலை இயற்கைச் சட்டம் (Law of floatation) விளங்குவிடும் அன்ருே?

சமுதாயநிலை :— தானே இயங்கும் எண்ணம் சிறப்பு நிலையுற்று விளங்குகிறது. சட்டமும் மனத்திற்கு ஆறுதல் அளிப்பது இல்லை. முன்னறிந்து கூறுவதனை விட எதிர்தோன்றுவதன் இயல்பினை உய்த்துணர்ந்து அதன் விளக்கத்தினை அறியவே மனம் நாடுகிறது. ''சரியானபடி முன்னறிந்து கூற வேண்டுமானல் சரியான விளக்கம் கூற அறிந்திருத்தல் வேண்டும்''என்ற நியதிகாணேம். அறிவுநிலையில் முன்னறிவும் விளக்கமும் இருவேறு படி நிலைகளாம். இவை ஒன்றை ஒன்று இயக்க வருகின்றன; தனிப்பட்டிருக்கும் நிலை போய் இவை ஒத்துழைக்கின்றன. உய்த்தணர்வு வகையாகவோ, ஒப்புமை வகையாகவோ முதலில் விளக்கம் கூறும்போது, குழவிக்குத் தோன்றும் தோற்றத்திடையே ஆற்றல் இயங்கி வருவதாகக்

குழவி காண்கிறது. காரணநிலை முதலில் சட்ட நிலைக்கு முரண்பட்டுக் கிடப்பப் பின்னர்ச் சட்டமும் விளக்கமும் ஒன்றாகி விடுகின்றன. பொதுத் தன்மையை அறிந்து வர, அறிந்து வர உய்த்துணர்வு என்பதே தருக்க அமைப்பாக மாறுகிறது எனலாம். இங்குக் கூறி வருதற்கு ஏற்பக் காரணம் முதலில் குழவியின் உள்ளத்தில் தருமநிலை இயக்கப்பாடாக-வும், பின்னர்ப் பொருளிடத்தே தன்னிற்றான் எழுகிற இயக்கப் பாடாகவும், முடிவாக எந்திர நிலை விளக்கமாகவும் தோன்று-தல் காண்க. முடிவு நிலையில் ஆற்றல்களைவிட இயைபுகளே விளங்குகின்றன எனலாம். முதலில் எடையும், செறிவாம் கனமும் ஒன்றாகத் தோன்றுகின்றன. இறுக்கம் நெகிழ்வு என்று கூற வரும்போது இவை இரண்டும் வேறு பிரிதல் வெளிப்படை. "கனத்திற்கு ஏற்ற எடை" அல்லது "சிறப்பு நிலை எடை" என்ற எண்ணம் (Specific Gravity) எழுகிறது. இவ்வாறு தனி நிலையிலிருந்து கருத்துக்கள் முறைமை நிலையை அடைந்து வளர்ந்து வரக் காண்கிறோம். அங்கே, முறைமை நிலைச் செறிவு என்ற கருத்து (Relative density) எழுதுகின்றதன்றோ? இத்தகைய வளர்ச்சி சமுதாய நிலை காரணமாகவே எழுகின்றது எனலாம்.

மிதவை :— தண்ணீர் மட்டத்தைப் பற்றிக் குழவியைக் கேட்கத் தொடங்கிக் "கிண்ணத்திலுள்ள நீரில் பருக்கைக் கற்களை இட்டால், என்னவாகும்?" என வினவினால் முதல் நிலையில் "அழுந்திய கல்லின் எடையால் நீர் மேலுக்கு எழும்" என்றும், "பூவினை இட்டால் நீர் வழியுமோ?" என வினவினால் "பூ இலேசாதலின் நீர் வழியாது" என்றும் அதுவிடை கூறுகிறது. "கல்போன்ற பளுப்பொருள் நீரினுள் அலையை எழுப்பி விடுகிறது" எனக் குழவி கருதுகிறது. இரண்டாம் நிலையில், கனத்தின் உண்மையியல்பினைக் குழவி

உணர்கிறது. ஆனல், தெள்ளத் தெளிய உணருவதில்லை. மூன்ரும் நிலையில்தான் ஐயப்பாடனைத்தும் நீங்குகின்றன.

அறிவாராய்ச்சியின் வளர்ச்சி:— இங்கு எழும் கருத்துக்களை ஆராய்வோமானல், "அறிவாராய்ச்சி உண்டு" என்று கூறுவதற்கு இடமின்றி இவை அனைத்தும் நனவிலி எண்ணங்களாகவே கிடக்கக் காண்கிருேம். 'தருக்க நிலை அறிவு' பின்னரே தோன்றுகிறது. தசையிய்க்க வடிவ அறிவினில் உள்ளடங்கித் தோன்றும் பயப்பாடு, நனவு நிலையுணர்வாகத் தோன்றும் போதே, தருக்க நிலை அறிவு எழுகிறது. நோக்க நிலை இந்த மாறுகிறது. அக நோக்கம் நீங்கிப் புற நோக்கம் வளர்கிறது. தட்டுத்தடுமாறித் தகுதி கற்றலாகிய குருட்டாட்டம் ஒழிகிறது; நோக்கத்தோடு கண்டறிதலே வழக்கமாகிவிடுகிறது. பழைய முட்டுப் பாடுகள் வேறு புது நிலையில் எழுகின்றன. செயல்வகை முட்டுப்பாடு சொல்வகை முட்டுப்பாடாக எழுகிறது. புதுப்பொருள்களைப் பற்றிய எண்ணங்கள் ஒன்ருேடொன்று இணைந்து வருவதாலேயே எண்ணம் உருப்பெறுகிறது" என்ற கொள்கை (Associotionism) இங்கும் உண்மையாவதில்லை என்பது தெளிவாகிறது. "குழம்பிக் கிடந்த எண்ணம் பின்னே மேலும் மேலும் தெளிவுற்றுத் தனிப்பட்டுப் பிரிந்து விளங்குகின்றது." என்ற கொள்கையையே இங்குத் தோன்றுவனவும் வற்புறுத்துகின்றன. தருக்க முறை என்பது ஒரே இயல்பினதாம். ஆனல், உய்த்துணர்வின் சிறப்பமைப்பு முதலில் சட்டத்திற்கு அடங்காது, செயற்பாட்டு நிலைமைக்கு ஏற்பச் செயல் வழித் தருக்க முறையின்படி இயங்கி வருகின்றது. செயல் வழியே சென்று திரியாதவாறு மனச் செயல் முன்னரும் ஒருமுறை அதனை அடக்கி ஆள்கிறது; உய்த்துணர்தலுக்கு ஏற்ற அமைப்பினை உண்மை காணுமாறு, பின்னரும் அம்மனச் செயலே அடக்கி ஆள்கிறது.

ஒரே வகை நீர் மட்டம் :— இந்த உண்மைகளை உறுதிப் படுத்த மேலும் சில செய்திகளைப் பற்றிய கொள்கைகளை ஆராய்தல் வேண்டும். “தொடர்புற்ற இருகுழைகளுள் நீருண்டு. ஒருகுழையில் மேலும் நீர் ஊற்றினால், மற்றொன்றில் நீர் எந்த மட்டத்தில் இருக்கும்?” என வினவினால், குழவி, முதல் நிலையில் “நீர் முதல் இருந்த மட்டத்திலேயே இருக்கும்” எனக் கூறுகின்றது. இரண்டாம் நிலையில், “காற்று மேலுக்குத் தள்ளினால் மட்ட நிலை அதே நிலைக்குப் போகிறது” என்று குழவி கூறுகிறது. மூன்றாம் நிலையில், “இருகுழையிலும் நீர் மட்டம் சமநிலையை அடையும்” என அது கருதுகிறது. இயங்கு நிலை எந்திரக் கொள்கை (Dynamic Mechanism) இங்கு வருதல் காண்க. சட்டத்தினை அறிந்த உடன் விளக்கம் கூறத் தொடங்கும் நிலையையும் காண்கிறோம். ஆனால், சட்டத்தை அறிந்ததால் குழவி சரியான விளக்கம் கூறும் என எதிர்பார்ப்பதற்கு இடம் இல்லை.

நிழல் :— நிழல் என்பதனைப் பற்றிக் குழவிகள் கொள்ளும் கருத்தினை ஆராயும் போது, “பொருளே அக நிலையாக இருந்தும் புற நிலையாக இருந்தும் நிழலை எழுப்புகின்றது.” என்று முதல் நிலையில் (5-வயது) குழவி நம்புவது விளங்கு-கிறது. இரண்டாம் நிலையில் (5 - 7 வயது) “பொருளால் மட்டுமே நிழல் எழுகிறது” என அதுஉணர்ந்தாலும், “எந்தப் பக்கம் நிழல் விழும் ?” எனக்கூறமுடியாது, குழவி தடுமாறு-கிறது. மூன்றாவது நிலையில் (8 வயது) “எந்தப் பக்கம் நிழல் விழும்” எனக் கூற அறிவதோடு “பொருளில் இருந்து எழும் மூர்த்தமே ஒளியை ஓட்டுகிறது” என நம்புகிறது. நான்காம் நிலையில் (9 வயது) “ஒளி இன்மையே நிழல்” என்று அது முடிவு செய்கிறது. இவ்வாறு குழவியின் எண்ணங்கள் எல்லாம் இயங்கு நிலையைப் பற்றியனவாயிருந்து நிலைத்-திணையைப் பற்றியனவாக மாறி வளர்ந்து வரக் காண்கிறோம்.

எந்திரம் மிதி வண்டி :— எந்திரங்களைப் பற்றிக் குழவிகள் கூறும் கொள்கைகள் குழவியின் எண்ணத்தை மேலும் விளக்குகின்றன. மிதி வண்டியைப் பற்றிக் கருதும் குழவி முதல் நிலையில் "காலையியக்கும் போது அங்குக் கட்டுண்டு கிடந்த ஆற்றல் இயங்கத் தொடங்குகிறது." எனக் கருதி, "ஆள் முந்துற நடக்க மிதிவண்டி பின் தொடர்கிறது" என்று நம்புகிறது. இரண்டாம் நிலையில் மிதி வண்டியின் உறுப்புக்களைக் குழவி உணர்ந்தாலும் கட்டு நிலை ஒற்றுமையாகவே அவற்றை உணர்கின்றது. மூன்றாம் நிலையில் அடுத்து நிலையே (Juxta-pcsition) தோன்றுகிறது. எந்திர நிலை விளக்கம் உறுகிறது. தருக்க முறைப்படி தலைகீழாக மாற்றிக் காணமுடியாது போனாலும் காரண காரியத்தொடர்பின் நாட்டம் இங்குச் சிறிது எழக் காண்கிறோம்.

•

புகை வண்டி :— புகைவண்டியின் இயக்கத்தை அறியும் குழவி, முதல் நிலையில், "நெருப்பே சக்கரத்தைத் தள்ளுகிறது" என்று நம்பியும் "எவ்வாறு நெருப்பு அவ்வாறு செய்யக்கூடும்"? என்பதனைப் பற்றிக் கவலை கொள்ளாமலும் நிற்கின்றது. இரண்டாம் நிலையில் நீரும் சக்கரமும் அடுத்து நிற்பதனை மட்டும் கண்டு அந்த அடுத்து நிலை நாட்டம் காரணமாக "நீரே சக்கரத்தை உந்துகிறது" என அது நம்புகிறது. மூன்றாம் நிலையில், "ஆவியே சக்கரத்தைத் திருப்புகிறது" எனக் கருதினாலும், ஆவியின் அளவைப்பற்றியோ பாகுபாட்டினைப்பற்றியோ எண்ணாமல், தள்ளும் சக்தியைப் பற்றி மட்டும் அது எண்ணி வருகிறது.

தானோடி:—" தானோடி (Motor Car) ஆகாய விமானம் முதலியன, சுக்கானைத் திருப்பினால், ஓடுகின்றன" என்றும், "காற்றே இவற்றை ஓட்டுகின்றன" என்றும் முதல் நிலையில்

குழவி கருதுகின்றதாம். இரண்டாம் நிலையில், "அடுத்து நிலை நாட்டம் எழுவதால் பிற அனைத்து உறுப்புக்களும் இன்றிமை-யாது வேண்டப்படும்" என அது நம்புகின்றதாம். மூன்றும் நிலையில், குழவி, முதியோரைப் போலப் பேசுகிறது. இங்கே 7-8 ஆம் வயதில் சரியான விளக்கம் கூறும் நிலையும், மனநிலை-யில் ஒரு மாற்றமும் ஒன்றாக எழக் காண்கிறோம். பொருள்-களைச் செய்து பார்க்கும் போதுதான், புறப்பொருள்களின் தடை நிலை தோன்றி மனத்திற் பதிகிறது; எந்திர நிலையை உணர இடம் ஏற்படுகிறது. எந்திரங்களை உணரும் நிலையே இயற்கைக் காரணத்தை அறியத் தூண்டுகிறது. இதன் காரணமாகச் செயற்கைக்கொள்கையின் வன்மை குறைந்து தேய்ந்தொழிகிறது.

## X. அறிவு வளர்ச்சி

குறியீடு :— அகம்புறம் என வேறுபடுத்தாது அகத்தோ புறத்தோ தோன்றுவன அனைத்தினையும் உள் பொருள் எனக் கொள்ளும் கொள்கையைச் சுருக்கமாக "உள்பொருட் கொள்கை" (Realism) என வழங்கலாம். புறப் பொருளை வேறுபிரித்துத் தன்னோக்கினும் வேறாக அமைந்து கிடப்பதாகக் கருதும் கொள்கையைப் புறநிலைக் கொள்கை (Objectivism) என வழங்கலாம். ஒன்று இரண்டு என்பன தனி நிலையுண்மை-களாம். இவைகள் வேறொன்றனை நோக்காது விளங்கும் உண்மைகளாம். வலம் இடம், தந்தை மகன் முதலியவை 'தனி நிலை உண்மைகள்' அன்றாம்; 'முறைமை நிலை உண்மைகளாம்'; ஒன்றை நோக்க ஒன்று வலமாம்; மற்றொன்றை நோக்க அதுவே இடமாம். இதனை உணர்ந்து வரும் கொள்கையே முறைமை நிலைக்கொள்கையாம் (Relativity). *பொருளி-னையோ, பண்பினையோ, வேறு இயல்பினையோ தன் மனத்தில்

இருக்கும் தனிநிலை உண்மையாகக் கொள்ளாத நிலையே முறைமை நிலையாம். பரிமாற்ற மனப்பான்மையாவது (Reciprocity) பிறர் நோக்கத்தினையும் தன் நோக்கம் போலவே பாராட்டும் மனப்பான்மையாம். பொருள்கள் இயங்குவதே இயல்பு எனக் கொள்வது இயக்கக் கொள்கையாம் (Dynamism).

முப் போக்கு :— குழவியின் எண்ணம் உள்பொருட் கொள்கையினின்றும் புறநிலைக் கொள்கைக்கும், உள்பொருட் கொள்கையின் நின்றும் பரிமாற்றக் கொள்கைக்கும், உள் பொருட் கொள்கையினின்றும் முறைமை நிலைக் கொள்கைக்கும் ஒருங்கியங்கிச் செல்லும் போக்கினைக் காண்கிறோம். புறநிலை அறிவு காண்பானைப் பொறுத்ததேயாம். உள்பொருள் என்ற எண்ணம் அரும்பும்போது, நனவு நிலையில் உலகம் புறம் அகம் என இரண்டாகப் பிரிதல் வேண்டும். அப்போதுதான் 'புறநிலை அறிவு' எழுதல் கூடும். "எண்ணம் சொல், பெயர் முதலியன பொருளின் வேறல்ல, ஒன்றே" எனக் குழவி கொண்டு உள் பொருட் கொள்கையை நம்புவது புற நிலையை வேறாக உணராமையாலேயாம். தன்னைப் பொறுத்தவரையில் புறமும் அகமும் ஒட்டிக்கொண்டு நிற்பதால் தன்னைப் போலவும் தன்செயல் போலவும் அனைத்தும் ஒன்றாக ஒட்டிக்கொண்டு கிடப்பதாகக் குழவி கருதி விடுகிறது. இவ்வாறு குழவி அனைத்தினையும் காணும் நிலையைக் குழவியின் நம்பிக்கைகள் பல வற்புறுத்துகின்றன. ஒருநம்பிக்கை வசிய நிலையுணர்வாம். இரண்டாவது மாந்திரிக நம்பிக்கையாம். தன்போல அனைத்தும் உயிருடையன எனக் கொள்ளும் உயிர்க்கொள்கை (Animism) மூன்றாவதாம். தன்செயலால் இயக்கம் தோன்றுவது போல அனைத்தும் ஒருவரால் செய்யப்பெற்றனவே எனக் குழவி கொள்ளும் செயற்கைக் கொள்கை நான்காவதாம். தன்னைப்

போல அனைத்தும் நோக்கமுடையன எனக் குழவி கொள்ளும் நோக்கக்கொள்கை (Finalism) ஐந்தாவதாம். தன்னிடத்து ஆற்றல் தோன்றுவது போலவே எங்கும் உளதாகக் குழவி கருதும் ஆற்றலைப் பற்றிய நம்பிக்கை ஆறாவதாம். இவை அனைத்தும் தன்னைப் போல் பிறவற்றைக்காணும் முறையை நிலைநாட்டுதல் காண்க. இந்த அகம் புற ஒற்றுமையாம் நிலை நீங்கியபின்னரே அகம் புறம் என்ற வேற்றுமை எழுகின்றது. குழவி தன் எண்ணங்களையும், எண்ண முறைகளையும் உணர உணரப் பொருளைச் சுட்டும் அறிகுறியினையும், சுட்டப்படும் பொருளினையும் வேறுபிரித்தறிகிறது. உயிர்க்கொள்கை சிதையச் சிதைய இப்பக்கக்கொள்கையும் வலிவற்றுத்தேய்கிறது. உயிர்த் தன்மையைப்பற்றிப் பேசுவது குறையக் குறைய ஆற்றல் உயிர்த்தன்மையாகாது சடநிலையாகி எந்திர நிலையாற்றலாக மாறுகிறது. தன் அகநிலையைக் குழவி வேறாக உணர்ந்ததும் குழவிக்குத் தானே நடுவாந்தன்மை ஒழிகிறது; அகமும் புறமும் வேறுபடுகின்றன. இவ்வாறுதான், குழவி உள்பொருட் கொள்கையிலிருந்து புறநிலைக் கொள்கைக்கு வந்து விடுகின்றது. இரண்டாவதாக உள்பொருட் கொள்கையின் நின்றும் பரிமாற்ற மனப்பான்மைக்கு வருவதனை எங்குக் காண்கிறோம்? தோற்றத்தை உள்பொருள் எனக் கொண்ட குழவி கண்டதனை கண்டவாறே கொள்ளாது "கண்டதன் பொருள் தான் என்ன!" என்று தனக்குத்தானே பொருள் கூறிக்கொள்ள வரும்போது காண்கிறோம். முதலில் தன் தனி நிலைநோக்கை மறந்து, அகம் புறம் எனவேறு பிரிக்கும்போது, தன்நோக்கம் பொது நோக்கினும் வேறு எனக் கொள்வதனை எங்குக் காண்கிறோம்? கனவு, வலம், இடம் என்ற கருத்துக்களைக் குழவி உணர்ந்து வரும்போது காண்கிறோம். முதலில் பொருள்களைத் தனிநிலையில் விளங்கும் பொருள்களாகக் கண்ட குழவி, பின்னர்த் தனி நிலைப்பொருள்கள் என்ற

கருத்தையே விட்டொழித்து, இயைபுண்ட பொருள்களையே உணர வருகிறது. அப்பொழுது தன் மதிப்பும் பாராட்டும் தன் நோக்கத்திற்கு ஏற்றவையே அன்றி அனைவருக்கும் பொது அல்ல எனக்கண்டு முறைமை நிலைக் கொள்கையை நம்புகிறது. அவ்விடத்தில் குழவி உள்பொருட் கொள்கையிலிருந்து முறைமைக் கொள்கைக்கு வந்து விட்டதனை உணருகிறோம். இரவு நிழல் முதலிய கருத்துக்களின் வளர்ச்சியைக் காண்க.

புறப் போக்கு :— அகத்தெழு தோற்றமாக உணருவது அன்றி உண்மையான பொருளை உணரும் கருத்து எவ்வாறு வளர்கிறது? மூன்று வகையாக அக்கருத்து வளரக் காண்கிறோம். ஒன்று சமுதாயத்தின் இயல்பாக வளருவதாம். தன்னேக்கையே முடிந்த முடிபாகக் கொள்ளுவதனை விட்டொழித்துப் பிறநோக்கத்தையும் அவர்களது பரிமாற்ற நிலைமையையும் கைக்கொள்ளும் மனப்பான்மை சமுதாய உணர்ச்சி வளர்வதால் வளருவது ஒன்றும். இரண்டாவது வளர்ச்சி அறிவின் இயல்பாக வளருவதாம். உணர்வினை மூர்த்தப் பொருளாகக் கொள்ளாது, அறிவின் முறைமை நிலையே உண்மை எனக் கொள்ளுவது அறிவின் இயல்பு காரணமாக எழும் வளர்ச்சியாம். மூன்றுவது வளர்ச்சி சமுதாயம் அறிவு என்ற இரண்டின் இயல்பாக வளரும் வளர்ச்சியாம். "தான் வேறு உலகம் வேறு" என உணராத குழவி பின் படிப்படியாக "நான்" என்பதனை வேறுபிரித்து நனவு நிலையில் உணர வரும்போது, புறநிலை உண்மைப் பொருளிலிருந்து, அகநிலை அனைத்தும் வேறு பிரிந்து ஒழிகின்றன. புறநிலை மட்டும் தெள்ளத்தெளிய விளங்குகிறது. ஆனால், இந்த "நான்" என்ற உணர்வு சமுதாய வாழ்க்கையால் எழுவதொன்றே எனக் கண்டோம். இந்த

மூன்று வகையான வளர்ச்சியும் ஒருங்கு நிகழ்ந்து வருகின்றன. தருக்கமுறைப் பொதுநிலைகள் சமுதாயப் பழக்கத்தின் பயனாகவே வேறு தோன்றும். அப்போது குழவி அனுபவத்தின் பயனை உணர்ந்து அதன்படி தன் வாழ்க்-கையை, முதியோரைப்போல,முறைப்படுத்திக் கொள்கின்றது.

காரண வாதம் :— நம்மை விட உடனிலைக் காட்சிக்கு அண்மையிலும், உண்மைக் காட்சிக்குச் சேய்மையிலும் குழவி விளங்குகிறது. ஒருங்கிருப்பனவாகப் பொருள்களைக் காணும் இந்த உடனிலைக் காட்சியின் பயனாக "எதுவும் எதனையும் உண்டு பண்ணக் கூடும்" எனக் குழவி நம்புகிறது. இதுவே தோற்றவகைக் காரண வாதமாம் (Realistic Causation). புற நிலையோ அக நிலைக்குள் அமிழ்ந்து மறைந்து கிடக்கின்-றது. அனைத்தும், அகநிலைப் பண்போடு, தனித்தனி உயிரும் மனமும் பெற்றுச் செயலால் எழும் செயற்கைகளாக விளங்கு-மாம். அப்போது சொல்லும் எண்ணமும் பெயரும் பொருளி-னும் வேறாகாது பொருளின் உறுப்பு எனவே தோன்றுகின்றன. "மாந்திரிக வகையாலோ, உயிர் நிலை வகையாலோ எல்லாம் இயங்குவனவேயாம்" என்றஇயற்கைக் கொள்கையினிடையே யும் உள்பொருட் கொள்கையானது அடிப்படையாக விளங்கு-தல்காண்க. தோற்றமும் (Phenomenon) மாந்திரிக இயக்கமும் ஒருமைப்பாடின்றி இருமைப்பாடெய்தி முரண்-படுவது அடுத்து நிலையும், கட்டுநிலை ஒற்றுமையும் முரண்-படுவதற்கு ஒத்ததாம்.

முன்னமைப்பும் அனுபவமும் :— "குழவியுள்ளத்தில் தோன்றுவன அனைத்தும் முன்னரே உள்ளமைந்து கிடப் பனவே ஆம்; அவையே பின் மலர்ந்து தோன்றுகின்றன" என்பது முன்னமைப்புக் கொள்கையாம் (Apriorism).

அவ்வாருனல், குழவியின் உள்ள நிலை புறப்பொருளுக்கு அண்மையில் நின்று விளங்குகிறது எனல் வேண்டும். புறப்பொருள் வடிவாகவே எண்ணம் எழுதல் வேண்டும். புறப்பொருள் நிலையைப் பிறந்ததும் அறியவேண்டும் அன்ருே? அங்ஙனம் காணேம். அனுபவத்தைப் பின்பற்றிக் குழவியின் உள்ளம் மாறிவரக் காண்கிறேம். "குழவியின் உள்ளத்தில் ஒன்றும் முன் அமைப்பாக இல்லை. சுற்றுப்புறச் சூழலே நம் உள்ளத்தை முழுதும் அனுபவத்தின் வழியாக உருப்படுத்துகின்றது" என்பது அனுபவக்கொள்கையாம் (Empiricism). இது உண்மையானல் குழவியின் உள்ளம் புறநிலை உலகிற்கு மிகமிகச் சேய்மையில் இருப்பதாதல் வேண்டும். குழவி உலகினை அறிவதே இல்லை எனல் வேண்டும். ஈதும் உண்மை அன்று. குடிவழி (Heridity) யைச் சுற்றுப்புறச் சூழல் மாற்றுவது இல்லை. அது தனித்ததோர் அமைப்பாகும். அங்ஙனமே அறிவும் மாருத தனி அமைப்பாம். நமக்குத் தோன்றும் புலன்கள் (Sensation) முதலியனவும் இந்தக் குடிவழிச் சட்டத்திற்கு ஏற்பவே மனத்திற் பதிகின்றன. அந்தச்சட்டம் அந்த வகையால் சுற்றுப்புறத்திற்கு அப்பாற்பட்டதாம். ஆகையால், இரண்டு கொள்கையும் தனித்தனி நின்று முழு உண்மை ஆவதில்லையாம். உண்மை இவற்றின் நடுநிலை விளக்கமாக ஒளிர்கின்றது. "குழவி வெளிப் பொருள்களைச் சரி பார்க்கின்றது; உலகினைச் சடப்பொருளாக வடிவு படுத்துகிறது; மனமும் உலகமும் ஒத்துழைத்தே உள்பொருள் அறிவை விளைவிக்கின்றன." என்பதே உண்மை.

## XI காரண வளர்ச்சி

காரணவகை :— குழவி காரணத்தைப் பற்றி எண்ணும் கருத்துக்களை வளர்ச்சி முறைப்படி 17 ஆக வகை செய்யலாம்.

1. மன வகைக்காரணம். (உள்ளக்குறிப்பையே காரண-மாகக் கூறுவதாம்)

2. நோக்க நிலைக் காரணம் (உ-ம். கடவுள்)

3. தோற்ற நிலைக் காரணம்-(இடத்தாலும் காலத்தாலும் ஒருங்கு நிற்பனவே காரண காரியத்தொடர்புடையனவாம் எனல். பருக்கைக் கற்கள் வெண்மை நிற முடையன வாதலின் நீரில் மூழ்கின்றன எனக் குழவிகள் கூறுவது காண்க)

4. வசியநிலைக் காரணம் — (ஒப்புமையாவன பொது நிலையுடையனவாய் ஒன்றை ஒன்றியக்கும் எனக் கொள்ளுதல்)

5. மாந்திரிக நிலைக் காரணம் (கையைக் காட்டியதும் சில நிகழ்ச்சிகள் நிகழும் எனக் கூறுதல் காண்க.)

6. தரும நிலைக் காரணம் (கடமையைச் செய்கின்றன எனக் கூறுதல் காண்க. தர்மம் என்றால் உலகைத் தாங்குதல் கடனாற்றல் என்று பொருளாம். இந்த நிலையில் மனவகைக் காரணமும் நோக்க நிலைக் காரணமும் கட்டாயமும் ஒருங்-கியைந்து விளங்குதல் காண்க.)

7. செயற்கை நிலைக் காரணம் (செயற்கைக் கொள்கை-யின் படி கூறுவதாம். பொருண்மையும் நனவு நிலையும் வேறு பிரிந்தபோது அது தரும நிலையொடு சேருமாம். அப்போது செயற்கைக் கொள்கை எழுகிறது.)

8. உயிர் நிலைக் காரணம் (உருப்பெற்று வளர்கிறது என்று கூறுவதாம். சூரியன் வளர்கின்றான் எனப் பேசுதல் காண்க.)

9. இயக்க நிலைக் காரணம் (இயக்கக் கொள்கைக்-கேற்பக் கூறுவதாம். ஆற்றல் என்று பேசுதல் காண்க.)

10. சுற்றுப்புறச் சூழ்நிலைக் காரணம் ("எவ்வாறு நிகழ்கிறது." "என்றால் புற நிலையால் நிகழ்கிறது" எனக் கூறுதல் காண்க)

11. எந்திர நிலைக் காரணம் (ஒட்டுநிலை காரணமாக இயக்கம் அல்லது ஆற்றல் ஒன்றினின்றும் ஒன்றிற் பாய்தல் முதலிய வகையால் எழுவதாம் எனல்)

12. பிறப்பு நிலைக் காரணம் (ஒன்றினின்றும் ஒன்று பிறந்தது என்னும்போது செயற்கைக் கொள்கையும் உயிர்க் கொள்கையும் பயன் படுகின்றன.)

13. பொருள் ஒற்றுமை நிலைக் காரணம்.

14 இறுக்க நெகிழ்வு நிலைக் காரணம். (12, 13 என்ற இரண்டும் பிரியும்போது இந்த நிலை எழுகிறது)

15. அணு நிலைக் காரணம் (அணுவாதம் அணுக்களாம் காரணங்களால் பொருள்கள் எழும் எனல்)

16. இட நிலைக் காரணம்.

17. தருக்க நிலைக் காரணம்.

மூன்று நிலை :— மேலே கூறிய முதல் நான்கு காரணங்களைப் பற்றிய கருத்துக்களும் வளர்ச்சியின் முதல் நிலையில் தோன்றுவனவாம். இரண்டாம் நிலையில் 7-8-9 காரணங்களைப் பற்றிய கருத்துக்கள் தோன்றுவனவாம். மூன்றாம் நிலையில் 10-இல் இருந்து 17 வகையான காரணங்களைப் பற்றிய கருத்துக்கள் தோன்றுவனவாம். முதல் நிலையும் இரண்டாம் நிலையும் காரணம் என்ற கருத்தே தோன்றுவதற்கு முந்து நிலைகளாம் (Pre-causal stage)

மூன்று போக்கு :— இங்கே இந்த வளர்ச்சியில் மூன்று வகைப் போக்குகள் விளங்கக் காண்கின்றோம். காண்பானோடு ஒற்றித்து அக நிலையாக நிற்கின்ற நிலை மெல்லத் தேய்ந்து வரக் காரணநிலை யுணர்வும் குறைந்து பிரிகின்றது. இது ஒரு போக்காம். காலநிலையில் தொடர்பு எழுவது இரண்டாம் வகைப் போக்காம். காரண காரிய நிலைகளைப் படிப்படியாகத் தலை கீழாக மாற்றிப் பார்க்கும் போக்கு எழுகிறது. இரண்டாவது போக்கும் மூன்றாவது போக்கும் மாறுபடுவன அல்ல தொடர்ப்பாடு இரண்டு வகையாகக் கோவை பெற்றெழலாம். நேர் கோவையே படைப்பாம். எதிரிடையாம் கோவையே அழிப்பாம்.

பருவத்திற்கு ஏற்றநிலை :- குழவி, சட்டம் என்ற கருத்தை எவ்வாறு உருப்படுத்திக் கொள்கிறது? சட்டம் என்ற எண்ணத்தில் இரண்டு கருத்துக்கள் உள்ளன. "பொதுமை நிலை எங்கும் உண்மையாகும்" என்ற கருத்து ஒன்று. கட்டாயப்பாடு அல்லது நியதி என்ற கருத்து மற்றொன்று. ஆனால். சட்ட நிலை வெறும் பொதுநிலை மட்டுமே ஆம். காரணநிலை மட்டுமே கட்டாயத்தின் அடிப்படையாம். இங்கு மூன்றுவேறு பருவத்திற்கு ஏற்ப மூன்று வேறு நிலைகளைக் காணலாம். முன்நிலையில் (7-8 வயது) பொதுமை நிலையே தோன்றுவதில்லை. கட்டாயம் அனைத்தும் தருமநிலைக் கட்டாயமே ஆம். தற்செயல் என்ற எண்ணமே இங்கு இல்லை. சமுதாயக் கட்டுப்பாட்டினும் வேறாக இயற்கை நியதியைக் குழவி உணருவதே இல்லை. இரண்டாம் நிலையில் (8-11 வயது) மேற்கூறிய கருத்துக்கள் வேறு பிரிகின்றன. பொதுமை உணர்வு எழுகிறது. மூன்றும் நிலையில் (10-11 வயது) பொதுமையுணர்வு நிலைபேறடைகிறது. இயற்கை நியதியானது தருக்க நியதியோடு ஒன்றுபட்டுத் தோன்றுகிறது. பொதுமை

உணர்வு மிக்குவர மிக்குவரக் கட்டாயம் என்ற கருத்து குறைந்து கொண்டே போகிறது. தருமநிலைக் கட்டாயம் இருந்த இடத்தே, தருக்கநிலைக் கட்டாயம் எழுகிறது. அறிவுநிலை விளக்கமுறுவதற்கு முன்னரே தருமநிலைக் கட்டாயம் எழு-கிறது எனலாம். சமுதாயத்தில் குழவி பெற்றோர்க்கு அடக்கி நிற்கிற நிலை காரணமாக முதல் முதல் எழுவது ஒழுக்க நிலையைப் பற்றிய தருமநிலைக் கட்டாயமே ஆம்.

## XII. சாயலும் ஒட்டும்

சாயல் :— சாயல் பிடிக்கும் தன்மையினைப் பற்றியும் தனதாக்கிக் கொள்ளுந்தன்மையினைப் பற்றியும் முன்னரே கூறியுள்ளோம். அவற்றினைப் பற்றி மேலும் ஆராய்வது விளக்கந் தருவதாம். அறிவு வளர்ச்சியினிடையே துவைதப் போக்கு (Dualism) அல்லது இருமை நிலையைக் கண்டு வந்தோம். உள்ளக் குறிப்புக்களாம் ஊக்கநிலையும் புறநிலைத் தொடர்பும் என்றும், அடுத்து நிலையும் கட்டுநிலை ஒற்றுமையும் என்றும், இயக்க நிலைமையும், காரண நிலைமையும் என்றும் இவ்விரண்டாகப் பேசி வந்தோம் அன்றோ? எண்ணத்தைப் பற்றிப் பேசும்போது அதன் பொருண்மை என்றும் அதன் வடிவம் என்றும் வேறு பிரித்துக் கூறினோம். அநுபவமும் உன்னிப்பும் குழவியினிடம் எதனை நிரப்புகின்றனவோ அதனை எண்ணத்தின் பொருண்மை அல்லது உள்ளுறை என்கிறோம். அவ்வாறு வந்து நிறையும் பொருண்மையிடையே குழவி தானகச் சேர்ப்பதே வடிவமாகும். நாம் தட்டாரிடம் தருவது பொன்னும்; அவர் அணிகலன் செய்து தரும்போது அவர் தாமாக அதிற் சேற்பதே வடிவமாம். அவ்வாறே இங்கும் கொள்க.

ஒற்றுநிலை :— சுற்றுப்புறச் சூழலில் இருந்தும் உயிர்ப்பொருள் சிலவற்றை உணவாக உட்கொள்கிறது. உடல் சோற்றினைப் புறத்திருந்தும் உட்கொள்வது போல உள்ளமும் சிலவற்றைத் தன்னிருப்பிற்கென உட்கொண்டு தனதாக்கி உரம் பெற்றுவருகிறது. இவ்வாறு உள்ளத்தே புகுவனவற்றில் சில நனவுநிலையை அடைவதில்லை. சில மனநிலையை எழுப்புகின்றன. உண்டவுணவை உடலில் ஊறவைக்கும் அமைப்புகள் போல உள்ளத்தே வருவனவற்றையும் உள்ளத்தே ஊறவைக்கும் அமைப்புக்களும் உள்ளன. நனவுநிலை என்பது அத்தகைய அமைப்புகளில் சிறப்பான தொன்றாம். உணவைச் சீரணம் செய்துகொள்ளும் குடல் சோற்றைச் சோறாக உடலில் ஊறவைப்பதில்லை. தனக்கேற்ற இரத்தமாக்கியே ஊறவைக்கின்றது. நனவுநிலை என்ற அமைப்பும் புறநிலையைத் தனதாக்கிக் கொள்ளும்போது புறநிலையைப் புறத்தே இருந்தபடி உட்கொண்டமையாது, புறநிலையைத் தனக்கேற் அகநிலை வடிவாக்கி உட்கொள்கிறது. "உடலில் ஒட்டுகிறதா" என்று பேசுகிறோம் அன்றோ? அதற்கேற்ப உடலில் ஊறவைக்கும் இயல்பினை ஒட்டுநிலை அல்லது உடலோடு ஒன்றும் ஒற்றுநிலை என வழங்கலாம்.

உண்மைத்தொடர்பு :— உண்மையில் நோக்குமிடத்து அகம் புறம் என வெவ்வேறு பொருள்கள் சிறப்புநிலையுற்று விளங்குதல் இல்லை. இவை வெற்றுநிலை எண்ணங்களே ஆம். (Abstractions). உலகிடையே பூதவகைத் தொடர்ச்சியும் (Physical relations) வேதிநிலைத் தொடர்ச்சியுமே (Chemical relations) காண்கிறோம். ஆதலின், புகுவாய் வழியே எழும் புலனையும் இயங்குவாய் வழியே எழும் இயக்கத்தினையும் விட்டு, மனநிலை என வேறு தோன்றுவதில்லை. அவ்வாறு தோன்றுவதாகக் கூறுவது உலக நடையைப் பொருத்த மட்டில் வெற்று

நிலைக்கருத்தே எனலாம். அம்மட்டுமோ? "இயக்கத்தினை விட்டுப் புலன் என ஒன்று தனியே உண்டோ?" என்றும் கேட்கலாம். முதலில் எண்ணங்கள் தசை இயக்கக் கோலங்களாக அமைவதனைக் கண்டோம். அறிவு என்றால் கடந்ததனை எண்ணுவதும், இனிவரப் போவதனை எண்ணுவதுமாம். எனவே, அறிவு என்பது எதிர்பார்க்கும் இயக்கமாகவும், முன் முடிந்த இயக்கமாகவும் விளங்குதல் காண்க. தசை இயக்கக் கோலங்களே எண்ணங்களாகக் குழவியின் உள்ளத்தே அமைந்து வரும்போது, குழவி அகம் புறம் என வேறு பிரிப்பதில்லை. அங்கே தசையியக்கமும் புறப்பொருள் அறிவும் ஒன்றுபட்டே தோன்றுகின்றன.

தசையியக்கக் கோலம் :— உயிர்ப்பொருள் தன்னைத் தாக்கும் பொருள்களுக்கு ஏற்ப மாறுகிறது. அம்மாற்றமே தசையியக்கக் கோலமாக எழுகிறது. இவ்வாறு புறநிலைக் கோலமாக எழுகிறது. இவ்வாறு புறநிலைக்கு ஏற்ப மாறும் நிலையைச் சாயல் பிடித்தல் எனக் கூறலாம். புது இயக்கத்திற்கும், பழைய வழக்கமாய் விட்ட இயக்கங்களுக்கும் தொடர்ச்சி உண்டு. புது இயக்கங்கள் இந்தத் தொடர்பு காரணமாகப் பழைய இயக்கங்களுக்கு ஒத்தாற்போலவே எழுகின்றன. புதிதாக எழும் தசை இயக்கக் கோலங்களும் அங்ஙனமே ஆம். "தனதாக்கிக் கொள்வது பழமையாய் நிற்கும் தனதியல்புக்கு ஏற்பவே நிகழ்கிறது." என மேலே கூறியது இதனாலேயாம். "தசை இயக்கக் கோலங்களே எண்ணம்" எனக்கொண்டால் "சைகை வகையாலும், இயக்க வகையாலும் சாயல் பிடிப்பதும் எண்ண வகையால் சாயல் பிடிப்பதேயாய் முடியும்" எனத் தட்டில்லை அன்றோ? இவை அனைத்திலும் இயக்கமும் உறுப்பாக அமைந்து கிடைத்தல் காண்க.

சாயல் :- "உணர்வு என்றால் உணரும் பொருளைச் சாயல் பிடிப்பதேயாம்." என்று திலக்ருவா (Delacroix) என்ற ஆசிரியர் கூறுகிறார். "இரண்டு எண்ணங்கள் அல்லது உணர்வு-களும் ஒன்றே" என்று நாம் கருதும் போது இரண்டற்கும் ஒப்புமையுண்டு. பச்சைத் தோற்றத்தை மரம் எனக் காணும் காட்சி இதனை வற்புறுத்தும். மரம் தொலைவில் பசுமைப் பரப்பாக அன்றோ தோன்றுகிறது? அவ்வாறு "இன்னது" என விளங்காத உணர்வுப் பொருள்கள் ஒரே நிலையில் ஒரே வடிவமாக முற்றுவிக்க முடியாதபோது, வெற்றுநிலை தோன்றுகிறது. வெற்றுநிலையாய்க் கிடக்கும் அந்த உண்மைப் பொருண்மையில் கிடக்கும் கோலங்கள் பலப் பலவாம். அவை ஒவ்வொன்றின் இடையேயும் பல பல உறுப்புக்கள் இயக்க வடிவாகவும் பிறவடிவாகவும் இருக்கும் எனக்-கண்டோம். அக்கோலங்களிலிருந்து சில பல உறுப்புக்களை வேறு எடுத்து அவற்றைக்கொண்டு புதியதொரு கோலமாக வடிவம் கொள்ளுமாறு செய்கின்றோம். இவ்வாறே புதிய புதிய கருத்துக்கள் எழுகின்றன எனலாம். இதனையே தனதாக்கிக் கொள்ளும் தன்மையாம் உயிர்த்தன்மை எனலாம். ஒரு கருத்தினைப் பற்றிய அனுபவம் எழுவதற்கு முன்னரே உயிர்ப் பொருளின் இத்தகைய அமைப்பு நிலை காரணமாக, அக்கருத்தினை உருப்படுத்துவதும் இயலுவதாகிறது. புறப் பொருள்களின் இயக்கத்தினை இவ்வாறு தனது தசை இயக்-கங்களோடு ஒன்றாக்கி எண்ணக் கோலங்களாக இயைவித்த பின்னரே, குழவி தன் அக அனுபவத்தை நனவு நிலையாக உணர வருகின்றது. புறப்பொருளைப் பற்றிய எண்ணங்களோடு அகநிலை முட்டுவதால் அகநிலையைப் பற்றிய உணர்வு எழுகிறது.

ஒற்றுநிலை - ஒட்டுநிலை :— புறநிலையைத் தனதாக்கிக்-கொண்டு நிற்கும் நிலையே ஒற்று நிலையாம்; அல்லது ஒட்டு நிலை-

யாம். குழவியின் மனத்திலே தோன்றும் ஒட்டுநிலை ஒப்புமை-யால் எழுந்தது என்பதற்கு, அகமும் புறமும் இரண்டு என்ற எண்ணம் இருந்தாலன்றோ ஒப்புமை என்று பேச இடம் உண்டு. அறிவுநிலை எழுவதற்கு முன்னரே அகமும் புறமும் ஒற்றிக்கிடக்கக் காண்கிறோம். இந்த ஒட்டு நிலையையே தனதாக்கிக் கொள்ளுதல் எனக் கூறினோம். செயற்பாட்டின் பயனாக இயக்கநிலைக் கோலங்கள் முன்னரே முன் கூறியவாறு அமைகின்ற உண்மையை உணர்ந்தாலன்றி இந்த ஒற்று-நிலையை உணர்வது அருமையாம். இந்த ஒற்றுநிலை அமைப்பினை ஆராய,முதலிருந்து விளங்கும் உயிர்ப்பொருள் வாழ்க்கைக்கும், முன் கூறியதுபோலப் பின்னர் எழும் அறிவு வாழ்க்கைக்கும் இடைப்பட்ட நிலத்தை ஆராய்தல் வேண்டும். அதாவது குழவியின் முதலிரண்டு ஆண்டுகளை ஆராய்தல் வேண்டும் என்க. தானும் உலகமும் மயங்கி நிற்கும் நிலை தன்னிற்றானே எழும் மயக்கமாம். இந்த வடிவு முன்னரே மாறாது அமைந்-துள்ளது எனக் கூறுவதற்கு இல்லை. அது மாறக் காண்கிறோம் அன்றோ? வடிவமும் பொருண்மையும் பிரிக்க முடியாதவே ஆம். எதனைப் பற்றியும் முடிவுகூறும் தீர்ப்பு நிலைக்கு இந்த ஒற்றுநிலை பொருத்தமானதாகும்.

இரண்டன் ஒத்துழைப்பு :— உயிர்ப்பொருளைத் தனியே விட்டால் தன் புறச் சூழலைத் தனதாக்கிக்கொண்டு மாறும் போக்கே விளங்கும். புறச்சூழலோ முன்னிருந்தது போலவே மாறாது இயங்கும். உயிர்ப்பொருள் இந்தப்புறச் சூழலை இவ்வாறு மாறாமல் இருக்கவிடாது இந்த ஒற்றுமை நிலைக்கேற்ப உருக் குலைத்து வருகிறது. ஆனால், இவ்வாறு உருக்குலைப்பதனைச் சுற்றுப் புறச்சூழல் தடுத்தும் நிற்கின்றது. இந்தத் தடையின் வன்மைக்கேற்ப உயிர்ப்பொருள் மாற வேண்டியதாகிறது. ஆகையால், இந்த மாற்றங்கள் ஒவ்வொன்றும் வலிதாய்த் தாக்கும் புறப்பொருளைச் சாயல் பிடிப்பதாக முடிதல் காண்க.

எனவே, "சாயல் பிடித்தலுக்கும் தனதாகக் கொள்ளும் ஒற்றுநிலைக்கும் (ஒட்டுநிலைக்கும்) உள்ள போராட்டமே உயிர் நூலின் (Biology) திரண்ட கருத்து எனலாம்" என திலக்ருவா (Delaccroix) முடிக்கின்றார். ஒற்றுநிலையாவது (ஒட்டுநிலையாவது,) புறப்பொருளைத் தனக்கேற்ப மாற்றுதலாம்; நீக்கமுடியாத சிறப்பியல்புகளைப் போக்கி உட்கொள்வதாம். சாயல் நிலையோ தடை எழுப்பக்கூடிய மனநிலைகளை விட்டுப் புறப் பொருளுக்கு ஏற்பத் தான் மாறுவதாம் ; புதியநிலையை ஏற்று நிற்றலாம். முதலில் இந்த இரண்டு நிலையும் வேறுவது இல்லை. இரண்டும் சமநிலையை அடையவே முயல்கின்றன. சாயல்நிலை வென்றால் அடுத்துநிலையே (Juxtaposition) சிறந்து விளங்கும். இது நிலைத்து நிற்பதில்லை. இரண்டும் ஒத்துழைக்க வருகின்றன. உருக்குலையாத ஒற்று நிலையே (ஒட்டுநிலையே) உய்த்துணர்வாகும். அறிவுநிலையின் பொருத்தமுறுந் தன்மையாகவே சாயல் என்பது வளர்கிறது. உய்த்துணர்வும் அனுபவமும் ஒரே செயற்பாட்டின் இருவேறு முனைகளாக அமைகின்றன. இவை இயற்கைப் புறநிலைக்கு மட்டும் எதிருன்றலாக எழுகின்றன என்பதில்லை. இவை சமுதாயச் சூழலுக்கும் எதிருன்றலாக எழுகின்றன. ஆனால், உருக்குலையும் ஒற்றுநிலை 'தானே நடுவாந்தன்மையே' யாம். சாயல்நிலை சமுதாயத்தையும் சாயல் பிடிப்பதாக விளங்குகிறது. இந்த இரண்டு நிலையின் கூட்டுறவால் சாயல் பிடித்தல் என்பது பிறருக்கும் பொருத்தம் உறுதலாக அமைய, ஒற்றுநிலை (ஒட்டுநிலை Assimilaton) பிறரை உணர்ந்தறிவதாகவும் பரிமாற்ற மனப்பான்மையாகவும் மாறுகிறது.

## XIII. தருக்கமும் உள்பொருள் வகையும்

இருவகை எண்ணம் :- குழவியின் தருக்க முறையைப் பற்றி இதுவரை விளங்கியுள்ளதனைத் திரட்டி ஆராய்தலும்

விரும்பத் தக்கதேயாம். குழவியின் எண்ணம் தானாக எழு-கின்ற நிலையை நாம் இங்குக்காணவில்லை. நாம் கேள்வி கேட்கும் போது முறைபெற்று உருக்குலைந்த எண்ணங்களையே இதுவரை கண்டு வந்தோம். கேள்விக்கு விடைகூறாத நிலையில், குழவியின் மனம் எவ்வாறு இருந்திருக்கும்? அகக்காட்சி-களும் தசை இயக்கக் கோலங்களுமாகவே அதன் மனம் கிடந்திருக்கும். இவை தாமாகவே இயங்கும் எண்ணமாம். இவைவேறு. சொல்லாகவும், பொது எண்ணமாகவும் வருவன வேறு. அவை தருக்க எண்ணமாம். போக்குடை எண்ணம், போக்கிலா எண்ணம் என முன்னரும் கண்டோம் அன்றோ? எண்ணம் மறைவாகவும் வடிவம் பெறாமலும் நிற்குமானால், அது, தானே இயங்கும் எண்ணமேயாம். சமுதாய எண்ண-மாக மாறிவரும் நிலையில் அது தருக்கமுறை எண்ணமாம்.

• •

அடுத்துநிலை உய்த்துணர்வு:-இதனாலே, சமுதாய உணர்ச்சி முற்றாத முதல் நிலையில் தருக்க முறை எண்ணம் எழுவது இல்லை. கருத்துக்கள் வெவ்வேறு நிலையில் தனிப்பட்டுத் தோன்றுவதும் இல்லை. அங்கே ஒரு நம்பிக்கை மற்றொன்றைத் தாக்குவது உண்டு. ஆனால், நனவுநிலையில் புலனாகாது நனவிலி-யாகவே அந்நம்பிக்கை கிடக்கின்றது. எண்ணம் அந்த நிலையில் ஒருமுறை பெற்று விளங்குவது இல்லை. அதனால் முறைக்-கேடும் நனவுநிலையில் உணரப் படுவதில்லை. அங்கு அடுத்து-நிலை உய்த்துணர்வு (Transducton) உண்டேயன்றி உண்மை நிலை உய்த்துணர்வு என்பது எழுவது இல்லை. சிறப்பு நிலையில் இருந்து சிறப்புநிலைக்கு உய்த்துணர்ந்து குழவி செல்வதனைப் பல முறையும் கண்டோம் அன்றோ? இந்த அடுத்து நிலையுய்த்துணர்வு மனவகைச் செய்க்காட்சியாம். இருப்பதனை இருப்பது போலவோ, இருக்கக் கூடியது போலவோ அகக்-காட்சியில் மறித்துக் காணலாம். அங்குத் தீர்ப்புக் கூறுவது

பயனைப் பற்றியும் ஆகலாம்; பொருள்களின் இயைபைப் பற்றியும் ஆகலாம். ஆனால், இந்தப் பயனிலை வகையான தீர்ப்பும், இயைபுநிலை வகையான தீர்ப்பும் காண்பானின் அக-நிலையைப் பொறுத்த மதிப்பீடே (Valuation) அன்றிப் புற-நிலையுண்மையைப் பொறுத்தன அல்லவாம். தீர்ப்புகளின் சிக்கலான கலவை நிலையை இங்கு நோக்குவோமானால், முரண்பாட்டை உணராது, சிறப்பு நிலையிலிருந்து சிறப்பு நிலைக்குப் போவது மட்டுமே காண்கிறோம். கட்டுநிலை ஒற்றுமையும், ஒப்புமையுமே இங்கு நிகழும் முறையாம். தருக்க இயைபை அறியாமைக்கும் இந்த நிலைக்கும் தொடர்பு உண்டு என்பது வெளிப்படை.

வகையும் தருமமும் :- முதலாக நேரே காட்சியிலிருந்து-தான் அறிவுநிலை தொடங்க வேண்டும் என்ற நியதி இல்லை என்பது வெளியாகிறது. தவறான அடிப்படையைக் கொண்டும் அறிவாராய்ச்சி தொடங்கலாம் என்பது குழவியின் பல கருத்துக்களை ஆராய்ந்தபோது வெளியாயிற்றன்றோ? இரண்டாவதாகக் குழவியின் ஆராய்ச்சி அனைத்தும் மனச் செய்க்காட்சியே என்பதும் விளங்கிற்று. இயைபுநிலைத் தருக்க முறையைக் குழவி உணருவதில்லை. முறைமை நிலைக் கொள்கையினையும் உணராது தனிநிலை உண்மையாகவே அனைத்தினையும் குழவி காண்கிறது. தன்னிலையில் இருந்தே அனைத்தினையும் காண்பதனால் எடை, நிறம், அளவு முதலியன முறைமை நிலை உண்மையாகாது தனி நிலை உண்மையாகக் குழவிக்குத் தோன்றுகின்றன. இயைபுநிலையை உணராமையும் மனச்செய்க் காட்சியும் ஒன்றை ஒன்று பற்றிக் கிடப்பனவாம். மூன்றாவதாக 'வகை நிலைத்தருக்கமும்' (Classification) அங்கு இல்லை. பொருள்களை இனம் இனமாகப் பிரித்து ஆராயும் முறையினை வகை நிலைத்தருக்கம் எனலாம். இது

இயைபு நிலைத் (Relation) தருக்கத்திற்குள் அடங்கியதே ஆம். இயைபுநிலைத் தருக்கம் எழும்போது மட்டுமே பொதுமை அறிவும் உடனிகழ்ச்சியுணர்வும் (வியாத்திஞானம்) உய்த்துணர்வும் எழ இடம் உண்டு. 'வகை' என்ற கருத்து அறிவு-வகை வரையிலும் பெருகிக்கொண்டே போகும். இயைபு நிலையில் விஞ்சி எஞ்சுவதே வகை எனலாம். வகை என்பது இவ்வாறு எஞ்சுவதாக மட்டும் நில்லாமல் ஒரே நிலையில் விளங்-காததாய் அவ்வந் நோக்கத்திற்கேற்ப மாறிக்கொண்டே இருப்பதாகவும் விளக்குகின்றது.

பொதுமைநிலை :— உண்மையுணர்வு, தான் எழுந்து அமைகிற முறைக்கு மாறாய்த் தலைகீழாக நனவுநிலையில் விளங்கும். நனவுநிலையுணர்வு என்ற நோக்கிலிருந்து கண்டால், சட்டங்கள் எனப் பெறுபவை அவற்றை விளக்கும் உணர்-விற்கு முன் எழுவன எனலாம். சட்டத்தினைக் கண்டு பிடிப்ப-தற்கும் முன்னையதாம் நிலையை நோக்குதல் வேண்டும். அந்த வகையில் அந்தநிலை பொதுமை உணர்வு எழுதற்கும் முந்திய நிலையாம். அந்த நிலையில், அறிவிற்குப் புலனாக (விஷயமாக) வரும் பல பொருள்களிடையேயும், குழவியின் செயற்பாடுகள், பல வகை இயைபுத் தொடர்களையும் பின்னிக்கொண்டே வந்து, அவ்வாறு பின்னிய தொடர்புநிலைப் போர்வையைப் போர்த்திக்கொண்டு கிடக்கின்றன. மனம் செய்யும் இந்த வேலையினையே முதல் முதல் நாம் உணர முயல்கின்றோம். அதனை உணர்ந்த பின்னரே அது வந்த முறையும் வழியும் விளங்குகின்றன. படிப்படியாய்க் குழவி தன் நோக்க நிலையையும், பிறர் நோக்க நிலையையும் உணர முறைமை நிலைக் கொள்கையானது, எண்ணங்களை உருப்படுத்தி வளர்க்கின்றது. படிப்படியாக மனச் செய்க்காட்சிகள் இயைபுநிலைத் தருக்க முறையின் வழியே படைப்புநிலை அமைப்புகளாக மாறி வரு-

கின்றன. படிப்படியாகப் பொதுநிலைவளர வகைகள், இனங்கள் என்ற கருத்துக்கள் எழுகின்றன.

அறிவும் அனுபவமும் :- தருக்கமோ அறிவாராயச்சியின் அமைப்பையே வரையறுப்பதாம்; எண்ணத்தின் வடிவினைப் பொறுத்ததாம். உள்பொருள்களின் வகைகள், போருண்மை-யைப் பொறுத்தனவாம். வடிவமும் பொருண்மையும் ஒன்றை ஒன்று உருப்படுத்துகின்றன. அறிவோ தருக்க முறையால் தெளிவுறுவதாம். அனுபவமும் உள்பொருளால் எழுவதாம். அனுபவம் அறிவை உருப்படுத்துகிறது. அறிவு அனுபவத்தினை உருப்படுத்துகிறது. அறிவு வளர்ச்சியின் ஒவ்வொரு நிலை-யிலும் இந்த இரண்டு வகையான செயல் முறைகளைக் காணலாம். இந்த இரண்டு வகை வளர்ச்சியும் புகை வண்டி ஓடுதற்கு இடமாம் இரு கம்பிகள் போல ஒரு போகாக (Parallel) வளர்ந்து ஒருங்கே ஓடுகின்றன எனலாம். புறநிலை உலகை ஆக்கி அமைப்பது "தானே நடுவாம் தன்மையின்" அறிவேயாகும். அறிவாராய்ச்சியின் விரிவும் அப்போது தான் நிகழ்கிறது. புறநிலை நோக்கமும், சமுதாய வகை எண்ணமும், பரிமாற்ற மனப்பான்மை எழுவதும் அப்போது தான் என்க.

முதல்நிலை :— தருக்கநிலை வளர்ச்சியும் உள்பொருள் வளர்ச்சியும் ஒவ்வொன்றும் மும் மூன்று நிலையாக விளங்கு-கின்றனவாம். முதல் நிலை மூன்று வயது வரை உள்ளதாம். "'ஏன்' என்ற உணர்வு எழும்வரை உள்ளது" எனக் கருத்து வகையால் இந்தப் பருவத்தினை வரையறுக்கலாம். தானாக இயங்கும் எண்ணமே இங்கு உண்டு. இதனைப் பகற்கனவுலகம் எனலாம். எண்ணமும், விருப்பமும் மயங்கக் காண்கிறோம். ஈதே இங்கு விளங்கும் தருக்கநிலை. உள்பொருள் வகையைப் பொறுத்தமட்டில் மனது வகைக் காரணநிலையும், மாந்திரிக நிலையும் இங்கு விளங்கக் காண்கிறோம்.

இரண்டாம் நிலை :—இரண்டாம் நிலை 7—8 வயது வரை உள்ளதாம். தருக்க முறையைப் பொறுத்த மட்டில் "தானே நடுவாந்தன்மையே" இந்த நிலையில் நிலவுகிறது. உள்பொருள் வகையைப் பொறுத்த மட்டில் காரணம் என்ற கருத்து எழுவதற்கும் முந்திய நிலையே இங்கு விளங்குகிறது. மனச் செயலையும் இயற்கைத் தோற்ற எந்திர இயக்க அமைப்பினையும் (Physical mechanical dynamism) ஒன்றெனக் குழவி மயங்குகிறது. அடுத்தநிலை உய்த்துணர்வாம் (Transduction) தருக்கமுறைக்கு ஏற்பப் பொருள் நிலையில் வசியநிலையே காண்கிறோம். பொருள்கள் எல்லாம் பொதுநிலை உணர்வுகளே என்ற கொள்கையினைப் பொதுநிலைக் கொள்கை (Conceptionalism) என வழங்கலாம். இந்தக்கொள்கை தருக்க முறையில் வலிவடைந்து நிற்பதற்கு ஏற்பப் பொருள் நிலையில் இயக்கநிலைக் கொள்கையே விளங்குகிறது. பொது உணர்வுக்கொள்கை வலிவுறுத்துவதும் அடுத்துநிலை உய்த்துணர்வின் (Transduction) பழக்கத்தாலேயாம். பொதுமை நிலைச்சட்டம் ஒன்றும் இடையிடாமலேயே, சிறப்பு நிலையிலிருந்து, சிறப்பு நிலைக்குக் குழவி சென்று அறிகிறது. காரண நிலையை நோக்கினல் இங்கு வசியநிலை விளங்கக் காண்கிறோம். இது இயக்கக் கொள்கையோடு ஒத்துப்போதல் காண்க. எண்ணங்கள் எழுகின்றன. அவை பொதுநிலை போன்றும் தோன்றலாம். ஆனல், அவை கட்டுநிலை ஒற்றுமைநிலைக்கோலங்களே அன்றி உண்மையான பொதுமைநிலை எண்ணங்கள் அல்லவாம். இங்குக்கூறும் கோலமும் தனிப் பொருள்களின் ஒற்றுமையேயாம். இந்தநிலையில் பொருள்கள் அனைத்தும் மூர்த்தப் பொருளே எனக்கொள்ளுதலும் எளிதே அன்றோ?

மூன்றாம்நிலை :— மூன்றாம்நிலை 8 வயதிற்குப் பின் எழுவதாம். இங்கு அறிபொருள் வகையும் தருக்கமுறையும்

புதியதோர் ஒருபோகு நிலையை (Parallelism) அடைகின்றன எனலாம். உய்த்துணர்வின் தோற்றமும் உள்பொருட் கொள்கையின் அழிவும் உடன் எழுகின்றன. “எண்ணத்தி-னுள்ளே அடங்கிக் கிடக்கும் உள்பொருளே தருக்கவடிவை அமைக்கின்றதா ? தருக்க வடிவம் உள்பொருள் வகையை அமைகின்றதா?” என்பதொருகேள்வி. ஆனால், இந்தக்கேள்-விக்குப் பொருள் இல்லை. தருக்க வடிவினை மனநிலை வடிவினும் வேறு படுத்தினால் விளக்கம் உண்டாகும். தானுக்கிக்கொள்ளுந் தன்மையைப்பற்றி முன் கூறியதனை இங்கு உணர்ந்தால் இங்குக் கூறியது விளங்கும்.

“எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்ப தறிவு” (குறள்)

---

# 28. குழவி உலகு - ஒழுகலாறு

---

## I. கோலி ஆட்டம்

அறநிலைத் தீர்ப்பு :—குழவியின் அறநிலைத் தீர்ப்பு (Moral Judgment of the Child) என்ற நூலில், பியாழே, குழவியின் அறநிலைக் கருத்தினையும், ஒழுகலாற்றினையும், அவற்றினைப் பற்றிக் குழவி கொள்ளும் முடிபினையும் ஆராய்கின்றார்.

உணர்ச்சியும் முறையும் :—குழவி உலகம் விளையாட்-டுலகமாகும். அதன் ஒழுகலாறு விளங்குவது அங்கேயே

ஆம். ஆதலின் "ஆட்டத்தின் சட்டங்கள்" (Laws of Games) என்ற வடிவிலேயே அதன் ஒழுக்கநிலை தோன்றுகிறது. எல்லா ஒழுக்கமுறையும் சில விதிகளின் முறையே ஆம். அந்த விதிமுறையினைப் போற்றும் மனப்பான்மையே ஒழுக்க முறையின் உயிர்நிலையாம். ஆகவே, செய்திகளை இரண்டு வகையாக வைத்து ஆராய்தல் வேண்டும். ஒன்று விதிகளைப் பின்பற்றும் நிலையை ஆராய்வது; மற்றொன்று விதிகளைப் பற்றிய உணர்ச்சியை ஆராய்வது.

பல நிலைகள் :— அனைத்து நாட்டுக் குழவிகளிடத்திலும் பரவி இருக்கும் ஆட்டம் கோலியாட்டமே ஆம். இதனை ஆராயும்போது விதிகளைப் பின்பற்றும் முறையில் நான்கு நிலைகளையும், விதிகளைப் பற்றிய உணர்ச்சி முறையில் மூன்று நிலைகளையும் காண்கின்றோம். விதியைக் கடைப்பிடிக்கும் முதல் நிலையில் அறநிலை எண்ணங்கள் எல்லாம் தசையியக்க வடிவமாகவே அமைகின்றன. குழவி தான் விரும்பும்போது விளையாடுகின்றது. சடங்குகளான முறைகள் மெல்ல அரும்புகின்றன. இரண்டாம் நிலையில் (2-5 வயது) தானே நடுவாந்தன்மை விளங்குகிறது. குழவி முறைப்படுத்திய விதிகளை அறிந்து கொள்கிறது. ஆனால், அது இன்னும் தானாகவே விளையாடி வருகிறது. மூன்றாம் நிலையில் (7-8 வயது) கூட்டுறவு நிலை தளிர்க்கின்றது. ஆனாலும், வெற்றிபெறும் விருப்பமே மேல் ஓங்கி நிற்கிறது. ஆனால், இந்த எண்ணங்கள் வரையறையுற்றுத் தெளிவு படாமல் மயங்கிக் கிடக்கின்றன. நான்காம் நிலையில் (11-12) சட்டங்கள் கோவைபெற்று ஒளிர்கின்றன.

முறை-முதல் நிலை :— முதல் நிலையைச் சிறிது உற்று நோக்கலாம். முன்னரே விளங்கும் திட்ட முறைகளுக்கு

ஏற்பச் செயற்பாடு திருத்தம் பெறும் நிலையிலேயே சடங்குகள், அடையாளங்கள் முதலியன தொடங்குகின்றன. சடங்கு ஓர் ஆட்டமே ஆம். சில செயல்களைக் குறிப்பிட்ட முறைப்படி மாருது செய்துவருவது தானே சடங்கு. "செயற்கைமறி" மனப்பான்மை விளங்கும் புனிற்றிளங்குழவியினிடம் சடங்குகளின் பயனுக முதலாண்டின் முடிவில் அடையாளங்கள் என்ற கருத்தும் தோன்றுகிறது. ஒன்றனையே திருப்பித் திருப்பிச் செய்யும் வழக்கம், செய்வதுபோல நடிக்கும் உணர்வை, வளர்க்கின்றது. இந்த நிலையில் அடையாளங் காட்டலும் ஆட்டமாகிறது. குழவி பேசத் தொடங்கியதும் அடையாளங்கள் குழவியின் எண்ணத்திற்கு விஷயமாகின்றன; எண்ணப்படு பொருளாகின்றன. குறிப்பிட்டபடி செய்துவரும் முறையிலுள்ள மகிழ்ச்சி மட்டும் தோன்றும் நிலை ஒன்று. இதுவே முதலில் உள்ளது. இந்த முறையாகச் செய்வதே கடமை என்ற உணர்ச்சி இதனினும் வேறு. சமுதாயத்தின் இருப்பினைக்குழவி உணரத் தொடங்கியதும் இந்தக் கடமை உணர்ச்சி எழுகிறது எனலாம். போற்றும் மனப்பான்மை செயல்களிடையே மாறிவரலாம். ஆனல், இங்கு எல்லாம் கீழ்ப்படிதல் என்ற மனப்பான்மை விளங்கி வருகிறது. கடமை உணர்ச்சி புகுந்ததும் சடங்கே விதியாகலாம். இவ்வாறு சடங்கும் விதியும் ஒரு நிலையாகத் தொடர்ந்து விளங்கினும் இவற்றின் இயல்பில் வேற்றுமை உண்டு. அடையாளம் (Sign) என்ற கருத்து பொதுமையைக் குறிப்பதாம்; வெற்று நிலையாம் (abstraction); உள்ளீடான தொடர்பற்றதாம். அறிகுறி (Symbol) என்பதோ சிறப்பு நிலையைச் சுட்டுவதாம்; ஊக்கநிலை உடையதாம். அறிகுறியைப் பின்பற்றி அடையாளம் எழவேண்டுமானல் தனியாளின் கற்பனையிலிருந்து ஆளுமைக்குரிய கனவுகளைக் களைந்தெறிய வேண்டும்.

விதிகளைக் கோவையாகத் திரட்டுவதோடு கட்டாயப்பாட்டுடன் எழவேண்டிய பொதுநிலைக் கற்பனைகளை விரித்தல் வேண்டும். தனிநிலைக் கற்பனையோ அறிகுறியோ அங்கு எழமாட்டாது கிடக்கின்றது. ஆட்டமும் கற்பனையாக மாறும்போது பிறகுழவிகளின் கற்பனைகளைப் பொருட்படுத்தாது தனது அகநிலைக் காட்சியையே கண்ணும் கருத்துமாகக் குழவி கருதி வருகிறது.

முறை 2-ம் நிலை :— இரண்டாம் நிலையை நோக்கினால் அங்குத் "தானே நடுவாந்தன்மையே" விளங்குகிறது. இந்த நிலை தனி நிலைக்கும் சமுதாய நிலைக்கும் இடைப்பட்ட-தாகும். முதலாண்டின் முதலிலிருந்தே பேச்சு வழக்காலும், சாயலாட்டத்தாலும், முதியோரது துணையாலும் சமுதாய நிலை எழுந்து விளங்கத் தொடங்குகிறது. சமுதாய உணர்வு எழும்போது "தான்" என்ற உணர்வும் எழுவதால் குழவி தனிப்பட்டு வருகின்றது. தான் உலகின் நோக்கத்தோடு ஒன்றுபட்டுக் கிடப்பதாகக் குழவி கருதினாலும், குழவியின் எண்ணம் தனிப்பட்டே நிலவத் தொடங்குகிறது; சமுதாயக் கருவிகளாம் பேச்சு முதலியன கொண்டு தனிநிலையில் விளையாடி வருகிறது. இங்கே குழவி வெற்றியை விரும்பு-கிறது என்றால் பிறரை வெல்லக் கருதுகிறது என்று பொருள் இல்லை; தானே தடையின்றி ஆடுவது என்றே பொருளாம். விளையாடும்போது குழவிகள் ஒன்றை ஒன்று பார்ப்பதும் இல்லை. அங்கு எழுகிறது தசை இயக்கத்தால் வரும் இன்பமே அன்றிக் கூட்டுறவால் எழும் இன்பமன்று. பெற்றோர் முதலிய பெரியோர்களின் துணையையே நாடி நிற்கும் குழவி பெரியோரின் நிலையாகத் தான் கருதுவதனையே தனக்கு மேல்வரிச் சட்டமாகக் கொண்டுவாழும். அதன் சமுதாய வாழ்வு அவ்வாறு விளங்குகிறது.

முறை-3-ம் நிலை:—மூன்றும் நிலையில் இவ்வாறு தனியே விளையாடி வருவதனை விட்டொழித்துப் பிற குழவிகளையும் பிறரையும் அறியவேண்டிய தேவை குழவியினிடம் எழுகிறது. "வெற்றி என்றால் பிறரை வெல்வதே" எனக் குழவி கருதி வருகின்றது. பொது விதியைப் பின்பற்ற வேண்டும் எனவும் அது அறிகிறது. குழவிக்குக் கூட்டுறவில் ஓர் இன்பம் பிறக்கின்றது; விதிகளைக் கண்டு பிடித்தறிய வேண்டும் என்ற முயற்சி எழுகிறது.

முறை-4-ம் நிலை:-நான்காம் நிலையில் விதிகளைக் கோவையாகத் திரட்டிக் காணும் காட்சி எழுகிறது. குழவிக்குச் சட்டங்களைப்பற்றிப் பேசுவதிலே ஓர் இன்பம் பிறக்கிறது. விளையாடும்போது ஏந்த எந்த நிலைகள் எல்லாம் எழக்கூடும் என எதிர்பார்த்து அந்த அந்த நிலையில் எல்லாம் என்ன என்ன விதியைக் கையாளுதல் வேண்டும் என எண்ணுவதிலும் ஒரு மகிழ்ச்சி அதற்குப் பிறக்கிறது. விதிக்கென்றே விதியில் ஓர் அக்கரை வளர்ந்து வருகிறது.

உணர்ச்சி 1-ம் நிலை:— விதிகளைப்பற்றிய உணர்ச்சி-முறையை ஆராய்ந்தால் முதல் நிலையில் கட்டுப்பாட்டுணர்ச்சி இல்லாமையால் விதிகள் தன்னை வற்புறுத்துவதாகக் குழவி நினைப்பதே இல்லை என்பது விளங்குகிறது. இங்குச் சடங்கிற்காகவே குழவி சடங்கினைச் செய்கிறது. இயற்கை நிகழ்ச்சிகள், பெரியோர் இடும் விதிகள் என்ற இவற்றிடையே விதியுலகில் குழவி வாழ்கிறது. இந்தச் சூழல் சில செயல்களைச் செய்ய உடன்படுகிறது. அங்கே கடமை என்ற உணர்வு துளிர்க்கின்றது.

உணர்ச்சி 2-ம் நிலை :— இரண்டாம் நிலையில் விதிகளை, அருகும் செல்லத்தகாத அவ்வளவு தெய்விகமானவாகக்

குழவி கருதுகிறது. இந்த விதிகள் தான் கடவுளாகக் கருதும் பெற்ருேர் முதலியோரிடமிருந்து வெளி வருகின்றன எனக் குழவி எண்ணுகிறது.

உணர்ச்சி 3-ம் நிலை :—மூன்ரும் நிலையில் விதியே சட்டமாகிறது. குழவியின் பழைய நினைவாக உள்ளனவும் புதிதாக அது படைப்பனவும் ஒன்ருகிப் போகின்றன. இவற்றிடையே வேறுபாடு அறியக் குழவியால் முடிவதில்லை. தானே படைத்தது, பிறர் கற்பித்தது என்பவற்றையும் குழவி வேறு பிரித்து அறிய இயலாது. குழவிகள் தம்முள் தாமே ஒத்து நடந்து ஒப்புக் கொண்டவையே சட்டங்கள் என்று கருதுகின்றன. ஆதலால், தாம் ஒப்புக்கொண்ட சட்டங்களைப் போற்றும் மனப்பான்மையுடனும் வஞ்சியாத உண்மை மனப்பான்மையுடனும் பின் பற்றுதல் வேண்டும் எனக் குழவிகள் உறுதி கொள்கின்றன. விதிகள் மாருத கடவுட்சட்டங்களாக அன்றிப் பொதுக் கொள்கையை ஒட்டி மாற்றக் கூடியவை என்ற கருத்தும் வலிவடைகிறது. இந்த மூன்ரும் நிலையில் 9 வயதிற்குப் பின் பிறர் இயக்க இயங்குவது போய்த் தானுகத் தன் உரிமையோடு தன் விருப்பப்படி இயங்கும் தன்னுட்சி நிலை குழவியிடம் எழுகின்றது. கடவுள் ஆட்சியின் பின், குடி அரசு தோன்றுகிறது எனலாம். கூட்டுநிலைக் கருத்தினை (Collective opinion)க் கட்டாயம் ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற குருட்டெண்ணம் ஒழியும் அளவு செய்க்காட்சிக்கு இடம் ஏற்படுகிறது. சட்டங்கள் என்றும் அழியாது நின்று நிலவுவன என்ற கருத்து மறைகிறது. சட்டம் சமுதாய நிலையில் ஓர் இயல்பாக விளைவதே என்ற உண்மை விளங்குகிறது. கட்டுப்பாடு இல்லாதபோதும், ஒழுக்கமும் மறைவதில்லை. கூட்டுறவு விதியே ஒழுக்கமாகிறது.

இவ்வாறு தன்னாட்சி தோன்றும்போது மட்டுமே உண்மையான சட்டமதிப்பு தோன்றுகிறது. ஒப்பந்தத்திற்கு இன்றியமையாத நிமித்தம் விதியேயாம். 12-13வது வயதில், குழவிகள், சட்டத்தை மீறும் நிலையையும், சட்டத்திற்கு இணங்க புதியனவற்றை நிலைநாட்டும் நிலையையும் வேறு பிரித்து அறிகின்றன. ஒழுங்குமுறை மட்டுமே இங்குக் கட்டாயமாம். கருத்துக்களோ, சூழ்ந்து பேசி, வாதிட்டு முடிவு கட்டுவதற்கு இடம் தருவன ஆம். கூட்டுறவும் அறிவுநிலை ஒழுக்கமும் பரிமாற்றத்திற்கே இடம் கொடுக்கின்றன. சரி, தவறு என்று முடிவு கட்டுவது பெரும்பான்மையோர் கொள்கை-யைப் பின்பற்றி மட்டும் எழுவதில்லை. அந்த அந்த ஆட்டத்தின் இயல்பிற்கும், பிற சூழல் நிலைக்கும் பொருத்த-மாகும் இயற்பிற்கும் தகச் சூழ்ந்து எண்ணியே சரி தவறு என்ற முடிவு கூறக்கூடும். இவ்வாறு முறைமை நிலை உண்மையைக் குழவிகள் உணருகின்றன. இவ்வாறு விதிகளை மாற்றலாம் என்ற உறுதி வந்ததும் "விதிகளை முதியோரே கண்டனர்" என்றும் "விதி என்றும் நிலவுவதாதலின் அது இன்று தோன்றியது என்று கூறுவதற்கில்லை" என்றும் நம்பிய நம்பிக்கைகள் படிப்படியாக மறைகின்றன. குழவி களது நம்பிக்கையே அவற்றின் நடத்தையை விளக்குகின்றன. அவை "விதி தொடங்கியது எவ்வாறு? எப்போது?" என்று ஆராய்வதில்லை. ஆனல், இந்த நிலையில் "ஆட்டங்-களிற் சிலவற்றை முதியோர் படைத்தனர்" என்றும், "சிலவற்றை இயற்கைத் தோற்றங்களே" என்றும் குழவிகள் கருதுகின்றன. "முதியோர் படைப்பாம் ஆட்டங்கள் மாறுத நிலைபேறுடையனவாம்" என்றும், "இயற்கைத் தோற்றமாம் ஆட்டங்களில் முன்னேற்றத்திற்கு ஏற்ப விதிகளை மாற்றலாம்" என்றும் நம்பி நீடிக்கின்றன. நிற்க.

குடியரசும் கோலியும் :— 11-13 வயதிலேயே குடியரசு இவ்வாறு விளையாட்டு உலகில் எழும் வியப்புத்தான் என்னே? முதியவர் உலகில் இன்னும் குடியரசு புதியதாக அன்றோ விளங்குகிறது ? 14-15 வயதிற்குப் பின் கோலி ஆடுவார் இல்லை. ஆதலின், குடி அரசு எண்ணம் மேலும் வளர்ந்து பரவ இடம் இன்றி 14-15 வயதில் மறைகிறது. நம் மக்கள் வரலாற்றில் 14-15 ஆவது வயதிலேயே முதியவர் உலகம் தொடங்கி இருந்து இருக்குமானால், குடியரசு வாழ்வே உலகில் நிலைபெற்று இருக்கலாம். ஆதலின், கோலியாட்டத்தின் உயர்வைத் தொடர்ந்து பயன்படுத்திக் கொள்ளப் பண்ணிப் பிற நிலையங்களும் முயலுதல் வேண்டும்.

முறைமையும் உணர்ச்சியும் :— இங்கு உணர்ச்சியைப் பற்றிக் கூறிய இரண்டாம் நிலை முன்னர்ப் பின்பற்றுதலைப் பற்றிக் கூறிய 'தானே நடுவாந்தன்மை' விளங்கும் பருவத்தில் தொடங்கிக் கூட்டுறவு விளங்கும் பருவத்தின் இடைக் காலத்தில் முடிவடைகிறது என அறிகின்றோம்.

பெண்குழவிகளின் ஆட்டம் :—பெண் குழவிகள் கண்ணுமூடி, (கண்ணும்பூச்சி Hide and seek) கிறுக்குவில்லை (Ponds) முதலிய ஆட்டங்களில் பெரிதும் ஈடுபடுகின்றன. இங்கு இவற்றினிடம் விதிகளை முறைப் படுத்துதல் என்ற நிலை சிறந்து தோன்றுவதில்லை. புதிய புதிய கோலங்களைப் படைத்து வரும் ஆற்றலே தோன்றுகிறது. தானே நடுவாந்தன்மை மாறிக் கூட்டுறவு மனப்பான்மை எழுதலை இங்கும் காண்கிறோம். ஆனால், பெண் குழவிகள் புதிய மாற்றங்களை வெறுப்பதில்லை. ஒப்பந்தத்தைப் பற்றிய வெளிப்படையான நிலையும் இங்கு விளங்குவதில்லை. தானே நடுவாந்தன்மை விளங்கும்போது "தான்" "பிறர்" என்ற

வேற்றுமை இன்றிப் பெண்குழவி தன் கொள்கையையும் பிறர் கொள்கை எனக் கருதுகிறது.

கூட்டுறவும் குழவியும் :—கூட்டுறவு நிலை எழும்போது-தான், "தான்" எனத் தன்னைக் குழவி பிரித்து உணர்கிறது. ஆளுமை (Personality) அப்பொழுதுதான் தொடங்குகிறது என்பதாயிற்று. விதியும் அங்ஙனம் ஆளுமையில் ஓர் உறுப்பாக அமைகிறது.

போற்றி நிலை :- போற்று நிலையைப் போற்றி நிலை எனவும் வழங்கலாம். இருவரில் ஒருவர் மட்டுமே மற்றொருவரைப் போற்றுவதனை, ஒருதலைக்காமம் என்ற வழக்கினை ஒட்டி, ஒரு-தலைப் போற்றி நிலை எனலாம். இருவரும் ஒருவரை ஒருவர் போற்றுவதனை இருதலைப்போற்றி எனலாம். முதியோருக்கு அடங்கி நடக்கும் நிலையில் ஒருதலைப் போற்றியே உண்டு. குழவிகள் கூடிக் குலாவும்போது இருதலைப் போற்றி உண்டு. நிற்க. குழவி பெற்றோரிடம் காட்டும் 'பய பக்தியே' கடவுட் கொள்கையின் வித்தாகும் என்ற கருத்தின் உண்மையைக் குழவிப் பருவம் நன்கு விளக்கி வைக்கின்றது எனலாம். நிற்க. கூட்டுறவும் இருதலைப் போற்றி நிலையும் முழுதும் முற்றுவ-தில்லை. அவை இரண்டும் இந்தப் பருவத்தில் எழும் மனப்-பான்மைகளின் எல்லைகள் என்றே கூறலாம். அவற்றின் எல்லை வரையும் மனப்பான்மை வளருகிறது என்பதாம். நிற்க. பரிமாற்ற மரியாதை அல்லது இருதலைப் போற்றிநிலை எழுந்ததும் "தீமை என்பது யாது" என்பதனைப் பற்றி ஒருமித்த முடிவிற்குக் குழவிகள் வருவது இல்லை. "பரிமாற்ற ஒப்பந்தம் வேறு; பரிமாற்ற மரியாதையாம் இருதலைப்போற்றி வேறு" என்பதனையும் "பரிமாற்ற ஒப்பந்தத்தின் பின் எழும் இருதலைப்போற்றி நிலை மட்டுமே, குழவிகள், ஒழுக்கம் எனப்

பாராட்டுவதனைப் பற்றி எழும் கருத்தாம்" என்பதனையும் உணர்ந்தால் இந்த உண்மை விளங்கும்.

மூவகை விதி :—இங்கு விதிகளை நோக்கினல் குழவி, தன் செயற்கைக்கு ஏற்ப முதலில் இயங்கி வரும்போது, தசையியக்க விதிகள் (Motor Rule) மட்டுமே விளங்கக் காண்போம். பல செயல்களையும் செய்துகாணும் செய்க் காட்சிச் சட்டம் இயற்கையாக எழுகிறது. விளையாட்டுச் சடங்கே அங்கு விளங்குகிறது; அறிவுநிலை முறையும் தோன்றுகிறது. அடுத்துப் பெற்ருேர் விதிக்கின்ற வற்புறுத்து விதிகள் எழுகின்றன (Coercive rules) பின்னரே சமுதாய நிலை வளர வளரக் கட்டாய நிலை நீங்க நீங்கக் குழவிகள் கூடிக் குலாவிக் கற்றுக்கொள்ளும் கூட்டுறவு விதிகள் (Cooperative rule) வளரத் தொடங்குகின்றன. இங்கே ஆளுமை (Personality) வளர வளர இயற்கை நிலையும், அறிவுநிலையும் சமநிலை அடைகின்றன.

## II. போற்றுநிலை

மூவாசிரியர் :— மரியாதை என வழங்கும் "போற்றும் மனப் பான்மை" எவ்வாறு எழுகிறது? அனுபவமே அதனை விளைவிக்கின்றது என்பது காண்ட் (Kant) என்பாரது கருத்து. சமுதாயத்தினை நோக்கியதாய்ச் சமுதாயத் தாக்குதலால் எழுவதே இந்தப் போற்றுநிலை என்பது துர்க்கைம் (Durkheim) என்ற ஆசிரியரது கருத்து. தனியாட்கள் ஒருவரோடு ஒருவர் தொடர்புற்று வாழவரும்போது தனியாட்களை நோக்கி எழும் மனப்பான்மையே இந்தப் போற்றிநிலை என்பது போவே (Bovet) என்ற ஆசிரியர் கருத்து.

துர்க்கைம் (Durkheim) :— முதியோரது சமுதாயம் பெருகி வளர வளர, ஒவ்வொருவரும் தச்சு வேலை, நெய்தல்

வேலை, பயிர் வேலை முதலிய அனைத்து வேலையையும் செய்வ-தொழிந்து, ஒவ்வொரு கூட்டத்தார் ஒவ்வொரு வேலையைச் செய்யத் தொடங்குகின்றனர். இவ்வாறு தொழில்நிலை வேறு-பாடு மக்களிடை எழுகிறது. ஆனல், குழவிகள் சமுதாயமாகக் கூடும்போது அத்தகைய தொழில் நிலை வேறு பாடு எழுவ-தற்கு இடம் இல்லை. ஆதலின், அங்குத் தோன்றும் வேறுபாடு அனைத்தும் அவற்றின் மனநிலை வேறு பாடேயாம். இந்த வேறுபாடுதான் யாது? இளங் குழவிகள் வயது சென்ற குழவிகளுக்குக் கட்டாயமாக அடங்கி நடப்பதும், இளம் குழவிகளும் முது குழவிகளும் முதியோருக்குக் கட்டுப்பட்டு நடப்பதும் நாம் எங்கும் காணும் காட்சியாம். இத்தகைய நிலையிலேயே "போற்றும் மனப்பான்மை" தோன்றுகிறது. வயது ஏற ஏற, முதியோர்கள் குழவிகளைப் பேணி வருவ-தில்லை. அவர்களது கண்காணிப்பு குறைந்து கொண்டே வருவதால், முதியோருக்கு அடங்கி நடக்கும் பொழுதினும், குழவிகளோடு கூடிக்குலாவும் பொழுதே மிக்குவருகிறது. எனவே, கட்டாய நிலையை விடக் கூட்டுறவு நிலையே ஓங்கி விளங்குகிறது. கூட்டுறவே சமுதாயத்தின் சமநிலையாக விளங்குகிறது. "வயதிற்கு ஏற்படும் மதிப்பு காரணமாகவே விதிமுறை வளருகிறது." என்ற உண்மையை உணர்தல் வேண்டும். முதியோர் இளையோர் என்ற வேற்றுமை இன்றி அனைவரும் ஒரே வயதினராக விளங்கும் ஒரு சமுதாயத்தைக் கற்பித்து மனக்கண்ணுல் கண்டால் அங்கு முதியோர்க்கு இளையோர் கீழ்ப்படிந்து நடக்கும் முறை இல்லாமையால் போற்று நிலையே அங்கு எழாமல் இருக்கக் காண்போம். ஆதலின், ஒரு தலைமுறை பின்வரும் தலைமுறையினைக் கட்டாயப் படுத்தி மாற்றிவரும் வகையிலே போற்றுநிலை எழுவதனை நாம் மறத்தலாகாது. இவ்வளவும் கூறியமை துர்க்கைம் கூறியதனையே விளக்குவது காண்க.

போவே (Bovet):- போவே என்பவரோ தனியாட்களையே கருதுகின்றார். இருவர் ஒன்று சேரும்போது, ஒருவருக்கு ஏற்ப ஒருவர் நடக்கவேண்டும்; ஆதலின், விதி எழுகிறது. ஒருவர் மற்றொருவரிடம் இருந்து கட்டளை பெறவேண்டும். அக்கட்டளை பெறுவோர் அதனைக் கட்டளை என ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். ஈதே போற்றுநிலையாம். இது முதியோரைப் பற்றிய உண்மை. குழவிகள் விளையாட்டில், முதிய குழவிகளிடம் இருந்து இளம் குழவிகள் கட்டளை பெற்றுக் கீழ்ப்படிந்து நிற்கின்றன. வாழ்க்கையில் குழவிகள் முதியோரிடம் இருந்து கட்டளைபெற்று அதற்கு ஏற்ப அடங்கி நடக்கின்றன. ஆனால், கட்டளை என்ற கருத்து வேறு. கடமை என்பதே இங்குத் தோன்றும். ஆனால் "இது நல்லது, இது அறம்" என்ற கருத்திலிருந்து இந்த அற உணர்ச்சி எவ்வாறு எழுதல் கூடும்? "தொடக்கநிலை, அற உணர்ச்சி" தன்னில் தானே இயங்கித் தோன்றி வளர்வது அன்று. முரண்பட்ட கட்டளைகள் தோன்றும்போது "எதனைப் பின்பற்றுவது"? என்ற கேள்வி எழுகின்றது. கட்டளைகள் மட்டும் இந்த நிலையை விளக்க முடியாது, ஆதலின், இந்தச் சிக்கலைத் தீர்க்க அறிவாராய்ச்சி தொடங்குகிறது. தன் அறிவின் காலிலேயே இவ்வாறு குழவி விழவேண்டி நேரிடுகிறது. ஈதே போவே என்பார் கூறும் விளக்கம்.

அறிவுநிலை விளக்கம் :- இங்கே முரண்படும் சட்டங்களை வெவ்வேறு நிலைக்கேற்றன என முறைமை நிலைக் கொள்கைப்படி அறிவு விளக்குகிறது. தன்னாட்சி இந்த முறைமை நிலையிலேயே விளங்குகின்றது. அறம் என்றபோது "கடமை" என்ற உணர்ச்சியோடு "செயற்பாலது; நல்லது; விரும்பத்தக்கது" என்ற உணர்ச்சியும் எழுகின்றது அன்றோ? ஈதே தன்னாட்சியின் விளக்கமாம். இது சமுதாயத் தாக்கலால் எழு-

இன்றது என்பர் தூர்க்கைம் என்ற ஆசிரியர். போவே என்பாரோ முடிவாக ஒன்றும் கூறவில்லை. சமுதாய நிலையில்-தான், குழவிகள் ஒன்றினை ஒன்று பாராட்டும் பரிமாற்ற மரியாதை எழுகிறது. மரியாதை (போற்று மனப்பான்மை) வயதிற்கேற்பப் பொருள் மாறிநிற்கும். முன் எழுவது இளை-யோர் முதியோரைப் பாராட்டும் ஒருதலைப் போற்று நிலையாம். அங்கு முதியோரைப் போற்றும் நிலை இல்லை. கூட்டுறவால் குழவிகள் விளையாடவரும்போது இரு குழவிகள் ஒன்றை ஒன்று பாராட்டும் பரிமாற்ற மரியாதை அல்லது இருதலைப் போற்றுநிலை எழுகிறது. அறிவுநிலை இங்கு நுழைவது இவ்வாறு கூட்டுறவின் பயனே ஆம். அறிவுவளர்ச்சிக்கு ஏற்ப ஒன்று மற்றொன்றன் நிலையில் வைத்துப் பார்க்க வேண்டும். கூட்டுறவால் ஒன்றை ஒன்று குழவிகள் அறிய-வரும் நிலையிலன்றோ இந்தப் பரிமாற்ற மனப்பான்மை எழுதல் கூடும்? கூட்டுறவே தன்னாட்சிக்கு உயிர்நிலையாம். கட்டாயநிலை இவ்வாறு கூட்டுறவு ஆக மாற முடியுமே அன்றிக் கூட்டுறவுநிலை கட்டாய நிலையாக மாறுவது என்பது இல்லை.

## II. பொய்

இருவகைப் பொறுப்பு :— உள்பொருட்கொள்கை என முன்னர்க் கூறியது ஒழுக்க நிலையிலும் விளங்கி வரக் காண்-கிறோம். கடமை என்பது தன்னாட்சியன்று; புறத்தாட்சியே-யாம். கருத்தைவிடச் சொல்லையே முதலில் குழவி பின்பற்று-கிறது. பொறுப்பு இருவகையாம். புறநிலைப் பொறுப்பு ஒன்று; அகநிலைப் பொறுப்பு இரண்டு (Objective and Subjective responsibility). புறநிலைப் பொறுப்பு புறநிலையைப் பற்றிய-தாம். அகநிலைப் பொறுப்பு உள்ளக் குறிப்பினைப் பற்றியதாம். தூய்தன்மை, (இழிவழக்கில் அசிங்கம் என்று கூறிவருதல்

காண்க) திருட்டு என்ற இரண்டினைப் பற்றியும் கதைகளைக் குழவிக்குக் கூறி "அதனுள்ளத்தே எத்தகைய பொறுப்புநிலை விளங்குகிறது" எனக்காணலாம். பட்டினிகிடக்கும் தாயினுக்-காக அப்பத்தினைத் திருடுங்கதை, தனக்கெனப் பட்டுக்குச்சி-னைத் திருடுங்கதை என இவற்றைக் கூறி ஆராயலாம். வயது ஏற ஏற உள்ளக் குறிப்பினை வற்புறுத்துநிலை வளர்ந்து முதன்மை பெற்றுவரக் காண்கிறோம். குழவி தன் அகநிலை வளர்வதற்கு முன்னரே புறநிலையைப் பற்றியனவாக முதியோர் இடும் கட்டளைகளும், சினக்கும் கோபநிலைகளும் குழவியை வற்புறுத்திக் கட்டாயப் படுத்தி நிற்கின்றன. "அம்மிமேல் இராதே!" என்பது போன்றவை சட்டங்குபோல வற்புறுத்தப் பெறும் கட்டளைகளாம். 6 வயதிற்கு முன் எல்லா ஒழுக்கங்-களும் புறநிலையாகவே விளங்குகின்றன். இந்நிலை முதியோரது கட்டுப்பாட்டால் எழுகிறது என்பதும் தெளிவாகிறது. 6-வயதிற்குப் பின்னரே அகநிலைப் பொறுப்பு அனுபவத்தின் பயனாகத் துளிர்க்கின்றது. முன்னைய அனுபவம், "ஒழுக்கமும் ஓர் உள்பொருளே" என்ற கருத்தினையே வற்புறுத்துகின்றது. பிறரை மகிழ்விக்க விரும்பிப் பிறர் நிலையில் தன்னைவைத்து நோக்கி அதற்கு ஏற்ப ஒழுக முயலும்போதே குழவி ஒழுக்க நிலைத்தீர்ப்பினைக் கூற முயலுகிறது. அப்போதுதான், கீழ்-நிலைப்படியாம் கட்டாய நிலையிலிருக்கும் புறநிலையிலிருந்து ஏறி மேல்நிலைப் படியாம் கூட்டுறவிற்குள் அக நிலையுணர்வோடு குழவி புகுகின்றது.

மூன்றிலக்கணம் :— தானே நடுவாந்தன்மையோடு முதி-யோரது ஒழுக்கநிலைக் கட்டுப்பாடு முட்டும் போதேபொய் என்ற எண்ணம் எழுகிறது. "பொய் என்பது யாது?" என அறியும் போது அதன் பொருண்மையை நோக்கிய பொறுப்பும் அதன் பயனை நோக்கிய பொறுப்பும் என வேறுபாடு எழக்காண்-

கிறோம். முதல்நிலையில் 'பொய்' 'கெட்டபேச்சு' 'சொல்லலா-காத சொல்' எனச் சொல்லோடு ஒன்றுகியே பொய் விளங்கு-கிறது. பொய் என முதியோர் இழித்துக் கூறுவதனைத் தான் கூறுவதில் உள்ளீடாக அகநிலை வழியாக ஒரு தடையினையும் குழவி காணுமையால், தடையாம் புறநிலையையே நம்பிப் "பெரியோர் எதிர் சொல்லத்தக்க சொல்". "பெரியோர் சொல்லக் கூடாதன எனத் தடுக்கும் சொல்லத் தகாத சொல்" என்பதாகக் கட்டுப்பாட்டிற்கு ஏற்பப் பாகுபாடு செய்வதன்றிக் குழவி வேறென்ன கருதமுடியும்? சில நாள் சென்றபின் "உண்மையல்லாதது பொய்" என்ற இலக்கணம் எழுகிறது. பழக்கத்தில், தற்செயல்ாக எழும் செயலுக்கும், வேண்டும் என்றே செய்யும் செயலுக்கும் உள்ள வேற்றுமையைக் குழவி உணர்கின்றது. ஆனுல், இந்த வேற்றுமையை நம்போல உணருவதில்லை. ஒழுக்கத்தைப் பற்றிய எண்ணத்திலும் இவை முற்ற முடிய வேறு படுவதில்லை. தவறும் பொய்யும் ஒன்ருக அதற்குத் தோன்றுகின்றன. அந்த நிலையில் குழவியின் அறிவு அந்த வேற்றுமையை அறிய முடிவதில்லை. 8 முதல் 11 வயது வரை பொய்க்கு மூன்ருவதோர் இலக்கணம் கூறக் குழவி தொடங்குகிறது. "வேண்டும் என்றே உண்மையல்லாத-வற்றைக் கூறுவது பொய்யாம்" என்பது அந்த இலக்கணம். தன்னைப்பற்றியே எண்ணும் குழவி 8 வயது வரை "வஞ்சம்" என்பதன் பொருளை உணரலாவதில்லை. பொய்யின் பொறுப்-பினை, நாட்டத்தினை நோக்கி, மதிப்பிடலாம். இது அகநிலைப் பொறுப்பாம். பொய்யின் அளவினை நோக்கி மதிப்பிடலாம். இது புறநிலைப் பொறுப்பாம். பயனைப் பற்றிக் கருதுவது மட்டுமே அல்லாமல் குழவியின் மனம் முதலில் புறநிலைப் பொறுப்பை நோக்கியே செல்கின்றது. மதிப்பினைப் பற்றிய தீர்ப்பும் இந்த முறையைப் பின்பற்றுகின்றது. "எவ்வளவுக்கு எவ்வளவு உண்மையினின்றும் வேறுபடுகின்றதோ அவ்வள-

வுக்கு அவ்வளவு பொய் கொடியதாம்; பெரியதாம்" என்பதே குழவியின் மனப்போக்கு. புறநிலேக்கு ஏற்ற வயது 7 ஆம்; அகநிலேக்கு ஏற்றவயது 10 ஆம்.

போய் எழுவது ஏன் ? :- 7-8 வயதிற் போலிப் பொய்கள் தாமாக எழுகின்றன. தானே நடுவாந்தன்மையில் குழவி விளங்குகையில், குழவி தன்னோடு தொடர்புண்ட புறநிலேயைத் தனக்கு ஏற்பத் திருத்தி அமைக்க முடியாதுபோயின், அக-உலகில் கற்பனே வகையாலும் சொல்வகையாலும் மாற்ற முயன்று புறநிலேயைத் திருத்திக் கூறுகிறது. "உடைக்காதே" எனக்கூறிய பெற்றோருக்கு அஞ்சி, உடைத்த பொருளே "உடையவில்லே" என்று கூறுவதனே முன்னரே கண்டோம். இவ்வாறே "பொய்" என்பது முதலில் எழுகிறது. அவ்வாறே பள்ளியிலும் கடிய கேள்விகள் எழுமானல், குழவி கற்பனே-யால் கதைகூறி விடைதருகிறது. ஆனல் 7-8 வயதிற்கு முந்தி எல்லாம், தானகவே குழவி உண்மை கூறிவருகிறது. 7-8 வயதிற்குப்பின் போலிப் பொய்யில் ஈடுபடவரும் குழவி, இவ்வாறு இதற்கு முன்னர் உண்மையில் ஈடுபடுவது எங்ஙனம்? அதனேயும் உள்பொருள் என நம்புவதே குழவியின் இயல்பு. ஆதலின், முதலில் புறநிலேயையே குழவி வற்புறுத்துகிறது. முதியோரது கட்டளே புறத்தேயே புறநிலேயை வற்புறுத்திக் கிடக்கின்றது. அங்கு ஒருதலேப் போற்றி (Unilateral respect) நிலேயே உண்டு. முதியோரின் கட்டளே குழவியின் இயல்பிற்கும் ஒத்து இருந்தால் மட்டுமே, அகநிலேயில் சென்று ஊறும்; இல்லேயானல் புறநிலேயாகவே கிடக்கும். ஆதலின், முதியோரது கட்டளே புறநிலேப் பொறுப்பினேயே விளேவிக்கின்றது. ஒருதலேப் போற்றி மறைய மறைய, இருதலேப் போற்றி எழும்போது, புறநிலேயைப் பற்றிய பேச்சுஞ் மறைகிறது. போலிப் பொய்ப் பேச்சுகள் எழவும் இடம் உண்டாகிறது.

என் பொய் ஆகாது ? :— "என் பொய் கூறுதலாகாது ? எனக்குழவிகள் எண்ணுகின்றன" என்றும் ஆராய்தல் வேண்டும். இங்கு மூன்றுவகையான கொள்கைகள் முறையே வளர்ந்து வரக்காண்கிறோம். முதலில், "தண்டிக்கப் படுதலின், பொய் கூறுதலாகாது" எனக் குழவி கூறுகிறது. இரண்டாவது நிலையில், "தண்டனை வாராவிடினும் பொய் பொய்யே" என்று குழவி கூறுகிறது. "பொய்தீயது" என்பதே இங்கு விளங்கும் கொள்கை. இங்கே புறத்து ஆட்சியும், புறக்கட்டாயமும் விளங்குதல் வெளிப்படை. மூன்றாவது நிலையில் (10-12 வயது) "பொய்யானது நம்பினவரை ஏமாற்றுவதாம்" எனக் குழவி கருதுகின்றது. "ஒருவரோடு ஒருவர் கூடிப் பரிமாறுவதற்கும் ஒருவரை ஒருவர் நம்பி நடப்பதற்கும் மெய் பேசுவது இன்றி-யமையாததாம்." என நம்புகிறது. பெரியோர் பேச்சை அப்படியே காரணமாக ஒப்புக்கொள்ளுதலும் உண்டு. பொய்யின் அளவினைப் பற்றியும் அவற்றிடையே கொள்கை வளர்ந்துவரக் காண்கிறோம். சிறிய குழவிகள் நம்பமுடியாத பொய்யினையே கொடியன என்று பழிக்கின்றன. வயதான குழவிகளோ நம்பத்தக்கவையாய் ஏமாற்றும் பொய்யினையே கொடியனவாகக் கருதுகின்றன.

வளர்ச்சி :— பொய் என்பது தண்டிக்கப் பெறுவதாய் அரும்பித் தீயதாய்ப் பூத்து நம்பியவரை ஏமாற்றுவதாய்ப் பழுக்கின்றது. இந்த முறையில் கூட்டுறவுநிலை மலர்ந்து பழுத்தலும் காண்க. அறிவுநிலையே இந்தக் கூட்டுறவிற்கு உயிர்தந்து வருகிறது. எனினும், கூட்டுறவாம் இந்தச் சமு-தாயக் கருவியை, அத்தகைய அறிவே தன்னை உருப்படுத்து-வதற்காக இன்றியமையாது வேண்டி நிற்கின்றது. இதன் காரணமாகவே முதலில் தக்கன: எனக்கொள்ளும் பொய்யைப் பின்னர்த் தகாதன எனத் தள்ளுகிறது. முதலில்

முதியோரின் கட்டளையையே பின்பற்றும் குழவி அத்தகைய கட்டளையை நேரே செயலுக்குக் கொண்டுவர முடியாமற் போனாலும், அம்முதியோரிடம் வைத்துள்ள போற்றிநிலை காரணமாக "அத்தகைய கட்டளைகளையும் ஒப்புக்கொள்ள வேண்டிய கட்டாயம் உண்டு ' எனக்கருதுகிறது. இதனாலேயே இங்கு விதிகள். புறநிலையாக அமைகின்றன; அகநிலையாம் கருத்தினை வற்புறுத்துவன ஆகாமல், புறநிலையாம் சொல்லினையே வற்புறுத்துவன ஆகின்றன. இத்தகைய புற-நிலையை நோக்காது, அகநிலையை நோக்கி முன்னேறுவது, கூட்டுறவாலும், அங்கு எழும் இருதலைப் போற்றிநிலையாலுமே எழும்.

## IV. உள்பொருட். கொள்கை

செயலும் சொல்லும் :— புறநிலைப் பொறுப்பு எழும் இடத்தே ஒழுக்கமும் ஓர் உள்பொருளே எனக்கருதும் கொள்கையும் (Moral Realism) உண்டு. அனைத்தும் உள்பொருளே எனக் கூறிய கொள்கையோடு இதுவும் இயைபு உடையதாம். ஒழுக்க நிலையைப்பற்றிக் குழவியின் உள்ளத்தினை ஆராயும்போது இருவேறு செயற்பாட்டு நிலைகளைக் காண்-கிறோம். ஒன்று ஒழுக்கமுறைச் செயல்களை நுகர்ந்து நிற்கும் ஒழுக்க அனுபவமாம்; மற்றொன்று ஒழுக்கத்தைப் பற்றி எண்ணி, முறைப் படுத்தும் கொள்கையாம். செயல்வகை ஒழுக்க எண்ணமே சொல்வகை எண்ணமாக மலர்கிறது. முதலில் எண்ணம் அனைத்தும் செயல்வகையாகவே எழுகின்றன எனக்கண்டோம். இவை நனவுநிலையிற் புனைய் வரும்போதே, சொல்வகை எண்ணம் எனப் பெயர் பெறுகின்றன. குழவியின் எண்ணங்களில் பயன்தரும் ஆற்றல் படைத்தவை செயற்-பட்டு வரக் காண்கிறோம். அத்தகைய ஆற்றல் படைத்தவை-

யோடு ஒழுக்கத்தைப் பற்றிய சொல்வகையான எண்ணம் சிலபோது தொடர்பின்றியே கிடக்கலாம். ஆதலால், செயலுக்கு வாராத வெறுஞ்சொல் ஆரவாரமாகவே அவை நிற்கலாம். முதலில் செயலாக வருவது, முடிவில் மட்டுமே நனவுணர்ச்சியாகிறது. நனவில் உணர்வது என்றால் முன்னரே உள்ளத்தில் உருப்பெற்றவற்றை விளக்கமுறச் செய்வது என்று கொள்வதற்கு இல்லை. முன்னரே உருப்பெற்று என்புக்கூடு (Skeleton) போலக் கிடப்பனவற்றின்மேல் முதல் முதலாகத் தசையும் குருதியும் சேர்த்து ஒரு வடிவாக்கிப் அதற்குப் புத்துயிர் கொடுத்து வெளியிடுவதனையே நனவுணர்வு என்று கூறுகின்றோம்.

புறமுகக் கட்டளை :— குழவிக்கு முந்துறமுந்தி இந்தப் புறமுக நோக்கம் எழுவது எங்ஙனம்? எவ்வளவுதான் முதியோர் விழிப்பாக இருப்பினும் குழவிக்கு விளங்காத கட்டளைகளைத் தம்மையும் மறந்து ஒருசில இடங்களில் இடாமல் இருப்பதற்கு முடிவது இல்லை. அங்குப் புறநிலை அன்றி வேறு எது உண்டு? குழவிக்கு முதாலகக் கற்பிக்கும் முதற் படிப்பினை, புறத்தூய்மையைப் பற்றியது அன்றோ? உணவு முதலியவற்றைப் பற்றிய கட்டளைகள் புறநிலையைப் பற்றியனவாம். பசிஇல்லாத போதும் உண்ண வேண்டும் எனப் பழக்கத்தின் பேரால் வற்புறுத்தப் பெறும் குழவி அகநிலையை மறந்து புறநிலையைத்தானே பற்றிக் கொள்ளுதல் வேண்டும். இங்கு எல்லாம் அகநிலையையும், கட்டளையின் உள் நோக்கினையும் விளக்க முடியுமோ? விளக்கினாலும் குழவி அறியுமோ? வருமுன் காக்குந் துணைவராம் முதியோர், இடர்ப்பாடு எழுவதற்கு முன்னரே தற்காப்பாகச் சில பழக்கங்களைக் குழவியினிடம் ஏற்படுத்தி விடுகின்றனர். இல்லையானால் தற்செயலாக ஏதேனும் எழும்போது குழவி ஏமாற்றம் அடையுமன்றோ?

கட்டளைகள் இந்த ஏமாற்றநிலை எழாமல் காக்கின்றன. ஆதலின் கட்டளைகளுக்கு, உலகில் தக்க இடம் உண்டு. கடமை உணர்ச்சியும் இன்றியமையாது எழ வேண்டியதே தான். முதலில், சடநிலை வழியாகவே விதியைப் பயன்படுத்தக் கூடும். அதனாலேயே, புறநிலைப் பொறுப்பு எழுகிறது. குழவி போற்றுகிற பெற்றோரிடமிருந்து பிறக்கும் கட்டளை கடமையுணர்ச்சியை எளிதில் மேலோங்க விடுகிறது. சிலபோது, தம் கட்டளையைப் பின்பற்றும் குழவியின் நிலைக்கிரங்கி அவற்றைப் பெற்றோர் குற்றங்கூறாது வேறுபோக்காக அதன் மனத்தினைத் திருப்பினாலும், குழவி, ஒழுக்கம் என்ற உள் பொருளுக்குத் தீங்கு செய்தது போலவே எண்ணிவிடுகிறது.

புறநோக்கின் தேய்வு :— ஆனால், பிறர் தவறு செய்வது கண்டு அவர்களைக் கடுமையாகநோக்குவது போலத் தான் தவறு செய்வது கண்டு அத்துணைக் கடுமையாகத் தன்னைத் தான் நோக்கிக் கொள்வதில்லை. பிறரது புறநிலை ஒழுக்கம், அவர்களது அகநிலையைப் பற்றி அறிவதற்கு முன்னரே, விளங்குகிறது. உடனே விதியோடு ஒப்பிட்டுப் பார்த்துக் குழவி தீர்ப்புக் கூறிவிடுகிறது. ஆனால், தான் தன் தவறுகளை நோக்க வரும் போது, அகநிலை, முன்னே உடனே தோன்றுவதால் தவறு எழுந்ததற்கு ஏற்ற அகநிலையும் விளங்குகிறது. அந்த நிலையில் தன்மேல் தானே கடுமையாக எங்ஙனம் இருத்தல் கூடும்? குழவியின் செயல்களை விட்டு அவற்றின் கொள்கையை ஆராய்ந்தாலும் ஒழுக்கம் ஓர் உள் பொருள் என்ற கொள்கையினையே இந்த நிலையில் குழவிகள் வற்புறுத்தி வரக் காண்கிறோம். குழவி தன் ஒழுக்கத்தினை நோக்கும் போது இந்த உள்பொருட்கொள்கை மறைகிறது; தன் நிலையைப்பன்முறை இவ்வாறு வேறாக ஆராய்ந்த பின்னர்ப் பிறர் ஒழுக்கத்தைப் பற்றி ஆராயும்போது, அக்கொள்கை மறைகிறது. முடிவாகக்

கதை முதலியவற்றில் வருபவர்களைப் பற்றித் தீர்ப்புக் கூறவரும் போதும் இந்தக் கொள்கை மறைகிறது. முன்-போல இங்கும் முறைமை நிலைக் கொள்கை வளர்கிறது எனலாம்.

புறநிலைச் சட்டம் :— பலர் கூடிவாழ்வது என்றால் ஒவ்-வொருவரும் தத்தம் விருப்பப்படி பிறர் கழுத்தை நெரித்துக் கொண்டுகிடக்க முடியாது. இதனைத்தடுக்கச் சட்டதிட்டங்கள் வேண்டும். இவை புறநிலையைப் பற்றியனவானல் மட்டுமே பயனுடையனவாம். அகநிலையைக் கண்ணால் காண்பார் யார்? இந்தச் சமுதாய விதிகள் குடிமுறை வழியாக நம் இரத்தத்தில் ஊறிவருவதகும் இல்லை. தனிமக்கள் ஒருவர் ஒருவர் மேல் கட்டாயநிலையை வற்புறுத்தி, அதிகாரம் செலுத்தி வந்தால் அன்றிச் சட்ட திட்டங்கள் தொடர்ந்து பலகாலம் வாழ்ந்து அனைவரையும் அடக்கி நின்று நிலவ முடியாது. ஈதே துர்க்கைம் என்பாரது கொள்கை. இது பற்றியே அவர் பள்ளியினும் இத்தகைய அதிகாரம் செலுத்த வேண்டும் என வற்புறுத்துகின்றார். ஆனல், எல்லாவிதிகளும் ஒன்று போலவே கொள்ளத் தக்கனவாக நம் மனத்திற்குத் தோன்றுவது இல்லை. ஒரு சில விதிகள் பிறவற்றினும் அறிவிற்குப் பொருத்தம் ஆவனவாம்; ஒரு சில அறிவிற்கு முரண்பட்டனவாம். சீர்திருத்த முயற்சிகள் அனைத்தும் இந்த வேற்றுமை மனப்-பான்மையால் எழுவனவாம். ஆதலின், கடமையுணர்வு இன்றியமையாததேனும் “நன்மை யுணர்வும்” எழுந்தாலன்றி ஒழுக்கநிலையின் உயர்நிலையை நாம் காண்பது இல்லை. தானே நடுவாந்தன்மையில் விளங்கும் குழவி முதியோர் கட்டளை-யிடையே உருப்பெற்றுக் கூட்டுறவு உலகில் வாழவருதல் வேண்டும்.

விதியே பொருளின் உயிர் :— குழவி தன் நனவில் தோன்றுவன அனைத்தினையும் புறப் பொருளாகவே கொள்-

கின்றது எனக்கண்டோம். ஆதலின், புறப் பொருள்களை அனைவர் கண்ணும் காண்பது போலத் தன் நனவில் தோன்று-வன அனைத்தினையும் அனைவர் மனமும் அறியும் என அது நம்புகிறது. பெயர் என்பது பொருளின் உறுப்பே எனக் கருதியது போல, ஒரு பொருளைப் பற்றிய விதிகளும் அப்-பொருளின் உயிர்நிலையே என அது கருதுகிறது. விதியை மீறினால் பொருளே நம்மைத் தண்டிக்கும் என்று குழவி நம்புகிறது. ஆதலின், குழவிகள் இந்த நிலையில் உள்ளக் குறிப்பினைவிடச் செயலின் புறநிலை வடிவாம் பயனிலேயே அக்கறை காட்டுகின்றன. முதியோரின் கட்டளை புறநிலை வகையாக உள்ளது என்பதனையும் இங்கு நாம் வற்புறுத்தல் வேண்டும். இவ்வாறு ஒருதலைமுறை மற்றொரு தலைமுறையை அடக்கி ஆள்வதாலேயே ஒழுக்கம் என்பது ஓர் உள்பொருள் என்ற கொள்கை எழுகிறது எனலாம்.

சொல் ஆட்சி :—இங்குக் கட்டுநிலை ஒற்றுமையே உண்டு. குழவி விதியினை அறிவதும் இந்த ஒற்றுமைக் காட்சிக்கு ஏற்பவே தான். விதியாகக் குழவியின் காதில் விழும் சொற்கள் இந்தக் கட்டுநிலை யொற்றுமைக் கேற்பவே பொருள் பெற்று விளங்குகின்றன. பொருள் விளங்காத நிலைமையிலும் சொல் ஓர் இருப்பினைப் பெறுவதால், அவ்வகையால் ஓர் ஆற்றலும் பெறுகின்றன. சொற்கள் பொருளைச் சுட்டும் நிலையின் நின்றும் நீங்கித் தாமே தனிப்பொருள்களாகின்றன. இவ்வாறு சொல் ஓர் அதிகாரம் பெறுகிறது. இதனைக் குலைக்கத்தக்க அனுபவமோ, விவாதமோ முதியோரிடம் போலக் குழவியினிடம் எழுவதற்கு இடம் இல்லை. சொல்லுக்கு மல்லாடும் உரையாசிரியர்களும், வழக்கறி-ஞர்களும் முதியோர் உள்ளும் இல்லையோ?

அகநிலை அறவளர்ச்சி:- குழவியின் ஒழுக்கம் இருவகையாம்.

முதியோரிடையே முதியோரின் கட்டுப்பாடாக அமைவது ஒன்று; விளையாட்டிடையே கூட்டுறவு வடிவாக அமைவது மற்றொன்று. இவற்றின் இடையே விதி இயங்கிவரும்போது புறநிலையாக மட்டும் ஒழியாது அகநிலையும் பெற்று, அந்த அகநிலை சிறப்பு நிலையாகிக் கெடாதபடி பொது நிலையாய் முற்றிவிளங்கக் காண்கிறோம். கட்டுப்பாடு ஒருதலைப்போற்றி-நிலையே ஆம். கட்டுப்பாடு உள்ள இடத்தில் கடமை உணர்ச்சி மட்டும் எழுமே யன்றி அற உணர்ச்சி எழுவதற்கு இடமில்லை. விளையாட்டுலகில் வாழ்ந்து வரும் குழவிக்கு அங்கே தொடக்-கத்திலிருந்தே இருதலைப் போற்றிநிலை தோன்றுவதால், அந்த இருதலைப் போற்றிநிலையே உயர்ந்த போக்கோடும் அன்போடும் ஒழுகுமாறு குழவியைத் தூண்டுகிறது. இதன் பயனாகக் குழவி கூட்டுறவு மனப்பான்மையோடும் ஒழுகி வரும்போது கட்டுப்பாட்டு மனப் பான்மையோடு ஒழுகுவது மெல்ல மறைந்து ஒழிகிறது. இதனாலே கட்டாயத்தின் புறநிலை வடிவாம் தண்டனையின் காரணமாகப் பொய் சொல்லலாகாது என்ற குழவி, இதுபோது "கூட்டுறவு நிலையை வஞ்சிப்ப-தாதலின் பொய் செல்லலாகாது" என வேறு ஒரு காரணம் கூறவருகிறது. இந்த இருகொள்கைக்கும் இடையே "தண்டனை இல்லையாயினும் பொய் சொல்லுதல் கூடாது" என்ற கொள்கையும் குழவியின் மனத்தே எழுகின்றது. இது, இடையே தோன்றிவளரும் பொதுமை நிலையால் எழுவதாம். இந்த வளர்ச்சியின் முடிவில் தன் ஆட்சி முற்ற முடிய விளங்குவதில்லை. பிறரது ஒத்துணர்ச்சி வேண்டுமானால் உண்மை கூறுதல் இன்றியமையாது வேண்டப் படுமெனக் குழவி உணருகிறது. எனவே, இருதலைப் போற்றிநிலையே தன்னாட்சியை வரையறுக்கின்றது என்பதாயிற்று. இவ்வாறு தன்னாட்சியாலேயே தன்னாட்சி கட்டுண்டு கிடக்கின்றது எனலாம்.

## V. தண்டனை

தகுதி :— கூட்டுறவு, பரிமாற்றம், இருதலைப்போற்றி என்ற இவற்றினிடையே உணர்ச்சிநிலை விளங்குவதனைக் காணுதல் வேண்டும். சமுதாயத் தொடர்பினை எல்லாம் ஆராய்ந்து பார்த்தால் நியாயம் அல்லது தகுதி என்ற கருத்து அவற்றிடையே உள்ளீடாக ஒளிர்ந்து வரக் காண்கிறோம். சமுதாயத் தொடர்பினிடையே சமநிலையை அடக்கி ஆளும் சட்டமே நியாயம் எனலாம். சமுதாயமாகத் தொடர்புண்ட பொழுது அனைவருக்கும் ஒத்தநிலை அன்றோ நியாயமாவது? இதுவே பொதுநிலை அறமாம் (Distributive Justice). திருவள்ளுவனாரும் நடுநிலைமையைத் தகுதி என்பர். என்னிடத்திலிருந்து ஒருகாசை ஒருவன் எடுப்பானானால் அக்காசினை அவனிடம் இருந்தும் என்னிடம் திருப்பித் தருதல் அன்றோ பொதுமை அறம்? இதுவே தொடக்கத்தில், "பல்லுக்குப் பல்," "கண்ணுக்குக் கண்," எனப் பழிக்குப் பழிவாங்கும் அறமாக விளங்குகிறது. பழிக்குப் பழிவாங்குதலே தண்டனையின் வடிவமாகிறது.

தண்டனை ஏன்? :— "ஏன் தண்டித்தல் வேண்டும்?" என்ற கேள்வி எழுகிறது. இருவகையான கொள்கைகள் இந்தக் கேள்விக்கு விடையாக வெளிவருகின்றன. ஞாயம் என்ற கருத்திலேயே பரிசிலும் தண்டனையும் அடங்கி உள்ளனவாகக் கொண்டு, செயலுக்கும், இத்தகைய பயனுக்கும் உள்ள தொடர்பாகவே நியாயத்தினை விளக்கிவைப்பது ஒருவகைக் கொள்கையாம். இரண்டாவது கொள்கையின்படி நியாயம் என்பது அனைவருக்கும் ஒத்து நிகழ்வதாகிய பொதுநிலையையே குறிக்கின்றதாம். துர்க்கைம் என்பார் கொள்கைப்படி சரிதவறிய நிலையைச் சரியாக்குவதே தண்டனையாம். ஒருவன் குற்றம் செய்யும்போது அவன் சமுதாயக் கட்டுப்பாட்டினையும், சட்டங்களின் ஆட்சியையும் சிதைத்து ஒழிக்-

கின்றான். அந்தச் சிதைவினை நீக்கிப் பழமைபோலச் சமுதாயக் கட்டினையும் சட்ட ஆட்சியினையும் நிலைநாட்டுவதே தண்டனையாம்.

இருவகை தண்டனை :- இந்த இருவகைக் கருத்தினிற்கு ஏற்ப இருவகைத் தண்டனைகள் எழுந்து உலவுகின்றன. அழுக்குப் பட்டவன் அந்த அழுக்கினைக் கழுவிக்கொள்ளுதல் போலக் குற்றம் செய்தவன் தண்டனை அடைந்து தீமையைக் கழுவி நீக்கிக்கொள்ளலாம். இங்குத் தண்டனையே கழுவாயாக விளங்குதல் காண்க (Expiatory punishment). சமுதாயத்தில் ஏற்பட்ட பிறழ்ச்சியானது தண்டனையால் நீங்குகிறதாம். அறிகுறிக்கும், அறிகுறியால் குறிக்கப்படுவதற்கும் உள்ள இயைபே இந்தக் கருத்தினை வளர்த்தது போலும். பின் செய்யும் தீமை முன் செய்த தீமையை நீக்கும் என்பது இதனாலேயேயாம். சமுதாயப் பிறழ்ச்சி நீங்கியதற்குத் தண்டனை ஓர் அறிகுறியாக முதலில் கொள்ளவந்தோர், பின்னர் அதனையே சமுதாயப் பிறழ்ச்சியின் நீக்கமாகக் கொண்டனர். இதனாலேயே சரிதவறியநிலை சரியாய்விட்டது எனக் கருதினர். இத்தகைய கொள்கையும் தண்டனையும் கட்டுப்பாட்டின் பயனாகவும் அதிகாரத்தின் விளைவாகவும் தோன்றுகின்றன எனலாம். செய்த செயலுக்கும் விதிக்கப்பெறும் தண்டனைக்கும் பொருத்தமோ, தொடர்போ இங்கு இல்லை. மற்றொரு வகையான கருத்துக்கு இயைந்த தண்டனையே பரிமாற்றத் தண்டனையாம். கழுவாய்த் தண்டனை அனைத்து நிலையிலும் ஒரே வகையாக விளங்கும். ஆனால், பரிமாற்றத் தண்டனையோ பல வேறு நிலைகளுக்கு ஏற்றதாய் மாறி மாறி வருகிறது. தகுதி நாட்டம் இங்கு உண்டு. இந்தத் தண்டனை பொதுநிலை அறத்திற்கு ஏற்றதாகும்.

குழவிகளின் தண்டனை :— கட்டுப்பாட்டுலகில் வாழும் இளைய குழவிகள் கழுவாயினையும், கூட்டுறவில் வாழும் முதிய

குழவிகள் பரிமாற்றத் தண்டனையையும் போற்றுகின்றன. குழவிகளைத் தண்டிக்க வேண்டுமாயின் சமுதாய நிலையை வற்புறுத்தும் வகையில் தண்டித்தல் வேண்டும். சமுதாயத்தினை விட்டு அப்புறப்படுத்தல் ஒருவகை தண்டனையாம். எடுத்துக் காட்டாகக் குற்றம் செய்த குழவியொடு விளையாட மறுத்தலைக் கூறலாம். நேரே எழும் சடநிலையைப் பற்றித் தோன்றும் தண்டனை இரண்டாம் வகையாம். குழவி தன்கடமையைச் செய்யாது படுக்கையிலே கிடந்து "நோய்" என்று போக்குச் சொன்னால், படுக்கையிலேயே விட்டுக் கிடத்திக் "கஞ்சி" கொடுப்பது இத்தகைய தண்டனையேயாம். மூன்றாவதாகக் குழவி தவறாக எந்தப் பொருளினையேனும் கையாண்டால், அந்தப் பொருளினை அதற்குத் தர மறுத்தலும் சமுதாயத் தண்டனையேயாம். இது ஒப்பந்தத்தை உடைத்துக் கொள்வதே போலும். இது மேலே கண்ட இருவகையான தண்டனையும் போலச் சமுதாயத்தினின்று நீக்கிவிடுவதாகவும் சடநிலையைப் பற்றிய தண்டனையாகவும் இருப்பது காண்க. நான்காவது வகையான தண்டனை பரிமாற்றத்தை வற்புறுத்துவதாம். குழவி பிறரை நோக்கிச் செய்த முறையினை அதனை (குழவியினை) நோக்கிப் பின்பற்றுவதே இங்குள்ள பரிமாற்றமாம். குழவி பிறருக்கு உதவ மறுத்தால் பிறரும் அதற்கு உதவ மறுப்பது இதற்கு எடுத்துக்காட்டாம். ஐந்தாவது வகையோ, குழவி கிழித்த நூலின் விலையைக் கொடுக்குமாறு தண்டம் விதிப்பது போன்றதாம். குழவியைப் பேணும் முறையில் பரிமாற்ற வகையாய்ச் சமுதாய உணர்ச்சியை வளர்ப்பதற்காக இத்தகைய தண்டனைகளையே விதிப்பது தக்கதாம். இவற்றைக் குழவிகளும் தக்கன எனக் கொள்கின்றன.

தண்டனையின் வளர்ச்சி :— தண்டனைகளின் வகைகளைப் பற்றிய ஆராய்ச்சி, அதன் வளர்ச்சியினைப் பற்றிய ஆராய்ச்சி-

ஆகாது; ஆதலின், அதனையும் சிறிது உற்று நோக்குதல் வேண்டும். முதலில் செயலுக்கு ஒருதொடர்பும் இல்லாத வகையில் கடுமையாகத் தண்டனை விதித்தலே இயல்பாகத்-தோன்றுகிறது. எதற்கும் தலையை வெட்டுவது எனத்-தொடங்கிய கதைகளை நாம் அறிவோம் அன்றோ? இவ்வாறு வருத்தத்தை விளைவிப்பதே முதல்நிலை எண்ணமாகிறது. ஈதே கட்டாயநிலையை வெளியாக்குகிறது. பின்னர்த் தண்டனை ஒரு பரிமாற்றமே என்ற எண்ணம் எழுகிறது. கொடுமை செய்வது அன்று இங்கு நாட்டம். போசாங்கே என்று ஆசிரியர் எடுத்துக் காட்டுவதுபோல ஆளுமைகொண்டு விளங்கும் மகன் தான் செய்ததன் பயனைத் தான் துய்க்கும்போதே வஞ்சனையற்ற வீறு பெறுகிறான். முதலாவதாக எழும் கழுவாய்த் தண்டனை இயற்கைச் செயனிலை போலத் தோன்றினாலும் முதியோர் கட்டாயத்தாலேயே எழுகிறது. பழிக்குப் பழிவாங்குவதும் இரக்கமும் என்ற இரண்டும் இயற்கைச் செயனிலையாக எழுமாம். தண்டனை என்ற கருத்தில் தற்காப்பு என்ற எண்ணமும் போராட்டமும் உண்டு. ஆதலின், வருத்தத்தினை விளைவிப்பது இவை காரணமாக இயல்பாகிறது. தீமையால் வருந்தும் மற்றோர் குழவியோடு தன்னை ஒன்றாகக் காணுவதும் குழவியின் இயல்பு எனக் கண்டோம். இதன் பயனாகத் தீங்கு இழைக்கப் பெற்ற குழவியானது அவ்வாறு தனக்குத் தீங்கிழைத்ததற்காகக் குற்றவாளி தண்டிக்கப்படும்போது இன்-புறுவது போலப் பிற குழவிகளும், வருத்திய குற்றவாளியின் வருத்தம் கண்டு இன்புறுகின்றன. முதியவர்களும் கட்டுப் பாட்டுநிலையிலே இடையே புகுகின்றார்கள். இதன் பயனாகப் பழிக்குப் பழிவாங்கும் போக்கு இரக்கத்தின் வழியே இருமுனை பெற்று விளங்குகிறது. தண்டனையையும் பரிசிலையும் விரும்பும்நிலை எழுகிறது. பரிமாற்ற நியாயமுறை அங்கிருந்தும் விளைந்து முற்றிப் பழுக்கிறது. செயலுக்கும்

தண்டனைக்கும் தொடர்பற்ற எண்ணங்களும் பிறவும் நீங்கி ஒழியப் பொதுநிலை மட்டும் எஞ்சுகிறது. அது அதிகார நிலையாகவோ, பரிமாற்ற நிலையாகவோ விளங்குகிறது. தன்னலமற்றுப் பழிக்குப் பழிவாங்குவதே கழுவாயாக முற்றுகிறது. இதுவே முதல் வகையான பழிக்குப் பழியாம். இதிலிருந்தும் உண்மைப் பரிமாற்றமாம் பழிக்குப் பழி இரண்டாவது வகையாக வளர்வது எங்ஙனம்? ஒருதலைப் போற்றி மட்டும் தோன்றிய நிலை மாறி இருதலைப் போற்றிநிலை கூட்டுறவாக எழும்போது பரிமாற்றம் வளர்கிறது. அப்போது கழுவாயாக நின்ற பழிக்குப்பழி மறைகிறது. அனைவர்க்கும் பொது என்ற எண்ணமும் செயலுக்கேற்ற தண்டனை என்ற எண்ணமும் வளர்கின்றன. முதலில் கணக்கில்போல, "ஒரு கண்ணிற்கு ஒரு கண்" "இரு கண்ணிற்கு இரு கண்," எனப் பழிக்குப் பழிவாங்குவது, பின்னர் உணர்வாகவும், மன்னிப்பாகவும் முற்றுகிறது. இந்தக் கூட்டுறவு வளர்வதன் காரணமாக "நன்மையில்தான் பரிமாற்றம் எழும்" என்ற உயர்ந்த எண்ணமும் அரும்புகிறது.

குழுநிலைத் தண்டனை:- குழுநிலைப் பொறுப்பும் வெளியிடலல்லாப் பொறுப்பும் குழவிகளிடை எழக் காண்கிறோம். ஒரு குழவி செய்த குற்றத்திற்காக ஒரு வகுப்பினையே தண்டிப்பது பள்ளிக் கூடங்களிற் புதுமையன்று. குற்றஞ்செய்த குழவியை வகுப்பு முழுதும் அறிந்திருந்தும் காட்டிக்கொடாமையால் வகுப்பினைத் தண்டிப்பது இரண்டாவது நிலையாம். குற்றம் செய்த குழவியை வகுப்பு அறியாமையால், "குற்றம் செய்தார் யார்?" எனக் கூற முடியாதபோதும் வகுப்பு முழுவதனையும் தண்டிப்பது மூன்றாவது நிலையாம். இந்தக் குழுநிலைப் பொறுப்பு விளங்குதல் காண்க. காட்டிக் கொடாமையால் வெளியிடலல்லாப் பொறுப்பும் இங்கு எழக் காண்கிறோம். இந்த மூன்றினையும் பற்றிக் குழவி எண்ணவரும்போது முதல்

நிலையில் எழும் தண்டனையை உணர முடியாது திகைக்கின்றது. முதியோர் செய்வதே சரியென நிலைநாட்டும் குழவி இங்கு அவ்வாறு நிலைநாட்ட முந்துவதில்லை. இரண்டாம் நிலையில் எழும் தண்டனையைப் பற்றி இரண்டு வேறு கொள்கைகள் குழவிகளிடை நிலவக் காண்கிறோம். இளைய குழவிகள் "எல்லோரையும் தண்டித்தது சரியே" என்கின்றன. "கூட்டம், குழுநிலைப் பொறுப்பினை ஏற்றதால் இவ்வாறு தண்டனைக்கு உள்ளாதல் தகுதியே" என்று அவை கூறுவ-தில்லை. "வெளியிடல் அல்லாப் பொறுப்பே உண்டு" என்-கின்றன. தவறிழைத்த குழவியை "ஆசிரியருக்குக் காட்டிக் கொடுக்கும் கடமை வகுப்பிலுள்ள குழவி ஒவ்வொன்றின் தலைமீதும் கிடக்கின்றது. அந்தக் கடமையை நிறைவேற்றாமை யால், ஒவ்வொரு குழவியும் தண்டனைக்கு உள்ளாகியே தீர-வேண்டும்" எனக் கருதுவதே முதற்கொள்கையாம். இந்த இளைய குழவிகளுக்கு மாறாக முதிய குழவிகள் வேறு ஒரு கொள்கையைக் கூறுகின்றன. தவறு செய்த குழவியை காட்டிக்கொடுக்க ஒருப்படாமையால் அவை அனைத்தும் முழுநிலையாகப் பொறுப்பேற்க ஒப்புக்கொண்டனவாம். ஆனால், முழுநிலைப்பொறுப்பு இங்கு முற்றும் விளங்குவது இல்லையாம். ஒவ்வொரு குழவியும் ஒப்புக்கொண்டதாதலின், ஒவ்வொரு குழவியும் தண்டனை அடைதல் வேண்டுமாம். இந்த இரண்டு கொள்கைக்கும் இடையே மற்றொரு கொள்கை தலைகாட்டத் தொடங்குகிறது. அதன்படி "ஒரு குழவியையும் தண்டித்தல் ஆகாது" என்பதே முடிவாம். காட்டிக்கொடுக்காமையே இந்த நிலையில் அறமாகும். மூன்றாம் நிலையில் குற்றம் செய்தாரை, வகுப்பு அறியாமையால் காட்டிக்கொடுக்கவும் இயலாது. இயலாததனை ஆசிரியர் எங்ஙனம் எதிர்பார்க்கலாம். 8-9 வயது ஆன பின்னர், "குழுநிலைத் தண்டம் இரண்டாம் நிலையில் முறையற்றதாம்" எனக் குழவிகள் கருதுகின்றன

## VI. அறநிலை வளர்ச்சி

இருகோள்கையின் வளர்ச்சி :- ஆகவே, இங்கே இரண்டு வகை மனப்பான்மையைக் காண்கிறோம் எனலாம். ஒன்று தண்டனை இன்றியமையாததாம் எனக் கருதும் கடவுட்-கொள்கையாம். மற்றொன்று கூட்டத்தின் உள்ளே ஒற்றுமையும் கட்டுப்பாடும் இருத்தல் வேண்டும் என்ற கூட்டுறவுக் கொள்கையாம். இந்த இரண்டும் குழவிகளிடம் இரண்டு வேறு நிலையைச் சுட்டுவனவாம். முதலில் முதல்வகைக் கொள்கையே முதியோர்க்கு அடங்கிய இளைய குழவிகளிடம் வழங்குகிறது. இரண்டாம் வகைக்கொள்கை அந்தப் பருவத்தில் வழங்குவது இல்லை. வயதான பின்னர்த் 'தானே நடுவாந்தன்மை' யால் இரண்டாம் வகைக் கொள்கையும் எழு-கிறது. அதன் பின்னர் முதல் வகைக்கொள்கை மெல்ல மறை-கிறது. குழவியும் வயது ஏற ஏற முதியோரது கட்டிலிருந்தும் நம் நாகரிகத்தில் விடுபட்டு வருவதாலேயே இந்த மாற்றம் எழுகிறது. கீழ்நிலை நாகரிகத்திலோ கட்டானது விடுபடாது இறுகிவருவதால் வயது ஏற ஏற முதியவர்தம் கட்டுவலிவுற்று வருகிறது. அங்கே முதல் வகைக்கொள்கை உண்டே அன்றி இரண்டாம் வகைக்கொள்கை முற்றுவது இல்லை.

கடவுட்கோள்கை :— தம் பெற்றோரை எங்கும் நிறைந்-தோராகக் கருதிய குழவி அறத்தினையும் எங்கும் நிறைந்து எதற்கும் உள்ளீடாய் ஒளிர்வதாகக் கருதுகிறது. "அறமே அனைத்தையும் தாங்கி நிற்கின்றது" என்ற கொள்கை வேதம் போல மிக மிகப் பழையதாம். "குற்றம் செய்யவில்லை" என வற்புறுத்த விரும்புவார் நெருப்பில் அறைந்தும், பாம்பின் புற்றில் கைவிட்டும் வந்த வரலாறு உலகம் முழுதும் நிகழ்ந்த வரலாறேயாம். குழவி தவறித் தண்ணீரில் விழுவதனைக்கண்ட குழவிகள் "தவறு செய்ததனாலேயே தண்ணீரில் விழுந்தது;

இல்லையானால் தண்ணீரில் விழுந்து இராது'' எனக்கூறுகின்றன. 6 வயதில் இவ்வாறு கூறும் குழவிகள் 86%; 7 - 8 வயதில் 73%; 9-10 வயதில் 54%; 11-12 வயதில் 34% ஆம். வயதேற ஏற இந்தக்கொள்கை குறைந்து கொண்டே வருதல் காண்க. நோக்கக் கொள்கைக்கும் உயிர்க்கொள்கைக்கும் ஏற்ப' இத்தகைய இடங்களில் காரணத்தை விளக்கக் கற்பனைக் கதைகளைக் குழவிகள் கூறிவருகின்றன. அவை பழையபுராணக் கதைகளை நினைப்பூட்டுவது இயல்பே ஆம். "ஒழுக்கம் அடிப்படையானது'' என்ற கருத்து எழுந்தது எங்ஙனம்? "அவ்வாறு குழவி கருதுவதே இயல்பு'' என்று கூறவே இடம் இல்லை. இக்கருத்தினைப் பெற்றோர் கற்றுக்கொடாத பொழுதும் இந்தக் கருத்து எழுதலின், "பெற்றோர் கற்பித்த பாடம்'' எனக் கூறுவதற்கும் இல்லை. "முதியோர் செலுத்தும் அதிகாரத்தின் பயனாக இந்தக் கருத்து எழுந்தது'' என்பதன்றி வேறுகூற வழி இல்லை. முதியோர் எதிரில்லாதபோதும் குழவி தவறு செய்ய அஞ்சுகிறது எனக்கண்டோம் அன்றோ? அங்கும் அவர்கள் பார்த்திருப்பார்கள் என்று குழவி கருதுகிறது. பெட்டியில் இருக்கும் பழத்தைப் பெற்றோருக் குத் தெரியாமல் விரைவாக எடுக்கும்போது குழவியின் கைமீது பெட்டியின் மூடி விழுந்தால் அதனைத் தான் செய்த தவற்றிற்காக எங்கும் உள்ளீடாக விளங்கும் அறம் விதிக்கும் தண்டனை என்று கருதுவது இயல்பேயாம். பின் இது வயது ஏற ஏற, மறைவது என்? அனுபவமும் அறிவும் வளர்ந்து கொண்டே வருவதால் இந்தக் கருத்துப் பொய்த்துப் போகின்றது. முதியோரது அதிகாரத்தால் எழுந்த இந்தக் கருத்து முதியோரது அறத்தில் குழவி குறைபாடு காணும்போது மறைவதும் இயல்பே அன்றோ?

ஒறுத்தலிலிருந்து பொதுமை :— பழிக்குப் பழிவாங்கும் நெறியினை ஒறுக்கும் நெறி எனலாம். பொதுமைநிலை நெறியாம்

பரிமாற்ற நெறியினைப் பொதுநெறி எனலாம். இவை முரண்படுவது இயல்பேயாம். பெற்றோரும் ஆசிரியரும் கீழ்ப்படியும் குழவியினையே செல்வமாகப் பாராட்டி வருகின்றனர். ஒறுக்கும் வழியே நோக்கினால் இது நன்றேயாம். பொதுநெறிவழி நோக்கினால் மிக இளங்குழவி ஒறுக்கும் நெறியையே நம்புவதால், "கீழ்ப்படிவோரை முதியோர் பாராட்டுவது அறமே" என நம்புகிறது. சிலநாள் ஆனதும் பொது நெறியை நம்பி வாழவரும் குழவிக்கு முதியோரின் இத்தகைய நடத்தை தக்கதாகத் தோன்றுவதில்லை. இவ்வாறு பொதுநெறி வளர்வதேன்? முதியோரது கட்டுப்பாட்டின் வடிவாம் ஒறுக்கும் நெறி தேய்வதேன்? பொதுமை நாட்டம் முதியவரைப் பாராட்டுதலாலும் எழலாம். குழவிகள் ஒன்றோடொன்று பழகுவதாலும் வளரலாம். குழவி தான் முறையின்றித் தவறாகத் தண்டிக்கப் பட்டபோது ஒறுத்தல் நெறியை வெறுத்துப் பொதுநிலை நெறியை நாடுவது இயல்பேயாம்.

மூவகை நெறி :— அறம் என்ற எண்ணம் வளருவதனை நோக்கும்போது மூன்று வேறுநிலைகளைக் காண்கிறோம். ஒன்று ஒறுக்கு நெறி அறம். இரண்டாவது பொதுமை நெறி அறம். அனைவரையும் ஒன்றாகக் கருதாமல், அவர் அவர் நிலைமைக்கு ஏற்ப ஒழுகுதல் வேண்டும் என்ற கருத்து வளருகிறது. குழவியையும் முதியோரையும் ஒரே வகையான சுமையைச் சுமக்குமாறு கூறுவது அறமன்றாதலின் இந்தத் தருக்கநிலை அறம் மூன்றாவதாக வளருகிறது. "நான்கு வயதானகுழவி அப்பத்தினை ஆற்றில் தவறி விட்டு விடுகிறது. தாய் மறுபடியும் அதற்கு அப்பம் தரவேண்டுமா?" என்று கேட்டால், குழவிகளின் வயதிற்கேற்ப இந்த மூன்றுநிலை அறக்கொள்கைகளையும் அவை கூறிவரக் காண்போம். "விழிப்பாக இல்லாது நீரில் இட்டதற்குத் தண்டனையாகக் குழவியைப் பட்டினிகிடத்த

வேண்டும்'' என்பது முதலில் எழும் ஒறுத்தல் நெறிப்பேச்சு. ''எல்லாக் குழவிக்கும் ஒவ்வோர் அப்பம் தாய் கொடுத்தாள். ஆதலின், மறுமுறையும் இக்குழவிக்கு மட்டும் அப்பம் கொடுத்தால் பொதுமை பிறழும்'' என்பது இரண்டாவதாக எழும் பொதுமை நெறியாம். ''பிற குழவிகளினும் இது சிறிய-தாதலின் இதனைப் பட்டினிவிடுதலாகாது'' என்பது மூன்றாவ-தாக எழும் தகுதிநெறிப் பேச்சாம்.

தகுதியும் ஆட்சியும் :— குழவியினிடம் நான்கு வேறு கருத்துக்கள் படிப்படியாக வளர்ந்து மாறிவரக் காண்கிறோம். முதல் நிலையில், குழவி ''விதிமுறையாம் கீழ்ப்படிதலினும் அறநிலை வேறு உண்டு'' என்று கருதவதே இல்லை. இரண்டாம் நிலையில் ''விதிக்கப்படும் முறையானது அறமன்று'' என்று கருதினும் ''அறத்தினும் கீழ்ப்படிதலே சிறந்தது'' எனக் கொள்கிறது. மூன்றாம் நிலையில் ''விதி தவறு'' எனக்-கருதியதும் ''கீழ்ப்படிதலினும் அறமே சிறந்தது'' என நம்ப வருகிறது. நான்காம் நிலையில் ''முறைதவறு'' எனத்-தோன்றினும், ''கீழ்ப்படிதலே கட்டாயம் நிகழவேண்டும்'' என நம்பாவிடினும், ''கீழ்ப்படிவது நல்லது'' என நம்புகிறது. இவ்வாறு அறக்கொள்கை வளர்ந்துவரும் நிலையில் பெற்றோரைக் குழவி முதலில் அறநிலையமாகக்கொள்ளும் நம்பிக்கை வெளியாகிறது. அங்கு ஒருதலைப்போற்றி நிலையே பொதுமை நெறி வளர்வதனைத் தடுக்கின்றது. தகுதி என்பது பொது நெறியினும் வேறாம் என மேலே விளக்கினோம். பொது நிலையிலன்றி ஒவ்வொருவருக்கும் தக்கவழியில் அறம் வழங்கு-வதே தகுதி அறமாம். பொதுமை நெறியின் நுட்ப வேறுபாடே தகுதியாம். குழவிகளின் எண்ணம் இவ்வாறு வளருவதனை மற்றோர் எடுத்துக்காட்டுக் கொண்டும் விளக்கலாம். ஏமாற்றுதல் என்பதனை இந்நாளைய கல்விமுறை குழவிகளிடம்

வளர்த்து உள்ளது. "பார்த்து எழுதலாமா?" என்பது ஒரு கேள்வி இன்று பிறக்கின்றதன்றோ? "பார்த்து எழுதலாகாது" என்று விடைகூறும் குழவிகளில் இளையவை "தடுக்கப்பட்டுள்ளமையால் கூடாது" எனக் காரணம் கூறுகின்றன. இவற்றினும் சிறிது வயது சென்றவை, "அனைவரும் பாராமல் எழுதும்போது ஒரு குழவிமட்டும் பார்த்து எழுதுதல் பொதுமை நெறிக்கு மாறும்" எனக் காரணம் கூறுகின்றன. மேலும் வயது சென்றவை "பயனில்லை" எனக் காரணம் கூறுகின்றன. ஒறுத்தல் நெறியும் பொதுமை நெறியும் இவ்வாறு அடுத்தடுத்து வளர்வது காண்க. பரிமாற்ற வாழ்க்கையின் பயனாகப் பொது நலம் வளருகிறது. தகுதிநிலையோ வயது ஏறுவதற்கு ஏற்பவும், குழவிகளது ஒற்றுமைக்கு ஏற்பவும், முதியோரது கண்காணிப்பும் அதிகாரமும் குறைந்து வருவதற்கு ஏற்பவும் வளர்ந்து வருகிறது எனலாம்.

குழவி அறம் வழங்குதல் :- குழவிகள் விதிக்கும் தண்டனை முதியோர் விதிப்பது போன்றதன்று. முதியோர் தண்டனையில் அதுகாரணமாகக் குழவி கொள்ளும் கழிவிரக்கமும், அதிகாரத்திற்கேற்ற அச்சமும் விளங்கலாம். குழவியின் தண்டனையில் அதிகாரம் இல்லை. கழுவாய் என்ற கருத்தும் இருப்பதற்கு இல்லை. விளையாட்டில் தவறு செய்வாரைக் குழவி தண்டிப்பதனைக் காண்க. கோழையைத் தண்டித்தல் என்பதுபோலக் கட்டுகுலைகிற இடத்தில் எழும் தண்டனையினிடையேதான் கழுவாய் என்ற எண்ணம் இருக்க இடம் உண்டு. இங்குக் குழவி தண்டிக்கும்போது அதிகாரம் குழவியினதா? முழுக்குழுவினதா? இங்குக் குழுநிலையில் விளங்கும் முழுநனவு முதியோர் அதிகாரத்தோடு ஒப்பாமோ என்பதே கேள்வி. ஒப்பானால் கூட்டுறவால் எழும் இதற்கும் கட்டாயத்தால் எழும் முதியோர் தண்டனைக்கும் வேற்றுமை

இன்றிப்போம். ஆதலின், ஒன்றெனக் கொள்வதற்கு இல்லை. வயது ஏற ஏறக் கூட்டுறவுநிலைமை வளர்க்கும் ஏமாற்றுமை, பொய்யாமை என்ற மனநிலைகள் வளர்ந்து வருதலும் காண்க.

அறவளர்ச்சி:— அறம் என்ற கருத்தின் வளர்ச்சியைச் சிறிது உற்றுநோக்குதல் வேண்டும். 6-8வயது வரையிலும் குழவியினிடம் பெரியோரின் அதிகாரமே உண்டு. "நல்லது தீயது" என்ற உணர்ச்சிவேறுபாடு எழ இடமில்லை. அனைத்தும் முதியோர் எழுப்பும் தடையையே பொறுத்ததாம். பின்னர் மெல்லப் பொதுநிலை தலைகாட்டுகிறது. விளையாட்டுச் சட்டத்திற்கு மாறானவை வெறுக்கப் பெறுகின்றன. பொது நிலைக்கு மாறானவையே தவறுகின்றன. இவ்வாறே சமுதாயத்திற்கு முரண்படுவனவும் தீமையாகின்றன. பழிக்குப் பழிவாங்குதலாம் தண்டனையில் கழுவாய் என்ற கருத்தும் உண்டு. இந்த வளர்ச்சியிற்கேற்ப முதலில் தண்டனை என்பது கழுவாயாகவேகுழவியின்மனத்தில் விளங்குகின்றது. "அறமே அனைத்திற்கும் அடிப்படை" என்றும் "அது தானே இயங்கித் தண்டிக்கும்" என்றும் குழவி நம்புகிறது. குழவிகள் ஒன்றோடொன்று கூடிக் குலாவும்போது இதுமட்டும் போதியதாக இல்லை. பொதுநிலையே உண்மை என விளங்குகிறது; விரும்பத் தக்கதும் ஆகிறது. கட்டுப்பாடின்றிய, கூட்டுறவின் பெருமை விளங்குகிறது. அங்குத்தான் அறநிலை தெளிவாக விளங்குகிறது. பிற இடத்தில் குழம்பியே கிடக்கின்றது. ஆகவே, இரண்டாம் நிலையில் பொதுமையும், பரிமாற்றமுமே நிலைபெறுகின்றன. "அறமே அடிப்படை" என்ற கருத்து வாடி வதங்கி மறைகிறது. பொதுமை நிலை அறம் காரணமாகக் குழவிகள் அனைத்தும் சரிநிகர்சமானமாக விளங்குகின்றன. 11-12 வயதிலேதான் தகுதி என்ற உணர்ச்சி எழுகிறது. பொதுநிலை அறத்தினிடையே முறைமை நிலைக்கொள்கை

விளக்கமுறுவதால் எழுவதே தகுதிநிலை அறமாம். இங்கே முதலில், கொடுமையைப் பொறுதநிலைகளோ, தன்னலம் அற்ற நிலைகளோ எழுகின்றன. ஒழுக்கம் ஒத்துணர்ச்சியாகவும் சாயல்பிடித்தலாகவும் எழலாம். இவற்றின் காரணமாகப் பொது வாழ்வு வாழ்ந்து வரும்போது பொதுநெறி ஒன்று எழுதல் வேண்டும். "பொதுநிலையே கட்டாயம் வேண்டற்பாலது" என்ற கருத்து குழவியினிடம் எழுதல் வேண்டும். "எல்லாக் குழவிகளும் ஒன்றுபோல் இருத்தல் வேண்டும்" எனப் பொதுமையை முதியோர் குழவிகளிடை அறிவுறுத்தி வருகின்றனர். எனினும், முதியோர் வளர்ப்பது கடமை உணர்ச்சியேயாம். கட்டாயத்தால் எழும் கடமை உணர்ச்சிக்கும், "நல்லது" எனத்தீர்ப்புக்கூறித் தானாக இயங்கிவளரும் அறவளர்ச்சிக்கும் முரண்பாடு உண்டு. இந்நிலைப் போற்றி நிலையும், கூட்டுறவும் வளர்வதாலேயே அறம் என்ற கருத்து இவ்வாறு வளர்தல் கூடும்.

நால்வகை மாற்றம் :- இவ்வாறு முதலாவதாகக் குழம்பி முறையற்றுக் கிடக்கும் முழுநிலைக் குழவிச் சமுதாயத்திலிருந்து முதிய குழவிகளின் சட்டம் ஆட்சிபுரியும் ஓர் சமுதாய ஒற்றுமை வளர்கிறது. இரண்டாவதாக முதிய குழவிகளிடையே ஒழுக்கநிலைக் கட்டுப்பாடு வலியுற்றுவருகிறது. மூன்றாவதாக விவாதமும், எண்ணப் பரிமாற்றமும் வளர வளரக் குழவியின் ஆளுமை வளர்கிறது. நான்காவதாக முதியகுழவிகளிடம் பொதுமைநிலைமிக்கு விளங்கிக்கொண்டே வருகிறது. இவையே அறவளர்ச்சிக்கு அடிப்படையாம்.

## VII. குழவியின் அறநிலைக்கல்வி

தோத்து நோய் :— பொருளின் விலையை மதிப்பு என்கிறோம். உயிரல்பொருள், உயிர்ப்பொருள் என்ற இரண்டிற்கும்

பொதுவாக மதிப்பு அல்லது சுட்டுநிலை ("பெருஞ் சுட்டு" என்பது காண்க) என்பதனை வழங்குவோமாக. துர்க்கைம் என்பாரது கொள்கைப்படி சமுதாயம் என்றும் ஒரே தன்மைத்தாக விளக்குதலின் அதன் ஒழுக்க வகைச் சுட்டுநிலை (Moral value) யும் மாறாது விளங்குகிறது. "சட்டத்தின்படி தண்டனையுண்பாரின் இயல்பே பொறுப்பாம்" என்பது போகோனே (Fauconnet) என்பார்கொள்கையாம். விலங்குகளுக்கும், மரத்தினுக்கும் கொலைத்தண்டனை விதித்துப் பித்தர் குழவி முதலாக "இன்னது செய்கிறோம்" என்ற கருத்தே இல்லாத பலரையும் தன்னுள் அடக்கிக் கிடந்த பொறுப்புநிலையானது, இப்போது செயலின் பயனை உணர்ந்து செய்யும் தனியாளின் அளவில் சுருங்கி நிற்கின்றது. தண்டனை, தண்டனை பெறுவாரோடு ஐயத்திற்கிடமின்றித் தொடர்பு பெற்றுக்கிடப்பதாம். அஃது குற்றத்தோடும் தொடர்புண்டே தோன்றுகிறது. தண்டனை குற்றத்தினை நோக்கியே எழுகிறது. ஆனால், குற்றஞ்செய்த பொருள்மேல் பாயமுடியாதபோது வேறொரு பதிலீட்டின்மேல் பாய்கிறது. பலிகொடுப்பது என்றால் ஈதன்றோ கருத்து? துர்க்கைம் கொள்கைப்படி ஒவ்வொரு சமுதாயமும் நம்பிக்கைகள், உணர்ச்சிகள் என்றவற்றின் முழுநிலையாக விளங்கவேண்டுமானால், அதனைத் தெய்வீகம் எனக் காத்தல் வேண்டும்; தண்டனையே அங்கெழும் பிறழ்ச்சியை முறைப்படுத்தித் திருத்தும் யோகவழியாம். "தண்டனை குறிப்பிட்டவர் தலைமேல் விழவேண்டும்" என்பதன்று அங்கு அடிப்படை; "யார்தலைமேலேனும் ஆக விழவேண்டும்" என்பதே அடிப்படை. தவறு எழுந்த இடத்தைச் சுற்றி உணர்ச்சிமாற்றம் எழுகிறது. ஹிட்லர் செய்த குற்றத்திற்காகச் ஜர்மனியை வெறுக்கும்நிலை எழுந்ததன்றோ? சமுதாயம் ஒருவனைப் பொறுப்பாளி என விதிக்கும்போது அந்தத் தீர்ப்பானது அண்மைநிலை, ஒப்புமை என்றவற்றை

ஒட்டி எழுவதாம். குற்றம் ஒரு தொத்துநோய் போலும். குற்றவாளி அகப்படுவானானால் குற்றத்தோடு முழுத்தொடர்பு உடையனும்; அவன் அகப்படாவிட்டால் குற்றத்தோடு ஏதேனும், ஒருவகையால் தொடர்புடைய எதுவேனும் தண்டனை உண்ணுதல் வேண்டும்.

அகநிலையாதல் :— குடும்பத்தின் நன்மைக்காக ஆட்டினை வெட்டுவதனையும், பூச்சுணைக்காயைச் சுற்றி உடைப்பதனையும் கண்டு நகைக்கின்றோம். இவ்வாறு இன்று பொறுப்பெல்லாம் தனியாளைப் பற்றியதாகவும் அகநிலை நோக்கத்தால் உயிரின் அறிவுநிலையைப் பற்றியதாகவும் மாறியது என்? "பழங்-கருத்துக்கள் செல்லாத காசாயின; ஆதலின்" என்கின்றார் போகோனே. பொறுப்பு நிலைக்குப் புறத்தே முரண்பாடுகள் எழும்போது, பழைய கொள்கையை நம்பாது, நம் அறிவு ஆராயத் தொடங்குகிறது. இரக்கமும் ஒப்புரவும் தண்டனைக்கு எதிரிகளாம். தண்டனையின் வரலாறு தண்டனையை ஒழிக்கும் வரலாறேயாம். இதனால் இரு வேறு பயன்கள் எழுகின்றன. பொறுப்புநிலை சுற்றுப்புறத்தெல்லாம் பரவிநில்லாது குற்ற-வாளியை மட்டும் பற்றிக்கொண்டு கிடக்கின்றது. குற்றம் வெறுஞ் சடநிலையாகக் கிடந்தது, மனத்தினைப் பொறுத்ததும் உயிரினைப் பொறுத்ததும் ஆகிறது. சமுதாய வளர்ச்சியை நோக்கினால் இதற்கேற்ப ஒழுக்கநிலை புறநிலையாய்த் தகப்பன் கடனைப் பிள்ளை தீர்ப்பது போலவும், பிறருக்காகக் கோயிலில் ஐயர் வழிபாடியற்றுவது போலவும் ஒருவருக்காக மற்-றொருவர்செய்து தீர்க்கத்தக்கதாய் விளங்கியநிலை, பின்னர் அக நிலையாய்ப் பிறர் ஏற்றுத் தீர்க்கமுடியாதபடி தானே செய்து தீர்க்கவேண்டியதாகிய தனியாளின் பொறுப்பாக மாறுகிறது.

சமுதாயம் :— பொறுப்பினை இங்கே அதன் வரலாற்றுப் போக்கினைக் கொண்டும் விளக்கலாம்; மாறாத இயல்பினைக்

கொண்டும் விளக்கலாம். வரலாற்றுப்போக்கிலோ முரண்பட்ட நிலைகள் எழுகின்றன. ஆதலின், ஒற்றுமைகாண இயலாது. பொறப்பின் அமைப்பு என்றும்மாறாது இருப்பது; சமுதாய நிலையாம் தொழிற்பண்பே மாறாது விளங்குகிறது. இருதலைப் போற்றிநிலை, ஒருதலைப்போற்றி நிலையிலிருந்தே அகநிலைத் தருக்கமுறைப்படி வளர்கிறது. சடநிலைவகையான பழைய மரபுஅமைப்புகளின் கட்டாயப்பாடு குறையுமானால் அவ்வாறு எழும்குறைவினை ஆளுமை வகையான செறிவு நிலையை வளர்த்தும், அகநிலை ஒழுக்கத்தினைப் பெருக்கியும் நிறைவு செய்தல் வேண்டும். கட்டாயமும் கூட்டுறவும், அப்போது, ஒன்றுகின்றன. தெய்வீகம் என்ற போற்றி நிலையில் எழும் அச்சத்தினிடையே, அச்சமூட்டும் பொருளின்மேல் விருப்பமும் உண்டாதலின் அன்றோ பயபக்தி எனப் பேசுகிறோம்? ஒழுக்கமும், இவ்வாறு கட்டாயம் என்ற கடமை உணர்ச்சி-விரும்பத்தக்கதென எழும் நன்மை உணர்ச்சி - என்ற இரு வேறு முகத்தோடும் காட்சி அளிக்கின்றது. இவ்வாறு கடமை உணர்ச்சிவழியே நன்மையுணர்ச்சி எழுமே அன்றி, நன்மையுணர்ச்சி வழியே கடமையுணர்ச்சி எழுவதில்லையாம். கட்டளையுணர்வு சமுதாயக் கட்டாயத்தால் எழுவதாம். ஆதலின், ஒழுக்கநிலை சமுதாயநிலையே ஆம். சமுதாயத்திற்குச் சமுதாயம் ஒழுக்கநிலையில் மாறுபடுதலினாலும் ஒழுக்கம் சமுதாயநிலையின் இயல்பே என்பது தெளிவாகிறது. தனி ஆளுக்கென ஒழுக்கவகைச் சுட்டுநிலை (Value) ஒன்று இல்லை. குழுவே முடிபான நோக்கமாம்.

கூட்டுறவு :- ஆனால், சமுதாயநிலையாம் ஒழுக்கம்யாது? மாற்றம் வேண்டாக் கொள்கையினர் போல, இங்கு இப்போதிருக்கின்ற சமுதாயநிலையையே உயர்ந்த ஒழுக்கநிலை எனக் கொள்வதா? சாக்ரடீசுக்கு (Socrates) நஞ்சூட்டியவர்கள்

செய்த அறத்தீர்ப்பே முடிந்த முடிபாகுமா? சீர்திருத்தம் வேண்டுவோர் போல எதிர்காலத்திற்கென இப்போது ஆக்கப்பாடுபெற்று வருவதாய் இருக்கத்தக்கது எனத் தோன்றுவதனைச் சமுதாயநிலை எனக் கொள்வதா? உலகந்தோன்றிய நாள்முதல் தோன்றிய சீர்திருத்தக் கொள்கையினரிடையே ஏதேனும் ஒற்றுமை உண்டோ? சமுதாயநிலை என ஒற்றுமையாக விளங்குவன கொள்கைகள் அல்ல. அவை முரண்பட்டே கிடக்கும். சமுதாயத்தின் தொழிற் பண்பிலேயே ஒற்றுமை காணுதல்கூடும். சமுதாயம் பின்பற்றும் நிலையிலேயே சமுதாய ஒற்றுமையைக் காணலாம். இந்த முறையே கூட்டுறவு முறையாம். ஒருவன் புதியனவற்றைக் கண்டுபிடிக்கலாம். அது அவனுடைய வெற்றியாகச் சிறப்பது பிறர் அதனை அறிந்தால் அன்றோ? கூட்டுறவு என்ற ஒன்றே இப்போது இருப்பதற்கும், இனி இருக்கத் தக்கதற்கும் உள்ள வேற்றுமையை விளக்குதல் கூடும். மக்களது கருத்து, அறிவு என்பவற்றையும் வழக்கம் ஒழுக்கம் என்பவற்றையும் வேறு பிரிக்கவேண்டுமானால், இருப்பதனையே தெய்விகமாகக் கொள்ளும் கட்டுப்பாட்டினையும், இருப்பதினும் வேறாக இருக்கத்தக்கதனை விடுவித்து உயர்த்தும் முறையை வற்புறுத்தும் கூட்டுறவினையும் வேறுபிரிக்க வேண்டும். கூட்டுறவே அகநிலையையும் வளர்க்கும்.

தன்னுரிமை :— ஒழுக்கநிலையில் மூன்று அடிப்படைகள் உள்ளன. அவை (1) ஒழுங்குமுறை (2) சமுதாயப்பற்று (3) இயக்கநிலை ஆற்றலின் (கிரியாசக்தியின்) தன்னுரிமை என்பனவாம். கட்டளையின் அமைப்பே ஒழுக்கமுறையாம். சமுதாயச் சட்டங்களை அமைப்பதுயாது? நம் இயல்பினை அவ்வழியே வரையறுப்பது யாது? அதுதான் கடமை. நல்லது என்பது யாது? அது நம்மினும் வளஞ்சான்றதாகத்

தோன்றுவதாம். நம்மையே அது வளஞ்சான்ற நிலைமைக்குக் கொண்டுவரும்போது அதனோடு நாம் ஒன்றுகின்றோம். உள்ளதாகவோ, மேல்வரிச் சட்டமாக மனத்தே கருதுவதாகவோ உள்ள உயர்ந்ததொரு பொருளினை நோக்கியே பக்தி எழுதல் கூடும். இயற்கையின் கட்டளைகளை அறிந்து, அவற்றை மீறாது, அடங்கிநின்று அவற்றைப் பயன்படுத்துவதாலேயே இயற்கையின் நின்றும் விடுதலை பெற்றுத் தன்னுரிமையோடு மனிதன் அதனை ஆள வருகின்றான். ஒழுக்கநிலையிலும் அத்தகைய தன்னுரிமைக்கே இடமுண்டு.

கல்வியும் தண்டனையும்:- ஒழுக்கநிலை குழவியின் இயல்பன்று; அது இயற்கையாக அன்றிக் கல்வியால் எழுவதாம். ஆதலின், கற்றுக் கொடுக்கும் இயல்பினுள்ளேயே ஒழுக்கநிலையை அமைத்து விடுதல் வேண்டும். நம்மிடம் கற்கவரும் குழவியின் மனம் நாம் எண்ணியபடி எழுதத் தரும் வெற்றோலை அன்று; அந்த நாமும் எழுதுதற்கில்லை. குழவியைக்கொண்டே அங்கு எழுதியவற்றில் சில திருத்தங்களைச் செய்யத்தூண்டுதல் வேண்டும். குழவிக்கென ஓர் இயல்பு உண்டு. அந்த இயல்பினையே அகமுக வகையாக உருப்படுத்தல் வேண்டும். ஆதலின், அந்த இயல்பை நாம் முதலில் அறிதல்வேண்டும். ஒழுங்குமுறை எழவேண்டுமானால், முறையான வாழ்க்கையில் குழவிக்கு ஒரு சுவைபிறத்தல் வேண்டும். ஆனால், குழவியோ கற்பனையில் மூழ்கிக்கிடப்பது; அமைதியோ முறையோ அற்றதுபோல இயங்கிக்கொண்டு வருவது. ஒழுக்க முறையிலோ இந்த ஆரவாரமன்று வேண்டப்படுவது; தன்னடக்கமே ஆம். எனினும், இயக்கநிலைக்கிடையே குழவியினிடம் மரபினைப் பின்பற்றும் நிலையும், கருத்தேற்றுக்கு (Suggestion) ஏற்ற நிலையும் உண்டு. உண்பது முதலியவற்றில் ஒருமுறைபாட்டைக் குழவி விரும்புகிறது என முன்னர்க் கண்டோம். ஒழுங்கு-

முறை வளரும் பருவம் பள்ளிக்குப்போகும் பருவமேயாம். வாழ்க்கை முழுதும் விளையாட்டன்று. ஆதலின், வருந்தி உழைக்கக் குழவி அறிதல் வேண்டும். ஆதலின், தண்டனைக்கு இடம் உண்டு என்கின்றார் துர்க்கைம். ஆனால், தண்டனை என்றால் என்ன? அது தவற்றினைத் தடுக்கும்வழி என்பர் சிலர். குழவி முன்னோக்கமுடையதானால் அன்றோ தண்டனைக்கு அஞ்சித் தீமை செய்யாதிருக்கக் கூடும்? சிலர் அது கழுவாய் என்பர். ஒரு தீமையால் மற்றொரு தீமை எவ்வாறு கழுவப்பெறும்? ஆதலின், தன் செயலைப் பெரிதாக ஆசிரியர் கொண்டுள்ளார் என்பதன் அடையாளமாக மட்டுமே தண்டனை விளங்குதல்கூடும். வருத்தமுறையாம் தண்டனை இல்லையேல் ஒழுக்க நிலையை வற்புறுத்துவது எங்ஙனம்?

சமுதாயநிலை :- குழுநிலையின் கூட்டுறவை வற்புறுத்தலே ஒழுக்கநிலையை வற்புறுத்தும் வழியாம். இருவரோ, ஒரு சமுதாயமோ ஒன்று சேரும்போது தன்னை உயர்ந்ததெனக் கருதிவந்து பிறிதொன்றனை அறிய வருகிறது. ஒத்துணர்ச்சி, பிறர்க்கிரங்குதல் முதலியவாய் எழும் தன்னலமற்ற போக்கும் எழுகின்றது. குழவி தன்னலமே உருவானதும் அன்று. பள்ளிக்குப் போகும் முன் விளங்கும் குடும்பம், நண்பர், குழு முதலியவற்றில் "குடல் துடக்கு" "நட்பு" என்பவை தன்னலமின்மையை வளர்க்கின்றன. இவ்வாறு பழகிய குழவியைக் குடல் துடக்கும் நட்பும் தோன்றாத அரசியற் சமுதாயத்திற்குத் தகுதியுள்ளதாக அமைத்து வளர்க்கவே பள்ளிக்கூடம் உள்ளது. துர்க்கைம் என்பார் "முதியவர்தம் கட்டுப்பாடே உண்டு" என்பதனால் "குழவியை வருத்தி வளர்க்கவேண்டும்" என்கிறார். ஆனால், விளையாட்டுலகில் வாழ்ந்த குழவி கூட்டுறவின் கட்டுப்பாட்டினையும் அறியும். குழவி தான் செய்யும் வேலையில், விளையாட்டில் போலத் தானே ஈடுபட

வேண்டுமானல், அதற்கு அதில் அக்கரை பிறத்தல் வேண்டும். கட்டாயத்தால் அங்குப் பயனில்லை; தன்னுரிமையே வேண்டும். ஆதலின், தன்னுரிமைக்கு இணங்கக் குழவி தானகவே வேலை செய்யும் பழக்கத்தைத் தூண்ட ஆசிரியர் முயலுவது வீண் காலப் போக்கன்ரும். ஆதலின், துர்க்கைம் கூறுவதுபோலக் "கழுவாய்த் தண்டனையால் வற்புறுத்தவேண்டும்" என நாம் கூறுவதற்கு இல்லை. அவர் கூறும் கழுவாய்த் தண்டனையும் பழிப்பின் அறிகுறியே ஆம். பழிப்பது யார்?' ஆசிரியரா? குழுவா? "தீய செயலின் இயற்கை விளைவே பழியாம்" என்பதனைக் குழவிகள் கூடி விளையாடும்போது காண்கிரேம். இங்கு இயற்கையாவது, ஒழுக்கச் சுட்டுநிலையின் (Moral value) வழியே எழும் தீர்ப்பிற்கேற்ப வரையறைப்பட்ட சமுதாயத்தின் எதிர் ஊன்றலே (Response) ஆம். இவ்வாறு பழியை வெளியிட்டால் மட்டும் போதாதா? தண்டனையாகப் புறநிலை நோயையும் விளைவிக்க வேண்டுமா? பரிமாற்றத் தண்டனை இருந்தால் போதாதா? இதனையன்ரே குழவியும் தக்கதென விருப்புடன் ஏற்றுச்சீர்பெறுகின்றது? அங்கன்ரே தன்னுரிமை விளங்குகின்றது?

அறிவும் கூட்டுறவும் :- காண்ட் (Kant) என்பார் "இந்தத் தன்னுரிமை அறிவிற்குப் பொருத்தமாம் நிலையைத்தேடி நடப்பதாம்" என்று விளக்குகின்ருர். தூர்க்கைம் என்பாரோ "சமுதாயத்தினும் அதிகாரம் வேறு பிரிந்து தோன்ருமையை வற்புறுத்திச் சமுதாயம் ஒவ்வோரிடத்தும் திரு அவதாரம் செய்துள்ளமை காரணமாகச் சமுதாயத்திற்குக் கீழ்ப்படிதல் தனக்குக் கீழ்ப்படிதலாம் தன்னுரிமையே" எனக் கூறுகின்ருர். ஆனல், "தன்னுரிமையானது இவ்வாறு புறமுக நோக்கமாகாது உள்ளிருந்து வெல்லுவதாம் கூட்டுறவில் உண்டே. அன்றிக் கீழ்ப்படிதல் என்னும் கட்டாயப் பாட்டில் இல்லை" என

வேண்டும். வளர்ச்சியில் ஒரு போக்கு உண்டு என்றால் அதனை ஏதோ ஒன்று இயக்குதல் வேண்டும். புலன்தகை இயக்கங்களில் பொருத்தத்தினை நாடுகிறோம். உயிர்ப்பொருளில் சமனிலையான அமைப்பினையும் நாடுகின்றோம். இத்தகைய நாட்டம் இருத்தலின், மேல் வரிச்சட்டமாக நாம் கருதும் சமநிலை ஒன்று உண்டு என்பதாயிற்று. அமைப்புகளை வகை செய்து ஆக்கித் தந்து இந்தச் சமநிலையை அறிவது ஒன்று உண்டு என்பதாயிற்று. இந்த அறிவு பொதுநிலையாக எழுவதேயாம். குழவியைத் தனியேவிட்டால் தானே நடுவாந்தன்மையே விளங்கும். முதியோரது கட்டாய நிலையில், அவர்கள் சொன்னதே உண்மை என்ற குருட்டு, நம்பிக்கையே உண்டு. இது நீங்க வேண்டுமானால் முறைமை நிலைக்கொள்கையை விளக்கும் பொதுநிலை அறிவு வேண்டும். அனுபவத்தில் எழும் முரண்பாடுகளை உணர்தல் வேண்டும். அவற்றை நீக்கவே அறிவு வகையான விவாதம் எழுகிறது. விவாதம் செய்யவோ ஒத்தவர்கள் கூடவேண்டும். எனவே, கூட்டுறவு நிலையே அறிவுநிலையையும், அதுநிலைநாட்டும் சமனிலையையும் விளைவிக்கின்றது என்பதாயிற்று. இதற்கேற்பக் குழவியைப் பழக்குதல் வேண்டும்.

"தகுதியென ஒன்று நன்றே பகுதியால்
பாற்பட் டொழுகப் பெறின்" (குறள்)

---

# 29. தமிழ்க் குழவி

---

## I. தொல்காப்பியம்

சுருக்கம்:- இந்த நூலும் ஒரு தமிழ்க் குழவியே. ஆதலின், தமிழர், தம் குழவியைப் பற்றிக் கருதியமையைக் குறித்துச்

சிறிது நோக்குதல் நன்றேயாம். அங்குக் கூறியுள்ள குறிப்புக்களை ஒருங்கு திரட்டுவது ஒருபேர் ஆராய்ச்சியாம்; குழவி உள்ளத்-தினை விளக்கும் ஒரு பெருநூலாம். ஆதலின், சுருக்கமாகச் சுட்டுவதே இங்கு நமது நோக்கமாதல் வேண்டும்.

தாய்மை :— தொல்காப்பியர் குறிக்குங் கருத்துக்கள் மிகச்சிறந்தனவாம். தாயொடுமகன் கலாய்ப்பதன்றி மகனொடு தாய் கலாய்ப்பதில்லை என்பார், "மகன் வினைகிளப்பின்" எனக் கூறுகின்றாராம். குழவிப் பருவத்தே பெண்ணையும் ஆணெனக் கருதிய தமிழர் கருத்தினைத் தொல்காப்பியர் கூறும் "பெண் மகன்" என்னும் வழக்கு நிலைநாட்டுகிறது. குழவிப் பருவத்தே போர்த்திறம் காட்டும் 'பிள்ளையாட்டு' முதலிய நிலைகளையும், மறநிலை கெட்டோ, சிறந்தோ குழவி மாய்ந்ததும் உடனே உயிர்விடும் வீரத்தாய்மையின் "தலைப்பெயல்நிலை" யினையும் புறத்திணையியலில் காண்கின்றோம்.

குழவியும் கற்பும் :— மணந்து வாழும்போது தலைவன் "புதல்வற்பயந்த புனிறுசேர் பொழுதின் — நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி — ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் — செய் பெரும் சிறப்போடு சேர்தற்கண்" பேசும் பேச்சுக்களையும், தலைவி சினந்தகாலத்துத் "தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால் — அந்தமில் சிறப்பின் மகப் பழித்து" நெருங்கிப்பேசும் பேச்சுக்களையும், கிழமக்கிழத்தி, "இன்ன-கைப் புதல்வனைத் தழீஇ. — இழையணிந்து — பின்னர் வந்த வாயிற்கண்" பேசும் பேச்சுக்களையும் தொல்காப்பியர் சுட்டு-கின்றார். "பேதமை யூட்டல்" என்னும் துறையில் குழவிப் பருவத்து நிலைகள் விளக்கமுறுகின்றன. இப்பகுதி களவியலில் தோழி கூறுவதாம்.

அமைதியும் உலகமும் :— இவ்வாறு குழவி போராட்டத்-திடையே அமைதியை நிலைநாட்டுவதனை, "மின்னிழைப்

புதல்வனை வாயில் கொண்டு புகினும் - இறந்தது நினை இக்கிழ-வோள் ஆங்கண் - கலங்கலும் உரியள் என்மனார் புலவர்" - என்-பதனால் அறிகின்றோம். குழவியின் எதிர் குடும்பச் சண்டையோ ஊடல் என்பதோ இல்லை என்பது கோவைகளின் வழியே நாம் அறியும் தமிழ் நாகரிகத்தின் சிறப்பாம். சங்க நூற்கள் இவை அனைத்தினையும் விளக்கிப் பா அமுதம் பொழிந்து உள்ளதனை உரையாசிரியர்கள் இனிய பெரு விருந்தாக நமக்குப் படைத்து உள்ளனர். இளமை நகையூட்டு-வதனையும் தொல்காப்பியர் குறிக்கின்றார்.

குழவியும் அறமும் :— இல்லறத்தின் முடிவு குழவிகள் வழியே உலகம் நடக்குமாறு குடும்பத்தினைப் பெருக்கிச் சிறப்-புறச்செய்வது எல்லாம் அறநெறி வாழ்வேயாம் என்பதனைக் "காமம் சான்ற கடைக்கோட்காலை - ஏமம் சான்ற மக்களோடு துவன்றி - அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் - சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" - என்பதனால் தொல்காப்பியர் வற்புறுத்துகின்றார். திருக்குறள், அன்பு மனைவி வழியே குழவிகள்மீது படர்ந்து, சுற்றி ஓங்கிக் கைம்-மாறு வேண்டாக் கடப்பாடாய் அனைவரையும் தமராகக்-கொண்டு, ஒப்புர ஒழுகிப் பின்னர் நமர் பிறர் என்பதன்றி உலகம் முழுதினையும் அருள்வழியே தன்னுயிர் எனக்-கொண்டு ஒளிர்வதனை அறத்துப்பாலில் விரித்துக்கூறுவது காண்க.

## II. பிற்காலம்

குழவியும் உலாவும் :- "குழவி மருங்கினும் கிழவதாகும்," "ஊரொடு தோற்றமும் உரித்தெனமொழிப" என்ற தொல்-காப்பியச் சூத்திரங்களை முன்னரே கூறினோம். முன்னையது

பிள்ளைத்தமிழைப் பற்றியது என்றும், பின்னையது உலா என்னும் இலக்கிய வகையினைப் பற்றியது என்றும் உரையாசிரியர் கூறுகின்றார். உலாக்கள் பெண்களது பல பருவத்தையும் கூறும்போது நமக்குவேண்டிய பேதைப்பருவத்தையும் பெதும்பைப் பருவத்தையும் கூறுவனவேயாம். சேரமான் பெருமாள் பாடிய கைலாய ஞான உலாவே ஆதி உலா என்பர். ஒட்டக்கூத்தர் தம் சோழர்கள் மேல்பாடிய மூவர் உலாக்களும் தலைசிறந்தனவாம். பிற்காலத்தே ஒவ்வொரு கோயிலுக்கும் ஒவ்வோர் உலா எழுந்தது எனலாம். பிள்ளைத் தமிழைப்போல இவை அத்துணைச் சிறந்தன என்பதற்கில்லை.

பிள்ளைத்தமிழ் :— பெரியாழ்வாரது பாடல்கள் பிள்ளைத் தமிழ் எனப் பெயர் பெறுவிடினும் அவ்வகையில் முதல் முதல் எழுந்தும் முடிவிலாச் சிறப்பினதாய பிள்ளைத்தமிழ் எனலாம். பிற ஆழ்வார்கள் கண்ணனது குழவி நிலையைப் பாடும் இடங்கள் எல்லாம்மனத்தினை உருக்குவனவேயாம். சேக்கிழார் திருஞான சம்பந்தர் புராணத்தில் சுருக்கமாக அவரைப்பற்றிய பிள்ளைத் தமிழ் ஒன்று பாடியுள்ளார். ஒட்டக்கூத்தர் அரசர் பெருமக்கள் பேரில் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத்தமிழ் போன்றவற்றைப் பாடும் மரபினை நிலைநாட்டினர். பின்னே வந்த புலவர்கள் பலரும் பாடிய பிள்ளைத் தமிழ்க்கு அளவே இல்லை. குமரகுருபரர் 17 ஆம் நூற்றாண்டில் பாடிய மீனாக்ஷி அம்மைப் பிள்ளைத்தமிழ் அவற்றுள்ளே தலைசிறந்ததாம். அவரது முத்துக்குமாரச்சுவாமிப் பிள்ளைத்தமிழ், சிவஞான முனிவரது அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், மார்க்கசகாயரது விரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், பகழிக்கூத்தரது செந்திற் பிள்ளைத்தமிழ், அந்தகக்கவி வீரராகவ முதலியாரது சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், சிதம்பர சுவாமிகளது திருப்போரூர் பிள்ளைத்தமிழ், மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையின் சேக்கிழார்

பிள்ளைத்தமிழ் என்பனவும் பலரும் பாராட்டுவனவேயாம். குழவிகளாடும் விளையாடல்களும், அவர்கள் அழகும், அவர்களைப் போற்றும் தாய்மையும் இங்கு நன்கு விளங்கக்-காண்கிறோம். மகமதியர்களது முகைதீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ் முதலியனவும், கிருஸ்தவர்களில் வேதநாயக சாஸ்திரி-யார் முதலியோர் பாடிய பிள்ளைத்தமிழ்களும் சென்ற நூற்றாண்டில் வெளிவரத் தொடங்கின.

குழவியும் முற்கால காவியமும் :- மணிமேகலை பிறந்ததும் கோவலன் அம்மகிழ்ச்சியைப் பாராட்டியதனைக் கோவலனது உயிர்நிலைப் பண்பாக இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தே பாடுகின்றார். சிந்தாமணியில் சீவகன் சுடுகாட்டிற் பிறக்க அவன் தாய் விசயமாதேவி வருந்துவதனை ஓதுவார் கருத்-தெல்லாம் கலங்கத் தேவர் பாடுகின்றார். நாமகள் இலம்பகம் சீவகன் குழவியாய் வளர்ந்து கல்வி கற்பதனைப் புனைந்து உரைப்பதாம். சூளாமணியில் தலைவியின் அறிவு வளர்ந்த நிலைமையைத் தொனியென்னும் இறைச்சிப் பொருள் வழியே தோலாமொழித்தேவர் புனைந்து உரைப்பதில் ஒரு பாட்டினை முன்னரே எடுத்துக் காட்டியுள்ளோம்.

குழவியும் பிற்காலக் காவியமும் :- சேக்கிழார்தம் நாயன்-மார்களது குழவிப் பருவத்தைத் தேனினும் இனிக்கப்பாடு-கின்றார். திருவெண்காட்டு நங்கை

"செய்யமணியே சீராளா! வாராய் சிவனார் அடியார் யாம்
செய்யும் வகையால் உடன் உண்ண அழைக்கின்றார்"-என்று

ஓலிடும் பகுதி சுவைததும்புவதாம். கம்பர் குழவிநிலையை விரித்துப் பாடாமற்போயினும் பின்வரும் வரலாற்றிற்கேற்ப இராம இலக்குமணர்களை இயற்கை வனப்பின் இடையேயும், பரத சத்துருக்கினரைத் குதிரை ஏற்றம் முதலிய நடைபெறும்

நகரவாழ்க்கையின் இடையேயும் விளையாட வைக்கின்றார். அவருடைய தயரதன் புலம்பல் குலசேகரர் பாடல்களை நினைப்பூட்டுகிறது. இந்திரஜித்து இறந்ததும் இராவணன் புலம்புவது கம்பர் புலம்புவதேயாம். கூர்மபுராணத்தில் கண்ணன் திருவிளையாடலைப் பாடவரும் அதிவீரராமபாண்டியர் களவாடிய வெண்ணெயைப் பூசைக்கும் வழங்கினான் என்று வாய்மணக்கப் பாடுகின்றார். வில்லியார் பாண்டவ கௌரவர்களது குழவிப் பருவத்தை வாரணாவதச் சருக்கத்தில் சுவைததும்பப் பாடுகின்றார். "குழவியிலார் என்னுடையரேனும் உடையரோ" எனப்பாடும் நளவெண்பாவில் நளனது குழவிகள் நளனை "மடையர் அறிவாரோ மன்னர் பெருமையை" எனக்கேட்கும் இடம் இலக்கியச்சுவை நிரம்பியதாம். அரிச்சந்திர புராணத்தில் குழவியை இழந்த சந்திரமதி புலம்பும் பகுதி தமிழர் மனத்தினைப் பலநாள்க உருக்கிவந்துள்ளதாம். கந்தபுராணமும், பாம்பன் சுவாமிகள் பாடிய குமாரசுவாமியமும் முருகன் குழவியாய் விளையாடுவதனை மனமுருகிப் பாடியுள்ளன. தேம்பாவணியிலும், சீறாப்புராணத்திலும் வளன் சனித்த படலமும், நபி அவதாரப் படலமும் இவ்வகையில் இன்பம் ஊட்டுவனவாம். குசேலோபாக்கியானத்தில் குசேலரது இருபத்தேழு குழவிகளும் வறுமையில் வாடித் தாயிடம் சோற்றுக்கலைவதனைப் பலரும் அறிவர். இந்த நூற்றாண்டில் பாரதியார் பாடிய பாப்பாப் பாட்டு 'கண்ணன் என் குழவி' முதலியனவும், தேசியவிநாயகம் பிள்ளை குழவிகளுக்கு என எழுதிய பாடல்களும் புத்துலகப் பாக்களேயாம்.

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே இருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்
— வரந்தருவார்

# 30. கட்டுரை வாழ்த்து

## I. மூவகை உயிர்

எதிர்கால் உலகம் :— மேனாட்டுப் பெரியோர் குழவியுள்ளத்தினைப் பற்றிப் பல்பட ஆராய்ந்து கண்ட முடிபுகளை இதுவரை ஒருவாறு அறிந்தோம். குழவியை வளர்க்கும் நுட்பங்களாக அவர்கள் வெளியிட்ட உண்மைகளையும் குறித்துவைத்தோம். குழவி ஆராய்ச்சி ஒருபெரிய புரட்சியை விளைவித்துள்ளது. ஆனால், மக்கள் உள்ளத்தில் இன்னமும் இந்த உண்மை பதியவில்லை. ஆசிரியன்மார் தாம்கற்கும் கல்லூரிகளில் ஓராண்டுவரை குழவியுள்ளத்தினைப் பற்றி ஓதுவதால் மட்டும் புத்துலகம் பிறவாது. உரிமையும், ஒற்றுமையும், பட்டினியின்மையும், கலைவிளக்கமும், புதிய உலக இயல்பாக அமையவேண்டும் என அறிஞர் கனவு காண்கின்றனர்; அத்தகைய கனவு நனவாக வேண்டுமானால், இங்குக்கூறிய கருத்துக்களைப் பெற்றோரும் மற்றோரும் உணர்ந்து பின்பற்றிக் குழவிகளோடு பழகிப் பழக்கி விடுதல் வேண்டும்.

உயிர்நிலையும் இளமையும் :- குழவிநிலையே மக்கள் நாகரிகத்தின் சிறப்பியல்பினை விளக்குகின்றது. உயிரல் பொருள்களிடையே குழவிநிலை இல்லை. சேர்க்கையால் பெருகுவது வேறு; இயல்பால் வளருவது வேறு. "கல்லின் இளமை; கல்லின் முதுமை" என்று பேசுவது செறிவு நிலையினையும் பழமையினையும் குறித்துமே ஆம். "இளமணல் பரப்பி" எனப் பண்டைத்தமிழர் பாடியது அணிவரப் பாடியதே ஆம். "புதுமணல்" என்பதே அங்குப் பொருள். உலகிடையே

உயிர்ப்பொருள்கள் தோன்றிய பின்னரே இளமை என்பது விளங்குகிறது. உயிர்ப்பொருள்களிடையேயும் எங்கும் இளமை என்பது தோன்றக் காணேம். செடிகள் மரங்கள் முதலில் வித்தின்றியே விளைந்தன. பின்னர் வித்தின்வழியே விளையவந்தன. இது முட்டையும் முதலுமாக வளரும் நிலைமையன்றோ ?

. . .

முதல்வகை உயிர்:- நிலைத்திணையுயிரினை விட்டு இயங்குதிணை உயிர்களைக் கண்டால் இளமை தோன்றும் வழியே அவற்றை மூன்று இனமாகப் பிரிக்கலாம். முதல்வகையைச் சேர்ந்தவை உயிர்ப்பொருள் என மனத்திற்கு வருவதே இல்லை. அங்கு இளமை என்பதே இல்லை. மேனாட்டில் அமீபா (Amoeba) எனவழங்கும் "மாறன்" என்ற உயிர்வகை உயிர்ச்சத்தின் துளியாகத் தோன்றிச் சுற்றியுள்ள மணல் நீர் முதலியவற்றில் உள்ள உணவினைக் கவர்ந்து படிப்படியாகப் பெருகி நீள் சதுரமாகி இடை சிறுத்துக்கொண்டே வந்து, இரண்டாய்ப் பிரிகிறது. அவற்றில் ஒவ்வொன்றும் மறுமுறையும் இவ்வாறு வளர்ந்து பிரியுமாம். இவ்வாறே தொடர்ந்து நிகழுவதாலேயே அந்த உயிர்வகை உலகிடை நிலைபெற்று நிலவுகின்றது. ஆகையால், இங்கு இளமையைப் பற்றிப் பேசுவதற்கு இல்லை. எதனைத் தாய் தந்தை என்பது ? எதனைக் கான்முளை என்பது ?

இரண்டாவது வகை :- இரண்டாவது வகையைச் சேர்ந்தவை பட்டுப்பூச்சி முதலியனவாம். உலகிலே இருபிறப்பாளிகளைப் பற்றிப் பேசிய காலம் உண்டு. பறவையினையும் இரு பிறப்பினதாகக் கூறுவது உண்டு. கீழுயிருலகில் இருபிறப்பாளிகளே அன்றிப் பல பிறப்பாளிகளும் உண்டு. முட்டையாய்ப் புழுவாய்க் கம்பளப் பூச்சியாய்ப் பின் பட்டாம்

பூச்சியாய், உயிர்ப் பொருள் மாறிவருவதனை முருங்கை மரத்தருகே வாழ்ந்த எவரும் அறிவர். வேட்டுவனும் அப்புழுவை வேண்டுருவம் தான் கொடுத்துக் குழவி ஆக்குகின்ற கதையைச் சிவஞானபோதமும் கூறுகின்றதன்றோ? (Larvae and metamorphoses). இவ்வாறு மாறிப் பிறப்பது காரணமாக இவற்றின் முதல் நிலைக்கும் பின்நிலைக்கும் ஒரு தொடர்பும் விளங்கக்காணோம். தவளை நீரில் நீந்தும் குஞ்சியாய் இருந்து நீர்வாழ்விற்கேற்ற அமைப்புகளைப் பெற்றுப் பின்னர் நிலத்தில் வாழவரும்போது நிலத்திற்கு ஏற்ற அமைப்போடு மறுபிறப்பு எடுத்தலைக் காண்கிறோம். இவ்வாறு பல வேறு நிலையில் வாழ வந்தமைக்கேற்பப் பலவேறு பிறப்பெடுக்க நேர்ந்தமை இப்போதும் பழக்கத்தின் பயனாகநிலை பெற்று வருகிறது போலும். இந்த மறுபிறப்பு தோலுரிதல் எனக் கூறத் தக்கதாகவும் அமையும். இருவேறு நிலையாக வளர்ந்த உயிருளிகளில் சில, பின்தோன்றிய சுற்றுப்புறச் சூழலின் காரணமாக, இரண்டாம் நிலையை வேண்டி நில்லாமையால், அதனிற் புகாது முதல் நிலையிலேயே தொடர்ந்து வாழ வரத் தொடங்கின. பகைமிக்க இடத்திலே இனவளர்ச்சியின் இன்றியமையாமை காரணமாக முதல் நிலையிலேயே முட்டையிடும் ஆற்றல் பெற்றனவாம். முட்டையிட்டு இனத்தினைப் பெருக்குவதே நோக்கமாதலின் இவற்றின் வாணாள் சிலபோது ஒருநாளளவிலும் குறைந்து விளங்கக் காண்கின்றோம். இங்கு இளமை எனப் பேசுவதற்குத் தகுந்த வாய்ப்பில்லையேனும் முட்டையிடுதலும், தாய்மையும் இயற்கைச் செயனிலையாகச் சில இடத்தே சிறந்து விளங்கக் காண்கிறோம்.

மூன்றாவது வகை வளர்ச்சி :- மூன்றாவது வகை உயிர்ப்பொருள்களோ பிறந்த உடனேயே பெற்றோரைப் போன்ற அமைப்புடன் வெளிக்கும் தோன்றுதலின், "இந்தச்சிறப்பு

இனத்தைச் சேர்ந்தன" எனச் சுட்டிக் கூறத்தக்க இயல்பு பெற்றனவாம். எனினும், இங்கும் பிறந்தவுடன் பொது-இனத்தைச் சேர்ந்த குழவிகளனைத்தும் ஒன்றாக விளங்கவே காண்கிறோம். குரங்கின் குழவியும் மக்கட் குழவியும் ஒன்றே போலத்தோன்றும். நரி, நாய், ஓநாய் முதலியவற்றின் குட்டியும் ஒன்றுபோலவே தோன்றும். புலி, சிங்கம், சிறுத்தை முதலியனவும் அங்ஙனமே ஆம். ஒன்றுபோல் தோன்றும் இவை உயிர்ப்பொருளின் கூர்மை அல்லது மலர்ச்சி (Evolution) முறைப்படி தாம் பொதுவினத்தின் நின்றும் சிறப்பினமாகப் பிரிந்தமையைத் தம் வளர்ச்சியினிடையே விளக்கிக் கொண்டே செல்கின்றன. ஆனால், இந்தப்பழைய வரலாற்றைத் தம் வளர்ச்சியில் மிக விரைந்து காட்டிச்செல்லும் உயிர்வகையே முந்துற முந்தி முன்னணிக்கு வந்து சிறப்பதாம்; பிறக்கும்போது சிறியதாகத் தோன்றிப் பின்னர்ப் பெரியதாக வளர்ந்து முற்றுகின்றது. பல புறனடைகள் இருப்பினும் சிறு வடிவினதாம் உயிர்ப்பொருளே வளர்ந்து, பெருகி முற்ற நீண்டகாலம் கழிகின்றது எனப்பொது வகையாகக் கூறலாம். புறனடைகள் இருப்பினும் பொதுவாகப் பெரியவடிவு தற்காப்பிற்குத் தக்கதாகின்றது எனலாம். இவை காரணமாக உயிர் நிலையிலுள்ள உயிருளிகளிடையே இளமைப் பருவம் உயர் நிலைக்கேற்ப மிக்குவரக்காண்கிறோம்.

## II. இளமையின் தொண்டு

மேல்தோற்றம் :— இளமைக்கும் முதுமைக்கும் உடல் வளர்ச்சியில் மட்டுமே மேல்வாரியாக வேற்றுமை காண்கிறோம். உடல் வளர்ச்சிப் பருவமே இளமைப் பருவம் என முதலில் தோன்றுகிறது. மேல்வாரியான வேறு சில வேற்றுமைகளும் உண்டு. இளமைக்கு வேண்டிய அமைப்புகள் சில முதலில்

தோன்றிப் பின் வேண்டாதபோது மறைகின்றன. உயிருளி-களிடை இளமையில் விளங்கும் புறத்தோற்றத்தினையும் பின் விளங்கும் தோற்றத்தினையும் வேற்றுமைப்படுத்திக் காணலாம். மயிற்குஞ்சியும் தோகை விரித்தாடும் மயிலும் இந்த வேற்றுமையை நன்கு விளக்குகின்றன. முதலில் தோலின் இயற்கை மடிப்பின் காரணமாகப் பல உயிர்ப்பொருள்கள் புள்ளிகள் பெற்றுப் பொலியக் காண்கின்றோம். இதனால் இவை நிழலில் இருக்கும்போது இயற்கைப் பகைப்-பொருள்கள் இவற்றைக்கண்டு பிடிக்க முடியாததொரு தற்-காப்புநிலை எழுகிறது. பின்னர், இந்தப் புள்ளிகள் மறைய உடல் முழுதும் விளக்கம் அற்றதொரு புதுநிலையை அவை அடையக் காண்கிறோம். சிங்கத்தைக்காண்க. சிலபோது விளக்கமான நிறங்களும் உடலின் கொழுமைக்கு ஏற்ப எழு-கின்றன. மரத்தினிடத்தே இலை உதிர்தல்போல இவற்றிடை-யேயும் மயிர் விழுதல், கொம்பு விழுதல், இறகு விழுதல் முதலியன ஆண்டுதோறும் நிகழ்கின்றன. மற்றொருபருவத்தே இவை எழுதலையும் காண்கிறோம். ஆணும் பெண்ணுமாய்க் கூடிக்குலாவும் பருவத்திலேயே இவை எழுகின்றன; பின் உதிர்கின்றன எனலாம். இவ்வளவே இளமையின் பயன் என இங்குக் கூறலாம்.

குடும்பமும் சமுதாயமும் :- மேலும் உயிர்ப்பொருள்களின் வரலாற்றினை ஆராயும்போது உயிர்ப்பொருள்களின் இன்றி-யமையாத முதனிலைக் கடமையாம் இனவளர்ச்சி என்ற தொண்டினை முதலில் கோடிக்கணக்காக முட்டையிடும் வகையிலே ஈ, மீன் முதலிய உயிர்ப் பொருள்கள் ஆற்றி வருகின்றன. காற்றிலும், அலையிலும், பகையின் வாயிலும் பலகோடி அழிந்தாலும் ஒரு சிலவேனும் முற்றி இனத்தை வளர்க்கும் அன்றோ? கோடிக்கணக்கான உயிர்ச்சத்து

அழிவதனை மனம் பொறுதவள்போல இயற்கை அன்னை பின்னர் வேறு ஒரு வழியைப் பின்பற்றுவாளாயினள். தாய்மை என்பதனை உயிர்ப்பொருள்களின் உள்ளத்தே விதைத்து வளர விட்டாள். முட்டையிட்டு ஓடிவிடாது அடைகாத்து வளர்க்கும் புதுமை தோன்றியது. முதலில் தம்வயிற்றிற் பிறந்த முட்டைகளை மட்டும் அன்றித் தம்வழியிற்பட்ட முட்டைகளையும் அடைகாக்கும் இயல்பே எழுந்தது. தனக்கெனவே வாழ்ந்த உயிர்ப்பொருள் இளைய உயிருள்ளிகளைக் காக்க வருவது ஒரு பெரும் புரட்சியேயாம். தாய், குஞ்சியோடு வாழ்வது-போல இளைய உயிர்ப் பொருள்கள் தாயுடன்வாழ வருவது புதுமையன்று. முன் முட்டையாய்த் தாய் வயிற்றிற்கிடந்தவை வெளிவந்த பின்னும் தாயருகு கிடப்பதில் என்ன புதுமை உண்டு? ஆனால், சில புழுக்கள் முதலியன தம்கூடப் பிறந்த-வற்றையே தின்றுவாழ்வதனை நோக்கும்போது, அத்தன்மை நீங்கி உயிர்ப்பொருள்கள் உடன் பிறந்த ஒற்றுமையோடும் தாயுடன் வாழ்வது ஒரு பெரும் புதுமையே ஆம். சில மீன் முதல் கங்காருவரையுள்ள உயிர்ப் பொருள்களிடையே இளையனவற்றைத் தாய்கள் தமக்குள்ளேயே பையில் வைத்தும் முதுகிலேற்றியும் வளர்க்கின்ற மாறுதல்கள் பல பல வகையில் விளங்கக் காண்கின்றோம். இந்த ஒற்றுமை வாழ்வின் பயனாக இயற்கைச் சேயனிலையின் முடிவுநிலைச் சிறப்பாக விளங்குகிற எறும்புப்புற்று, செல்லுப்புற்று, தேனீக்கூடு முதலிய வியத்தகு உலகங்களின் சமுதாய வாழ்க்கை எழக்காண்கின்றோம்.

நாகரிக நாற்று :— இவ்வாறு குடும்பவாழ்வும் சமுதாய-வாழ்வும் தளிர்க்கின்றன. பறவைகள் மிகுதியும் ஆண்டுக்கு ஒருமுறை கூண்டுகட்டி முட்டையிட்டுக் குஞ்சு பொரித்-தலின் அவற்றின் வாழ்க்கையிற் பெரும் பகுதி பெற்றோரின் கடமையை நிறைவேற்றுவதில் செலவாகின்றது என்பது

போதரும். பாலிகளிடையே (Mammals) தாய் தன் கருப்பையிலும் மார்பிலும் தன் கான்முளைகளை வைத்துச் சூடேற்றியும், பிற வகையால் தீங்குவாராது காத்தும், உலகில் வாழப் பழக்கியும் வரக் காண்கிறோம். தந்தையும் பல இடங்களில் உதவக்காண்கிறோம். இந்த முறைவளர்ச்சியின் பயனாகப் பிறந்தவற்றில் பெரும்பான்மையானவை அழியாது வளர்தலின் தோன்றும் கான்முளைகள் ஒரு சிலவே ஆம். ஆதலின், பெற்றவற்றிற்கும் பிறந்த வற்றிற்கும் உள்ள தொடர்பு நெருங்கியதாகிறது. தாய்மை, அன்பு, தன்னலமின்மை, பயபக்தி, கடமை, கீழ்ப்படிதல் முதலியவாக உலகம் பாராட்டும் பண்புகள் இங்கு அரும்பவிடவும் காண்கின்றோம்.

தாய்மை :— பாலி (Mammals) என்ற பெயரே ஒரு விளக்கம் தருகின்றது. பால் கொடுத்து வளர்ப்பதன்றோ பாலி. கீழ்நிலை உயிருளிகளிடையேயும் பலவகைச் சுரப்பிகள் (Glands) புறத்தே சில சாறுகளை வெளியிடக் காண்கிறோம். மணத்தை வெளியிடுவன சில; பகைவரை ஓட்டும் பொருளை வெளியிடுவன சில. பாலிகளிடையே வேர்வைச் சுரப்பிகழிபொருளை வெளியிட வந்தது. அதனினும் அகநிலையை வளர்ப்பதில் சிறந்தது பாற் சுரப்பியின் வளர்ச்சியேயாம். இயற்கை தாய்மையை வளர்க்க வந்ததன் நோக்கத்தை இது நன்கு விளக்குகின்றது. பால் குடிப்பது குழவிக்கும் உடலை வளர்த்து உள்ளத்தின்பம் ஊட்டுவதாய்த் தாய்க்கும் அன்புள்ளத்தினை வளர்த்து உடற்கின்பம் ஊட்டுவதாய் இயைகின்ற உயிர் வளர்ச்சிப் பொருத்தத்தினை என் என்பது? குழவியின் உடம்பமைப்பிற்கு ஏற்றவாறு பாலில் சத்துப் பொருள் அமைந்து கிடக்கும் பொருத்தத்தினைக் கடவுட் பொருத்தம் என வியப்பதில் என்ன வியப்பு? குழவியை வளர்ப்பதற்கெனப் பாலும் சுரக்குமாறு இயற்கையன்னை விளைவித்துள்ள புதுநிலையில்

மேலே நாம் கூறிய பண்புகள் சிறந்து விளங்கிப் பாலோடு இரத்தத்தில் ஊறிவிடுகின்றன எனக் கூறலாம் அன்றோ? தாய்மைக்குணம் வளர்ந்துள்ள இடத்தில் தாயொடு கூடிவாழும் விலங்குகளைப் புனிற்றிளம் பருவத்திலேயே கொண்டு வந்து நாம் வளர்ப்பது எளிதாகின்ற புதுமையையும் காண்கின்றோம். நம்மைத் தாயெனக் கருதி அவை வளர்கின்றன. இவை அனைத்தும் நமக்கும் கீழினங்கட்கும் உள்ளதோர் ஒற்றுமையை வற்புறுத்துதல் காண்க. ஆனால், நம்மை நம்பி வாழ வருவனவற்றின் இயற்கைக்கு மாறாக, குரங்கு சுருட்டினைப் பிடிக்கவும் யானை பின்னங்காலில் நிற்கவும், அடித்தடித்துச் செயற்கையாகப் பழக்கும் விலங்காட்டியின் வெறியாட்டைக் கண்டு மகிழும் மாக்களை என் என்பது? எருத்துப்போர் (Bull fight) எழுந்தது ரோம நாகரிகம் விழத் தொடங்கியபோது என்பதனை உணர்ந்தால் இத்தகைய வெறியாட்டங்களின் தீமை நன்கு புலனாகும். இவற்றை விரும்பும் மனப்பான்மையைக் குழவிகளிடம் எழுப்பிவிடாது இயற்கை நிலையில் அவற்றின் இயல்பினை அறிந்து விளையாடவே பழக்குதல் வேண்டும்.

## III. புதுமுறை இளமை

இயற்கைச் செயனிலையும் அறிவும்:- இவற்றோடு இளமைப் பருவத்தின் தொண்டு முடியவில்லை. முடிந்திருந்தால் மக்கள் என ஓர் இனம் சிறக்க வேண்டாமே? மாறன் முதலியனவாக நாம் கண்ட அடிநிலை உயிர்களிடம் எழும் பழக்கம் எளிதில் மாறுவதாம். நினைவு ஒன்றும் அங்கு நிலைத்திருப்பதில்லை. மேனிலை உயிர்களிடம் இயற்கைச் செயல்நிலை விளங்குகிறது. இவை பிறந்ததும் இயங்கி உணவைக் கொத்துகின்றன. இவற்றின் செயல் பல இயல்பாகவே அமைந்திருக்கக்காண்-

கின்றோம். குளவி எழுந்ததும் பறக்கின்றதன்றோ? இந்த இயற்கைச் செயனிலையின் சிறப்பினை எறும்பும், தேனீயும், சிதலையும் நன்கு விளக்குகின்றன. அந்த வழியில் அவற்றிற்கு மேலும் செல்லுவதற்கு இல்லை. ஆனால், அவை இயற்கை-யன்னையின் முடிந்த முடிபாதலும் காணோம். அவை பகைவர் கையில் அழிவுதனை என் என்பது? அவை புதிய நிலையில் சிறிதளவு மாறினாலும் மக்களைப்போல எந்தப்புதிய நிலையினையும் பொறுக்க முடியாமையால் அழிகின்றன. ஆதலின், பேர்க்சான் (Bergson) கூறுவதுபோல இயற்கை அன்னை இயற்கைச் செயலினும் வேறானதொரு வழியைப் பினபற்ற வேண்டிய-தாயிற்று. அதுவே அறிவு வளர்ச்சி.

மக்கட் கல்வி :— குறிப்பிட்ட செயல்கள் அன்று இங்கு மக்களிடத்தில் பழக்கமாகப் பதிவன். அவற்றிடை விளங்கும் பொதுநிலையே மனத்திற் பதிகின்றது. எதிர்தோன்றும் நிலைமை உணர்ந்து அந்த அந்த நிலைமைக்கேற்பப் பலவகைச் செயல்-களையும் செய்யுமாற்றல் பெறுவதே இங்கு வளர்கிறது. மனிதன் சிறியவற்றிற் கண்டவற்றைப் பெரியவற்றிலும் காண்-கின்றான். பிண்டத்தில் கண்டதனை அண்டத்திலும் காண்-கின்றான். தன் சூடுநிலையை அறிந்ததும் சூரியனது சூடுநிலையை அறிகின்றான். கூட்டுறவுகொண்டு ஆகாதனவற்றை ஆக்கு-கின்றான். அண்டத்தை நோக்கக் கொசுகினும் மிகமிகச்சிறிய மகன் அண்டத்தையே அளக்கவரும் வரலாற்றின் நுட்பம் ஈதேயாம். அத்தகைய கல்விக்குக் காலம் மிக்கு வேண்டப்படும். "இளமையிற் கல்" என்ற அவ்வையின் கருத்து இப்போது நன்கு விளங்குகிறது. இளமை மக்களிடம் அளவுகடந்து மிக்குநீளுகிறது. மக்கள் 20 — 25 ஆண்டு வரையிலும் தம்வாணாளைக் கல்லூரியிற் கழிக்கின்றனரன்றோ? இயற்கைச் செயனிலையில் பழக்கம் வேண்டாம். தோன்றியதும் அது

செயற்படும் அன்றோ? ஒவ்வொரு தொழிலையும் தொழில் தொழிலாகக் கற்காமல், அவற்றின் பலவேறு தனித்தனி உறுப்புச் செயல்களாக அவற்றைப் பிரித்து அறிந்து பழகு-வதால் அவ்வுறுப்புச் செயல்களைக்கொண்டே பலவகையான வேறுபிற கலவை நிலைச் செயல்களையும் செய்யலாம் அன்றோ? அனுபவத்திற்கேற்ப மாறும் ஆற்றல் எழுதல் வேண்டும். உயர் நிலையில் விளங்கும் உயிர்களிடையே. முன்மூளை (Cerebrum) பலபல கீற்றுக்கள் காரணமாக எல்லைமிக்கு விளங்குதல் காண்க. காட்டில் மரத்தில் தொத்திக் கொடிய உயிர்ப் பொருள்களிடையே வாழ்ந்ததிலிருந்து இன்று அணுக்குண்டிடை வாழவரும் வரையிலும் வளர்ந்த மக்கள்-வாழ்க்கை பலபல புதிய அனுபவங்களையும் தாங்கித் தடுத்து நின்று வாழ்வதாக அன்றோ விளங்குகிறது? ஆகவே, நம்-முடைய கல்விமுறை ஒருவுகையான கைத்தொழிலையோ, பிறி-தொன்றினையோ வற்புறுத்துவதாக அன்றி இயற்கையன்னை-யின் நோக்கத்திற்கு ஏற்பப் பலமுகப்பட்டுப் பலதுறையிலும் பழகித் திருத்தமுற்றுப் பொருத்தமுறும் நிலையில் பழகும் முறையாக இருத்தல் வேண்டும் என மிச்சல் (Sir P. Chalmers Mitchell-in his book "Childhood of Animals") என்ற பேராசிரியர் கூறுகின்றார். குழவி முதியவனானதும் ஒருமுகப்பட்டு ஒரு துறையில் சிறப்படைவதற்கு இந்த முறையே சிறந்த வழியாம். உரிமை வாழ்விலும் கூட்டுற-விலும் பழக வேண்டுவதன் இன்றியமையாமையும் நன்கு விளங்குகின்றது. குழவி நிலையாலேயே மக்கள் வாழ்க்கை சீர்பெற்றுச் சிறக்கின்றது.

## IV கடவுள் வாழ்வு.

அவதாரம்:— குழவி ஓர் அவதாரம் என்ற கருத்தினை மாண்டிசோரி அம்மையார் வற்புறுத்தியதனை முன்னரே

குறித்து வைத்தோம். மற்ருேர் உண்மையை இப்போது அந்த அம்மையார் வற்புறுத்துகின்றனர். கம்பளிப் புழுவாக இருந்து பட்டுப் பூச்சியாகப் பறந்துபோகிற உயிர்ப்போக்கினைக் கண்டோம். அது முட்டையாக இருந்தபோது பாதுகாவலாக மரக்கிளையின் மூட்டுகளில் கிடக்கும்; பின் கம்பளிப் பூச்சி-யானதும் இலைகளைத்தின்று கொழுக்க வேண்டும். இலைகளோ கிளைகளின் மூட்டுவாய்களில் இருப்பதில்லை; நுனியிலேயே மிகுதியும் தளிர்த்திருக்கும். மூட்டுவாயில் இருந்து நுனிக்கு இப்புழு எப்படிச் செல்லும்? இயற்கை அன்னை ஒரு புதிய சுரணையை ஏற்படுத்திவிடுகின்ருள். வெளிச்சத்தை நோக்கிச் செல்லும் சுரணையே இப்போது புழுவினிடம் புதிதாக எழும் சுரணை. இதன் காரணமாகப் புழு வெளிச்சம் மிகுதியாக உள்ள கிளையின் நுனியை அடைந்து இலைகளைத் தின்று கொழுக்கின்றது. இந்த வளர்ச்சி முடிந்ததும் வெளிச்சச் சுரணை மறைகின்றது. அதன் கடமை முழுதும் நிறைவேறிய பின் அது ஏன் நிலைத்திருக்க வேண்டும்? இவ்வாறு அவ்வப்-போதைக்கு ஏற்ற சுரணைகள் தோன்றி உயிர்வகைகளை வளர்ப்-பதனைக் காண்கிருேம். இவ்வாது சுரணைப் பருவங்கள் (Sensitive periods) உயிர்களிடையே தோன்றிமறையும் உண்மை குழவிகளிடையேயும் விளங்கிவரக் காண்கிருேம். குழவிப் பருவத்தில் ஒழுங்குச் சுரணை மலர்கின்றது. பொருள் இருந்த இடத்திலேயே இருக்க வேண்டும் எனக் குழவி விரும்புகிறது. வழக்கத்தில் சிறிது மாறினும் புலம்-புகிறது. தன் சுற்றுப்புறச் சூழலிடையே ஓர் அமைதியைக் காண முயல்கிறது. வலம் இடம் முதலிய புறமுக நோக்க இயக்கங்களையும் நிலைநிறுத்திக்கொள்கிறது. இயக்கப் புலன் இவ்வாறு வளர்கிறது. பின்னர் மொழிச் சுரணை எழுகின்றது. பேசுகின்ற பேச்செல்லாம் குழவி கேட்கின்றது. அதிலொரு இன்பம் கொள்கின்றது. கேட்ட சொல்லையே பல நூறு

முறை திருப்பிச் சொல்லிச் சொல்லி இன்புறுகிறது. பின் பேச்சில் பழகிவிடுகிறது. உள்ளே பொங்கும் ஆற்றல் இவ்வாறு அதனை வளர்த்துவிடுகிறது. சுரணைப் பருவங்களுக்கு ஏற்ப உள்ளே பொங்கும் ஆற்றல் இவ்வாறு உருப்பட்டு வாராமற் போனால் குழந்தை மனிதனாக வளருவது எங்கே? குழந்தை எவ்வளவு விரைவில் தன் தாய்மொழியைக் கற்றுக்கொள்கிறது? முதியவர்கள் புதுமொழியைக் கற்றுக்கொள்ள என்ன பாடுபடுகின்றனர்? இவற்றை உற்று நோக்கும்போதே சுரணைப் பருவங்களின் சிறந்த தொண்டு விளங்குகிறது. ஆன்மாவின் அவதாரம் உருப்பெறும் வழி இதுவே ஆம். ஆகலின், அத்தகைய பருவங்களில் குழவியின் சுரணைக்கு எதிராக இல்லாமல் வளர்த்து வந்தால் அதன் இயல்பு நல்ல வடிவம் கொண்டு சிறந்து வளரும். பிறருதவி இன்றித் தன்காலில் நின்று நமக்கு உதவக் குழவி வரும்போது அதனைத் தடுத்தலாகாது. எல்லாவற்றையும் அறியவும் எல்லாவற்றையும் செய்யவும் குழவி முயலும்போது அதற்கேற்ற பொருள்களைக் கொடுத்து அதன் முயற்சி வெற்றியாக முடியும்படி உதவுவதே நாம் செய்யும் சிறந்த தொண்டாம்.

கடவுட் குழவி:— மக்கள் நாகரிகத்தின் அடிப்படையாகக் குழவி வாழ்வு சிறந்துள்ளமையை மக்கள் அனைவரும் உணரவில்லை. மேனாட்டில் மேரித்தாயின் கையில் விளங்கும் ஏசுக்குழவியும், தென்னாட்டில் மயிலேறும் முருகனும், இந்திய நாட்டில் வெண்ணெய்க்காடும் கண்ணனும் மக்கள் மனத்தினை நீர்ப்பிண்டமாக உருக்கி வந்துள்ளனர். தமிழ் நாட்டில் முருகன் வரலாறு வழங்குகிறது. அதன் உண்மைப் பொருளை உலகம் இன்னும் உள்ளவாறு உணருவதற்கு இல்லை. "சூரன் கொல்லுண்ண என்ன குற்றம் செய்தான்?" என ஆராய்ந்தால் உண்மை விளங்கும். அரசு நெறியே இந்திரனை அவன்

வென்றதும் இந்திரன் முன் எல்லாம் அசுரரை வென்றதே போலும். இந்நாளைய உலகம் ஒருநாடு மறு நாட்டினை ஹிட்லர்போல அடக்கி ஆளுதலை விரும்பவில்லை என்பது உண்மையே. ஆனால், அதனால் எழுந்தகேடு என்ன? கற்புடைய சீதையை நெறியல்லா நெறியில் சூரன் காதலித்தானா? இந்திரன், சூரன் இறந்த பின், கடவுள் நெறியை மறந்து உலோகாயதனானான்; ஆதலின், அத்தகைய இந்திரனைக் காப்பதும் பயன் பெற்றதாகக் காணோம். சூரன் செய்த பெருந்தவறாக யாரும் காட்டக் கூடியது ஒன்றேயாம். இந்திரனது குழவியாம் சயந்தனைச் சிறைப்படுத்தியதனை அன்றிச் சூரனிடம் ஒரு குற்றமும் காணுதல் அரிது. பிற நாடுகளைக் கவரும் மனப் பான்மையின் விளைவு குழவிகளின் கடவுள்நிலையை உணராமையேயாம். அதனை விளக்கவே முருகன் குழவியாக வருகின்றான். இவ்வாறு இந்தக் கதையின் உயர்ந்த உட்கோளை உலகம் அறிவது எந்த நாளோ? இந்த உயர்வினை விளக்க அன்றோ பெரியாழ்வார் முதலாகத் தமிழர் எல்லாம் கடவுள்மேல் பிள்ளைப் பாட்டாகப் பாடிவந்தனர்? ஒட்டக்கூத்தன் முதலோர் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் முதலாகப் பேரரசரைப் பற்றிப் பாடவந்தபோதும் குழவி நிலையில் பாடி ஈடுபடுவது காண்க. சைவ வைணவரே அன்றிக் கிறித்தவரும் மகமதியரும் தமிழிற் பிள்ளைத்தமிழ் பாடியது தமிழ்மரபின் உண்மையினை உட்கொண்டேயாம்.

புது உலகம் :— தமிழ் மரபு இன்று புத்துயிர் பெறுவது எந்நாளோ? மாண்டிசோரியம்மையார் அண்மையில் கூறியதனை உலகம் உணருவது என்றோ?

**Respect the child from Birth - Montessori's Plea.**

"The freedom of children should begin at the birth. This question of the freedom of the children will solve the

problem of human society and transform it" said Madam Maria Montessori in an interview to the press.

She said "With the freedom of children can be made a begining towards the larger and universal freedom of humanity. After this only can grow a society of grown - ups with clear vision. A grown - up develops the psychology of a slave, if he is not free as a child. The independence of the individual matures in the growing. On the basis of the freedom of the child can be built universal freedom.

"It is a great pity that the world is completely unconscions about the freedom of children. If respect for a human being does not begin at his birth, his problems remain unsolved when he grows up".

(Copied from the Indian Express 13 - 10 - 45)

மொழி பெயர்ப்பு :-"குழவியின் விடுதலை குழவி பிறக்கும் போதே எழுதல் வேண்டும். குழவியின் விடுதலையே மக்கட் சமுதாயத்தின் சிக்கலைத் தீர்த்து அதனைச் சீர்திருத்தி மாற்றி அமைத்து உருப்படுத்தும். குழவியின் விடுதலையோடு மக்களின் பரந்து விளங்கும் பொதுநிலை விடுதலையும் தொடங்கும். இதன் பின்னர்த்தான் தெளிவான நோக்கம் பெற்ற முதியோரின் சமுதாயம் வளர்தல்கூடும். குழவி நிலையில் உரிமைபெறாத முதியோன் அடிமை மனப்பான்மையையே வளர்க்கின்றான். தனியாளின் உரிமை அவனது வளர்ச்சியின் வழியே முற்றிப் பழுக்கின்றது. குழவியின் விடுதலை என்ற கடைகாலின் மேலேயே அனைவர்க்குமாம் விடுதலையை எழுப்புதல்கூடும். குழவியின் விடுதலையைப் பற்றி உலகம் அறியாது உறங்கிக் கிடப்பது மிகவும் இரங்கத் தக்கதேயாம். பிறக்கும் போதே மக்கட் பிறப்பைப் போற்றும்நிலை எழவில்லையானால் அவன் வளர்ந்தபோதும் அவன் சிக்கல்கள் தீராமலே கிடக்கும்."

---

# குழவி உள்ளம்

## பிற்சேர்ப்பு (Appendix) I.

---

### பியாழேவுக்கு மறுப்பு

பியாழே:— பியாழே என்பாரின் கொள்கையைச் சிறிது விரித்து இந்நூலில் எழுதியுள்ளோம். குழந்தையை அறிய அது உதவுகின்றது என்ற கருத்தே இவ்வாறு செய்ய நம்மைத் தூண்டியது. ஆனால், அவர் முடிபினை அவ்வாறே ஒப்ப-வேண்டும் என்பது இல்லை. அதனை மறுப்பவர் கருத்தினைச் சூசன் ஐசாக் (Dr. Susan Isaac) என்ற அம்மையாரை ஒட்டிக் கீழே தருகின்றோம்.

முதிர்ச்சி :— குழவியின் அறிவும் முதியவர் அறிவும் பூனையும் யானையுமாக வேறுபட்டிருக்கக் காண்கிறோம். "வளர்ச்சியின் பயனாக இந்த வேறுபாடு தோன்றுகிறதா? அனுபவம் பெருகுவதால் இது தோன்றுகிறதா?" என்பதே கேள்வி. ஆகவே, இவை இரண்டினையும் வேறு படுத்த-வேண்டும். அபனுவத்தின் பயனாக எழுந்தது என்று விளக்க முடியாத வளர்ச்சிக்கு ஒரு பெயர் தருதல்வேண்டும். முதிர்ச்சி (Maturation) என்ற பெயரை அறிஞர் வழங்கிவருகின்றனர். அனுபவத்தில் எழுந்தது என்று விளக்கமுடியாத எல்லையைக் குறிக்கும் எல்லைக் கருத்தாகவே (Marginal concept) இதனைக் கொள்ளவேண்டும். உண்மையில் இதன் இயல்பினை உணரோம் என்றே சொல்லுதல் வேண்டும். முதிர்ச்சியினைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம். பொது அறிவு படிப்படியாக மாறிவருகிறது. 14-ம் ஆண்டிற்குமேல் இந்த அறிவுநிலை மாறக் காணோம். அதன் பின்னும் அனுபவம் திரண்டு

பெருகிவருகிறது. ஆனால், அறிவுநிலை வளர்வதனைக் காணோம். ஆதலின், முதிர்ச்சி 14-ம் ஆண்டில் முடிவடைகிறது எனல் வேண்டும். அதன்பின் அது மாறுவதனைக் காணோம்.

வெற்றறிவு ஒற்றுமை நயம் :— முன் எல்லாம் இந்த முதிர்ச்சி படை படையாக ஒன்றின்மேல் ஒன்றாய்ப் பலவாய் வளர்ந்து வருகிறதொன்றே என்று அறிஞர் கருதிவந்தனர். காட்சியுணர்வு என்பதொரு படை; இயக்கநிலை வளர்ச்சி என்பதொரு படை; நினைவு மற்றொரு படை; அறிவாராய்ச்சி வேறொரு படை. இவ்வாறெல்லாம் முன்காலத்தில் பேசி வந்தனர். மக்கள் மனம் திருத்தம்பெற்று வருவதனை இன்று ஆராய்கின்றவர் என்ன காண்கின்றனர்? படை படையாகவோ புரைபுரையாகவோ விட்டுவிட்டு வளரக்காணோம். மனவளர்ச்சி தொடர்ந்து ஒருபடித்தாகப் போகின்றது. அது ஒன்றின் மேலொன்றடுக்கிவைத்த அடுக்கு அன்று; தொடர்ந்து வளரும் மரவளர்ச்சி போன்றது எனலாம். பொதுத்தன்மையைப் பிறர் எடுத்து நடத்தும் வெற்றுநிலை அறிவாராய்ச்சியும் வெறுஞ் சூனியத்தில் நிகழுவதில்லை; அனுபவத்தை ஒட்டியே நிகழக் காண்கிறோம். எடுத்துக்காட்டாக மனிதத்தன்மை என ஆராயலாம்; மனிதர்களைப்பற்றி அறிந்த அனுபவத்தை ஒட்டி-யன்றோ இந்த ஆராய்ச்சி நிகழ்கிறது? பொருள்களிடையே ஓர் இயைபினைக் காண்பதே அறிவாராய்ச்சி. இவ்வாறு பல-வற்றையும் ஒன்றாகக்காணும் ஒற்றுமை நயம்—ஒருப்பாட்டுத்-திறன்—எல்லாப் பக்கத்திலும் வளர்ந்துவரக் காண்கிறோம். அதன் அகல நீள ஆழங்கள் பெருகிவரக் குழவியினிடமும் காண்கிறோம். இதுவே நாம் முதல் நிலையில் காணும் வளர்ச்சியாம். ஒற்றுமை நயம் என்றால் இங்கு வேறு-பாடுகளே இல்லை என்பது இல்லை. ஒற்றுமையிலும் வேற்றுமை தோன்றுகிறது. விசேஷணம் விசேஷியம் - அடை அடை

கொளி - என்ற தொடர்பு அல்லது இயைபு அந்த ஒற்றுமைக்-காட்சியில் தோன்றவே செய்கிறது. பெரிது சிறிது என்ற தாரதர வேற்றுமையும் பிறக்கிறது. ஒன்றாகக் காணும் அவற்றினிடையே முன் பின் என்றெல்லாம் பாகுபாடுகள் தோன்றுகின்றன. இத்தகைய இடத்தொடர்புகளும் ஒற்றுமைக் காட்சியில் விளங்குகின்றன. காலத்தொடர்பும் முன் பின் எனப் பேசும்போது புலனாகவில்லையா? ஆனால், காலத்-தொடர்பினை அறிவதற்கு முன்னரே இடத் தொடர்பினை அறிகின்றோம். இந்த வேற்றுமைகள் அடுக்கிய பழங்கலம்போல அடுக்குநிலையில் நிற்பன அல்ல; அணு அணுவாய்ப் பிரிந்திருப்பன அல்ல; மரம் வளருவதுபோல, உயிர்ப்பொருள்கள் வளருவதுபோல ஒருங்குதிரண்டு கட்டுக்கோப்பாக வருவனவே ஆம். வெற்றறிவாராய்ச்சியில் தோன்றும் இந்த ஒற்றுமை நயத்தினை (வெற்றறிவு ஒற்றுமை-நயம்; Noetic Synthesis) நாம் நன்கு அறிதல் வேண்டும்; பல வகையான எண்ண அமைப்புகளையும், தொடர்ந்தறிந்துவரும் அனுபவங்களையும் ஒன்றாக வைத்து ஒற்றுமை வேற்றுமை காண்பதே வெற்றறிவு ஒற்றுமை நயமாம். அறிவுத் தேர்வுகள் என்று முன் நாம் பேசி வந்தவற்றில் இந்த ஒற்றுமை நயத்தினை அன்றோ தேடி நின்றோம்? அத்தகைய தேர்வினை அமைப்பது அருமை எனக் கண்டோம். என்? அதன் சிக்கலே அருமைக்குக் காரணம். அறிவுநிலைவளர்ச்சி எல்லாம் தொடர்ந்து முன்னேறும் விளக்க நிலையே ஆம்.

அறிவு :- அறிவு என்பது என்ன? குழம்பிச் சிக்கலாய்க் கிடப்பவற்றை, ஓர் ஒழுங்கில், இயற்கையாக முதலும் சினையுமாய் அமையும் கட்டுக்கோப்பு அமைப்பினைப் போலச் சிக்கல் தீர்த்துத் திரட்டி அமைப்பதே (Organisation) ஆம்; இங்குள்ள பொது உறுப்பாம் திறமை என்ன? அனுபவம்

ஒன்றை ஒன்று திருத்த எல்லாம் ஒன்றாய் ஓடுவதே ஆம். இந்த ஒரு செய்முறையில் விரிவோ திருத்தப்பாடோ இல்லை. அனுபவத்தினைச் சேர்த்துக்கொண்டு போதல் ஒன்றே உண்டு. தனியாளின் கூடப்பிறந்த அறிவுநிலைக்கு ஏற்ப, இந்தத்திறமை பிற அனுபவங்களோடு ஊடாடிவரும். அனுபவத்தினைக் கையாளும் வகைகளும் உருப்பட்டு வருகின்றன. இவ்வாறு உருப்பட்டுவருவது அக்கரையைப் பொறுத்ததாம். அனுபவம் பலதுறைப்பட்டு விளங்குகிறது. அதில் ஒவ்வொருவர் ஒரு சில துறையிலேயே ஈடுபடுகின்றனர். இதற்குக் காரணம் என்ன? அவரவர்களுக்கு அததில் உள்ள அக்கரையே ஆம். அதேபோல அந்த அந்த அனுபவத்தினைக் கையாளும் திறனும் அந்த அந்த ஆளின் அக்கரைக்கு ஏற்ப உருப்பெற்று வருமன்றோ? எனவே, அறிவு என்பது அனுபவத்தினைக் கையாளும் ஆற்றல் அல்லது திறமையே என்பதாயிற்று.

கேள்விகள் :— ஆனால், பியாழே என்பவர் கூறுவது என்ன? குழந்தை அறிவும் முதியவர் அறிவும் வெவ்வேறு நிலைகளில் இருப்பதாகக் கூறுகிறார். இதுவளர்ச்சியின் பயன் என்பர். அனுபவம் மிக்குவருதல் மட்டும் காரணம் இல்லையாம். அவர் குழவிகளைப் பல கேள்விகள் கேட்கின்றார்; அவை தரும் விடையை அடிப்படையாக வைத்துக்கொண்டே தம்கொள்கை-யாம் கோட்டையைக் கட்டிமுடிக்கின்றார். இந்த அடிப்படையே ஆட்டங்கொடுக்கக் காண்கிறோம். "இவருடைய கேள்விகளை எவ்வளவு தூரம் குழந்தைகள் புரிந்து கொள்கின்றன?" என்பதனை நோக்கவேண்டும். அறிவுத் தேர்வு நடத்த பல கேள்விகளைக் கேட்கிறோம்; எவ்வளவு குறைந்த அளவு குழந்தைக்கு விளங்கும் என முதலில் கண்டு பிடித்தல்லவா அங்கு ஆராய்கிறோம்? ஆனால், பியாழேயோ, தம் ஆராய்ச்சியை அப்படிச் செய்யக் காணோம். ஒரு குழவிக்கு ஒருகேள்வி

விளங்குவது எதனைப் பொறுத்தது? "அறிவுநிலையில் ஏற்பட்டுள்ள அக்குழவியின் அக்கரையைப் பொறுத்தது" என முன்னரே கண்டோம் அன்றோ? இதனையும் பியாழே எண்ணிப் பார்த்ததாகக் காணோம். அன்றியும், அவருடைய கேள்விகளே குறிப்பிட்ட விடையைக் குழந்தையின் மனத்தில் ஏற்றிவிடுகின்றன என்றும் கூற இடம் உண்டு. முதியோர் கேட்பதால் "ஆம் ஆம்" என்று சொல்ல அன்றோ குழந்தையின் மனம் முந்தும்? இவர் கேட்கும் கேள்விகள் குழந்தையே கேட்கும் கேள்விகள் அல்ல; குழந்தையைக் கேட்கும் கேள்விகள்; இவரே கேட்கும் கேள்விகள். ஆதலின், இக்கேள்விகள் குழவியின் மனநிலையை விளக்கமுடியாது; இவர் மனநிலையையே விளக்க முடியும். குழந்தையின் மனம் போகாத போக்கில் இவர் கேள்விகள் அதன் மனத்தைப் பிடித்துத் தள்ளுகிறது. கேள்விகளையே பார்ப்போம். "ஈ உயிர் உள்ளதா?" என்று கேட்கின்றார். "உயிர் உள்ளது, உயிர் அற்றது" என்ற பாகுபாடு பிறந்த பியாழே மனத்தில் இந்தக்கேள்வி எழும். குழந்தையின் மனத்தில் இது பிறவாதபோது இந்தக் கேள்விக்குப் பொருள் ஏது? குழந்தை என்ன பதில் கூற முடியும்? முதியவர் கூறுதலின் பொருளுடையதாக இருக்க வேண்டும் என அடங்கி ஒடுங்கித் தன் உரிமை இயக்க விளக்கப் பேச்சுக்கு இடமின்றி ஆமாம் பூசாரிப் பாட்டுப் பாடுகின்றது குழவி. பியாழே இதோடு விடுகிறார் இல்லை. "ஆம்" என்றால் "ஏன்" என்கிறார். இந்தக் கேள்வியை என் என்பது? குழந்தை விடை கூறுவது ஒருபுறம் இருக்கட்டும். பியாழே தான் என்ன பதில் கூறுவார் என அறிய விரும்புகிறோம். மேலும், இவர் கேட்கும் கேள்விகள் எல்லாம் ஒரு வரையறைக்கு உட்பட்டவை. ஒன்றுபோல ஒன்று வருபவை; ஒரே வகையாக விடைவந்தால் என்செய்வது? இது நிற்க.

சமயசந்தர்ப்பம் :- அனுபவவளர்ச்சியால் மட்டுமே அறிவு வளர்வதனைக் காணலாம். ஒரு குறித்த பருவத்தில் இருக்கும் குழவிக்கும் மற்றொரு குறித்த பருவத்தில் இருக்கும் குழவிக்கும் உள்ள சிறப்புநிலை வேறுபாடு எதனால் எழுகிறது? அவ்வக்குழவியை எந்த அக்கறை ஆட்டிப் படைக்கின்றதோ அந்த வழியே குழவியும் சிறப்புநிலையை அடைகிறது. குழந்தைகளிடம் கட்டற்ற உரிமையான அக்கறையுள்ள இயக்கங்களாக மூன்று வேறு வகையைக் காணலாம். முதலாவதாக, உடலியங்கி வரும்போது உடலியக்கத் திறமையைத் திருத்தி நிறைவாக்கிக் கொண்டு நிற்கும் வெற்றியில் திளைத்து அந்த இயக்கத்திலே குழவி ஓர் இன்பங் கொள்கிறது. இரண்டாவதாகப் போலி நடனம் செய்வது போன்று சாயல் பிடிக்கும் இயக்கங்களைக் காண்கிறோம். மூன்றாவதாக, சடப்பொருள்கள் விலங்குகள் என்ற-வற்றினிடம் வேறொரு நோக்கமும் இன்றி அவற்றிற்காகவே ஈடுபடும் இயக்கங்கள் விளங்குகின்றன. இந்த அக்கறை நிலைகளில் "ஏன்" "எதற்காக" என்ற கேள்விகள் பிறக்-கின்றன. இந்த நிலைகளில் எதிலிருந்தேனும் கண்டுபிடித்தல், அறிவாராய்ச்சி முதலியன வளர்ந்தோங்கத் தொடங்கலாம். குழவிகள் ஈடுபட்டுப் பழகும் விளையாடல்கள் இங்கு ஒரு தொண்டு செய்கின்றன. பல அனுபவங்களும் ஒன்றுபட்டு ஓடும் நிலையை விளையாடல்கள் வளர்த்து வருகின்றன. திறமை வளர வேண்டுமானால் அது செயற்படுதல் வேண்டும். அவ்வாறு செயற்படுவதற்கு ஏற்ற வாய்ப்புகளைக் கற்பனை விளையாடல்கள் விளைவிக்கின்றன. விளையாட்டாக எழுந்த இவற்றை இவற்றிற்கு என்றே நாடும் நிலைமை பின்னர் எளிதில் ஏற்படலாம் அன்றோ? அப்போது, எங்குப்போய் முடியும்? உண்மையாக ஒன்றைக் கண்டுபிடிக்கின்ற புது நிலையிலோ, சொல்வகையாகத் தீர்ப்புக்கூறுகின்ற நிலையிலோ,

அறிவாராய்ச்சி நிலையிலோ போய் முடியும் எனச் சொல்லவும் வேண்டுமா? எனவே, மனோகற்பனைக்கும் எண்ணத்திற்கும் உள்ள முதல் தொடர்பு சமய சந்தர்ப்பத் தொடர்பே ஆம்; வாய்ப்புக்கு ஏற்பவளரும் தொடர்பே ஆம். இவ்வாறு குழவி நிலையிலிருந்தே 'வெற்றறிவு ஒற்றுமை நயம்' ஏற்பட இடம் உண்டு.

இயற்றிநிலைத் தொடர்பு:— மற்றொரு வகையான தொடர்பும் காண்கிறோம். சடப்பொருள்களிடத்தே குழவி ஈடுபடுகிறது என்றோம். குழவிக்கு முதலில் உயிருள்ளது என்றும், உயிரில்லது என்றும் வேற்றுமை செய்யத்-தெரியாது. தாய்தந்தையரையே முதல் உலகமாகக் கொண்டு வாழ்கிறது. அவர்களிடம் எழும் அன்பும் அச்சமுமே அந்த உலகில் பழகும் அனுபவம். அவ்வுலகத்தில் பிறபொருள்-களையும் பிரித்தறிகிறது. அவ்வாறு சடப்பொருள்களிலும் ஈடுபடவருகிறது. ஆனால், முன்னைய அனுபவமாம் பெற்றோர் அன்பும் அச்சமும் அடிப்படையாகவே சடப்பொருள்-களிடம் கொள்ளும் அக்கரைகளும் முளைவிடுகின்றன; வளர்ந்து கொழுக்கின்றன. உள்ளத்தே எழுகின்ற எண்ணங்-கள் உணர்ச்சிகள் இவற்றிற்குப் போக்குவீடு வேண்டும். புற-உலகம் அங்கே படிப்படியாகத் தோன்றக்காண்கிறது குழவி. தன்னுடைய விருப்பங்களைத் தீட்டும் திரைச் சீலையாகவே புறவுலகம் அதற்குப் பயன்படுகிறது. உள்பொங்குவதன் அடையாளங்களாக வெளிப்பொருள்களும் செயல்களும் தோன்றுகின்றன. அடையாளக் குறிகள் மேலும் மேலும் வளர்கின்றன. உள்ளே பொங்கிவழியும் நெருக்கடியைத் தீர்ப்பதற்கு ஒரு சிறந்த வழியன்றோ கட்டுப்பாட்டிற்கு அடங்காத நாடக விளையாடல்? அப்போது புறமும் அகமும் வேறுபடுகின்றன. தான் என்ற நிலையை இந்த விளையாடல்கள் வளர்க்கின்றன. புறநிலைச் சுரணையையும் வளர்க்கின்றன.

இவ்வாறு அக்கறைகள் பெருகிவளர்வதற்கு ஒரு பெருந்தடை உண்டு. கட்டற்ற ஆராய்ச்சிக்கும் அதுவே பெருந்தடையாம். எது அது? கவலை கவலை கவலையே. இந்தப் பெருந்தடை தீரவும் வழி ஏற்படுகிறது. புறப்பொருள்கள் மேல் எழும் அக்கறை என் செய்கிறது? போலி நாடக விளையாடல்கள் வழியே என்னநிகழ்கிறது? இந்த விளையாடல்கள் குழவி நிலையில் எழுகிற மனோகற்பனையான விருப்பங்கட்கு ஒரு புறவடிவத்தினையும் கோலத்தினையும் ஏற்படுத்திக் கொடுக்க இல்லையா? இவ்வாறு கவலை தீர வழி ஏற்படுகிறது. பின்னர் அறிவு வாழ்வுக்குத் தடையேது? ஆதலின், இத்தகைய விளையாடல்கள் அறிவாராய்ச்சிக்கு நேர்முகமாக உதவாமற்போனாலும் இவ்வாறு வளைமுகமாக உதவக் காண்கிறோம். எனவே, எண்ணத்திற்கும் கற்பனைக்கும் உள்ள தொடர்பு இவ்வாறு போக்கு வீடாக எழுகிற செயல் வகையான இயற்றிநிலைத் தொடர்பே, இதுவே இரண்டாவது வகைத் தொடர்பாம்.

அறிவுநிலைத் தொடர்பு:- மூன்றாவது வகைத் தொடர்போ அறிவுநிலைத் தொடர்பாகும். உலகவகைச் செயல்களைக் குழவி விளையாட்டாக விளையாடிவரும்போது, அங்கு ஏதேனும் எண்ணம் தோன்றும் அன்றோ? கற்பனை விளையாட்டு இவ்வாறு கொள்கைகளைத் தற்காலிகமாக உருப்படுத்திவருகிறது. அங்கு என்ன நேரிடுகிறது? எதிர்பார்ப்பதும் அங்கு உண்டு. அவ்வாறு எதிர்பார்ப்பதற்கு ஏற்பச் செயல்கள் முன் எழுகின்றன. எதிர்காலத்தினை நிகழ்காலத்திலேயே இவ்விளையாடல்கள் காட்டிக்கொடுக்கின்றன. அம்மட்டுமா? விஞ்ஞானி என்ன செய்கிறான்? என்ன என்ன நிகழும் எனத் தன் ஆராய்ச்சி நிலையத்தில் செய்க்காட்சிகள் செய்து பார்க்கின்றான். குழவி விளையாட்டில் என்ன செய்கிறது? இவ்வாறு எதிர்காலம் நிகழ் காலத்தில் நிழலிடும்போது "எவ்வாறு

எவ்வாறு செய்தால் என்ன என்ன ஆகும்" என மனத்திலேயே எண்ணிப்பார்த்துச் செய்கிறது. ஆதலின், விளையாட்டு ஒரு மனவகைச் செய்காட்சி அல்லவா? மனோகற்பனைக்கும் எண்ணங்கட்கும் இத்தகைய அறிவு நிலைத் தொடர்பு உண்டு. குழவி விளையாட்டும், விஞ்ஞான ஆராய்ச்சியும் வேறு வேறு உலகங்கள் அல்ல; அனுபவத்திற்கு ஏற்ப வளர்ந்த வளர்ச்சி நிலைகளே ஆம். அதனால், முதிர்ச்சியைப் பற்றிக் கவலைகொள்ளவேண்டாம்.

தன்னடுமை :— பியாழே கூறிய தன்னடுமை என்பதும் முழு உண்மை அன்று; அரை உண்மையேயாம். இளங்குழவி தன்னிற்றானே இயங்குகிறது. ஆனால், அதன் எண்ணமும் தன்னிற்றானே இயங்குகிறது என்று சொல்வதற்கு இல்லை. ஏன்? அதனைப் பற்றி அது எண்ணுவதே இல்லை. "தான்" என்ற உணர்ச்சி படிப் படியாகப் பின்னே வளருவது ஒன்றும் "தான் என்ற எண்ணமே அரும்பாத நிலையில் தன்னிற்றானே இயங்குகிறது." என்று எவ்வாறு கூறமுடியும். தன்னடுமை என்பதென்ன? குழவியின் உணர்ச்சியினையும் கற்பனையையும் பற்றியதொரு செய்தியே தன்னடுமை ஆம். தன்னடுமையின் சிறப்பான அமைப்பு என்ன? அதற்கு என ஓர் அமைப்பும் இல்லாமையே அதன் சிறப்பான அமைப்பாகும்; அதாவது அனுபவம் மிகாதநிலையாம். உணர்ச்சி நிலையிலும், கற்பனை நிலையிலும் அனுபவம் ஏற ஏற, இந்தத் தன்னடுமை ஊடுருவிப் பாய்கிறது; இதுவே அதன் சிறப்பமைப்பாம். ஆதலின், குழவியின் அறியாமையைக் குழவியின் நம்பிக்கை என மயங்குதல் ஆகாது. எல்லாம் உயிருடையது எனக் குழவி நம்புவது இல்லை. "எல்லாப் பொருளும் உயிர் உடையன அல்ல" என்று அதற்குத் தெரியவே தெரியாது. அந்தத் தெரியாதபருவத்தில் அந்த நம்பிக்கை எழுவது ஏது?

## பிற்சேர்க்கை (Appendix) II

---

## சிறப்புப்பெயர் அகராதி.

## (Index of Proper Names.)

# குழவி உள்ளம்

## பிற்சேர்ப்பு (Appendix) III

---

### கலைச்சொற்கள் [1]

| | | |
|---|---|---|
| Abortion கலாதி; அகர்லச் சூல் வெளிப்பாடு | .... | 59 |
| Abstract idea வெற்றுநிலை உணர்வு | .... | 216 |
| வெற்று எண்ணம் .... | .... | 579 |
| Abstract Number வெற்று எண் .... | | 231, 564 |
| Abstraction வெற்றுநிலை .... | | 445, 447 |
| வெற்றுப் பொருள் .... | .... | 420 |
| Absurd statement உள்ளறு படை .... | .... | 553 |
| Adenoid மூக்கில் வளர்தசை .... | .... | 46 |

---

1. இந்த நூலில் வரும் சொற்களைப் பரிபாஷைச் சொற்களாக நான் கருதி எழுதவில்லை. கருத்து விளங்க வேண்டும் என்ற எண்ணத்தால் வரும் இடத்திற்கு ஏற்ப எழுதினேன். அதனுல், ஒரு ஆங்கிலச் சொல்லையே பலவிடங்களில் பலவகையாகவும் பலசொற்கள் கொண்ட விளக்கமாகவும் எழுதியுள்ளேன். ஆதலின், கலைச்சொற்கள் என இவற்றை வழங்கவும் அஞ்சுகிறேன். எனினும், அகராதியாக இவற்றைத் தருதல் நல்லது எனப் பெரியோர் கட்டளை இட்டதால் இங்குத் தருகின்றேன். ஆங்கிலச் சொற்களையே மனத்தில் வைத்து எழுதுவது வழக்கமாய்விட்டபடியால் ஆங்கில அகராதியாகத் தருகின்றேன். தமிழ்ச் சொற்களுக்கு நேரான ஆங்கிலச் சொற்களை நூலினுள்ளேயே ஆங்காங்குத் தந்துள்ளேன்.

## வாழ்த்து

"வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதெனை
மணிமுறுவ னிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டு முச்சிமோந்துந்திரு
மடித்தலத் தினிலிருத்திப்
பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலரொடும் விளையா டெனப்பணித்துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்
தாராட்டு மதிமுடித் தீராதவினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற
தையனு யகியும் வைத்துச்
சீராட்டி விளையாடு சேனாபதிக் கடவுள்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே."

(குமாரகுருபரர்)

---